உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராணவெண்பா.

குமரகோட்டச் சுப்பிரமணிய சுவாமி

திருவருட்டிறத்தால்

திருக்கயிலாய பரம்பரைத்

திருவாவடுதுறை யாதீனத்துச் சீஷரும்

ஷை ஆதீனத்து மஹாவித்துவான்

ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் மாணாக்கரும்

தில்லைவிடங்கன் பிரபலவித்துவான்

மாரிமுத்துப்பிள்ளையவர்கள் புத்திரபிர பௌத்திரருமாகிய

ஆ கி ய

தி. சு. வேலுசாமிப் பிள்ளையவர்கள்

இயற்றியது.

---

காஞ்சிபுரம்

ஸ்ரீமான் சரவணப்பெருமாள் முதலியாரவர்கள்

(பர்மாவில் சப்டிவிஷனல் ஆபிஸர்.)

பெருதவியைக்கொண்டு

ஷை நூலாசிரியரவர்களால்

---

சென்னை - புரசை,

ராமநிலைய விவேகாநந்த அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது

1913-பிரமாதீச ஞு இடபரவி

சிவமயம்.

திருக்கயிலாய பரம்பரைத்

## திருவாவடுதுறையாதீனத்து வித்துவானும

இந்நூலாசிரியருடன் கல்வி பயின்றவருமாகிய

ஸ்ரீலஸ்ரீ பழனிக்குமாரசுவாமிகளியற்றியருளிய

## சிறப்புப்பாயிரம்.

---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மாமேவு கயிலாய பரம்பரையா வடுதுறைமா வாதீனத்திற் [பப்
ரமேவுவிறல்வெண்பாப்புலியெனும்பேரளித்தவொருபரிசிற்கேற்
பூமேவுசெருட்கந்தபுராணமதை வெண்பாவிற்பொருள்குன்றாமே
யேமேவுபலநயமுமினிதுறநன்கியற்றினனவன்யாரென்னில். (க)

அருந்தில்லை விடங்கனமர்தருசுப்பராயவே ளளித்தமைந்தன்
பெருந்தில்லையம்பலத்துளாடியடிமணத்திருத்தும்பெருமையாளன்
மருந்துநிகராம்வேலுசாமியெனுநாமத்தோன்வாரிக்கொப்பாய்ப்
பொருந்துதமிழுணர்ந்தவனென்னகக்கணிலு முகக்கணிலும்பொலி
[வான் மன்னோ. (உ)

ஷை ஆதீனத்துஞான நடராசர்பூசை

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகளியற்றியருளிய

அரங்கேற்றச் சிறப்பு.

நலமார் குருசுப்பிரமணியஞானகுருவா லிருவகையாங்
குலமார் தீக்கைபெற்றதவகளுரிசில்தில்லைவிடங்கனெனுந்
தலமார் சுப்பராயவே டந்ததனயன் றமிழ்க்கல்விப்
பலமார் துறைசையாதீன வித்துவானென்றேபகரும். (க)

திங்கள் போலுங் கல்வியினூற் றிகழ்மீனாட்சி சுந்தரனும்
புங்கமாரும் பெருஞ்சீர்த்திப்புலவன்றன்பாலேகற்றோன்
சங்கையறவே சொற்பொருள்சொல்தகையார்வேலுச்சாமியெனுங்
கங்கைகுலத்தோன்கந்தன்றன்கழற்கேயன்பு மிகவுடையோன். (உ)

வேறு

சீர்தருபதினெண்சதத்திருபதின்மேற்றிகழுமொன்பானெனச்செ
மேர்தரு சாலிவாகனசகாப்தமியையபிலவங்கவற்சரத்திற் [ப்பு
சார்தரு மிடபமதிபுதவாரந் தசமிநல்லுத்திரமொன்பா
னோர்தரு தேதிசேர்தருகின்ற வணிதிகழ் சுபதினமதனில். (ங)

வேறு

கந்தமார்பொழில்சூழ்கச்சிக்கவின்மிகு குமரகோட்டத்
தெந்தையாங்குமரன்முன்னரியற்புலவோர்களாக
வந்தவருளங்களிக்கமாபிரசங்கஞ்செய்து
கந்தபுராணவெண்பாக்கவியரங்கேற்றினனே. (ச)

# முகவுரை.

## நேரிசையாசிரியப்பா.

மணிகிளர்வாரி திவலை இயவுலகத்—தணிகிளர்காவிரி யளப்
பில்வளந்தருஉஞ்—சோணாடெனுஞ்சீ ரீணாடைதனி — ஞூதமாத்தி
ரையுடைப் பூதமாத்தலமாந்—தில்லையம்பதிக்குத் திகழுமீசானத்—
தெல்லையில்வளங்கூர் தில்லைவிடங்க—னெனுமூதூரி லினிதமர்
வேளாளன்—குலத்தினன்மேழிக் கொடியினன்றிருவரு — ணலத்தி
னன்வெற்பி னங்கைகாணிய—புன்னகமுனியொடு பன்னகமுனி
தொழ—வாடகமன்றி னாடகம்புரிபுஞ்—சிற்பரசிவன்மேற் பற்பல
வகைக்கவி—மாரிமுத்தெனப்பொழி மாரிமுத்தேந்தல் — மேலாம்
புலியூர் வெண்பாமுதலிய—நூலாதியகவி னுண்ணறிவாளன்—செய்
தவப்பேறுந் தெய்வங்கள்பெருமா — ளென்னபிதான னியனூல்
கற்கும்-பன்னிருவயதிற் பன்னருமுமையவண்—மாலையெனுமொ
ரு நூலையியற்றிப் — பின்னரும்பற்பல கன்னர்நூனவின்றோ —
னன்னவன்றனயனு மையாசாமிவே—ளருங்கலைவல்லோ னருடரு
குமாரன்—பராவுமுன்னவர்போற் கிராமாதிகாரஞ் — செலுத்திவந்
தோனலத்தின்மிக்கோன்-விற்பனனாய சுப்பராயமால்—செய்தவத்
திறத்தி னெய்தருஞ்சிறப்பிற்—பொன்புதன்வாக்கதி பன்கேந்திரத்
துறத் — தருமகருமத் திருவருமொருவராய்ப் — பதினொன்றினட்
பின் வதிதரக்கற்புடைச்—சுந்தரமின்வயின் வந்துதித்தனன்சேய்—
படையுட்சிறந்த தடையடுத்தெவர்க்கும்—பொதுவாயுளபெய ரது
தற்குச்சிறப்பா — யுற்றுநண்ணுமம் வைத்தது தெளிவாய்ப் —பூமி
புகழ்வேலு சாமியெனவிளங்க—வளருமைந்தாண்டிற் கிளரும்பள்
ளிக்கு—வைத்திடவாசான் கைத்தலரேகையை—யுற்றுணர்ந்திவன்
மூனோர் பெற்றபேர்பெறுவனென் — றினிதுகற்பிக்க வெழுதவும்
படிக்கவும்—கனிபயின்றனன்பிதா நவில்கல்வியாதி—விருத்தியாக
வருத்தியோடு—வேற்காவடிகட்குப் பாற்காவடிகொடு—தைப்பூசந்
தொறு மெய்ப்பூசைசெய்வித்து—நிகழ்தருநாளிற் றிகழ்தசவேலி—
யவிர்நிலமுடைமையால் விவசாயத்தொழி—றிறமையினேழாண் டற
நடத்திவருகையில்—வாணாளெல்லாம் வீணாளாகச்-சென்றனவினிப்
பொற்குன்றனமன்றற்—கிந்தப்பிறவியிற் சந்தத்தமிழின்—முந்தை
யோர்போ லெந்தையார்க்குப்—பாமாலைகட்டிப் பாசியலின்றேனும்-
பூமாலைகட்டிப் புனைவிப்போமென—நந்தவனம்வைப்பா னாட் கொ
ளீஇப்பூஞ்செடி—யந்தவனமாதி யரும்விதைபதிகொடி—நாடுங்கா
லை யாடும்பெம்மான்—றன்னருட்டிறத்தாற் சென்னையம்பதிக்குக்—
குலைவில்துரைத்தனக் கலையதுபயில்வான் — தந்தையனுப்பினன்
றயங்கம்மொழியொடு — பைந்தமிழ்நூலும் பயின்றுவந்தனன்—னிரு
திறநூலி லிம்மையொன்றினையே—தருதிறநூலைத் தணந்துமும்

மையு—நல்குந்தமிழ்நூ னசைஇயெவ்வயிற்—செல்குதுமென்னாச்
சிந்தைசெய்போழ்து—நீடுமாளிகைமிசை யாடுகேதனங்கள்—சித்
தியோடு முத்தியும்பெறலாம்—வாவடுதுறையிதா மற்றிலென்குறி
காட்—டாவடுதுறையொன் றகத்திற்றோற்றவவ்—வயினடைந்தருங
கலை பயிலலாமென்னா—வண்ணுறுபுவங்க ணண்ணுநவகோடி—சித்
தர்வதிதரு மத்தடாவு—மடர்ந்தநிலையொடு படர்ந்தவோரரசின்-
றென்பாலிலங்கு மொன்பான்மணிகொண்—டியற்றித்திகழ்மடா
லயத்திலமர்ந்தருள்—சின்முத்திரையுடன் புன்முறுவல்காட்டுங்—
குருநமச்சிவாய குரவன்கழல்பணிந்—தப்பரன்வழிவரு சுப்பிரம
ணிய-தேசிகன்றொடாழீஇப் பேசிடக்குறைகளை—யன்னவனருள்
கூர்ந் துன்னரும்பலதல—மான்மியமுரைத்துள மேன்மையும்புகழு
மண்—வானாட்சிறொண்டிலா மீனாட்சிசுந்தரப்—பாவலன்றன்பா
லாவலிற்கலைபயின்—மாணவருடன்கூட்ட மாணுறவன்றா—னிலக்
கியநூல்களு மிலக்கணநூல்களு—மையந்திரிபறச் செய்யமேற்
கோளொடு—போதித்துவருநா ளாதித்தனெழுமுன—மாசானுவப்
பப் பூசாவிதிப்படி—நால்வகைப்புட்பமு மேல்வகைகொணர்ந்து—நல்
குவழிபாடு மல்குநீர்மையா—லாசுகவிவெள்ளையிற் பேசவல்லபமு—
மற்றமுக்கவிகளுஞ் சொற்றிடுதிறமையும்—பெற்றிருக்கின்றமை
யுற்றுணர்ந்தாரவோன்—சித்திதருதீக்கையின் முத்திநிலைகாட்டி—
விடைதந்தனுப்ப விடைதந்தனையர்வாழ்—திருக்கிளர்நகருற் றிருக்
குராட்புலியூ—ரற்பகமேவிய கற்பகவிநாயகர்—மும்மணிக்கோவை
யுஞ் செம்மணிச்சபையி—லமர்தருபெருமா னமர்தருநிரோட்டக—
யமகவந்தாதியு மமைசிலநூல்களு—மியற்றியரங்கேற்றிப் பயனுற்றி
ருக்கையி—லிமசேதுபரியந்தந் தமதிசைநிறுவிய—கச்சிப்பதியா
பச்சையப்பமால்—கல்விச்சாலையின் மல்குசெந்தமிழ்நூல்—சொல்
விக்கும்படி சூழ்தருசபையார்—நியமிக்கவத்தொழி னயமுறநடாத்
தி—யந்நகரத்தின் மன்னியமர்போது—கந்தவேட்கு கந்தவன்புடை
யோய்—புலவர்க்குவெண்பாப் புலியெனவான்றோர்—சொலுவர்
நிற்கதுதான்சுலவமாயிருக்கையாற்-றிருவருட்டிறத்தி னிருவரியற
றிய—சந்தவின்றமிழ்க் கந்தபுராணம்—பெருக்கமாகவுஞ் சுருக்க
மாகவு-மிருக்குமாண்பா லிருவர்தநூற்கு—நடுத்தரமாக நனிவெண்
பாவிற்—படுத்துவமுறவே பாடித்தருகென—முருகன்புடையிற்
பெருகன்புடையர்—மல்சார்வத்தின் பல்கால்வினவச்—செப்பருஞ்
சிறப்பி னப்புராணநூல்—செயற்கரிதெனினும் புயற்கிருபாநிதி—
குமரகோட்டத் தமர்குருபரன்றாள்—நித்தியநியமமாய்ப் பத்தியொ
டுசென்று—வழிபடுதகவிற் பொழிதருகருணையாற்—செய்துவரு
கையி லுய்தருவான்முன்—பண்டரும்புகழ்த்திருத் தொண்டர்
புராண—மாக்கவியாகச் சேக்கிழார்செய்கையில்—இவனுமாக்காதை
யெவ்வளவாயிற்றென—வினவுமனுகுலத் தனபாயனெனவே—யே
டாதியினவின் மாடாதிபர்சீர்—தருகுமரகோட்டத் தருமகருத்தரா

மேவுறுவாம் தேவதேசிகரும்— பண்பார்புராண வெண்பாவெனு வரை — யாயிற்றெறன்றடிக்கடி நேயுற்றுவினவத் — திரிபியமகஞ் சிலேடைமடக்குக்—கரிசில்சித்திரங் கற்பனையலங்காரஞ் — சொன்னயம்பொருணயந் தொடைநயநடைநய — முன்னயமெல்லா மியங்கிக்கிளர்தரப் — பொருவில்கந்த புராணவெண்பாவென் — றொருபெயர்விளங்க வுரைத்தனன்பின்னர் — நன்றாட்குறித்துப் பன்றாட்டிலுமுள—பாவலர்தமக்குங் காவலர்தமக்கும் — பிரபலமான பிரபுக்களுக்கும்—புத்திமான்களுக்கும் பத்திமான்களுக்கு—மிருமூகம்பெருகி வருமுகமோசை—யக்ரவாதமகத்து வந்துபசரித்து—கலங்கிளர்தனமனை யலங்கரித்தொளிர்வென்—சகமுதலிய மாகலவாத்தியமோர்கலிபோலொலி கூடரயோர்சரும் — விச்சகவடிவமாம் புத்தகமதனைப் —புகழ்பெறுபுரிதும்பாதுறாசலர்புனைந்து—சிவிகையில்வைத்துக கவிகைக்புடைக் — கவரிபிரட்டக் கவின்கொடியாதி—துன்னவயிர்திருச சின்னமுழுதக்—கணிகையர்நடிப்ப வணிமதிற்சுலவுந் — திருக்காவலமா யருகைமிக்கசிசித் — தெருவில் மேவர்சிவிகையிற் றிருவிழாகோலமா—வெழுந்தருள்காட்சி செழுந்தமிழ்நூலை — யெதிர்கொண்டழைக்கு முதிர்தருகருணை—யீசனையாவருமோதிட முன்பி—னீதியாயிரோச வீதியாய்ப்போந்து—துயமேகோட்டத்துட் குமரன்வீற்றிருப்ப — நன்கொலிரோட்டினை மூன்கொடுவைத்து—மூலகாரணனாய் முன்னருஞ்சிருட்டிசெய்—கோலமாயெழுந்தருள் குழகன்றனக்குச—சிறப்பொடுபூசனை யுறப்பெரிதாற்றியே—யொப்பருமேகசி யப்பசிவநாமத்—தருச்சகர்கொணர்ந்த திருப்புராணத்தை—சன்னிதானத்தின் முன்னவிர்பீடமே—விரித்துவைத்தருளா வனிதருமன்பிற் — கந்தனையுளத்திற் சிந்தனைசெய்து—சுராசுரகுருமா ரிருவருநவிலுந்— தூக்கினையுற்று நோக்குறுவர்சசித்—தந்தவனாரு ணைந்தசுவாமிகளுமூ—னற்றவர்கற்றவ ருற்றவர்மற்றவர் — செவிப்புலமதுகாரங் கவிப்பிரசதமேதன்—றெவிட்டாணியுண் டுவப்புறான்னய — மெய்துபிரசங்கஞ் செய்தரங்கேற்றிக்—கயிலாயபரம்பரை யெயிலாவடுதுறை — யாதீனமராபி லோதுபதிமேனழாம்—பட்டமேவிய சிட்டராகிய—வாசில்சீர்ப் பெருந்தகை யம்பலவாண-தேசிகர் மெய்கண்ட தேவர் சந்தானம்—ஞானபீட மானகாஞ்சி—புரமடம்ஞானப் பிரகாசதேசிக-ரளித்திடு வரிசையுங் களிப்புறப்பெற்று—மாண்டகுபுகழொடு மங்கலமு—ஈண்டகையருளு மடைந்தனனன்றே.

இப்பா வியற்றினவர் யாரெனின் மா. சி. சொ.
அப்பாவுப் பிள்ளை யவர்

### எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பூரணிமைந்தன் புகலருங்கந்தபுராணவெண்பாவையச்சிட்டுத்
தாரணியெங்குந் தயங்கிடப் புரிந்து சண்முக னருட்கிலக்கானோன்
காரணிமதில்சூழ்கச்சியம்பதியான் கங்கைதன்குலத்துவந்துற்றோன்
றூரணிதிண்டோட்சரவணப்பெருமான்சகமெலாம்புகழ்தனபதியே.

# காண்ட வகராதி.



# படல வகராதி.

ஆ படலம் ௧௪௧-க்குத் திருவெண்பா-௫௬௬௫.

முதற்பக்கம் முதற்பாட்டு சக்கரம்-மலை, சக்கு அரம் மாது (௨) மா வண்டு,வடி-வினைத்தொகை, கள்-தேன், ஆர்தல்-உண்ணல், அடிகள்-சுவாமிகள், (௩) போதத்து உதிப்பார்.

ஷை கடவுள் வாழ்த்து (௧) மலையான்-அணியான்,

(௨) பரசி வந்தனை (௩) படராசன்மம் கலப்பு ஆம் (௪) கோல்நாட்டம்-அம்புவிழி, மேல்வைப்பார்—தேவர். (௫) மூதிலை-மூன்றுஇலை. (௬) சரம்-பாணம் (௭) முடுகு அன்பு (௮) பத்திரை-காளி.

(௯) திருப்பு அரம்குன்றதான் (௧௦) வினைக்கு அஞ்சிர் அலைவுஆய, (௧௧) அம் கதிர் உவா இனன்-சந்திரசூரியர் (௧௨) திரு ஏர் அகம், (௧௩) நேர்குன்று தொல் தாள்தலை, (௧௪) சோ-மதில், (௧௫), குருகு-கிரவுஞ்சம், மரம்-மா, கோட்டம்-கோணல், (௧௬) சரியார்-வளையலை யணிந்தவர்.

(௧௭) சிந்திஆம், (௧௯) சங்கு அரி முத்து அமிழ்து அந்தம். (௨௦) சம் பந்தர். அத்ததரு-கற்பகத்தரு. (௨௧) ஓதம் கடன் எஞ்சேல் (௨௨) சந்து ஏக போக்கினர் (௨௩) திருக்குஓவு ஐ.

(௨௬) மருபடி கம் மன்று, (௨௮) அமா பதி என் தேத்து அமர. (௨௯) நெஞ்சு ஆக்கு அரன், (௩௦) மாசு இகல்நாயன்

(௩௧) புகழும் பல வாணர், (௩௨) மெச்சும்தர ஆசானும் (௧) உகந்த புராண (௪) வெள்ளை-வெண்பா, விருத்தம்-வியர்த்தம் (௬) சுகம்-கிளி.

(௬) கார்முகம்துன் அம்பு எய்யும், கார்முகந்து உன் அம்பெய்யும், (௧௨) எழும் புகை எழும்புகை, (௧௩) பால் யாறு.

(௧௮) நந்திவரை-இடபம், நந்திமலை, நாட்டுஉளர், நாடுஉளர், அம்-அழகு, சலம், மன் அகம், மன் நகம், (௧௯) கமலை ஆங்கு அமலை மார்பு ஆர்பு, நந்திகிரி அந்திகிரி (௨௦) கலைமான்-சரசுவதி, கம் தலை, சலம், மால் உந்தி-திருமாலினுடைய வுந்தி, பெரியநீர்ச்சுழி (௨௧) ஆரு இவரும், மோது அகம், கோடு-தந்தம், (௨௨) வேல் ஆல் மா, கரை-சொல், (௨௩) நந்தி-சிவன், சேய் ஆறு, சேயாறு, (௨௪) ஆல்நந்தே ஆரம்

மோதி (௨௫) கம் மண்தலம். புலம்-நிலம், (௨௭) நந்திமரபு-கைலாயபரம்பரை, அந்தநிலை முடிவு அம்சலிக்க, (௨௮) எண்குஅண் ஆன், கடல்மன், தீவினை - அக்கினிகாரியம்,

(உக) வாம் குதிரை, மதகுஇரிய, வை-வைக்கோல், வேல்-மரம், மருவலர்-பகைவர், (௩௧) வே-மூங்கில், உஊரு-துடை முத்து அலே (௩௨) ஐம்பால்-ஐந்திணைகள்.

கக (௩௩) ஐந்திணைப்பொருள்-ஐந்து இணைப்பொருள் (௩௭) முலே-முல்லே, பயம்-பால், சலம், (௩௯) மயன்-மயம், (௪௧) கங்கு ஐ கா, ஞரி;

கஉ (உ) நாஞ்சில் நகர், (௩) பெண்ணே-நதி, கைலே-காளத்தி, உருமு என்தொண்டை, (௪) குணத்தோர்-குணத்தையுடையார், நீர்மலே க௦அ திருப்பதியுளொன்று, தண்டு அகன்மா வே-மூங்கில், (௫) தனித்து உண்டீரன், (எ) கங்கு-வரம்பு, காவரி உளவையை ஐயை, கோட்டம்-திலப்பிரிவு

க௩ (க௦) சேண் பன் ஐயர், (க௪) திருக்கு அழுக்கு உன்றன்

க௪ (கஅ) வான் எய்தல், (கக) ஆம்பல்—யானை, ஆம் பல்,

க௫ (உ௬) வேழம், மூங்கில், கோடு-கொம்பு, கிரி-பன்றி, அருவி-அறுத்த திணைத்தாள், (உஎ) சே-இடபம், (உக) ஆர்தல்-

க௬ உண்ணல், (௩௫) மனப்புலி-மணமாகியபுலி, புலன்-அறிவு' (௩அ) வேள்-மன்மதன், அறுமுகவன், (௪௦) மரை-மூதற் குறை,

கஎ (௪௬) கோபாலன்-கண்ணுதலோன், (௪எ) இன்புல்காரம், இன்பு உன் ஆர, உன் முதனிலேத் தொழிற்பெயர்,

கஅ (௫௨) சிந்து ஆம், (௬௦) நடு இடை,

கக (௬க) கரு மையில் வெள் அக்கரம், (௬௬) களே-கள்ளே, (௬௯) புகா-வெள்ளி, கவிஞன்-புதன்; கலி-சனி, வெண்கதிர்-சந்திரன், செங்கதிர்-சூரியன், சேய்-செவ்வாய்,

உ௦ (எ௦) பசுநீர்மை-பசுத்தன்மை, ஆதிவடிவு-விரைநெல் (எ௨) வை-வைக்கோல், (எ௩) வைவேல்தாக்கும், சொல்-நெல்,

உக (எ௬) மூலம்-கிழங்கு,

உஉ (அக) கருவான்மி ஊரும்-மி குறுக்கல்விகாரம், (அ௨) அத்தி-என்பு, மயிலே-ஒருவகைமீன்.

உ௩ (கஅ) ஒரு கொம்பு ஆர் அத்தி-விநாயகர், வேங்கை-முருகன், சம்பு-சிவன், (உ௦) பை-பாம்பின்படம், (உக) கால்-காற்று, வரம்பு-எல்லே, தேன் அரம் பை, (உ௩) வடு—தழும்பு

உ௪ (௩௦) பலகண் இயைந்து, சசி-சந்திரன், இந்திராணி,

உ௫ (௩க) பயம்-பலன், சலம் அச்சம், (௪௫) நூல்-இழை மையொத்த இடை, அனந்தன்-திருமால், சேடன், அனம்-அன்னம்.

௩௦ (௪௭) எல்லே-சூரியன், (௪௮) கன்று-வளையல், (௫௦) கோடு-கறை, கோடி-முன்னிலேவினைமுற்று. (௫௪) சுவர்க்கம் தனம், மத்தியம்-இடை, பாதலம்-பாழ்த இடம்,

௩௧ (௫௩) கால்-காம்பு, கன்னீர். சிறை-இடம், (௫௬) அபூபம்-பலகாரம், மருந்து-அமிர்தம்.

௩௨ (௬௨) மாழா மை-மயங்கிமேகம், (௬௫) தில்-விருப்பம், செல்-மேகம், (௬௬) கான்நாள் தளவு,

௩௩ (எக) ஆகம்மன்றல், (எ௨) வடு-மாம்பிஞ்சு (எ௫) குர்தம்மைவேல், சதி-தாளவரிசை, (எ௭) முளரி-தாமரை, தீ, தருமன்று-தரும்அன்று.

௩௫ (௬௬) நரையானையுள்ளான் வெள்ளைநிறத்தையுடைய இடபத்தையுடையசிவன், கொக்கு-மாமரம், குயில்-உமை,

௩௬ (௬௭) கலைமான்-சரசுவதி, (௬௮) மின்-இலக்குமி, (௬௯) கிகிரி-மலை, அத்தி கிரி-யானை, வாகம்,வையம்-தேர், (௧௦௦) உளம் ஆம் கனி, வடு-பிஞ்சு, (௧௦௩) ஆண் மகன்-அரிகரபுத்திரன், (௧௦௪) புலவன்-வித்வான், மாமன்-சிபதி,

௩௮ (௧௧௬) திருக்கும் அகோட்டம் (௧௧௮) காயா-மரம், (௧௧௯) அயம் ஆவான்-கற்கியவதார மெடுப்பவன்.

௪௦ (எ) சாகை-கிளை, மரன் அயல், ஒது இனர், (அ) முனி-வில், வரை-மலை, சோதிபூவை-மரங்கள், (௯) பயோதரம்-மேகம், தனம், (௧௦) மஞ்சு-மேகம்,

௪௭ (௧) திருக்குஅயில், (௨) மாது இருக்கை, (௩) ஒருங்கு அயில் ஆயன், (௪) வெள்ளிய சலம்,

௪௮ (அ) அங்கம் மலை, மலைக்கும் பெயரெச்சம்,

௪௯ (௪எ) வந்து-காற்று.

௫௯ (௫எ) கல் நல் சிலை, அரி-பாம்பு, மால்-மயக்கம்.

௮௩ (௫) சாடிஉடைபெரிய-குடப்பறை, உடுக்கை,

௯௬ (௧௫) மருவு ஈராகு உவந்தான், (௧௬) நல்லஉணர்வுஆன் தலம் (௧௭) ராமகேந்திரம், (௧௮) கேசத்து அளை, (௨௦) சூர் அரா சதர்து அலை, (௨௧) பாரம் ஆர்த்து ஆண்ட (௨௨) பார் ஆம் தகனன், (௨௩) சூரது ஈரல் நாமம்.

௧௪௫ (௩) சூது ஆரக்கண்டு ஆம். (௪) மா சிகரம்,

௧௪௬ (௫) திருபதம் கண்டான், (௬) அதம்-பிலம், குருவேங்கடம் (அ) உருவால் அடிகு ஆடும், (௯) மன்று அனகர்கண்டு ஆர், (௧௧) கண்டான்-ஆக்கினைன், (௧௨) பெண் ஐ இடம்,

கசஎ (கச) வளை-மூங்கில், (கரு) தாமரை, கடப்பந்தாமரை, தாம் அரை, (கசா) தேசம்பல, தேசுஅம்பலம், கரன்வற்ருன் நத்தன், (கஎ) போத இருந்தார், போதத்து இருந்தார். (கஅ) கானம் கடப்பம் என்ருர் கடப்பம் தன்மைப்பன்மைவினைமுற்று. மருந்து இல்லை என்றே, என்தேம், (கசு) என் தேத்தர் அங்கு இன் இயல்,

கசஅ (உஉ) தாய்-தாவி, அஞ்சம் இரிதாம் அன்று, அங்கு அண்டான், (உங) சிற்ககணம்-ஞாஞகாயம் (உச) தீதுஆதி தீத்து அதீதத்து இதத்தது ஏது அதே தாதா, தீதத்து அத்தத்த, துதித்து ஒத்து ஒதுஆதி, தெம்தொத்ததாது ஆத்திதே, தத்து உததிதுதை தேத்து ஒத்ததாதாதிதிந்து, தத்துவிபத்து (உரு) மந்தரும் ஆய்வு, மருந்து ாய்வார் (உஎ) வளபவ இவை விளி,

கசகூ (உஅ) நிகளம் நீர், அச ரச அவி அதிப, (உகூ) மால்-காற்று, (ங0) காமன்-இந்திரன், மன்மதன், வனி வன்னி-தீ.

கருக (க) உருக்கு அரக்கு ஒட்டம்,

உசக (கஅ) வா தாவி வாதா ஆவி.

உசங (கஅ) கா-கற்பகத்தரு, காக்கை-காத்தல்,

உநஅ (உஅ) கந்து-தூண், காம்பு-மூங்கில்,

ந உஎ (க) சூர் இயல், மஞ்சு ா ர்

ந சரு (க) உருகுஅரக்கு ஒட்டம் ஆம்,

ரு0ரு (க) அரகோட்டு அத்த-சேடகிரியிலுள்ளவ,

ருரு உ (க) ஒழுகு அர கோள்-இராகுகேதுகள்,

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராண வெண்பா.

விநாயகர் காப்பு.

நேரிசை வெண்பா.

ஸ்ரீமேவு கந்த புராணத் திருக்கதைவெண்
பாமேவு வண்ணம் பணிகுவா—மாமேவு
சக்கரமா தங்கத் தனிமுதலின் மாவிகட
சக்கரமா தங்கச சரண். (க)

சுப்பிரமணியர் காப்பு.

சேவலுநன் மாமயிலுஞ் செங்கையிலொள் வேலுமல்க
மாவகிர்க்கண் மாதிரு மாடுமுறக்—காவலரின்
மாவடிக ளாருமன வண்காஞ்சி மாவடிவாழ்
மாவடிக ளாருமன மன்று. (உ)

நூற்பயன்.

கந்தமலர் மன்முற் கடவுளாக ளேத்தநன்கு
கந்தசுரர் காவலனைக் காய்ந்தவைவேற்—கந்தனற்சீர்
போதத் துதிப்பார் புவனங் கடந்துபர
போதத் துதிப்பார் பொலிந்து. (ங)

வாழ்த்து.

மன்னுகமா வேள்வி வழங்குகவொள் வான்சுரந்து
துன்னுகசெங் கோன்முறையே துன்னற்க—புன்னெறிகள்
சூழ்கசைவ சித்தாந்தத் தூயநெறி யெஞ்ஞான்றும்
வாழ்கவுல கெல்லா மகிழ்ந்து. (௪)

கடவுள் வாழ்த்து

சிவபெருமான்

திருவளிக்குங் கல்வித் திறனளிக்குந் தன்னே
ருருவளிக்கு முள்ளமே யுன்னுய்—மருவளிக்கும்
வெள்ளி மலையான் விமலையான் கேதகையை
யெள்ளி மலையா னினிது. (ரு)

அநாதிதொட் டென்னைவிடா வாணவமாம் பேய்க்குத்
தனாதுதிறல் குன்றவிடை தந்தேன்—பினாகியாஞ்
சிற்பரசி வந்தனையே சித்தியுற வாக்குசிரத்
திற்பரசி வந்தனையே செய்து. (௨)

அம்மாதா லந்தழைப்ப வாண்டோர் மகிழ்பூப்ப
அம்மா துளங்கனிய யாடரசாம்—அம்மான்
நடராசன் மங்கலப்பா நன்கேத்தி னெஞ்சே
பட்ராசன் மங்கலப்பாம் பார். (௩)

சிவசத்தி

பங்கமல முற்றுமற்றுப் பல்வகைய வான்மாக்கள்
அங்கமல முற்றுமற்றின் பாரவே—செங்கமலங்
கோனாட்ட மேல்வைப்பார் கோநாடத் தானாடுங்
கோனாட்ட மேல்வைப்பார்க் கூறு. (௪)

தட்சனா மூர்த்தி.

பன்னியலோர் கூறும் பசுவியலும் பாசமென
மன்னியலு மற்றொளிரு மாபதியாந்—தன்னியலுஞ்
சின்முத் திரையாற் றெரித்தருள்வா னாணவமுன்
னான்முத் திரையா ருயிர்க்கு. (௫)

விநாயகர்.

வஞ்சக் கவடொடித்து வன்பாச மைந்தறுத்து
நெஞ்சக் குவடேறி நிற்குமொன்னா—ரஞ்சத்
துரக்குஞ் சரமா றொழுமிறைசே யைந்து
கரக்குஞ் சரமா களித்து. (௬)

வைரவக் கடவுள்

ஆடன் மருவவுண ராருயிர்கொள் செங்கதிர்வேல்
வேடன் கதைநவில வித்தையன்பு—சேடன்
முடுகன் புடையாரின் முந்தநல்கு நெஞ்சே
வடுகன் புடையார் மகிழ்ந்து. (௭)

வீரபத்திரக் கடவுள்

என்றன் றுதியேற றெனையுஞ் சினமென்னுங்
குன்றிலிவ ராமலருள் கூர்வதூஉ—மன்றி
விருப்பத் திரையுள்ளும் வீழாமற் காப்பான்
திருப்பத் திரையுள்ளுந் தே. (௮)

சுப்பிரமணியக் கடவுள்.

உரைக்கலா முள்ளமே யோரைம் புலனை
யரைக்கணமத் தன்சே யடித்தா—மரைக்கண்
திருப்பரங் குன்றத்தான் றேசுறுவேற் கந்தன்
திருப்பரங் குன்றத்தான் சீர். (௯)

தொல்வினையின் பந்தத் தொடரறுப்பா னெண்ணுவீர்
நல்வினையே செய்வீர் நலந்தருவான்—வல்வினைக்கஞ்
சீரலை வாயமருந் தேசிகருஞ் செவ்வேளாஞ்
சீரலை வாயமருந் தே. (௧௦)

அங்கமுறு சென்மத் தலைவுறுவெந் நோயனைத்து
மங்கருணன் முன்னிமம்போ லாகுமே—யங்க
திருவாவி னன்குடியாச் சேர்முகத்தர் சேயாந்
திருவாவி னன்குடியாற் செப்பு. (௧௧)

சிந்திக்கத் தித்திக்குந் தீயவினைக் கோர்மருந்தாம்
வந்திக்க முத்திநல்கும் வாய்ந்தசுழி—யுந்தித்
திருவே ரகமேவுந் தேருலாம் ஞெள்ளல்
திருவே ரகமேவுந் தேன். (௧௨)

என்மனமாங் கல்வி யினிதுறைத லற்புதமோ
தென்மலையான் றேசிகனற் செங்கமல—மென்மலர்நேர்
குன்றுதொ ருடலைமுன் கோலமனந் தேடரன்சேய்
குன்றுதொ ருடலைமுன் கோ. (௧௩)

காமனென்றுஞ் சோமனென்றுங் காமனென்றுஞ் சோமனென்
பூமனென்றும் பூரியரைப் போற்றுநெஞ்சே—நாமன் [றும்
பழமுதிர் சோலையனைப் பண்டுவலம் வந்த
பழமுதிர் சோலையனைப் பாடு. (௧௪)

தன்னே ரிசைவிருத்தத் தாற்சொலமுன் னின்றமைபோ
லென்னே ரிசைவெண்பா விற்கருள்வான்—முன்னே
குருகுமரக் கோட்டக் கொடுமணநே ராப்பண்
குருகுமரக் கோட்டக் குகன். (௧௫)

தெய்வயானை வள்ளியம்மை

என்னன் புடைமொழிகட் கின்னருள்செய் வார்கடம்பார்
மன்னன் புடையமரு மங்கையராம்—வன்னகில்சேர்
வார்க்குஞ் சரியாரும் வள்ளியெனுங் காந்தளங்கை
யார்க்குஞ் சரியாரு மாங்கு. (௧௬)

### திருநந்திதேவர்.

சிந்தியா நெஞ்சே சிவனயன்மா லாதியரைப்
பந்தியா யுய்த்துப் பணிவித்தே—யந்தி
வருணந் தியங்கத்தன் மன்கயிலை காக்குந்
தெருணந்தி யங்கத்தன் சீர். (கஎ)

### நவவீரர்கள்.

மன்வாகு கேசரி மாகேந் திரன்மாகே
சன்புரந்த ரன்ராக்க தன்மார்த்தாண்—டன்னந
தகன்றீரன் வீரந் தலைக்கொளிவர் நாயே
னகன்றீரஞ் செய்வா ரமர்ந்து. (கஅ)

### ஆசிரியரகத்தியனார்

சங்கரியைச் சங்கரனைத் தாபித்தோன் சற்குருவாஞ்
சங்கரிசேய் தன்கதைக்குட் சார்ந்தருளுஞ்—சங்கரிநேர்
முத்தமிழ் தந்த முனியலைவீழ் பன்மொழிசேர்
முத்தமிழ் தந்த முனி. (கக)

### திருஞானசம்பந்த மூர்த்திநாயனார்.

பிருந்தையென்பி லேபுரண்டு பேதுறுமா ணை
வருந்தைய லென்பினைப்பெண் ணாக்கும்—பெருந்தகையாஞ்
சம்பந்த ரத்த சரண்சனன மாவெயிற்குச்
சம்பந்த ரத்த தரு. (உ0)

### திருநாவுக்கரசு நாயனார்.

அணையாழிக் கிட்டிலங்கைக் கண்ணரியுட் கக்கற்
புணையாக் கடல்கடந்தோன் பூந்தா—டுணையாஞ்சீர்
ஓதக் கடனெஞ்சே லோதிக் கடபிறப்பாம்
ஓதக் கடனெஞ்சே யோர்ந்து. (உக)

### சுந்தரமூர்த்தி நாயனார்.

மாலயமா நெஞ்சம் வலிகாந்த மாம்வண்ண
மாலயமா வீற்றிருப்பா ரஞ்ஞான்று—மாலயனுஞ்
சந்தேகப் போக்கினர் தாமருள நின்றவரைச்
சந்தேகப் போக்கினர் தாம். (உஉ)

### மாணிக்கவாசக சுவாமிகள்.

வரையா மறைவாய் மலரயன்மாற் கண்ணான்
வரையா மறைவாய் மலர்ந்தோன்—வரையத்
திருக்கோவை யாரென் றெருணூலைக் கூறுந்
திருக்கோவை யாரென் றிரு. (உங)

தண்மச நாயனார்.

அரக்கனைக்கொல் பாவ மகலவருச் சித்த
சரக்கமலன் கண்டேக் கறுப்ப—விரக்கமிலாத்
தந்தை யிருந்தா டடிந்தரன்றாள் சார்ந்தவென்
சிந்தை யிருந்தாள் சிறந்து. (௨௪)

அறுபத்துமூவர்.

கயற்கணுமை காந்தன் களிக்க வுலகிற்
செயற்கரிய செய்தவன்றாள் சேர்ந்த—பெயற்கருணை
யொன்பா னெழுவ ரொளிர்தா ணினைக்கினவ
ரன்பா னெழுவ ரகத்து. (௨௫)

சரசுவதி.

இவளவென் றில்குகன்சீ ரேய்ந்திசைவெண் பாவிற்
றிவளவருள் செய்வளிதழ் செய்ய—பவள
மருப்படிக மன்னு வளரளக நீல
முருப்படிக மன்னு ளுகந்து. (௨௬)

மற்றையடியார்.

கண்டிகையும் வெண்ணீறுங் கண்ணீரு மாகமுற
எண்டிகையு மேத்து மிறைவருக்குப்—பண்டிகையாத்
தேவார மாதியைந்துந் தேர்ந்தோதித் தொண்டினுக்கு
மாவாரந் தாடலைமே லாம். (௨௭)

சந்தானகுரவர்.

சீராரு மெய்கண்ட தேவ னருணந்தி
தாரார் மறைஞான சம்பந்த—னோரா
ருமாபதியென் றேத்தமர வோங்குவர்தாள் சார்வே
னுமாபதியென் றேத்தமர வாங்கு. (௨௮)

பஞ்சாக்கரதேசிகர்.

நியம முறத்துதிக்க நித்தியமே நல்கு
மயமதுறக் கொள்காந்த மாத்தன்—வயமுறவெ
னெஞ்சாக் கரனு நெடுமா வடுதுறைவாழ்
பஞ்சாக் கரனார் பதம். (௨௯)

தீக்ஷாகுரு.

நஞ்சக் கரத்தாலக் கஞ்ச னெழுத்தழித்தே
யஞ்சக் கரத்தா லகவிருணீத்—தஞ்சலென்றான்
மாசிக ளுயன் மனச்சுப் பிரமணிய
தேசிக னுய சிவன். (௩௦)

இதுவுமது.

குருநமச்சிவாய குரவன் மரபில்
வருசுப் பிரமணிய மன்னே—னொருவன்
திகழும் பலவாண தேசிகன்றா ளன்றிப்
புகழும் பலவாணர்ப் போந்து. (௧௯)

வித்தியா குரு

சின்னைய வாரியனற் சின்னசா மிக்குரவ
னென்னைய ராமிவரோ டெத்தலமும்—பொன்னனைமெச்
சுந்தரவா சானுந் துணையிலருண் மீனாட்சி
சுந்தரவா சானுந் துணை. (௧௨)

---

அவையடக்கம்

---

வெண்பாவி னுடைக்கு மேன்மையது மூகைசண்—
பண்பார் கனவிளக்கும் பான்மையதே—விண்பாரு
கந்த புராண கருணு கரவயில்வேள்
கந்த புராணக் கதை. (௧)

பெருக்கமா நூற்கும் பெருந்தகையோர் கூற்றான்
சுருக்கமா நூற்குநடுத் தோன்ற—வுருக்கமா
வெண்பாவால் வேள்சீர் விளம்புகென்றார் விதத்தகன்ப—
னண்பாவார் நல்லோர் நயந்து. (௨)

அன்னவர்தஞ் சொன்மறுத்தற் கஞ்சியிது சொல்லலுற்றே
னுன்னுகவி நாயகனு மோர்புலவ—னென்ன
வழுத்தவரு மாண்பான் மதியிலன்சொன் னூலில்
வழுத்தவறு வையான் மகிழ்ந்து. (௩)

உள்ளறிவிற் கேற்பவொண்பா வோங்குபுல வோர்நவின்றார்
வெள்ளறிவிற் கேற்பவெண்பா வேட்கையின்றேன்—றெள்ளறிஞர்
வெள்ளையிதென் றானும் விருத்தமெனார் முற்பாவாக்
கொள்ளையினிற் கொள்வார் குறித்து. (௪)

ஐயனருள் பெற்றகச்சி யப்பசிவா சாரியர்தஞ்
செய்யநூன் மாட்சி தெரிதரவே—துய்யவன்ற
ரொண்பாத தாமரையை யுள்ளத் தடத்திருத்தி
வெண்பாவி னூற்கலுற்றேன் வேட்டு. (௫)

புதிதாக வொன்றும் புகல்கிலன்வேள் காதை
துதிதாக மேற்கொண்டு சொற்றேன்—மதிவல்லீர்
சொன்னதுசொன் னாலுஞ் சுகமொழியைத் தள்ளுவரோ
வன்னதுபோ லென்னுரையு மாம். (௬)

இந்தமாக் காதை யெயிற்கச் சியிலிருந்து
கந்தவே ளின்னருளாற் கட்டுரைத்தேன்—சந்தமுறச்
சாற்றிடுபா ரெண்ணூஞ் சகாத்தமோ ராயிரத்தெண்
ணூற்றிருபான் மூன்றி னுனித்து. (௭

சிறப்புப்பாயிரம்.

கண்பாவா யார்க்கமையுங் கந்தவேண் மாக்கதையை
வெண்பாவாற் கூறி விளக்கினா—னண்பாருந்
தில்லை விடங்கன்வாழ் சீர்வேலு சாமிமிக்கோ
னெல்லையினா லாய்ந்தோ னினிது. (அ)

ஆக திருவெண்பா ௪௪

---

# ஆற்றுப் படலம்.

அருண்மொழித் தேவாகச்சி யப்பர்சிவ ஞானத்
தெருண்முனிவ ராதி சிறந்தோர்—பொருண்மாட்சி
தோற்றநனி போற்றுபுகழ்த் தொண்டைநாட் டெண்டலைச்சமை
சாற்றநகை யெற்கே தரும் (௧)

கோட்டிற் கணியாங் குலவு மணிச்சிகர
மாட்டிற் கணியா மபிநயஞ்சீர்—நாட்டியனற்
பாட்டிற் கணியாம் பளிங்கலணி யாங்கதுபோ
ணாட்டிற் கணியா நதி. (௨)

கங்கையுருக் கொண்டேகிக் கார்த்திரைநீர் மேய்ந்துவரை
மங்கையுருக் கொண்டு வந்த மாமுகில்கள்— செங்கையான்
கோடீர மேய்ப்பட்மின்னிக் கூறருள்போ னந்திவரைக்
கோடீர மேற்பொழிந்த கூர்ந்து (௩)

எழிலிவ்வரை தோறு மிவர்ந்திறங்குந் தோற்ற
மெழிலியையும் வானவர்கோ னீர்ந்த—வுழிநின்று
தம்மின் வளர்ந்திறகிற் றுவிப் பறப்பதற்கே
யம்ம முயல்வதொக்கு மாங்கு. (௪)

அன்னதனைக் கண்டுபொறா ணூகிச் சதக்கிருது
கொன்னுதிய வச்சிரவாள் கொண்டரிய—மன்னசலம்
வாய்விட் டரற்றல்போல் வான்குமுறுந் தெவ்வர்முன்
றேய்வுற் றிருக்கினுண்டோ நீங்கு. (௫)

முன்னஞ் சிறகரிந்த மொய்ம்பவிரங் கொள்குறும்பை
யின்னஞ் சிதைப்பனென விந்திரன்சீர்—மன்னவே
கார்முகந்துன் னம்பெய்யுங் காட்சியிற்கன் மேற்கடனீர்
கார்முகந்துன் னம்பெய்யுங் காண். (௬)

வானவர்கோ னெய்த வழிநின் றொழுகுநிணை
மானு மெழிற்செம் மணிமிளிர்த—லேனலுயர்
சாரலகந் தோறுந் தயங்கிந் திரகோபம்
வார வமர்ந்தொழுகு மாண்பு. (௭)

வீரையாஞ் சாலையிலார் மேக வுறையிற்பெய்
தாரையா மீட்டியுறத் தான்வீசித்—தீரமொடு
வாடையா மீளி வரப்போ யொளித்ததே
கோடையாம் வெய்யோன் கொதிப்பு. (௮)

வானவின்மா மஞ்சில் வயங்கி மறைகாட்சி
வானமரர் வாழ்த்துநந்தி வானவருக்—கானதிரு
மஞ்சனநீ ராட்ட மணிவா சிகைகளேந்தே
யஞ்சலமன் வைத்ததொக்கு மாங்கு. (௯)

கருத்தியைந்து சாண்டக் கடவுள் கனமாந்
துருத்தியின்முந் நீர்முகந்து தூய்தாய்த்—திருத்தியநீ
ராட்டுவது மானுமுகி லங்கிரியைத் துவகவிரு
கோட்டுநந்தி யாகக் குறித்து. (௧0)

ஓங்கருஞ்சீர் நந்தியெனு மும்பற் கணிகோட்டிற்
றூங்கருவி வெள்ளைத் துகினிகர்க்கு—மாங்கதன்கட்
சாந்தகினல் வேங்கைத் தருமலர்கள் வாய்ந்துநிற்றல்
பூந்தொடைய லொக்கும் பொலிந்து. (௧௧)

தூநற் கிரியிறைக்காந் தூபமொடு தீபமொக்குந்
தானக் குறிச்சிதொறுஞ் சந்தகிலின்—வானம்
விளர்க்க வெழும்புகையில் வில்லினர்செந் தீயை
வளர்க்க வெழும்புகையின் மாண்பு. (௧௨)

மைதவழ மஞ்ஞைபெயர் வண்மையவான் மால்வரையிற்
செய்தவத்தோன் றன்சுரபி தீர்த்தமாய்ப்—பெய்தவந்தப்
பாலியா றென்னப் படர்தலினா லாங்கதன்பேர்
பாலியா றென்பர் பரிந்து (௧௩)

ஐந்திணையா மன்னைமா ராங்காங் களித்தபொரு
ளுந்துதிரைக் கையா லுகந்துகொடு—சிந்துவெனுந்
தன்பதியு ளோகையுறத் தந்து கலந்ததே
வன்பதிநீர்ப் பாலி மகிழ்ந்து. (௧௪)

மேதிகழை யுண்சாறும் வெம்முக் கனித்தேனு
மோதுமுல்லைப் பாறயிர்நெய் யோடுகொடு—மோதுதிரைப்
பாலி கடன்மடுப்பப் பண்ணியிதென் வாரியெனு
ஞாலமயிர்ப் பாறுற்று நன்கு. (கரு)

வரையிற் றவழ்ந்துவந்து மாமுல்லை யாயீ
நுரையிற் றருபா னுகர்ந்து—மருதத்
துறையிற் படிந்தாடித் தூயநீர்ப் பாலி
யிறையிற் புணரு மினிது. (கசு)

முல்லை குறிஞ்சியென முன்னவே நன்மருத
முல்லையென மன்ன முடைநெய்தல்—சொல்லரிய
தண்மருத் வைப்பாச் சமைத்ததே சித்தரென
நண்பொருளாற் பாலி நதி. (கஎ)

நந்திவரை மேற்றோன்றி நாட்டுளர்க்கங் காட்சிதர
வந்தின் னலமளித்து மன்னகஞ்சே—ரந்திறலாற்
றுங்கமுறு பாலி துதிதருக பாலியாஞ்
சங்கரனை மானுந் தகைத்து. (கஅ)

ஆங்கமலை யும்வனமு மார்புறலா னந்திகிரி
தாங்குகையான் மீனுமை தாமுருக்கொண்—டோங்குதலா
லெண்ணற்கு நேரா விரும்பாலி காயாம்பூ
வண்ணற்கு நேரா வரும். (க௯)

செய்யகலை மான்றழுவித் திக்குதொறுங் கந்திகழத்
துய்யவன மூர்ந்துவந்து தோன்றுதலாற்—பையணைக்கண்
மாலுந்தி மேவிவரு மாட்சியினாற் காட்சியயன்
போலுந் திரையார் புனல். (உ0)

தாயமலை யாகிவருந் தன்மையினான் மோதகத்தை
மேயதன்கைக் கொண்டு விளங்குதலா—னையவெண்
கோடுமுறித் தேமாவைக் குத்திச்சாய்த் தைங்கரனே
ரோடுபுனற் பாலி யுறும். (உக)

வரையி லிருந்துவந்து மாமயின்மேற் கொண்டு
விரைவினில்வே லான்மாவை வீட்டிக்—கரையிருபான்
மாதங்க மான்றருநல் வல்லிதழீஇ வேணிகரு
நாதங்கொள் பாலி நதி. (உஉ)

நந்தியிட மன்னிவந்து நன்றுறுசே யாறுபெற்று
நிந்தையில்பேர் பாலியெனு நீர்மையொடு—சந்தகிலைப்
பாரா ரிருகரையும் பாற்றி வருநீத்த
நாரா யணியையொக்கு நன்கு. (உங)

ஆரமணி தீங்கனிகொண் டானந்தக் கண்ணீர்தான்
வாரமலர் சிந்திவழிபடுவோன்—நீரமுறத்
தேவார மோதிச் சிவார்ச்சனைசெய் மெய்யன்ப
ராவாரை நேரு மறல். (உச)

காயரித்தோல் போர்த்துங் கமண்டலங்கைக் கொண்டுமன்னைந்
தாய புலநெறிபோ யார்பதிபாற்—றோய்தந்து
மல்லொழுக்கின் மேவா வறமா முனிவார்த
நல்லொழுக்கின் மேவு நதி. (உரு)

தாயா யுலகளிக்குந் தன்னோடு வேகவதி
சேயா திருபாலுஞ் சேர்ந்திறைகைத்—தீயாரு
முத்தலைவே லொக்கு முனிவன் சுரபியரு
ணத்தலைநீர்ப் பாலி நதி. (உசு)

நந்தி மரபுவந்து நற்பொருளை லாமோதி
யந்தநிலை காட்டிநில மஞ்சலிக்கச்—சந்ததமு
மேவுறலாற் பாலி விழையா வடுதுறைவாழ்
தாவில் குருவையொக்குந் தான். (உஎ)

எண்கணு னெற்றிவந்தெண் ணில்கலையு மோதுதலா
னண்கடன்மன் னுண்மகிழ நன்கியற்றி—மண்புகழத்
தீவினையு மாற்றித் திவளவர லானீத்த
மேவந் தணர்ச்சிவனு மே. (உஅ)

பொங்குதிரை வைய மதகிரிய மள்ளரார்த்
தாங்குறுவை வேல்விடுத் தஞ்சிறைசெய்—தாங்கண்
மருவலரை வாட்டி வருகையால் வாரி
பொருவரையர் தம்மைப் பொரும். (உகூ)

சந்தகிலின் மென்குறடு தந்தமணி யாதிகொண்
டந்தலைமேற் றாங்கி யவனிதொறு—முந்தி
வருகையால் வைசியரை மானுமே பாலிப்
பொருகையார் வெள்ளப் புனல். (௩௰)

வேதன்கால் வந்தூரு மேன்முத் தலையார்க்கும்
போதநற்கூ ழேர்வளத்தாற் பூப்பிக்கு—மேதி
னருணத்தார் கூல மவிர்பாலி நாலாம்
வருணத்தா ரொன்ன வரும். (௩௧)

மொய்ம்பா ரிருகையு மொய்வளைபெய் தாரம்பூண்
டைம்பான் மலர்வேய்ந் தவிர்மணியும்—பைம்பொன்னு
மான்மதமுங் கொண்டு வரலான் மணமகளைப்
போன்மருவு நீத்தப் புனல். (௩௨)

வன்பா ரிருகோடு வாய்ந்தைந் திணைப்பொருள்ட
ன்பாற் படவே திரணியில்வந்—தன்பான்
மருவண்டர் போற்று மகிமையினு னேரும்
பொருவண்டர் சூழும் புனல். (௫௩)

ஓங்கான் முலையின்க ணூற்றதுணர்ந் தேமாக்க
ளாங்காங் கணைதந் தரும்பயத்தீத்—தாங்கான்
முதலமடுப் பூான்மறித்து முந்தவிடு நீராற்
கதமினிரை யொக்குநதி காண். (௫௪)

ஆலும்வெண் சங்குகளை மாயசுழி யுந்திவரால்
காலுன் குமிழி கதிர்த்தமுலை—மேலொளிர்கட்
பாலியாம் பாவைதொண்டைப் பார்மகட்கு நற்றாயாய்ப்
பாலியா நிற்கும் பயம். (௫௫)

ஓதும் வரைகடந்தே யோரைம் புலன்வழியே
காதலுற வோடிக் கலங்கிப்பின்—மாதர்பொன்
மண்மய லீத்த மனம்போற் றெளிந்ததே
மண்மய லீத்த மறுத்து. (௫௬)

சேயாறு பொன்முகரி சீர்நந் தினியாதி
பாயாறு நீர்பெருகிப் பாயுமால்—தூயோர்
மனனொடு தொண்டை வளனொடு முற்றும்
புனனொடு போனற் புனல். (௫௭)

பாலியா நற்றாய் பதியிடத்திற் றோய்ந்துபயம்
பாலியா நின்ற பருவத்திற்—சீலமணற்
குன்றுதன மாகக் குலவுமள்ளர் சேயாக
நின்றுதொட நல்குமபா னீர். (௫௮)

கொள்ளுநருக் கீந்தார் குறைவுவந்த காலத்து
முள்ள துதவு முயர்குணத்த—வள்ளல்போற்
காலினீர் வேண்டிக் களமர் தொடக்குறிப்பிற
பாலினீர் நல்கும் பரிந்து. (௫௯)

வறிஞர்க்கு மல்குபொருள் வாய்க்கினவர் தக்க
நெறிபுய்க்கு மாறுபோ லீத்தஞ்—செறியமள்ள
ரோடைகுள னேரி யுறத்தேக்கிச் செய்யகநீர்
சேடையுறப் பாய்ச்சுவார் தேர்ந்து. (௬௰)

கங்கை யுயர்விழியக் காவே ரியுமடங்கப்
பொங்குதிரைப் பாலி புறப்பட்டுப்—பங்கயமே
பல்கு பலகாலிற் பாய்ந்தெங்கும் பல்வளனு
நல்குசீர் மைத்துதொண்டை நாடு. (௬௧)

ஆற்றுப்படலம் முற்றுப் பெற்றது.

---

# திருநாட்டுப் படலம்.

திருமான் முதலமரர் தேவிமா ரோடு
மருமா மலர்தூய் வழிபட்—டொருமாத்
தனிமுதலைச் சார்ந்தனையான் றண்ணருள்பெற் றன்பி
னனியமர்நீர் மைத்துதொண்டை நாடு. (க)

எம்மையா ளீசனையீ ரேழுலகு மீன்றருளு
மம்மையா ரர்ச்சித் தருள்பெறூஉஞ்—செம்மையார்
காஞ்சி நகரரசாள் காவலன்போல் வீற்றிருப்ப
நாஞ்சினகர் சூழ்வதொண்டை நாடு. (உ)

பெண்ணையொரு பால்வைத்தும் பேர்பெறுநற் கைலையுற்றுங்
கண்ணுருமென் றொண்டைமான் கையமர்ந்து—மண்ணுலகிற்
பொன்னாடு செஞ்சடையான் போன்றதே சான்றோர்வாழ்
நன்னாடு சீர்த்தொண்டை நாடு. (ந)

ஆழிகுணத் தோர்கைதந்து மார்நீர் மலையுற்றுங்
காழிசைமன் றண்டகன்மாக் கையடைந்தும்—வீழிவாய்
வேதனைநே ராந்துனைதகோள் வீக்கணமர் மாக்கமல
நாதனைநே ராந்தொண்டை நாடு. (ச)

தேர்ந்தமறை யோர்நால்வாய்த் தேத்தவிர்ந்து மாழிநில
மோர்ந்துதனித் துணைடீர னுந்திவந்து—மார்ந்தசெழும்
பூமன் னிருக்கையுற்றும் போதனைநே ராம்புலவர்
நாமன் றிருத்தொண்டை நாடு. (ரு)

செந்நாப்போ தார்பெருந் தேவனார் சேக்கிழார்
செந்நாப் புலவர்கச்சி யப்பசிவன்—முன்னாகப்
பன்னா வலர்பலர்வாழ் பண்பாற் சிறந்தன்றே
நன்னாடு சீர்த்தொண்டை நாடு. (சு)

கங்கை யுடைத்துவருங் காவேரி நன்குடைத்து
துங்கமுள வையை தொழுந்தகைத்து—பொங்குதிரைப்
பாலாறு பாயும் பயனுடைத்தே கோட்டமோர்
நாலா றுடையதொண்டை நாடு. (எ)

வடபாற் பணியசல மன்குணபால் வாரி
குடபாற் பவளக் குவடு—தடமாருந்
தென்பாற் பினாகி திகழெல்லை யாய்க்கொளுமே
நன்பாலி சூழ்தொண்டை நாடு. (அ)

பேய்க்கரும்பே தித்திக்கப் பெற்றருள்வெண் காடாருள்
வாய்க்கரும்பே றுற்றதிந்த வையகத்திற்—காய்க்கரும்பே
யின்றியுடைத் தாருபல னீப்பெனவுள் ளன்பினர்செய்
நன்றி யுடைத்துதொண்டை நாடு. (கூ)

ஆண்பனையைப் பெண்பனையா தாகமறைஞ் சேயுலகின்
மாண்பனையின் பால்கமழ வாய்மலர்ந்த—சேலம்பனையர்
தாமேவு மோத்தூர்த் தலமுடைத்து பாவலர்த
நாமேவு நற்றொண்டை நாடு. (கo)

தெள்ளிடையன் வாட்டழும்புந் தென்னவன்மாற் றொண்டழும்புங்
கொள்ளியழுன் றுற்று கொடியநா—டெள்ளி
முகிற்றகர மைக்குழலாண் முன்னோன் மகிழ
நகிற்றழும்பு வைத்தசந்த நாடு. (கக)

சேர வளநாடுந் தீம்புனனு டோடுவையை
நீர வளநாடு நேராகா—தாரவே
தொண்டைநா டந்தகைவாற் றுண்டீர நன்னாட்டைத்
தொண்டைநா டென்பர் துதித்து. (கஉ)

பளகினன்மாற் பேறுதி பஃறலமும் போற்றித்
துளவணிமால் சூழ்கிடக்குந் தொண்டை—வளநாடு
சான்றோ ருடைத்தென் றகையுணர்ந்தே தாங்குமரா
வூன்றோய் முடியி லுலகு. (கங)

நலமார் திருத்தொண்டை நாட்டிற் கணியாந்
தலமார் கயிலை தணிகை—மலமா
திருக்கழுக் குன்றற் றெரிசிக்கிற் றீர்க்குந்
திருக்கழுக் குன்றஞ் சிறந்து. (கச)

பாரே யுயிர்வளர்க்கும் பாய சலத்தோடு
காரே யசலமுற்றுங் காரணத்தாற்—பேரேய்ந்
திடுநா டிரண்டினியல் பேற்றிடலான் மேவா
நடுநா டெனப்படுமந் நாடு. (கரு)

செருப்பரீர்த் தெவருந் தியங்கநடு நாட்டார்
நெருப்பார் மலைவெம்மை நீங்க—விருப்பாரு
சீர்மலையும் பெற்றதென்று னீடுதொண்டை நாடுபெறாஉஞ்
சீர்மலையா தார்நவில்வார் தேர்ந்து. (கசு)

வேழ முகம்படா மேவாநா டுண்சோற்றுச்
சோழவள நாடுமுத்தந் தோன்றுநா—டாழவுட்கி
யான்ற வரையே யகப்பொருளாக் கொண்டுயர்ந்தெஞ்
ஞான்றுநகை காட்டுமந்த நாடு. (கஎ)

வானெய்தன் மேவும் வரையி னிரையின்றீம்
பானெய்தன் வாசம் பரிமளிக்குங்—கானில்வே
டானெய்த னார்பூஞ் சரங்கொய்யும் வண்பணையிற்
கானெய்த னுறுநெய்தற் கண். (கஅ)

ஆம்பல் படரு மணிவரையி லாய்ச்சியர்வா
யாம்பல் லவாவுமுல்லை யார்வனத்திற்—றேம்பிலிற்று
மாம்பல் படரு மலர்செறுவி னெய்தலின்க
ணம்பூல் வளஞ்சுரக்கு மாங்கு. (கக)

வாலிதாந் தொண்டை வளநாட்டி லேரிதொறுஞ்
சாலிதா மோங்கச் சலதிறைதல்—பாலிதான்
செய்யென்னுஞ் சேயருந்தத் தீம்பால் சிலகலத்திற்
பெய்துவைத்தன் மானும் பெரிது. (உ0)

பன்னே ரியல்பனைத்தும் பல்குந திருநாட்டிற்
றுன்னேரி யுஞ்செறுவுஞ் சூழ்காட்சி—மன்னேயா
மாயிரங்கண் பெற்றவற்கொப் பாக மருதநங்கை
யாயிரங்கண் பெற்றதொக்கு மாங்கு. (உக)

வரையின் வளனும் வனத்தின் வளனுந்
திரையின் வளனுஞ் செழுநீர்க்—கரையின்
வளனு மெடுத்துரைக்க வாயு நினைக்க
வுளனு மெவர்தா முளர். (உஉ)

பழையனூர் நீலி பழிக்குவே ளாள
ரெழுபதின்ம ராலங்காட் டீசர்—கழனிணைந்தே
தீப்புகுந்தா ரென்னிற் றிருத்தொண்டை நாட்டருமை
யாப்புகழ்ந்தா சொல்வார் நயந்து. (உங)

---

## குறிஞ்சி.

அன்னை பிறப்பிடமு மத்த னிருப்பிடமு
மின்னை யளித்தோர் விருப்பிடமு—மென்ன
வுறிஞ்சிக்கண் மாவுண் டுகந்தினிசை பாடுங்
குறிஞ்சிக்கண் மேவுங் குகன். (உச)

வள்ளிபசழ் வன்குழியின் மன்மணியை வன்னியென
வுள்ளி பொதுங்கு முளியமதைத்—துள்ளிநனை
யண்ட வுடல்பனிப்ப வோடி யுயர்தீயின்
குண்டமெனச் சாருங் குரங்கு. (உரு)

ஆங்கமருந் திண்வேழ மாயிரங்கண் பெற்றொளிரும்
வேங்கையயு தங்கோடு மேவுங்கோ—டோங்குங்
கிரிபெயர்ந் தோடுங் கிளரருவி நிற்கு
மரியவளஞ் சொல்வ தரிது. (உசு)

வேங்கையெதி ரிற்சே விளங்குங் கிளையுட்னே
யோங்கரிமுன் றும்ப லுராய்நிற்குந்—தீங்கின்றி
வேடர் குழவியும்பாய் வெய்ய புலிப்பறழு
மாட லுஞற்று மவண். (உஎ)

துங்கவரை கும்பமதிற் றூங்கருவி யாங்கடத்திற்
பொங்குவெள்ளைத் தானைதொங்கல் போலுமே—யங்கெரிதீ
குண்டமொக்கும் பாங்கார் குறவர்மகஞ் செய்கின்ற
மொண்டவரை நேர்வ ருகந்து. (உஅ)

வாக்குமன்பொன் கல்லையுழ வாரங் கொடுவெறிந்து
மோக்கவிருப் பொன்றினையே முன்னுதல்போன்—மாக்குறவ
ராரத் தினைநிதியை யாய்ந்தெறிந்து சாரலின்க
ணாரத் தினைவிளைப்பா ராங்கு. (உகூ)

அங்கணிதண் மேவிமணி யாங்கல் கவண்வைத்துக்
கொங்கண் குயந்துளங்கக் கூர்சினத்திற்—பைங்கிளிகள்
வன்சொற் கொடுகெடிந்து மற்றவைபோய் மீளுமன்று
ரின்சொற் பயில்வா னினிது. (௩0)

ஒள்வா ணகையார்புள் ளோச்சுதொறும் பேச்சுணர்ந்தே
யுள்வா ரெனத்தெளிவுற் றொண்கவண்கைக்—கொள்வார்
விரல்கொ ளுகிர்போன் மிளிர்நாசி யின்வாய்க்
குரல்கவர்ந்து போம்பைங் குருகு. (௩க)

அருவி முழவதிர வஞ்சுகம்பண் பாடக்
குருமஞ்ஞை யாடல் குனிப்பக்—கருமுகில்வி
தானமா மேவு தணிகை வரைகுகற்குத்
தானமா மேவுந் தகைத்து. (௩உ)

உளவன் றிறலெயின ரோரைந் திணையார்
களவன்றி யாற்றூர் களவுங்—களவில்
கொடுவன்றி வேட்டத்திற் கூர்ங்கோடு தைத்த
வடுவன்றி யாற்றூர் வடு. (௩௩)

செறிவேட்டஞ் செய்துந் தினையே விளைத்தும்
வெறியாட் டயர்களத்தில் வேலன்—குறிகேட்டுந்
தூநீர்ச் சுனைதோய்ந்துந் தோகையரந் தோள்சேர்ந்தும்
போநீ ளெயினர்க்குப் போது. (௩ச)

மன்புலியின் றோலார் மயக்க மனப்புலியைப்
புன்பொறியு ணொக்கிப் புலன்போக்காத்—தன்மையினன்
மாச்சிரம வேடரவ்ர் மாதவராம் வாழ்குடிலு
மாச்சிரமம் போன்றொளிரு மாங்கு. (௩௫)

விற்றிறத்தில் வல்ல விஜயனையும் பேடியா
மற்றிறத்திற் கண்ணனையு மாலாகக்—கைத்திறத்தில்
வீழனையு மோர்மடைய னாகச்செய் வேடுவர்வாழ்
காமர் குறிச்சிபல காண். (௩௬)

தேனுந் தினைமாவுந் தீங்கனியும் வான்கிழங்குங்
கானுந் தலர்த்தொடையுங் கைக்கொடுபோய்—கானவர்கள்
வான்றோய் குடுமி வரைதோறு மாடலய
ரான்றோன் றனக்களிப்பா ராங்கு. (௩௭)

ஒருவே டனைக்காய்ந் தொருவே டனைக்கண்
டொருவேட னெச்சி லுகந்தோ—னொருவேடன்
வேடமுற்றா னென்னில் விளம்பும் விறலினரார்
வேடர் குலச்சீர் வியந்து. (௩௮)

---

முல்லை.

மருக னிளைஞனவன் வான்றுணையா மேவி
யருகி லமர்வமென்றோ வாயர்—தருமகளிர்
நேயமுற வோதயிர்பா னெய்விழைந்தோ முல்லையின்கண்
மாயன் வதிவான் மகிழ்ந்து. (௩௯)

தேனுமணி வான்றருவாற் றீம்பா லமிர்தமரை
மானுனரி தெய்வதமா மன்னுறலா—லூனமரும்
வேற்கடைக்க ணையமின்னார் மேவுறலால் வண்புறவம்
பாற்கடலென் றெண்ணப் படும். (௪௦)

மனையின் மணக்கு மடுபா றயிர்நெய்
நனையின் மணக்கு நறும்பூ—வினைவி
லதரின் மணக்கு மவிர்தருகத் தூரி
புதரின் மணக்கும் புழுகு. (௪௧)

அடைகாட்டும் வில்வ மலர்காட்டு மெய்காய்
சடைகாட்டுங் கொன்றைத் தருமால்—விடைகாட்டுந்
தேவையொக்கு மாங்கதனைச் சோகிற்கும் பூவைவிழி
யேவையொக்கு மீசையொக்கு மே. (௪௨)

ஆழிவா யின்னமுத மன்றமரர்க் கீந்தபிரான்
றாழிவா யின்னமுதந் தான்விழைந்து—வீழிவா
யாயமின்னார் தாங்கட் டடியுடனேற் றங்கவரை
மேயதினா லன்னவர்சீர் மேல். (சந)

குருந்தடியிற் கோமான் குருவடிவங் கொண்டு
திருந்தடியர் முப்பொருளுந் தேர்வா—னிருந்தவர்போ
றந்நிலையு மன்பசுபா சந்நிலையுங் காட்டிநிற்ப
ரென்னிலவர்க் குண்டோ வினை. (சச)

கண்ணகன்மா ஞாலமெலாங் காக்குந் தனிக்கடவுள்
கண்ணனெனப் பேர்வாய்ந்து கன்றுடனாக்—கண்ணான்மை
மேவவண்டர் தங்குலத்தின் மேயதனா லக்குலப்பேர்
தேவரெலாம் பூண்டார் தெரிந்து. (சரு)

மாயப் பசுக்கடிந்தான் மால்விடையி லேறிவந்து
நேயப் பசுமுன்னர் நின்றளித்தான்—றூய
கொடியிடைப்பெண் கொண்கனாங் கோபாலன் மேவு
கடிகொணகர் முல்லையுறுங் கான். (சசு)

நேசமுற்றே யோடாம னிற்கும் பசுக்களைவன்
பாசநீத் தொண்சிற் பரவெளியில்—வாசமுறச்
சேர்த்தின்புன் னாநல்குஞ் சிற்றிடைய னாலவனஞ்
சீர்தொளிரு முல்லைத் திணை. (சஎ)

எந்தைபிரா னேறு மிடபத் தினத்ததூஉ
மைந்துபொரு ளன்னாற் களிப்பதூஉ—நந்தமா
ராரிடர்தங் கூறங்கத் தார்வதூஉ மாநிரைசேர்
சீரிடமா முல்லைத் திணை. (சஅ)

துங்கநீர்க் கான்யாற்றிற் றோய்வார் தொடைபுனைவா
ரங்கநோ வாம லடுவிடையைச்—சிங்க
மளையார் தழுவ வவரையிடைச் சிங்க
மணையார் தழுவிமகிழ் வார். (சகூ)

இடையற்ப மாத ரிளந்தயிர்சங் கார்ப்பக்
கடைமுழக்கு மண்டர் கவின்கொள்—விடைகள்
பிணியார்ப்பும் வன்கோட்டுப் பெற்றங் களங்கொண்
மணியார்ப்பு மாறா வனம். (ருo)

ஆடகமஞ் சூர மவரைமுற்கங் காணமிதை
மாட மிறுங்கெண் வரகிவைகா—னீடு
தரையிற் கிளர்ந்து தலந்தோறு மேவி
வரையிற் கிடக்கு மலிந்து. (ருக)

## மருதம்.

இங்குமுந்தி யெய்தா திருநிலத்தி லெய்துமென்றே
சங்கம் பதுமஞ்சிந் தாமணியு—மங்கங்
கருதத் துறைவான் கயங்காட்ட வேந்தன்
மருதத் துறைவான் மகிழ்ந்து. (ருஉ)

ஒருபா லுழுவா ரொருபால் விதைப்பா
ரொருபா னடுவா ருழுநர்—மருவி
யொருபா லறுப்பா ரொருபா லடிப்பா
ரொருபா லளப்பா ருகந்து. (ருங)

கார்பூட்டு வார்போற் கடாவி னெழிற்களத்தில்
வார்பூட்டு வார்நுகத்தை வைத்திணைத்துச்—சீர்பூட்டு
மேர்பூட்டு வாருழுந ரேழ்பரியைச் செங்கதிரோன்
றேர்பூட்டு முன்னர்த் தெளிந்து. (ருச)

வடபா லிருந்துதென்பான் மல்கிடவே ரோர்சால்
குடபா லிருந்து குணபா—லடவவளாக்
கோலித் துகைப்பார் குளப்படிய காராவை
யாலித் துகைப்பா ரவர். (ருரு)

எழுதருநா ளும்புலத்தி லேர்பலசா லோச்சி
யுழுதுபரம் பாற்றியொண்ணீ ருய்த்துப்—பழுதுவரா
திந்திரதெய் வம்போற்றி யீசானமா திசையின்
முந்திவித்து வார்நென் முளை. (ருசா)

மற்றைநா ணீர்கவிழ்த்து வாலங் குரம்வெள்ளி
விற்றிகழுங் கம்பியென மேவிடவே—பெற்றவிளங்
கான்முளைக்குப் பாலருத்துங் காரிகைபோற் றிண்களமர்
பான்முளைக்குப் பாய்ச்சுவர்நீர் பார்த்து. (ருஎ)

அள்ளலுறு வித்தனைத்து மங்குரித்து மேனோக்கி
வெள்ளிநிறந் தீர்ந்துபுதன் மேனியா—வொள்ளியமா
நீல மணிக்கொழுந்து நேர வளருமே
ஞால மகிழ்ச்சிகொள நன்கு. (ருஅ)

நாறு பறித்துமள்ளர் நன்முடிக ளாயமைத்துக்
கூறுபட யாத்துக் கொடுபோய்வண்—சேறுபடு
செய்யிற் பரப்பவே சேற்க ணுழத்தியர்தங்
கையிற் பதிப்பார் களித்து. (ருகூ)

நடுவா ரிசைமள்ளர் நாறு பரப்ப
நடுவா ரிசைப்பண் ணலங்கேட்—டடுவா
குழுநர்க் குகைப்புரப்பு மோவவே போமேர்க்
கொழுநற் கடாமகிழ்வு கொண்டு. (சாo)

கதிப்பார் கழனிக் கருஞ்சேற்றி னூற்றின்
பதிப்பார் தருகாட்சி பாங்கின்—விதிப்பார்
கருமையினில் வெள்ளக் கரம்விசும்பின் மீனு
மிருமையுமே யேய்க்கு மினிது. (௯௧)

அம்மான் மகளு மயலான் மகளுமணஞ்
செய்மாண் வரன்மனையுட் சேர்ந்துழிமுன்—னும்மாண்பி
னுட்டகவும் வெள்கலும்போ லுற்ற பசுமைவெண்மை
நட்டமுன் பின் னுஞ்சேற்றி னூறு (௯௨)

இருதிறத்த மாத ரியலும் பயில
வொருதிறத்த வாயினபோ லோங்கி—வருதிறத்த
பைங்கூழ் தனைவளைத்த பண்டுளபுன் மூற்களைக
ளங்கூழ் வினையி னடுத்து. (௯௩)

மள்ளர்கள் ளுண்மயக்கான் மாதர்தம் மெய்ந்நோக்கிக்
கள்ளமறை மொட்டாதி கட்டனதாங்—கொள்ளையினும்
மேல்வளைந்த வென்கொலென வெம்முலைமுன் பற்றுவார்
கோல்வளையார் நாணுட் கொள. (௯௪)

நள்ளுண் கடைசியர்கைக் கல்லையினுட் டம்வதனம்
விள்ளவென்னோ டுண்பவரார் வேந்தென்ன—மள்ளனவ
னன்னதுற்றென் போனின் னருகிருந்து பார்ப்பவனு
ரன்னமே யென்று னடுத்து. (௯௫)

செங்கமலங் கைகாட்டச் சேதாம்பல் வாய்காட்டப்
பைங்குவளை கண்காட்டப் பண்ணையிற்பெண்—ணங்கங்
களையன்றி வேறு களைதேறு மள்ளர்
களையுண்டு தீர்வார் களை. (௯௬)

கண்ணீர்மை கண்டு கயல்புரளக் கால்வண்ண
நண்ணீர்மை கண்டுவரா னன்குலவப்—பெண்ணீர்மை
குன்று வுழத்தியர்தாங் கூர்களையை வேர்களையா
நின்றார் திகைத்தார் நினைந்து. (௯௭)

யானை மன்றய விரதமெனக் கூழ்முதல்கொண்
டேனை யுலகமு மின்புறவே—தானைமள்ள
ரீட்டியென மேல்போ யெழிற்கலின மாவதனங்
காட்டியவே செந்நெற் கதிர். (௯௮)

பொன்னிறமார் செந்நெல் புகர்நிறமுற் றங்கவினுன்
றன்னிறமாய் நின்று தயங்குகலி—மன்னிறமாய்
வேய்போற் கிளைத்துறுசூல் வெண்கதிராய்ச் செங்கதிராய்ச்
சேய்போற் கிடந்த செயில். (௯௯)

உற்றசரி யையாதி யோதிடுநாற் பாதமரீஇப்
பற்றற் றவர்போற் பசுநீர்மை—யற்றுமுன்
ஞுதி வடிவடைந்த வுங்குரங்கூழ் சூல்கதிராய்
மீதிவர்ந்து கீழ்சாய் விளைவு. (எ0)

வயங்கொள் களமர் வரிசையினின் றங்கைக்
குயங்கொண் டறுத்தவரிக் கூறு—தயங்கிடயாத்
தொன்றிற் பொலிசுமைக ளொண்சிரம்வைத் தண்களத்திற்
குன்றிற் குவிப்பார் கொணர்ந்து. (எக)

அடியடியென் பார்சிலரோ ராங்கட்டிப்பான் சூட்டைப்
பிடிபிடியென் பார்சிலவர் பின்னை—கடிகடியென்
ருர்வினவில் வார்சிலரிவ் வார்ப்பார் களமுழவர்
போர்செய் களமே பொரும். (எஉ)

தம்மினத்து ளொன்றூர் தருமனுயிர் மெய்பிரித்தாங்
கம்ம பிணையலி லார்பகடு—வெம்மனத்தர்
வெல்லைவே ருக்கும் வியன்களனோர் போர்க்களத்திற்
சொல்லைவே ருக்குந் துகைத்து. (எங)

ஆற்றல்சான் மள்ள ரவிர்களத்திற் பொங்கழியைக்
காற்றெதிரில் வாரிக் கலகலெண—தூற்றவந்நென்
மெய்ம்மையோர் சொல்லின் விளங்கப் பதரகன்ற
பொய்ம்மையோர் சொல்லிற் புலர்ந்து. (எச)

தூநெல் லளந்து தொகைப்படுத்தி யாறுக்கிக்
கோனிறைக்கொன் றீந்துமற்றக் கூறுய—மாநெல்லைத்
திண்டிறல்கொண் மள்ளர் சிலம்பெனவே வீடுதொறும்
பண்டியிற்கொண் டெய்ப்பர் பரிந்து. (எரு)

தீஞ்சா றடுபுகைதான் சேணேக்கிப் பின்றுடர்வாய்ப்
போஞ்சாலங கண்டுமுகில் பூதலமு—மாஞ்சாலக்
கார்பெறுமோ வென்னுக் கறங்கியதன் கட்டாரை
நீர்பொழியு மங்க ணிலத்து. (எசு)

சரியைமுற்றி யேகிரியை சார்ந்ததன்பின் யோக
மரீஇ யுயர்ஞான மல்கும்—பெரியவராம்
வாகாய் வளர்கன்னன் மன்னமுற்றிச் சாருகிப்
பாகாய்ச் சருக்கரையாம் பண்பு. (எஎ)

உட்புறமா றுற்ற வுயர்சாக் கியரையொக்கு
மூட்புறமார் காய்தூங்கன் மூன்சினன்பா—னட்புறவாம்
வம்புறுவெங் குண்டர் வழிக்குருவை யொக்குமும்பற்
கொம்புறழும் வாழைக் குலை. (எஅ)

ஓங்குமஞ்ச ளிஞ்சி யுலோபரெனத் தம்பொருள்கீழ்ப்
பாங்குவைத்தல் கண்டுமள்ளர் பன்னவர்க்குத்—தீங்கிழைத்தே
யுள்ளமூ லப்பொருளை யொண்கருவி கொண்டுதொட்டுக்
கள்ளரெனக் கொள்வார் களித்து. (எகூ)

மஞ்சளுயர் வாழை மணிக்கமுகு தாழையிவை
விஞ்சவொன்றை யொன்றுதொட விண்ணுற்ற—லஞ்சரியை
முன்னான்கு பாத முறைபயின்றெண் ணற்பதஞ்சே
ரந்நால் வரையொக்கு மாம். (அ0)

---

## நெய்தல்.

மாயன் முருகனிவர் வார்கணைவேள் மேல்விடுத்தார்
நேயமவ ரோடுசெயே னோர்குணதிக்—காயமன்சார்
பெய்தனன்றென் றெண்ணி யிருநீர்க் கிழவனட்பி
னெய்தலின்கண் வாழ்வா னிதம். (அக)

பாயநுளை மாதர் படுமீ னுணக்கொலியு
மேயபல்புள் ளோச்சும் வியனொலியுஞ்—சேயவலை
யீர்க்கு மொலியு மிருமகரம் போமொலியு
மார்க்குமலை யார்ப்படக்கு மாங்கு. (அஉ)

வானந் துறுகலியும் வன்மீ னுகள்கலியு
மீனங் கவர்கலியும் வெவ்வலைஞ—ரானகல
மூர்கலியுஞ் சார்முகினீ ருண்கலியு மோர்ந்தறிஞ
ரார்கலியென் பார்கடலை யாங்கு. (அங)

கொடியாற் றருவாற் கொழுஞ்செங் கழையாஞ்
செடியாற் சுவைநல்கு தேத்தைக்—கடியார்ம
ணெய்துமோர் வித்தின்றி யேற்றசுவை யொன்றளித்தே
நெய்த னகைக்கு நெடிது. (அச)

எண்ணு ணிலத்தினர்க்கு மின்றியமை யாததா
யுண்ணு றுசுவையு ளொப்பிலதாய்—மண்ணு
லுரைபோ முமணரமை யுப்பொளிரும் வெள்ளி
வரைபோ லளமா வரைப்பு (அரு)

ஓதமுடை நாற்ற முணக்குமீன் றுன்னாற்றம்
போத விரண்டுமே போயொடுகக்—கேதகைபொன்
பெய்த முடிப்பிற் பிறங்குபுன்னை யோடுகரு
நெய்தன் மணக்கு நெடிது. (அசூ)

திகைவுறுநன் மாதர் தழுவநகை செய்ய
முகைவிட் டேருவினியன் முன்னி—நகைதரல்போன்
மேக்குமே கத்தவிரு மின்னலைத்தான் காண்டோறும்
பூக்குமே கைதைநறும் பூ. (அ௭)

பத்திவலையிற் படுவோன் வலைஞரைச்
சத்தி வலைச்சி தனைமணப்பா—னத்தியின்கண்
மன்னுவலை வீசியே வான்மீன் படுக்கினன்ஞர்
துன்னுதொழிற் குண்டோ துகள். (அஅ)

இச்சகந்தி யானித் திறைஞ்சும் வியாசமுனி
மச்சகந்தி தன்வயிற்றில் வந்துதிக்கின்—வச்சகந்தி
நேர்கந் தரத்தியர்தோ ணேய முறும்பரதர்
சீர்கழறற் பாலதோ தேர்ந்து. (அ௯)

இருளுறுமுந் நீரி லெறிவலைஞர் நாண
மருளறுமொண் பாவின் மறைநற்—பொருணிலைகண்
டோர்ந்து கவரு முரவினர்போன் மீனிலையைத்
தேர்ந்து கவருஞ் சிரல். (௯0)

மஞ்சு மறைகருமிள மாமதிய மோவுயிர்ப்பிற்
றுஞ்சுபுள்ளோ வென்னமலர்த் தூயமடல்—விஞ்சக்
கருவான்மி யூருங் கவின்கைதை யாருந்
திருவான்மி யூருநெய்தற் றேம். (௯௧)

பத்தியினே ரன்பர் பரசமறைச் சேயுரையா
லத்தியிற்பல் பூமலர்ந்த வற்புதமாந்—தத்தி
வருமயிலை யாதி வளருததிப் பாங்கார்
திருமயிலை நெய்தற் றிணை. (௯௨)

சாரு மறையவனைச் சங்கிலியி லார்த்திரவோ
ராரும் பரவையிற்றள் ளாத்தவொற்றி—யூருங்
கருநெய்தன் மாதர்தங் கண்போன் மலர்கா
மருநெய்த லாயதோர் வைப்பு. (௯௩)

---

## பாலை.

நானிலமாத் தேவரொடு நட்புறீஇ யாங்காங்குத்
தானிலவ வன்ஞர் தரப்பெற்ற—வேனிலத்தின்
மின்கோ லொடுவின் மிளிர்வாள் கொடுதுர்க்கை
தன்கோல் செலுத்துந் தனித்து. (௯௪)

மேனிலத்தி னும்ம் விளம்பிடப்பெற் றார்பொருளான்
மாநிலத்தி னுள்ளே மருவுவது—கானிலத்திற்
றேயாக் கடவுளருந் துன்னரிது வெப்பினொடு
பாயாக் கிடக்கும் பரல். (கரு)

அலகைாத நீர்ப்பரவை யாமொடடகம்பேங்
கலமுகைப்போ ஞேட்டுமீ காம—னிலவுறவே
தூர திருட்டித் துவக்குடையார்க் கேதோற்று
நீரதுயர் பாலை நிலம் (கசு)

தாமலதோ ராதரவு தானில்லான் வாழ்பவர்க்குக்
காமர் நிழலுங் கனியுநல்க—வாமலகம்
பாஙகமைத்தா னன்னூர் பாலுறுத்தா மேநடப்பான்
கோங்கமைத்தான் பஞ்சு குறித்து. (கஎ)

ஏந்திலையின் வேய்ந்த விருங்குடிலர் செந்நாயர்
காநது சினத்தர் கடுமொழிய—ரேந்துதனக்
கொற்றவையே தெய்வமெனக் கொள்வர் நெறியலைத்துப்
பெற்றவையே யுண்பர் பெரிது. (கஅ)

தீங்கரும்பைச் செஙகையிற்கொள் சித்தசநூ றோர்நதவரி
ஞங்கரும்பைத் தேன்விரையார்ங் தன்பினனி—கோங்கரும்பை
யண்டுபு கிண்டி யகமலர்வித் தொள்ளிதழ்த்தே
னுண்டு களிக்கு முகந்து. (கசு)

மஙகையாதங கொஙகையையே மானுமதற் கோர்குறைபுண்
டங்கதனை யானிறைய வாற்றுமென்—றஙகணெனக்
கோஙக முகைமேற் றுடிகொளுநதே ருாவமிசத்
தூங்கலிசை பாடுஞ் சுரும்பு. (க00)

பதஙிமையா லாங்குள்ளோர் பைந்துகிலாற் சித்திரித்து
முத்திசைத்த மேற்கட்டி முன்னிலங்க—கொற்றி
யிருப்பை யலங்கரித்த தென்னலா நீர்மைத்
திருப்பை யலர்ந்த வியல்பு (க0க)

ஒள்ளியசெம் பொன்காட்டு மோஙகுமெழிற் கோஙகரும்பு
வெள்ளியது காட்டுமலர் வீமுருங்கை—வள்ளியசெவ
விதழுருமங் காட்டு மிளிர்பாட லஙகாட்டு
முத்து மதூக முகை. (க0உ)

ஆயகனி வுட்புறம்பொன் றுந்தகையோா தன்மைநெல்லித்
தூயகனி காட்டுந்துகளுடையார்—நேயமது
சாய்பெரிதாய் மேலுட் கனிந்துகனி வில்லிலவு
மாய்தருநீர் மைகாட்டு மாங்கு. (க0ங)

## திணைமயக்கம்.

வணமயங்க வேங்கையின்மேன் மௌவல் படர்ந்து
மணமயங்கப் பூத்துதிர்பூ வாய்த்தங்—கணமயங்க
வன்புலியின் வெம்பறழும் வான்புடையார் மான்பறழு
மின்பி னுறங்கு மினிது. (௧0௪)

அந்தா மரையினின் மார்வனத்தார் வாரணமுஞ்
செந்தா மரையிற் றிகழனமுங்—கொந்தார்
குருந்து மருதுமுராய்க் கூடு நிழற்க
ணிருந்துவிளை யாடு மினிது. (௧0௫)

வெய்முத்த மென்கழையின் வெண்மணிவெற் பார்மருத
வாய்மன் சிறுமியர்கள் வைத்தவண்டற்—கேய்தரம
தூகமௌவல் புன்னைமுகை சூழ்நிலத்துப் பேதையர்முத்
தாகவைத்தங் காடுவா ரார்த்து. (௧0௬)

மென்கமுகம் பாளை விரிதரக்கொக் கென்னவெரீஇ
மின்கயல்வா விக்கழியின் வீழ்வதின்—மன்காண்ட
மஞ்சமிரி யப்பயமுற் றூர்த்தேகி யந்தடததிற்
கஞ்சமிசை யாருங களித்து. (௧0௭)

தேன்கொண் டெயினச் சிறுமியர்க்கான் பாலளிப்பார்
கான்கொ ளிடைச்சியரங் கண்வாவி—தான்கொண்ட
மீன்கொண் டுழத்தியர்க்கு வேலைபடு மீனளிப்பர்
கான்கொ ணுளைச்சியரங் கண். (௧0௮)

இன்னவணம் பல்வளனு மேய்ந்துசிறப் புற்றோங்கு
நன்னெறிற் றொண்டைவள நாட்டின்க—ணுன்னரிய
வுத்தமமா நாற்குடியு மோங்கியெ யகு மெஞ்ஞான்றுந்
தத்தநெறி சாருந் தக (௧0௯)

சிவதலமெண் ணான்குவிண்டு தேயிரண்டோ டைந்நான்
கவிர்தருசீர்க் கோட்டநா லாறு—நிவரமே
பூறுமஃ தாக வகன்கொண்டை நாடுபெற்ற
பேறு மிகவும் பெரிது. (௧௧0)

வேத முழக்கும் விழாவின் பெருமுழக்கு
மோது மணமுழக்கு மும்பருற—மீதிவர்ந்து
நீடெங்கும் பூகமுமே நேர்ந்துசெலுஞ் சீர்த்தொண்டை
நாடெங்கு மேவுமே நன்கு. (௧௧௧)

திருநாட்டுப்படலம் முற்றுப்பெற்றது.

ஆகு திருவெண்பா ௧௬௯.

# திருநகரப் படலம்.

பூவினிலம் போருகமும் பொன்னினிற்சாம் பூநதமுந
தேவினிலே சிற்பானுஞ் செய்யுளில்வெண்—பாவுஞ்
சிகரத்தின் மேருவும்போற் சீர்த்ததுதே யேழ்மா
நகரத்திற் காஞ்சி நகர். (க)

மூத்தேவர் முச்சத்தி முச்சுடர்மா நற்றவர்மான்
மெய்த்தேவ ரித்தகையோர் வித்தகன்பால்—வைத்தேயன்
போன்று முளத்தோ டுவந்து வழிபடுசீர்
நன்றுளது காஞ்சி நகர். (உ)

புகழுமன்பர்க் கன்றிப் புனைதருபொன் மாடந்
திகழுமணி நீறுடைத்து தேம்பா—யகழ்
பயமுடைத்து ஞாயினிலே பத்தியுடைத் தோவ
நயமுடைத்து காஞ்சி நகர். (ந)

பத்திநெறி வேதநெறி பன்னு கமநெறிநற்
சித்திநெறி காணரிய சிற்பாமா—முத்திநெறி
காட்டுவது மூவுலகுங் காமுறுசீ ரெண்டிசையு
நாட்டுவது காஞ்சி நகர். (ச)

வானகர்சீர் தூக்கியத்த மாநகா மாகநிதிக்
கோனகர்நே ராதுநட்புக் கொள்ளவயன்—மானகர்கள்
வந்து வணங்க வயங்குவது சீர்த்தியென்று
நந்தலிலாக் காஞ்சி நகர் (ரு)

எல்லா நகரு மிவர்ந்துவட பாலுறத்தீஞ்
சொல்லார் முனிவனெனச் சூழ்ந்துதென்பா—லில்லாமன்
றுன்னகரா மேழுட் டுலங்கிப் புதுமைசெயு
நன்னகராங் காஞ்சி நகர். (சு)

அலகில்புகழ்பெற் றகிலநகர்க் கெல்லாந்
திலக மெனவே திகழ்வ—துலகிலெங்கு
மல்குபொருட் கோர்வைப்பாய் மன்னி யுயர்கதியு
நல்குவது காஞ்சி நகர். (எ)

ஏகம்ப மத்திகிரி யேண்முனையாச் சத்திநகர்
மாகம்பன் கச்சாலை மன்றண்கா—யோகவெஃகா
பூகமணி கண்டீசம் பொன்வின் மணிக்கட்டா
நாகவில்லாங் காஞ்சி நகர். (அ)

திரைகடலே வாவி திகழ்நிலமே செந்தா
மரைபலதே யழ்மே மலிதோ—டுரைதருசீர்த்
தண்டகநா டேபொருட்டுத் தண்காஞ்சி யேயதன
ளெண்டகவார் மாவாழிடம். (௯)

கச்சூர்கா ளத்தி கழுக்குன்றம் வல்லமுலை
மெச்சாலங் காடகடு வின்மயிலை—மெய்ச்சாயல்
பாசூர்தோ ளொற்றிநள்ளே காம்பரங்கண் பன்னுதொண்டைத்
தேசூர்செவ் வாய்மான் றிறம். (௧௦)

ஏகாம் பரமணிப்பை யோர்தருகச் சாலைகளம்
வாகாம் வரதபிரான் மந்திரம்வால்—யோகா
மணியவிர்பொற் பஃறளிகள் வாங்குருவ மாகப்
பணியரசாங் கச்சிப் பதி. (௧௧)

பத்திமிகு கச்சிப் பதியை யெவருமே
முத்திநக ரென்ன மொழிவாது—சத்தியமா
வைகுந்த மோர்புறமு மன்கயிலை யோர்புறமும்
வைகுந் தகுங்கரியாய் வாய்ந்து. (௧௨)

அளகா புரியோ டமரா வதிநே
ருளகா மருநகர்க்கென் றோதிற்—பளகாமேல்
சொன்னகரம் வந்து தொழுதலாற் கச்சியெனு
மந்நகர்க்கொப் பந்நகரே யாம். (௧௩)

நற்றவர்சூழ் கச்சி நகரமா நங்கைக்குப்
பொற்றை மணிச்சிகரி பொன்முடியாஞ்—சுற்றுமதி
றங்கக் கவயமாந் தண்டா மரைக்கிடங்கு
துங்கத் துகிலாந் துதைந்து. (௧௪)

மகவா னகரம் வணங்க நெடுமாட
மிகவா னிவந்து மிளிருந்—தகவா
னெழுநகருட் சீர்த்தி யெழுநகரீ தென்றால்
விழுநகர மெங்குளது வேறு. (௧௫)

மாமுருக்கம் வில்வ மறைமுதற்கு கீழறந்து
தாமிருக்குந் தன்மை தனையுணராப்—பூமருக்கா
மற்றவற்றின் பெற்றிபெற மாநகரைச் சூழ்ந்தமர்ந்து
நற்றவத்தி னிற்பதொக்கு நன்கு. (௧௬)

காமர் பொடிதுலங்கக் கண்ணீர் துளிப்பவே
மாமென் றளிரா மயிர்பொடிப்ப்—பூமன்கா
வொன்றுசம்பு வட்டயங்க வர்ணம் பரநோக்கி
நின்றுதவ மாற்று நெடிது. (௧௭)

ஒருகொம்பா ரத்தி யொருகோடி மான
மிருகொம்பார் வேங்கையெண் ணில்ல—தருகொம்பார்
சம்புபல கோடி தயங்கும் வழிபடவே
யம்பொழில்சூழ் கச்சி யகம். (கஅ)

தன்னிலமா வேந்தன் றனிநகர மந்தரத்தின்
மன்னுதலா லோர்கால் வருமிடரென்—றன்னதனை
யங்நிலையி னீங்கா தலர்தலையிற் றூங்குவபோ
றென்னமர மோங்குஞ் செறிந்து. (கக)

பைந்நாக வல்லி பழமல்கு கந்தியின்மேற்
பைந்நாக மென்னப் படர்தோற்ற— மைந்நாகக்
காரிகையைக் காணக் கவின்றருகா ளாஞ்சியைப்பூ
நாரிகையி னீட்டலொக்கு நன்கு. (உ0)

தேவரம்பை மேவுதலாற் றென்காலி னூடுதலாற்
காவரம்பை மேவிக் கனிதரலாற்—பூவரம்பை
தேனரம்பை யின்சொற் றிருக்கு மணியல்குல்
வானரம்பை மாரையொக்கு மற்று. (உக)

தன்னெழிற்செந் நாசியெனத் தாங்கனிந்த மாங்கனியை
வன்னியவ்வங் கத்தின் வலிந்துகொத்திப்—பின்னஞ்செய்
தொப்பின்மை காட்டு முயர்தருவான் பொங்கரின்மேற்
கப்பின்மை காட்டுங் கனம். (உஉ)

கல்லா லடியுற்ற கண்ணுதலோர் மாவின்கீழ்
கல்லா லடியுற்றுக் காயமதில்—வல்லார்
வடுக்கொண்டு மாவேட்கை மன்னி னதனைக்
கடுக்குமோ கற்பகமென் கா. (உந)

திருக்களுண்மே லாய தருக்கொடையிற் கொள்ளுந்
தருக்கை யொழிப்பான் றழைத்து—வருக்கைதான்
கீழதலம் பார்வின் கிளைகவர்வே ரேய்கனிக
ளூழினுண நல்கு மூலைகு. (உச)

புறநகர்

செங்கண் பிரதாபுந் திண்ணியவெண் கோடுபுக
ழுங்கமுறக் காட்ட வமர்க்களம்போய்—வெங்கதத்திற்
றூய்மதுகை யோடெதிர்ப்பார்த் தாக்கிவயங் கொண்டிலவும்
பாய்மதமா வாரி பல. (உரு)

கொய்யுளைய கூர்ங்குரத்த கூரைங் கதியவுய்க்கும்
வெய்யர் குறிப்பிற்செல் வீரத்த—துய்ய
வரிமாவின் மேற்பாய்ந் தமர்செய்ய வல்ல
பரிமாவின் பந்தி பல. (உசு)

ஆழிபெற் றச்சுதனு மச்சமைக்கப் பட்டயனு
மூழித் தொழிலா னுருத்திரனும்—பாழி
யருந்தேவ ரங்கமா வங்கமைந்த தேர்நேர்
பருந்தேர் நிலயம் பல. (உஎ)

ஒன்றிகல்வந் துற்றக்கா லுற்றுடற்பற் றற்றவர்போற்
சென்றெதிர்ப்பார்ச் செற்றுச் செயங்கொண்டு—வென்றி
யடைவீர மாலை யமரா பரணப்
படைவீரர் வாழ்தேம் பல. (உஅ)

உன்னுற் படைகட்கு மொள்கிம் புரிபுரசை
கொன்னூர் கலினமார் குப்பாய—முன்னு
வணிசெய் வனவும்வே றுவணவு மாக்கும்
பணிசெய் குநர்தேம் பல. (உகூ)

---

இடைநகர்

பருமுகின்மே லூர்ந்து பலகணியைந் தேய்ந்தேர்
தருவினையுற் றங்கட் சசியை—மருவித்
தகவா னிவந்து தயங்குமணி மாட
மகவான் றனைநிகர்க்கு மற்று. (௩0)

வெண்சந் திரகாந்த மின்றசும்பி லிந்தினனு
மொண்சுடரி னீர்கான் றுலர்தோற்ற—மெண்சத்தி
தன்மையினி னுமனைத்துஞ் சம்பு லயப்படுத்துந்
தன்மையினைக் காட்டுந் தக. (௩க)

சீதமதி யார்கறையைச் செப்புவார் பற்பலவா
மீதவிர்பொன் மாடமேன் மேவியமர்—மாதர்
முகங்கண் டெழினலனை முன்னிமுன்னி யன்னு
னகங்கன் றினமையுன்னு ராங்கு. (௩உ)

சந்திரனு வாவின்மேற் சாளரத்துப் புக்குராய்
நொந்துகுறை தேய்ந்து நுழைதோறு—முந்தவேர்
மிக்ககலை போகவா வேர்த்தருள்செய் வீரனுந்
தக்கன் றனைப்புகழ்வான் றான். (௩௩)

மாடமேன் மங்கையர்கள் வார்கூந்தற் கூட்டுபுகை
மேடமேற் சென்றகல்வான் மேவவதை—நாடமரந்
நல்லார் மணந்தேர்ந்து நாலவிட்டே ரேலமிட்ட
வல்லார் குழலிலுய்ப்பா ராங்கு. (௩௪)

சந்தனத்தேய்வு வார்ந்து தமனியக்குன் றென்னவுருந்
தந்தனத்தை நேருந் தகையுணர்ந்தே—பந்தினைக்கண்
மானனையார் தாமடிப்ப மார்பிலது தாக்குறாத
ருனனையார்ச் சாடலொக்குஞ் சார்ந்து. (௩௫)

அம்மனையோர் மின்னுந்த வாங்குதுபோ யோங்குமணி
யம்மனையின் பாங்கி லவிர்விளவார்—வெம்முசுவின்
பாலுறவஃ தேற்றுப் பழம்பறித்துப் பாவையங்கை
மேலுறவே வீசும் விரைந்து. (௩௬)

சூழ்தருமிவ் வூரெயிலின் சோலையினுற் கண்முகிழ்த்து
வீழ்தரலாற் றுனினைந்து வெய்யவன்விண்—போழ்தருமோ
ராழியந்தேர்க் கோர்மா வமையுமஃ தோர்ந்தன்றோ
வேழியன்மா யாத்தா னினிது. (௩௭)

கொடியார மாடமுடி கூர்ந்துலவ வான்யா
றடியார வேகவதி யாறங்—கிடையாரச்
சேதாம்ப னீலஞ் செழுங்கமல முள்ளிட்ட
போதாங் கொடியொளிரும் பூத்து. (௩௮)

தியங்குவன மாடமேற் செல்சுடரா றின்றி
மயங்குவன மாதிரங்கண் மாக்க—ளியங்கப்
பயம்பெறுவ வாவிதரு பண்பார் நகரில்
வியம்பெறுவ தீய வினை. (௩௯)

இடர்படுவ மாத ரிழைநுண் மருங்கு
றொடர்படுவ மும்மதத்த தூங்க—லடர்ஞாட்பில்
வாங்குவன மைந்தர் வரிவி றிருநகரிற்
றூங்குவன வானித் தொகை. (௪0)

அந்நகரிற் கற்றுரு மாவனகற் கின்றுரும்
பன்னடுநூற் கற்பாரும் பாவையரு—முன்னு
மனந்தனையே வாங்குமெழின் மைந்தருமே நோக்கி
னனந்தனையே நேரென்ன லாம். (௪௧)

ஒவ்வோர் தலத்தினிலொவ் வோர்விழா மேலென்ப
ரவ்வோர் விழாவு மரைத்தரனு—மொவ்வாச்சீர்க்
கச்சி நகர்விழாக் கண்டகண் டான்விழைந்து
மெச்சுமோ வேறூர் விழா. (௪௨)

சைவ சமயத்தின் சத்துணர்ந்தோர் சாக்கியரத்
தெய்வத்தைத யுள்ளன்பிற் சிந்தித்து—மெய்வழிபா
டாற்றியுயர் வீடடைந்த தாய்ந்துவிழாக் காண்பவர்போற்
போற்றிநிற்ப ரம்மதத்தர் போந்து. (சங)

இந்திரமா தீர்த்தங்கோய்ந் தீசானற் ருழ்ந்துவலம்
வந்திறையார் மந்திரங்கள் வந்தனைசெய்—தந்தியுறும்
போதுமுன்றேத் தாரினன்பர் போற்றுநகர்க் கெல்லையெல்லை
யேதுவன்றி யில்லைவே றேது. (சச)

நூறேர்ந்து கொண்டு நுவலரும்வெண் பாவாதி
யாறேய்ந்தெண் ணச்சளபிட் டங்கணெய்தம்—வீறேய்ந்த
பாட்டிற் சிறந்துள்ள பண்புடையார் வீதிகடாங்
கூட்டிற்பல் கோடியுறுங் கூர்ந்து. (சரு)

அஞ்ஞான் றறம்வளர்த்தா ளன்பி னழைத்தபொரு
ளெஞ்ஞான்று மெய்தவைத்த லேய்க்குமே—யிஞ்ஞான்று
நல்கியல்பிற் குன்ரு நலமுடைத்தாய்ப் பல்பொருளு
மல்கியொளிர் சீரா வணம். (சசா)

ஒருமணியின் சோதி யொருமணியிற் ருக்க
விரு மணியின் பேத மெளிதிற்—றெரிதரா
தம்பொற் கிடுகி லவிர்மணிகள் போலளகை
யம்பதியி னுங்காண் பரிது. (சஎ)

ஆர்க்குமறு கார்வணிக ஞாத்தி ஞேர்முதலை
வார்க்குயத்தாள் வாங்கியங்கை வைத்துருவப்—பார்க்கவதிற்
கன்றிவருங் கைச்சிவப்புங் கண்ணீல முங்கதுவக்
குன்றிமுத்தோ வீதென்ருள் கூர்ந்து. (சஅ)

தோகாய்நின் மூக்கணியிற் றூங்கு மணியன்றோ
வாகாவக் குன்றிமுத்தே யையமிலை—நீகாண்டி
யென்ருடி காட்டவவ ளோரிதழ்க்கண் ணீலந்துப்
பொன்ரு நிறத்தினுட்கு முற்று. (சகூ)

இக்கோ டியைகோடி யென்விலையென் பார்க்கிழைதான்
புக்கோடி நன்ருய்ப் பொலிந்ததுகாண்—கைக்கோடி
யென்றென்றைக் காட்டி யிதுகோடி யென்றுரைப்பர்
மன்றுகில்வின் மாக்கண் மகிழ்ந்து. (ருo)

பட்டிஞ னெய்த படாமிதனைக் கொண்டுநீ
கட்டிஞ னெய்தற் கருங்கண்ணுய்—வட்டினேர்
மன்னுஞ் சுவர்க்கமத்தி யம்பா தலமறைக்கு
மென்னநவில் வார்வணிக ரேய்ந்து. (ருக)

குங்குமப்பூ மான்மதநற் கோரோ சனையேலம்
வெங்களபம் பாளிதமுன் மேயபொரு—டுங்கமுற
வீசு மணமறுகின் மேவுமின்னார் மாவுருவார்
வாச மொடுமெயங்கு மற்று. (ருஉ)

முல்லை முகைதொடுக்கு மொய்குழலார் முத்துறழ்தம்
பல்லை யவமதிக்கும் பான்மைகண்—டொல்லையதைக்
காலதனிற் காலுறவே கட்டுபுவாய் விண்டுகண்ணீர்
காலவைப்ப ரோர்சிறையின் கண். (ருங)

மாலை பகரு மடவாலை யோர்காளை
மாலை தனக்குநல்கு வாயென்ன—மாலைமலர்
கண்ணியிது கோடியென்றாள் கட்கடையான் மாழ்கியே
கண்ணியுட்புள் ளாயினனங் கண். (ருச)

பொன்னிரசி தாதியிற்செய் பொற்பார் கலமுமரந்
தன்னி லியலுறச்செய் தண்கலமு—மன்னிமண்ணிற்
செய்கலமும் விற்குந் தெருவின் மிளிருமின்னார்
மெய்கலமு மின்னிற் பெரிது. (ருரு)

மேருவன நெற்குவியல் வித்தகன்வாழ் வெள்ளிவரை
நேருவன வாலரியி னீள்குவிய—லாருவன
வொன்பான் மணிமலைபோ லுற்ற முதிரையின
மன்பா ரவாவா வணம். (ருசு)

சேர்கை மிகுசனத்தாற் செப்புவன வின்னவென
வோர்கை யரிதா லுகந்தபொரு—ளோர்கை
விழியின் வினாயவர்க்கு வேட்டனவவ் வாறீந்
தெழில்வணிகர் விற்பா ரினிது. (ருஎ)

எந்நகர நாய்கருமெவ் வெப்பொருடம் பாலிலையோ
வுன்னவற்றிற் கொத்தபொரு ளுண்டென்பர்—பன்னகரி
லெப்பொருள்கள் கேட்கினுமே யீகுவர்விண் டாருவென
வொப்பில் வணிக ருகந்து. (ருஅ)

தேசங் களிலிவண்செய் திற்றிபோ லில்லெனவே
பேசவல்லோர் செய்துவிற்கும் பெற்றநன்னெய்—வாசம்
பொருந்தின் சுவையுடைய பூபமுண்டார்க் காமே
மருந்துங் கயப்பா மருந்து. (ருகூ)

பற்பலவுங் காய்கள் பழங்கள் கிழங்கினங்கள்
பற்பலவுங் காடிதொறும் பான்மையுற—வெப்பொழுது
மார்தவினா லாங்கிருதோ ராறும் பிறநகரார்
தேர்த லரிது தெளிந்து. (சுO)

## அகநகர்.

ஓங்கிவரும் வெள்ள முமையவள்செய் பூசனைகண்
டேங்கியயல் சூழ்கிடந்த தேய்க்குமே—பாங்கி
னகாமதின் மேயமதி னற்புறமு முற்று
மகாமுக ணீரகழி மாண்பு. (சுக)

நங்கைபுரி பூசனைக்கு நாந்தீர்த்த மாவமெனக்
கங்கைவந்து சூழ்கிடந்த காட்சியே—யங்கலென
மகழாமை மேலா மதினிலையைச் சூழ்கிடக்குங்
கீழாமை மேலாங் கிடங்கு. (சுஉ)

இவ்வுலகி லிந்நகர்க்கொப் பில்லையென்ப தேதேற்ற
மவ்வுலகிற் போய்க்காண லாமெனவே—நவ்விபுதர்
வாழுலக மேவு மதின்மணிப்பை நாகருறை
கீழுலக மேவுங் கிடங்கு. (சுங)

மன்னர் சிறார்செம் மணிகொண் டெறியவெழி
லன்னமேல் சென்றனகீ ழார்ந்தகரா—வுன்னுங்
குரவற் புகழ்ந்திகழ்ந்தோர் கொள்பேறு காட்டும்
பரவகழி மேன்மை பல. (சுச)

மும்மதிலு மோர்மதிலா மும்மூர்த்தி வாசமதி
லம்மதிலுற் றூர்ந்ததொக்கு மம்மதிலே—யம்மதின்முன்
வான்சென் முறையுணர்ந்தே வான்செல் வகைதகைவான்
வான்சென் மருவுமதில் வாய்ந்து. (சுரு)

மாவலியை மேவியொண்மண் வாங்கிமுடி விண்ணதல
மாவடியும் வாய்ந்துபொறி மன்னியிருங்—காவலினற்
கானு டளவு கமழ்முல்லை மாலெனலாம்
வானு டளவு மதில். (சுசு)

நானெறியே கண்டு நுவல்பொருளுட் கொண்டுயர்ந்து
வானெறியே சென்று மதியுறவே—தானிலங்கி
மேவலினல் வித்தம் விழுமணியி னுயமதி
னுவலரை மானுமே நன்கு. (சுஎ)

தூயதிருக் காஞ்சிநகர்த் தொன்மதிலார் பொன்மணிசெய்
ஞாயில் பகையரையர் நாடிவரி—னுயபல
தீயபடை கொண்டு செருக்குமே லங்குறவேண்
மேயபடை மேவன் மிகை. (சுஅ)

காமநூல் கற்றுணராக் காளையர்கண் மாளிகையிற்
சேம நெடுஞ்சுவரிற் றீட்டியொளிர்—மாமையுறு
மோவியப்பா வையாலோர்ந் தொண்டொடியார் தோடழீஇ
மாவியப்பா வைகுவார் வாய்ந்து. (சுகூ)

கூந்த றனையவிழ்ப்பார் கூறைதனை வீக்குவார்
காந்தளங்கைச் சங்கைக் கலிப்பவுய்ப்பா—ரேந்துகுயம்
வார்கொண் டசைப்பார் மறுகா டவர்க்காணி
னேர்கொள் கணிகையர்க ளேய்ந்து. (௭௰)

வல்லாட வல்லாரை வல்லாலு மிங்கிதமாஞ்
சொல்லாட வல்லாரைச் சொல்லாலும்—வில்லாரே
ளாகமநூல் வல்லாரை யாகமனூ லாலுமின்னார்
மோகமுற வெல்வார் முனம். (௭௧)

அம்புதியி லார்பதியி லார்பதியென் றாரணஞ்சொல்
சம்புவைத்தன் கேளெனத்தேர் தந்தனையா—தம்மை
யலைச்சுவடு வைத்தா னடுகாம நோக்கி
முலைச்சுவடு வைத்தாண் முனம். (௭௨)

பிணவுருவிற் புக்குப் பிறன்மனையாட் புல்லுங்
கணவனியல் போடவிர்மை கண்ணார்—குணமோர்
தருமருமமேவுந் தளிரியன்மா வன்னான்
றிருமருமமேவுந் தினம். (௭௩)

இசையா னடத்தா லினியொருவ ரில்லென்
னிசையார் மயக்கிலிறை யெய்தி—னிசையானென்
னுவிருப்பு மன்னு மருங்கலைமான் பேசுமவ
னுவிருப்பு மன்னு நயந்து. (௭௪)

கண்ணகத்தில் வைகுந்தங் காட்டுவார் சார்ந்தவர்க்கு
நண்ணகத்தின் மாலையே நாட்டுவார்—விண்ணகத்தின்
மன்னுஞ் சுவர்க்கவின்ப மார்பகத்தி னல்கவல்லார்
துன்னுஞ் சதிநடையார் சூழ்ந்து. (௭௫)

காமரையோர் வேலை முளரியக்கிற் காய்ந்தளிக்கு
நேமமொடு மாலைநல்கு நீர்மையினா—லேமந்
தருமன்றின் பாரத் தராலாற் பரனை
யிருமனத்த மாதரொப்ப ரேய்ந்து. (௭௬)

வேதாந்த மோதும் விருத்தருங் கேசாதி
பாதாந்த நோக்கிப் பரத்தையே—நாதாந்த
மென்றவரிற் கேகுவரே லேந்திழையார் தஞ்சீர்த்தி
மன்றவுரைப் பார்யார் வகுத்து. (௭௭)

கங்கை குலத்தராய்க் காவியஞ்செய் நாவலராய்த்
துங்க வமைச்சராய்த் துன்னருநா—லங்கமுறு
சேனைத் தலைவராய்ச் சீர்த்துவரும் வேளாளர்
சோனைப் புயனிகர்வார் சூழ்ந்து. (௭௮)

நீராடிப் பூசித்து நேர்ந்தவிருந் தோடயின்றுஞ்
சீரார் புராணஞ் சிரவணித்து—நாராருங்
காமர் தளிதொழுதுங் காண்வறிஞர்க் கீந்துமே
பூமகார் போக்குவார் போது. (௭௯)

ஆர்கோள் களைச்சிறைவைத் தாங்குநவ தானியங்கள்
சேர்கோ டுறழ்கூட்டிற் சேமிப்பார்—கார்கூர்
சிறையினின்று காத்தோர் திருமா ளிகைமே
லுறையுமுகி னன்றிதனை யோர்ந்து. (௮௦)

மன்னந் தணர்தொழிலு மன்னர் தொழிலுமன்னர்
பின்னர் தொழிலும் பிறர்தொழிலுந்—துன்ன
வுழவார் தொழிலே யுஞற்றுபவர் வீதி
விழவார் தருமே மிக. (௮௧)

ஆணிக் கனக வயிர்மா ளிகைதோறு
மாணிக்க மாதி வயங்குமணி—பேணி
யணிகலன்கட் கேற்பகொள்வா ரார்ப்படங்கா தென்றும்
வணிகருயர் செல்வ மறுகு. (௮௨)

மன்னர் தமக்கு வருமுறையில் வைசியர்தாம்
பின்ன ரெனலாலெப் பேறுமுளா—ரன்னர்போற்
செங்கோ லிலாக்குறையுஞ் சீர்தூக்கி யேநிறைய
வங்கோ றனைக்கொள்வா ராங்கு. (௮௩)

தனதனெனப் பேர்படைத்தோன் றன்னகரந் தன்னி
னினதனமொண் மாமணிக ளில்லை—யெனவருந்தி
முன்னவா வுற்று முயலி னலைமுடவ
னென்னவா றெய்து மினிது. (௮௪)

இம்மி யினுமே யிலாபம் வரப்பார்ப்பார்
கம்மி யுறுமேற் கழறுமன்னர்—விம்மிதையா
ரோர்வைவென்ம தாணி யுரத்திலங்கு சூத்திரராஞ்
சீர்வை சியர்தாஞ் சிறந்து. (௮௫)

செந்துவர்வாய் வீரத் திருவிழைய வீரத
மைந்தர் படைபயிலு மாவார்ப்பும்—வெந்தறுகண்
யானை முழக்கு மிவுளி கனைப்புமரு
மானவேன் மன்னர் மறுகு. (௮௬)

கலையா ரணங்குங் கலையூ ரணங்கு
மலையா ரணங்கு மமர—நிலையா
விருந்தரசான் கிற்பி னியம்பிடுசீர் மைத்தோ
திருந்துசெங்கோற் செல்வர் தெரு. (௮௭)

பூதலமார் காஞ்சி புரிசிறந்தாங் கேந்தலமர்
மீதலமார் மாளிகையின் மேம்பாடு—மாதரார்வா
ழந்தப் புரத்தி னழகுமே மூவுலகி
லெந்தப் புரத்தினுமே யில். (௮௮)

செந்திருவாழ் வேந்தர் திருமனையின் பாங்கொளிரு
மந்திரர்தா மேவுமணி மந்திரமெண்—டந்திரியாஞ்
சேனைத் தலைவர் செழுமா ளிகையினுட
னேனைத் தலைவ ரிருப்பு. (௮௯)

கூறங்க மொன்றிற் குலவிரண்டு சன்மமுற்றே
யாறங்கம் போற்று மருமறையோர்—வீறவருள்
பூத்தே மகமியற்றும் பொன்மணிசெய் மாளிகையின்
மீததேவ ருண்பார் விருந்து. (௯0)

நான்முகனே யன்னர் நவின்மூ விருதொழிலர்
தேன்மூரலுங் கஞ்சத் தெரியலர்தாம்—வான்வழங்கற்
காதார மென்ப ரதுவிளக்கு மாங்கவரின்
மீதார மேக மிடைந்து. (௯௧)

நான்மறையா றங்க நவிலெழுநா லாகமமு
நூன்முறையே தேர்ந்திசைகொ ணூன்மார்பர்—வான்மகங்க
ளாற்றியே வானோர்க் கவியளித்து மாபதிதாள்
போற்றியே வாழ்வார் புரிந்து. (௯௨)

மூன்னு கமமுணர்ந்து முத்தீக்கை பெற்றுமறை
மன்னு குதிவளர்க்கு மாண்பினராய்—வின்னுகை
னோதிசைவ லம்மெனுமை யும்பரைநன் கர்ச்சிக்கு
மாதிசைவர் வீதிபல வாம். (௯௩)

கஞ்சமரக் காம்பல் கழுநீர்நீ லாதிமலர்
புஞ்ச மொருவாவி பூத்தாங்கு—விஞ்சவே
ஞானமறை யோர்முதலா நால்வ ரொடுபிறரு
மாநகரில் வாழ்வார் மகிழ்ந்து. (௯௪)

அயனுமயன் மேவ வளகையர்கோ னுண
மயனுமயன் மேவ வருத்த—நியமமக்க
ளெண்ணிடவு மாகாமற் றெண்ணிடவு மாகாவே
யெண்ணிடவு மாகா வினிது. (௯௫)

நரையானை யுள்ளானை நாளுமருச் சிக்குந்
திரையார் தருகம்பைத் தீரத்—துரையார்சீர்
மிக்க வொருசிறையின் மேலைமறை யாகிற்குங்
கொக்கருகி னின்றோர் குயில். (௯௬

சிங்கத் துரியுஞ் சிறுகட் களிற்றுரியு
வங்கத் துநப்போர்த்த வம்மானைத்—துங்கத்
திருவடிவ மானையுருச் சிக்கும் பலாச
மருவடியி னின்றுகலை மான். (௯எ)

மருவுமொரு தந்தையொடு மைந்தனுமே நோக்கி
வெருவநின்ற சோதிதனை வில்வத்—தருவடியி
லாகமத்தா றர்ச்சிக்கு மாழிமண்ணுண் ணீலமா
மேக நிறத்தமரோர் மின். (௯அ)

அத்திகிரி மேன்முகிலொன் றாகமின்னுற் றென்றுமொன்று
மத்திகிரி யாமுழையு ளாளரியோ—டத்திகிரி
மன்னுமதி லண்மேகம் வையமுறும் போதுசன
முன்னுபல கோடி யுறும். (௯௯)

பாமபஞ்ச தீர்த்தத்தின் பாலாழ் பிலத்தினின்றோர்
காமர் கொடிபடர்ந்தே கம்பமன்னுற்—றாமரத்தின்
மன்னுவள மாங்கனியை வல்வடிவ தாக்கியின்பந்
துன்ன வயங்குமெங்குஞ் சூழ்ந்து. (௧00)

மூகநோக்கின் யானையா முன்னருந்திண் டோண்மார்
பகநோக்கின் வானவனே யாந்தா—ளுகநோக்கிற்
பூதமே யாமொருத்தன் பொன்மாட வீதிதொறுங்
காதலுற மேவுங் களித்து. (௧0௧)

சம்புநல்கு வேங்கை தயங்கெழிலா ரோர்மானைக்
கும்பமத யானைதனைக் கொண்டுதழீஇ—யிம்பரும்பர்
கூட்டத்த ரச்சங் கொளாது நலஞ்செயுமோர்
கோட்டத் தமர்ந்தினருள் கூர்ந்து. (௧0௨)

செய்யன் கரியனொடு சேர்ந்துபெற்ற வாண்மகன்செங்
கைய னிருவர் கணவனவன்—துய்யவிழாக்
கொண்டாடும் வீதிதொறுங் கொய்யுளைமா மேலேறிச்
செண்டாடும் நாளுஞ் சிறந்து. (௧0௩)

ஒருபுலவன் வெண்பாவை யோர்ந்தவன்பின் சென்று
வருபுலவ னெங்களரு மாமன்—மருவுமன்பர்
சொன்னவணஞ் செய்பவனற் றாதுசெல்ல வல்லவன்கா
ரன்னவணன் வாழ்வொருபா லாய. (௧0௪)

எத்தனையோ மான்மியங்க ளெத்தனையோ விம்மிதங்க
ளெத்தனையோ வற்புதங்க ளித்தனையென்—றெத்தனையும்
பன்னப் பஃறலைய பாந்தள் பரிந்தெடுத்துச்
சொன்னும் சொலலாந் தொகுத்து. (௧0௫

எங்குமொளி யாலயமற் றெங்கு முயர்தீர்த்த
மெங்கு மடியா ரிருப்பிடமா—வங்கச்சி
யெங்குந்தன் மச்சாலை யெங்குங் கலாசாலை
யெங்குந் தவச்சாலை யே. (க0௬)

அங்கலைதந் தாரமுதீந் தல்லகற்று யஞ்சேர்திந்
துங்கவுருக் காட்டித் துலங்குதலாற்—செங்குமுதப்
போதுறவு கொண்டார் பொருவின் மதிநிகரு
மாதுறவு கொண்டார் மடம். (க0எ)

அன்னம் படைத்தொளிர்நா வாரச் சுவையமுதீந்
துன்னருநற் பாகடைதந் தொண்கலையு—நன்னரளித்
தென்னறக்கூ ரம்புயம்வா ழெண்கணய னேராஞ்சீர்
பன்னறக்கூழ்ச் சாலை பல. (க0அ)

இட்டசித்தி சைவகங்கை யேர்மங் கலவிந்த்ர
வுட்டடங்கா ரோண முலகாணி—சிட்டரமர்
மாசறுவ தீர்த்தமின வாரமுத லாடிமல
மாசறுவர் மாக்கண் மகிழ்ந்து. (க0௯)

சத்தநக ரத்திற் றலைமைத்தாய் வச்சிரத்தா
னத்தநக ரத்தி லவிர்கச்சிச்—சுத்த
நகர விறைக்கணியொண் ணன்மவுலி யொக்கும்
புகரி லெழிற்கோ புரம். (கக0)

ஆயமகள் செய்தவத்திற் காண்டுணையும் வேண்டுமெனத்
தூயவிம வானமர்ந்த தோற்றமே—நேயந்
தருங்கோ புரத்தின் றகைவிளங்க வோங்கு
மிருங்கோ புரத்தி னியல்பு. (ககக)

மாமலையின் ஞெண்ணீரி வைத்ததோ மாலயனார்
தாமலைய நின்றவரை தானேவார்ம்—பூமலையும்
பெம்மான்முன் னாட்டும் பிரதாபத் தம்பமோ
வம்மா சிகரி யமைவு. (ககஉ)

ஒன்பான் மணியி னுஞற்றி யொளிர்சிகரி
யொன்பா னிலைகொண் டுயர்தோற்ற—மொன்பான்
றருபேதங் காட்டச் சமைந்ததொக்கும் யார்க்கும்
வருபேதம் வையா வரன். (ககங)

வேதமா மூலத்தின் மேவு மறைப்பொருளை
யாதாரத்தி னாலேழா மாகமமு—மோதுமமற்ற
மாக்கலையுஞ் சூழ்ந்தாங்கு மந்திரத்தைச் சூழ்கிடக்கு
மாக்கலையிந் தாரு மதில். (ககச)

கண்ணகன்பூ தேவிமுகங் காசிரெண்டை நாடதினற்
கண்ணயன்மா லேத்துதிருக் காஞ்சிநகர்—கண்ணகத்தி
னுட்பொலியும் பாவை யொளிருமணிக் கோயிலத
னுட்புலனே கம்பரென்ப ரோர்ந்து. (கக௫)

சொல்லவெளி தோவர்ன்மால் சுற்றிவலஞ் செய்வாதை
நல்லவிழா வென்றுலக நாட்டமுறின்—வல்ல
திருக்காமக் கோட்டத் திறலொழிக்குஞ் சத்தி
திருக்காமக் கோட்டச் சிறப்பு. (கக௬)

விளங்கு மரன்றனக்கு மேவுமைக்கு நாப்ப
ணிளங்குமரன் வீற்றிருப்ப தேய்க்கும்—வளங்கெழுமே
கம்பன் றளிக்குங் கவுரி தளிக்குநடுச்
சம்புமைந்தன் செம்பொற் றளி. (ககஎ)

மருவுந் தொருபூ மருவுந் திருவுங்
குருவும் வழிபடுநற் கோயி—லுருவ
முருக்காயா ரோகிணியா னும்பரொடும் போற்றுந்
திருக்காயா ரோகணமாந் தேம். (ககஅ)

மந்தரமா மத்திருத்தி வாசுகிநாண் வைத்ததொக்குஞ்
சுந்தரமார் கோபுரமுஞ் சூழ்மதிலு—மந்தரமார்
மாலய மாவான் வழிபட் டுளதுகச்ச
பாலய மாவான் பதி. (ககக)

அத்தளியிற் கண்ணுதலை யர்ச்சித்து வாணியொடு
சித்த மகிழ்ந்தயனத் தேத்திருந்தான்—மெய்த்தவத்தோ
ரங்க னடைந்தே யவன்றாள் பணிந்தேத்திப்
பொங்கன்பிற் சொல்வார் புரிந்து. (க௨௦)

எந்தைகே ளின்றளவு மில்லறத்தி லெய்திநின்றேஞ்
சிந்தைமே வொண்டவமே செய்துவைக—விந்தையா
யோங்குதவக் காறுன் றுரைத்து விடுத்தியென்றார்
தேங்குபுகழ் மாதவத்தோர் தேர்ந்து. (க௨க)

தருமலரின் மேயோன் றருப்பையொன்றை வாங்கி
யொருகிரி யாக்கி யுருட்டி—யிருநிலத்தி
லின்றிதன்பின் னெல்லீரு மேகியது தங்குவனத்
தொன்றி யுறைதிரென்று னுற்று. (க௨௨)

பங்கயன்றாட் போது பணிந்துவிடை கொண்டேக
வங்குசைசயி னேமிசென்றே ராரணியங்—தங்க
விருந்தா வெமக்கிதுதா னெய்திடமா மென்று
விருந்தா ரிருந்தவத்தோ ரேய்ந்து. (க௨௩)

மாமறைநூ லாய்ந்த வருமுனிவர் தாம்வினவத்
தாமரையா னுய்த்த தருப்பையி—னேமியா
லன்றுமுத லந்தவன மார்நைமி சாரணிய
மென்றுபெய ரேய்ந்த தினிது. (௧௨௪)

திருநகரப்படலம் முற்றுப்பெற்றது.

ஆ திருவெண்பா. ௩௨0.

# பாயிரப் படலம்.

அம்புலியும் பாம்பு மரன்சடையி னட்புறல்போல்
வெம்புலியு மாதவரு மேவுவது—பம்பு
திரைபொருமுத் தாதி செழுமணியார் கங்கைக்
கரையுளது நைமிசவான் காடு. (௧)

மந்தாரங் கோங்கு மருதங்கச் சோலமரா
சந்தாரந் தாலந் தமாலநமை—கந்தி
முருக்ககிலா மாகடுக்கை முந்திரிகை வேங்கை
வருக்கை வகுளம் வழை. (௨)

இன்ன விருக்க மிலைதளிர்பூ காய்கனிக
டுன்ன வுயர்துறக்கந் தோய்ந்தளாய்—மின்னலரி
தன்னொளியும் வெம்மையுமே தாய்நுழையா மேன்மையது
மன்னைமி சாரணிய வைப்பு. (௩)

அறந்தான் விளைநிலனு வாரணநூ லெல்லை
யிறந்தார் தமக்கிடனு யார்க்குஞ் —சிறந்தா
னடைப்பள் ளியனுதி யண்டர்க் கவியா
மடைப்பள் ளியுமாம் வனம். (௪)

மன்னுகந் தால மருவி யலர்தூற்றப்
புன்னுகம் பாங்கிற் பொலியவே—மின்னுகத்
தோகையொளிர் கண்காணச் சோதிமன்னி யாடுதலா
லேகைமன்று மாமடவி யே. (௫)

செய்யமக மாற்று திறலினர்மன் னுவமர்ந்துந்
துய்யகரி மானுனுஞ் சூழ்தந்து—மையரியார்
தேனலர்மந் தாரச் செழுந்தருமுன் னோங்கியுமே
வானகரு மாமவ் வனம். (௬)

சாகைபல விட்டுத் தயங்கு மரனயன்மா
லோகையுட் னெழுந்தி யோதினர்முன்—ஞகவே
யாங்கதனுண் மேவி யமர்தலினன் வேதமொக்குந்
தேங்கமழும் நைமிசவான் றேம். (எ)

முனிவரையே கொண்டு முயலகன்மே லூற்று
மினியபலன் றுளடைந்தார்க் கீந்துந்—தனிமுதலாஞ்
சோதியிடம் பூவை துதைந்துநைமி சாரணிய
மாதி பகவனரே ராம். (அ)

வேங்கையா வாயிடைமே விப்பைங் கொடிதழீஇக
கோங்கமர்ப யோதரங்கைக் கொண்டுமே—நீங்கரிய,
மாதவரை யோர்பான் மகிழவைத்துஞ் செவ்வேளாங்
காதமரு வீசுமந்தக் கான். (கூ)

சம்புவையுட் கொண்டுபுறந் தாவிவரு மஞ்சடக்கிப்
பம்பின்பத் தேனுரும் பான்மையோ—டும்ப
ரடுக்குமேன் மையா லறவோர்க டம்மைக்
கடுக்குமே நைமிசவான் காடு. (க0)

அங்க ணளிமேவி யாருங் கிளைதழீஇத்
துங்கமுறு தன்பாற் றுவன்றினர்க்குப்—பொங்குபொரு
ணல்கு மியல்பினு னற்கொடைஞர் போலுமண
மல்குநைமி சாரணிய வைப்பு. (கக)

பூங்கற்ப காடவியின் பொற்பெல்லா நோக்கியத
னோங்கு வளஞ்சிறிதென் றோர்ந்திறுமாந்—தாமுகு
முகிழ்பூத் தொகையினக்கு மொய்ம்பாகத் தன்னுண்
மகிழ்பூத் திருக்கும் வனம். (கஉ)

பூமேவு வேள்விப் புகைமுகிலின் வானிமிர
மீமேவு மேகம் வெரீஇயே—நூமேன்
மழையுங் கனிமா மலருண் மலிதேன்
மழையு மறுவவ் வனம். (கங)

அன்னகார்க் காலமல்லா லவ்வனத்து வேறிருது
தன்னையா ரோருந் தகைமையுளார்—முன்னுமும்மைக்
கால முணர்வார் கணியாதி பூநோக்கிக்
கால முணர்வார் கணித்து. (கச)

முதிரோம ராதி முனிவர்சூழ் கானி
லதிரோமத் தீயெரிகை யானுங்—கதிரோன்
வரவுஞ் செலவும் வயங்காமை யானு
மிரவும் பகலு மில. (கரு)

வரவுஞ் செலவு மருவா நெறிதேர்ந்
திரவும் பகலு மிலாத—பரவெளியி
லுன்னமுற்றோர் மேவி யுறைதலினா னைமிசமு.
மன்னர்பரி சாயிற்றே யாங்கு. (௧௬)

மாழவே யொன்றலர்மா வண்ணக் கொடிதர்ங்கி
வேழமிர தம்மர்வாண் மேவியெங்குஞ்—சூழப்
பரசு மிருக்கும் பயன்படுமக் கானத்
தரசு மிருக்கு மமர்ந்து. (௧௭)

சோதிமருங் கிற்கைதைத் தூவெண் மடல்விரியக்
கோதில் பலவேர்க் கொழுங்கனியைக்—காதிமுசு
விள்ளவகழ் தோற்றம் விரிஞ்சனரி புண்மாவா
யுள்ளரனைத் தேடலொக்கு முற்று. (௧௮)

வானாறு கர்க்கடகம் வாவியுயர் சோலைபுகத்
தேனாறு தீங்கனிமுன் றின்னுமே—மானாறி
யிந்தியங்க ணீத்த விருடிகள்போற் செய்கையற்றுக்
குந்தி யிருக்குங் குரங்கு. (௧௯)

சாந்தமுளார் கானத் தருவனைத்துங் கான்றரல்போற்
சாந்தமுளார் தாநோக்குந் தண்ணளியாற்—சாந்தகைசெய்
செற்றத்தின் மேயபுலி சீயமுனெல் லாமனையார்
பெற்றத்தின் பெற்றி பெறும். (௨௦)

தீம்பகைஞ னாயபான் றன்னை யகந்தழீஇ
வெம்பகைதீர் வுள்ளார் விழைவனத்து—ளம்படரோ
டேமனுயே நாடா னிணர்ப்பூங் கணையாய்ந்து
காமனுமே நாடான் களித்து. (௨௧)

மகப்புகையே தூதா மறைமந் திரமே
யுகப்புரையாத் தீயே யுதவத்—தகைப்புகழோ
டோதவிசூழ்ந் தும்பருண வுண்மலர்தந் தூட்டுமே
மாதவிசூழ்ந் தோங்கவ் வனம். (௨௨)

மறையேய் கிடையின் மறையோர் சிறார்க்கு
முறையே நவிலு மொழிகேட்—டிறையேனுங்
கண்ணிற் பிழையாமற் கற்றசுகம் பூவைசொலப்
பண்ணிற் பயிலுமிளம் பார்ப்பு. (௨௩)

தாருவனத் தோர்பாற் சரியையுற்றோர் வாழ்வரோர்
சாருங் கிரியையுற்றோர் தாமுறைவா—ரோருழைத்தி
யானமுற்றோர் வாழ்வா ரிலங்கொருபாற் றூயசிவ
ஞானமுற்றோர் வாழ்வார் நயந்து. (௨௪)

கங்கைநீ ராடிக் கவினுர் சடையுவர்த்தித்
துங்கமாம் நீறணிந்து தோலுரியாத்—தங்கண்
மயானத்தி னட்டமிடு மாதேவற் போற்றித்
தியானத் திருப்பார் சிலர். (௨௫)

சடைமேற் கொடிபடர்த் தம்பந்தா மன்னப்
புடைமே லெழுஞ்சிதலார் புற்று—மிடைய
மறவா நிலையின் மனம்போக்கி நாட்டந்
திறவா திருப்பார் சிலர். (௨சு)

நரைதிரைமூப் பாதி நவிலு நவிவின்றி
விரைசெறிபொற் றாமரைவாழ் வேத—ருரைமனையா
வத்திபெற்று வாழ்வா ரளவிலரைக் காண்காய
சித்திபெற்று வாழ்வார் சிலர். (௨எ)

அவமா நெறியி லலைந்துலைந்தெய்க் காமற்
சிவமா நெறியடைந்து தீய—பவமாசு
வீசித் திருக்ககற்று மெய்ஞ்ஞான நூல்களுப
தேசித் திருப்பார் சிலர். (௨அ)

வேதங் கலிப்ப விதியாக மத்துறையிற்
பேதஞ் சிறிதும் பிறவாமே—யாதருநன்
னெய்து வரச்சொரிந்து நீள்வேள்வி நாடோறுஞ்
செய்து களிப்பார் சிலர். (௨௯)

காசிபனு பத்தம்பன் கௌண்டி னியன்பரத்து
வாச னுரோமன் வசிட்டன்வி—யாசன்
பிருகுவான் மீகி பிருங்கி கபிலன்
துருவாசன் சங்கன் சுகன். (௩௦)

கௌதமன்வ சுச்சிரவன் கற்கன் சமூவர்த்தன்
சௌனகன்ப ராசான் றத்தாத்திரேயன்—கௌசிகன்
கும்பன் பிஞகி குசுருவிந்தன் மார்க்கண்டன்
சம்புகண்ணு வன்ஞா தன். (௩௧)

அத்திரியாங் கீரசனே ரண்டன் கலைக்கோட்டன்
சத்தகூர் மன்புலிப்பா தன்விதிதன்—சத்தி
சனகன் சனற்குமரன் சச்சிதா னந்தன்
பனகன் புலத்தியன்பற் பன். (௩௨)

சரபங்கன் ஜைமினிப தங்கன் றதீசி
கிரதுமுத லாகக் கிளக்கும்—வரமுனிவர்
தங்களுள்ளுந் தூய்தாகத் தாமோர் மகமியற்றி
யங்க ணிருந்தா ரமர்ந்து. (௩௩)

அன்ன தறிந்தா னருள்வாத ராயணன்பான்
மன்னுமறை யாகமங்கண் மற்றுமுள—பன்னருநூல்
கற்றோன் பரன்சீர் கழறுவோன் சூதனென்பேர்
பெற்றோன் பிறங்கப் பெரிது. (௩௪)

தூயதிரு நீறுந் துலங்குமணிக் கண்டிகையும்
பாயவொளி மெய்யிற் பரப்பவே—சேயதாய்ப்
போதவத்து வானோன் புராணம் புகல்சூத
மாதவத்து வானோன் வரும். (௩௫)

இருந்த வறவோ ரெதிர்போ யிறைஞ்சி
யருந்தவநீ யிங்க ணடையப்—பெருந்தவமே
யாற்றினமென் றுமணிகொ ளாதனத்தின் மாதவனை
வீற்றிருக்க வென்றார் விழைந்து. (௩௬)

இருக்க முனிவ னெழிற்றாட் கறலீந்
தருக்கியமு னல்கி யகத்தை—யுருக்கியம்பல்
கூறி யறவோர் குழாமருங்கிற் சூழ்தரவா
யூறியமர்ந் தொன்றுரைப்பா ருற்று. (௩௭)

மாரன் றனையெரித்தோன் வாணுதற்கண் வந்துகொடுஞ்
சூரன் றனைவெல் சுடர்வடிவேல்—வீரன்றன்
மாக்கதையெங் கட்குரைக்க மாதவவென் றாரன்பு
தேக்க முறுமுளத்தார் தேர்ந்து. (௩௮)

அரியவின்சொற் கேட்டளவி லானந்தக் கண்ணீர்
சொரிய வுடல்பனிப்பச் சூதன்—பரவசமா
நின்று முனிவீர்கா ணீவிர் வினவியது
நன்றுபய னுள்ளதென் றானன்கு. (௩௯)

அன்னகதை கேட்போ ரறைவோ ரிகபரமாம்
பன்னரிய போகப் பயன்றுய்ப்ப—ருன்னுமதை
யேதமிலீர் நீவி ரினிதுகேண் மின்களென்றான்
கோதி லருந்தவத்தோர் கோன். (௪௦)

வேத முதலாம் விமலன் கமலமலர்ப்
பாதமுனிச் சூதமுனி பன்னுவி—யாதன்றாள்
பந்தியா நின்ற பரிவோடு சின்னோரஞ்
சிந்தியா நின்றான் றெளிந்து. (௪௧)

அன்றானோர் கூறுமறை யாதி முறைபிறழா
நின்றமையு மும்பரொடு நீள்புவியோர்—நன்றுநெறி
விண்டு மறநெறியே மேவி யிருந்தமையு
மொண்டளவோன் கொண்டா னுளத்து. (௪௨)

மறையின் பிறழ்வை வரன்முறையே வைத்து
முறைசெய்ய யாரான் முடியு—மறைதந்த
முன்னவனு லன்றி முடியா தெனவுணர்ந்தான்
மன்னவனு மாநிலமாண் மால். (௪௩)

அந்திநிறத் தண்ண லமர்கைலைக் கம்புயத்தோ
னிந்திரன்முற் றேவரோ டேகியரி—நந்திமலர்ப்
பாதத் துணைபோற்றிப் பையவே யெம்வரவு
நாதற் கறைகென்றா னன்கு. (௪௪)

அன்னவன்போய் வேதனரி யண்டரொடும் போந்தமையை
முன்னவன்முன் றாழ்ந்து மொழியவே—யுன்னவரை
யீங்கழைக்க வென்றா னிதயமெங்கு நின்றுணருந்
தீங்கழைக்கட் சாறன்னான் றேர்ந்து. (௪௫)

திருணந்தி தேவரயன் சீதரன்முன் றோரை
யருணந்தி முன்னுய்ப்ப வன்னோர்—கருணைப்
பரசங் கரதற் பரசங் கரவோ
மரகரவென் றார்த்தடைந்தா ராங்கு (௪௬)

முறையாக வேதன் முதலோ ரிறைஞ்ச
மறையா கமம்வாய் மலர்ந்தோ—னிறையியல்கள்
செய்யவோ வென்னத் திருமாலின் னின்னருளே
செய்யவுண்டோ தீதென்றான் றேர்ந்து. (௪௭)

மற்றுமொன் றுண்டஃது மாதேவ கேட்டிநினைச்
சற்றுநினை யாதுலகு தத்தமுள—முற்ற
நெறியே யுறுதி நிலையென்ன மாழ்கி
வறிதே கிளக்கு மகிழ்ந்து. (௪௮)

ஆகையா லன்னு ரறநெறியுற் றுன்மலர்த்தா
ளோகையா னேத்தி யுறுதிபெறத்—தோகையார்
பாகமே வத்தவருள் பாலியென்றான் கோவியர்மேன்
மோகமே வைத்த முகில். (௪௯)

மின்கலைகொண் மானீ வியாத னெனப்பெயர்கொண்
டுன்கலையு ளோர்கலையோ டுற்பவித்து—மன்கலையார்
வேதம் வகுத்து விளக்குகென்றான் மாரன்றன்
போதம் புதையான் புரிந்து. (௫௦)

தராதலத்தி லஃதுணரார் தாமறியக் கூறும்
பராவருஞ்சீர் மேய பதினெண்—புராணநூ
னந்தியெம்பாற் கேட்க நயந்துரைத்தோ மென்றுரைத்தா
னந்திநிறங் கொண்ட வரன். (௫௧)

தனியருள்கூர் நந்தி சனற்குமா ரற்கு
நனிநவின்ற னம்முனிபா னன்னி—யினிதுணர்தி
யென்ற னெதிர்த்துவரு மேமனையுங் காமனையும்
வென்ற னருளின் விழைந்து. (௫௨)

ஆதி பகவ னடித்தா மரைபோற்றிக்
கோதில் விடைபெற்றுக் கோகனகப்—போதினன்முற்
றேவரெலாந் தத்தமிடஞ் சென்றனர்தன் ஞோர்கலையின்
மேவுதற்கு முன்னுவான் விண்டு. (௫௩)

கங்கையிற்ப ராசரன்மா கந்திபுயந் தோயவந்த
நங்கை வயின்வியாத நாமமுற்றுச்—செங்கண்மா
லோர்கலையி ஞேடுதித்தே யோதாமன் முன்னுணர்வா
ஞர்கலையெ லாமுணர்ந்தா னங்கு. (௫௪)

பைலர்வைசம் பாயனரே பன்சை மினிசுமந்துக்
கெய்தருநூல் வேதமுறை யேநவின்றன்—செய்தவத்தோன்
நேத்திரமி தென்ன நிலந்துதிப்ப வேதாந்தச்
சூத்திரமுன் சொற்றன் றொகுத்து. (௫௫)

வானோர் வதரிவன மன்னிச் சனற்குமர
ஞானு சிரிய னயந்தீரொன்—பானுய
சீர்கொள் புராணநூல் செப்பியிஃ தார்க்குமே
யோர்தரச்செய் யென்ற னுவந்து. (௫௬)

உற்ற சனற்குமர ஞேதியவா றேயன்பு
பற்று புராணம் பதினெட்டு—முற்றத்
தனக்குவமை யில்லாத் தகைபெறுவி யாத
னெனக்கு நவின்ற னினிது. (௫௭)

போற்று பதினெண் புராணங்க டம்முளரற்
கேற்றவீ ரைந்தரிக் கேற்றநான்—காற்றலயற்
கேற்ற விரண்டுசெந்தீக் கேற்றதொன் றேழ்பரியோர்க்
கேற்றதொன் றுய்ப்பொலிந்த வே. (௫௮)

சண்டனையு தைத்தவற்காஞ் சைவம் பவடிகமார்க்
கண்ட மிலிங்கமா காந்தமேர்—கொண்ட
வரவரா கம்வா மனமச்சங் கூர்மம்
பிரமாண்ட மாங்கவற்றின் பேர் (௫௯)

மதுசூ தனற்கா மகிழ்கா ருடநா
ரதம்விண்டு பாகவதஞ் சேய்க்காம்—பதுமம்
பிரமமிர விக்காம் பிரமகைவர்த் தந்தீ
யாசினுக்கா மாக்கி னெயம். (௬௦)

மறையின் பிறழ்வை வரன்முறையே வைத்து
முறைசெய்ய யாரான் முடியு—மறைதந்த
முன்னவனு லன்றி முடியா தெனவுணர்ந்தான்
மன்னவனு மாநிலமாண் மால். (௪௫)

அந்திநிறத் தண்ண லமர்கைலை கமபுயத்தோ
னிந்திரன்முற் றேவரோ டேகியரி—நந்திமலர்ப்
பாதத் துணைபோற்றிப் பையவே யெம்வரவு
நாதற் கறைகென்று னன்கு. (௪௬)

அன்னவன்போய் வேதனரி யண்டரொடும் போந்தமையை
முன்னவன்முன் றாழ்ந்து மொழியவே—யுன்னவரை
யீங்கழைக்க வென்று னிதயமெங்கு நின்றுணருந்
தீங்கழைக்கட் சாறன்னான் றேர்ந்து. (௪௭)

தெருணந்தி தேவரயன் சீதரன்முன் னோரை
யருணந்தி முன்னுய்ப்ப வன்னோர்—கருணைப்
பரசங் கரதற் பரசங் கரவோ
மாகரவென் றார்த்தடைந்தா ராங்கு. (௪௮)

முறையாக வேதன் முதலோ ரிறைஞ்ச
மறையா கமம்வாய் மலர்ந்தோ—னிறையியல்கள்
செய்யவோ வென்னத் திருமானின் னின்னருளே
செய்யவுண்டோ தீதென்றான் றேர்ந்து. (௪௯)

மற்றுமொன் றுண்டஃது மாதேவ கேட்டிநினைச்
சற்றுநினை யாதுலகு தத்தமுள—முற்ற
நெறியே யுறுதி நிலையென்ன மாழ்கி
வறிதே கிளக்கு மகிழ்ந்து. (௫௦)

ஆகையா லன்னு ரறநெறியுற் றுன்மலர்த்தா
ளோகையா னேத்தி யுறுதிபெறத்—தோகையார்
பாகமே வத்தவருள் பாலியென்றான் கோவியர்மேன்
மோகமே வைத்த முகில். (௫௧)

மின்கலைகொண் மானீ வியாத னெனப்பெயர்கொண்
டின்கலையு ளோர்கலையோ டிற்பவித்து—மன்கலையார்
வேதம் வகுத்து விளக்குகென்றான் மாரன்றன்
போதம் புதையான் புரிந்து. (௫௨)

தராதலத்தி லஃதுணரார் தாமறியக் கூறும்
பராவருஞ்சீர் மேய பதினெண்—புராணநூ
னந்தியெம்பாற் கேட்க நயந்துரைத்தோ மென்றுரைத்தா
னந்திநிறங் கொண்ட வரன். (௫௩)

தனியருள்கூர் நந்தி சனற்குமா ரற்கு
நனிநவின்ற னம்முனிபா னன்னி—யினிதுணர்தி
யென்ற னெதிர்த்துவரு மேமனையுங் காமனையும்
வென்ற னருளின் விழைந்து. (௫௨)

ஆதி பகவ னடித்தா மரைபோற்றிக்
கோதில் விடைபெற்றுக் கோகனகப்—போதினன்முற்
றேவரெலாந் தத்தமிடஞ் சென்றனர்தன் ஞேர்கலையின்
மேவுதற்கு முன்னுவான் விண்டு. (௫௩)

கங்கையிற்ப ராசரன்மா கந்திபுயந் தோயவந்த
நங்கை வயின்வியாத நாமமுற்றுச்—செங்கண்மா
லோர்கலையி னேடுதித்தே யோதாமன் முன்னுணர்வா
னோர்கலையெ லாமுணர்ந்தா னங்கு. (௫௪)

பைலர்வைசம் பாயனரே பன்சை மினிசுமந்துக்
கெய்தருநூல் வேதமுறை யேநவின்றன்—செய்தவத்தோன்
நேத்திரமி தென்ன நிலந்துதிப்ப வேதாந்தச்
சூத்திரமுன் சொற்றன் றொகுத்து. (௫௫)

வானர் வதரிவன மன்னிச் சனற்குமா
ஞானு சிரிய னயந்திரோன்—பானுய
சீர்கொள் புராணநூல் செப்பியிஃ தார்க்குமே
யோர்தரச்செய் யென்று னுவந்து. (௫௬)

உற்ற சனற்குமா னேதியவா றேயன்பு
பற்று புராணம் பதினெட்டு—முற்றத்
தனக்குவமை யில்லாத் தகைபெறுவி யாத
னெனக்கு நவின்று னினிது. (௫௭)

போற்று பதினெண் புராணங்க டம்முளரற்
கேற்றவீ ரைந்தரிக் கேற்றநான்—காற்றலயற்
கேற்ற விரண்டுசெந்தீக் கேற்றதொன் றேழ்பரியோர்க்
கேற்றதொன் றாய்ப்பொலிந்த வே. (௫௮)

சண்டனையு தைத்தவற்காஞ் சைவம் பவடிகமார்க்
கண்ட மிலிங்கமா காந்தமேர்—கொண்ட
வரவரா கம்வா மனமச்சங் கூர்மம்
பிரமாண்ட மாங்கவற்றின் பேர் (௫௯)

மதுகூ தனற்கா மகிழ்கா ருடநா
ரதம்விண்டு பாகவதஞ் சேய்க்காம்—பதுமம்
பிரமபிர விக்காம் பிரமகைவர்த் தந்தீ
யாசினுக்கா மாக்கி னெயம். (௬௦)

உற்றவான் காதைபத்து ளோங்கு புகழ்படைத்த
கொற்றவேற் கந்தனருள் கூர்காதை—சொற்றனால்
வேத வியாதன் வியன்மா ணவனென்னுஞ்
சூதமுனி யென்பான் றுதித்து. (௬௧)

இமவான் மகளா யிறைவிவந்த தாதி
தமவான் குழற்குஞ் சரியோ—டமராிமான்
றன்மகளைச் சேய்வேட்டுத் தன்வரையி லுற்றவரை
தென்முனிவன் சொன்னான் றெருத்து. (௬௨)

அக்கதையின் சார மனைத்துஞ் செவிவழியே
புக்ககத்தின் மேலிட்டுப் பொங்கிவெளி—மிக்கெழுந்து,
கண்வழியே வார்வதுபோற் காதனீ ருற்றவோர்
பண்வழியிற் சொல்வார் பரிந்து. (௬௩)

சுருக்கமாச் சொன்னகுகன் றொல்கதையெங் கட்குப்
பெருக்கமாக் கேட்கப் பிரிய—முருக்கமா
மெய்ப்படிவ நற்றவத்தோய் மேவியரு ளென்றுரைத்தார்
மைப்படியா நெஞ்சத் தவர். (௬௪)

உரைகண்ட சொன்மலியீ ரொன்பான் புராணங்
கரைகண்ட சூதன் கழறுந்—திரைகண்ட
மாவையொரு மாவைர மாவயிலான் மாய்த்தரிக்குக்
காவையருள் வேண்மாக் கதை. (௬௫)

பாயிரப்படலம் முற்றுப்பெற்றது.

---

ஆக திருவெண்பா ௬௫.



திருச்சிற்றம்பலம்.

முதலாவது

## உற்பத்தி காண்டம்.

# திருக்கைலாசப் படலம்.

திருவமரு மார்பன் றிசைமுகத்தோ னாதி
வருவமர ரேத்திடுநீர் மைத்தேர்—மருவுந்
திருக்கயி லாய சிலையொடிறை மேவுந்
திருக்கயி லாயச் சிலம்பு. (க)

மண்ணியற்று மாதவத்தின் மாவடிவும் வாய்ந்தபெரும்
புண்ணியத தின் றோற்றமுமே போன்றொளிரு—நண்ணியற்சொன்
மாதிருக்கை லாய மறைப்பரிக்கா நாவினன்றாழ்
மாதிருக்கை லாய மலை. (உ)

பலகதியிற் றோன்றிப் படுந்துயர மேவா
திலகுபர னென்னவழி யில்ல—துலக
மொருங்கயி லாய வுரவோ னுரைசீர்
வருங்கயி லாய மலை. (ங)

ஊழிதொறு மோங்குவதே யோங்கலப்பேர் மற்றவரைக்
கூழி னுரைப்ப துபசாரம்—வாழியபார்
வெள்ளி யசலமே மின்முடியின் மேலணிந்தார்
வெள்ளி யசலமே மேல். (ச)

தண்டா மரையயனரி தாமழிமா வூழியப்பில்
வெண்டா மரைபோன் விளங்குமாற்—பண்டாய
மீதண்ட வொட்டான் மிளிருலகி லன்பருக்குத்
தீதண்ட வொட்டான் சிலம்பு. (ரு)

அடிமேல் விழுந்தலற வன்பி னெடுத்து
முடிமே லமர்த்து முதல்வன்—குடிகொள்வா
னுள்ளி வரையா வுயர்புகழோ டுற்றதொக்கும்
வெள்ளி வரையா விது. (சு)

பாலமருங் கோட்டாற் பரசுதுதிக் கையாற்கோன்
மேலமரு நீர்மையான் மேவியே—நாலைந்து
கைரா வணனெடுக்குங் கைலை மலையரனூ
ரைரா வணநிகர்க்கு மால். (எ)

அங்கமலை நாத னயனுதி வானவர்த
மங்கமலை நாதனவிர் கயிலைத்—துங்கமலை
வில்லா மலைக்கும் வியன்மலைக்கு மெண்மலைக்கு
மெல்லா மலைக்கு மிறை. (அ)

மன்பாற் கலந்தொளிரான் மாக்க ளபேதமா
யின்பார் தரவொன் றியைபெனலாந்—தன்பாற்
கறுங்கொள் ளருவியுமக் கைலையும் வேறு
நிறங்கொள் ளிலாத நிலை. (௯)

ஆழிமுத லைம்படைக ளங்கங்குங் கொண்டடைமா
லூழிதொறு மோங்குமுய ரோங்கலிடை—யூழின்
றரிசிக்க வெய்திநிறச் சங்கைகொண்டு சங்கைப்
பரிசிக்க மாட்டான் பரிந்து. (௧௦)

பங்கயமன் னுள்ளும் பதவிதொறு மோர்நொடிப்பிற்
றங்கமுறப் போய்வரும்வெண் டேவியன—மங்கயிலைக்
கேகவவ னுய்க்கினுமே யேகாது பின்னிடையுந்
தேகநிற மொவ்வாமை தேர்ந்து. (௧௧)

ஊர்கின்ற வோர்கரிதன் னோர்வண்ண நேர்குன்றப்
பேர்கில்லா நீர்மையினாற் பேர்கயிலைக்—கேர்மகவான்
கார்தியங்க வூர்ந்துசெலுங் காரணத்தாற் கார்மேக
வூர்தியெனப் பேர்பெற்றா னோர்ந்து. (௧௨)

வெள்ளி யகன்மா விலங்கலதி னெய்சுடரா
மொள்ளிய கன்மா துடனுறைவோ—னுள்ளியத்தீ
பந்தனைக் கண்ணாற் பயனுறக்காண் பார்மலமா
பந்தனைக் கண்ணார் பரிந்து. (௧௩)

வெள்ளிமலை யாக வியாழப்புத் தேண்முதலோ
ருள்ளியதி லாலயமா வோங்குவமென்—றொள்ளியசீர்
நன்மணியின் றோற்றமாய் நன்கமர்த லேய்க்குமே
பொன்மணியின் கோயிற் பொலிவு. (௧௪)

இன்னவண மென்றறியா வீசனிலை காட்டுமே
சொன்னமணி மண்டபத்தின் சோதியன்னான்—மின்னதனு
ளோருமறைச் சென்னியின்க ணுற்றநிலை காட்டுமே
சாருமணிச் சிம்மா தனம். (௧௫)

அன்னவரி யாசனத்தி லாயிழையோர் பாகத்தின்
மன்னவிறை மேவன் மரகதமா—மின்னு
மணியின் மருங்கின் மருவுமொப்பில் செங்கேழ்
மணியின் வயங்கு மகிழ்ந்து. (௧௬)

பொற்பி னிசைதும் புருநா ரதர்பாட
வற்பி னடமரயின் ஞராட—நற்புலவர்
கட்டங் கவரி கரத்திரட்டக் காலால
வட்டந் துளக்கினவே வந்து. (௧௭)

நிரந்தரமா லாதியரை நீண்மவுலி தாக்கத்
தரந்தரமாச் சந்நிதியிற் றந்து—வரந்தரவிட்
டந்திநேர் வண்ணன்சீ ராய்ந்தாய்ந்து தூயதிரு
நந்தியெங்கோன் சொல்வா னயந்து. (௧௮)

மின்னுருக்கொண் டாங்கு மிளிர்சடிலத் திந்துடையான்
றன்னுருக்கொண் டார்பலரோர் சார்புறவே—கொன்னுருக்கொள்
பூதர் தவமுனிவர் புங்கவர்சீர் மேவுகண
நாதர் புகழ்வார் நயந்து. (௧௯)

தொழும்பண் ணவருரகர் தூயசித்த ராதி
தொழும்பண் ணடியார் துதிநாத்—தழும்பப்
புரகரவென் றூர்சூலப் பூங்கரமா தேவ
வரகரவென் றூர்ப்பா ரமர்ந்து. (௨0)

சில்லோர்க்கு வாய்மலர்ந்துஞ் சில்லோர்க்குக் கையமைத்துஞ்
சில்லோர்க்கு நோக்களித்துஞ் சீதரன்மூற்—பல்லோர்
தெருள்செய் யடிமைத் திறத்திற் கமைய
வருள்செய் திருந்தா னவண். (௨௧)

திருக்கைலாசப் படலம்

முற்றுப் பெற்றது.

ஆ திருவெண்பா ௬0௯.

---

# பார்ப்பதிப் படலம்.

---

போற்றிருக்குங் கண்டறியாப் புண்ணியமெய்த் தேவொடவண்
வீற்றிருக்கும் போது விளங்கருள்சேர்—சேற்றிருக்கு
மன்னிறு னெவ்வுயிர்க்கு மாதா வெனத்திகழ்வா
ளுன்னிறு ளுள்ளத்து ளொன்று. (௧)

இன்பவளங் காட்டு மிறைகழலிற் றூழ்ந்தெழீஇ
மன்பவளங் காட்டுமேனி வாய்மலர்தந்—தன்பதினை
நிந்தனைசெய் தக்கனிட நின்றுவளர்ந் தன்னவன்றன்
பந்தனையென் பேர்சுமந்தேன் பண்டு. (௨)

அன்ன பெயரினையு மன்னவன்க ணெய்திவள
ரின்ன வுடலினையும் யாரொழிப்பா—ருன்னியவை
நீங்கும் வகைகினைந்தே னித்தவரு ளென்றுரைத்தா
னோங்கும் புகழ்சே ருமை. (௩)

பத்தியே யெம்பாற் பழுத்திடுநற் றன்மையினாற்
சத்தியே நின்போற் சகத்திலுண்டோ—வித்திறநீ
யுன்னியதுன் புத்திரர்க ளுய்யும் பொருட்டென்றான்
மின்னியுகோ டரன் வியந்து. (௪)

ஆயவிவை நோக்க மறிந்தறைவா னெம்பெருமான்
றாயமக மேருவினற் சுற்றமதா— மேய
குலைவி லிமயக் குவடார் பொருப்பின்
றலைவன் புரிவான் றவம். (௫)

தற்பரையே நின்றனையே தன்றனையை யாப்பெற்று
வெற்ப னெமக்குதவ மேவுதவ—நற்பயனு
வன்னோன் மகிழமக வாகிவளர்ந் தைந்தாண்டின்
பின்னோன் பியற்று பெரிது. (௬)

அங்க ணறவோ ரமரர் கணநாதர்
துங்க முனிவரொடு சூழவந்து—நங்கை
கருதரிய நின்னைமணங் கண்டரிதிற் கொண்டு
வருதுமீண் டென்றான் வரன். (௭)

இன்னவா றெம்பெருமா னின்னருள்செய் திட்டளவின்
மின்னவா மெல்லிடைக்கு மேவுவகை—யின்னலின்போ
டெல்லையில் பேரருளு மீண்டி யொருங்கேசென்
றொல்லையி லுற்ற துளத்து. (௮)

இறைதா ளிறைஞ்சி யிறைபெற் றிறையின்
மறையா கமநூல் வழுத்து—நிறைசீர்த்
தனிவரையே நின்றோரீஇத் தாபதர்கள் சூழும்
பனிவரையே சென்றாள் பரை. (௯)

அடிக்கு முழவி னருவி முழங்க
வடிக்குந்தீஞ் சொல்லாரின் மஞ்ஞை—நடிக்க
மகரயா ழென்ன மதுகரம்பண் மீட்டச்
சுகமொழியிற் பாடுஞ் சுகம். (௧௦)

பனிவரையா மேபுறையும் பண்பாற் கயிலைத்
தனிவரையா மேடக் தனிலென்—னனியா
ரமயத் திமையவர்கள் காடு மருவிச்
சிமயத் திமையச் சிலம்பு. (௧௧)

பனிப்போர்வை யான்மெய்ப் படிவ மறையாத்
தனிப்போர்நற் கங்கைதலை தங்க—வுனிப்போங்தே
யம்மைபிரி வாற்ரு தானவண்முன் னிற்பதொக்குஞ்
செம்மை யிமவான் சிலம்பு. (கஉ)

மன்மலைமே ஞப்பண் மணியறையிற் ருன்றெளிந்து
நன்மணங்கூர்ந் தங்கமல நாளரும்ப—கன்மலர்தந்
தங்க ணறவோ ரகம்போன் றிருக்குமோர்
தங்க மணிநீர்ச் சுனை. (கந)

முன்னமலை வான் றடத்தின் முன்னிமவா னேற்றிருந்தா
னுன்னமலை யீரே ழுலகீன்ற—வன்னை
யொருமகளா மேவிடவு மோதுதனக் கத்தன்
மருமகனு மேவிடவும் வந்து. (கச)

அந்த மலர்த்தடத்தி லம்பிகையா மென்னருட்டாய்
பந்தமல வேரைப் பறித்துநன்கு—கந்தவர்த
நெஞ்சத் திருந்தா ணிலைதெரித்தல் போன்மகவாய்க்
கஞ்சத் திருந்தாள் களித்து. (கரு)

இருந்தவந்த மாமகவை யின்பமுற நோக்கி
யருந்தவந்தன் பேறுதர வண்மிப்—பொருந்தவந்த
வேருருவே யல்லையே லீசன் றிருவருளே
யோருருவே யென்றுணர்ந்தா னுறறு. (கசு)

கண்ணிலின்ப வெள்ளநீர் கால வுடல்பொடிப்பப்
பண்ணி னுரைகுழறப் பார்ப்பதியை—யுண்ணினையாப்
பாடினு னன்பிற் பரசினு னுய்ந்தனனென்
ருடினுன் வெற்பி னரசு. (கஎ)

பங்கயத்தின் மேய பரையைத் தொழுதிறைஞ்சி
யங்கயத்தின் மேயவன்ன மன்னவளை—வெங்கயத்தி
னீண்டகையாற் ருனெடுத்து நீண்முடிபோற் சென்னிவைத்தா
னுண்டகையா மோங்க லரசு. (கஅ)

மூத்தார மார்பின் முழுநா யகமணிபோல்
வைத்தாரச் சேர்த்துவந்து மாமகவைப்—பைத்தாரன்
மையிற் றிகழ்நயன மானனைய மேனைதொழக்
கையிற் கொடுத்தான் களித்து. (க௯)

காந்தன் றருமகவைக் காதலுற வாங்கியுச்சி
மோந்தன்பின் முத்தமிட்டு மொய்குழலாள்—சேந்த
திருக்காந்தாண்முன் ஞந் திருவுருவந் தீண்ட
வுருக்காந்தாண் மேவு முவப்பு. (உ0)

கொங்கையின்பாற் பால்சொரியக் கூரயிற்க ணீர்சொரிய
நங்கையின்பா லன்பு நனிபெருக—மங்கைநில்லாக்
கந்தவாந் திண்புயத்தாய் கன்னியரா மோதுகென
வந்தவா றோதினன் மன். (௨௧)

உருவருவென் றுன்னி யுணர்தற் கொணுதான்
றிருவருளே செல்வியெனச் சிந்தித்—தொருவருஞ்சேர்த்
தோகைதனைப் பாலார்த்தித் தோன்றன் மகிழ்கொள்ள
வோகைமிகக் கொண்டா னுளத்து. (௨௨)

மஞ்சனநீர் மைக்குழலில் வாசநறுந் தைலமிட்டு
மஞ்சனநீ ராட்டி மயிர்புலர்த்தி—யஞ்சனங்கார்
கோணயன மேலெழுதிக் கூன்பிறைமே லோர்கறைபோல்
வாணுதலிற் பொட்டிட்டாண் மாது. (௨௩)

தூயமணிப் பட்டாடை தோகைக் கரைக்கசைத்து
மேயமணி மேகலைதோண் மேலணியாப்—பாயமணிச்
சுட்டி மதாணிதண்டை சொல்லும்பிறவுமிட்டுத்
திட்டிசுற்றிக் காப்பமைத்தா டேர்ந்து. (௨௪)

விளக்கா ணிறீஇ விளங்குசம விட்டந்
தனைச்சார்த்திப் பந்தவடந் தாழத்—தனைச்சார்ந்தா
ரின்பமணித் தொட்டிலின்க ணேற்றுவபோற் பார்ப்பதியை
யின்பமணித் தொட்டிலிட்டா ளிங்கு. (௨௫)

மன்னுட்ட மேல்வைக்கு மாருக் கருணையாந்
தன்னுட்ட மூடிற் சகனுயுமோ—மின்னுட்டப்
பண்வளருந் தாலாட்டின் பண்புணர்தல் போலுணர்விற்
கண்வளரு நற்றாய் களித்து. (௨௬)

பொற்பாவை தானெடுத்துப் புவைபா ரோடாடி
யற்பாவை கோன்மகிழ வன்னவன்றன்—கற்பாரு
மில்லாள் வளர்க்கவே யெவ்வுயிரு மேவளர்க்க
வல்லாள் வளர்வாண் மகிழ்ந்து (௨௭)

ஐந்துவய தாமெல்லை யன்பிற் பெறுதுபெற்ற
தந்தைவயிற் சார்ந்துமணஞ் சம்புவந்து—வைந்துசெய்வான்
செய்யபணி மாதரொடு சென்று தவம்புரிய
வையபணி யென்று ளணங்கு. (௨௮)

அன்னையே கேட்டி யரிய தவஞ்செய்தற்
கின்னதோர் காலமன்றி யாண்டுமைந்து—நின்னுடல
மம்மபொரு தாதலினு லன்ன தநீ தீர்தியென்றான்
செம்மனத்த செம்ம றெரிந்து. (௨௯)

மாசற்ற சொற்குநகை வாய்மலர்ந்தெல் லாம்வல்ல
வீசனே காப்ப னிது துணிபா—நீசற்று
மஞ்சே லெனவம்மை யன்பொடுநோன் பாற்றுகென்றான
மஞ்சே றிமயத்து மன். (கூ0)

ஏர்வயங்கா நிற்கு மிமயச் சிமயத்தின்
சார்பிலொரு சாலை சமைத்ததன்க—ணேர்வுற
மன்மரபில் வந்த மகளி ரொடும்விடுத்தான்
மின்மருங்கு னன்மகளை வேந்து. (கூக)

அந்தத் தவச்சாலை யண்மி யிளங்கோதை
பந்தத் தளையறுக்கும் பண்ணவனைச்—சிந்தித்
தருமா தவம்புரிந்தா ளன்னைபணி யாற்றத்
திருமா தரைவைத்தா டேர்ந்து. (கூஉ)

ஊற்றிருந்தா லென்னவுள்ளன் போங்கவைக ளேறுமத்தன்
போற்றிருந்தாய் போற்றியே போகவனை—நோற்றிருந்தாள்
பின்போ தவட்பிரிந்த பெம்மான் செயன்முறையே
யன்போ டறையலுற்றே னிங்கு. (கூகூ)

பார்ப்பதிப் படலம்
முற்றுப் பெற்றது.
ஆ திருவெண்பா சாகூக.

---

# மேருப் படலம்.

---

பன்னியா மேனை பரசிமவான் பாற்கவுரி
கன்னியாய் நோற்றிருந்த காலையிங்கு—மன்னிலாத
துன்டந் தெயிற்றவுணர் சூழ்தரவெஞ் சூரபன்ம
னண்டத் திறையானா னன்று. (க)

அன்னபோழ் தாலின்கீ ழாரணத்தின் மெய்ப்பொருளை
முன்னமோர்ந் திட்ட முனிவரரே—யுன்னமுறப்
பின்னுந் தவமியற்றிப் பெம்மான் றிருவருளான்
மன்னுங் கயிலையுற்றார் வந்து. (உ)

அந்தின்முற் காவணந்தி யம்பயத்தா ளேத்திநிற்பப்
புந்தி யகங்கருணை பூத்தவரைப்—பந்தியுறக்
கொண்டு செலமணிப்பொற் கோயிலின்க ணாயகனைக்
கண்டு தொழுதார் களித்து. (௩)

தீண்டா ரிதழித் தனிமுதலைக் கண்குளிரக்
கண்டா ரிளைறஞ்சினார் காமாதி—விண்டார்
மலையாற் றுதியா மறைமாக் கடற்கோர்
துறையாற் றுதியென்றார் சூழ்ந்து. (௪)

என்றவர்சொன் மாற்ற மினிதோர்ந் தறிவமைந்தே
யொன்றுபெற மாதவத்தி ருங்கிருமி—னன்றுதரு
நன்னூ லுரைத்துமென்று ஞன்மறையா றங்கமுதற்
பின்னூல் வகுத்த பரன். (௫)

என்னவிவை கூறு மிறைதா டனைதுமுன்னர்
நன்னருணர் காட்சிகொளு நால்வருமங்—குன்னியுற்றார்
சென்றிடுமோர் நந்தியெங்கோன் சீரா னனநோக்கி
யொன்றியம்பும் வார்சடையோ னோர்ந்து. (௬)

பொங்கெழிற்பூ வாளியன்றிப் புங்கவர்யார் போந்தாலு
மிங்குத் தருதியல்லை யென்னநந்தி—யங்கதுதா
னுற்றுவ லென்று வரனை வணங்கியங்கண்
போற்றன் முறைபுரிந்தான் போந்து. (௭)

நந்திகடை போற்றவே நாதன் சனகாதி
யந்தவத்தோர் கேட்பவொளி ராகமத்தின்—முந்துபத
மூன்று மொழிந்தருள முன்ஞான போதகமே
தான்றுலங்கப் போதியென்றார் தாம். (௮)

என்னநகைத் தொன்று மெதிர்மொழிசொன் னைல்லன்
பன்னுவதன் றிந்தப் பரிசிருத்த—லுன்னமுறக்
கண்டிரவ் வாறுருங் காணென்று னங்கவர்கருத்
திண்டிர வேறுகைக்குந் தே. (௯)

ஓவருமென் பார வுரத்திலோர் கையமைத்து
மேவருமற் றோர்கரத்தில் வித்தகஞ்சேர்த்—தேவருக்கு
மேலாம் பரன்கணந்தான் மேவியே யோகுசெய்வார்
போலாங் கிருந்தான் பொலிந்து. (௧௦)

அனகனித் தன்மையா யாங்குணர்த்தக் கண்டு
சனகா தியர்மோனந் தான்சொற்—றனையதன்றென்
றந்திநிறத் தண்ண லருளா லவரவர்தம்
புந்தி யொடுக்கமுற்றார் போந்து. (௧௧)

ஞானபோ தம்பெற்ற நற்றவத்தோர் தற்பரன்கொண்
மோன வடிவினையே முன்னியுற்று—ரானபரன்
யோகிருந்த வோர்கணமு மோரா யிரம்யுகங்க
ளாகியவே,மான்முதலோர்க் காங்கு. (௧௨)

ஆரணநன் கேத்து மரன்மோனக் காட்சியா
ஞரணனன் ஞன்முகன்ற நங்கையர்கள்—வாரமுற
ஆடியே கூடு முவப்பின்றி மோகமிலாப்
பேடியே போன்ருர் பெரிது. (கந)

போகியா நின்ற புரந்தரன்முற் றேவரெலா
மோகியா நின்று முயங்குகிலார்—யோகியா
மன்ஞன் செயலொத் தனைத்துயிரு நின்றவென்ரு
லென்ஞ மெறும்வலிவேட் கிங்கு. (கச)

பூமன் மகர்க்கரஞர் போதித்த வோர்கணத்திற்
ருமின் படைத்தற்கா தாரமெழிற்—காம
னவனென் றிருந்த வினைவோரு மூலஞ்
சிவனென் றுணர்ந்தார் தெளிந்து. (கரு)

காமம் விளைவிக்குங் காமனுந்தன் றேவியோ
டேமமுறும் வண்ண மினிதுவந்து—நேமமுறத்
துன்னுகிலா னென்னிற் றெடுகடன்மா ஞாலத்து
மன்னுயிர்க்கு முண்டோ மகிழ்வு. (கசு)

இவ்வண்ண நால்வர்க் கிறைஞான போதநிலை
யுவ்வண்ண மென்னவிருந் தோர்விக்கு—மவ்வெல்லை
வெந்திறல்கொள் சூரனிழை வெம்மையினு லும்பரொடு
மிந்திரன்பார் புக்கா னினைந்து. (கஎ)

காருகைமால் கைலையண்மிக் கண்ணுதலைக் காணமயந்
தேருகையின் ருகத் திருமியுயர்—மேருவுற்றே
சேடழித்த சூர்மைந்தன் சேயைச் சிறைகொடுவிண்
ணுடழித்த வாறுணர்ந்தா னன்கு. (கஅ)

எடுத்தவரை யெய்ந்திறுமாந் தேறுநீ ராடை
யுடுத்தவரை மாதகட்டி லோங்கு—மடுத்தவரைத்
தன்மயம தாக்குந் தனிக்குருவிற் சார்ந்தவெலாம்
பொன்மயம தாக்கும் பொருப்பு. (கக)

அத்தநெறி யிற்சந்தி ராதித்தர் மாருமே
தத்தநெறி செல்லவைத்த தம்பமே—யொத்திலகும்
விண்ணகத்தின் மேவு விபுதருக் காலயமா
மண்ணகத்தி லோங்கு மலை. (உ0)

அரிய சிறியவுரு வாவனுக்கண் டாங்குப்
பெரிய வுருவும் பிறங்கித்—தெரியக்
கடுத்தயங்குங் கண்டனது காணினதன் சீர்த்தி
யெடுத்துரைக்க வல்லா ரெவர். (உக)

மாமேரு வெற்பின் மகவா னெடுங்கால
நோமேவு மெய்யுழந்து நோற்றிடலுஞ்—சேமேல்
வருமா தியைக்கண்டு மாதவத்தோன் போற்றப்
பெருமா னருள்வான் பெரிது. (உஉ)

போற்று மவனைப் புரந்தரனீ பன்னெடுநா
ளாற்ற வுடனொருந் தரியத்வ—நோற்றமைதா
னென்னிமித்த மென்று னெதுவுந் தெரியான்போல்
வன்னிமத்தஞ் சூடும் வரன். (உ௩)

வணங்கியெந்தாய் சூரன் வருத்தியென்னோர் சேயை
யிணங்கண் டரைச்சிறையி லிட்டே—யணங்குறவெம்
மூரி லெரிகொளீஇ யூறிழைத்தா னன்னவற்செற்
றாருள்செய் கென்று னரசு. (உ௪)

வாய்மையிலாத் தக்கன் மகத்தவியுண் பாவநும்மி
ஞேய்மைதரு துன்பாக நொந்துழந்தீர்—செய்மரபிற்
செம்மையினம் பால்வந்து தீதுறுவெஞ் சூர்க்காதி
யும்மையுமே காப்பனென்று னுற்று. (உ௫)

என்னாவின் றெம்பெருமா னேகியபின் வானவர்கோன்
முன்னவன்சொன் மாற்றமெலா முன்னியே—யுன்னகத்து
டுன்புமிறை சொல்லாற் றுணிபு முவகையு
மின்புமிறை யுற்ற வினிது. (உ௬)

வெள்ளிவரை யுற்றான் விமல னிறைந்தபனி
யொள்ளியவெற் புற்று னுமைமாது—வள்ளலா
மாசில் குமரனன்னோர்க் கங்கடைவ தெங்கனெனு
வாசவன் றன் புற்றான் மனத்து. (உ௭)

மன்னின்ன லோடு மனோவதியென் னுமங்கொண்
மின்னகரி யெய்தியங்கண் வீற்றிருக்கும்—பொன்னி
னியன்மனைவி தன்னுழைத்தன் னில்லா டனைவைத்
தயன்மந் திரம்புகுந்தா னங்கு. (உ௮)

இன்னதோர் காலையெங்கோ னீரிருநீத் தோருணர்வின்
முன்னம்யோ குற்றமையான் மொய்மலரோன்—மன்னுபடைப்
பின்றியயர் வெய்துமன்றத் தேகியன்னான் றாள்பணிந்தான்
மின்றிகழ்பூ ணும்பரோடும் வேந்து. (உ௯)

மகபதிதாழ்ந் தேத்திநிற்ப மாமலரோ னன்பின்
முகமலர்ந்து நோக்கி முகத்தோ—டகமெலிவுற்
றிங்கடைந்த தென்னென் றியம்பநவில் வான்சூரா
லங்கடைந்த வெல்லா மயற்கு. (௩0)

சேய்சிறையின் மேவியதூஉஞ் சிற்பரன்யோ குற்றதூஉ
நோய்மைகெட மாதவந்தா னேற்றதூஉவும்—பாய்விடைமே
லீசன்வந் துற்றே யியம்பியதூஉ நான்முகற்கு
வாசவன்முன் சொன்னான் வகுத்து. (௩க)

என்றுமால் கூறிடவு மெண்கணன்மே லாந்தேவன்
மன்றனறுங் கொன்றையந்தார் வானவனே—யன்றியுண்டோ
வன்னான் செயலனைத்து மாரறிவர் யோகிருந்தா
னுன்னு முனிபோ லுவந்து. (௩உ)

மாலுமா வாய்நானு மாபறவை யாய்க்கீழு
மேலுமா நேடுவனல் வெற்பானோன்—சாலு
மனுவுளனு வாவா னவன்செயலா ரோர்வா
ருணர்வுள்ளத் தாரன்றி யுற்று. (௩௩)

பெற்றவர்சேய் நோயைப் பிறராற் கடிவதுபோ
லுற்ற பவஞ்சூரா லோட்டுவித்துக்—குற்றமிலா
மேயவின்ப நல்குவான் வேந்தநிகழ் செய்திவிண்டு
நாயகன்பாற் சொல்வமென்றார் நன்கு. (௩௪)

தேனேருந் தண்டுளவச் சீதரனைக் காணுவான்
வானோர் குழாஞ்சூழ வைரவைவாட்—கோனோடும்
வைகுந்த னூர்வ மனோவதியி னின்றறிவாழ்
வைகுந்தஞ் சென்றான் வரன். (௩௫)

அங்கண் கடைகாவ லாற்றுதிறற் காவலன்றான்
பங்கயன்முன் னோர்கள் படர்ந்தமையைச்—செங்கண்மா
றன்பாற் புகலத் தருதியென்றா னன்னவரைப்
பொன்பாற் பிரியன் புரிந்து. (௩௬)

சங்காழி யேந்தித்தன் சாரூப மேற்றவர்கள்
பொங்காழி யார்ப்பதுபோற் போற்றிநிற்ப—வங்காழ்
துளவமலர்க் கண்ணி துலங்குநிறத் தோர்மா
துளவமலர்க் கண்டா ருவந்து. (௩எ)

கண்டுதொழு தேத்திக் கரங்குவித்து நிற்றலுமே
விண்டுவரு னேக்கமுற்று வேதாவுக்—கண்டையிலோர்
பீடிகைதந் தீங்குப் பிரமவிரு வென்றுவகை
யோடிமையோர்க் கண்டா னுகந்து. (௩அ)

பாங்கிருந்த நான்முகனைப் பார்த்தான் றொழின்முறையே
யோங்குகின்ற வேரிவென்ன வோதுவான்—றேங்கமழுந்
தண்டுளப மார்பா சனகன்முன் னால்வருமே
பண்டுளம்வந் தெய்தினரென் பால். (௩௯)

மன்னவரை நோக்கியான் மாண்டொழில்செய் தீண்டுறுதி
ரென்ன வதுகேட் டிலர்நகைத்துப்—பன்னுவா
ரோதுபடைபீ டென்றனையி லுற்றயரோ மென்றாரன் றூட்
போதடைது மென்றார் புரிந்து. (சo)

மான்மருவா மைந்தர் மனமுழுன்று மாதவங்க
ளூன்மெலிய நோற்பவன்று ருண்மகிழத்—தான்மேவி
யுன்னினைந்து பூதங்கட் குட்புறம்பா மீசனீ
ரென்னினைந்து நோற்றிரென்று னீங்கு. (சக)

பிறைமிலைந்த வேணிப் பெருமவெமக் கெண்ணின்
மறையுண்மை சொற்றியென மன்னு—மிறைகயிலைச்
சார்பிலோ ராலின்கீழ் தாபதர்க ளுல்வருக்கு
மோர்வரிய வோத்துரைத்தா னுற்று. (சஉ)

வேதப் பொருளுணர்த்தி வித்தகனங் கேகவன்று
ரோதக் கடல்சூ ழுலகடைந்து—போதத்தன்
சிந்தைதா னென்றுந் திறனரிதென் றோர்ந்துபின்னு
முந்தையி னேற்றார் முயன்று. (சங)

பின்னுந் தவமியற்றிப் பெம்மான் றிருவருளான்
மன்னுமைந்தர் வெள்ளி வரையுற்று—ரன்னருளம்
பாகமுறும் பான்மையுமை பாகனுணர்ந் தாகமநூன்
மோகமறக் கூறினான் முன். (சச)

அமையாநன் மோனநிலை யாங்கருள வீசன்
கமையா முனிவர் கருத்துற்—றமையோர்
பயலற் றிருந்தாள் பரன்று ணினைந்து
செயலற் றிருந்தார் தெளிந்து. (சரு)

வருமதிய வேணி வரன்யோ கிருந்த
வொருகணமும் பல்லுகமா யுற்ற—திருவனையார்
போகமுமே நீத்தார் புவனத்தோர் நீத்தார்போன்
மோகமுமே நீத்தார் முனிந்து. (சசு)

ஒல்லுமுனி போலரன்யோ குற்றமையால் வாணிபுயம்
புல்லுகிலே னும் பொருகடல்சூழ்—தொல்லுலகி
லாண்பெண் முயக்கின்மை யாலுயிர்கள் பல்கலில
மாண்பெண் டொழிலுநின்ற மற்று. (சஎ)

இத்தன்மை யாக விறைவரத்தால் வெஞ்சூரின்
புற்றிடுவா னெற்கேவ லொன்றிட்டா—னித்தலுமே
நற்றே வரையரியை நாடுதிசைக் காவலரைக்
குற்றேவல் கொண்டான் குறித்து. (ச௮)

முறைசெய் சயந்தன் முதலிமையோர் தம்மைச்
சிறைசெய் திடுக்கணனி செய்தான்—கறைமிடற்றோ
னென்று மறிகிலன்போ லுற்றிருந்தான் செய்வதென்னை
யென்றுசொன்னான் மாமலரோ னிங்கு. (சகூ)

திருமருமன் வேதன் றிகழ்வதனை நோக்கி
யருவுருவ மாகியரு ளத்தன்—பொருவரிய
தேமறையோன் யோகின் செயல்காட்டின் மன்னுயிர்க்குக்
காமமெவ்வா றுண்டாகுங் காண். (ரு0)

திக்கன் புடையிருந்தோர் தம்மூழ் வினையெச்ச
மிக்கன் புடைத்தவத்தான் மேவுவளன்—ஒருக்கவெஞ்சூர்
தன்னுன் முடிததுத் தனியருள்செய் வான்போலும்
பின்னுன் மவுலிப் பிரான். (ருக)

முனிவர்க் குணர்த்தியருண் மோனநிலை நீங்கிப்
பனிவெற் புயிர்த்த பரைதோ—டனிமுதல்சேர்ந்
தீங்கொருசேய் நல்கி னெறுழ்வலிச்சூர் பொன்றுமடர்
தீங்கொழியு மென்றான் றெளிந்து. (ருஉ)

அன்னசெயன் முற்ற வனைத்துயிர்க்கு மாலியற்றுங்
கன்னல்வில் வேளைக் கடிதுய்க்கின்—மன்னுமரன்
மோனநிலை தீர்ந்துமைமேன் மோகங்கொண் டோர்சேயைத்
தானளிக்கு மென்றான் றக. (ருங)

மாற்றமயன் றேர்ந்தவகை மன்னியிது நன்றெந்தா
யேற்றனநீ சொற்றா யெனவவனைப்—பார்த்துக்
கடுத்திகழுங் கந்தான்பாற் காமனைக்கூய் வல்லை
விடுத்தியென்றான் வேலையிலார்விண்டு. (ருச)

வண்டுழாய் மௌலி மலர்த்தாள் வணங்கிவிடை
கொண்டுசெழுங் கோகனகக் கோயிலா—னண்டரொடு
மன்னகரி யாய மனோவதியைச் சார்ந்தங்கண்
டன்னகரில் வீற்றிருந்தான் றான். (ருரு)

மேருப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா சகூச.

# காமதகனப் படலம்.

---

இந்திரன்வா னும்பரோ டேகிமலர்ப் பண்ணவன்றன்
வந்திரத வைங்கணையோன் வந்தடைவான்—புந்தியின்கட்
சிந்தனைசெய் போது திசைமுகன்முன் வல்விரைவில்
வந்தனையற் றாழ்ந்தான் மதன். (௧)

இன்னளினற் போற்றிநீ யென்னை நினைந்ததென்னை
யென்னமதன் கேட்ப வியம்புமயன்—முன்னரன்கண்
மாதினைச்சேர் வான்கணை தூய் மௌனமகற் றயின்னே
போதியென்றா னெங்கள் பொருட்டு. (௨)

பங்கயனிவ் வாறு பகர்கூற்றங் காதிடையே
பொங்கழலின் மேவியுளம் போயனங்க—னங்கமெலாஞ்
சுட்டதெனிற் கூற்றுதைத்தோன் சூழ்ந்துவரு மன்னவனை
யட்டிடுத லற்புதமோ வாங்கு. (௩)

போதனு னிச்சொல் புகலவிணைக் கையினிரு
காதினூர் வேள்பொத்திக் கத்தன்பே—ரோதினன்
பல்வகையி னுய பவமெய் துவதாகுஞ்
சொல்வகையிற் கேட்டேன் றுயர்ந்து. (௪)

வன்பருமா சற்றவர்பான் மன்னினுய்யு மாறருள்வா
ருன்பினுறி னித்தவறே யோதினையா—லன்ப
வடிகட் கமல மலர்த்தளியோ யென்பா
லடிகட் கிலையோ வருள். (௫)

வண்ணநில மாதை மலர்த்திருவை மற்றவரை
யெண்ணமுறப் புல்கிடுவா னீர்ங்கழைவிற்—கண்ணறும்பூ
நற்றிறலைங் கோல்கொடுபோர் நன்றிழைத்தென் னத்தனைசீர்
பெற்றிலனோ வன்னான் பெரிது. (௬)

செய்யவளை மானிறத்திற் சேர்த்திலனோ சொன்மகளைத்
துய்யநின்னு விற்றிகழத் தோய்வித்து—மைய
திருவிற் சிறந்த திலோத்தமைமேல் சிந்தை
மருவப் புரிந்திலனோ வந்து. (௭)

புங்கவர்கோன் சுந்தரிதோள் புல்கிடநான் செய்ததன்றி
யங்கவன்ற னுக்கையுற்ற மம்பகமாம்—வெங்குறிகள்
கண்டிலனோ வைம்பூங் கணையினூற் றேவரையுங்
கொண்டிலனோ வெற்றி குறித்து. (௮)

மாதவத்தின் மிக்க வசிட்டன் முதற்றுறவோர்
கோதிறிற னெல்லாங் குலத்திலரோ—வோத
வுவரி புடைசூ ழுலகிற் கடந்தா
ரெவரென் கணையி னிலக்கு. (௯)

இத்திறமாற் றேனெணம் மிறையோ னிடத்தமருஞ்
சத்திசெய லேயாகுஞ் சாற்றுமைந்து—கொத்தின்மே
னொய்துறு நும் மேலன்றி நோன்மை யுறுவரன்மே
லெய்துறுமோ வெய்வா னெதிர்ந்து. (௧௦)

நகைகண் மெய்யழலாங் கத்தன் றனையெதிர்ந்தே
யெய்திடினிவ் வாவி யிருக்குமோ—நொய்தினீ
வானையரோ டும்பர் வணங்கிடுமெம் மீசனையு
மேனையரோ டெண்ணினையோ வீங்கு. (௧௧)

சுழல்கான் முனம்புன் றரும்பெதிர்ந்து நிற்பி
னழல்கான் மழுவேந் தரன்மேல்—விழலேன்
பொரமே வுவனிறைபாற் போர்புரிவ னென்றேன்
றரமே வினரா ருளர். (௧௨)

பாத்தே வருக்கண் டிறம்பூ தடையவே
மீத்தேவ ரங்கமா மேவுமணிப்—பூத்தே
ருலகையா வமரியற்று மொன்னார் புரம்புன்
னகையா லெரித்ததைநீ நாடு (௧௩)

முரனுயிர்கொள் செங்கண் முகுந்தனொடு நீயு
பரம்பொருள்யா மென்னப் பரனும்—வரனுற்
றிகழ்ந்த சிரத்தொன் றெறிந்தகை யுகிரா
லகழ்ந்த தறிகிலையோ வன்று (௧௪)

நஞ்சமெனச் சார்ந்த தனிமுனிவன் சேய்க்குநீ
யஞ்சலெனா வாக்களித்தங் கார்த்துவரும்—வஞ்சக்
கதைத்தடக்கைக் காலனைமுன் காலினால் வீழ
வுதைத்த துணர்கிலையோ வுற்று. (௧௫)

அன்றால மார்த்துவர வஞ்சி யமரரொடு
குன்றாலங் கோவளித்த கோவலனு—மன்றால
மானவரும் போற்றவது மாந்தியரா னீலகண்ட
னானதுவு மோர்கிலையோ வங்கு. (௧௬)

நின்மகன்செய் வேள்வியின்க ணின்றவியு ணும்பரெலாம்
வின்மகனும் வீரனால் வீறழிந்து—மன்மகனுஞ்
சாயவவன் கம்போய்த் தகைவி றகர்ச்சென்னி
யாயதுவு மாய்கிலையோ வன்று. (௧௭)

வனத்திருடி மாரனுப்பு மாபுலித்தோ லாடை
மனத்திருடி யங்கவருன் வானெய்—துனத்திருடி
யுண்டவரி யோரா வுருவி னுடுத்தியதைக்
கண்ட திலையோநீ காண். (கஅ)

தழுவோர் கடைகா டனையே நீக்கு
மழுவோர் காத்து வான்கண்—விழுமோர்
பொறியி னுலகம் பொடிபட் டிடனீ
யறிகின் றிலையோ வது. (கக)

இத்தகைய ஞய விறையோன்மே லங்கணையே
யுய்த்தமர்செய் கின்றிலே னுன்னுயிர்மெய்ப்—பற்றற்
றவரே புரிவா னமைவா ருனிமற்
றெவரே புரிவா ரிது. (உ௦)

உலகமெலாம் பூப்ப வொருதன் னருளைக்
குலவுநலங் கூர்கொடியாக் கொண்டே—யிலகொருபாற்
றானு விருத்துந் தனிமுதலாஞ் சிற்பரனை
காணு மயல்புரிவே னன்று. (உக)

என்று மதவே ளிசையா மொழிநவில
மன்றன் மலரோன் மனங்கவலுற்—றொன்றுமத்தன்
றன்னோ முன்னுத் தனியா வுயிர்ப்புறச்
சின்னோ நின்றான் றிகைத்து. (உஉ)

வெளிற்றறிவாற் றன்மை வியந்திடுவா னோர்பாற
களிற்றுரிவை போர்த்த கடவு—ளளிர்த்தவியல்
சொற்றனையா லுண்மையதாஞ் சொற்பொருளா மன்னவனைச்
செற்றனையா ரின்னவெனச் செப்பு. (உ௩)

அன்னதகை யேயெனினு மண்ட ரெவரானு
மின்ன கருமமுடி வெய்தலரி—துன்னு
மிதற்கா ரணமேத் திறையருளுற் றானு
முதற்கா ரணநீயா முன். (உ௪)

எல்லார் செயலு மிறையோன் செயலாவ
தல்லா லொருவர்க் கமையுமோ—வல்லான்
றரும்பொன்று நட்டிறைமை தோற்றுவித்த செய்தி
கரும்பொன்று வில்லாய் கருது. (உ௫)

செழுமலரோன் மான்முதலாத் தேவரதி யாரோ
மழுவலற்கு வாய்ந்த வலிமை— யுழுவைமுன்
மானெதிர்க்கப் போந்த வணமாமே சிற்பரனை
யானெதிர்க்கப் போந்த விது. (௩௧)

ஐயோவென் செய்தயர்ந்தே னாயிரமாஞ் செங்கதிர்கொள்
வெய்யோன்முன் வைத்த விளக்கேயாந்—துய்யோனுந்
திண்ணியன்முன் கங்கை சிரம்வைத் துலகளித்த
புண்ணியன்முன் மற்றோர் புகழ். (உஎ)

ஊட்டுவிப்பான் றானு யுயிர்க்குயிராய் நின்றவையு
மாட்டுவிப்பா னன்றிநம்மா லாவதுண்டோ—கோட்டுவில்லான்
றன்மை யிதுகாறுந் தானோர்ந் திலையோவேர்
வின்மதனீ யென்றான் விதி. (உஅ)

கருப்புச் சிலைகுனித்துக் கான்மலர்க்கோல் பூட்டிப்
பொருப்புச் சிலையாற் பொரவோ—விருப்பின்
வழிக்கொள் ளுதியதுவு மற்றோ னருள்காண்
மொழிக்கெதிரின் றேகாய் முனம். (உகூ)

ஈதலதி யாரேனு மீங்கிதுசெய் யென்றக்கா
லாதரவி னாற்றுவார்க் காகுமற—மோதிதனைச்
செய்யா தவர்க்ககமாஞ் சீருமிலை பேருமிலை
யையா விலங்கா மவர். (௩௦)

தம்மை யடுத்தொருவர் தாம்வேண் டியவினைவி
லம்மவுயிரீத்து மளிப்பாராற்—செம்மனத்தோ
னின்னுயிரென் றெண்ணு திமையோ ரிறைவேண்ட
வென்னென் பளித்தான் விழைந்து. (௩௧)

சூர்வான் வலியாற் றுயருழந்தோ மாருமது
தீர்வான் சிவனுகந்தோர் சேய்தரவைங்—கூர்வாளி
யேறுயர்த்தோன் மேல்விடுப்ப யாம்வேண் டினநின்னை
மாறுரையே லென்றனன்பூ மன். (௩௨)

வேத னிதுசொல்லும் வேளயர்ந்து தற்பரனை
மாதியொடு மாறா யமர்புரியே—னீதன்றி
யெற்கடுத்த திங்கொன் றியம்புதியேல் யான்செய்வ
னற்கமலத் தையவென்றா னன்கு. (௩௩)

அன்னதுகேட் டம்புயத்தோ னையசின மேற்கொண்டு
மன்னயங்கொ ணஞ்சொன் மறுத்தியாற்—சொன்னவணஞ்
செய்தியே லுய்தியது செய்யாக்கால் வெஞ்சாப
மெய்துமென்ன மென்னென்றா னீங்கு. (௩௪)

அங்கயன்வெஞ் சொற்கேட் டழுங்குமனந் தேற்றியே
செங்கழைவி லங்கையிற்கொள் சித்தசவேள்—பங்கயனின்
சூளினுறு துன்பினிலஞ் சோதிதன்மேற் கோன்மலர்தூய்
மாளினுய்வுண் டென்றான் மதன். (௩௫)

செற்றமுறே லையவின்றே சிற்பான்மேற் போர்புரிவா
னுற்றிடுவே னென்னன் றருமதவேள்—சொற்றிடலு
மன்பி னயன்மகிழ்வுற் றுதரத்திற் கூறுவான்
றன்பணியி னின்றான் றனக்கு. (௩௬)

நின்றான்பா லின்னேவிட்டு நாம்பிரியோம் பின்றொடர்வோ
மென் றயன்வே டென்னையன்பி னேவினான்—மன்றனுறுங்
கற்பகத்தார் வேந்தன் கவலை யறிதிமை நத
சிற்பார்க்கின் பாக்கென்றான் சென்று. (௩௭)

அன்னதுகேட் டங்கைகுவித் தம்போ ருகத்தமர்வோன்
மன்னுலக நீங்கித்தன் மாநகருற்—றன்னியவை
தேவிதனக் கோதித் தெளிவித் தொருப்படுத்தி
மேவினன்வெம் போர்புரிய வேள். (௩௮)

பொருவின்மெய் மேற்றளிராம் போர்க்கவசம் பூண்டே
யிருமருங்கிற் சேதகைவாள் யாத்து—மருமலர்க்கோ
லாவம் புறத்திட் டவிர்கழைவிற் கைக்கொண்டான்
பூவம் புடையான் புரிந்து. (௩௯)

வாரி முரசார்ப்ப மன்குயில்கா ளகதறாகச
சீரிற் சிகரமே சிகரமாச்—சாரிலசைந்
தேகமக ரக்கொடிவிண் ணேய்ந்துலவ விந்துகுடை
யாகநிழற் றக்களிப்பா னுகு. (௪௰)

வெஞ்சகுனஞ் சென்னெறியின் மேவ வணங்கினொடு
பைஞ்சிறைய கிள்ளைப் பரிபூண்ட—மஞ்சமருந்
தென்றலாந் தேரிவர்ந்து சென்றனனே சித்தசவேண்
மன்றலாங் கைலை மருங்கு. (௪௧)

ஓங்கு மதவே ளுயர்கயிலை கண்டிறைஞ்சிப்
பாங்கு வருந்தன் பரிசனத்தை—யாங்கிருத்தித்
தூங்கு புலியைத் துயிலுணர்த்தச் சென்மான்போ
லூங்குமனப் போதலுற்றா னுற்று. (௪௨)

ஐந்திறமார் பூங்கணைகொண் டேந்தாமார் புண்யாமே
லுந்தினனுன் மாலுறவம் துள்ளுணர்ந்து—நந்தியொங்கோ
னும்மெனுரப் பாலவைமே லொன்றுது விண்ணின்ற
வம்மென் மலர்ப்பகழி யாக்கு. (௪௩)

அம்மவிஃ தென்னென் றதிசயித்து மாரவேள்
விம்மிநந்தி யந்தாள் விரைந்திறைஞ்சச்—செம்மேனி
யிவ்வரைக்கண் வந்ததென்கொ லென்னவயன் செய்திறத்தா
மெவ்வமெலாஞ் சொன்னு னெடுத்து (௪௪)

ஆங்கதுகேட் டுள்ளுணர்வா னண்டரின்ன ளேய்தீர்வா
னாங்கிவனை யுய்த்திட்டார் யோகுசெய்போ—தீங்கரனே
வந்தாலும் விட்டிடேன் மாரனிறப் பெய்துவான்
வந்தாற் றடேலென்றான் மன். (சரு)

ஆதலின்வேள் வந்த தருளதே யானையெனக்
காத லுறவுணர்ந்து காலம்பார்த்—தோதமா
ரீண்டுதுயர் நீங்கச்செய் யீசன்முன் னீயேகல்
வேண்டுமோ வென்றான் விரைந்து. (சசு)

ஈறு வரினு மிறையோன்முன் யானடையு
மாறு தெரிவித் தருளுகென—வேறுமுக
மேயபிரா னன்னவனை மேலைவாய் தன்னெறியே
போயடைதி யென்றான் புரிந்து. (சஎ)

அன்று னடிதாழ்ந் தருள்விடைகொண் டங்கசவேள்
மின்று நுடங்குமிடை மெல்லியலோ—டுன்று
வருநதவிடங் கண்டத் தறிகுறியா வைத்தோ
னிருந்தவிடங் கண்டனன்வே ளேய்ந்து. (சஅ)

புங்கவர்தம் போதனையாற் போர்புரிவான் போற்றுதிறற்
சிங்கமதன் மேற்செல் சிறுநரிபோ—லங்கசவே
ளேறுபூத் தோக்கு நெருப்பனைய தேவையுற்று
றூறுபூத் தோவ வுயிர். (சகூ)

கண்டங் கரியவனைக் கண்டளவில் வல்லேறு
கண்ட களிறென்னக் கால்சாய்ந்து—கண்டனிவீர்
வார வுடல்பனிப்ப வாய்வெரீஇ வில்லெறிஇ
மாரவேள் வீழ்ந்தான் மருண்டு. (ருo)

அருகிருந்த தேவி யவனை யெடுத்து
முருகிருந்த நீரான் முகத்திற்—குருகிருந்த
கையிற் றெளிப்பக் கனுக்கண் டெழுபவன்போற்
பைய வெழுந்தான் பனித்து. (ருக)

பொங்கரவம் பூண்ட புனிதற் பொருகியென்றே
பங்கயன்மா லாதியராம் பண்ணவர்க—டங்களுறு
நீங்ககல விங்கனுய்த்தார் தீவினையேற் கிறுவந்த
தீங்கதனுக் கையமிலை. (ருஉ)

எண்டருசீ ரேய்ந்த விறையோ னிருந்தநிலை
கண்டளவி லாவி கழனிலையேன்—கொண்ட
கருப்புவில்லா மூவர் கருதுபுரஞ் செற்ற
பொருப்புவில்லான் றன்னைப் பொரும். (ருங)

*வன்பார் மருத்தின்முன் மன்றீப நிற்பதுண்டோ
துன்பா மதிபோற் றுயர்தேவ—ரன்பா
மனத்தமர்வான் மூன்றுய்த்தார் மாதேவ னோக்கா
மனற்றழலில் வீவனென்று ளுங்கு. (ருச)

இனையபல வெண்ணியெழுந்தே ரிரதி
தனையக லாதுசெல்ச் சீற்றும்—புனித
வொருசார்போய் வெம்போ ருளுற்றுவகை தேர்ந்தான்
வருசார்பு முன்னு மதன். (ருரு)

துங்க மலரோன் சுடர்வைச் சிரமேந்தும்
புங்கவர்கோ னாதி புலவரெலா—மங்கசவே
ளாரிருந்தார் மன்னே டமர்விளைத்தல் காணியவோர்
சாரிருந்தார் போற்றெறடுத்துத் தாம். (ருசு)

கன்னற் சிலைகுனியாக் காமாரி நாணேற்று
மன்னற் கொழுங்கண் மலர்மாலம்—பின்னிற்
றிரிபுரத்தை வென்ற சிவனு மவன்மேல்
விரிபுறத்தி லெய்தனன்வெவ் வேள். (ருஎ)

விட்டமலர்க் கோலரன்மேல் வேகமாய்ப் போயுடலிற்
பட்டளவிற் றீவண்ணன் பாலமுறுங்—கட்டழலி
லங்குமதன் மெய்பொடியா யாயதே மேயதுசீர்
பொங்கு வரையிற் புகை. (ருஅ)

பானிறங்கொண் மாயோன் பயோததியி லார்கடவா
னீனிறங்கொண் டாங்கு நெடுங்கயிலை—தேனமர்பூங்
கோலமதன் மாயக் கொதித்தெழுந்த தீப்புகையா
னீலமலை யாயதே நேர்ந்து. (ருகூ)

அங்கசவே ளாக மனல்படவங் கைலைக்கண்
பொங்குபுகை தீவிடம்போற் போர்த்திடமால்—பங்கயன்முற்
றேவரயர் வெய்தநந்தி சித்தசன்பா டாயினனென்
றேவருமே வச்சொல்வா னீது. (சுo)

உன்னுணர்வின் மிக்கீ ருமக்கிதுசொல் வேனிறையோன்
றுன்னுதற்கட் டீமதனைச் சுட்டதன்று—முன்னவனை
யெய்வனென வன்னு னினைதுணிவிற் கூறிவந்த
செய்கையே சுட்டவம்மா சேர்ந்து. (சுக)

ஆண்டகையா மெங்கோனை யங்காதி தன்கணவன்
மாண்ட வியுனடி வயிறலைத்து—வேண்ட
மருவாளி யானை மழுவாளி நேர்ந்து
தருவா னருளினென்றான் றான். (சுஉ)

திருநந்தி தேவரின்ன செப்பவன்னோர் கேளாப்
பொருவி லருளோக்கிப் போற்றி—மருவினர்காண்
சொல்லா ரணமுணரான் ஞான்மைநிலை போலிருந்தா
னெல்லாரு மேத்த வினிது. (௬௩)

போது மலர்தூய்ப் பொடியாம் வரற்கிரங்கி
மாது வயிறலைந்து வன்சுழல்கான்—மோதக்
கொழுகொம் பொடிபூங் கொடிபோல் விழுந்தே
யழுகின் றனள்புலம்பி யாங்கு. (௬௪)

என்னபவஞ் செய்தனனோ வின்னலெவர்க் காற்றினனோ
முன்னைவினை தான்சூழ்ந்து மூண்டதுவோ—வின்னபரி
சென்றறியே னென்கணவா வென்செய்கே னின்னொடியான்
பொன்றிலனே யன்றிலினம் போல். (௬௫)

புன்முறுவல் கொண்முகமும் பொன்மலைநேர் திண்புயமு
முன்மணியா ரந்துயலு மொண்மார்பு—மன்முதல்வ
னென்றுனு தேற்றெறிந்த வேர்வடிவு மென்கணவா
வென்றுநான் காண்பே னினி. (௬௬)

ஐயம்பாற் புண்பட் டழுங்கயன்முற் றேவரெலாம்
பொய்யன்பு காட்டிப் புரவலநின்—செய்யகழை
வில்லாமற் கொன்றார் விளம்பிறைபா லேவிநினைக்
கொல்லாமற் கொன்றார் குறித்து. (௬௭)

ஐங்கணைகட் காற்று தலமந் தயர்ந்துழலும்
பங்கயன்மால் வான்கோ பதிமுதலாம்—புங்கவர்போ
லுண்ணினைவார்க் கின்ப முவந்தளிக்கு மீசனையு
மெண்ணினைவா ரிக்குவில்லோ யிங்கு. (௬௮)

தீபத்தில் வீழ்பதங்கந் தீந்ததுபோற் செங்கழையாஞ்
சாபத்தி லைவகைய சாயகங்கோத்—தாபத்தான்
பின்கணவா விட்டவான் மேல்விடுத்தே நீறானு
யென்கணவா வென்செய்கேன் யான். (௬௯)

செந்தழலி னீறாந் திருமகநின் போலாது
கொந்தழலில் வீழ்பூங் கொடிபோன்று—வெந்துயரா
மார்கின்றே னூர்கின்றே னந்தோநின் பால்வந்து
சேர்கின்றே னென்றினைந்தா ளுர்ந்து. (௭0)

காமதகனப் படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௫௮௫.

---

# மோன நீங்கு படலம்.

இவ்வா றிரதி யிரங்கவெங்கோ னெண்யோகத்
தவ்வா றணமதனீ றானதுகண்—டெவ்வா
றினித்துயர்மா னீங்குவதென் றேங்கியயர் வுற்றார்
தனித்துயர்மா லாதியும்பர் தாம். (௧)

மையார் மணிமிடற்றோன் மாதை மணந்தருள்வா
னையார் பகழியனை யங்குவிட்டோ—மெய்யா
வவன்மடிந்தான் முன்போ லரன்யோ கிருந்தா
னெவன்புரிவோ மென்றுழல்வா ரிங்கு. (௨)

வேத்திரததா னந்தி விலக்குமுன்றி னின்றறைநந்
தோத்திரத்தாற் றீர்க்குமிறை துன்பெனவெண்—ணேத்திரத்தான்
முன்னானை காந்தோன் முதற்றேவ ரெல்லாந்தா
யன்னானை யேத்துவா ராங்கு. (௩)

வண்டோட் டிதழியணி மார்பவடி யார்துயரங்
கண்டோட்டு மின்பக் கருணைவைப்பே—வெண்டோட்டுக
காதரா விந்துவொடு காதரா வேணிக்கங்
காதரா காவாய் கனிந்து. (௪)

அடியில் விழுமதியை யஞ்சலெனக் கங்கை
முடியி லணிகருணை மூர்த்தி—படியினினைத்
தஞ்சமெனச் சார்ந்தோந் தனயருக்குத் தாதையன்றி
யுஞ்சவகை யுண்டோ வுரை. (௫)

எல்லா மறிந்து மிறையு மறியான்போல்
வல்லானீ மோன வடிவுற்றால்—வில்லாரும்
பூதரவார் வில்லிற் புரம்பொடித்த புண்ணியனே
யாதரவா ரெங்கட் கறை (௬)

கொதித்துவரு நஞ்சங் குடித்தெம் முயிரைக்
கதித்துவரு வண்ணமன்று காத்தோய்—விதித்துவரு
வன்மாவைக் கொன்றாள் வகைபோ லிகற்சூர
பன்மாவைக் கொன்றாள் பரிந்து. (௭)

என்றயன்மா லாதி யிமையோ ரழலாசகி
நொன்றமனங் கண்ணீ ருகத்துதிப்ப—வன்றிறலார்
தந்தியுரி போர்த்தோன் றயைகூர்ந் தகத்தின்க
ணந்திதனை யெண்ணினா னன்கு (௮)

தேனோ ரிதழியனாட் செந்தா மரைவணங்கி
யானோர் முகத்தா னனுக்கணிற்ப—வானோரை
நம்முன் கொணர்தியென்றா ணந்தியடி தாழ்ந்தன்னா
னம்முன் கடையணைந்தா னங்கு. (௯)

அங்க ணடைந்த வருணந்தி தேவன்றாழ்
செங்கண்மா லாதியீர் தீர்த்தநின்ன—னுங்கணன்பா
லம்மினீர் வேணி யரன்ற னழைக்கின்றான்
வம்மினீ ரென்றான் மகிழ்ந்து. (௧0)

அன்னவுரை கேட்டளவி லானந்த முற்றயன்மான்
முன்னமரா ரெல்லா முனிவன்றன—சந்நிதியிற்
பந்தியினங் கைகூப்பிப் பண்பினுற வங்கவரை
நந்தியங்கோன் கொண்டெய்ததா னன்கு. (௧௧)

கண்டங் கரியவனைக் கண்டளவிற் பேரன்பு
கொண்டங் கரியவன்முற் கோதலத்தோர்—பண்டகு
கினிய துதிக ளெடுத்துரைத்தா ருள்ளங்
கனிய வரனா கனிந்து. (௧௨)

வணங்கு மிமையோரை மாதேவ னோக்கி
யுணங்குநெஞ்சீர் நம்விருப்பு முற்ற—வணங்குமென் னென்
றாரருளிற் கேட்பவெஞ்சூ ராற்றுமிடர் நின்னையன்றி
யாரருளிற் றீர்ப்பா ரெமக்கு. (௧௩)

ஆயகொடுஞ் சூரன்ற னாருயிரை நீக்கவொரு
சேயருள்வான் மன்னிமயஞ் சேர்ந்துநின்ற—டாயும்
வணம்புரிவி னோற்கு மடவாளை மேவி
மணம்புரிதல் வேண்டு மகிழ்ந்து. (௧௪)

என்றமரர் கூறி யிறைஞ்சமின்னை நம்பொருட்டு
மன்றலயர்ந் தும்வருத்த மாய்ததருள்வ—நன்றிங்
கினியா வருமே யினிதேகு கென்றான்
றனியா மலைவில்லி தான். (௧௫)

பொங்கரவம் பூண்டோன் புகலவிது தாழ்ந்திறைஞ்சிச்
செங்கரவம் போருகக்கட் சீமானும்—பங்கயனுஞ்
சாருவின்க ணுற்றாருங் தாமமெனத் தாழருவி
மேருவின்க ணுற்றார் விரைந்து. (௧௬)

அஞ்ஞான் றிரதிபணிந் தங்கசன்மேற் சூற்றமுண்டோ
மைஞ்ஞான்ற கண்டத்து மாதேவா—வுய்ஞ்ஞான்
றளித்தருள்வான் றன்புணர்ப்பா லாவியிழந் தானை
யளித்தருள்வா யென்றா ளழுது. (௧௭)

இமயத் திறைபெற்ற வேந்திழையை யந்தச்
சிமயத்தில் வந்துமணஞ் செய்பு—மமயத்தி
னின்கேள் வனையு நினைக்களிப்போம் போதியென்றா
னின்கே ளிலாத விறை. (௧௮)

அணங்கிற் சிறந்தாதி யன்பிற் பரனை
வணங்கிவிடை பெற்றுமணியின் — வணங்கிளரும்
பொன்னா ரிமயப் பொருப்பின்கட் சென்றானை
யுன்னா விருந்தா னுளத்து. (௧௯)

பயமென் மொழியாள் பனிவரையின் மேவ
வயர்வுற் றழுங்கு மமரர் — துயரம்
தணப்பவுமுட் கார்புரம்வெல் சம்புவுமை மாதை
மணப்பவுமுட் கொண்டான் மகிழ்ந்து. (௨௦)

அங்கண் சனகன்முன் னந்தணரை நோக்கிநீர்
தூங்கமுறு மோனநிலை சொல்வரையன் — றிங்கியாங்
காட்டியவா வந்நிலையிற் காட்சியுற நின்மினென்றான்
கோட்டியவிற் குன்றுடைய கோ. (௨௧)

அந்நால் வருமரனை யன்பிற் றுதித்தலுமே
யின்னால் சடைமுடியோன் மேவுநிட்டை — தன்னானீர்
மேற்றிகழு மெம்பதமே மேவுவீ ரென்றருளிற்
சாற்றியுப்த்தா னன்னவரைத் தான். (௨௨)

மோன நீங்கு படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௬௦௭.

---

## தவங்காண் படலம்.

முனிவராங் கேகுதலு மூவா முதல்வன்
பனிவரையி னேற்கும் பரையின் — றனியன்புங்
காதலுமே யார்க்குமுறக் காட்டிடுவான் சோதனையிற்
போதலுமேற் கொண்டான் புரிந்து. (௧)

திவருடைய னஞ்சிசையன் றாநீற்று மெய்ய
னவிர்நூலன் குண்டிகைசே ரத்தன் — கவிகையனீள்
கோலன் மறைமுதியோர் கோலங் கொடுபோனான்
சீலனுமை நோற்குஞ் சிலம்பு. (௨)

தாய்தவஞ்செய் சாலை தளர்நடையிற் சாரவன்னான்
வேய்புரைதோட் காவனல்லார் மேவருமிவ் — வாய்முதியீர்
வந்தவா றென்னென்றார் மாதுதவ நாடிவந்தே
னந்தவா வேரடென்றா னன்கு. (௩)

அதுகேட் டினிதென் றணங்கினிடஞ் சில்லோர்
மூதுமறையோன் றன்மை மொழிய—விதுமுகத்தா
ளொன்றமுதி யோராயி னுய்க்குதிரிங் கென்னவுந்தார்
துன்றமுதி னல்லார் தொழுது. (ச)

எய்துமிவ ரெங்கைக் கினியா ரெனவன்பின்
மைதிகழ்சேற் கண்ணி வணங்கவந்த—வைதிகர்க்கு
மெய்த்துணைவி யாய விசயைதவி சிட்டாளோ
றெய்த்துணைவில் லீசைநின்று ளேய்ந்து. (ரு)

அங்கமர்ந்தார் வருதோ டயனின் றவட்பாரா
வங்கமெலி வெய்த வருந்தவநீ—யங்கட்
புலனுதி யொன்றப் புரிவதெதற் கென்று
னிலனுதி யானோ னினைந்து. (சு)

ஆதியந்த மில்லா னறையமலை மான்விசயை
மாதின் முகநோக்கி மற்றவற்குக்—கோதில்
விடைதருக வென்ன விழியா னவின்று
ளிடையிலவள் சொல்வா ளெடுத்து. (எ)

இன்பா ருயிர்க்கருளு மீசன் மணம்புரிந்து
மன்பா லிருத்தினன்கொள் வானெனவே—வன்பாற்
றகைசெய் தவமிழைத்தாள் சங்கரிதா னென்று
ணகைசெய் தருள்வா னயந்து. (அ)

திவடளவ ளுடையனுந் தேடரிய பெம்மா
னிவடயத்திற் கெய்திடினு மெய்து—மவனுவப்பின்
மன்னவளை மேவி வரையுமோ மாதறியா
தின்னதவஞ் செய்திட்டா ளிங்கு. (கூ)

இன்னலுற நோற்கு மிவட்கித் துணையரும்பே
றென்ன கிடைத்த லெளிதாமோ—நன்ன
ருடல்வருந்த நோற்றெ றுமைக்கித் தவந்தான்
விடல்கடனென் றுன்மறையோர் வேந்து. (௧0)

இன்னமொழி கேட்டலுமே யெம்பிராற் கன்பரிவ
ரென்னவிருந் தேனறியே னென்றயர்வுற்—றன்னகத்திற்
சீற்றமுள நாணீக்கிச் சிந்தை பொருதுசில
மாற்றமொழி கின்றனள்கன் மாது. (கக)

அழிவிலனென் வேட்கைக் கருளிலனே யின்னங்
கழியவரு நோன்பிழைத்துக் காய—மழிவதன்றி
யித்தவம்வி டேனு னிளைமுதுமை யானவின்றாய்
பித்தனோ நீயென்றாள் பெண். (கஉ)

அண்ட மனைத்து மளித்தா ளவைசொலமைக்
கண்ட மறைத்தோன் கருத்தொன்று—கொண்டதன்மேன்
மாதுநீ வெஃகும் வாணிலைமை யாய்ந்துசில
வோதுகின்றேன் கேட்டியென்றோ னுற்று. (கரு)

ஆடையுன்றோ லூணஞ் சணியேன் புகைபரியோர்
மாடுண் கலமோடு மாலைசிர மாடிமிடங்
காடுபடை பூதங் கமழ்சாந்த நீறுநீ
நாடு கடவுளுக்கா நன்கு. (கசு)

தாய்தந்தை கேளுருவஞ் சார்குணமி லன்னவனுக்
கேய்வளமுண் டின்ன வெவையுமே—தூய்மையுற
நின்னவாக் கொள்ளவோ நீடுதவ மாற்றினைகொன்
மன்னன் மகளே மகிழ்ந்து. (கஎ)

புரமெரித்தோ னின்ன புகலவுவை கேட்டுக்
கரமலராற் காதுபொத்திக் கண்ணு—மாறு ம
ோதி யிரங்கி யுறுசினங்கொண் டேயுழந்தாள்
கோதில் வரைப்பூவ கொடி. (கஅ)

மன்னந் தனைகேட்டி மாதேவன் றன்னிடத்திற்
றன்னமுமன் டன்மனத்திற் சார்ந்ததிலை—மன்னுபுதர்
வேடனீள் புட்கவர்வான் மேவுமியல் போலுமே
வேடநீ கொண்ட விதம். (கஎ)

அன்பின்றித் தக்க னரனை யிழித்துநின்போல்
வன்பி னுரைத்ததுவு மற்றவன்பின்—றன்பினனி
மாய்ந்ததுவுங் கேட்டிலையோ மாதே வனையிகழ்ந்தா
யாயந்ததிலை யோமறைக ளாண்டு. (கஅ)

எல்லா மறைபு மியம்பியும்மச் சார்புநில்லார்
பொல்லா வொழுக்கமே பூண்டுமலை—வில்லான்
றனையிகழ்ந்து முன்மறையோர் தாம்பெற்ற சாப
நினையுமயக் காதோநேர் நின்று. (கக)

மறைமுறையே வேடமுற்று மாபதியை நிந்தித்
தறைபவருண் டோவுலகி லந்தோ—வறைநினைப்போ
தீய ரவுணர் திறத்து மிலையென்று
நேயகத் தார்பைந் தொடி. (உ0)

மின்புரையும் வேணி விமலனைநீ நிந்தித்த
வன்புரையெல் லாநோக்கின் மன்னுயிர்க்க—ணன்புடைமை
பூண்டகையிற் கொண்ட புகழ்ச்சியே யன்றிமுக்க
ணண்டகையின் மாண்பறிகா பார். (உக)

வேதன் முதலா விளம்பிமையோ ரேத்தவெல்லாம்
போதவளித் தாளிறைமை பூண்டருளு—நாதன்று
னிச்சைவெறுப் பின்றி யியல்கருணை செய்திறங்காண்
கொச்சையவா நீயிகழ்ந்த கூற்று. (உஉ)

இன்னமறை யாதிசொலு மித்தகையான் றேர்தெளிவார்
மன்னிறைமை'யென்னுநின்பால் வாதிக்கிற்—பின்னகமாம்
பொய்ப்படிவத் தோடும் புறத்தினீ போதியென்றாண்
மைப்படியுங் கண்ணாள் வலிந்து. (உ௩)

அங்கனைசொற் கேளா வணங்கேயிங் குன்றிறத்திற்
பொங்கருளிற் போந்தவெனைப் போதியென்று—யிங்கு
வரைந்திடற்கொவ் வாத மறைச்சடங்கி னின்னை
வரைந்திடற்கா மென்றான் வரன். (உ௪)

மறைமுதல்வன் வாய்மலர்ந்த வாசகத்தைக் கேளா
விறைவிசெவி பொத்தியயர் வெய்தி—நிறைதுயரின்
நீங்கின் முதியன் செலான்செல்வன் யானெனவோர்
பாங்கி னடைந்தாள் பரை. (உ௫)

சென்றிடுமா வெற்பினமகை செய்கையுணர்ந் தெம்பெருமான்
றுன்றிடுமார் வத்தொடும்பர் சூழவெள்ளிக்—குன்றமதே
போன்றிலகு செங்கட் பொருமால் விடையின்மேற்
றோன்றியருள் வானமைமென் றோட்கு. (உ௬)

தூயவன்விண் மீத்தோன்றத் தோகைகண் டுண்ணடுங்கி
நேயமொடு போற்றி நிமலநின்றன்—மாயை
யறியே னினையிகழ்ந்தே னையபுல னில்லாச்
சிறியேன் பொறுத்தியென்று டேர்ந்து. (உஎ)

நன்னலநங் காய்கே ணமதிடத்தன் பின்முனநீ
சொன்னவெலா மீண்டுத் துதியெமக்கா—மந்நவையுந்
துய்யவா நோன்பாற் றயருநே ஞானமணஞ்
செய்ய வருதுமென்றான் றே. (உஅ)

இங்கத்தன் கூறிமறைந் தேகுதலு முண்மகிழ்ச்சி
பொங்கத்தன் மன்னையுமை போற்றியங்கண்—டங்குநிலை
மல்வற் புறுதோண் மருவுபனி மால்வரையின்
செல்வற் குரைத்தார் சிலர். (உ௯)

வள்ளலெங்கோ மானங்கு வந்தருளிச் செய்கையுணர்ந்
துள்ளவுயர் வெல்லா மொழிந்திமவான்—கள்ளமறை
யன்னகா மாதுமையை யார்வமுறப் பல்வளங்கூர்
தன்னகரங் கொண்டேய்த்தான் றான். (௩௦)

தவங்காண் பீடலம் முற்றும்.

ஆ திருவெண்பா ௬௩௧

# மணம்பேசு படலம்.

பொன்னசல மாது புரிதவங்கண் டெம்பெருமா
னின்னருள்செய் தங்கயிலைக் கேகியபி—னுன்னமதின்
முன்னினு னேழ்மா முனிவரையு மன்னவர்தா
மன்னினு ரச்சமொடு வந்து. (௧)

ஆதி பகவ னடிதாழ்ந் தெழுமுனிவர்
போதி லயன்மால் புரந்தரன்முன்—னோதிமையோ
ரேவலிடு மென்றென் றெதிர்நோக்க நின்னையெம்மைத்
தேவ நினைந்தையற்றேறுந் தீது. (௨)

இருடிகள்பல் லாறேத்தி யெம்மையுன்ன லென்கொ
லிருடியங்குங் கண்ட வியம்பி—யருடியென
வம்முனிவர் சொற்கேட் டறைகின்ற னன்புடையார்
தம்முனிவர் சேவுகைக்குஞ் சம்பு. (௩)

இமவா னிடமேகி யேயெமக்கிவ் வைக
றமவான் குழலியுமை தன்னை—யமர்வதுவை
யம்மி னுதவுவா னன்பின் வினவிவல்லே
வம்மினென்று னம்முன் மகிழ்ந்து. (௪)

நாதனுரை கேளா நலமெனவே தாழ்ந்தேகிப்
போத முனிவோர் பொருப்பிமய—மீதிறைமு
னண்ணவன்று னில்லோ டடைவினெதிர் கொண்டிறைஞ்சி
யெண்ணமுற வர்ச்சித்தா னேய்ந்து. (௫)

ஒப்பருநுந் தாளீண் டுறையவிம யம்மேருச்
செப்பருமா வெற்பினுமே சீர்த்ததன்றே—வெப்பமிகத்
துன்பாவ முற்றுந் தொலைந்தனவே மாதவத்தி
ரென்பானீர் வந்ததென்கொ லின்று. (௬)

அதுகேட் டிறைவ வகிலநல்கு மாதை
வதுவைபுரி வானினைந்து மத்த—விதுமுடியா
னுன்றோ ரைப்பதற்கே யுய்த்தா னெமையென்றார்
பொன்றோடொப் பென்பார் புரிந்து. (எ)

நன்னியமங் கொண்முனிவீர் நாடு முயிர்க்குயிராய்
மன்னிறைவ ஞர்க்கு மணமுறையிற்—கன்னி
யுமையணங்கு தன்னை யுவந்தளிப்பே னென்று
னிமைய வரைமே விறை. (அ)

மேனையோர் வார்த்தைசொல்வண் மேனாள் விதியின்சேய்
தானையோர் மாதைநல்கித் தந்தனன்பி—னேனையோர்
தாநகைக்க வன்னான் றலைதுமித்தா னென்பாது
மேனகைக்க வுள்ளஞ்சு மே. (கூ)

என்றமொழி கேளா வெழுமுனிவ ரீர்வளைநெஞ்
சொன்றமொழி வாரிறையோ னுற்றசெய—னன்றுநீ
தேர்ந்திலையாற் றக்கனிகழ் தீவினையாற் சென்னிகொண்டான்
பேர்ந்திலையால் வேறு பிழை. (கo)

அன்பர்க் கருள்வதூஉ மன்பின்றித் தீயசெயும்
வன்பர்க்குத் தண்டம் வழங்குவதூஉ—மன்செய்கை
முந்தை விதியின் முறைபிறழான் வேறுநீ
சிந்தைசெயே லென்றார் தெரிந்து. (கக)

முனிவோர் மொழிகேட்டு முன்னிமவான் வாய்மை
யெனலோடு மேனைமன மேங்கிச்—சினவிடையோன்
செய்கையுணரா துரைத்தேன் றேவர் பொறுக்கவென்றாள்
கைகுவித்து நெஞ்சங் கனிந்து. (கஉ)

தாழ்ந்தின்ன மேனைசொலத் தாபதர்க ளன்னவள்பா
லாழ்ந்தவன்பி னோடே யருள்செயவிண்—போழ்ந்தமலை
காவலன்மின் மாற்றங் கருதன்மின் றேவைமண
மேவவரச் சொன்மினென்றான் வேட்டு. (கஙூ)

கனமகிழ்வி னரிமயக் காவலன்சொற் கேளா
மனமகிழ்வி னோடெழுவர் வாழ்த்தி—யணகமுறு
மங்கையிலை மேவி யவன்ற டொழுதிறையை
யிங்கிருகே ளென்று கினிது. (கச)

மணவினையின் மன்னிசைவு மாற்றமுரை செய்யத்
தணவிலருள் செய்து தனியெண்—குணவிறையோன்
பொன்னார் சடைமுனிவிர் போகுதிர்நீ ரென்னத்தாழ்ந்
தன்னார் பதஞ்சென்றா ராங்கு. (கரு)

மணம்பேசுபடலம் முற்றும்.

ஆக திருவெண்பா சுறு

---

# வரைபுனை படலம்.

---

கன்னியுமை மாதுதவங் கண்டிறைவ னின்னையா
மன்னி மணத்துமென்ற மாற்றமொடு—நன்னியம
விண்முனிவர்க் கொண்டுவினாய் விட்டதூஉம் வேந்துநினைந்
துண்மகிழ்வு கொண்டா னுகந்து. (க)

ஆருயிரெல் லாங்கலந்த வத்தருக்குத் தன்மகளை
வாரமணஞ் செய்திறத்தின் மாண்புமதித்—தேரமரர்
கம்மியனை யன்னவன்றன் கைதொழுது செய்பணியா
தம்மநவில் கென்றா னணைந்து. (உ)

என்னையா ளத்தருக்கி யான்றவத்தாற் பெற்றவனை
தன்னையளிப் பேணித் தனிவரைக்கண்—முன்னைக்
கடிநகர மெல்லாங் கவின்சிறப்ப நன்றாற்
படிபுனைதி யென்றான் பரிந்து. (௩)

மன்னனுரை கேளா மகிழ்கொண்டு தேவதச்சன்
பொன்னகரம் பொற்பிற் புகர்கர—மென்னவற்றுக்
காண்போர் நவிலக் கவின்குடிகொண் டோங்கவே
மாண்போர் நகர்புனைவான் வாய்ந்து (௪)

வானிலைகொள் கோபுரமு மன்றமொடு சூளிகையு
மாநிலைசெய் தேர்நிரு த்து மண்டபமு—மானபல
வூடுமலர்ப் பந்தரவை யுன்று வணங்தோறு
பீடுபெறச் செய்தான் பெரிது. (ரு)

கதலிகைநீள் கேதனங்கள் காவணமேற் றந்து
ளிரமணிசெய் கம்பலமாங் கிட்டற்—புதமன்
னிரைத்தோமல் வாழைகந்தி நீள்குலையி னூட்டி
விரைத்தோ ரணம்புனைந்தான் விண். (சு)

பொன்னகர மேயவரும் புட்பகவி மானத்தோன்
றன்னகர மேயவருந் தாங்கணுறி—னிந்நகர
மன்னகர மென்ன வழுத்தவனைந் தானிமவா
னன்னகரந் தன்னை நயந்து. (எ)

ஓரயுத யோசனையி லொண்புரிசை செய்ததனுட்
கூடெழில்கொள் கோயில் குயிற்றிமலர்—நீர
காநான் குடையான் கயிலை யெனக்கோ
புரநான் கமைத்தான் புரிந்து. (அ)

அன்னதனுப் பண்வதுவை யாற்றுமணிச் சாலையொன்று
பொன்னதனுன் மேவப் புரிந்ததன்க—ணன்னறுஞ்சந்
தாதி விரைநீ ரணிநீவிப் பன்மலர்தூ
யாதனமிட் டானமரர்க் காங்கு. (கூ)

போதிலய ஞணைப் புகரி னவமணியில்
வேதிகைவெவ் வேறு விசித்தனன்பின்—கோதிலெழிற்
கண்ணடிகளாதி கவின்கொள்வ தூக்கினுன்
விண்ணவர்கண் கொள்ள விருந்து. (க௦)

வாஞேர் முனிவர் மருவுந் திருவன்ஞெ
ரூஞெ ருருவி னுனுற்றியே—தேஞேர்பூந்
தார்கவரி யேர்வீணை தாங்கிப் பணிசெய்வார்
நேர்தரவே வைத்தா னிரைத்து. (கக)

அமரவேற் கண்ணை யபிநயங்கள் காட்ட
வமரமட வாரினமைத் தன்ஞு—ரமரவே
தண்ணுமைமுன் னற்கருவி தாங்கவெண்ணிப் பாவையர்க்குங்
கண்ணுவகை கண்டான் களித்து. (கஉ)

பரிசா தகமன்னம் பஞ்சவன்னக் கிள்ளை
பரிசார் கரிமுதல பல்ல—பரிசாப்
பணியின் றிறங்காண் பவர்கண் கவர
மணியின் வனைந்தான் மயன். (கங)

அரியிந் திரனுதி யார்க்கு மரிதா
யரியிந் திரநீலத் தாரு—மரியணையொன்
றேவ மிலாவெம் மிறைவ னிறைவியொடு
மேவ விதித்தான் வியந்து. (கச)

மன்குண்டம் வேதி வகைமண் டலம்வகுத்துப்
பன்பண்டம் வேள்விசெய் பாற்படுத்தி—யுன்கடவு
ளெண்மங் கலமு மிருத்தியெண்ணின் மண்டபங்கண்
மண்மணியிற் கண்டான் மருங்கு. (கரு)

காவி மலருங் கயமுற் பலவோ
மாவியலார் பூம்பொய்கை வாவியொடு—மேவு
மரகதமின் ஞர்பளிங்கு வைரமணிப் பொன்ஞல்
வரமன் றடம்வகுத்தான் மன். (கசு)

கற்பகஞ்சந் தாரங் கதலிகந்தி மாவருக்கை
பொற்பமரும் புன்னைமுதற் பொன்மணியா—லற்பினைமைத்
தன்னவைக ணற்பலன்க ளங்குத் தரச்செய்தான்
மின்னவைமுன் னிற்கு மயன். (கஎ)

இவ்வண்ண மெண்ணிலவே யெண்ணருஞ்சீர் கண்ணுமய
னவ்வண்ண லுங்கண் டதிசயிப்பச்—செவ்விதினு
ஞன்னி யமைத்தவெலா மொவ்வொன்றுங் கண்டுவந்தான்
மன்னிமய மால்வரையின் மன். (கஅ)

செந்திருமால் பங்கயன்முற் றேவர் தொகுதியகல்
பந்த முனிவோர் பகுதியொடு—முந்துமவர்
மாதரையு மாது மணங்காணப் போந்திடவே
தூதரையங் கங்குமுய்த்தான் சூழ்ந்து. (கக)

ஒற்றருரை கேளா வுவணத்தோ ஞதியும்பர்
நற்றவரெல் லாங்கயிலை நாயகற்ருழ்—வுற்றுக்
கருதுமென்றுர் சூடுமந்தக் கண்ணுதலோ ஞேடு
வருதுமென்று ருள்ள மகிழ்ந்து. (உ0)

கொற்றவைமுன் ஞைசக் குழீஇயமா காளிகளுஞ்
சுற்று மெழுநதியுஞ் தொல்லிமய—முற்றுமையை
மன்னிஞர் மாவாணி மன்னுசசி யாமுனிவர்
பன்னியரும் வந்தார் பரிந்து. (உக)

மலைமகண்மெய் நோன்பின் வருமெலிவு தோற்று
தலைமகளு மாரணனு லாய்ந்த—கலைமகளும்
பாதாதி கேசமுற்றும் பல்பணிகள் பூட்டிமுன்போ
லோதாதி யைமறைத்தா ருற்று. (உஉ)

சூழ்தருமா மேருமுதற் சுற்றமுமேழ் மாக்கடலும்
வீழ்தருபைக் காசுரக வேந்தருமா—காழ்மதத்த
மாதிரத்த யானைகளும் மன்பிறவும் வந்தனவே
யாதரத்தி ஞேடே யவண். (உஙு)

இக்காலை தன்னி லிமகிரியாள் கோமானுந்
தக்கார்க ளாய தமரோடு—மிக்கான
வெள்ளிவரைமேவ வியனத்தி கொண்டெய்ப்ப
வொள்ளியன்று டாழ்ந்துரைப்பா னென்று. (உச)

வருகணித நூலோர் வகுத்தமுகூர்த் தஞ்சேர்
தருபங் குனியிற் றனியுத்—தரநாளிற்
கோட்டிடமே வந்தென் குலமகளை யண்ணனீ
வேட்டிடவே வேண்டுமென்றான் வேந்து. (உரு)

அருளுருவ னோக்கி யரசையின்னே யாங்கள்
மருகணங்கள் சூழ வரைமேல்—வருதுமுனம்
போதிநீ யென்றலொடும் பொற்றா ளிணைபோற்றி
யோதிமயஞ் சென்றா னுவந்து. (உசா)

வரைபுனை படலம் முற்றும்.

ஆக திருவெண்பா சுளஅ.

---

# கணங்கள்செல் படலம்.

---

அன்னபோ தங்கயிலை யத்தனந்தி யண்ணலைக்கூய்
நன்னர் மணக்கோல நாடவே—யுன்னு
முருத்திரர்கண் மாலயன்மு னும்பர்த் தருதி
யருத்தியுட னென்றிசைத்தா னங்கு. (க)

துன்பின் பிலானீது சொல்லநந்தி தேவனன்னா
ரன்பின் மணத்தெய்த வங்குனினா—னுன்பினிதோர்ந்
தாய்ந்தார் மணஞ்செ யருள்போற்றிப் பத்திமகிழ்
வாய்ந்தார் கயிலைபடர் வார். (உ)

ஆடியறீக் கட்பாலத் தையான னன்முதலாஞ்
சாடியல்பிற் றோர்ந்த சகத்திரமாங்—கோடி
யுருத்திரிமா சூலத்த ரோடொளிர்கா லாக்னி
யுருத்திரனுங் குற்றா னுவந்து (ங)

கொழுவடவை சூறை குலையவுயிர் வர்க்க
முழுதுஞ் சுழல வுயிர்ப்போ—னெழுபத்
திருகோடி பாரிடங்க ளீண்டிடக்கூர் மாண்ட
னருகோடி வந்தா னவண். (ச)

பாதலத்து வாழ்பவர்கட் பாலர் பெரியர்பல்
கோதினிறத் தார்சோடி கோடிய—ரோதமிலார்
நாட வுருத்திரரா நற்கணத்தோர் கூட்டமோ
டாடகே சன்வந்தா னங்கு. (ரு)

பன்னுந் தொகைநூறு பத்தா யிரகோடி
யென்னுமெறும் சாரதர்க ளீண்டியயன்—முன்னுபல
பத்திரனு மஞ்சப் படுசரப மாம்வீர
பத்திரனங் குற்றான் பரிந்து. (௬)

ஓர்தருமா வண்டமெலா மோரொடியிற் பந்தெனக்கொள்
கூர்திண் குறட்படைகள் கோடிநூ—றார்தரமெய்ச்
செய்யன் கரியனொடு சேர்ந்தளித்த செண்டுறுகை
யையனடைந்தா னவண். (௭)

சாலமலர் மன்றியங்கத் தந்தையரு ளாலவன்றன்
பாலமதிற் றோன்றிப் பகரரிய—வாலறிவு
பண்பி னுணர்த்தும் பதினொ ருருத்திரர்க
ளொண்பிறங்க லுற்றா ருகந்து (௮)

வன்பி னுருத்திரரா மாகணமல் லாதேனை
மன்புவனங் கண்டங்கு மன்னிமன்பா—லன்புறம்வைத்
திட்ட வுருத்திரர்க ளேற்றநெறி சேர்புததி
யட்டகமு தல்வருற்றா ரங்கு. (௯)

மண்ணூறு வாரிமுற்று மன்றுகளி னுற்றார்க்கு
மெண்ணூறு கோடி யெனுங்கணங்கள்—விண்ணூறு
தீர்த்த முடிவைத்துத் திகழ்பவர்முன் னாகவட்ட
மூர்த்திகளங் குற்றார் முனம் (௧௦)

இகனூறு செய்நீறோ டெண்மணிகொண் மெய்யர்
புகனூறு கோடியாம் பூதத்—தொகையோடு
விண்டோ தரனும மேவித் துதித்தெறுழ்கொள்
குண்டோ தரன்படர்ந்தான் குன்று. (௧௧)

ஓரவெண்ணி லண்ட முயிர்த்தொகையெல் லாமழித்துத்
தீரமுன்போ லாக்குந் திறலுள்ள—சாரதர்கள்
கொன்னன்கு நூற்றிரண்டு கோடியர்தம் மோடுசண்ட
கன்னன் பினுகிவந்தான் காண். (௧௨)

ஆட்சிபெறு மானனக்க ளாயிரமீ ராயிரங்கைக்
காட்சிபெறுஞ் செய்ய கவின்மேனி—நீட்சியினர்
பானுகம்ப னூற்றைம் பதுகோடி யோர்சூழப்
பானுகம்பன் சென்றனனப் பால். (௧௩)

தத்தம் புகழ்மதித்தே தற்போதங் கொள்கடவு
ளத்தகை சந்தலையோ டாயுதமும்—பற்றியே
பங்கமில்சீர் மண்கணங்கள் பல்கோடி யோர்மேவச்
சங்குகன்னன் வந்தனனேர் சார். (௧௪)

**கா**ளகண்டன் றண்டி கரன்விச் சுவமாலி
நீளமர்செய் தீரமுள நீலனுமே—யாளிமொய்ம்பின்
வானையடு சேகரத்த னன்பூத ராயகடற்
றானையொடு சார்ந்தனரோர் சார்

**கா**ர்நிறங்கொள் காலனையே காய்ந்திடுமொ சாரதர்கள்
கூர்நூற்று முப்பது கோடியோர்—சார்தரவே
தற்பரன்றா ளேத்துமீ சானனெழிற்கயிலை
வெற்பகத்தில் வந்தான் விழைந்து. (கசு)

**போ**திலயன் மாமகவான் புங்கவர்தி சாபால
ரோதிரவி யாலோன்மீ னெண்கோளேழ்—மாதர்கள்
மாவசுக்கள் வேறுள்ளார் மாமுனிவர் விஞ்சையர்க
ளேவருமங் குற்றா ரினிது. (கஎ)

**தூ**யமறை யாகமங்கள் சொல்லரிய மந்திரங்கண்
மேயபல பூதங்கண் மேவுலக—மாயநகர்
காலமொடு மேனைக் கலைபொருளெல் லாங்கடவுட்
கோலமெய்தி வந்தனவக் குன்று. (கஅ)

**இ**த்திறத்திற் கைலையின்கண் யாவரும்யா வும்வந்த
வத்திறத்தை நோக்கு மருணந்தி—முத்திறத்தார்
தம்மு னிறைஞ்சியன்னார் தன்மைசொல வன்னவரை
நம்முன் கொணர்கென்றா னன்கு. (ககூ)

**ந**ந்திகடை வாயடைந்து நண்ணு முருத்திரர்மா
லிந்திரன்வா னோர்முனிவ ரேவரையு—மந்தி
நிறத்தா னரியணையி னோராந் திருமு
னுறத்தான் விடுத்தா னுவந்து. (உ௦)

**அ**ன்னார் நெருங்குற் றரியணைமேல் வீற்றிருந்து
மொன்னார் புரம்வெல் லொருவனைக்கண்—டன்னாத்
தொடர்ந்தவன்பி னீண்டித் துதிகளெடுத் தோதி
யடர்ந்தணுகி னாரிமையா ரங்கு. (உக)

**மே**வு முருத்திரரை மேவரிய பல்கணத்தைத்
தேவர் முனிவரரைச் சேர்ந்தினரென்—றாவிசையா
நன்றேய் விரற்சுட்டி நாயகர்க்குக் காட்டியே
நின்றேத் தினனந்தி நேர். (உஉ)

**கூ**ர்ணலி னுமத்தோன் கூர்மாண்ட னுடகத்தோன்
வீரபத்தி ரன்முதலா மேவுருத்திரர்—பாரிடத்த
ரேவருநின் றேத்தின ரெம்பெருமான் பான்மிடைந்தே
யோவருமன் புற்றசிந்தை யோடு. (உங)

அப்போ தயன்று ரனணிவா னுன்னியே
யொப்போ துருமுடிமு னொண்கலங்கள்—செப்போர்
கனகமணிப் பீடிகையிற் கையிற் கொடுபோந்
தனகனெதிர் வைத்தறைவா னாய்ந்து. (உச)

அரவடியே முய்யமண் மாற்ற நினைந்தாய்
பரவுநின்மேற் பூண்டமணிப் பாந்தள்—விரவும்
பணியெலா மாற்றிப் பசும்பொற் பணிக
ளணிகென் றறைந்தா னயன். (உரு)

முற்பணியெ லாமையன் முன்னுதிரு வுள்ளமுன்னப்
பொற்பணியா மேவிப் பொலிந்தனவோ—ரற்புதமோ
வோலமிட் டும்ப ருணங்குநிலை யோர்ந்துகட
லாலமமு தாக்கொள் ளரற்கு. (உசு)

போற்றே வருமற் புதமடைந்து கைதொழுவே
கீற்றேய் மதிநுதல்பாற் கிட்டுவா—னேற்றினு
னுன்னித் தலைவற் குணர்த்தி யெழுகின்றான்
மன்னிப் படர மகிழ்ந்து. (உஎ)

கணங்கள் செல்படலம் முற்றும்.

ஆக திருவெண்பா எ0ரு.

---

# திருக்கல்யாணப் படலம்.

---

நந்திசெல முன்னேத்தி நாரதர்முன் னோர்பாடப்
புந்தி மகிழ்ந்தமரர் போற்றவா—விந்தவடி
சால்புடைய குண்டோ தரன்றாண் மிசைவைத்து
மால்விடையி லேறினான் மன். (க)

சின்மயமா மால்விடைமேற் றேவாதி தேவனுற
மன்புடைநின் றாரன்றி மற்றவரு—மன்பினொடு
கண்டுதுணைக் கண்களிப்பக் கார்க்கடலி னார்ப்புமிக
வண்டுதிக ளேத்தினர்முன் வந்து (உ)

ஐந்நூற் றெழுகோடி யாம்பூதத் தானையொடு
மன்னூற் றெழுமன்பின் வந்திறைஞ்சிக்—கொன்னேற்றின்
முன்போ யினன்மா முகத்தவுணன் சாயவன்று
வன்போர் விளைத்திட்ட மன்.

காய்கதிரோன் சோமன் கவிகையுங்கால் சீகரமும்
பாய்திரைமன் சாந்தாற்றி பண்ணவர்கோன்—றூய்மைமென்கால்
செய்வட் டமுமெடுத்தே தேவன் புடைசென்றா
ருய்வகையி னுண்மை யுணர்ந்து. (ச)

பேரி குடமுழாப் பீலிபம்பை சாடியுடைப்
பேரியத டாரிமுதற் பேசுபல—பேரியமே
பாரிடத்தோர் பாணிகொடு பண்போ டியம்பினர்விண்
பாரிடத்தோர் கேட்டிமருள் பாக்கு. (ரு)

முன்னோன்ற னேவலினான் மொய்ம்பா ருருத்திரர்மா
மன்னோ டயனமரர் மாமுனிவ—ரின்னோர்
விரிதேர் விமானமா வீமுதலாந் தத்தம்
பரிமே லிவர்ந்தார் பரிந்து. (சு)

தன்பணிக ளாற்றுந் தலைவருமா பூதருமே
மன்பணிசெ யேனைய மன்கணமு—மன்பருளந்
தாவு கயிலை தணந்தே கினனுலக
மேவு மிமயவரை மேல். (எ)

வார்முரச மாதி வரம்பி லியமுழக்கு
மூர்படையி னார்ப்புமண்ட ரோதைபுமே—யார்கலியின்
மன்னவா னங்கனுற மன்கிளைஞ ரோடெதிர்போய்
மின்னகர்க்குக் கொண்டணைந்தான் வேந்து. (அ)

மின்னகரின் வீதிதொறு மேவு விழாவயரப்
பொன்னனையா ரஞ்சலித்துப் போற்றியே—மன்னரன்ற
னற்புதமா மாவுருக்கண் டன்பினிற்றாழ்ந் தாசையெனு
நற்புணரி யுட்படிந்தார் நன்கு. (கூ)

மின்னா மாதி மிளிர்கலனும் பூந்தொடையும்
பொன்னார் திருவுருவைப் பொத்தியதா—லன்னான்
கழிநலமெல் லாமுற்றக் காண்கிலே மென்பார்
செழிநலமுற் றாரிற் சிலர். (ய)

மால்விடைமே லேறிவரும் வவளனுக்கு நீதியோ
கோல்வளையார் தானைகலன் கோடலென்பார்—சால்வளைவிற்
கோற்கண் கொலைபயின்று கூரருளின் கொள்கைகற்குஞ்
சேற்கண் மடவார் சிலர். (கக)

தவளமதி சூடிவந்து தானைகலன் கொண்டு
முவகையின்றி நானுடனெம் முள்ளுங்—கவர்கள்வன்
முத்தனோ மூவா முதல்வனோ முற்றும்வல்ல
சித்தனோ வென்பார் சிலர். (கஉ)

காளையின் மேலமர்ந்த காளையிந்தக் கோலமொடு
நாளை வருவானோ நம்முனென்பார் — வாளை
மறுவிலுறை யுள்வைத்தன் மானும் வடுக்கட்
சிறுமியர்க டம்மிற் சிலர். (௧௩)

மஞ்சறுகு வேம்படிசின் மஞ்சள் சிறுகடுகு
பஞ்சின் விதைபுன்ல்கொள் பாத்திரமே — கஞ்சமல
ரங்கைதனி லேந்தியே யன்போ டளவிலா
மங்கையர்கள் வந்தார் மகிழ்ந்து. (௧௪)

ஏர்வளையா ரன்பி னெதிர்போந் திறையவனை
யார்வமுற வேத்தி யவர்தொழில்செய் — தார்சிலர்பொ
னம்மணிக் கோடிகங்க ளங்கைக் கொடுவலமா
மும்முறையே சுற்றினார் முன். (௧௫)

ஆயபோ தீச னரியமணச் சாலைநண்ணித்
தூயவிடை நின்றிழியத் தோகையன்னா — ராயமொடு
மேனையன்பா லன்னவன்றாண் மேனையுளத் தோடான்பா
றானைதி னாட்டினா டாழ்ந்து. (௧௬)

ஓது மிறைவனந்தி யுய்த்திடுபொற் பாதுகைக்குட்
பாதமல ரிட்டயன்மால் பால்கைதர — வேதன்
கணக்கோ விலாத கணஞ்சூழ் தரமா
மணக்கோ விலையடைந்தான் வந்து. (௧௭)

சுரர்பரவப் பல்வகைய தூரியமார்ப் பச்சீ
கரவயன்மால் வேண்டக் கணஞ்சூழ் — தரமெல்
லெனப்புகுந்து பொன்னி னியற்றுமணிக கோயில்
வனப்பனைத்துங் கண்டான் வரன். (௧௮)

துன்னு மயன்வகுத்த தூயமல ரோடைகய
மன்றமணி மண்டபங்கண் மற்றுளவொவ் — வொன்றினையு
நன்றுநன்று நந்தியென நற்கையிற் காட்டவன்னான்
சென்றுசென்று கண்டான் சிவன். (௧௯)

இந்நகரின் காட்சி யெலாநோக் கலுமிங்குப்
பொன்னகரம் வந்து பொலிந்ததென்கொ — லென்னவயர்ந்
தாவிகுளங் கேணி யகன்புன னீராடியும்பர்
காவினினன் காடினரங் கண். (௨௦)

முன்னவன்றா னென்ன முனவிந் திரநீல
மின்னு மணித்தவிசில் வீற்றிருந்தான் — மன்னருளால்
வாழயன்மா லாதியரு மாடிவரும் பீடிகையிற்
சூழ விருந்தார் துதித்து. (௨௧)

விமலன் மணங்காண மேலையண்டத் தின்கண்
ணமரெப் புவனத் தருமே—நிமிரத்
துளங்குற் றதுவெந் துயரந் துதைந்து
வளங்கொ ளிமைய வரை. (உஉ)

மின்பான் மணம்வேட்டு மேலைத் தவப்பேற்றி
னன்பா லகிலமெலா மண்மியதால்—மன்பார்தான்
வன்பாற்றாழ் வாக வடபா லுயர்ந்ததே
தென்பாற் பனிமால் சிலம்பு. (உ௩)

தென்பா லுயரத் திகைப்புற் றனர்யாரு
மன்பா லரனேயெம் மத்தவென—முன்பா
லிரங்கநகை செய்திறையோ னேற்றிறையை நோக்கித்
தரங்கமுண்டாற் றந்திடென்றான் றான். (உ௪)

அதுகாலை நந்தி யரன்றா ளிறைஞ்சி
முதுமா தவற்கூவ முன்னங்—கிதமாக
வுற்றா னவற்கொடுபோ யுத்தமன்பா லுய்ப்பவன்றான்
பொற்றாள் பணிந்தான் புரிந்து. (உ௫)

பணிமா தவனையரன் பார்த்துக் குறியோ
யணியிங் கெவரு மமர்ந்து—கணிதென்பார்
சால வுயரச் சராசரமெ லாஙகலக்கந்
தாலமதிற் கொண்டயர்ந்த தாழ்ந்து. (உ௬)

ஆகையான் மாமுனிகே ளன்புடனிக் கோடொரீஇ
யோகையிற்றென் றுடுநண்ணி யொண்சிறைய—தோகை
யமர்பொதிய வெற்பி லமர்திவைய மெல்லாஞ்
சமமாகு மென்றான் சயம்பு. (உ௭)

கீற்று நிலாவெறிக்குங் கேழ்கிளர்செவ் வேணியன்சொன்
மாற்றமுணர்ந் தச்சமுறீஇ மாமுனிவ—னாற்றுங்
குறையொன் றிலாத கொடியேனை யாங்கே
யுறையென் றுரைத்தி யுகந்து. (உ௮)

என்றருறு மாமுனியை யெந்தைபிரா னோக்கிநின்போ
லொன்றுமுனி வோருலகத் துண்டுகொலோ—மன்றனறு
மம்புயனு நின்னைநே ராகா னதனானீ
நம்பெவையு மேமுடித்தி நன்கு. (உ௯)

மான்மா மலரோன் மகபதிநிற் கத்தீயேன்
றான்செய் திடவருள்கூர் தன்மையிதே—றான்செய்
தவமே தவமாந் தனிமணமே காணத்
தவமே வியதெனுளந் தான். (௩௦)

வெந்துயர மேவாமே விண்மலயஞ் சேறியங்கு
நந்தமணக் கோலமது நல்குதுமு—வந்துறுதி
யெம்மையுன்னி யாங்கே யிருத்திசில நாளென்றான்
மும்மைத் தமிழ்க்கு முதல். (கக)

என்னவிவை யீச னியம்ப விசைபுலத்தான்
பொன்னங் கழல்பணிந்து போற்றிசெய்—துன்னலுற்றே
தென்றிசையிற் சென்றான் சிறுமுனிவன் றென்மலயக்
குன்றிசையின் மேவக் குறித்து. (கஉ)

தீவினைநேர் வெற்புவிந்தஞ் சிந்தவில்வ லன்றுணைவா
தாவிகெடக் காவிரிநீத் தத்தோடு—மேவியே
முற்பகல்சென் றாங்கு முனிவான்றென் கோடுபுக்கான்
பொற்புரமேற் போகுமான்போல். (கங)

மலைய மலையின்கண் மாமுனிவன் வைகத்
துலையினிரு பாலுமிகர் தோன்றி—நிலைபெறவே
யன்றுயிர்க ளானோ ரஞ்ஞோரி யீசனையே
மன்றவெடுத் தேத்தினார் வாய்ந்து. (கச)

மன்னனிசை வாலெங்கண் மாதுமையை யைகாப்பக்
பன்னிக் கிராணியடைப் பையேந்த—வுன்னுகங்கை
வெண்கவரி வீசமா வீரிகுடை பற்றமா
வண்கைதர வந்தாண் மகிழ்ந்து. (கரு)

பாரதி முன்பரவப் பார்ப்பதியஞ் சாலைநண்ணி
யாரணனன் கேத்து மடிவணங்கக்—காரணன்றான்
முன்னிவர்மா பீடத்தேர் மொய்ம்பி னிருத்தியெனப்
பன்னி யிருந்தாள் பரிந்து. (கசா)

மணங்கொளனை மண்ணேல வார்குழலி யென்னு
மணங்கை யரனுக் களிக்க—விணங்குமுளா
வேந்தனிசை வான்மேனை மின்பொற் கரகநீர்
சாந்தமல ராதிதந்தா டாழ்ந்து. (கஎ)

திந்தவிம வான்றாழ்ந் தனனிருந்து தேவிபுனல்
சிந்தவான் றாள்விளக்கிச் செய்யநறுஞ்—சந்தமொடு
வாச மலர்புனைந்து மற்றக் கடனாற்றிப்
பூசை புரிந்தான் புரிந்து. (கஅ)

பூதரத்தின் வேந்துமைகைப் போதையான் கைமலர்வைத்
தாதரத்தி னோடே யளித்தனனே—மாதரத்தி
னன்மறைகள் கூறிநன்னீர் நல்கினா னன்னவனை
மண்மருக னாக மதித்து. (கக)

அந்தவமை யந்தன்னி லாடினர்வா னோர்மாதர்
கந்தருவர் கானங் கனிந்திசைத்தார்—முந்திருவ
ரேழிசையாங் கீத மியற்றினர்மற் றோர்மறைக
ளூழினெடுத் தோதினா ருற்று. (௪௰)

அங்கமல மேய வரிவையரு மற்றவரு
மங்கலமாம் பாடலுன் மகிழ்ந்துரைத்தார்—சங்கமுதற்
பல்லியமெல் லாமியம்பிப் பாரிடமே பாரிடந்தா
னில்லெனச்சூழ்ந் தார்த்தா ரினிது. (௪௧)

அப்போ தரசனன்பி னான்பா லரம்பைமுதன்
முப்பேர்க் கனிநெய்தேன் முன்வர்க்க—மொப்பேயில்
பொற்பா சனத்தின்கட் புண்ணியன்மு னுய்த்தனனே
யெற்பா சனத்தின்க ணிட்டு. (௪௨)

எந்தன் மறையினெறி யின்னவெலா முய்த்தெவர்க்கும்
வேந்த விவைநுகர்தல் வேண்டுமெனச்—சேந்தமலர்த்
துய்யகரத் தாலவற்றைத் தொட்டுவந்தோங் கோடியென்றான்
செய்ய ரகத்தமருந் தே. (௪௩)

தொன்முதலென் கோனருளாற் றுய்த்தனவாக் கொண்டவுணா
மன்மகிழ்வி னாலெடுத்து மாற்றியங்க—ணின்மலசீ
ருற்ற மணமுலக மொப்பச் சடங்கெல்லா
முற்றவருடியென்றான் முன். (௪௪)

இன்னகைசெய் தேயெம் மிறையோ னருள்புரிய
மன்னதற்கு வேண்டுவன மல்கத்தந்—துன்னி
முனைவர் புடைசூழ முன்னரிய மன்றல்
வினையனைத்துஞ் செய்தான் விதி. (௪௫)

தாய்தந்தை யென்றுலகஞ் சாற்று மிருவரைபு
மாய்தந்த மாமலரா லர்ச்சனைசெய்—தேய்மலரோன்
மான்மகவான் வானோர் வணங்கமுறை யாகவிம
வான்மகிழ்விற் றாழ்ந்தனனே வந்து. (௪௬)

முன்பணிகின் றோர்க்கெல்லா மூவா முதல்வனொடு
மின்பணிபூண் மாதருள மேவியஃ—துன்பதமென்
றுன்னிமலை வேந்தீண் டுறையயன்முன் னோர்க்கீசன்
றன்னவிசந் தாதிகந்தான் றாழ்ந்து. (௪௭)

ஆனார் கொடியா ரமலப் பொருளேற்றே
யூனார் முடியணிந்து மூட்கொண்டு—மானா
வினைமுற் றியதென்றே வேதனெழு வாயா
முனைவரெலா முண்மகிழ்ந்தார் முன். (௪௮)

அக்காலை தன்னி லமலமா நற்பொருளை
மிக்கார் புகழிறையு மேனையுந்த—மொக்கலுமற்
றேனையரு ணன்கருந்தி யெல்லையிலா வின்பமுற்றூர்
சோனைமுகில் கண்மயில்போற் சூழ்ந்து. (சகூ)

மணக்கோலங் கண்டதன்பின் மாதிரதி யைந்து
குணக்கோல னுந்தன் கொழுந—னணக்கோல
மன்னு மலர்த்தாள் வணங்க வருந்தனி
யென்னு வுரைத்தா னிறை. (ருo)

மாலம் புயனாதி வானோர் மருளமலர்க்
கோலஞ் சுடைய குனிசிலைவேள்—சீல
வமைநேரந் தோளிதொழ வத்த னினைக்க
விமைநேரத் தூற்றா னெதிர். (ருக)

குழைசிலைவேள் கௌரியொடு கோமான் றிருத்தா
டழையன்பி னேத்தித் தமியேன்—பிழைபொறுத்தி
யெந்தா யெனவே யிரங்கிநிற்பப் பேதுறனீ
மைந்தா வெனநவின்றான் மன். (ருஉ)

தீயிற் றிகழ்நோக்காற் றீர்ந்திடுநின் மெய்நீறாய்ப்
போயிற்றன் றோரதிக்குப் பொற்புருவ—மாயிருததி
யுன்னியயா வர்க்கு முருவிலியா மேவியுன்றன்
மன்னியல்செய் யென்றான் வரன். (ருங)

கோலமதன் றன்னுரிமை கொண்டேக விந்திரமா
நீல மணித்தவிசி னின்றிழிந்தே—யாலமணி
கண்டனம்மை யோடுகுறுங காற்பூத ராப்புமச
வண்டர் தொழச்சென்று னங்கு. (ருச)

வித்தகன்செங் கண்மால் விடையேறி மாதினையோ
ரத்தமுறக் கொண்டுதழீஇ யன்பினுகைத்—துத்தமமா
நற்கணங்கள் சுற்ற நவிலிமய வெற்பொரீஇப்
பொற்கயிலை வந்தான் புரிந்து. (ருரு)

மாலயனை வெற்பரசை வானவரை மாதவரைச்
சீலமுறு தத்தமிடஞ் செல்லவுய்த்தே—சீலகண்டன்
செந்தழலோ னாதியர்க்குச் செப்புமற்றை யோர்க்குதவிடை
தந்தந் தளிபுக்கான் றான். (ருசு)

ஏற்றின்மே னின்றிழிந்தே யெம்பெருமா னம்பிகையோ
டாற்றலரியணையா மாதனத்தில்—வீற்றிருந்தான்
றுன்புற்றிருந்த தொகையிருபா லாமுயிர்க
ளின்புற் றிருந்த வினிது. (ருஎ)

திருக்கல்யாணப்படலம் முற்றிற்று.

ஆகூ திருவெண்பா எகூஉ.

# திருவவதாரப் படலம்.

---

பலநாளிவ் வாறு படர்தலுமோர் வைகல்
வலமார்வெஞ் சூரால் வருமா—குலமேவிப்
பூமே லயன்மால் புரந்தரன்முற் றேவரெலா
மாமேரு வெற்பிலுற்றார் வந்து. (க)

உலகவுணர்க் கிந்தையன் யோகிபோ லாகி
விலக் விருந்தனனும் வேண்டிச்—சொலவிரங்கி
மன்கன்னி யை மணந்தான் மைந்தனைத்தந் தின்னுநமக்
கின்கருணை செய்யாத தென். (உ)

ஐயன்றாள் போற்றியடை—பினெலாங் கைகூடு
மெய்யன்பி னெண்கயிலை மேவிமழுக்—கையனுந்
தேவதே வர்ககிதனைச் செப்பிடநாம் போதுமென்றார்
தூவலரோ னாதியோர் சூழ்ந்து. (ங)

போம்போ தரன்செய்கை போத வினவியே
நாம்போ தரவேண்டு நாடுமிதற்—காம்போதத்
தூதா வொருவனைத்தான் றூண்டவே வேண்டுமென்றான்
போதா தனத்தான் புரிந்து. (ச)

வந்திறையை நோக்கியயன் மாவரையின் மூன்றுமுடி
சிந்துவிற்கொண் டுய்கருந் திறலுடையோ—யந்தயிலாக்
கோடிவரும் பொற்கயிலைக் கோமான் செயலுணர்ந்தே
மீடி வருதியென்றான் வேட்டு. (ரு)

பூமன் னரசே புகன்றுநீ ரன்றுவிட்ட
காமன் கதிதெரிந்துங் கண்ணுதல்பா—னைமுறப்
போதிநீ யென்றாற் புகலா ரெனக்கென்றான்
கோதி லுலவையெனுங் கோ. (சு)

பன்னுரைகேட் டன்னான் பவனவெங்குஞ் செல்லவல்லா
ருன்னிற் சிறந்தோ ருலகிலுண்டோ—மன்னுற்
றூழியுதவி செய்வோ ருயிர்க்கிடர்வந் தாலு
மழிவரோ நெஞ்ச மவர். (எ)

ஆதலினீ போதியென்றா ரன்னா ரிடைவிடைகொண்
டோதலின்றி யேயிசைவி னுற்றனலின்—காதலனுங்
கால்வரையி லற்புதங்கள் காட்டு மெழிற்கயிலை
மால்வரையிற் சென்றான் மகிழ்ந்து. (அ)

அக்குன்றின் பால்வீழுநீ ராற்றிற் படிந்துபொழி
லொக்குமலர் வாசநறுந் தூளணிந்து—நற்கதியிற்
பைய வருவளியைப் பார்த்தாரப்ப நந்தியன்று
னைய விழுந்தா னயர்ந்து. (கூ)

விழுகா லெழுந்தச்ச மேவிநந்தி பொற்று
டொழுதிறைவ சம்புசெயல் சொல்வான்—வழுவிலண்டர்
நோன்வந்தே போதியென நூக்கவன்றூர் சொற்கிசைந்து
நான்வந்தே னென்று னயந்து. (க௦)

என்பிழைபூண் டாடு மிறைவர் கணத்தலைவ
வென்பிழையெ லாம்பொறுத்தி யென்னத்தாழ்ந்—தன்பில்லாச்
சூரனென் மானம்போய்த் துன்புற் றுணர்கிலன்வி ண்
ணாரண் டருமினைய ராம். (கக)

அனிலனந்தி தாளிறைஞ்சி யன்பினுரை கூற
முனிவிகந்து கூறருளின் முன்னி—யினியநின்ற
ஞவ் யளித்து மகன்றே குதியென்றான்
சேவி னுருவமைந்த தே. (கஉ)

அன்று னடிபணிந்தே யங்கயிலை வெற்பினின்ற
பொன்னூர் பொருப்பின்கட் போயுற்றான்—முன்னு
வெதிர்நோக்கும் வானோர்க் கெடுத்துரைத்தா னந்தி
விதிர்நோக்கச் செய்செயல்கால் வேர்த்து. (கங)

அன்னதுகேட் டம்புயத்தோ னாதியாந் தேவரெலா
மென்னசெயி னின்ன விரியுமெனு—முன்னமுன்னி
யோதுமறைக் கெட்டா னுயர்மலைக்கே நாமெல்லாம்
போதுமெனத் தேர்ந்தார் புரிந்து. (கச)

மாலயனே யாதியும்பர் மன்வரையி னின்றொரீ இச்
சீல முறுங்கயிலை சென்றுநந்தி—காலமலர்
தாழ்ந்தனைரெல் லாமாற்குச் சாற்றியருள் கென்னவன்று
ழ்ந்தவன்பி னுட்புகுந்தா னண்டு. (கரு)

இறைதாள் பணிந்துன் னிணைமலர்த்தாள் காண
மறைவேந் தரிமகவான் வானோ—ரறைகடைமு
னண்ணினு ரென்னநந்தி நம்முன் றருதியென்றான்
றெண்ணிலா வேணிச் சிவன். (கசு)

செம்மின் முடிநந்தி தேவர் தமைக்கூவி
யம்மின் சடையோ னழைக்கின்றான்—வம்மினென
வன்னூர் முறைவர் தரன்றான் பணிந்துதுதி
யுன்னு துரைப்பா ருவந்து. (கஎ)

பூதங்க ளாகிப் புலனாகி யாங்கவற்றின்
பேதங்க ளாகிப் பிறவாகி—வேதங்கள்
காண்டற் கரிய கருணைத் திருவுருவாம்
வேண்டற் கெளிதோ விழைந்து. (௧௮)

மூச்சுடரு முக்கண்ணாய் மூதண்ட கோளத்தி
னுச்சமுறுஞ் சென்னி யுருமணிப்பை—நச்சரவார்
பாதலத்தி னப்புறத்தும் பாதமலர் மேவினின்னைக்
காதலுற்றுக் காண்பவரார் காண். (௧௯)

உருவா யருவா யுருவருவாய் நிற்றி
குருவாய் வருவை குலவுந்—திருவாய்ச்
செறிவைமிகை காணிற் றெறுவையெண்ண மெல்லா
மறிவைநின் செய்கையறிவா ரார். (௨௦)

பற்பலவா றுகப் பணிந்தமர ரேத்திநிற்பச்
சிற்பரனு முட்கனியாத் தேவர்கா—ளற்பினொடு
வந்தனைசெய் தீரென் வரம்வேண்டு நீர்கொண்ட
சிந்தனையென் சொன்மினென்றான் றேர்ந்து. (௨௧)

உலகமெலா மீன்று மொருகன்னி யாகி
யிலகுமண மாகி னிடமா—நிலவணிந்தோய்
நின்போ லொருமகவு நீயருள வேண்டுமென்றா
ரன்போ டமர ரணைந்து. (௨௨)

துதிக்குஞ் சுரர்நுந் துயர்கெடவோர் சேயைக்
கதிக்க வளித்துமெனக் கங்கை—மதிக்குடில
னெல்லையில் பேரருளே யெய்ந்துமுக மாறிலங்கத்
தொல்லையுருக் கொண்டான் றொழ. (௨௩)

ஆறாறுக் கப்புறத்து மையாறுக் குள்ளுமுளா
னாறா னனங்கொண் டமர்ந்தனனல்—லாறுக
வாறுகுளக் கண்முளரி யாறு பொறிதந்த
வாறுகைக்குச் சூர்வெம்மை யாங்கு. (௨௪)

அப்புலிங்க மான வரனுதற்க ணின்றுவந்த
வப்புலிங்க வெப்பினைக்கண் டஞ்சிவிண்ணோ—ரிப்புவியோ
ராழித்தீ யேயாகு மல்லையே லாங்கதுதா
னூழித்தீ யேயென்றா ரோர்ந்து. (௨௫)

தீங்கிருந்த வர்க்கொழிக்குந் தீத்திரளைக் கண்டானோர்
பாங்கிருந்த மாதும் பனித்தேக—வாங்கிருந்த
வும்பரெலா மோடினா ரொள்ளனற்கு வாலைதா
னிம்பரெலாஞ் சூழ்ந்தந்தே. (௨௬

இன்பத்தை வேண்டிமக வீன்றருள வேண்டுமென்றோந்
துன்பத்தின் மேற்றுன்பந் துய்க்கவைத்த—தன்பருளங்
கோயிலாக் கொண்டருளுங் கோமான்றன் கூத்தென்றோர்
தாயிலாச் சேயனையார் தாம். (உஎ)

அன்னிறங்கொண் டஞ்ஞான் றடர்த்தவந்த வாலந்தான்
செந்நிறங்கொண் டிஞ்ஞான்று சேர்ந்ததுகொ—லென்னவயர்ந்
தாகண் டலன்முதலோ ராகுலந்தீர் வானுமையோர்
பாகன் றனையடைந்தார் பற்று. (உஅ)

கண்டமட்டுங் கார்நிறங்கொள் கத்தன் றிருவுளத்திற்
கொண்ட குறிப்பிற் குறுகியே—யண்டமெலா
மீறு பெறப்போந் திலங்கும் புலிங்கமோ
ராறு மமர்ந்தனமுன் னாங்கு. (உகூ)

உணற்கரிய வேகத் தலைவைவேந் தோடு
கணற்கிறையை நோக்கிக் கடவுட்—புனற்கங்கை
யாற்றி லவிர்பொறியோ ராறினையுஞ் சேர்க்கவென்றான்
கூற்றி னுயிர்குடித்த கோ. (௩0)

அன்னா ரதுகேட் டனலா ருருப்பத்திற்
சென்னா தரவா மெனவிறைஞ்ச—மன்னா
மொருவா தமையென்றா யோங்கிடத்தான் வெம்மை
மருவா தமையென்றான் வந்து. (௩க)

ஆய பொறித்திரளை யன்னார் முறையாகத்
தூய முடிமேற் சுமந்துகொடு—போயனலச்
செங்கையிற்கொண் டாடுஞ் சிவன்கட் டளைப்படியே
கங்கையிற்கொண் டுய்த்தார் கடிது. (௩உ)

கங்கையா நங்கை கனற்பொறியை வெண்டிரையா
மங்கையா லேந்தி யவிர்மணிமின்—றங்க
வரவணத்தி னாற்றிகழும் வாசமலர்ப் பொய்கைச்
சரவணத்திற் கொண்டுவிட்டா டான் (௩௩)

ஆறு திருமுகமு மாறிரண்டு செங்கரமும்
வீறு பெறக் கொண்டுகங்கை வேணியனே—பேறதரச்
செங்கமலப் போதகத்தோர் சேயாக வீற்றிருந்தா
னங்கமலப் பொய்கை யதில். (௩ச)

மரகதமாம் பாசடைநண் மன்கமலம் பூத்த
லாதனமாக் கம்பலமே யாகுஞ்—சரவணத்தி
லாறு முடிமிலைந்தோ னாறு குணங்களுமே
யாறுமுக மாயமர்ந்தா னங்கு. (௩ரு)

சுற்றுமா மேகலாத் தூங்குகொடி யேதொடாத்
தூற்றமலர்ப் பொய்கையே தொட்டிலா—மற்றதன்கட்
செங்கேழ் நிறச்சேய் திருக்கண் வளரவளி
யங்கே யசைக்கு மமர்ந்து. (௩௬)

மன்கார்த் திகையா மடவார் தமைவிளியா
நன்கார் சரவணத்தி னம்பரனு—யின்காலம்
பாலனுக்குங் கோலமுலைப் பாலருத்திப் போற்றிரென்றார்
மாலனுக்குந் தேவர் மகிழ்ந்து. (௩௭)

அன்னாரு மாங்கவர்தா லன்பின் விடைபெறாப்
பொன்னாரும் பொய்கைநண்ணிப் போற்றினார்—மின்னாரு
மூவிருமா வத்திரமு முந்நான்கு செங்கரமு
மேவுமகற் காண விழைந்து (௩௮)

காண்டலுமே யன்னான் கதுமெனச்சே யாறாக
மாண்டவுடு மாதர் மனமகிழ்வற்—றாண்டவையா
மொவ்வோர் மகவினையு மொவ்வோர் மடவாரு
தெவ்வோர் தரவெடுத்தார் சேர்ந்து. (௩௯)

ஒவ்வோர் மகவு முறுபசியுற் றாரெனவவ்
வொவ்வோ ரணங்குமுலை யுண்டுவந்த—தொவ்வோமான்
செங்கைவளர் சேயைத் திருக்கண் வளர்த்தினா
ரங்கை மலர் மேற்கிடத்தி யாண்டு. (௪௰)

ஓருருவந் துஞ்சமற் றோருருவஞ் சொற்பயில
வோருருவந் தாய்முலைப்பா லுண்ணவே—யோருருவ
முண்ணகைப்ப வோருருவ முற்றாட வோருருவ
மண்ணியிரங் கச்செய்தா றொக்கு (௪௧)

ஒன்று தவழுமெல்ல வொன்று நளாந்துசெல
வொன்றுவிழ வொன்றிருக்க வொன்றுபுகச—வொன்றுதாய்
பாலமா வன்றன் பலவுருவ [illegible] தான்
சீலமுறுஞ் சித்தரெனத் தோந்து. (௪௨)

ஓருருவ மாடவே யோருருவங் கையமைய
வோருருவம் பாடவே யோருருவம்—பார்வையுற
வோருருவ மோடவே யோருருவ மேயொளிக்க
வோருருவேள் செய்யவுற்றா னோர்ந்து (௪௩)

இன்னவா றாறாண யாக்கையுமே யோர்கணத்தி
லுன்னு சதபத் துறுபேத—மன்னநின்ற
சிற்பரன்ற னற்ற றிறனோக்கி யண்டமெலா
மற்புதமே யுற்றா ரகத்து. (௪௪)

காயம் பலவெடுத்தே காண்போ ரதிசயிப்ப
மாயம் பலபுரிய வல்லாரார்—நேயம்
வருகுமர னேயென்றான் மங்செயலாற் றனெஞ்
சுருகுமர னேயென்றா ருற்று. (சரு)

இளையா னுருவி லிளையான் றிறலில்
விளையா டலைக்கண்டு வேரிச்—துளவார்
தருந்தார் முகுந்தனயன் றம்மோ டிறைஞ்சி
யிருந்தா ரிமையோ ரெலாம். (சசு)

ஆரா மாத ரறுவருஞ்சே யாடறனை
நேரதா நோக்கி நிறைபன்பி—னீரதா
யுய்வகையி னம்பா லுகந்தோன் வழிபடுவான்
றெய்வமெனப் போற்றினர் தேர்ந்து. (சஎ)

திருவவதாரப்படல முற்றிற்று.
ஆக திருவெண்பா அ0சு.

---

# துவணவர்வரு படலம்.

ஆலமர்ந்தோன் பாலவிழி யார்பொறியெம் மைக்காற்ற
தேல வறற்குழல் பொன் னேய்சிலம்புக்—கோலமென்று
ளுடியுறு தாக்கி னவமணிகள் சிந்தவஞ்சி
யோடினளு ளுள்ளினு ளொன்று. (க)

வானோர் வணங்கியோர் மைந்தனைநல் கென்னவெங்கோன்
றானோர் மகவளித்தான் சங்கரிமுன்—றானோர்செய்
தன்பாற் பெருமே தடுத்தவன்றோ பன்னியர்க்கு
மன்பால னில்லென்றாண் மாது. (உ)

கன்னியிவ் வாறு கரைந்துமீண் டேகியரன்
முன்னருமொண் டாட்கமல முன்னிமகிழ்—மன்னவா
நின்க ணனற்பொறியா னீங்கினேன் மீண்டுமே
யுன்க ணடைந்தே னுகந்து. (௩)

பின்னோர்ந் தினைய விளம்புதலு மெம்பெருமான்
றன்னே ரிடத்துவைத்தான் றையனல்லாண்—முன்னோடச்
சிந்து சிலம்புமணி தேவன் றிருமுன்னுளி
நந்த விலங்கினவே நன்கு. (ச)

இலங்கு நவமணிக ளின்னுணை யாலே
நலங்கிளருஞ் சத்தியுரு நண்ணி—வலங்கொளின்ற
தற்பதந்தாழ்ந் தார்வமுறத் தாபதர்தம் மாதரெனக்
கர்ப்ப மடைந்தார் கடிது. (ரு)

உன்னுலகெ லாமீன் றுவப்புற்றா ளன்னவர்பான்
மன்னுசினங் கொண்டெனக்கு மாறாகித்—துன்னியதா
னீர்கொள் கருப்பமொடு நீணா ளிருத்திரென
வோர்தரச்சூ ளொன்றுரைத்தா ளுற்று. (௬)

அவ்வெல்லை மாதர்தா மச்சமுறிஇ மெய்வியர்த்தார்
வெவ்வியர்ப்பி லீசன் வியனருளா—லெவ்வம்
விலக்கு மினத்திரள்போல் வென்றிகொளும் வீர
ரிலக்கர்வந் துற்றா ரினிது. (௭)

பொற்றுகிலர் கோடையிடி போன்ற கடுஞ்சொல்லர்
வெற்றியுறு வாள்பலகை மேவுகரர்—பற்றிலக்கர்
வாட்டானை வீரர் மழுவாள னைத்துதியாத்
தாட்டாமரை தொழுதார் தாம். (௮)

திடமகார் சீரமரர் தெவ்வொழியச் செவ்வேள்
படையாகு தீரென்னப் பாருண்—விடையாள
னன்னார் பரிசனரா யத்தன்மு னீங்காமே
துன்னா வொழுகினார் சூழ்ந்து. (௯)

சீற்றங்கொ ளம்மைசொலாற் சிந்தா குலமெய்தாப்
போற்றியரன் பாதம் புரிந்துபணி—யாற்றுநல்லார்
தங்கருவி னந்திகணத் தார்மகவாய் வீற்றிருந்தார்
துங்க முறுஞ்சுகர்போல் சூழ்ந்து. (௧௦)

மாதர் கருவின் வருத்தம் பொறாதிருவர்
பாதம் பணிந்துகருப் பம்பரியேம்—போதற்
கருள்புரிக வென்றா ரனாதிமல முத்த
னிருள்குழலை நோக்கினா னெய்ந்து. (௧௧)

நீளார் கயற்கணுமை நின்றாட் சிலம்புதித்தோர்
சூளான் மிகமெலிந்து சூலினால்—வாளா
வருந்துகின்றா ரன்னார் மகப்பெறநீ யன்பிற்
றிருந்தருள்செய் கென்றான் சிவன். (௧௨)

அத்தனுரை கேளா வனைநன் றெனவிசையா
முத்த நகையாரை மொய்ம்பினரைப்—பெற்றிடென
வன்னார் வயின்யோகி னார்ந்தவர்போற் பேர்ந்துவரற்
குன்னா முயன்றா ருகந்து. (௧௩)

தூயமணி மாதருமை சொற்கேட் டதுங்கவலை
போயவர்தா டாழ்ந்தொருவிப் புந்திமகிழ்—வேயவே
யொன்பான் மடவார்பா லொன்பான் மகாருமே
யன்பா லவதரித்தா ராங்கு. (௧௪)

வானமரா ரோங்கிடவெவ் வல்லவுண ரேங்கிடவார்ந்
தேனமர்தார் வேந்தருளாற் செம்மணியிற்—றூன
மருவீர வாகுவந்தான் மன்னிளவன் மேவ
வொருவீர வாகுவந்தா னுற்று. (கரு)

திங்கண் முகநோக்கித் தேய்வுறவெண் றாழ்கமலச்
செங்கைகண்டு செல்லலுறச் சீர்த்தமுத்த—நங்கைபா
னல்லவுணர் வாடவந்தா னண்வீர கேசரிவெவ்
வல்லவுணர் வாடவந்தான் மற்று (கசா)

புட்பரா கத்திபாற் புகுகவர்க ளேத்தவந்தான்
றிட்பவினை ஞானியர்கள் சென்றாட்சி—நட்புச்ச
நாமமகேந்தி ரப்பேர் நவிறேத் தறவீர
மாமகேந்தி ரத்தனயன் வாய்ந்து. (கஎ)

அகனமர்ந்து தேவரெலா மச்சமொழிந் தேத்தக்
குகன்மே விளவலாக் கோமே—தகமெனகிற்
றாமகே சத்தனைபாற் றோன்றினான் றிண்வீர
மாமகே சத்தனையன் வந்து. (கஅ)

சூரியல்பெ லாநகுன்றத் தோன்றினான் வான்றலத்தோர்
சீரியல்பி யாவுஞ் சிறந்திடவை—டீரியமா
நூபுரந்த ரக்கோதி ஞேண்மணிப்பெண் பால்வீர
மாபுரந்த ரக்கோ மகிழ்ந்து (ககூ)

அயர்வுற் றழுங்கு மமரா ரகத்தார்
துயரந் தொலையத் துலங்கும்—வயிரமின்பாற்
சூராக்க தத்தலைவன் றன்னார் துதிக்கவந்தான்
வீராக்க தத்தலைவன் வேட்டு. (உ0)

கண்டமுது தேனைக் கடுத்திடுமின் சொற்பவளத்
துண்டவிதழ்ப் பச்சைமின்பாற் றோன்றினன்வார்—கொண்ட
பாரமார்த் தாண்டன் பழிவிலேந் தையைமெச்ச [முலைப்
வீரமார்த் தாண்டன் விழைந்து. (உக)

குவளையொடு சேதாம்பல் கோகநகம் பூத்த
பவளவல்லி பாற்சீர் பரவித்—திவளவிரும்
பாராந் தகனன் பவனனண்ட முட்கவந்தான்
வீராந் தகனன் விளக்கு. (உஉ)

சூலமணிகரத்தெஞ் சோதி களநிறத்த
நீல மணிப்பாவை நீடுதவத்—தேலவள்பாற்
சூரதீ ரன்றுமர் துன்னித் துளங்கவந்தான்
வீரதீ ரன்றுமன் வேட்டு. (உங)

இவ்வீர ரொன்பதின்ம ரீசன் றிருவருளா
லவ்வீர வன்னைமா ரார்வணமாய்த்—தெவ்வீய
முந்தி வளருறுப்பின் முண்டகன்போற் கண்டனையா
ருந்தியின்கண் வந்துதித்தா ருற்று. (உச)

அந்தவிறல் வீர ரரியணையின் மேவிருவ
ரந்தணடி தாழ வுவரவர்க்கண்—டந்தரிக
மைந்தர் புதியரலர் மான வருங்கலத்தர்
நந்தி கணத்தரென்று னன்று (உரு)

அன்னை யதுகேட் டனையார்க் கருள்புரிய
மன்னு சிவனவர்க்கொள் வாளுதவிப்—பன்னிலக்க
மேவுமைந்த ரோடுநீர் வேலவனை நீங்கலின்றி
யேவுபணி செய்திரென்று னேய்ந்து. (உசு)

ஒன்பா னிலக்கருமற் றேரெண் ணிலக்கருமே
யன்பா யிறைஞ்சியத்த னுலயத்தின்—முன்பாகச்
சத்திகளோ ரொன்பதின்மர் சார்ந்துமைதா னிட்டபணி
பத்தியொடு செய்யலுற்றார் பாங்கு. (உள)

துணைவர்வருபடலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா அருசு.

---

## சரவணப் படலம்.

---

வான்றலநன் கேத்துமந்தி வண்ண னுலகனைத்து
மீன்றவளை நோக்கிநம தேர்விழிக்கட்—டோன்றி
மணிநீர்ச் சரவணத்தின் மன்னியநின் சேயை
யணிமலைக்க ணுய்த்துமென்று ஞகு. (க)

நம்பனுரை கேட்டளவி னுடரிய பச்சிளம்பூங்
கொம்பனு ளுள்ளன்பு கொண்டெழீஇத்—தும்பி
கொழுதியா லரோய் குமரற்கொண் டேக
வெழுதியா லென்று ளினிது. (உ)

தூய விடைமேற் றுடியிடையுந் தானுமாய்
நேயமுட னேறினு னிளிமையோர்—மேய
விழுத்தன் னுருக்கொள் விமலர் கணத்தோர்
வழுத்திக் குழுவினர் வந்து. (ங)

நந்தியெங்கோ னுய்ப்பவரி நான்முகத்தோ னாதியர்கள்
பந்திகொடு தாழ்ந்து பரசினர்—சிந்துவெனப்
பேரிகைமுன் னாகப் பிறவு முழங்கினவே
பாரிடங்கள் சூழப் பரிந்து. (ச)

வான்மதியு மீன்குழுவும் வந்திறைஞ்சிச் சூழுவன
போன்மின் கவிகைவெய்யோர் போற்றினார்—மேன்மையுறு
காமருநீர்க் கங்கைதவழ் காட்சிபோன் மன்பூதர்
சாமரங்கள் வீசினார் சார்ந்து. (ரு)

ஏறுகரி பூட்கைபுலி யெண்கிரலை முன்னாக
வேறுமுகச் சாரதர்கள் மேவினரோர்—நூறென்னுங்
கோடியர்வெள் ளேற்றுக் கொடிகள் புகழுருக்கொண்
டாடியபோ லேந்தினா ராங்கு. (சு)

அன்னபோ தன்னையொடு மங்கயிலை வெற்பினின்று
முன்னுஞ் சரவணத்தி லும்பரெலாந்—துன்னவே
மின்னேற்ற செஞ்சடையான் வெள்ளிமலை யன்னவோர்
மன்னேற்றி னின்றிழிந்தான் வந்து. (எ)

நீருலாம் வேணி நிமலனுந்தன் பாங்கமருங்
காருலாங் கூந்தற் கவுரியுமா—வாருந்
திரைசுனையி லாறுருக்கொள் சேய்விளையாட் டெல்லாங்
கரையமர்ந்து கண்டார் களித்து. (அ)

பாங்கண் பரையைப் பரிவிற் பரனோக்கி
யீங்கணின் சேயை யெடுக்கவென—வோங்கவென
நின்ற விடையின்க ணின்றிழிந்து பேரன்பிற்
சென்றனளஞ் சேற்கட் சிவை. (கூ)

சீர்கொள் சரவணஞ்சேர் சேயா றுருத்தனையு
மோர்கொள் கரத்தினெடுத் தின்பினணைத்—தோராறு
திருமுகமு மோர்பன் னிருபுயமுஞ் சேர்ந்த
வுருவொன் றமைத்தா ளுமை. (கO)

அந்தமிலான் றன்னே ராறுவடிவு மொன்றாகிக்
கந்தனெனப் பேர்பெற்றான் கௌரிமைந்த—னந்தலையை
மோந்துபுற நீவ முலைசுரந்து பால்சொரிந்த
வாந்தலையன் பார்தன்மை யாம். (கக)

அத்த னருளா யமலமாய்ப் போதமாய்ப்
புத்தமுத மென்னப் பொழிமுலைப்பால்—வித்தமணி
மாவள்ளத் தேற்றெழில்கூர் மைந்தற் கருத்தினாள்
பூவலர்க்கோம் பன்னாள் புரிந்து. (கஉ)

தன்பா லருத்தித் தனயற் கொடுசென்றே
யின்பா ரிறைபா லிறைஞ்சுவிக்க—வன்பா
லிருகரத்தாற் சேயை யெடுத்தகல மேல்வைத்
தருகிருத்தி னனே யரன். (௧௩)

ஒப்பில் குமரவே ளோர்புடையின் மேவவே
முப்புவன முற்றுநல்கு மொய்குழலேச்—செப்பரிய
வண்கரத்தாற் பண்புறவே வாங்கி யிருத்தினு
னெண்குணத்தான் றன்பா லினிது. (௧௪)

வளஞ்சூழ் துவர்பச்சை மாமலையி னுப்ப
ணிளஞ்சூ ரியனிருந்த தேய்க்கு—முளஞ்சூழ்தந்
தோங்குமர னோர்பா லுமையொருபா லாகநடு
வாங்குமரன் மேவு மமைவு. (௧௫)

தூய விடையவற்குந் தோகை யனையவட்கு
மேயநடு வீற்றிருக்கு மெங்கோனை—நாயகனே
தோமா ரிகல்சூர் தொலையவரு ளென்றமரர்
பூமாரி பெய்தார் புகழ்ந்து. (௧௬)

தளிக்கமலன் கண்ட தனியண்ட மெல்லாங்
களிக்கவந்த சேய்க்குமணங் கால்பா—லளிக்கவந்த
வாரன் மடவா ரதுகாலை யெங்கோன்முன்
வாரமுறத் தாழ்ந்தனரே வந்து. (௧௭)

கந்தனைநீர் போற்றுங் கடனு லிவனுங்கண்
மைந்த னெனப்பேர் வழங்குகவே—நுந்தநாண்
மன்னிவன்ரு ளன்பின் வழிபடுவோர் தங்குறைதீர்த்
துன்னியதந் தாள்வமென்று னுற்று. (௧௮)

என்றலுங்கன் மாதெதிர்சென் றேர்மைந் தனைத்தழீஇச்
குன்றென் றனத்திழிபால் கொண்டுவெள்ளத்—தன்றருத்த
வன்னைமுலைப் பாலுக் கவைவா னதியினுறு
மன்னுஞ் சரவணத்தில் வந்து. (௧௯)

அன்னடத தார்பா லருந்திமுன்சா பத்தான்மீன்
றன்னுருவங் கொள்ளறுவர் தாபதராய்—மன்னியரன்
முன்றரிசித் தேத்த முனிமைந்தர் நீர்பரங்குன்
றின்றவஞ்செய் யின்னென்ரு னேய்ந்து. (௨௦)

சின்னாட் கடந்தபின்னிச் சேய்வந் தருளுமென
மின்னார் சடையோன் விளம்புதலு—மன்னார்கோன்
முன்றூழ்ந் தகலவுடு மொய்குழலா ரோடரிமு
னின்றூர்க் கருள்புரிந்தா னேர்ந்து. (௨௧)

செங்கண்மா லேற்றிற் றிருமகனுங் கோமகளு
மெங்கண்மா தேவனுமே யேறிப்போ—யங்கண்
பரிசனங்கள் சூழ்ந்து பரவவெள்ளி வெற்பி
லரியணையில் வீற்றிருந்தா ரங்கு. (உஉ)

சேயென்னுந் தெய்வ சிகாமணியை நூபுரத்து
மேயமணி நல்குமொன்பான் வீரருட—னயிலக்க
மான வருமிறைஞ்சி மாமலர் தூ யன்னவற்சூழ்ந்
தானுயிரி னென்றிநின்ற ருற்று (உ௩)

சரவணப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா அ௱௬௯.

# திருவிளையாட்டுப் படலம்.

அமரர்க் கரிய வரியா சனத்தி
லமரிருவர் தந்நடுவி லாகுங்—குமர
னிளையா ருடனெழுந் தெண்ணருளி னீரான்
விளையா டலைமதித்தான் வேட்டு. (க)

சேயடியி லாருஞ் சிறுகிண் கிணிசிலம்ப
வாயவரை ஞாண்மணிக ளார்ப்பமணி—மேயகுழை
தோடவிர்கே யூரமுடி சூழ்மாமதாணிமின்ன
வாடல் புரிகின்ற னங்கு. (உ)

குளந்தோறுங் கண்படைத்த கோமா னுயிர்க
ளுளந்தோறுஞ் சென்றருள்வோ னோர்சேய்—வளந்தோய்ந்த
மன்று தொறுமுலவும் வாவி தொறுமுலவுங்
குன்று தொறுமுலவுங் கூர்ந்து. (௩)

தந்தையிடந் தோறுலவுந் தாயினிடந் தோறுலவுஞ்
சிந்தையிடந் தோறுலவுஞ் செய்கையிலங்—கந்தவேள்
பாதலங்க டோறுலவும் பார்நிலங்க டோறுலவு
மீதலங்க டோறுலவு மீண்டு. (௪)

காந்தருவர் சித்தர் கருடர் முதலோர்வாழ்
வாந்தலம்விண் ணோர்கோ னமர்தலந்தோந்—தீந்ததவர்
மன்றலம்போ தன்றலமா மன்றலங்கன் மின்றலங்கோன்
மின்றலமெங் கும்முலவும் வேள். (௫)

மண்ணகத்திற் றோன்று மனுக்களெலா நோக்கயே
விண்ணகத்திற் றோன்றும் விரைவினிலே—கண்ணகத்திற்,
காணு திருக்குங் கதுமெனக்கீழ் பாற்றோன்றுஞ்
சேணார் மதிமிலைந்தோன் சேய். (௬)

தேரிற் செலுங்கரியிற் செல்லுமா மேற்செலுமூர்
காரிற் செலுந்தகரின் கட்செல்லும்—பாரின்கட்
காலிற் செலும்பொற் கதிர்மான மேற்செல்லுஞ்
சேலிற் றிகழ்கணுமை சேய். (௭)

திருமுகங்க ளாறினொடுஞ் சென்று திரியு
மொருமுகத்தி னோடு முலவு—மருமறையோ
ரென்னமுனி வோரென்ன வெண்வீர ரென்னவே
னுன்னுமிடந் தோறுலவு முற்று. (௮)

மணியார்த் திடுவீணை மல்கப் பயிலும்
பணிமென் குழலிசைக்கும் பார்விண்—ணிணையிலார்
நாடு மியமெறியு நல்லிசையி லேபாடு
மாடுமுரு கேச னமர்ந்து. (௯)

உருவம் பலகொண் டொருகுமா ரனொடுந்
திருவா டலைநோக்கித் தேவி—யொருவ
னிருமா மலர்தாழ்ந் திளஞ்சேய் நிலையெம்
பெருமா னருள்கென்றான் பெட்டு. (௧0)

நங்கை நமது நயனத்து வந்தமைந்தன்
கங்கை சரவணத்தின் கண்ணிடலாற்—றுங்கமுறு
காங்கையனப் பொய்கையினாற் காண்சரவ ணோற்பவனு
மாங்கவன்பே ரென்றா னரன்.  (௧௧)

தாயெனப்போந் தார றனங்கொடுத்த லாற்கார்த்தி
கேயனெனப் பேர்பெற்றான் கேழுருவா—றேயவொன்றாத்
தந்ததனுன் மாதுன் றனய னபிதானங்
கந்த னெனவயங்குங் காண். (௧௨)

நன்முகமா றுண்டா னமக்கவைதா மேகந்தன்
றன்முகமா வாய்ந்தவுயிர் தாரகமாய்—முன்மொழியு
மாறெழுத்து மொன்றாநின் றார்மைந்த னாமத்தொன்
றாறெழுத்தென் றேத்தவுற்ற வன்று. (௧௩)

ஆகையினஞ் சத்தி யறுமுகனன் னானொடியா
மோகையினான் றாம்பேத முற்றிலேந்—தோகையன்னா
யேற்றமிகு சேய்போல்வான் யாவுமுணர்ந் தான்வீடும்
போற்றினர்க்கு நல்கவல்லான் போந்து. (௧௪)

இனிமே லினையசெவ்வே ளெண்கணனை வேதத்
தனிமூலத் தொண்பொருளென் சாற்று—கெனவன்றான்
சால மயங்கத் தளையிட் டவனேமா
ஞாலவுயிர் நல்குவனீன் றாள். (௧௫)

தாரகனைச் சிங்கமுகன் றன்னைய்டற் சூரனைமைக்
காரவுணர் தம்மைக் கடிந்தடிந்—தாரணன்விண்
ணேய்கா வலனமர ரின்னறொலைப் பான்பின்புன்
சேய்காண்டி யென்றான் சிவன். (௧௬)

இன்னகுகன் செய்கையெலா மேந்திழையாள் கேளாநன்
றென்னமகிழ் கொண்டணாக வெவ்வுலகு—முன்னவே
வள்ளற் குமரவேண் மற்றுமோ ராடறனை
யுள்ளத்தி னுன்னினா னுற்று. (௧௭)

குலகிரியெல் லாமோர்பாற் கூட்டுமவற் றைப்பின்
தலைமயங்க வைக்குந் தரைமே—லலைகட லை
யொன்றாக்கு மாழிவெற்பை யொண்பிலத்தாக் குங்கங்கை
தன்னாற்றி னையடைக்குஞ் சூழ்ந்து. (௧௮)

பாதலத்துள் வைகிடுமெண் பாந்தள் களைப்பற்றி
மீதலத்தண் மேருவினில் வீக்கியே—பூதலத்தி
லாராவி கட்கூறின் றாகக் குமரவே
டோரா வுருட்டிச் செலும். (௧௯)

ஒண்கரிக டம்மையெடுத் தொன்றொடொன்று போர்விளைக்கும்
விண்கங்கை யால்வடவை வீறழிக்கும்—நண்கருளன்
தன்னோடு வாசுகியைத் தான்சேர்த் திகல்விளைக்கு
மின்னோடு வேணியன்சேய் வேள். (௨௦)

செங்கதிரோன் றன்னைமதி செல்பதத்தி லோச்சுந்த
ணங்கதிரோன் றன்னையின னார்பதத்தி—றங்கவுய்க்கு
மாதிரங்காப் போர்பதங்கண் மாறுபட வேவைக்குங்
கோதில் குமரனெனுங் கோ. (௨௧)

இருசுடர்கோ ளேனோர்விண் ணேகுவிமா னந்தேர்
மருவியமா பாசமுற்று மன்னுந்—துருவன்கை
யாருங் கயிற்றினையீர்ந் தண்வானி யில்விடுக்கும்
யாருந் திகைப்ப விறை. (௨௨)

சேணிற் செலும்வார் சிலைபற்றி வானவர்மீன்
கோணிற் பனகோலாக் கொண்டமா—மாணமரும்
பொற்றலைதோ ளாதி பொருந்துகுறி யாவெய்தே
விற்றிறமை காட்டிடுஞ்செவ் வேள். (௨௩)

இத்திற மா மாவுலகி லிம்பரோ டும்பரஞ்சிச்
சித்தந் தளர்ந்து சிதையாமே—வித்தகமா
வாடல் வியப்போ டமர்ந்துசெய்தான் மாமுத்தர்
நாடுவிழி யார்விமல னன்கு. (உச)

அக்காலை ஞாலத் தவுண ரதைநோக்கி
யிக்கா ரியஞ்செய்தார் யார்கொலென—மிக்காரெண்
ணாதனுருக் கண்டிலார் நண்பவத்து ளாழ்தீய
ராதலான் மாழ்குற்றா ராங்கு. (உரு)

எங்கோன் செயலவனி யின்மாக்க டாங்காணா
வெங்கோ லவுணரெலாம் வீதறிண்ண—மங்கதனுக்
கேதுவாம் விம்மிதமீ தென்ன வெருவலுற்
றோதுவார் சில்லோ ருணர்ந்து. (உசு)

இந்திரனே யாதியா வெண்டிசைகாப் பாளரினன்
சந்திரனேண் மற்றோர்சேய் தன்செய்கை—புந்தியிலோர்ந்
தன்னா னுருக்காணா ராரவுணர் செய்கையன்றாம்
பின்னார் புரிந்தார் பெரிது. (உஎ)

தேருமண்டர் தேவர்கோன் சில்லோ ருடன்கூடி
மேருவிலுற் றான்போலும் வேதனுமங்—காருமங்க
ணன்னவர்பா லேகி யறைவதென்று சூர்க்குமஞ்சித்
துன்னுதுய ரோடடைந்தார் சூழ்ந்து. (உஅ)

அந்தவரை தன்னி லமரர் செலுங்காலைக்
கந்தவேள் செய்யாடல் கண்டன்னான்—சந்தவுரு
வுந்துபுல னாற்காணா துள்ளத் திடருற்ற
விந்திரனைக் கண்டா ரெதிர். (உகூ)

மகவான்முன் னெய்தி வணங்கியங்கண் வைகித்
தகவா ருலகுவிண்ணிற் சார்ந்த—தொகைநிலைமை
யாவுந் திரிய வெவர்செய்தார் தேர்ந்திலஞ்சூர்
மேவுதொழி லல்லென்றார் வேர்த்து. (ஙo)

வானவர்கோ னன்னவர்த மாற்றந் தலைக்கேளா
யானுமிவ்வா றோர்ந்திருந்தே னின்னதிறை—யேனுமே
தேரே னதனைத் தெரியவே வேண்டினயன்
சாரேகிக் கேட்பமென்றார் சார்ந்து. (ஙக)

விண்ணவர்கோ னாதியர்தா மெய்த்தவஞ்செய் நீராற்சீ
ரண்ணுலகி லாகு மறுமுகவ—னண்ணு
மழகுகுடி கொண்டருளு மானனந்தா னொன்றிற்
குழவியெனத் தோன்றினனக் குன்று. (ஙஉ)

அந்தரத்தோர் தன்பறத்த ஞதுசெய்கை நாட்டவந்த
சுந்தரத்தோ ளண்ணல் சுடர்மேரு—மந்தரத்தின்
சோடு பறித்தெறிந்தான் கோகனக மாமலரி
ணோடு பறித்தெறிவா ரின். (ருரு)

தோன்றுகுகன் றன்னைச் சூரர்முதலோர் கண்டவனி
வான்றிரிபு செய்தோன் மருவினே—யான்ற
முகவென்று கொள்கிலைம் வன்மைதனை நாடி
னிகலவுண ரின்வெய்ய னே. (ருசு)

மற்றெவரு மெய்தாத மாய முளவிவனைக்
கொற்றவமர் செய்தாடல் கொள்வமெனு—முற்றிநின்று
ரன்னபோ தண்டர்கோ னைரா வதக்களிற்றை
யுன்னவே வந்ததவ ணுற்று. (ருரு)

அந்தமா மேற்போந் தடல்வச் சிரமொள்வாள்
குந்தம்வில் கொண்டிகல்செய் கோலமெய்தி—மைந்தன்
பகல்செயணி பூண்குகன்மேற் பார்த்திபனோ டும்ப
ரிகல்செய்ய வுற்று ரெதிர்ந்து. (ருசு)

அவ்வேளை யண்செவ்வே ளந்தரத்தில் வாழமரர்
தெவ்வே யெனச்சூழ் திறனோக்கிச—செவ்வே
நகைத்தொன் று மெண்ணமே நன்னுந்த ஞடை
றகைத்திற் புரிந்தனனே தான். (ருஎ)

எண்படைக டம்மு ளெறிவவெலாந் தொட்டமரர்
நண்படைக ளோடு நனிதூர்க்கத்—திண்படைகள்
மட்டார்ந்த போதின் மருவவே வசிரத்தை
விட்டான் குமரன்மேல் வேந்து (ருஅ)

ஏவு வயிரவா ளெந்தை நிறத்தின்கண்
மேவித் துகளாய் விளிவாகக்—காவலனங்
கன்னதனை நோக்கி யழுகைவே தொல்வேழந்
துன்னிறைமுன் சென்றதுவே சூழ்ந்து. (ருகூ)

செல்லுங் களிற்றையுமை சேய்கண் டுளத்தாலோர்
வில்லுங் கணைபலவு மேகல்கி—யொல்லையிலொள்
வெற்றிவில் வாங்கியம்பவ் வேழததி னேடையவிர்
நெற்றியின்க ணுய்த்தா னிமிர்ந்து. (சுo)

வந்தமதக் குஞ்சரம்வேள் வன்கணையான் மாய்தலுமே
யந்தரத்தர் கோமா னயர்ந்தயல்போய்—நந்தவெருண்
டேலவொரு வில்வாங்க வீசன் மகன்குகனோர்
கோலவன்றேண் மேலெய்தான் கூர்ந்து. (சுக)

அம்பொன் றமரர்க் கரையன்மேற் செய்விடுப்பக்
கும்பமதக் குஞ்சரத்த கோமானும—வெம்பிமனங்
கோவொன்று விற்றொழிலபோய்க் கூரொழிமேலான் மேற்கரத்தார்
வேலொன்று விட்டான் விரைந்து. (௪௨)

கொற்றவயி லோர்சிறுபுற் கொள்கையே போன்மிசைவந்
துற்றிடவின் ஞெரிறுமபூ தூற்றனர்சீர்—பெற்றோன்
கடிதிற் றனுவிற் கணைபூட்டி யன்னான்
முடிதள்ளி யார்த்தான் முனிந்து. (௪௩)

துவசத்தை யோர்கணையாற் றுண்டித்து மார்பிற்
கவசத்தை யோர்கணையாற் காதி—யவசம்
படமகவான் மேலேழ் பகழி தொடுத்தான்
திடவிடையோ னின்றருளுஞ் சேய் (௪௪)

அந்தக் கணைபட் டமரர்கோன் வீழ்தலுமே
கந்தக் கடவுளைக் காய்ந்தமரர்—வந்தெதிர்ந்து
பாங்காய் வளைந்து பரவிப் பொருதார்பின்
றீங்காய் விளைவதுன்னார் சேர்ந்து. (௪௫)

இவ்வண்ணம் போர்புரியு மெல்லை யுமைமைந்தன்
கைவண்ண விற்குனித்துக் காய்கணைநான்—கைவருணன்
மேற்றொடுத்தே யன்னவனை வீட்டியைந்தம் பாற்சமன்ற
னாற்ற லடக்கினா னாக்கு. (௪௬)

ஓர்கணையாற் றிங்களையு மொன்றிரண்டென் றேபகருங்
கூர்கணையாற் பானுவையுங் கூறிரண்டு—வார்கணையால்
வாயுவையு மூன்று வயக்கணையால் வீரஞ்சொல்
தேயுவையும் வீட்டிநின்றான் சேய் (௪௭)

ஆங்குநின்றோ ரேவருமே யைய னிகனோக்கி
யீங்குநின்றோ லேவரையு மேயடுமென்—றேங்கியே
சிம்புள் வரக்கண்ட சிங்கமென வோடிவுட்கி
வெம்புள் ளயர்ந்திருந்தார் வேர்த்து. (௪௮)

இரியு மிமையோ ரியனோக்கி யென்று
சொரிகதிர்நி லாவைத தூரக்கும்—பரிசேபோ
லாடுங் குகன்றோ னவளரத் தூரந்தண்டர்
கூடுங் களத்தினின்றான் கூர்ந்து. (௪௯)

போரா தவரிற் புரிந்து சிலர்வீழ
நேரா துடையண்டர் நீங்கவிக—லாராத்
தனியோர்வில் லேந்திநின்றான் சங்கார காலத்
தனியீ சனைநிகர்த்தான் றான். (௫௰)

போரதனி லும்பர்ப் புறங்கண்டோன் மேவுழியாழ்
நாரதனச் செய்கைகண்டு நற்குருவின்—சாரெய்தி
யுற்றவெலாங் கூற வொளிரரசன் கேட்டழீஇ
யிற்றதுவிண் வாழ்வென்றா னின்று. (ருக)

என்றருளுற் றேகி யினன்மதிவா னோர்க்கிறைவன்
மன்றிசையி லார்தலைவர் மால்கரிமுன்—பொன நலுற்ற
போர்க்களத்திற் பொன்னேன் புகுந்தனனன் போடுகண்டா
ளுர்க்குமுயி ரில்லாத வாறு. (ருஉ)

அங்கண் முருகேச னுடும் வியப்பினையே
யங்கண் விசும்புறைவோ ராசான்றன்—னங்க
ணிலவக்கண் டேர்கொ ணிமலன்றா ளாரன்
புலவத் துதித்தறைவா னென்று. (ருங)

தாரகநா மத்தன் றயங்குசிங்க மாமுகத்தன்
சூரபன்ம னுமவுணர் சூழ்ந்தொறுப்பத்—தேரும்
வரையிலனு றெய்திமக வான்பதிவிட் டம்பொன்
வரையின் மறைந்துறைந்தான் வந்து. (ருச)

அன்னு னினதா ளடைந்துநினைக் கொண்டிடர்செ
யொன்னு ருயிர்தொலைத் தொப்பிலா—மன்னுள்ளை
தன்னதாக் கொண்டு தலைவன்று னுகவுமே
யுன்னினன்வே றன்று னுளத்து (ருரு)

பல்காற் றவமே பயின்றுமிக வாடினு
னெல்காச் சரவணத்துன் னுற்பவங்கண்—டல்கா
வுவகையுற்று னெம்பெருமா னுன்றொழும்பு செய்வான்
றவறிலனின் மாண்புணரான் றுன். (ருசா)

நத்தனய னுதியோர் நாடி யறியொணு
வத்தனு மம்மையு மன்னரையுள்—சித்தருமே
யல்லதுநின் னுட லறியுந் திறத்தினரார்
வல்லமோ சிற்றுணர்வோ மற்று. (ருஎ)

ஆகையான் விண்ணேர்க் கரையனுணர் வின்மையுா
லோகையிற்போர் நின்னே டுளுற்றினு—வாகையினீ
தண்டமே செய்தையது தக்கதே யாமிகல்செய்
தண்டருமற் றுராவி யங்கு. (ருஅ)

நலத்தினிலீன் றேரே நவைசெய் சிறுரை
யலைக்கினளிப் பாரா ரவுணர்—குலத்தை
யொறுத்தருள்வா யென்றுனதா ளுள்வார் பிழையைப்
பொறுத்தருள்வா யன்பு புரிந்து. (ருகூ)

அன்னோ ரெழுவா னருளென் றிறைஞ்சியே
பொன்னோன் புகலவருட் புன்முறுவன்—முன்னோன்செய்
தன்னவரை யெல்லா மடல்கொள் களிற்றோடு
மன்னி யெழவருள்வான் வாய்ந்து. (௬௦)

சேந்த னெழுப்புதலும் தேவர்கோன் மாதிரத்தா
ரேந்த லிமையோர்மற் றேவருமே—தாந்தமா
லுன்ன மதின்மெய் யுணர்வுறமுன் செய்கையுணர்ந்
தென்னசெய்தோ மென்றெழுந்தா ரீண்டு. (௬௧)

கலுழ்ந்தார் கவன்றார் கலங்கினா ருள்ளம்
புலர்ந்தா ரிரங்கினார் போத—வுலந்தார்
தமையு மிகழ்ந்தார் தனிவிடமுண் டார்போ
லமையும் பொலிவிகந்தா ரங்கு. (௬௨)

துஞ்சியெழு மன்னோர் துதிகுமர னாடலைக்கண்
டஞ்சரணந் தாழ்ந்திறைஞ்சி யத்தநம—மஞ்சமருங்
கந்தநம வெந்தைநம கங்கையொடு மங்கையுமை
மைந்தநம வென்றறைந்தார் வந்து. (௬௩)

அன்போ டெழுந்தவரிவ் வாறு புகழ்ந்துமனத்
துன்போடு மெய்நடுங்குந் தோற்றங்கண்—டின்போத
னின்ன லுறீர் நீவி ரெனக்கருணை செய்திடலு
மன்னரச்ச நீங்கினா ராங்கு. (௬௪)

நக்கன் றனையிகழ்ந்து நாசந் தனையடைந்த
தக்கன் மகத்திலவி தானுண்ட—மிக்கபவ
மின்னு மகன்றிலே மீதிருக்கப் போர்புரிந்து
பின்னுமகம் பெற்றேம் பெரிது. (௬௫)

அன்னதனுக் காயதண்ட மாற்றி யதுதொலைத்தாய்
நின்னருட்கு வேறே நிகருண்டோ—முன்னவனே
பேதை படியோம் பிழைபொறுத்தி யென்னவன்பி
னோதை யுறத்தொழுதா ருற்று. (௬௬)

உமைசே யவையோர்ந் தொருசே யெனவே
நமைநீர் பொருதீர் நமதே—ரமைமொய்ம்பு
மோருயர்வு மின்னு முணர்வான் றெரித்துமென
மோருருவ மெய்தினா னுற்று. (௬௭)

ஒண்டிக் குலகுகிரி யோதநீர் நேமிவரை
யண்டமற்றும் வேறுதிரி பாகியுள்ள—வண்டநிரை
யாயவமெல் லாவுயிரு மாய்பொருளு மாமூவர்
மேயவுரு வொன்றெடுத்தான் வேள். (௬௮)

மண்பா தலமொளிர்தாண் மாதிரவெற் பேண்மிகுதோள்
விண்பான் முடிசுடர்கண் மெய்ந்நெற்—பண்பாரும்
வேதம்மணி வாயுணர்வு மென்செவிபக் கம்மயன்மா
லேதுளமா றீசனுயி ரே. (சுசு)

பேருருவங் கொண்டு பிறங்குமுரு கேசனுற
யாருமிறும் பூதிதெனு றேத்தியிமை—யோருமண்டர்
கோனுமிசை நோக்கினர்மெய்க் கூறுமுற்று மேகாணார்
சானுவள வேகண்டார் தாம். (எo)

சேண்புவன முற்றுந் திகழ்சிற் பரமெம்முன்
மாண்புறநீ கொண்ட வடிவுதனை—காண்புறயாம்
காட்டியருள் கென்னக் கவின்முற் றுருக்காட்டக்
கோட்டினின்றோர் கண்டுவந்தார் கூர்ந்து. (எக)

அன்றொ னுருவமெல்லா மாரருளி னோக்கியண்டம்
மூன்றொ ருயிர்யாவு முத்தொழிற்த—மன்றவா
ரேருருவர் விண்ணுளா ரின்னொ ரிருக்கவே
யோருருவிற் கண்டா ருவந்து (எஉ)

நேர்ந்திலமிந் நாள்காறுஞ் செப்புநீ யெல்லாமா
யார்ந்ததன்மை நீபுணர்த்த வாங்குணாந்தோந்—தீர்ந்தபொரு
ளின்வடிவ மன்றி நினைக்கவும்வே றுண்டுகொலோ
மன்வடிவாய் நின்ற வா. (எங)

பூவிலயன் றுஞ்சவரி பொங்காழி யிற்றுஞ்ச
மேவகந்தை நீங்க விழிப்பாலன்—றவிலண்டப்
பூணார மாவடிவிற் பூண்டதன்மை நின்னுருவிற்
காணாரக் கண்டேங் களித்து. (எச)

திருமன் னயனொடமர் செய்தகிலத் தோடு
மொருவ ரொருவரையுண் டுந்தி—யிருமுகததார்
றந்தமர்செய் காலந் தயங்குருநீ கொண்டதுநா
ளிந்தவுரு விற்கியைந்த தில். (எரு)

ஆதலினெங் கோனீ வருவுருவாய் மன்னேக
நாதனே யாகு நலிவெமக்கும்—போதவுஞ்செய்
வெஞ்சூர் தடிந்தெம்மை விண்மே லிருத்துதற்கோ
மஞ்சூர்சேய் போலணைந்தாய் வந்து. (எசு)

மெய்யுருவிற் காங்கோர் விளங்கிடனு புற்றவுன்றன்
செய்யவுருக் கண்டு சிறந்தனங்கா—ணைய
வெருக்கொள ளடியமுய்ய வித்தகமாந் தொல்லை
யுருக்கொண் டளித்தியென்று ருற்று. (எஎ)

என்னவிவை கூறுதலு மெங்கோ னருளால்வான்
மன்னுருநீத் தாறுமுக வானவனுய்—முன்னவே
தொல்லைவடி வத்தோடுந் தோன்றத் தொழுதிறைஞ்சியோ
னெல்லையிலோ னேதுவா னென்று. (எஅ)

ஆற்றநிலை தாவாத சூரன் முதலாய
பற்றலரைக் கொன்றும் பரும்யானு—மற்றமற
நின்றேவல் செய்யவெண்ணி ணாளாசு நல்கெந்தா
யென்றே யுரைத்தா னெடுத்து. (எகூ)

இந்திரனை நோக்கிநகைத் தெம்பெருமா னீநமக்குத்
தந்ததொல்சீர் நாமுந் தருதுநினக்—கந்தரந்தீர்
நீர்படைக ளாகநா நீள்படைகட் கோர்பதியாய்ச்
சூர்கிளையை மாய்த்துமென்றான் சூழ்ந்து (அo)

காந்தளந்தார் வேய்சேய் கனிந்திணைய கூறவிய
வேந்த னவைகேளா விறலவுணர்—வீந்துமுடி
மாத்திருவி னோடுபெற்ற வன்போல வானவரோ
டேத்திமகிழ் வுற்றா னினிது. (அக)

ஆறுமுகத் தேவை யமரர்கோ னோக்கியெந்தாய்
கூறுமண்டத் துன்றாற் குலவுபொருண்—மாறுகொண்டு
நின்றவற்றை முன்போ னிறுத்தி யெனக்களித்தான்
குன்றுதொறு மாடுங் குகன். (அஉ)

இத்தகைய வண்டத்தி லெம்மிற் பிறழ்ந்தவெல்லா
மத்தகையே யாகவென்றா னையனவை—தத்தநிலை
முன்போ லிருக்கு முறையுணர்ந்தே யந்தரர்முற்
றன்போடு நோக்கிநின்றா ராங்கு. (அங)

அப்போது போகிதாழ்ந் தாண்டகைசேவ னின்மலர்த்தாள்
கைப்போது கொண்டிறைஞ்சக் கதவரு—ளிப்போது
செய்திஎன நன்றென்று சேய்நடந்து கைலையின்சார்
பெய்துவரை புக்கா னினிது. (அசு)

ஏந்தலிமை யோரொன்றி யேத்திமகிழ் வெய்தியங்கோன்
சேந்தன்பின் சென்றே சிலம்பிலுற்றார்—சாந்தமனச்
சாரன் மணிவரையிற் சண்முகதோன் மேவவும்பர்
சீரவன்றாள் பூசிப்பார் சேர்ந்து. (அரு)

அவ்வேலைக் கம்மியனை யண்டர்கோன் முன்னவன்றா
னெவ்வேலை யான்செய்வீ தென்றிறைஞ்சச்—செவ்வேட்கு
நந்த நகரி னனிசிறப்ப மந்திரமொன்
றிந்தவயி னல்கென்றா னின்று. (அசு)

ஆதித் தரையுருக்கி யாற்றியபோ லொண்மணியார்
சோதித் திருக்கோயில் சூழ்ச்சியிற்செய்—தோதியல்கொள்
பொற்சிகரி நாப்பண் புனைவர்கோ னன்கமைத்தா
னற்செகுசிம் மாத்னமொன் றங்கு. (அஎ)

அந்தவெல்லை தன்னி லமரர்கோ னேவப்போய்ச்
சந்தமலர் வானீர் தழீற்புகைமுன்—றந்துநிற்பப்
போற்றிருக்குங் காணுப் புனிதனையிக் கோயிலினீ
வீற்றிருக்க வென்றான்விண் வேந்து. (அஅ)

புந்திமகிழ்ந் தண்டரெலாம் போற்றத் தளியுளரி
விந்தைபெறு பீடமேல் வீற்றிருந்தான்—கந்தவேள்
விஞ்சமா ராங்கு விதிமுறைவா னீத்தத்து
மஞ்சனநன் காட்டினார் வந்து. (அக)

பொம்மென் றுகில்சூழ்ந்து பூஞ்சந்த மட்டித்து
மன்கலன்கள் சாத்தி மருமலர்த்தார்—நன்கணிந்து
மேவித்தூ பந்தீபம் வேறுளவுந்தேவா தி
தேவற்கிட் டர்ச்சித்தார் தேர்ந்து. (க௦)

வந்தனைசெய் தண்டர் வழுத்தலுமாங் குக்காந்து
கந்தவேள் சென்றான் கயிலையின்க—ணந்த
வமையத் திமையவர்க ளற்புதத்தி னோடச்
சிமையவரை நீங்கினார் சேர்ந்து. (கக)

மருந்தனைய வின்சொ லுமை மைந்த னிளையோன்
றிருந்தமரர் தாம்பூசை செய்யப்—பொருந்தலினு
லந்தவரை தன்னையே யன்றுதொட்டி யாவருமே
கந்தவரை யென்றறைவர் காண். (கஉ)

மான்மலையைத தீர்ந்து மனோவதியுற் றானமரர்
வான்மருவு மவ்வவர்தம் வாழ்க்கைபெற்றா—மேன்மைபெறு
மங்கையிலை மேயகுக னண்வீரர் பாரிடர்பாற்
றங்கவவண் வைகினான் றான்.  (கங)

திருவிளையாட்டுப் படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா கரு௨

---

# தகரேறு படலம்.

---

வெள்ளிவரை மீது விசாகன் விளையாட
றெள்ளிமையோர் சிந்திக்கச் செய்காலை—யொள்ளியநற்
பூரதமா தேவன் புகழ்யாழில் வைத்திசைக்கு
நாரதனேர் வேள்விகண்டா னன்கு. (க)

மாதவத்தோர் தங்கண் மனங்களிப்ப வந்தணர்கள்
வேத விதிப்படிசெய் வேள்வியிலே—தூதிற்
புகையோட வானிற் புலவரவி கொள்ளச்
சிகையோ டெழுந்ததுசெந் தீ. (உ)

மந்தணமா வார்ப்பு மறையா கமவார்ப்பு
மந்தணர்த மார்ப்பு மடங்கவே—விந்தச்
சிகரவரை யென்னமகத் தீயினினின் றண்டந்
தகரமுழங் கிற்றோர் தகர். (ங)

அந்த வொலிகேட் டனல்வேந் திவர்ந்துவரும்
வெந்தறுகண் மேடம் வெருண்டோட—விந்திரனார்
வெண்கரியே யாதி விளம்புந் திறலானை
யெண்கரியுஞ் சாய்ந்த விரிந்து. (ச)

விண்ணுலகிற் பாயும் விரைவி லவணிருந்து
மண்ணுலகிற் பாயு மறுத்தூகர்—நண்ணுலகிற்
பாயும் படிவமலை பன்னிறந்தீ யோசையுரு
மேயும் படிநின்ற யாடு. (ரு)

விசையான் மடிந்தாரெண் வீரதா ரிடிநே
ரிசையான் மடிந்தா ரிலக்க—மிசையார்வன்
கோட்டான் மடிந்தார்பல் கோடிக்கு மேலுற்றூ
ராட்டான் மடிந்தா ரளபு. (சு)

அந்தகரைக் கண்டளவி லாவி தளர்வதுபோ
லந்தகரைக் கண்டமர ரச்சமுறீஇ—யிந்தவிடர்க்
கெங்கே புகலிடமென் றெண்ணி யிருங்கயிலை
யங்கே யடைந்தா ரயர்ந்து. (எ)

அவ்வேளை வீரர்நூ றுயிரவர் சூழநின்ற
செவ்வேளை நோக்கியிந்தச் சேயுகந்த—செவ்வே
விளையாட்டின் செய்கைபோல் வீப்பனிட ரூறு
விளையாட்டின் றீய விறல். (அ)

என்னநினைந் தன்னு னிணையடியிற் ருழ்ந்தெழீஇ
யின்னிசையாழ் வல்லோ னிமையவரோ—டுன்னிநிற்க
மாதவத்தீர் நீவிரிவண் வந்தவா வென்னென்ருன்
போதவத்து வாரேன் புரிந்து. (கூ)

யாழ்முனிவன் யாகத்தில் யாடு பிறந்துலகைப்
பாழ்செய்த வாறு பகர்ந்துபின்னவ்—வேழகத்தி
ஞற்ற லடக்கியிட்டி யாற்ற வருடியென்ருர்
போற்று தவத்தோர் புகழ்ந்து. (க0)

வீக்கியநற் குற்றுடைவாள் வீரமா மொய்ம்பினனை
நோக்கியும்பர் தந்துயர நோயறவே—தாக்கியமா
வத்தகரைப் பற்றி யடைதியென்ருன் பற்றற்ற
வித்தகரைக் காத்தருள்செவ் வேள். (கக)

அன்று னறுமுகத்தோ னங்கமலத் தாள்போற்றி
யுன்று விடைபெறீஇ யோர்நொடியின்—முன்னுக
மும்மை யுலகு முறையே திருவினு
னம்மைவிழி யுற்றே யணைந்து. (கஉ)

கேட்டைக்கொ ணைஞ்சிற் கிளர்கேழ் திருகுபுரி
கோட்டைப் பிடித்துக் கொடுவந்தி—யாட்டையங்கை
மூந்நாலுஞ் சீர்கொண் முகமாறுங் கொண்டபிரான்
முன்னுல் விடுத்தனன் றிண் மொய்ம்பு. (கந)

ஆட்ட மொழிந்தந்த வாடுநிரப வானோர்கள்
வாட்ட மொழிந்ததென வாழ்த்திநுத—ஞட்டங்கொள்
காமாரி யீன்ற கடவுண் மகிழ்பூப்பப்
பூமாரி பெய்தார் புரிந்து. (கச)

விரியாக மப்பொருளாம் வித்தகனே யாங்கள்
புரியாக மேவாட்டைப் பொற்பார்—பரியாக
வூர்தியென நாரதன்முன் னும்பர் தொழுவதைச்சே
யூர்தியென வூர்ந்தா னுகந்து. (கரு)

தகரேறு படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா கூசுஎ.

# அயவனைச் சிறைபுரி படலம்.

---

தகரே பரியாச் சகமுழுது மூர்ந்து
புகரே பரியாப் புலவ—னிகரேயில்
வெள்ளிவெற்பின் மன்றின் மிளிர்சிகரிமேலிருந்தா,
ளுள்ளியதிண் வீரரொடு முற்று. (க)

அல்லாருங் கந்தரத்தா ரம்மானைச் சேவிப்போ
ரெல்லாருந் தன்னை யிறைஞ்சியே—செல்லாநிற்
கின்றபக லோர்பகலிற் கேழ்கிளர்செந் தாமரைவாழ்
மன்றருக்கிற் செல்வான் மகிழ்ந்து (உ)

கரமா றுளான்காக்குங் கைலையினின் றேகும்
வரமா மலர்கிசைவாழ் வானைப்—பிரமா
வருதியென வன்னான் வரவிருக்க வென்றான்
சுருதியெலாங் கண்டோன் சுதன். (ங)

பணியா தயன்பரசும் பான்மை தெரிந்துன்
பணியா தெனப்படைப்பென் பான்பொற்—பணியார்
மறைவருமோ வென்ன வருமென்ன வேயோன்
றறைதியென்றா னைங்க ளரசு. (ச)

போத னெனப்புலவர் போற்றுவோன் மூவகையா
நாத முறக்குடிலை நன்கிசைத்து—வேத
முறையே நவில முருகவே ணிற்றி
யறையே லெனமருண்டா னங்கு. (ரு)

ஓமென் னெழுத்திற் குரையா தெனவினவத்
தேமென் மலர்க்கிழவன் றேர்ந்திலனோ—தாமணிற்ப
நான்கு தலைவாய் நனிகுலுங்கக் குட்டினான்
வான்கு தலைவாய் மகவு. (சா)

மறையாக மஞ்சார் மலர்க்கழலாற் போதி
லுறையா ரணனை யுதைத்துச்—சிறையாகக்
காலிற் றளையிட்டுக் கந்தவெற்பி லேல்வைத்தான்
சேலிற் றிகழ்கணுமை சேய். (எ)

தாரகமா வான்யாவன் சம்பு வெனவவன்வேய்
தாரகமா நின்றுகொன்றை தான்காட்ட—வோருகிலா
னணவமேற் கொண்டா ரறிந்துணரற் பாலதோ
மாணவர்மேற் கொண்டோர் வது. (அ)

வரைமாது சேய்வினவு வான்சொற் கிறைதா
னுரைமாது நாவிருந்து மொன்றுங்—கரையாம
லூமனென வுற்றனனே லூந்திவந்தோ னூல்கற்றோரும்
யாமென் றுரைப்பீ ரெவர். (௯)

காதலமோர் நாலுங் கரகமணி மாலை
வரத மபயம் வயங்கச்—சிரதலமொன்
றோங்குமுரு வத்தோ டுலகுயிரெல் லாம்படைத்தா
னோங்குவிதி போல்வே யமர்ந்து. (௰)

அஞ்சிறைய வன்னத் தயனென்பா னவ்வரையில்
வெஞ்சிறையின் மேவ விதிசெய்தான்—மஞ்சிறையோன்
மைத்தமிடற் றானை வணங்கமா றுண்ணடுங்சாத்
தத்தமிடஞ் சார்ந்தார் தணந்து. (௰௧)

அயனைச் சிறைபுரி படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௬௭அ

---

# அயனைச் சிறைநீக்கு படலம்.

---

பன்னாளிவ் வாறு படைப்புமைசேய் செய்காலை
முன்னான் மறையின் முதற்பொருளை—யுன்னான்றன்
வன்னி களங்களைய வானோர் முனிவரையே
யுன்னினனே மாயோ னுகந்து. (௧)

விரகினுந்தி பூத்தோன் விழைந்தவணுஞ் சித்த
ருரக ரியக்க ருவணை—ரிருசுடர்கள்
காந்தருவ ரட்டவசுக் கள்வித்தி யாதரர்கள்
போந்தனர்க ளொன்றாய்ப் பொலிந்து. (௨)

ஒன்பான் பிரமர்க ளொன்பான்கோள் கீர்த்திமிகு
தென்பான் மலயத் தெருண்முனிமுன்—னன்பா
ரகலிடமா வானவரோ டண்மினன்மால் யார்க்கும்
புகலிடமாங் கைலைப் பொருப்பு. (௩)

அந்தமலை காக்கு மருணந்தி வானவனை
முந்தமலை கேண்முன் முறையுய்ப்ப—நந்தமார்
பொன்னென்றாள் போர்றநீர் புந்திதளர்ந் திங்குவந்த
தென்னென்றான் றேவர்க் கிறை. (௪)

செங்கண்மால் வீழ்ந்திறைஞ்சிச் செப்புவா னின்மதலை
யங்கண்மா ஞாலமெலா மாக்குதொழிற்—புங்கவனை
யோமன் பொருள்வினவி யோர்சிறையிட் டாகருகின் றான்
றாமுநீ நீதி வருதுமென்றான் னந்த. (௬)

அந்த மொழிகேட் டரனறியான் போலிருப்ப
நந்தமருங் கையா னனியிறைஞ்சி—யெந்தையே
பூக்கமலத் தானைப் பொருவில் சிறையினின்று
நீக்கவருள் ளென்றா னினைந்து.

பாங்குநின்ற நந்திசனைப் பார்த்தெழில்வேண் மாட்டணுகி
யோங்கு சிறைநின் றுவளகநீத—சேகயனை
விட்டுவிடச் சொன்னமென மேவி யறைதியென்றான்
கட்டுவிடப் பாப்பணியான் காண். (௭)

மின்னுரும் வேணிநந்தி மேன்மதியந் தோணியினூர்
பொன்னுரு மேனியன்றாள் போற்றிநந்தி—தென்னுரு
மோதனத்தை நேர்ப லுமைமைந்தன் வாழ்சுந்த
மாதனத்தைச் சேர்ந்தான் மகிழ்ந்து. (அ)

ஐயன் புகன்றமொழி யாறுமுகன் றாளிறைஞ்சி
மெய்யன் புடைநந்தி மேவியுரை—செய்யவே
நிற்றிய னின்னைவைப்பே னீள்சிறையி லென்றனன்வாய்
பற்றியே சென்றான் பணிந்து. (௯)

ஆறுமுகங் கொண்டோ னயனைவிடே மென்றமொழி
யேறுமுகங் கொண்டோ னியம்பவே—நீறுமெய்யின்
மாணிக்க வெற்பினிலா மன்னி யெறிப்பதொக்கும்
வேணிக்க மன்னுணர்ந்தான் வேட்டு (க0)

வெள்ளிவரை நேர்விடையின் மேவி வரும்பரனைத்
தெள்ளிமையோர் போற்றுஞ் சிகரிவா—யொள்ளியவேள்
நேர்கொண் டிறைஞ்சி நிமலவிவண் வந்ததென்னென்
றூர்வின் வினவினா னங்கு. (கக)

குண்டிகையான் றன்னைக் கொடியசிறை யிட்டனையென்
றெண்டிகையார் வேண்ட விரங்கிமணிக்—கண்டிகையான்
காப்புவிட வந்ததுவே காரியமா மென்றனன்றீப்
பாப்புவிட முண்டான் பரிந்து. (கஉ)

வேதப் பொருளுணரான் வேதனெனப் பேர்பெற்றான்
போதச் செருக்கும் பொருந்தினா—னாதகினைச்
சேவித்துந் தன்னகந்தை தீருகிலான் யாவரையும்
பாவித்தும் பாரான் பரிந்து. (கந

அன்ன செயலி னயனைச் சிறையினினின்
றென்ன வுகைவிடலா மெந்தையே—யென்னவெதிர்
நின்று தொழுதா னினைப்பவர்த நெஞ்சினொடு
குன்றுதொறு மாடுங் குகன். (க௪)

உந்திவந்தோன் றன்னை யுறுசிறையி னீக்கரன்பா
னந்தி தனைவிடுத்து நாமுரைத்து—மைந்தநீ
யெண்ணிலையே யென்னை யெனச்சினந்தான் போலிருந்தா
னுண்ணிலை யன்பீச னுகந்து. (க௫)

தன்சிறையி னின்றிடுமோர் சாரதனை யேவியே
வன்சிறையி னின்று மலரோனைச்—செஞ்சவே
நம்முன் கொணர்தியென்று னுகர்களிகூர்ந்தார்
தெம்மு னயரவருஞ் சேய். (க௬)

சாரதன்கொண் டுய்க்கவெழிற் சண்முகனைக் கணடிறைஞ்சிப்
பாரதிகே ளீசற் பணிந்துவெள்கி—நேரினிற்பப்
போத வருந்திஇனகொல் போசவென்றான் றீதுறுதற்
போதமற்றோர் புந்தியிருப் போன். (க௭)

ஐயநின் மைந்த னருஞ்சிறைபில் வைத்தமையால்
வெய்யதா மென்னகந்தை வீந்ததெனப்—பையரவம்
பூண்டா னினதன்று போயே யொழிந்ததென்று
னேண்டாங் குலகுக் கெலாம். (க௮)

போதமே விட்டுத்தற் போத மொழிதரவே
வேத மெடுத்து விளம்பவே—போதநீ
நின்பணிகொ ளென்றருளி நின்மகவைத் தானழைத்தா
னென்பணிகொ ளீச னினிது. (க௯)

சங்கவா னற்குழையார் சம்புமணி யாசனத்தார்ந்
தங்கவான் மீதிருத்தி யார்மகவைத்—துங்கவான்
றாகத்து மெய்ப்பொருளைத் தான்வினவச் சாற்றுவா
னோகத்து மேயோ னெடுத்து. (உ0)

அந்நா ளகிலநல் கன்னைக் கருள்பொருளைப்
பன்னு வுரைக்கப் படுங்கொலோ—வென்னு
விரைக்கலா ரத்தன் விளம்பமறை யீச
னுரைக்கலா மென்று னுகந்து. (உக)

உணர்பொருளுந் தானு யுணர்த்துவனுந் தானு
யுணர்பவனுந் தானு மொருத்த—னுணர்கிலன்கோன்
மந்திரமா மெய்ப்பொருள்சேய் வாய்மலரக் கேட்டுகந்தான்
தந்திரமா மென்குதலை தான். (உஉ)

மைந்தனவில் போத மழலைக் கருள்புரியாச்
சந்தநறும் பூங்கொன்றைத் தாமத்தோ—னிந்தையில்சீர்ப்
பூத கணங்கள் புடைசூழ நால்வகையாம்
வேத முழங்கநின்றான் வேட்டு. (உங)

அரவென் றமரர்சூழா மார்ப்பவிடி போலந்
தரதுந் துமிமுழங்கத் தாவில்—புரநகையான்
வென்றான் விரைவனமால் வெள்ளேற்றின் மேலேறிச்
சென்றான் கயிலைச் சிலம்பு. (உச)

தேனேறும் பூவினன்முற் றேவர் தொகுதியுட
னேனோரும் போற்றிசெய் தேகவே—வானோ
டருந்தா முகில்சூழ் சமர்சுந்த வெற்பி
லிருந்தான் குறிஞ்சிக் கிறை. (உரு)

ஓரற் கரிய வுமைகேள்வ னீன்றபிரா
னோரற் கடனெடுநீ ருண்டமுனிக்—கோராக்
கரத்தின் பொருளுங் கரைந்திறைவ னாலு
முரத்தி னவின்றா னுவந்து. (உசு)

அயனைச் சிறைநீக்கு படலம் முற்றிற்று.
ஆக திருவெண்பா க00சு

---

# விடைபெறு படலம்.

---

அன்னபோ தம்மா லருள்கன் னியரிருவர்
துன்னு வனப்புமிக்கார் சுந்தரியோ—டின்னமுத
வல்லியிவர் சேய்தோண் மருவத் தவம்புரிந்தா
ரொல்லுஞ் சரவணத்தி லுற்று. (க)

எங்கோன் குமர னிருகன்னி மாருநோற்
றங்கே யிருப்பதுன்னி யாங்குநின்று—செங்கேழ்
கரவணத்தன் கண்போற் கமல மலருஞ்
சரவணத்திற் சார்ந்தான் றனித்து. (உ)

கந்தவேள் போதலுமக் கன்னியருஞ் சித்துதிப்ப
நுந்தம் விழைவென் னுவறிரென—நந்தமர்கை
மாதர் தொழுதெமைநீ மன்றலிழைத் தேமருவ
நாததவஞ் செய்துமென்றார் நன்கு. (ங)

அங்கவுரை கேட்ட ளவி லாறுமுகக் கோமான்சீர்
பொங்கவரை நோக்கிப் புகல்வானேர்—தங்கமுத
வல்லி மகவான் மகளாய் வளர்ந்தனையாங்
கொல்ல விருத்தியென்றா னுற்று. (ச)

சுந்தரிப்பேர் மேவிளையா டொல்புவியின் மாமுனிதன்
பந்தனையாய் வேடர்தம் பாலமர்தி—முந்தநீ
ரங்குவளர் காலையா மண்ணிமன்ற னீர்மையா
லுங்கடமைச் சேர்தியென்று னுற்று (௫)

கன்னியர்தாழ்ந் தேத்திக் களித்தே கினர்பின்ன
ரின்னமுத வல்லியென்பா ளிந்திரன்முன்—றுன்னிய
மன்மகவா யுன்னின் வருமிந் திரன்மகள்யா
னின்மகள்போற் றெந்தையென்று ணீ. (௬)

பொன்றனிவெற் புற்றோன் புதல்வி தனைநோக்கி
யென்றனையே யீன்றயா யிங்குவரு—கென்றிசைத்தும்
பன்முன் றனுது பருஉத்தாண் மாக்களிற்றைத்
தன்முன் வரவிளித்தான் றான். (௭)

வந்தமத மாவைமக வானோக்கியான்பெற்ற
விந்த மகளை யெடுத்துப்போய்ப்—பந்தமுறப்
போற்றுதிநீ ருண்டெனப்பின் பொன்மகளைத் தன்கந்த
மேற்றியன்பி னேகிற் றிபம். (௮)

மாதுகன்னி தன்னை மனைவதியிற் கொண்டுபோய்ப்
போதகமே யன்பினொடு போற்றிடுமவ்—வேதுவினு
லோதுதெய்வ யானையென வோர்பெயர்பெற் றுங்கிருந்தா
ளுதன்செவ் வேளை நவின்று. (௯)

சொன்னுட்டின் புய்த்தணருஞ் சுந்தரிசேய் சொற்றபடி
பொன்னுட்டின் மேலாம் புகழ்த்தொண்டை—நன்னுட்டின்
மன்வள்ளி மால்வரையில் வாழுஞ் சிவமுனிவன்
றன்மகளா வான்படர்ந்தா டான். (௧௦)

மடமங்கை யர்க்கு வரநல்கிக் கந்தத்
தடவரையிற் போயிருந்தான் சார்முக்—கடவுளரா
யூனு யுடலா யுயிராய்மற் றுள்ளவெலாந்
தானுய்த் தயங்குகுகன் றுன். (௧௧)

கந்தமலை நின்றேகிக் காங்கயனம் மானையிடைத்
தந்தமலை தன்னையன்பிற் றாழ்ந்திறைஞ்ச—விந்தமலை
பொன்றுப் புகழ்வீரர் பூதர் புடைசூழச்
சென்றுன் கைலைச் சிலம்பு. (௧௨)

அங்க ணடைந்திறைஞ்சி யம்மையப்பர் தம்மினடு
வெங்கள் பெருமா னினிதிருந்தான்—புங்கவர்மா
றங்குறையெ லாஞ்சொலிப்போ தன்கண் ணனைமுன்கொண்
டங்கயிலை யெய்தினு ராண்டு. (௧௩)

அன்னா ரடையு மமையத் தமல னெழிற்
பொன்னா லயமுறையே போற்றுநந்தி—யென்னாத
னின்மி னெனத்தடுப்ப நெட்டுயிர்ப்புற் றின்னலொடு
முன்மின் றலைநின்றார் மொய்த்து. (௧௪)

பல்பகலங் குற்றுநின்ற பண்ணவர்கா நந்தியிடம்
புல்குந் துயருரைத்துப் போற்றவன்றான்—மல்கரன்பா
னுங்குறைதீர் கிற்பா னுவன்று வருமளவு
மிங்குறைதீ ரென்றா னினிது. (௧௫)

போனநந்தி தேவன் புராரி தனைத்தொழுது
வான்வர்கோன் மான்முதலோர் மன்சடையாந்—தானமுற்றா
ரென்னவவ ரேவரையு மெம்முன் கொணர்தியென
மன்னவரை வம்மினென்றான் வந்து. (௧௬)

மன்னந்தி தேவன்சொன் மாற்றமுணர்ந் தேவருமே
மின்னந்தி வண்ண விமலனெழிற்—பொன்னி
னடிமுறையே தாழ்ந்தா ரதற்குள் வலாரி
கடிதி னறைகுவன்புன் கண். (௧௭)

அம்மையப்ப னாக வகிலமெலா மீன்றளித்தோய்
மும்மை முரண்சூர் முதலவுணர்—வெம்மையிற்சேய்
மன்னரம்பை மாரிமையோர் மற்றிவரைவன்சிறையிட்
டின்னலிழைக் கின்றா ரெனக்கு (௧௮)

பன்னுதவ மாற்றுழிநீ வந்துநம்பான் மைந்தனெய்து
மன்னவனான் வெய்ய வவுணரைச்செற்—றின்ன
லொருலைத்துமென்றி யெந்தையிந்நாட் டோன்றலுமிங் குற்றா
னலைத்துயர்தீர் கில்லே மகத்து. (௧௯)

துன்னியவெஞ் சூர்முதலாந் தொல்பகையைக் கொன்றேயென்
முன்ன முடிக்கவல்ல மொய்ம்பினரார்—பின்னை
யினியா ரொடுநவில்வென் யாரைநா னேவேன்
றனியாய் நினையன்றித் தான். (௨௦)

தீதை யகற்றவுநற் செல்வ மளிக்கவுநீ
தாதையரே யன்றித் தனயருக்கா—ராதலினீ
யெம்மை யளிப்பா னினித்தாழ்க் கலையென்றான்
வெம்மைநோய் கொண்டவண்டர் வேந்து. (௨௧)

மகவான்சொற் கேட்டலும்பொன் வண்ண னினிநீ
ரகநோ யுறலென் றமர்சேய்—முகநோக்கி
மைந்தகே ளொன்று மகிழ்வி னுரைத்துமெனக்
கந்தவேள் கூப்பினனங் கை. (௨௨)

ஆர்பல் லுயிர்கட்கு மல்லல் விளைத்துவிண்ணோ
ரூர்முருக்கித் தீமையிழைத் துன்வலிகொள்—சூர்முதலோ
டங்கிளையெ லாந்தடிந்தே யாளுகைக்கந் திந்திரனுக்
கிங்கடைதி யென்றா னிறை. (உரு)

அன்புறுநற் கந்தவே ளப்பணியான் செய்வலென
மன்புரத்தை யட்ட மழுவாளி—வன்பு
முருத்திறலுந் தன்னே ருருத்திரர்க டம்மைக்
கருத்தி னினைந்தான் கடிது. (உ௬)

பதினோ ருருத்திரரும் பாங்குறவன் னூரைப்
பதினோர் படையாக்கிப் பாலன்—பதினோர்
திருக்கமலக் கையிற் றிகழ வளித்தா
னிருக்கமல மூர்த்தி யினிது. (உ௭)

மன்னு முருத்திரர்கண் மன்றோ மரங்கொடிவாள்
கொன்குலிசங் கோலங் குசமணிபூ—மின்கமலந்
தண்ட மெறுழ்வி றனிமழுவு மாகவே
கொண்டனன்செங் கையிற் குகன். (உ௮)

ஆங்கிறைபின் னேவின்மூ தண்டத்தைம் பூதத்தோ
போங்குயிரெ லாமுடிப்ப துய்க்கினவர்—வாங்குவா
மங்கமுயிர் யாவுமுண்ப தாரெப் படைக்குமன்னுஞ்
செங்கதிர்வே லங்கைதந்தான் சேய்க்கு. (உ௯)

பின்னர்ப் பிரான்பாற் பிரிவின்றி யேவினசெய்
துன்னிலக்கத் தொன்பா னுறுமகர் நீர்—முன்னவனுஞ்
சேய்தனொடு சென்றவுணர்த் தீர்க்குதிரென் றெண்படைதந்
தாய்படையாத் தந்தா னவர்க்கு. (உ௮)

நாதனதற் பின்னண்ட வாபரண னந்தியுக்ர
னோதுசண்டன் றீரயன னுன்சிங்க—னுதியரை
நோக்கியீ ராயிரமா நோன்பூத வெள்ளமொடு
சேய்க்கணியாச் சென்மினென்றான் றே (உ௯)

ஐம்பூத வன்மையு மங்கண் பொருள்வலியு
மம்போத னுதியர்வல் லாண்மையுங்கொள்—செம்பொற்றேர்
வாம்பரிக ளோரிலக்க வாய்ந்ததுள மூன்செல்வ
தாம்பரிசொன் றீந்தனன் சேய்க் காங்கு. (௩௦)

இன்னவையெல் லாமுதவி யேகுதிநீ யென்றலுஞ்சே
யன்னையுமை யோடிறையை யன்பிற்றாழ்ந்—துன்னியெழீஇ
நிற்பவுளத் தேர்கையினு னேர்தழீஇ யார்வமொடு
தற்பரையின் கைக்கொடுத்தான் சம்பு. (௩௧)

திருதலுமச் சேயைத் தழுவிநின்ற ஞேடு
வருமிலக்கத் தொன்பான் வகையார்—பொருபடையாச்
சூழ்வரப்போய்ச் சூர்முதலைச் சுற்றமொடட் டும்பருக்கு
வாழ்வளித்து வாவென்ருண் மாது. (நஉ)

படைகொண்ட செவ்வேள் பரைதாள் பணிந்து,
விடைகொண்டு சென்றனன்பின் வீரர்—மிடைதலைவ
ராரு மிருவ ரடித்தா மரையிறைஞ்சிச்
சேரவிடை கொண்டகன்ருர் சேர்ந்து. (நந)

மன்னயன்மால் வேர்தெந்தாய் மாநீ யெமையளித்தா
யுன்னுருறை யொன்றுமிலை யுய்ந்தனமென்—றன்னிருவர்
மன்றலந்தா டாழ்ந்தெழநீர் மைந்த னுடனடமி
னென்றுவிடை தந்தா னிறை (நச)

விடைபெறு படல முற்றிற்று.

ஆகு திருவெண்பா கOநஅ

# படையெழு படலம்.

விடைகொண் டரியயன்மால் விண்ணவர் தம்மோ
டிடையி விளவலொடு மேகிப்—புடையில்
வருகாலை நோக்கி வலவனுய்ப் போய்ச்சே
யொருதே ருகையென்ரு னுற்று. (க)

பன்மா லினைய பணிப்பவளி நேர்ந்துவிண்செல்
பொன்மா ரதமேற் பொருக்கெனப்பாய்ந்—துன்மால்சி
ருந்தையெட்டோ டொன்பதின்ம ருங்குறச்சேய் முன்பணிந்துய்த்
தெந்தைவரு கென்ரு னிதில். (உ)

தெருள்கூர் மருத்திறைஞ்சிச் செப்பினதோர்ந் தெங்கோ
னருள்கூர்ந் தடலவுண ராம்பே—ரிருள்போக
மால்வரைத்தேத் தங்கதிரோன் வந்துதயமாகுவது
போல்வரைத்தே ரேறினன் போந்து. (ந)

கொற்றநெடுந் தேர்மேற் குமர னமர்தலுமே
மற்றவன்றன் னின்னருள்கொள் வன்றிறலோ—ருற்று
மருங்கடைந்தார் மாமுனிவர் வானோ ரெவரு
மொருங்குபுடை சூழ்ந்தா ருவந்து. (ச)

ஓதுமினத் தோடவர்தா மோர்குகனைச் சார்தலுமே
நாதன் கயிலையின்க ணண்ணியவெம்—பூத
ரனிதவெள் ளத்தோரீ ராயிரவெள் ளத்தர்
புனைதலைவ ரேவவுற்ருர் போந்து. (ரு)

கதைசூல நேமிமழுக் கைவே லொளிர்வாண்
முதலெல்லை மாதியுங்கொண் மொய்ம்பர்—மதிவகிர்ந்த
தென்ன வெயிற்ற ரெரிகால் விழியருரு
மன்ன கடுமொழிய ராம். (சு)

சிந்தர் நெடியர் திகழுமைந்து வண்ணத்தர்
கொந்துறுபொன் வேணியார் குஞ்சியர்பல்—சந்தமுசர்
நீறுகண்டி கைப்புணர்ப்பர் நின்மலனை யன்றியெண்ணார்
மாறுகண்டா ராவிகொள்வார் வாய்ந்து. (எ)

அண்ட மனைத்தையு மாருயிரோ டுண்ணவல்லர்
பண்டுபோற் செய்வார் பரனருளான்—மண்டமரர்
சென்னியுறு மாலை சிரங்கந் தாமுரத்திற்
பொன்னினணி யோடுகொள்வர் பூண்டு. (அ)

இவ்வண்ணஞ் சாரதர்க ளெண்ணிலரோ டீண்டியே
தெவ்வஞ் சயர்த்தலைவர் சேந்தன்பாற்—செவ்விதின்வந்
தேத்தினரப் போதிடியே றென்னச் சிலபூத
ரார்த்தனர்பற் பல்லியங்க ளாங்கு. (கூ)

அதுதேர்ந் தறுமுகத்தோ னந்தரத்த ளாவு
முததிகள்சூழ் தந்திடவென் றுற்ற—விதமென்னப்
பாரிடமாத் தானைசுற்றப் பன்னுவெள்ளி வெற்பினின்று
பாரிடமேற் சென்றான் பரிந்து. (க0)

அந்தமில்சீர்ச் சாரதரீ ராயிரமா வெள்ளமுறக்
கந்தவேள் பூமிவரக் கண்டுவெஞ்சூர்—முந்திவிடுந்
தூசிவந்து சூழறுணையப் புவியையெழுந்
தூசிவந்து போர்த்ததுவே சூழ்ந்து. (கக)

மண்மறைத்த தாசை மறைத்த தெழுவாரி
விண்மறைத்த தும்பர்கோன் விண்டயனூர்—கண்மறைத்த
தன்றியெங்கு மேமறைத்த தார்சார தப்படையிற்
றன்றியெழுந் துற்ற துகள். (கஉ)

பூழியினல் விண்ணுமண்ணும் போர்ப்பவதைத் தன்னொளியாற்
சூழிமவான் சாலந் தொலைத்தென்று—ஊழினனி
வெல்வாம் பரியிரத மேலேறிப் பூவலமாச்
செல்வா னெனச்செல்வான் சேய். (கங)

படையெழு படல முற்றிற்று.

ஆக திருவெண்பா க0௩க.

# தாரகன் வதைப் படலம்.

---

கூர்ந்த வருட்குமரன் கோதி னெறிவிரைந்து
தேர்ந்தபல சேனையொடு செல்லவம்ம—நேர்ந்ததங்கண்
வாட்டுதிறற் றாரகற்கு வாழிடனாய்ச் சார்ந்தவரை
வீட்டுகிர வுஞ்சமாம் வெற்பு. (க)

வான்றோய் கிரவுஞ்ச மால்வரையைக் கண்டமரர்
கான்றோய் தொடைமால் கலங்கிநிற்பத்—தேன்றோ
யிசைநா ரதனேகி யெங்கோன் கமல
மிசைதா டொழுதறைவா னீங்கு. (உ)

உன்னு மறையோ ருறுமுனிவ ரிச்சுரம்போய்
மன்னுமெல்லை யாறாய் வரவரவே—துன்னிமா
லாற்றி யகத்தியனா ரார்சூளி னிவ்வடிவ
மேற்றகிர வுஞ்ச மிது. (ங)

மாய வரைக்கொருபான் மாய நகரதிற்கு
ராய் வவுணற்கே யாந்துணைவன்—காயமரி
னாரணன்றன் னேமிதனை நற்பணிய தாப்புனைந்தோன்
றாரகனா மன்னுறைந்தான் றான். (ச)

இன்னோன் றனையடுதி யேவிக் கொடியோன்றன்
முன்னோன் றனைநீ முடிப்பையென்றா—னன்னோ
னதையோர்ந் தவிர்வே லனக னவனை
வதைசெய் குதுமென்றான் மற்று. (ரு)

எங்கண் முருகேச னின்ன மொழிதலுமே
புங்கவரும் வாசவனும் பூரிப்ப—வங்கண்
மருங்கு வருவீர வாகுதனை நோக்கிச்
சுருங்கவினி ரொன்றுரைப்பான் சூழ்ந்து. (சா)

உற்றவந்த வோங்கறா னோங்குகிர வுஞ்சமா
மற்றதன்பான் மாயநொச்சி மன்னுமதின்—முற்றவே
யாரவுணர் சேனையொடு மாங்கமர்தன் மேயினான்
தாரகனும் வெய்யோன் றனித்து. (எ)

ஏற்றதுணை வோரிலக்கத் தெண்மர்க ளாயிரமெண்
ணேற்றவெள்ள மாம்பூத ரேண்டலைவர்—பாற்றுனப்போய்ப்
பன்னரிய வெய்யோன் பதியை வளைத்தியென்றா
னுன்னரிய செவ்வே ளுகந்து. (அ)

போரவுணர் தானை புரியி னவர்ப்படுத்தித்
தாரகனும் வெய்யோன் சமர்க்கெய்தி—னேரிற்
செருவிழைத்தி நிற்கரிதேற் றீரமுடிப் பானும்
வருதுமுன்னீ போதியென்றான் மன். (௯)

இன்னணநற் செவ்வே ளியம்பவிறல் வாகுநன்
றென்னவங்கை கூப்பி யிறைஞ்சிநிற்ப—மன்னிலக்கத்
தெண்மரைத்திண் பூதரையிவ் வேந்தரொடு போமினென்றான்
புண்செ யவுணர்ப் பொர. (க0)

என்றே வலுமாரு மெம்பிரான் றாளிறைஞ்சி
நின்றேகு தற்கு நினைதலும்பாங்—கொன்றமரா
கம்மியனை நோக்கிக் கவின்வாகு வாதியர்க்கு
மம்மிரத நல்கென்றா னங்கு. (கக)

ஆண்டகைசொற் கேட்குமுன்னே யன்னான் பரியரிசேப்
பூண்டபல தேருதவப் பொற்புறுமம்—மாண்டாத
மன்வீர வாகுவொடு மற்றவர்க்கு நல்கினான்
முன்வீரர்க் கெல்லா முதல். (கஉ)

வலவ ருகைத்திடச்செல் வையங்கண் மேற்சீ
ருலவுதிறல் வாகுமுத லுற்றோர்—நிலவிறைதாள்
போற்றிவல மும்முறைசூழ் போந்து விடைபெற்றுச்
சாற்றனிகத் தோடுசென்றார் தாம். (கங)

ஓகையிலக் கத்தெண்ம ரோதமென வார்த்துவர
வாகை பெறுவீர வாகுவைமுன்—போகவிட்டுப்
பீழை யுறுமமரர் பெட்பிற் றொழுக்கடையாங்
கூழைதனிற் சென்றான் குகன். (கச)

பொற்றானைச் செவ்வேள்பின் போகமுன்செல் வீரரொடு
விற்றானை சூழ்ந்துசெலல் வெய்யாகம்—பற்றானை
யுன்னருளி னூழித்தீ யோங்கு சுவாலையுடன்
மன்னி யெழுவதொக்கும் வந்து. (கரு)

அரிநிரை பூண்டே ரலகைநிரை பூண்டேர்
பரிநிரை பூண்டேர் படர்தல்—கரையிற்
றிரையுந் திடப்போந் திமிங்கிலநா வாய்கள்
புரையி லவற்றைப் பொரும். (கசு)

தேரொடுதேர் தாக்கச் செறிபடைக ளொன்றொடொன்று
சாரதர்வெண் மிக்கொடிக டாமுலவ—வார்முரசஞ்
சங்கமுத லெல்லாந் தழங்கவெழும் பூழிபோ
யங்கயன்ற னூர்கவிந்த தாண்டு. (கஎ)

இன்ன வியல்பி லிகற்றானை வீரரொடு
மன்னியபற் றானைசெல வாகையா—னென்னலா
ருய விறல்கூர்ந் தவிர்கோட்டு மாமுகன்வாழ் ,
மாயநகர் சேர்ந்தான் மகிழ்ந்து. (கஅ)

சார்ந்தவெல்லை வெம்பூதர் தானைபோ யூர்புக்கு ,
நேர்ந்த தவுணரொடு நீள்சமர்கை—யார்ந்தசெய
லாமா றறிந்தொற்ற ரங்கோயி லுற்றசுரர்
கோமாற் றெழுதுரைப்பர் கூர்ந்து. (கக)

எங்கோ விதுகே ளிமையோர் தலையிட்ட
நங்கோர் சிறைநீக்க நக்கனருள்—செங்கோலக்
கந்தனென்போன் வந்தான் கடக்கு மவுணரையென்
றந்தரர்சொற் கேட்டுமே யன்று. (உ0)

என்னவவர் சொற்றுங் கிராயிர மாம்பூதர்
மன்னுவெள்ளத் தோடிறைவன் மைந்தனுற்றான்—பொன்னிணொளி
வீசுமணி மாட வியநகரை முன்போந்த
தூசி தொலைத்ததென்றார் சூழ்ந்து. (உக)

மன்மருங்கு நின்ற வலியொற் றரைநோக்கி
மின்மறுகு மாநகரின் மேல்வந்த—வன்படையை
யின்னே முடிப்பனந்த மேண்படையை யோரிமைக்கு
முன்னே கொணர்திரென்றான் முன். (உஉ)

ஒற்றர் பணிதலைக்கொண் டொல்லையிலங் கேகுதலு
மற்ற வரைக்கொணர்திர் வையமெனப்—பொற்றையன
மன்னதன்மேற் புக்கேகு வான்மந் திரர்வழுத்தக்
கொன்னுதிவேற் கையவுணர் கோன். (உங)

தனிவலிகொ டாரகன்றான் சாவதுவே திண்ண
மினிவரா னென்பதுபோ லேற்ற—வனிதங்
கொடிநுடங்கும் வெண்கவரி கோடி புரள
முடிவியனோர்ந் தார்க்கு முரசு. (உச)

நிலவங் கவிகை நிழற்றவளை யார்ப்ப
வுலகிகர்த்த வைரத்தண் டொன்று—நலவயிரக்
கண்டையட லேறீர்க்குங் காமருதேர் மேற்செல்வான்
கொண்ட படையிலங்கக் கூர்ந்து. (உரு)

ஏவொற்றர் கூவியபோ தேற்றெழுந்த மாவவுணர்
தாவி வருங்கடல்போற் றன்செலக்கைம்—மாவரிதே
ரீண்ட வினத்தோடு மேரிரத மேற்படையி
னேண்டலைவர் செல்வா ரினிது. (உசு)

ஊழிமுடி வென்றுலக முன்ன வருமவுண
ராழி யிடையி னதிர்ப்பினெழும்—பூழிதான்
காண்போர் கலங்கக் கதுமெனவே தூமமெனச்
சேண்போய் மறைத்ததுவே சேர்ந்து. (உஎ)

சென்றி வருந்தகுவர் சேனை களைநோக்கி
வென்றிவரு பல்படையும் விண்ணுலவுங்—குன்றுஞ்
சூடையார் மானுமங்கை தாங்கியே பூதர்
படையார்த் ததிர்ந்த பதைத்து. (உஅ)

வல்ல குகன்றாள் வழுத்தியிகல் வெம்பூதர்
கல்லு மரங்கதையுங் காய்ந்தெறிய—வில்லங்
கதிர்நெடுவே லேமிகொடு காரவுணர் தானை
யெதிர்சிதறிப் போர்விளைத்தா ரேற்று. (உகூ)

வெந்நீர்மை யுற்ற விறன்மாப் படைகளிரு
முந்நீர் முயங்குவபோன் மொய்த்தமர்செய்—செந்நீர்து
ஞகவஞ்செவ் வானிகர்த்த தங்கதுகா ணங்கையர்நே
ராகவஞ்சி ஞாமா ரார்த்து (௩0)

ஒல்லும் படையிரண்டு மொன்றாய்க் கலந்துடன்று
வெல்லும் படிபோர் விளைத்திடும்போ—தல்லவுணர்
பல்லோர் மடிந்தார் பாவுறுவெம் பூதரிலுஞ்
சில்லோர் மடிந்தார் செகுத்து. (௩க)

தேரை யுடைத்துத் திறன்மா வினைச்சிதைத்தே
யாரையுடை யாழியங்கை யாற்சுற்றிப்—போரினைச்செய்
திண்ணியர்மே லுய்க்குந் திறத்தாற் சிலர்பூதர்
கண்ணன் றனைநிகர்த்தார் காண். (௩உ)

வார்களிற்றி னீட்டமெலாம் வாரிக் காத்தெற்றி
யூர்தடந்தேர் காலா லுருட்டியே—தார்புனையும்
பாய்மாப் படையைப் பதத்துழக்கிச் சென்றார்சீ
ரேய்மாப் படைவீர ரேற்று. (௩௩)

எதிர்நின் றிகல்செய் யெனுமவுணர்ப் பற்றி
விதிர்தரத்திண் வெம்பூதர் வீச—வதிர்தந்து
விண்ணின் றவர்கள் விழுந்தோற்ற மார்ப்பொடுவான்
மண்ணில் விழுவதொக்கும் வந்து. (௩ச)

ஓரா யிரம்வெள்ளத் தொண்கணங்க ளாங்கனுள
காரா ரசலமெலாங் கைப்பற்றி—நேராராம்
வெங்க ணவுணர் விளியப் படுத்துநின்றார்
பொங்கிறுதிக் காலமுகில் போல். (௩௫)

ஊன்கவரு வான்ஞமலி யோர்பாற் குரைப்பப்புள்
வான்கணங்க ளோடு மகிழ்ந்தலகை—தான்கறங்கக்
கூர்ந்தபிணக் குன்றீண்டிக் கூரமர்நீத் தச்சமுற,
வார்ந்தனவே நாப்ப ணடுத்து. (௩௬)

பாயும் பரித்திண்டேர்ப் பாழவுணர் வேழமோ
ராயிரமொன் றிவ்வீழ வார்பணையான்—மாயவெற்றி
மூவிலைவேல் வீசி முசலத்தான் மோதிப்பாய்ந்
தாவிகொண்டார் வெம்பூத ராங்கு. (௩௭)

விழுந்தவுரு வெங்கு மிடைந்த கவந்த
மெழுந்தசெந்நீர் நீகதத் திடையி—லழுந்திய
வாவிவிட்டோர் தம்யாக்கை யார்த்தனபு னூன்மிசைந்து
மேவிநடங் கூளிசெய்த வேட்டு. (௩௮)

இன்னசெயல் கண்டவுண ரேந்தல் சினங்கொளீஇ
மின்னிரதம் விட்டவனி மேற்குப்புற்—றுன்னுதண்ட
மொன்றெடுத்துப் பூத ருடையமண்ணில் வீட்டியண்டம்
பொன்றிடவார்த் திட்டான் பொருது. (௩௯)

காரன்ன மெய்யவுணர் கட்கிறைவன் கைத்தண்டாற்
போரப் புடைத்தலுமே பூதவெள்ளம்—பாரின்கட்
புள்ளிறைகண் டஞ்சும் புயங்கக் கணமென்ன
வுள்ளுடைந்து வீழ்ந்த வுலைந்து. (௪௦)

தாரகனு மன்கையிற் றண்டந் தலையெடுக்கப்
பாரகமெ லாம்பதைத்த பாய்ந்தோர்ச்சப்—பேரகமா
மீதலமெ லாங்குலைந்த மேதினியிற் றூக்கவது
பாதலமெ லாப்பனித்த பட்டு. (௪௧)

அன்றங் கரிவிடுத்த வாழிதனை யாரமெனக்
குன்றுறழ்திண் மார்பணிந்தோன் கொள்கையொடு—வன்றிறலுந்
தம்பா லிலாவணமுந் தாமோர்ந்து பின்னடைந்தார்
வெம்பூதர் நெஞ்ச மெலிந்து. (௪௨)

திண்ணியமா பூதமன்னர் சிந்திடலு முந்துசினத்
தெண்ணில் வரிவி லெடுத்துவளைத்—தொண்ணலனுந்
தோன்முகன்மேற் கோன்மாரி தூய்ச்சூழ்ந்தா ராரிலக்க
லூன்முகவேல் வீர ரொருங்கு. (௪௩)

சூழ்ந்தார் துரந்தகணை தும்பி முகன்யாக்கை
போழ்ந்தாழ்ந் திலபுணர்ப்பிற் புல்லியதாய்த்—தாழ்ந்தார்
வறியோர்சொன் மன்ற மருவா வகைபோ
னெறியேபோய் மீண்ட நெடிது. (௪௪)

ஏவுகணை மீண்டிடவு மேறெனவே சீறியும்பர்
மேவு படைமுறையே விட்டுநிற்ப—யாவுமே
வெய்யோன்மே லெய்தாமே மீடிறங்கண் டண்டரெலா
மையோ வெனக்குலைந்தா ராங்கு. (சரு)

மாழ்தருங்கால் வல்லோன் வயிரக் கதைசுழற்றிச்
சூழ்மணித்தே ரெற்றித் துதிக்கையா—லாழ்கடலி
லெண்ணிலக்கர் தம்மை யிறவாரிப் பெய்யவன்னார்
திண்ணெனன் றழுந்தினரோர் தேத்து. (சசு)

கூற்ற நிகர்வீர கோளரியச் செய்கைகண்டு
சீற்றமொடு போய்க்குகன்றாள் சிந்தனைசெய்—தேற்றமுறுந்
தன்வரிவில் வாங்கிச் சரநூறு தூய்ப்பதகன்
பொன்மவுலி வீழ்த்தார்த்தான் போழ்ந்து. (சஎ)

எய்து மொலிகேட் டிமையோ ரனையான்மேற்
பெய்தனர்பூ மாரிவெய்யோன் பின்னதுகண்—டெய்தரவிங்
கண்வீர கேசரிமே லங்கதையுய்த் தேதனது
திண்மான்றேர் மேற்சென்றான் றேர்ந்து. (சஅ)

போயொருமா மோலி புனையுழித்தண் டேர்திறலோன்
மேய நிறம்படலும் வீழ்ந்தனனங்—கேயதுகாண்
வீரமொய்ம் பேந்தல் வெகுண்டுவரை யன்னதோட்
டாரகனோ டேபொருவான் றான். (சகூ)

சாற்று விறல்வாகு தாரகவெய் யோனெதிர்போய்
வேர்த்திகல்வில் வாங்கி விடமுமிழ்தீக்—கோற்றொகுதி
யன்னான் புரத்தி லடர்ந்தே யுறவளைத்தான்
மின்னார் தவாவுணர் வேந்து. (ருο)

பொழிசரநம் மேலோன் புரமே வதுபோ
திழிதருவன் மேல்விசிக மீரேழ்—பொழியக்
கயத்தின் முகத்தோன் கடுஞ்சூலந் தன்னைப்
புயத்திற் செலவுய்த்தான் போந்து. (ருக)

பூவிலைவே லாங்கவன்றன் முன்மார் புறமோக
மேவிநின்ற னன்னதுகாண் வீரரெதிர்—தாவியே
தாரகவெங் கோன்மேற் சரமாரி பெய்தவற்கே
யோரெழுவர் தாமுடைந்தா ருற்று. (ருஉ)

மன்வீர வாகு வருத்தமுற்று நின்றுபின்னே
ருன்போ ரெதிர்ந்துடைந்த தோர்ந்தறிந்தே—கொன்மாய
வன்பதகன் முன்பணுக மற்றவனு நேரெதிர்ந்தான்
பின்பு வளைத்தனர்வில் பேர்ந்து. (ருங)

ஆன்றார் பரசு மடல்வீர வாகுவென்பான்
வான்றரு நேர்வில் வளைத்துவெற்றித்—தேன்றார்
புனைதா ரகன்கட் பொறிசிந்த நோக்கி
யினையவுரைக் கின்றா னெடுத்து. (ருச)

கொன்னார் வலிமிகவே கொண்டமர்செய் பூதர்சமை
மின்னார் சிலையேந்து வீரரையேண்—டன்னால்
வயமுற்ற மென்ன மதித்தைநினை நிற்கொன்
றுயிருண்ப னென்றா னுருத்து. (ருரு)

அடன்மா யனைவென் றவனேமி தன்னை
மிடன்மா மிடற்றணிந்தேன் வீரத்—திடனீ
தெரிகிலைவெல் வாமென்றாய் தீச்சொலரி தன்னை
நரிவெல்வ துண்டோ நவில். (ருசு)

ஆயகுறள் வெம்படையோ டவ்வீர ருஞ்சாய்ந்தார்
நீயுமயர்ந் தாய்வீர நின்றுரைப்பாய்—வீயும்
விளக்க நிகர்வாய் மிடலானின் னாவி
துளக்கமுறக் கொள்வனென்றான் சூழ்ந்து. (ருஎ)

என்றலுமோ ராயிரங்கோ லேந்தலுய்ப்பத் தன்கையிலோர்
மின்றவரை வாங்கியே விண்டுவினை—வென்றான்
கணையா யிரமாறு காதவிட்டுப் பின்னுங்
கணைநூறு விட்டான் கடிது. (ருஅ)

இக்கொடியன் விட்டவம்பை யேறனையான் கண்டேயவ்
வக்கணைக ளுய்த்தே யவைமாற்ற—விற்குச்
சடையா னிவனைத் தனித்தெய் வதமாப்
படையாற் படுப்பனென்றான் பார்த்து. (ருகூ)

வெங்கனனீர் செங்கதிர்கால் வேதன் முதற்றெய்வப்
பொங்குபடை தூண்டப் புழைக்கையோ—னங்கவற்றை
யவ்வப் படையா லகற்றினான் றெவ்வருயிர்
வவ்வப் படைவீர வாகு. (சூ0)

அதுகண்டு தாரகனு மற்புதத்த னாகி
விதிவா னவர்படையை வென்றா—னதிவீரன்
மாயையா லிங்கவன்றன் வண்மை கொளுதுமெனாத்
தீயைநிகர் வானினைந்தான் றேர்ந்து. (சூக)

மாயத் தவுணன் வடிவு பலவெடுத்தே
மாயப் படைபொழிந்தான் மன்னியெங்கு—மாயவன்றா
னெல்லை யிலாத விருளி னிருங்குழா
மொல்லைவந்து சூழ்ந்ததுவே யொத்து. (சூஉ)

அன்னதுகாண் வானோ ரயர்ந்தேங் கினர்விண்டு
முன்னரே சேணின்ற மொய்பூதர்—பின்னருமே
யோடினர்திண் வீரருமச் சுற்றனர்மா வல்லவுண
ராடினர்வன் பின்னகைத்தா ராங்கு. (சுங)

தாரகனென் போர்த்தகுவன் றன்மாயை தன்னாற்செய்
போரதனைக் கண்டு பொருளுகி—வீரமொய்ம்பு
பாயழன்மா வீரப படையெடுக்க மாயைகுன்றிப்
போயதினன் முன்னிருளே போல். (சுச)

தன்னரிய மாயை தணிந்துடையத் தான்றனியே
முன்னின்ற தாரகன்சீர் மொய்ம்புடையோன்—றன்னைப்பின்
சொன்மாயை யிற்படுப்பான் சூழ்ச்சி தனைப்பிடித்தே
சென்மாத் தேர்விட்டிரிந்தான் றேர்ந்து. (சுரு)

வல்லான் றொலைந்தோட மன்வீர வாகுபோர்
வெல்லாது வென்னிட்டோன் மேற்புத்தேள்—வில்லாரும்
வீரப் படைவிடுத்தல் வீரமன்றென் றேபுட்டி
லாரச் செறித்தா னதை. (சுசு)

வென்னிட்ட தாரகனும் வெய்யோன்பின் சென்றணுகிப்
பின்னிட்ட நாணாற் பிணித்தவனை—யென்னிட்ட
வொள்ளிலைவேல் வேண்முன்ன ருய்க்குவன்யா னென்னவுன்னி
வள்ள றொடர்ந்தான் மகிழ்ந்து (சுஎ)

மெய்தருமுள் ளன்பரையாள் வேளையுன்னி வன்றிறலோன்
பெய்தருமா மேகத்தின் பேரார்ப்பின்—வைதனுக
மாயையிட னுக மருவுகிர வுஞ்சவெற்பிற்
றுயவுணன் போயொளித்தான் றூன். (சுஅ)

தாரகன்போம் பூழைதனுட் டான்முழுகிச் சேறலுமே
கூரிருள்வந் துற்ற குறுகாற்றூற்—சீரடியா
னீணெறியொற் றிப்படர்ந்தா னோர்கிலனேங் கற்புணர்ப்பான்
மீணெறியுங் கண்டிலன்வில் வேந்து. (சுகூ)

கொற்றமிக்கோன் மாயையிந்தக் கோடெனச்சிந் தித்துறுகா
லற்றமிக்கோர் வல்லவுண னாகியமா—பொற்றையது
கண்டுமோ கத்துயிலே கண்டவன்றன் மெய்யுணர்வை
மண்டுமயல் செய்ததுவே வந்து. (எ௦)

போதமுனி சூளிசைவாற் போதவிறல் வாகுவையும்
பூதராமல் செய்திடலும் புந்திமருண்—டே துயின்று
ஞங்கதுகண் டெண்ம ரவிரிலக்கர் சாரதரு
ளேங்கிவிம்ம லூற்று ரினைந்து. (எக)

உன்றா ரகனை யுரவோன் றொடர்ந்தனன்பின்
சென்றான்மீண் டில்லனவற் றேடுதும்யா—மென்றாரும்
விற்படைகொண் டாயிடையே விட்டுக் கிரவுஞ்ச
வெற்படைவுற் றாரே விரைந்து. (எஉ)

அற்றவெற்பில் வீரமொய்ம் பாண்டகைசெல் பூழைதனுண்
மற்றவர்க டாம்புகவு மாயவரை—யுற்றவர்க்கு
முன்னிழைத்தல் போன்மாய மொய்ம்பிற் செயவவரு
மன்னவன்போன் மாழ்கினா ராங்கு. (எங)

மன்னுநவ வீரரொடு மற்றவருந் தன்மாயை
தன்னின் மயங்கினமை தாரகன்கண்—டுன்னதத்தின்
மேலெழுந்தா னங்கதுகாண் விண்ணவர்நொந் தோடினர்முன்
னாலெழுந்தாங் கார்த்தனர்போ லார்த்து. (எச)

வரைமே லெழுசகுவன் மாவிரத மேல்கொண்
டுரைதா னவர்வந் துவப்பின்—னிரைசூழப்
பொற்றனுவை வாங்கியே போர்செய் நிலஞ்சென்றான்
கொற்ற முறுமகிழ்வு கூர்ந்து. (எரு)

கோடியவின் னாணொலி கொண்டுகணை கள்கோடி
கோடிதொடை யாகக் கொளுவியே—நீடியவெம்
பூதர் குழாமேற் பொழியவெருண் டோடலுற்றார்
மாதிரமும் வானு மலைந்து (எசு)

இனையசெயல் கண்டழுங்கி யாழ்முனிவன் மேனி
நனிவியர்ப்பத் தேவரொடு நண்ணித்—துனிவிரைந்து
சென்று புலவர்தஞ் சேனைத் தலைவன்றா
னின்றகடைக் கூழையுற்றா னோர்ந்து (எஎ)

ஆயிரமாம் பூதவெள்ளத் தாறருள்கூ ரானனனை
மேயசுரர் தம்மோடு மேவித்தாழ்ந்—தேயவிசை
கண்டினைய யாழிலமை கானத்தோன் கண்களிக்கக்
கண்டினைய சொல்வான் கனிந்து. (எஅ)

ஐயநின் சேனைத் தலைவ ரமராடி
மையவுணர் தானை வரவாமாய்த்—தெய்ய
வருமந் திரித்தலைவர் வல்லமைசசர்ச் செற்றுப்
பொருதகுவ னோடிழைத்தார் போர். (எகூ)

சாற்றுதலை வீரனொடு தம்பியரு மற்றையரும்
போற்றிலக்க வீரரும்வன் பூதருமே—யாற்றலுறு
தாரகன்றன் னோடுபொரத் தன்மலைக்க ணுய்த்தனன்சீ
ராரவரைச் சூழ்ச்சியினா லாங்கு. (அ0)

அங்கு வலியவுண ரைய கிரவுஞ்சம்
பொங்குபல மாயை புரிதலுமேண்—டங்குமவர்
பித்தரெனமயங்கிப் பேதுற்றா ரிஃதுணர்ந்தான்
மத்தகய வீரன் மனத்து. (அக)

ஓர்தா ரகன்மகிழ்வீ ரனோடா கவஞ்சென்றே
ராரநம் பெரும்படையை யாய்கணையாங்—கார்பொழியப்
போத முரிந்திரிந்த புண்ணியவோர் வாய்நிகழ்ந்த
தீதறிதி யென்று னெடுத்து. (அஉ)

உரைநா ரதனுளமு முப்ப ரயர்வு
மரிசோ கமுமா லயனார்—பெருமாத்
துயருமொன்றப் பன்னிருதிண் டோட்குமர னோக்கி
யுயவினுரை சொல்வா னுவந்து. (அங)

ஈதெவருங் கேண்மி னிகனிலம்போய்த் தாரகனைச்
சோதியயில் கொண்டு தொலைத்தவுணர்க்—கோதரணங்
காட்டிடுமால் வெற்பைக் கடிந்திறையில் வீரரையு
மீட்டிடுவ னென்றான் விரைந்து. (அச)

எங்கோ னிவைநவில யாரு மவைதெரிந்து
பொஙகோத வார்ப்பிற் புகன்மறைக—ளங்கோதிக்
கந்தனந்தாள் சார்ந்து களித்து வரன்முறையே
வந்தனந்தாஞ் செய்தார் மகிழ்ந்து. (அரு)

மன்னுமுரு கேசன் வலவன் றனைநோக்கி
யுன்னுமணித் தேரதனை யுந்திடுதி—யென்னத்தாழ்ந்
தானவினத் தேழெழுவ ரங்கயல்போ தக்கவன
மானிரைக ளுய்த்தார்த்தான் வந்து. (அசு)

அந்தவம யத்தி லகில மெலாநடுங்க
வந்துகவின் மாவிரதம் வானெறிகொண்—டுந்தவதிற்
சேயிவர்ந்து செல்லவயல் சேர்ந்தொளிர்பூ தப்படைகள்
போயினபன் மேகவினம் போல். (அஎ)

இகலழிந்து வெந்நிட் டெதிர்பூத ராருந்
தகநொந் திறைஞ்சத் தருவன்—செருகளத்தி
லுற்றனன்சேய் தானை யுவரிதனைக் கண்டவுணர்
செற்றமன்றஞ் சேனையுற்றார் சென்று. (அஅ)

பொய்கையில்வந் துற்றான் பொருபடையுந் தீமையுறு
செய்கை யுடையவுணன் சேனையுமே—கைகலந்து
நேமிமழு வாதிவிட்டார் நீடுகுவர் பூதருநே
ராமலைபைந் தாருவிட்டா ரார்த்து. (அகூ)

முரிந்தனமாத் தேர்கண் முடிந்தனபாய் மாக்க
ணெரிந்தனவெய் யோர்சிரஞ்செந் நெய்த்தோர்—சொரிந்தனவெம்
பூதர்தம் மெய்துணிந்த போய்த்திரிந்த பாற்றினங்கள்
காதலுற முற்றினவங் கண். (௯0)

செங்குருதி சீத்தமதாய்ச் சேர்ந்தோ டினகவந்தம்
பொங்கடல்கொண் டாடுவன போர்க்களத்தி—லங்கெழுந்த
போரியற்ற வாகையுள பூதரது கைவலியாற்
காரவுணர் நொந்திரிந்தார் காண். (௯க)

தாரகன்றன் றானை சரிவுற் றதுநோக்கி
வீரவரி வில்வாங்கி வெங்கணை தூய்ச்—சாரதரா
மெல்லாரை யுந்தொடர்வுற் றேதுரந்து மேருமலை
வில்லான் மகன்முனுற்றான் வேர்த்து. (௯உ)

அவனெற் றரைநோக்கி யார்தா ரகன்மற்
றிவன்கொலரன் மாமைந்த னென்ன—வுவனேயா
மேந்த லெனவுரைக்க வேர்தருமாத் தேர்செலுத்தி
சேந்தன்முன் னுகவந்தான் றேர்ந்து. (௯௩)

திங்கணிகர் சண்முகமுஞ் சீரருட்பன் னீரவிழியுஞ்
செங்கதிர்வேன் முற்படைகள் சேர்கரமும்—பொங்க
நகுகிண் கிணியார்க்கு நற்பதமுங் கண்டான்
தருவன் றவமே தவம். (௯௪)

வன்மையுறு தாரகன்றன் மற்றினைய வாற்றன்மேல்
சின்மயமா மூர்த்திகொண்ட சீருருவின்—றன்மைகண்டு
மிக்கவியப் பொதிநம்மேல் வெஞ்சமர்க்குற் றானென்றா
னக்கணிவ னேகொலென்றா னன்கு. (௯௫)

இவ்வண்ண முன்னிப்பின் னேவர்க்கு மீசனரு
ளவ்வரமும் வீரமுமா வாண்மையு—தெவ்வர்பரன்
முன்னருற்ற சீருமுற்று முன்னிச் சினந்துசெவ்வே
டன்னைநோக் குற்றறைவான் றான். (௯௬)

திருமா றனக்குந் திசைமா முகற்குந்
தருமா றனக்குஞ் சயம்புப்—பெருமாற்கு
மிந்த நிலமெமக்கு மேய்ந்துபொரற் கேலாவில்லை
மைந்தவுந்த தென்கொலென்றான் மற்று. (௯௭)

ஆங்கருளி னார்க்கு மருளோ டொறுத்தலிமை
நீங்கி லிறையாஞ் சிவபிரா—னீங்களண்டர்
தம்மைச் சிறைவைத்த தன்மைகண்டோ வன்மைகுன்ற
வெம்மைவிடுத் தானென்றா னிறகு. (௯௮)

அங்கதிர்வே லேந்த லருளினின்ன செப்புதலும்
பொங்கமர்செய் தாரகன்முன் போர்புரிந்தே—செங்கண்மால்
கைத்திகிரி யுய்த்ததென்றன் கண்டக் கலனாக
வைத்ததுநீ காண்கிலையோ மற்று. (கக௯)

இதுவரையி லெம்மோ டிகல்புரிய வந்தோர்
மதுகைபோய் மாய்வான்றி வன்போர்க்—கெதிர்தரநீ
விட்ட தலைவரையும் வென்றுவெற்பிற் பல்கணத்தை
யட்டனனேர் கில்லா யவை. (க00)

அன்னதா லெம்மோ டடலமர்செய் தாற்றவே
யின்ன லடையலைநீ ரேற்றசடை—மன்னரன்பாற்
போதிநீ பாலவென்றான் போதகத்தோர் போதகத்தார்
கோதில் குகனவில்வான் கூர்ந்து. (க0க)

விண்டுதநீ சிம்மேல் விடுசக் கரங்கூர்போய்த்
தண்டசக்க ரத்தின் றகைத்ததியான்—கொண்டவோர்
செங்கதிர்வே லெப்படைக்குந் தேவஃது நின்னுயிரை
யங்கந் துளைத்துண்ணு மாங்கு. (க0உ)

ஓங்கிருள்வெய் யோன்முனுற வோடுவபோ லுங்கடிற
லீங்கியா மேவ விமைப்பினெழிந்—தேங்கினமால்
கூட்டிடுவெற் போடினைவேல் கொண்டுசெற்றுத் தானையையு
மீட்டிடுகின் றேனென்றான் வேள். (க0௩)

செப்பலுமே தாரகன்றான் சீறிச் சிலைகோட்டி
யொப்பில் குணத்தி னொலியெழுப்ப—மெய்ப்படிவக்
கந்தவேள் கையிலமர் சார்முகத்தை வாங்கிநா
ணுந்துமொலி கொண்டா னுகந்து. (க0௪)

வன்றா ரகன்வயிர வான்கோல் பலவிடுத்தான்
குன்றா வலிகொள் குமரவேள்—பின்றார்மார்
பன்னான் விடுவே வனைத்துமோ ராயிரங்கோ
றன்னான் விலக்கினான் றான். (க0ரு)

இவ்வா றிருவோரு மேற்று நெடும் போர்செயுங்காற்
றெவ்வார் கணைதொடுப்பச் சேயிருகோ—றவ்வா
முருகோடுந் தாரான் முகங்கொளொரு கையு
மிருகோடும் விட்டினா னீங்கு. (க0௬)

தந்த மிரண்டுந் தனிக்கையொன் றுஞ் சிந்திடலு
நொந்தசுரா னயிரங்கோ னெய்தினெய்து—கந்தனந்தேர்
மன்றுவசந் தூள்கண்டு மாவோடு பாகனையுங்
கொன்றங்கு நின்றான் கொதித்து. (க0எ)

மற்றொருதேர் மேற்கொடுவில் வாங்கி விடுகணைக
ளூற்றகும ரேசன்றே ரூர்வலவன்—வெற்றியந்தோ
ளார்வதுதேர் தந்தேசே யாயிரங்கோ லுய்ப்பவெய்யோன்
றேரினின்று வீழ்ந்தான் றிகைத்து. (க0அ)

மன்றூ ரகனங்கு மாழாந்து வீழவன்றன்
றன்றனை வீரரூர் தான்குறித்துக்—குன்றங்கோன்
றன்னைச்சூழ் தந்தெங்குந் தண்டுசூ லங்குலிச
மின்னயில்வாள் விட்டார்த்தார் வேர்த்து. (க0கூ)

மைத்தா னவர்மேல் வரன்சிலையை வாங்கிவெங்கோ
லுய்த்தா னவர்கம் முரம்புயங்கை—மெய்த்தா
ளூடலா திகள்வெற்பி னோங்கவய னெய்ததோர்
கடலா யடுத்தவண் காண். (கக0)

வென்றிவேற் கந்தன் விடுங்கணையாற் றானவரிற்
பொன்றினர்சில் லோர்செல் புனற்கடலி—னின்றுசில்லோர்
தத்தமுயிர் கொண்டிரிந்தார் தாரகன்மா றீர்ந்துணர்ந்து
சித்தமயர் வுற்றான் றிகைத்து. (ககக)

செங்கையா னீன்ற சிறுவன் பொரமருப்போ
டங்கையான் போய்நொந் தலமந்தே—னிங்கையா
மாவழகிற் றம்படையு மாண்டவினித் தெய்வதக்கோ
லேவனன்றென் றெண்ணினன்வல் லேறு. (ககஉ)

மாலயன்முற் றேவர்தம் வான்படைக ளேவவவை
வேலவன்பாங் கேத்திநிற்ப மேவலன்கண்—டாலமுண்டோன்
றொல்படையை யர்ச்சித்துத் தூண்டினான் வெங்கனல்கால்
பல்படையாய்ச் சென்றதுசேய் பால். (ககங)

கப்படைமா சூலங் கடுவனன்முன் னோருருவாய்
வெப்படையுற் றாரும் வெருவவரு—மப்படையைக்
கந்தவே ளர்ச்சித்தங் கைநீட்டிப் பற்றினான்
றந்தவன்கொ டன்மையெனத் தான். (ககச)

ஏயபடை தன்னைச்சே யோர்காத்தி லேந்தியதைத்
தீயவுணன் கண்டு திருவிற்ற—தாயுங்கா
லன்னான் வலிமைதனை யாராற் சொலற்பாற்றென்
றுன்னா விருந்தா னுளைந்து. (ககரு)

அரன்சே யறத்தி னமரான்றி யாற்றான்
காவிற்போர் செய்வலெனக் கள்வன்—கிரவுஞ்ச
மாலசல முன்போய்நீ மாயைபல செய்குதியென்
றாலமன்னான் சொன்னா னடுத்து. (ககசா)

முடிவுகா லத்து முகிலொடுரு மென்னக்
கொடியவெற்புங் கொற்றவனுங் கூடி—வடிவிற்
பலமாயை காட்டப் பரன்மகனேர்ந் தங்கைத
தலவேலை நோக்கினன் றான். (ககஎ)

அறைதா ரகனை யடல்கிரவுஞ் சத்தை
யிறைசெலுமுன் கொன்றுபுறத் தேகி—நிறைபூத
மேற்படையும் வீரரையு மீட்டு வருகென வேவ
வேற்படையை விட்டனன்செவ் வேள் (ககஅ)

கந்தவேள் சீற்றமெனக் காயெரிகால் கூற்றமென
வுந்துவே லேககணுற் றவுண—னந்தவே
பற்றி யொடிப்பலெனப் பற்றவந்தா னச்சமின்றி
யற்றவன்யார் பிற்றைத்த தாங்கு. (ககக)

உன்னுமடற் றாரகன்மார் போங்க றனைப்பிளந்து
பன்னுகிர வுஞ்சத்திற் பட்டுருவி—மன்னு
மிகல்வீர மோடுசீ ரேப்பதென்றுச் செந்நீர்
துகளாடி மீண்டதுவே சூழ்ந்து (கஉ0)

சீற்றவைவேன் மீண்டு சிலம்பின்கட் டுருகின்ற
சாற்றரிய வீரர் தமையெழுப்பிப்—போற்ற விண்போய்த
தெங்குகங்கை நீர்தோய்ந்து செய்யவடி வாயையன்
பூங்கரம்வந் துற்றதுமுன் போல். (கஉக)

உந்தவேல் கந்தவே ளொண்கரத்திற் கண்டவுண
னந்தமே யுற்று னசுரருமாய்—நந்தனமோன்
றமா லயன்முதலோ ராங்கிளவற் றூழ்த்திறைஞ்சிப்
பூமாரி பெய்தார் புகழ்ந்து. (கஉஉ)

ஆர்வமுளார் தம்முளத்தி லார்குமரன் கூர்தருவேல்
தார்மருவும் பேர்யாக்கைத் தாரகன்றன்—மார்புதனைப்
போழ்ந்துசெல வார்ததிடியிற் பொள்ளெனவே பூதலத்தில்
வீழ்ந்துபதைத் தாவிவிட்டான் வேர்த்து (கஉங)

அண்டம் வெடித்ததோ வாழி புடைந்ததோ
கொண்டலெலாங் கூடிக் குமுறியவோ—கண்டவொலி
யென்னேவென் றேங்கினரேவரும்விண் ணின்றவுண
னன்னேவென் றார்த்துவிழு மாண்டு. (கஉச)

குன்றுபொடி பட்டதுகள் கோநெறிபோய் வானதிவாய்
துன்றுமைக்க ராக்கியது சூருடலி—னின்றுவரு
வெங்குருதி நீத்தம்போய் மேவிக் கருங்கடலைச்
செங்கடலாய்ச் செய்ததுவே சேர்ந்து. (கஉரு)

மாயவரை மாயவங்கண் மன்வீரர் மாவொழிந்து
போயமலன் பூசகழல்கள் போற்றிநிற்பத்—தாயனையான்
சூருறவெற் புட்பட்டுத் துன்புற்றீர் போலுநீ
ராருமுணர் வின்றி யயர்ந்து. (கஉசு)

சேயவனிவ் வண்ணமருள் செய்யவடல் வீரர்நின்'
றூயவருள் பெற்றோர்க்குந் துன்புளதோ—நீயருடி
யென்னவரன் மாப்படையை யேந்தலினை யோன்வயிற்றந்
தின்னதைப்போற் றென்றா னினிது. (கஉஎ)

தாழவுண ஞற்றுஞ்சுஞ் சாரதர்க ளேவரையும்
வாழவெழு வித்தே வலியனிகஞ்—சூழ
வருமா னவர்போற்ற வாள்வயவ ரீண்டச்
செருமா நிலமகன்றான் சேய். (கஉஅ)

தாரகன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா கககஅ

---

# தேவகிரிப் படலம்.

---

ஆகவமா மெல்லைகடந் தங்கண் படைசுற்றி
யேக விமகிரிநீர்ந் தெண்கணன்மான்—மாகமன்மு
னேவருநன் கேத்த விரவிகுட வெற்புறத்தான்
றேவகிரி சேர்ந்தனனற் சேய். (க)

மண்ணுலகிற் சூரிளவன் மாண்டமைதேர்ந் தாரெவரும்
விண்ணுலகிற் சென்று விளம்பினன்கீழ்—நண்ணுலகிற்
சொல்லுவனே னேயென்னச் சூரனெனப் பேர்பெற்றோன்
செல்லுவன்போற் போய்மறைந்தான் சேண். (உ)

மைந்நீ ரவுணன்றாய் வானின்று வீழ்ந்தமைபோன்
முந்நீரில் வீழ்ந்தான் முளரிநண்பன்—செந்நீர்க்
களம்போன் றதுசெக்கர் கான்றிடுவெண் தந்த
வளம்போன் றனவுடுவின் வைப்பு. (ங)

காரவுணர் போன்றதுவான் கங்குலண்ட ரொத்தனவெண்
டாரகையோர் செவ்வேணர் தந்ததெழில்—கூரமுத
நல்கு நிசாபதியென் னுமம் படைத்துநிலா
மல்கு மிளமா மதி. (ச)

தாமரைதன் கேள்வன் றணந்தேகச் சோர்ந்துமுக
மாமலர் கூம்ப மதியென்பான் — றாமனையாஞ்
செங்குமுதம் வாய்மலர்ந்து தேனினிசை பாடவந்தான்
கங்குலர சாள்வான் களித்து. (ரு)

மாலைவந்த போதயன்மால் வானவர்பொன் மாமணிகள்
மாலையெனத் தூங்கருவி மாமலைபோய் — மாலை
நிரந்தரஞ்செய் வெற்பொழித்தோய் நின்னையருச் சிப்பான்
வரந்தரவே வேண்டுமென்றார் வந்து. (சா)

பண்ணவர்செய் பத்திமையின் பாங்குணர்ந்து பார்ப்பதிசேய்
விண்ணவர்தங் கம்மியனை மேவிக்கூ — யெண்ணமிக்கோ
யிங்கமர்வா ரெம்மோ டிருப்பவிவ ணோர்நகரொன்
றங்கமுற வாக்கென்றா னாய்ந்து. (எ)

விண்ணோர் புனைவன் விமல னடிதாழ்ந்து
மண்ணோர் புரிதவத்தால் வானகரிங் — கெண்ணோர்
பகருஞ்சீ ரோடும் படர்ந்துவந்த தென்ன
நகரமொன் று நல்கினா னன்கு. (அ)

அந்நகரி னல்லோ னணிமணிச்சிம் மாதனமொன்
றுன்னரிய செவ்வேட் குனாற்றினா — னென்னறிவே
யாகினான் பூத வணிகமொடு மண்டரொடு
மேகினா னங்க ணினிது. (கூ)

துங்கநக ரேகித் தொழுதிறன்மாத் தானையினை
யங்கணொரு சார்நிறீஇ யாலயத்துச் — சிங்கம்
விளங்குமணிப் பீடிகையில் வீற்றிருந் தான் செவ்வேள்
வளங்கொளிளை யோர்சூழ வந்து. (க௦)

பன்னிருமார்த் தண்டரொடு பன்னிருமாக் கோளுமொன்றாய்
மன்னியவை மானு மணிப்பீட — மன்னதன்மே
லாறு முகநிலவீ ராறு குழைவெயில்கொள்
வீறுபெற மேவினன்செவ் வேள். (கக)

அதுபோ தரியயன்முன் னண்ட ரெவரும்
விதுபோ லொளிர்முகச்செவ் வேளை — மதுபோத
வாரு மலர்தூய் வழிபடுதற் குன்னினா
ராருஞ் சிறப்பி னவண். (கஉ)

கங்கைதனை வானோர் கருதிடவந் துற்றதவுண்
பொங்கொளிசெய் மாண்கலனும் பொற்றுகிலு — மங்கணறும்
பூவும் படாமும்விண் பூம்புனலும் வானமுதும்
யாவுங் கொணர்ந்துவைத்தா ரேய்ந்து. (கங)

அப்போ தயன்முதலா மண்டரொடு மாமுனிவர்
கைப்போ திணைகுவித்துக் கந்தன் பாற்—செப்போத
மஞ்சனவார்ப் பின்னவன்பேர் மந்திரங்கொண் டாயதிரு
மஞ்சனநீ ராட்டினார் வாய்ந்து. (௧௪)

செங்கதிர்வேற் சேய்க்குத் திருமஞ் சனமாட்டித்
துங்கமுறு பொன்னுந் துகிலணிந்தே—யங்கண்வீற்
றோரா தனத்தி லுமைமைந் தனையிருத்தித்
தாராதி சாத்தினார் தாம். (௧௫)

சந்தனத்தின் றேய்வைகொட்டித் தண்பா ளிதமப்பி
யுந்துநறு ஞானமட்டித் தொண்கதிர்வேற்—கந்தனெழின்
மெய்யின் மிளிர்கலன்கண் மேவுறவே சாத்தினார்
பொய்யில் புலவர் புரிந்து. (௧௬)

சந்தகில்கர்ப் பூரந் தனிமணங்கால் குந்துருக்க
வுந்துவிரைக் குக்குலவ வொண்பேஞ்—செந்தழன்மாத
தீபமணி யார்ப்போடு தேவாதி தேவன்முன்
றூபதர்கள் சுற்றினார் தாம் (௧௭)

இவ்வண்ண மேனையவு மெல்கவே லேந்துகரச்
செவ்வண்ண மேனிகொண்ட சேய்க்குநல்கி—யவ்வண்ணப்
பத்தியையி னன்றாற் பணிந்தேத் தினரெவருஞ்
சித்திசங்கற் பத்தினராய்ச் சேர்ந்து. (௧௮)

தேவுறுமா வெற்பிற் றிசைமுகன்மா லாதியும்ப
ரேவருநன் கர்ச்சனைசெய் தேத்தெடுப்ப—மேவி
யதுகொண் டமர்ந்தா னருட்குமுகங் கட்டும்
விதுகொண்ட னேரான் வியந்து. (௧௯)

தேவகிரிப் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௧௪௪௭

---

அசுரேந்திரன்

# மகேந்திரஞ்செல் படலம்.

---

அந்திநிறத் தண்ண லருள்சே யயில்வேலாற்
றந்திமுகம் பெற்றவீற் றாரகன்றா—ஞெந்திறந்த
மாற்றமொற்ற ராற்றெரிந்து மாது சவரியன்னான்
மேற்றுயர்ந்து வீழ்ந்தாண் மெலிந்து. (௧)

மற்ற மனைவியரா மாதரொடு நீங்கரிய
சுற்றம்புதைத் திரடகத் துன்பநனி—யுற்றங்
கலம்புறமுந் நீர்படியு மம்மென் மயில்போற்
புலம்புறுவாண் மங்கை புலர்ந்து. (௨)

மாயோன் பதநீசெல் வாயன்று மாமலரின்
மேயோன் பதமுமற்றே வேதமுதற்—றூயோன்
றிவணற் கயிலையின்கட் சென்றனையல் லான்மற்
றெவணுற் றனைசொல் லியம்பு. (௩)

எண்ணீர்மை யெய்ந்தா யிமையோ ரெவருநின்பா
லெண்ணீர்மை யெய்ந்து மெழுந்திலைகொல்—கண்ணீர்த்
திவலைதீர்ந் தின்பந் திளைப்பவன்னா ருள்ளக்
கவலைதீர் நாளின்று காண். (௪)

ஆய்சம்பு நிற்கங் களித்த வரமுன்னியே
மாய்வில்லை யென்ன மதித்தனையாற்—சேய்விடுத்த
வென்றியாம் வேலால் விளிந்தவெவன தன்பநினை
யென்றியுன் காண்பே னினி. (௫)

தாகமுற்று நின்னைத் தழுவவது கண்டுநீ
மோகமுற்றென் னோடு முபங்குகிலாய்—போக
மயின்றாயோர் மாற்ற மறையாய் வறிதே
துயின்றாய் துணியுளந்தா சொல். (௬)

பொன்னார் மவுலி புனைந்தவுணர் நிற்சூழ
மின்னா ரரியணைமேன் மேவியநீ—யிந்நாளிற்
பாங்கெவரு மின்றிப் படுகளத்திற் றுஞ்சினையா
லூக்குதுவுஞ் சின்னாளோ வோது (௭)

உயிர்நா யகனென் றனைநவின்றே னானு
னுயிர்போ கியும்பா ழுடலி—லுயிர்சுமந்தே
னென்செய்கே னென்றுணைவா வென்றென் றிரங்கினாண்
மன்செய்கை காண்சவுரி மாது. (௮)

பின்னுமுள பன்னியரும் பீழை கொடுபுலம்பி
மன்னவனைச் சுற்றி வருந்துங்கா—லின்னதுகேட்
டாசுரத்தின் பாற்செ லசுரேந் திரனுற்றான்
மாசுரத்தின் மேவினன்போல் வந்து. (௯)

உயிர்த்தான்றன் றாதை யொழிந்ததனைக் கண்டான்
செயிர்த்தான் கலுழ்ந்தான் றியங்கி—யயிர்த்தரீ
னழுங்கினான் றீயுண்டா னன்னவே வீழ்ந்தான்
புழுங்கினா னெஞ்சம் புலர்ந்து. (௧௦)

ஒருநாளு மேவா வுறுதுயரி லாழ்ந்தீதான்
றருமா வனையினிணைத் தாள்வீழ்ந்—திருபுன்
னருந்தலைவ னுண்டையா னன்றேயோ தென்று
வருந்தி யுழன்றான் மருண்டு. (கக)

தாய்மார் சமைவிலக்கித் தாதைதனைக் காற்றுவன
வாய்மா விதியி னுழைத்தியற்றித்—தூய்தாக
முந்தியலிற் கோடித்தான் முன்னவனைக் கண்டமரர்
நொந்திரியல் போக நுனித்து. (கஉ)

எந்திரத்தேர் மேல்வைத் தியக்கிவந்து வன்களத்திற்
சந்தனத்தின் பள்ளிமைத் தாதையையிட்—டுந்துதுயர்ப்
பாமக் கடன்மூழ்கிப் பண்பிற் றகனஞ்செய்
தேமக் கடன்முடித்தா னேய்ந்து (கந)

தீயரிய தாதையொடு தாமெரியில் வீழ்வமெனச்
சேயரிக்க ணன்னுய் சிறியனுயவா—வீபிருந்தி
யென்ன நவிலமறுத் தின்பிலளாள் வேர்த்துரைப்ப
வன்னவா றென்றா றுய்ந்து. (கச)

வேனோ புருவி விளிந்தா ரகன்றலையாந்
தேனேர் மொழிமடவார் தீயிழிந்து—வானேறிப்
பொன்னகரம் புக்கார் புகல்பிரிவாற் றேதெவருந்
துன்னகரத் துற்றார் துயர். (கரு)

போகியசோர் காலை புலம்பகர் நீங்கியுற்று
ராகியசில் லோர்தனைச்சூழ்ந் தன்பினுற—வேகியே
யாரிதியுண் மேவு மகேந்திரமூ தூருற்றான்
சூரினவ னல்கு சுதன். (கசு)

உள்ளந் தளர்ந்துமுக னொள்ளொளிதான் போய்க்கண்ணீர்
வெள்ளந் தரவறுமை மேவினன்போ—லெள்ளலுற
வந்து செலலு மகேந்திரத்து வாழவுணர்
மைந்தனிலை கண்டார் மருண்டு. (கஎ)

காரவுணர் கண்டு கரம்விதிர்த்துக் கண்ணினீர்
வாரநனி யேங்கி வருந்தியுளஞ்—சோரவே
யார்ந்தவசு ரேந்திரமன் னுங்குமர னீங்குவா
னோர்ந்ததென்கொ லென்பார் நினைந்து. (கஅ)

தீயசெயல் செய்யான் றிறனோக்கித் தாதைசீ
போயகலென் றேவிடுத்தான் போலுமென்ப—ராயவே
தந்தைசெயுந் தீமை தனைக்கண் டவற்றணந்து
வந்தனன்கொ லென்பர் மறுத்து. (ககூ)

தாரகனென் னுமத் தகுவர்கோன் போரியற்றி
யாருயிர்நீத் தானென் றறைவதற்குக்—காரணமுண்
டூழிவுணரைமா லோங்கலிடைக் காண்கிலோம்
பூழிகண்டோ மென்பார் புலர்ந்து. (உ௦)

செங்கண்மால் செல்லான் செருச்செயமுன் செற்றமுணர்ந்
தங்கண்மா ஞால்மளிப் பானுமுன் னுன்—றிங்கண்மா
வில்வமுடி வேய்ந்த விமலனன்றி வேறொருவர்
வெல்வதரி தென்பர் வெகுண்டு. (உ௧)

வானோர் கருடர் வயங்கியக்கர் காந்தருவ
ரேனோ ரிடுபணிக ளேபுரிவார்—கோனோ
டிகலமர்செய் வீரரெவ ரேகுமைந்தன் செய்கை
புகலவரிதென்பர் புலர்ந்து. (உ௨)

எனப்பலவா றிவ்வண்ண மேவருமே யீண்டித்
துனப்படுதுன் போடுவயின் றோறு—மனப்பலசீர்
மல்குதிரு வாய்ந்த மகேந்திரத்திற் சென்றிறைவன்
செல்வமணிக் கோயிலுற்றான் சேய். (உ௩)

வீர மகேந்திரத்துண் மேயவசு ரேந்திரன்றன்
கூரழகத் தாணி குறுகிடுங்காற்—சூரன்
வரியணைதார் சூடி வயவவுணர் சூழ
வரியணைமேல் வீற்றிருந்தா னண்டு. (உ௪)

தொழுந்தகைய மன்னையெய்தித் தோன்றலன்னன் றண்முன்
விழுந்தவற்றைப் பற்றநனி வேந்த—னழுந்துயர்கண்
டைய நிகழ்ந்ததென்கொ லஞ்சே லறைதியென்றான்
பையமைந்தன் சொலவான் பணித்து (உ௫)

ஆதி பகவன்சே யாகண் டலன்புணர்ப்பா
லோதிடுமா பூதங்க ளோடேகி—மோதிகலிற்
றோலாத் திறலுன் றுணைவனையும் வெற்பினையு
வேலாற்செற் றானென்றான் வேர்த்து. (உ௬)

அன்னதுகே ளாச்சூ ரழகிதென நக்கசல
மன்னவுண னோடிளைய வன்றிறலோன்—றன்னையரன்
வண்மையுடை மைந்தனோ மாய்தல்செய் வானிதுபொய்
யுண்மை யுரைத்தியென்றா னுற்று. (உ௭)

தந்தைகே ளீது சரதமவிர் தாரகனு
மெந்தையொடு சையத்தை யீசன்சே—யுந்தயிலா
னெய்தி னெறிந்தா னுவலருமீ மக்கடனுஞ்
செய்துவந்தே னென்றான் றிகைத்து. (உ௮)

தாரகனை நற்றுணைவன் றானிறந்த செய்திசெவி
சேரவெய்ய சூருளத்திற் சீற்றத்தீ—யாரப்
புருவநெற்றி யேறப் புகைதுண்ட மேவ
வுருவெகுளி பெற்றதொத்தா னுற்று. (உகூ)

கண்ணிரண்டுஞ் செக்கர் கடுப்ப விலங்கெயிறீ
ரெண்ணிரண்டுந் தழலுகயே யொப்பவளை—வண்ணிரண்டு
தந்தம் பிறையிற் றயங்கமெய்வான் போன்றதுநி
வந்தசினச் சூரபது மற்கு. (௩௦)

துன்பார் கடல்படியுஞ் சூரா தனத்தினின்று
வன்பாரில் வீழ்ந்துருமின் வாய்ந்தரற்ற—மன்பாய
ஞால நடுங்கியது ஞாயிறமுற் கோளிரிந்த
காலனுமச் சுற்றனனங் கண். (௩௧)

அங்க ணமரவுண ராரஞரின் மூழ்கியே
செங்கணீர் காலத் தியங்கினர்—மங்கலமா
ரங்கர முற்று மழுகுரலி னார்ப்புவரி
யென்ன மலிந்த தெழுந்து. (௩௨)

மூந்துசினத் தோடெழுந்து முன்னொற் றரைநோக்கி
வெந்திறல்கொ ளெம்பியுயிர் வீட்டிவரு—கந்தனிகல்
போர்கடத்தல் வேண்டுமென்றன் பொற்றோ படையாவு
மோர்கணத்திற் றம்மினென்ற னுற்று (௩௩)

பன்னனிவை கூறுதலு மற்றிற வலர்யாருந
துன்னனிகங் கொண்டணைந்தார் சூழ்ச்சியமோ—கன்னெழுந்து
சூர்வயத்தா டாழ்ந்தொன்று சொல்வலது கேட்டியென
வார்வமொடு செப்பு மமைந்து. (௩௪)

கச்சமிலா மாப்படைகள் கற்றுவல்லோர் பற்றலர்த
மச்சமிலாத் தானை யணிநகரை— நொச்சிதனை
யண்ணிற் றெனினு மமர்செயச்செல் லார்சினத்தோ
டெண்ணித் துணிவா ரினிது. (௩௫)

கூறு குலம்வினவிக் கொள்கை நிலம்வினவி
வீறு நெறிதான் வினவியிக—லேறு
சலம்வினவித் தானைத் தகைவினவி யன்னார்
வலம்வினவிச் செய்வரொன்று மற்று. (௩௬)

வரத்தில் வலியரோ மாயையில்வல் லாரோ
கரத்தி லுறுபடையிற் கற்பி— னுரத்தினரோ
திண்மையில்வல் லாரோ தெருளினின்மிக் காரோவென்
றெண்மையினா ராய்வ ருகந்து. (௩௭)

பகன்மயூரன் சேனன் பரிதிப்பு ணுமன்
சுகனின்னர் முற்றா துவரைத்—தகவிற்
கொணர்தி ரெனவுழைஞர் கொண்டேய்ப்ப வன்னூர்
வணமுறுசூர் தாள்பணிந்தார் வந்து. (சஎ)

வாரமுறு சாரணர்கண் மன்னவன்றா டாழ்ந்துநிற்பச
சூரவரை நோக்கிநீர் ...ண்ணெனப்போய்ப்—பாரின்கண்
வந்தகந்தன் றன்மைபடை வன்மையிவை யாவுந்தேர்
தந்தடைதி ரென்றுரைத்தான் றன். (சஅ)

ஒற்றரஃ தோர்ந்தனையா ணெண்கழற்கா ஏழ்ந்தலைசூழ்
நற்றரணி நோக்கியே நாடலுற்றார்—கொற்றத்
திருந்தவுணர் போற்றிடச்சூர் சீயவணை மீதி
விருந்தரசு செய்தா னினிது. (சக)

அசுரேந்திரன் மகேந்திரஞ் செல்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா கஉசக.

---

# வழிநடைப் படலம்.

---

பாயிரமா வேதம் பரசுகுகன் சேவடியை
யாயிரமாஞ் செங்கரமு மாருலகிற்—போயுலவத்
தாழ்ந்தெழுவான் போன்றெழுந்தான் றவிவரு மேழ்பரியோ
னாழ்ந்த கடன்முகட்டி லார்ந்து. (க)

அப்போ தயன்மா லமரர் தொழநின்ற
வொப்போ தருங்குமா ஹம்பருயர்—வெற்போவி
மேற்றிசையை நோக்க விரிகதிரோன் றென்றிசையாய்ப்
போற்றிசையப் போனன் புரிந்து. (உ)

அநக னிமித்த மரியதவ மாற்றச்
சினவரவப் பூணணிந்த செல்வன்—றனநகைசொல்
சூதாரங் கண்டாந் துணேவிக் கிடமளித்தோன்
கேதாரங் கண்டான் கிளர்ந்து. (ங)

எடுத்த கரமே யிறைசிவனே யென்னல்
கடுத்ததிசைக் கம்பமொழக் காட்ட—விடுத்தவனுன்
மாசி நகரமதை மங்குலிவர்ந் தேமறைக்குங்
காசிநகர் கண்டான் களித்து. (ச)

நந்திதவ மேற்கொள்ள நாளுஞ் சிலாதரன்சேய்
நந்திதவ மேற்கொண்ட நற்பதியாஞ்—சந்தத்
திருப்பதங் கண்டான் றிகழுவைத்தோ னேத்தும்
பருப்பதங் கண்டான் பணிந்து. (ரு)

மன்னன்னை யோடுமுனி வர்கித்தன் வெற்பொரீஇக்
கொன்னதத்தூர் டேகிக் குகைவழியே—முன்னும்
வருவேங் கடமாம் வரைகண்டா னன்பாங்
குருவேங் கடமாங் குகன். (சு)

சிலந்தியரா வேழஞ் சிவகோசன் கீரன்
வலந்திண்ணர் கன்னியருள் வள்ளல்—சலந்தரன்றன்
மாளத் திகிரிகண்டான் மாமைந்தன் றூயதிருக்
காளத் திகிரிகண்டான் காண். (எ)

ஆக்குமுயி ரெல்லா மழிக்கவருங் காளியுட்கக்
காக்குமரி வேண்டக் கழல்சிரமே—றாக்கு
முருவாலங் காடு முமாபதிசேய் கண்டான்
றிருவாலங் காடு சிறந்து. (அ)

செங்கதிர்வே லண்ண றிசைமுகத்தோ ராதியராம்
புங்கவர்கள் பூசித்துப் போற்றிடவே—பொங்கருளின்
மன்றனகர் கண்டார் வயனியொடும் வாழ்கச்சி
மன்றனகர் கண்டான் மகிழ்ந்து. (கூ)

கம்பா நதிக்கரையிற் கன்னியருச் சிக்குமே
கம்பாதி தேவனையுங் கண்டயன்மா—லம்பாவை
கள்ள மலர்தூய்க் கனிந்துபூ சித்ததளி
யுள்ளனவுங் கண்டா னுவந்து (க0)

மாலு மயனும் வராகவன்ன மாய்க்கீழு
மேலுந் துருவ வெளியாகிக்—கோலநங்கை
பாதிவரை கண்டான் பரப்பிரம மாய்நின்ற
சோதிவரை கண்டான் றுதித்து. (கக)

மாவணங் காட்டி மணந்தவிர்த்து வன்றொண்டர்க்
காவணங் காட்டி யடிமைகொளும்—பூவணமார்
பெண்ணையிட மேவினான் பெண்ணையிடஞ் சூழ்கிடக்கும்
வெண்ணெயிட மேவினான் வேள். (கஉ)

திரைக்கரத்தின் முத்துந் திச் சீர்மணிமுத் தாறு
மரைக்கழன்முன் வைத்திறைஞ்ச வந்து—விரைக்குமுத
வாயமுது குன்ற வருமொழிசேய் கண்டனனே
தூயமுது குன்றந் தொழுது. (கங)

திரிபு

நெருங்குவளை வேயமரு நீள்குறிஞ்சி பாந்த
ளொருங்குவளை யோடு முயர்கான்—சுருங்கை
மருங்குவளை யேறு மருத மணங்கூர்
கருங்குவளை மேவுங் கழி. (கச)

யமகம்

தாமரைமே யும்புறவந் தண்ணறிய பூங்கடப்பந்
தாமரைமே வுங்குறிஞ்சி சங்கமுட—ஞமையிவை
தாமரைமே லெய்துநெய்தல் சாரன்னம் வாவிதொறுந்
தாமரைமே வும்மருதந் தான். (கரு)

பிறிமொழிச்சிலேடை.

வாசம் புரிந்துபவ மாய்க்கவும்பர் சேவிக்கத்
தேசம் பலமேவுந் தில்லையே—பாசங்
கரனேற்று னத்தன் கருதரிய கங்கா
தரனேற்று னத்தன் றலம். (கசு)

செம்மொழிச்சிலேடை.

அங்கமல மாவகல மார்ந்துருமீ ஞமையுற்றுச்
செங்கண்மா னேர்தடஞ்சூழ் தில்லையே—பங்கமுற்றுப்
போதத் திருந்தார் புரஞ்செகுத்தார் மெய்யன்பர்
போதத் திருந்தார் புரம். (கஎ)

பாடகமடக்கு

கானங் கடப்பமென்றூர்க் காளை பிறவியெனுங்
கானங் கடப்பமென்றூர் காதனேய்க்—கான
மருந்தில்லை யென்றே மயங்கவருள் சீர
மருந்தில்லை யென்றேம் வரும். (கஅ)

நிரோட்டகம்

இரசிதநா கந்தேய்ந் தினையக் கனகாத்
திரியாற்றூழ்ந் தாந்தகைத்தே சேணந்—தாநிலனே
யென்றேத் தாங்கி னியனலந்தாங் கண்டதில்லை
யென்றேத் தாங்கி னியல். (கக)

பிறிதுபடுபாட்டு

பொன்னன்ன வாகன் புரமூன்று மட்டோன்பன்
னன்னமேற் கும்பரையித் தன்றேமா—மன்னன்ன
வாவி மகா மிசைப்போய்ப்பம் மின்னன்ன
மேவி விழுதில்லை மன்று. (உ0)

இதுவுமது

பொன்னன்ன வாகன் புரமூன்று மட்டோன்
பன்னன்ன மேற்கும் பரையத்தன் றேமா
மன்னன்ன வாவி மகரமிசைப் போய்ப்பம்
மின்னன்ன மேவி விழுதில்லை மன்று. (உக)

திரிபு

தாய்நோக்க மின்பந் தரவெம் புலியரவந்
தாய்நோக்க மாலயனஞ் சங்கிரிய—தாய்நோக்கத்
தாமன்றங் கண்டான் றனித்தாண் டவம்புரியு
மாமன்றங் கண்டான் மகிழ்ந்து. (உஉ)

பின்முடுகு

வேதாந்தத் தொண்சுடரா மெய்த்தகா வித்தையதா
நாதாந்த மாகி நவிலரிய—போதாந்தச்
சிற்சபையிற் செப்புமனு திக்கெட்டாச் சிற்ககனத்
தற்சொருப முற்றான் றனித்து. (உங)

தகரவிகற்பத்தான்வந்தது

தீதாதி தீத்ததீ தத்திதத்த தேததே
தாதாதீத் தத்தத்தத் தாதுதித்தோத்—தோதாதி
தேத்தொத்த தாதாத்தித் தேதத் துததிதுதை
தேத்தொத்த தாதா திதித்து. (உச)

கோமூத்திரி

வருமந் தருமாய் வளைந்தார் பவமா
கருமந் தருநோய் களைந்தாள்—பரமா
வுருவம் பலவம ருந்தேய்வார் மோது
திருவம் பலமமர்ந்தாய் தேர்ந்து. (உரு)

கூடசதுக்கம்

எண்கைதனி லோங்கனலை யேந்தியபூ தப்படையா
வண்சரியை யாதியன்போ டாற்றுநர்க்கங்—குண்மகிழ்ந்தீ
சாலோக சாமீப சாரூப சாயுச்ய
பூலோக கைலையா போற்று. (உசு)

உபயநாகபந்தம்

அனக முனிவ ரநித ரியலண்
கனக வவையா கருது—மனனே
விரிமா வளபவ வேதாவோ தாத்த
வரியா மரிவையனே யாள். (உஎ)

உலக முழுதி னுமாபதி யீனக்
கலக மருவு கரும—மலமே
தனைநி களந்தீ ரசர சவவி
யதிப துயருவனே யாள். (உ௯)

இரதபந்தம்

பாகாய தேனேர் பகருஞ்சொல் லாடரக்க
ஞகார மாலாய்க்கொள் ளத்தனன் றிற்—சாகாத
தினன்றினன்வாய்ந் தேத்திடமன் றில்லையகந் துன்னற்
கனகமன்றி லாடரனே கா. (உ௯)

கமலபந்தம்

காமனம மேமநம காமனம மேமநம
காமருசி ரம்பலத்திற் கன்னிசிவ—காம
வனிதைதிருக் கண்களிக்க வார்சடைநீர் செங்கை
வனிதைதரச் செய்தாண் டவ. (௩௦)

என்றினைய பற்பலவா றேத்த வமரர்குழாங்
கன்றிலகு செங்கையுமை காணியபொன்—மன்றிலா
னுமோ வாநந்த வாரமர்த மைம்புலனுங்
கூடுமோ வார்ந்தான் குகன். (௩௧)

ஆனந்த நாடகங்கண் டாராத காதலொடு
வானந்த நீண்ட மதில்கடந்து—கானந்த
மன்னிவளர் காவினொடு வாவிபல மேவிமலி
சென்னிவள நாடடைந்தான் சேய். (௩௨)

குடமுனிவ னென்னக் குடத்திருந்து வந்து
புடவிமகிழ்ந் தேத்தவரு பொன்னி—வடகரையில்
விண்ணிவந்தான் மால்போல் விரிபொழில்சூழ் வண்கோட்டு
மண்ணிவந்தான் செவ்வேண் மகிழ்ந்து. (௩௩)

வழிநடைப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௪உ௭௯

# குமாரபுரிப் படலம்.

செங்கதிர்வே லண்ணலொடு திண்வயவ ரொன்பதின்மர்
பொங்கிலக்கர் பூதர் பெருபடைஞர்—புங்கவர்க
டண்ணியகா விண்ணைந் தருவோ டிறவாகு
மண்ணியகம் வைகினர் வந்து. (க)

அன்னபோ தாங்கவுண ணுடமரி லார்புழுதி
மன்னுருவின் வந்திரவி மைந்தனிடந்—துன்னித்
தொழுதனன்றன் றென்னநீர் தோய்பவன்போ லேகி
முழுகினன்முந் நீரின் முனம். (௨)

செக்கர் சடையயங்கத் திங்கள் பிறைதயங்கச்
சுக்கை தலைத்தொடையல் சூழ்ந்திலங்க—முக்கண்
முதல்வனன்பி னுற்றதொக்கு முன்ன ருமைதன்
புதல்வனேதி ருற்றவந்திப் போது. (௩)

பானல் கருவர்மற்றப் பம்மடவார் தம்மொடிராக்
கோனல் வரன்மகிழ்வு கூரவந்து—மானவேன்
மைந்தன் செயல்காண்பான் வாய்ந்ததொக்குந் தாரகையோ
டிந்துவிண்ணி வாரு மியல்பு. (௪)

நீணிறங்கொள் பட்டி னிரைவெண்மணிகோத்து
மேனிலவ யாத்திடையார் வெண்பட்டி—ஞானவொள்வி
தானத்தின் மேவுமே தாரா கணஞ்சுலவ
வானத்தின் மேவு மதி. (௫)

தீபமாஞ் சேய்க்குச் சிறப்பெடுப்பான் வானிலக்கத்
தீபமொடு நாப்பட் டிகழவிருந்—தீபமுமே
வானோர் மகிழ்வுற்று வைத்தொளிர்தன் மானுமிளிர்
மீனோ டவிரும் விது. (௬)

செங்கதிரோன் றேசிற் றிகழ்குமரன் சேயொளியா
லங்கிருள்போய் விட்டதஃ தற்புதமோ—பங்கமல
வல்லிருளன் னான்றிருநா மத்துளொன்றை யுள்பவர்முன்
னில்லெனினு நில்லாதெ னில். (௭)

மண்ணி யகன்கரைசார் மாதேவ னாமவனை
நண்ணியயன் மாலிமையோர் நம்பனம—ரெண்ணி
விருந்தவங்க ளுண்டெனினு மிந்நதியின் றீரத்
திருந்தரு ர்க வென்றா ரினிது. (௮)

அன்னா ரகங்களிப்ப வாண்டருள்வா ளண்டரொடு
முன்னார் புனைவன் முகநோக்கிப்—பொன்னார்
முதுநகரொன் றிங்கிமைக்கு முன்புனைதி யென்றான்
மதுகரஞ்சூழ் நீபத்தார் மன். (௯)

அன்னவா றாக வயனோர் மயனென்போ
னுன்னு மணிகழும்ப ருள்ளிட்டோர்—மன்னவே
யங்க ணகரொன் றகத்தா னமைத்தனனே
யங்கண் விருந்துகொள வாண்டு. (௰)

திங்கண் முடிபுனைந்தோன் செல்வன் றனைநோக்கி
யிங்க ணகரி லெழுந்தருள்கென்—றங்கண்
பரவறிஞன் போற்றப் பரிசனங்க ளோடும்
வரநகரிற் சேய்புகுந்தான் வந்து. (கக)

மன்ற னகரின் வளநோக்கி யாமுறைய
நன்றறிஞ னாற்றிட்டு நன்னகரிஃ—தென்றலுமே
கூரெழிலோ டெவ்வளனுங் கொள்ளிந் நகர்சேய்ஞ
லூரதென்றோர் பேர்நவின்றா ரோர்ந்து. (கஉ)

பன்னிருதோ ளண்ணல் பரிந்தா லயத்திருந்தான்
மன்னயன்மா லன்னிளவன் மாரிலக்கர்—முன்னெவரு
மத்தமணி யாண்மயனா ராங்காங் கமைத்துவைத்த
தத்தமிடம் வைகினார் சார்ந்து. (கங)

தாரகன்குன் றூடிறந்த தன்மைகண்டு வானவர்கோ
னாரமகிழ் வுற்றிருந்தா னவ்வழியன்—பாரு
மனத்தினனி தாழ்ந்ததான் மன்னுபுகழ்க் கொச்சை
வனத்திற் றிகழ்தெய் வதம். (கச)

பொன்னகரோன் பூணும் புலோமசைதன் பூணுநனி
மன்னுகிழி யோடுமுன் வைத்தவைசான்—றுன்னடைகண்
முன்னுய்த்து வேர்தநீ முன்காழி யில்வைத்த
வின்னதந்தான் கொள்ளென்ற தேற்று. (கரு)

ஒண்மணிப்பூ ணிட்ட வொளிர்பூந் துகிற்பொதியைத்
தண்விரலி னீக்கிச் சதமகன்றன்—கண்களிக்கக்
கண்டா னணங்கைக் கருதினான் காமநோய்
கொண்டா னயர்ந்தான் குலைந்து. (கசு)

வேந்தன் விரகநோய் மீக்கொண் டழுங்குகையாற்
போந்தமணிப் பூணொன்றும் பூண்டிலா—னேந்திமுன்போ
விந்தக் கிழிதனைநீர் யாத்துவைமி னென்னவன்னா
ரந்தக் கணம்புரிந்தா ராகு (கஎ)

ஆனபோ தண்டர்கோ னோர்தே விணைப்பார்த்துன்
றானநீ செல்கெனலுந் தாழ்ந்திறைஞ்சிப்—போனதுபி
னுட்புகுகா மத்தீ யுடலைச சுடுகையினாற்
றட்பமுள மேவினான் றான். (கஅ)

வெஞ்சுரநோய் மேயவனவ் வெம்மைதணி வான்குளிர்சா
லஞ்சலநீள் வாவி யடைந்தமைபோல்—விஞ்ச
ஈளின விழிச்சசிதோ ணச்சிமெலி வேந்தோர்
புளின மிசையமர்ந்தான் போய். (ககூ)

தண்ணென் புளினமுமத் தார்வேந் தினுக்குமிகத்
திண்ணென் பரன்மண் சிலம்புறழ—வெண்ணெண்
கலைமதியும் வெய்யவனிற் காயப் புலம்பி
யுலைவுறுவா னுள்ள முலர்ந்து. (உ0)

ஆரமுதி னோடுதித்த மந்தக் குணஞ்சிறிதுஞ்
சாரவிலை வெண்மதியே சார்ந்தநஞ்சி—னீரதால்
மேல்குளிர்தந் துள்சுடுதி வெவ்வஞ் சசினின்மெய்
பால்வயினு லங்கரந்த பண்பு. (உக)

மென்மதியோர் மாற்றமிடர் வாய்ந்தார் தமையெடுத்த
னன்மதியோர் செய்கை நலமன்றே—சொன்மதியோர்
நின்பேர் நெறிகுழலை நெஞ்சினினைந் தெய்த்தேற்குத்
துன்பேநீ தான்புரிவாய் சூழ்ந்து. (உஉ)

மதியே நினக்கு மதியே மயக்குஞ்
சதியேய் நடையா டனக்கும்—விதியே
சசியெனும்பே ரிட்டான் றமியேன் வெளியுள்
வசிதந் திடர்செயவோ வந்து. (உங)

பால்போ னிலவேநீ பம்மனையார் தம்மொடுற்றாய்
வேல்போ னயனியையான் விட்டகன்றேன்—சூல்போற்
பிரிவென் பதன்பொருளின் பெற்றி யுணர்ந்தாற்
பரிவென்ப துன்பாற் படும். (உச)

மருவலார் தம்மை வருத்தல் வழக்கா
முருவிலார்க் கூர்தியா யுற்றாய்—செருவிலெனைக்
கொல்கின் றனைபின் கொடுபோவா யல்லைநினை
வெல்கின் றவரார் விளம்பு. (உரு)

தென்றலையி னின்றுவரு தென்றலை யென்றனுடல்
பொன்றவரு கின்றனைபேர்ப் போர்க்கால—னென்றமையாற்
காமன்றா னென்று கரைவரவர் நிற்பநினை
யேமன்றா னென்றுரைப்பேன் யான். (உசு)

உன்றனுரு வன்றுகொண் டுய்ந்தனனன் மன்குயினீ
யின்றெனுயிர் கொல்லவரு மோர்மதத்த—வென்றி
தருகாள மாய்த்தொனிக்கிற் சார்பெவர்கா மத்தி
னுருகா வுழல்வே னுயிர்க்கு. (உஎ)

கனைவார் கடன்முரசோன் கைக்கணையா னொந்தேன்
பனைவாழ் மகன்றிலென்னேய் பாரா—யினைவேன்
செவியினு ராசஞ் செறித்தாங் குறுத்துங்
குவ்துயர்செய் நின்றீக குரல். (உஅ)

குன்றிக்கட் டிவாய்க் குயில்காள மூதவரு
மொன்றிக்கண் வில்லுடைய வுத்தமனின்—வென்றிக்கோ
லாண்டென்மே மைத்தவடு வாயிரங்கண் ணுயினவே
யீண்டென் னுறுப்பா மெனக்கு. (உகூ)

பொருவிழிப தாகை புருவம்வில் கைமெய்
மருவுகணை யல்குன் மணித்தே—ருருமகளி
ருன்படையார் சாலையா முத்தமவன் றுரையுன்னித்
துன்டையா தாரெவர்நீ சொல். (௩0)

என்றன் பகைக்கன் றிடர்தந்தா யஃதன்றி
மன்றனுவேட் கின்று வயமுரசா—நின்றதிர்தி
யுன்னகத்திற் றீய துளதெனபர் வாரிமன்னாஃ
தென்னகத்திற் றேர்ந்தே னினிது. (௩௧)

தூயமதி தென்ற றுயரன்றி லாதியான்
மேய பருவரலாம் வேலையுற்றுத்—தீய
விரகமுற்றேன் கேடுறல்போற் கேதமுற லன்றி
விரகமுற்றே னென்செய்வான் வேறு. (௩உ)

இந்திரனுக் கின்ன லிரவி லிழைத்துலவுஞ்
சந்திரன்றன் மின்னொளிபோய்ச் சாம்பவிரு—ணந்திடவே
யங்கதிர்வாள் வீசியவ்வேந் தாரஞரைத் தீர்ப்பவன்போற்
செங்கதிரோன் றோன்றினான் சேண் (௩௩)

கமலமன் றன்வரவு கண்டுண் மலரக்
குமுதமன்செய் கையுணர்ந்துள் கூம்ப—வமரரெலாந்
தத்தங் கடனுஞற்றித் தாபதரோ டேத்தவின
னத்தமணி யிற்றிகழ்ந்தா னங்கு (௩௪)

தன்றிசையிற் றோன்று தபனனைமன் கண்டளவிற்
பொன்றருவெங் காமநோய் போயிதென்கொ—லென்றுவெள்கிப்
பூதிபடு மெய்யோடும் புண்ணியனைத் தாழ்ந்துமறை
யோதி மிகத்துதித்தா னுற்று. (௩௫)

முன்னின்ற வேந்தின் முகநோக்கிக் கந்தவே
ளின்னருள்செய் தாரணங்க ளேத்தியின்னுந்—துன்னுகிலாப்
புண்ணியன்றாள் பூசை புரிதுநா மாங்கதனுக்
கண்ணியவை நல்கென்றா னய்ந்து. (௩௬)

சொற்ற வளவிற் றொழுதுபோ யேவலரைத்
துற்ற விடந்தோறுந் தூண்டிநறை—யுற்றமலர்க்
கண்ணிதுகி னன்னீர் கமழவி தூபந்தீப
நண்ணுகந்த மாதிதந்தா னன்கு. (௩௭)

செய்வதற்கொண் ணுதென்னச் சேய்மயனைக் கொண்டெவரு
மூய்வதற்கோர் கோயி லுளுற்றியே—சைவநூல்
சாரு நெறிநாடித் தாதையெவ்வெக் காலமுமை
ஞோருருவந் தாபித்தா னோர்ந்து. (கூஅ)

எண்ணெய்மா வாமலக மேரரிச னங்கவியம்
பண்ணைந் தமிர்தம்வெண் பாறயிர்நெய்—தண்ணுறுவங்
கன்னலரி யுண்ட கனியருணச் சாறிளநீ
ரின்னறுஞ்சாந் தாட்டி மிறைக்கு. (கூகூ)

தீர்த்தநன்னீ ராட்டியபின் றேசுருவிற் பொற்றூசு
சாத்தி நறுங்கலவைச் சாந்தணிந்து—பூத்தெரிய
லின்பி னுறப்புனைந்தே யின்புழுக்கன் மின்கலத்திட்
டன்பி னருத்தினா னங்கு. (ச0)

கந்த மடைகாய் கலந்துநல்கி வாசவிரை
முந்துபுகை தீப முதலாகத்—தந்தின்
றுறைகண்ட வாறுதவித் தூமலர்க்கை சேர்த்து
முறைவணங்கி யேத்தினான் முன். (சக)

சந்த மலர்தூய்ச் சரணவத்தி லேயுதித்த
கந்தவேள் செய்பூசை கண்டருள்வா—னந்தக்
குழகனெதிர் கோதையொடுங் கோமான் குலையா
மழவிடைமேற் றோன்றினான் வந்து. (சஉ)

கங்கைதங்கோன் கண்ணுதலைக் கண்டளவிற் சென்னிமே
லங்கைகுவித் தேத்த வடல்வீரர்—பொங்கிலக்கர்
பூதரயன் மாலாதி புங்கவர்கள் போற்றினா
ரோத முழக்கி னுவந்து. (சங)

அந்த வமயத் தருள்வடிவ மாமத்தன்
மைந்தனைப்பார்த் தன்றன் வழிபடற்கு—வந்தனநீ
யீதடைவிற் சோடியெனு வெவ்வெப் படைக்குமன்னு
வோதுபடை யீந்தா னுகந்து. (சச)

இந்தவியன் மாப்படைதா னெண்கணன்மால் பெற்றுளதன்
றுந்துவலி யோரா ருளரெழிலார்—மைந்தனே
பன்றிறல்வெஞ் சூர்படைமாய்ப் பானீது பற்றுதிநீ
யென்றருளிப் போனா னிறை. (சரு)

செவ்வேலை யேற்றோன் சிவனருள்செய் தங்கேகு
மவ்வேலை யண்பி னரற்போற்றித்—தெவ்வேலை
யுற்றே யுழக்கிலக்கத் தொன்பதின்மர் வீரருறப்
போற்றேரி லேறினான் போய். (சசா)

சேந்தன் விசும்புதோய் தேரின்மேற் சேர்தலுங்கால்
வேந்தன் றமரொடுந்த வேதன்மா—லேந்தலண்டர்
காற்றிடவே தாளர் கழல்வீரர் சூழநடுப்
போற்றிடவே போனான் புரிந்து. (சஎ)

நன்னியமங் குன்றுச்சேய் ஞல்லூரி னின்றெழுந்து
பொன்னி நதிகடந்து போந்தெவரு—முன்னு
மிடைமருதூர் மாயூர மெண்பறிய லூர்முன்
னடைதலமெ லாங்கண்டா னங்கு. (சஅ)

அஞ்சமலர் துஞ்சிலஞ்சி யங்கான நோக்கிவரன்
செஞ்சரணம் போற்றியொளிர் செங்கதிர்வேன்—மஞ்சன்
பணியாரூ ரூறு படநகைத்தோன் மேவு
மணியாரூர் கண்டான் மகிழ்ந்து. (சகூ)

குமாரபுரிப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா கநஉஅ.

---

# சுரம்புகு படலம்.

---

நற்றிடங்கொண் மேலோர் நவிறருசீர்ச் சோணாட்டிற்
புற்றிடங்கொ ளீசன் புரமதைச்சூழ்—மற்றிடமுங்
கண்டு கதிர்வேற் கடவுள் கனல்வீசி
மண்டுவறும் பாலையுற்றான் வந்து. (க)

இருசுடருங் காயத் திரவும் பகலு
மருவியர சாளவயன் மற்ற—வொருசுடரும்
வாளா விருப்பதுன்னி வன்னிலந்தந் தான்கொலதை
யாளா விருக்கு மரசு. (உ)

தீயோ னரசு செயினந்த நாடுதான்
பேயோ டரணும் பேரடவி—மாயோ
னிறங்கொண் முகிலுமந்த நீணிலத்தின் மேவா
மறங்கொள் விலங்குமத்தன் மைத்து. (ங)

பாலை நிலத்தின் பரிசுணர்ந்து மற்றுள்ள
நாலை நிலத்தி னவில்வெஞ்சு—வாலையின்
வெப்புறவே வந்துலகின் மேவாமே யெப்புறமு
மப்புறவே வைத்தா னயன். (ச)

விதிர்தருமா வன்னிலத்தின் வெம்மைதனைக் காற்று
துதிர்தருமா லும்ப ருடுக்கள்—கதிரவன்று
ணந்நீர்மை மேவா தனுதினமும் போதிரண்டு
முந்நீரின் மூழ்குவான் முன். (௫)

மிக்கிரவி வெம்மைக்கும் வெவ்வடவைத் தீக்குமங்குத்
தொக்க வுயிர்த்தொகைக ளென்பமுறு—வுக்கிரன்றன்
புன்னிக்கு மந்தமெதிர் பார்த்திருக்கு மூழிமா
வன்னிக்கும் வாசமாம் வைப்பு. (௬)

வேனிலத்தில் வாழ்வனவும் வெம்மை தனக்கஞ்சிச்
சேன நிழலினொடு சென்றுலவு—மானினந்தீக்
கொள்ளியின் வைகுங் குலவு மணிப்பாந்தள்
கள்ளியின் வைகுங் கணம். (௭)

இன்னவாம் பாலையின்க ணேமப் படையோடு
மின்னவாம் வேற்குமரன் மேவமே—தன்னதாம்
வன்குறிஞ்சி தன்பான் மழைபொழிந்து விட்டபின்னர்
மன்குணமே மேவியது மற்று. (௮)

சராசரங்கண் டோன்சேய் தனைபுணர்வாற் கண்டா
ராசரம்போன் மன்முரம்பி லுன்னும்—பராசரனீன்
றத்த னனந்தனந்தி சார்சதுர்மு கன்பரிதி
யத்தனொடு மாலி யமர்ந்து. (௯)

புகழுற்ற மூவிருவர் பூசரத்தி னின்று
திகழுத் தரநடவை செல்லத்—தகவுற்ற
வெந்தறுகட் சூர்முடிப்பான் மேவுகும சேசனவண்
வந்தணிய னுற்றான் மகிழ்ந்து. (௧௦)

பன்னிருமாத் தோள்வரைதாழ் பன்னிருகா தொண்குழையும்
பன்னிருமார்த் தாண்டரெனப் பாயொளிதான்—மன்னவே
விண்களிக்க வந்த விமலனையம் மூவிருவர்
கண்களிக்கக் கண்டார் களித்து. (௧௧)

பின்னுன் மவுலிப் பெருந்தகையோர் முற்றுமுணர்
முந்நான்கு மொய்ம்புடையோன் முண்டகத்தாண்—மன்னுர்வம்
பொங்கப் பணிந்தேத்திப் போதவடி கூரநாத
வெங்கட் கருடியென்று ரிங்கு. (௧௨)

என்னவிரு மூவ ரியம்புழிவ லாரிருகன்
பொன்னவிர்தாள் போற்றியன்னார் போந்தனிலை—பன்னுவா
னின்னர் பராசரன்று னீன்றோர் சரவணநீர்
துன்னிவிளை யாடலுற்றார் சூழ்ந்து. (௧௩)

அத்தடத்தி னரிவை ஞராம்பருவத் தாடவே
தத்தலையின் மீனங் தத் தாவிவரு — மத்தனைகக
ணாங்கவற்றைப் பற்றி யவிர்கோட்டுயத் தாரதனை
யோங்குபுகழ்த் தாதைகண்டா னுற்று. (கச)

உச்சிக் கடன்செயவங் குற்றமுனி பெற்றவிவ
ரிச்சிதத புன்ஞெறுழ்ல் யெண்ணி பிங்தச்—சிச்சீ
நலம்லசெய் மைந்தர்நீர் நாடியமீ ளுகிச்
சுலவுறிரான் றேநவின்றான் சூழ்ந்து. (கரு)

சொல்வைத் திருசெவியிற் றுன்னுமுன்மே ளொற்று
வல்வினையான் மீன வடிவெய்தி—யொல்விமும
மெக்காலந் தீரு மெனமைந்தர் முன்னுவான்
முக்காலந் தேர்ந்த முனி. (கசு)

இத்தடத்தின் மேலைநா ளீராறு தோளுடைச்சே
யத்தனரு ளான்வைக வன்னவனைக்— கைத்தலத்தேந்
தன்னை தனமுருக்கு மாரமுத நீருந்த
முன்னைபுரு வாதிரென்றான் முன். (கஎ)

இன்ன முனிவ னியம்பிப் பகற்கடனு
ஈன்னியமற் செய்தனன்பி னண்மகர—மன்னுருவுற்
றின்னரன்று தொட்டெண் ணிலாக்கால மாழ்கறிவி
னன்னமல ராவியுற்று ராண்டு. (கஅ)

அத்தர் யங்க ணமரவுமை கண்டெடுப்பத
தத்தருவி வெற்பிற் றனதிழிபா—றுய்த்தின்னர்
சொல்லைவடி வாயினர் சொல்லற் கரியதோர்
தொல்லைவடி வாயினர் சூழ்ந்து. (கக)

ஒருருவ மேய்ந்த விவர்தா மிறையோன்றன்
கூரருளின் வந்துபரங் குன்றத்தி—லாரும்
விரதம்பூண் டாங்கிருந்தார் விதததகநீ யீண்டு
வரவுணர்ந்து வந்தனரில் வைப்பு. (உ0)

மகவான் மொழிந்ததந்தை மார்வினவு மாபோன்
மகவான் மொழிகேட்டுவந்து—மகவான்சூர்த்
தெம்முனையைச் சாய்க்கும்வேற் சேயவரை நோக்கினீ
ரெம்முடனே செல்லிரென்று னிங்கு. (உக)

செய்ய பராசரன்றன் செல்வ ரவைவினவி
யையசா ணென்றிறைஞ்சி யார்ந்துசெல—வெய்ய
சுரங்கடந்தான் சூர்முதன்முன் றோன்றியவன் வேண்டும்
வரங்கடந்தான் மைந்தன் மகிழ்ந்து. (உஉ)

சுரம்புகு படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா கஙுக.

# திருச்செந்திப் படலம்.

உரன்மேவு பாறு முறைதற் கரிய
பரன்மேவு பாலை படர்சந்—தரன்மேவு
செங்குன்றார் நோக்கியே சென்றனனற் றெய்வமெனு
வங்குன்றா ரேத்து மரசு. (க)

பன்னிருகண் செந்திருக்கை பாற்படலோ டாறுமுக
மன்னியுற வெண்ணறுமீன் வாழவளர்த்—துன்னு
மருணவொளி குன்றவொளி ரத்தினைநேர் தந்து
வருணனன்பிற் கண்டான் மகிழ்ந்து. (உ)

கண்ணிப வேள்வருகை கண்டு கடற்செல்வன்
கண்ணீர் துளும்பப்பல் காற்புவியின்—கண்ணிள
வாரலைவாய் கையோச்சி யார்த்திறைஞ்சல் போற்றிரையார்
சீரலைவாய் சென்றணைந்தான் சேய் (ங)

தெய்வகம்மி யற்கூய்ச் சினகரமொன் றேர்பெறவே
செய்க வெனவருளச் சேய்புனைவோன்—கைதொழுது
கஞ்சத் தயனுட்கக் காமர் நகரொன்று
நெஞ்சத் தமைத்தா னினைந்து. (ச)

அமைதருமவ் வாலயத்து ளாயமணிப் பீடத்
தமைதருசேய் வீற்றிருந்தா னுற்ற—விமையவரு
மாவிரத மாதவரும் வாள்வீர ருஞ்சூழ்ந்தார்
மாவிரத மேலிருந்து வந்து. (ரு)

கின்னரமே யாதி கிளைமகா யாழினொளிர்
மென்னரம்பு வீக்கி விளரிமுத—லின்னிசைக
ளஞ்செவியில் வாரி யமுத முகுப்பதுபோல்
விஞ்சையர்கள் பாடினார் வேட்டு. (சு)

ஈசனவிர் மோலி யிளம்பிறையும் வான்பிறையு
நேசமுறச் சேர்ந்தமர்ந்த நேரவே—பாசக்
குவிகை வருணன் குலவனமே லான் றூமவெண்
கவிகை நிழற்றினா ரங் கண். (எ)

திங்கள் குடையிற் றிகழக் கதிர்வெள்ளி
பொங்கிருகூ றானவா போற்கவரி—யங்கிரட்ட
வட்டகுல நாக மலர்த்தனமெல் லாமால
வட்ட மசைத்த மகிழ்ந்து. (அ)

மாலு மயனு மகவானும் வெந்துயர்தீர்
காலமிஃ தென்னக் கருதிநிற்ப—வோலமிடும்
வானவர்க ளேத்தி மலர்மாரி தூற்றவே
மானவர்கள் போற்றினார் வந்து (கூ)

இலக்கமறு பூத ரிரைகடல்போற் சார்ந்த
விலக்கமுறு வீரரோ டெண்ம—ரிலகுகிற்
றெரிகை மருங்கிற் றிறல்வீர வாகு
சுரிகைபற்றி நின்றான் றொழுது (க0)

அன்னபோ தங்க ணலமருநெஞ் சத்தனு
மின்னலின் மூழ்கி யிளைப்புற்றுப்—பொன்னகரம்
விண்டான் றனையாள மேவி யருள்கூர்ந்து
கண்டான் கருணைவள்ளல் காண் (கக)

மற்றவனை நீசூர் வரவுமவர் வெந்திறலும்
பெற்ற வரமும் பிறவுமே—முற்ற
முறையே யறைதியென்றான் முன்பினறி யான்போன்
மறையே வடிவாய வன். (கஉ)

அன்றலரு மம்புயம்போ லாயிரங்கண் கண்மலர்ந்து
மன்றனவூங் கற்பகத்தார் மன்னனய—னின்ற
தெருளின் மிகமாண்ட தேசிகனை நோக்கி
யருளி னறைகென்றா னாங்கு. (கங)

குன்றஞ் சிறகரிந்த கோமா னதுகூற
நன்றென்று வேந்த னவின்றைந்தும்—வென்ற
வமலத்தா ருள்ளத் தமரு மிளவல்
கமலத்தா டாழ்ந்தான் களித்து. (கச)

ஓரைந்து பூதங்கட் குள்ளும் புறம்புமாய்ப்
பேரன் புடையார்க்குப் பெட்புருவா—நீரநீ
கொண்ட சிறிய குழந்தைவடி விற்கேற்ப
விண்டனைபோ லும்மிவ் விளம்பு. (கரு)

வெய்யசூர் தன்மை விளம்பென் றனையஃதெம்
பையுள்போ யின்பம் பயப்பவே—யையநீ
கொண்ட கருத்தென்றட் கொண்டனனென் றனிமையா
வண்டர் குருவா மரசு. (க)

ஆகையா லந்த வவுணர்தந் தன்மையெலா
மோகையா லாமா றுரைப்பலென—வாகையுறீ
ராறுபுயத் தண்ண லருளா னனநோக்கிக்
கூறுகின்றான் வானோர் குரு. (௭)

திருச்செந்திப்படலம் முற்றிற்று

ஆக திருவெண்பா கக௩-வு

முதலாவது உற்பத்திகாண்டம்.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# இரண்டாவது

# அசுரகாண்டம்.

---

## மாயைப்படலம்

---

ஈன்றாய் மெய்யதன்றி யெண்குருவாய் நெஞ்சமர்ந்து
தோன்றா தனவெல்லாந் தோற்றுவிக்குங்—கான்று
ருருக்குமரக் கோட்டமுறு மோர்பிடிமான் மேவத்
திருக்குமரக் கோட்டமுறுஞ் சேய். (க)

உறுகா சிபன்மகரா யோங்கு மறுபா
னறுகோடி யாய வவுணர்க்—கிறைவன்
வரமங் கலகேசி மான்றழீஇ யீன்றான்
பரவு சுரசைதனைப் பண்டு. (உ)

துங்க மகள்வளரத் தொல்லைப் புகர்மாயந்
தங்குகலை யுள்ளவெலாந் தான்பயிற்றிப்—பொங்குறுமா
மாயைவிஞ்சை யின்மிக்க வல்லளாங்கண் டன்னவட்கு
மாயையெனப் பேரிட்டான் வாய்ந்து. (ங)

ஆபவுண னீன்ற வணங்கை வருதியெனக்
கூயருள்செய் தோரிருவர் கொள்கையும்விண்—மேயர்
சுகமகலு மென்றநந்தி சொல்லுமோர்ந் தொன்று
புகலுவலகே ளென்றான் புகர். (ச)

மான்மகவான் வானவரான் மாளவுணர் மாய்ந்தனர்சீர்
சான்மலிவுற் றன்றோர் தலைவுற்றார்—மேன்மை
யிவணருக்குன் பொன்னினெய்தும் யாவு மதுபோ
லவுணருக் குன்பொருட்டி னாம். (ரு)

திருமகளு நாணத் திகழுருக்கொண் டேகி
மருவியச்ர்க் காசிபற்குன் மாட்சி—தருவலபங்
காட்டியவற் சேர்ந்தவுணர் கட்பெறுதி தூவியன்னப்
பேட்டினடை யாளேநீ பெட்டு. (சு)

பின்னவர்க்குப் பார்விளம்பிப் பேர்வளமும் பெற்றிடவே
யன்னவுணர்க் காயவோர் மாவேள்வி—முன்னுணர்த்தி
நின்மகரின் பாரவொன்றோர் நிகழ்வுற மாவஞ்செய்
தன்மைகண்டு மீடியென்றான் றான். (எ)

வெங்குருவின் வாய்மை வினவியவன் றாள்வணங்கி
தங்குலவேந் தற்கனைச் சாற்றிவிடை—யங்கணுற்று
மேருவிடப்பால் விதிமகன்றா னேற்குநிலை
யாருமிடம் போனா ளணங்கு. (அ)

வனப்பென் பனவெல்லாம் வாய்ந்தோர் வடிவ
முனப்பெற் றொருகொடியி னொல்கி—யனப்பெடையின்
பூசியவெண் ணீறு பொலியத் தவம்புரியுங்
காசிபன்முன் சென்றாள் கடிது. (கூ)

அங்கண் மணிக்குன்ற மாடருவி நீடுருமம்
பங்கயமார் வாவிமண்ட பம்பள்ளி—பொங்கரிவை
முன்னுமற் றெல்லா முறையி னுறவேதன்
மன்னுமைத் தாவிழைத்தாண் மாது. (க0)

இன்னவா றெல்லாமங் கெய்தவெந்தை சாண்மனத்துண்
மன்னவைத்து நோர்தம் வரமுனிவ—னன்னவற்றை
யாக்கினரார் கொல்லென் றதிசயித்து நாற்றிசையு
நோக்கினன்காண் கில்லா னுனித்து. (கக)

மாதவவோர் வைவிடுத்து மாமுனிபெண் மாயையினுற்
போதவைத்த கண்ணுற்றப் புந்தியிறகொள்—காதலிற்பொன்
னாடிழிந்த தோசனைத னாடிழிந்த தோமற்றெந்
நாடிழிந்த தோவென்றா னன்று. (கஉ)

பூவருவே தாமால் புராந்தகன்முன் னேரிவரு
ளேடர்கஞ் செய்கையோ வென்றயர்ந்து—மேவுமுனி
பின்றன் மனந்தேற்றிப் பேருவகால் மாயைமணிக்
குன்றின்கட் டோன்றினளோர் கூர்ந்து. (கங)

தோன்று மணங்கரசைத் தூயோ னனிநோக்கி
வான்றவமார் கற்பகமா வல்லிதவத்—தீன்ற
விளங்கொடியிங் கெய்தியதா கேதுவென்கொ லென்று
வளங்கொடவம் விட்டகன்றான் மான்று. (கச)

கிரிமேற் கடிதேகிக் கிட்டலுமத் தூயோ
னரிவையாய் மேவ வணங்கின்—னுருவிதுகொ
லென்றெண்ணி நீடுதவ மென்வரையி னின்றுமய
லொன்றுகடற் கண்விழுந்தா னுற்று. (கரு)

நீசிதானோ நீள்குழலென் னீரதி யோவூர்
வசிதானோ வாசவற்கு வாய்த்த—சசிதானோ
காரோதி யென்றன் கருதனைத வருத்தநீ
யாரோ வறிகிலேன் யான். (கசு)

என்றுநினைக் தேந்திழைபா லேகியெழி லிற்சிறந்தோய்
நன்றுநன்று நின்றனெளிர் நல்வரவே—யென்றுமுன்னர்
நின்றுபி னுற்று நெறிப்படவே மாமுனிவ
னென்று நவில்வா னுகந்து. (உசு)

எக்குலத்தா யார்மகணீ யென்னின்பேர் யாதுனதூர்
புக்கவகை யாது புகறியென—மைக்குழலா
ணேற்குமே தக்கோய் நுவலருமிக் கேள்விநினக்
கேற்குமா வென்று ளினிது. (உஎ)

வாதிறீவ நீத்துணர்வின் மாந்தரிலெற் சேர்வதுதா
னீதியன்றுன் றேன்புகுற்ற நேராகப்—போதிபெனத்
துங்க முறுதவத்தோன் றோகாய்கேள் பற்பசனு
ளங்கநந்த னோற்றே னமர்ந்து. (உஅ)

அலகினெடுங் காலமா னுற்றந் தவத்தின்
பலனெனநீ நோயதினுற்று பயனபின்—நலநுகர்வான்
பேரூர் வினவவொன் றும் பேசிலைநின் சேரநினை
காரூர் குழலாய் களித்து. (உகூ)

நங்கையது கேளா நகைத்துத் தவம்புரிந்த
திறகென் பொருட்டாமோ வென்னமுனி—பங்கயன்றன்
செம்மல்யா னென்பதனைத் தேர்பாமீ வோயிவண்
மெய்ம்மைநவின் றேனென்றான் வேட்டு. (௩0)

முற்றவம்பண் ணுஞனுற்றி முன்னியது முத்தியதே
யுற்றதனை யெற்கருள்வா னுற்றனைநீ—மற்றெனக்கோர்
பேறுமிலை யென்னவவன் பேசுமவற் கண்ணுநீ இக்
கூறுமவ ளொன்றைக் குறித்து. (௩க)

உன்னரும்வ டாதுபுல முள்ளோன் மகமேரு
வென்னசலஞ் சேர்தென்பா லேய்ந்தகங்கை—நன்னதியின்
மன்கரையா னேகுவேன் மாதவநில் லென்றுசொல
முன்கரையா நிற்பன் முனி. (௩உ)

கங்கைமுத லாய கடவுணதி யேழுமுமை
பங்கனமர் மாதலங்கள் பற்பலவு—மங்கு
லமைப்பி னமைமெய்ய னூர்பதியும் யானே
ரிமைப்பி ல்ழைப்ப லிவண். (௩௩)

மூவர் பதமோ முருகுகமழ் கற்பகத்தார்த்
தேவர் பதமோவான் செல்வமோ—மேவரிய
மின்னே நினக்கு விருப்பெதுசொ லன்னதனை
யின்னே யளிக்கவல்ல னீவது. (௩௪)

இசமுறவா னோர்விழையு மோரம்மை மாருன்
பதம்வருடச் செய்வேன் பணிகது—மதனையும்பூங்
கோலுக் குடைந்தடைந்தேன் கூர்ங்கருடி யென்றனன்கண்
வேலுக் கிணையணங்கே வட்டு (நரு)

முனிவன் மொழிகேட்டு மெய்க்குழலா ளிங்குத
தனியளென வாய்வந்த சாற்ற—லினிதலவோ
மன்னுசவ நோற்றிருத்தி மாதவநீ யான்முனன
முன்னுமிடஞ் செல்வலெனக் கூறுற்று (நசு)

பந்தா கினித்திசையை மன்னியவட் செல்வனென
விந்தா முகத்தவவ ளேகலும்பி—னந்தாத
துங்க முனிதொடரச் சூழ்மாயை யற்கரந்தா
ளெங்கனுங்கா ணாதுமைவா னெய்ந்து. (நஎ)

மாயைப்படல முற்றிற்று.

---

# காசிபன்புலம்புறு படலம்.

---

தேனேர் மொழிமாயை சிந்தையொடென் செய்தவத்தைக்
கோனேர் விழியாற் குலைத்தகன்றாண்—மானே
மயிலே புறவே மடவனமே வண்டே
குயிலேநீர் காண்கிலிர் கொல் கூர்ந்து. (க)

கடியே றலங்கற் கதப்புடைமா யோணின
பிடியே யெனநடந்தாள் போர்ந்து—கொடியேன்
றெரிகிலனத் தோகைதான் சென்றநெறி தானுஞ்
சொரிகளிறே கண்டீரோ சொல். (உ)

பொன்னகத்தை யேய்க்கும் புணர்முலையாண் மையல்செய்
தென்னகத்தை யீர்த்துக்கொண் டேகுவாள்—வன்னச்
சுகமே யிருப்பைநீள் சோலையுற்றாள் கொல்லோ
சுகமே யிருப்பைநீ சொல். (ந)

என்னவே பற்பலவு மோர்முனிமால் கொண்டுரைப்ப
வன்னதனைக் கேளா வகமகிழா—மன்னுரவி
னோற்கு முனிவரன்பா னெய்தினவே யெய்தினாள்
மாற்கொருவைப் பாவொளிரு மாது (ச)

மாதவமா நோன்பழித்து மாமுனிக்கு மால்பூட்டும்
பாதகியைப் பார்த்த பழிதீர—வாதவன்றா
னேல்கடன்க ளாற்றுவா னென்ன விரைந்தேகி
மேல்கடலின் மூழ்கினான் வீழ்ந்து. (ரு)

மனக்கருத்தை யோர்ந்தினன்மேன் மாயைதான் வைத்த
சினக்குறியே போன்றதுவான் செக்கர்—கனக்கருமை
வாய்ந்த வவுணரினி மாயைபாற் றோன்றுவநற்
கேய்ந்தகுறி யேய்ந்த திருள். (சு)

தன்னு யகிமாரார் தாரா கணஞ்சூழ
மின்னார் கலைமெய் விளக்கவினன்—பின்னுரு
மன்னவரு மாயை மகிழ்கூரத் தோன்றினு
னின்னமுத மேவுகரத் திந்து. (எ)

வானில் வதியு மதிபு மதனைச்சூழ்
மீனின் றிரளு மிளிர்தோற்றந்—தானங்
குலவமர ருண்ணமிர்த கும்பமுற்ற வெள்ளிக்
கலநிரைத்து வைத்ததொக்குங் காண். (அ)

துங்க ரணி நீர்த்தடத்திற் றூவெண்முகை சுலவைப்
பங்கயமொன் றன்றலர்ந்த பண்பெனலா—மங்கண்
விசும்பிற் றிகழுடுக்கண் மேவவமிழ் தாருந்
தசும்பிற் றிகழ்மதியந் தான். (கூ)

குடம்போற் றனத்தாட் குறித்துநைவா னிந்து
விடம்போற் குளிர்ந்துசுடு வெம்மை—யுடம்போடச்
சோர்ந்தா னலந்தான் றுயர்ந்தா னெடுங்கினு
னோர்ந்தா னிலைநோக் குற்று. (க0)

காதன் மிசவுளத்திற் காமனல மோவிடுப்ப
மாதர்க் கரசியா மாயைதனைப்—போத
வளித்தறைவா னெள்ள வவலநெஞ்ச னுகி
விளித்தறைவான் மேலோன் விழைந்து. (கக)

மங்கு னறுங்குழலீர் மாழ்குங் கொடியேன்மு
னெங்குமுறு கின்றீ ரிவர்மன்னி—னங்கமெதிா
புல்லும் வணிகில்லீர் போங்காலஞ் சேருதிர்கொல்
கல்லினுமுன் னம்வலியீர் காண். (கஉ)

முன்கா தலைமூட்டி முன்னேன் பினையழித்தீா
பின்கா மனையேவிப் பீடழித்தீர்—நன்கா
மறிவெல்லாஞ் சூறையிட்ட ரந்தோ வினமுஞ்
சிறியற்குச் செய்வதுண்டோ நீங்கு. (கங)

அழல்கின்ற வெங்காமத் தாரழலின் மூழ்கி
யழல்கின்றே னங்கையீ ரொன்றுங்—கழறீ
ரருவித் திரளோ டவிர்தருசெய் குன்றம்
வருவித்தி ரொன்பொருட்டு வந்து. (கச)

விண்டேன்வே றுயமெழின் மெல்லியரை நும்முழைமால்
கொண்டேனீர் யாயரெனக் கூர்ந்தபொருள் – கண்டே
னினியா ருமையன்றி யெற்கருள்வா ரிங்குக்
கனியா வருள்வீர் கடிது. (கரு)

இன்ன பலவா றியம்பி முனிபுலம்ப
வன்ன பலவுமுணர்ந் தன்னவன்முன் —மின்னலையும்
வேயையுமே வென்றவிடை மென்றே ளணங்கன்ன
மாயைவந்து நின்றாண் மகிழ்ந்து. (கசு)

காசிபன்புலம்புறு படலமுற்றிற்று.

ஆ திருவெண்பா நிஅ.

# அசுரர்தோற்று படலம்.

அருந்தவனுங் காசிபன்று ணுகுவந்த மாயை
பொருந்துசெயல் கண்டுடலம் பூரித்—திருந்தவன்மேற்
பாடினு ளுடினன் பற்றுமிக வாகவே
யோடினு னன்னவண்மு னுற்று. (க)

என்செயவேண் டிற்றவற்றை யின்னே புரிகிற்பேன்
கொன்செய் முனிவிகந்தாள் கூர்ந்தென்னப்— பொன்செய்
மருவடியிற் றாழ்தலுமே மாயையவற் பாரா
வெருவனீ யென்றுசொல்வாள் வேட்டு (உ)

என்னியலுக் கேற்றவுரு வேய்வதன்றி யான்கொள்ளு
மன்னன்ன மெய்யுருக்கொள் வாயாகி—லுன்னை
மருவுவே னென்ன மயிலன்னுன் வைப்புத்
திருவெய் தினன்போன்றான் றேர்ந்து. (ங)

பூவா ளியுமேவப் பொற்புருக்கொ ளன்னவனை
மேவா நனிபுகழா மேவிருகை—கோவாநன்
கெண்டபத்தின் மாண்டபய னீகுவள்போ லாண்டுளவோர்
மண்டபத்திற் கொண்டணைந்தாண் மாது. (ச)

துங்கமணிச் சேக்கைதனிற் றுன்னி யிருள்கூருங்
கங்குலின்முன் யாமத்திற் காரிகையைச்—செங்கழையாம்
வில்லினு னூலின் விதிதழீஇ மாமுனிவன்
புல்லினு னேருடலம் போன்று. (ரு)

இருவருந்தம் பான்மருவு மின்னமிர்தை மாறி
யொருவர்க் கொருவ ருதவும்—பரிசேபோ
லாம்பல்போ யாழ வுதர மருந்தியே
யாம்பல்போ கந்திளைத்தா ராங்கு. (௬)

அந்த வமயத் தரியு மயனுமெழி
லிந்திரனும் யாரு மிடுக்கணுற—வெந்திறலாம்
வன்போ டிளங்கோதை மாயைதன்பாற் சூரபன்மா
வென்போ னுதித்தா னினிது. (எ)

கழிவெந் திறல்கொள் கடுஞ்சூர் வரலு
மொழியு மிருவர் முயக்கி—னிழிவியர்வின்
பானவிலு மேண்முப் பதினா யிரவெள்ளத்
தானவர்கள் வந் துதித்தார் தாம். (அ)

அன்னரொடு சூரை யவணிறீஇ யங்ககன்று
பின்னரொரு மண்டபத்திற் போர்ந்துபுகுந்—தன்னவடான்
கூறரிப்பி ணுவுருவங் கொள்ளலுமன் னுன்மடங்க
லேறுருவங் கொண்டா னினிது. (கூ)

வயங்கொண் மடங்கலுரு வாய்ந்திரண்டாம் யாம
முயங்குகையின் மாயவள்பான் முன்னந்—தயங்குகர
மீரா யிரமா யிரமுகங்கொள் சிங்கமுகப்
போரா ரவுணனுற்றான் பெட்டு. (க0)

பன்னு வியர்ப்பிற் பதினா யிரவெள்ளந்
துன்னவுணர் கூற்றஞ்சத் தோன்றினா—ரன்னவரை
மைந்த னெடுங்கிறீஇ மாதவனு மாதவனுஞ்
சந்தநில யஞ்சார்ந்தார் தாம் (கக)

ஆயிடைமன் மாயைபிடி யாகமுனி மால்களிற்றி
னேயவுரு வின்மூன்றாம் யாமத்தி—னேயமொடு
சேரவவ னுன்மருப்புச் சிந்துரத்து மாமுகத்துத
தாரகனென் பானுதித்தான் றான். (க௨)

நிள்ளவர்த மெய்வியர்ப்பி னுற்பத்தோ ராயிரமா
வெள்ள விபமுகத்தர் மேவினா—ருள்ளவரைத்
தாரகனோ டேகிறீஇத் தாழ்குழலுந் தூயனும்வே
றோரகமே வுற்றா ருகந்து. (க௩)

விச்சைதரு மாயைதகர் மேவுபிணை வாகமுனி
செச்சையுரு வாகிப்பிற் செல்யாமத்—திச்சையுட
னுங்கட் புணர வசமுகியென் பாளமர
ரேங்கப் பிறந்தா ளினிது. (க௪)

ஆங்கு மருவிருவ ராக முறுவியர்ப்பின்
வீங்கு தகர்வடிவ மேவினரா—யோங்குமதாலை
யாரவுணர் முப்பதிற் றாயிர மாவெள்ள
வாரவுணர் தோன்றினார் வந்து. (கரு)

கண்ட மகளோடுங் காரவுணர் தம்மைநீறீஇ
மண்டபங்க டோறுமவன் மன்னியே—யெண்டபுமா
யாளிபுலி மான்புரவி யெண்கேன மோரிமா
நீளுருவங் கொண்டணைந்தார் சேர்ந்து. (கசு)

கோதில் விலங்கினுருக் கொண்டதற்பின் மாயவளு
மாதவனு மாய்ப்புணர்ந்து வைகறையாம்—போதின்க
ணை வறுபதி னாயிரமா வெள்ளமுறந்
தானவரை நல்கினார் தாம். (கள)

ஆய விரண்டுநூ றாயிரவெள் ளந்தகுவர்
மேயசு ராதியரை மேவிரவின்—மாயைதந்தா
ளாயவெல்லை தன்னிலண்ட மாயிரத் தெட்டினுளுந்
தீயகுறி கண்டார் செறிந்து. (கஅ)

நங்குல் கழியக் கவின்மாயை காசிபன்முன்
றங்கவுருக் கொண்டார் சுடரிரவி—யங்கவரை
விட்டகன்ற பின்னர் விளைந்தவெலாம் பார்ப்பனனாத்
தொட்டகன்ற நீருநித்தான் றோய்ந்து. (கக)

என்றுதயஞ் செய்தலுமே யீன்றோர் நிலன்விசும்பி
னொன்று சனத்தை யுறநோக்கி—நன்றிஃதென்
றற்புதங்கொண் டன்பினரா யாங்குறுநீர் மையுணர்ந்தான்
வெற்புறழ்தோட் சூரன் விழைந்து. (உ०)

இந்த விருகுரவர் தாள்பணிந்து செய்திறத்தி
னந்தவகை தேர்ந்திங் கடைவமென—வெந்திறல்கொள்
சூரனிளை யோர்க்குரைப்பச் சூழ்ந்தவர்பின் செல்லவவண்
போரன்பி னீங்கினார் போந்து. (உக)

அசுரர் தோற்றுபடல முற்றிற்று.

ஆகூ திருவெண்பா எச.

# காசிபனுபதேசப் படலம்.

---

துணைவரோடும் போந்துவிறற் சூர்பயந்தோர் பொற்று
ளிணைபணிந்து மேலையீர் யாங்க—ணணைந்து
செய்திறனென் செப்புகெனச் செப்புவான் செய்யமுனி
யுய்திறனீர் கேண்மினென வொன்று. (க)

மன்னுந் தனயர்நீர் மாதவமா மாற்றினிற்றீர்
பன்னு பதியாவி பந்தமூன்—றென்ன
விதியா ரணநவிலு மேவுமவை தம்முட்
பதிபாற் பதிதன் பதி. (உ)

ஆக்க லளித்த லழித்த லறிவொளித்த
றேக்கமுறு மின்னருளே செய்திடல்செய்—மாக்கடவுள்
பற்றிகலொன் றில்லான் பழமறையுங் காணரியான்
பெற்றியா ரோர்வார் பெரிது. (ங)

அருமுத் தளையுற் றளவிலான் மாக்க
ளிருவினையாற் றோன்றி யிறக்கு—மிருநிலனே
டம்பா லுதிக்கு மனலனில மாகாயந்
தம்பான் மருவுமவை தாம். (ச)

மக்கள் விலங்குபுள்புன் மன்று வரமலையா
மெக்குலமாத் தேவுமாம் யாவுமா—மிக்கவவை
தோன்றுமுன்போந் தோன்ற றுதிகாளை மூப்பினிற்சா
மான்றவதன் றன்மைசொல்வா ரார். (ரு)

விற்படுமோக் கல்வியும் வீரமுந் திண்வலியும்
வெற்புறழு மாநிதியும் வேறுளவும்—புற்புதமு
மின்னலுமே போற்றோன்றி வீயுமே லன்னவற்றை
யுன்னவும் பாலதோ வுற்று. (சு)

தருமமெனவோர் தனித்தபொரு ளுண்டஃ
திருமையின் பேற்றையெளி தீயு—மொருமையதைப்
போற்றினன்பு மாரருளுங் பொற்றவவு மாமதன்மே
லாற்றலாற் சேருமுயி ராங்கு. (எ)

சேர்ந்திடுங்காற் சென்மம்போந் தீயமலம் போம்பேரின்
பார்ந்திடுமத் தன்மை யறைவரெவ—ரோர்ந்திடுஞ்சீர்
மாதவமே யிம்மை மறுமைக்கு மேதுவா
மாதவமே பாவவிருட் காம். (அ)

அருந்தவஞ்செய் தேவீ டடைந்தார் சிலரே
திருந்துசெல்வ முற்ருர் சிலரே—பொருந்த
விருமைபெற்ரு ரேய்சிலரே யேற்றபதந் தோறுந்
திருமையின்மே வுற்ருர் சிலர். (௯)

பத்திமையி னேற்றுப் பரமுத்தி முன்னுற்ரே
ரெத்தனைய ரோவா மிருமையுற்ரோர்—நத்தனைய
ஞதியோர் நோவாதா ராரிருமைப் பேறுமுரு
ரோதருஞ்சென் மத்துலைவா ருற்று. (௧௦)

செய்ய தவத்திற் சிறப்புளதொன் றில்லையதை
யைய நிகர்வதூஉ மாங்கில்லை—தூய்ய
சிவந்தனையே நேருந் திறம்போ லறங்கூர்
தவந்தனையே நேருந் தகைத்து. (௧௧)

ஆதலினன் மைந்தர்கா ணந்தி வணற்குறித்து
மாதவநீர் செய்குதீர் மற்றதன்சீர்—போதமுற்று
நன்று செயநுமக்கு நல்ல திருக்காதை
யொன்றுசொல்வ லென்றுசொல்வ னோர்ந்து. (௧௨)

காசிபனுபதேசப்படல முற்றிற்று.

ஆக திருவெண்பா அ௬.

# மார்க்கண்டேயப் படலம்.

இச்சகனன் கேத்து மியன்மறையோ னேர்மடவார்
நச்சகனன் ஞெக்கி னலியாத—குச்சகனென்
பேரன் மதிற்கடகப் பேர்நகரா னன்னவனுக்
கோரன் புளசே யுளன். (௧)

மாமறைதேர் நாவான் வயங்கு கவுச்சிகனெ
னுமன் பவக்கடற்கோர் நாவாயாந்—தூமதிசேர்
சென்னியன்ருள் போற்றித் திகழ்தவஞ்செய் வானங்கோர்
மன்னியநீள் வாவிபுக்கான் வந்து. (௨)

ஆண்டொருபா லெய்தி யரனையுன்னி நோற்றனனுன்
நீண்டுகுற்றி யென்னத் திகழுமன்னுற்—காண்டகைய
தாவில் விலங்கனைத்துந் தந்தமெய்ய கண்டேயம்
போவதுன்னி மெய்யுரைத்துப் போம். (௩)

இத்தகைய போழ்து மிறையுமுண ராதுதவ
மொத்த மனத்தோ டுருற்றுங்கா—னித்தனரு
ளீதென்னக் கூறி யிமையோர் தொழுதாஞ்சூழ
மாதவன்றன் சேணடைந்தான் வந்து. (ச)

சார்தந்த மாமுனியைத் தைவந் துனையுரைஞ்சிக்
கார்தந்த மாமிருகங் கண்டேயந்—தீர்தந்து
மீளுகையா னின்பேர் மிருககண் டேயனென
நாளும் விளங்கவென்று னன்கு. (ரு)

அம்மா முனிவனெழுந் தன்பினரி தாளிறைஞ்ச
மும்மா மதிலெய்தோன் முன்னருள்பெற்—றிம்மா
நிலம்பரவ மாதவன் நீடுழி வாழ்சென்
றுலம்பொருதோண் மான்மறைந்தா னுற்று. (சு)

போயபின்னர் நீத்தோன் புராரியரு ளாற்சென்று
மேயதந்தை தாளிறைஞ்ச மேவுமன்னுன்—சேயை
யுறத்தழுவிக் கொண்டுதவத் துற்றதறை கென்னத்
திறத்திலுற்ற வாறுரைத்தான் றேர்ந்து (எ)

மைந்தநினைப் போனின் மரபிலெவர் நோன்மைபெற்று
ரைந்துபுலன் வென்றோய்க் கரிதெதெனத்—தந்தை
புகழ்ந்து மகற்குரைப்பான் போற்றிலன்மா கூற்றை
யிகழ்ந்துவெலு மெண்ணமே விட்டு. (அ)

அறைவதுனக் கொன்றுண்டா லையசேன் மேனுண்
மறைமுதனு லாதி வகுத்த—முறைநான்கா
மன்பிரம மில்லறத்தில் வாழ்தல் வனத்தடைத
லின்றுறவின் மேவ லிவை. (கூ)

அந்தணர் தாற்றுகட னுதிநீ யாற்றினைகொல்
பிந்திரண்டும் பின்னரே பேணுவன—முந்து
மனையறமே நீதொடங்கன் மைந்தநல மென்றுன்
றனையனது கேட்டுநக்கான் றன். (க0)

பிறப்பெனும்பெள வத்தினின்று பேர்ந்துகதி சேரத்
துறப்பெனுமோர் தெப்பந் துணையா—யுறப்பெறி
னல்லான் முடியுமோ வைய வதற்கெதிரா
மில்லா ளொடுசெயற மீங்கு. (கக)

காதலெனு மாறு கடப்பான் மிதவைவிட்டே
யோதுறுகல் பற்றியவா றொக்குமே—மாதீறவா
நல்லறத்தை நீத்துவிழி நச்சனையார் தோண்மருவி
யில்லறத்தின் மேவு மியல்பு (கஉ)

அன்னார் விழியி லகப்பட் டெவருய்ந்தா
ரென்னா ருயிராது மென்னையே—முன்னாளிற்
சந்திரனும் வெஃகுமுகத் தாபதர்கோன் பன்னியினா
லிந்திரனு முற்றா னிடர். (கங)

மாதவமே யாற்றி மறுமைப்பே றெய்துவனெம்,
பாதகமே கொண்டு படைநெடுங்கட்—பேதமையாம்
பெண்ணாகங் கண்டான் பிரமனது சேர்ந்துமவர்
நண்ணாகந் தீண்டுவனோ நான். (கச)

மகவான் முதற்றேவர் மன்சீரும் வேண்டே
னகவாழ் வெனுங்கடலி லாழேன்—றகவாய
வன்புற் றிருக்கு மறியா வரனை நினைந்
தின்புற் றிருப்பனென்றா னீங்கு. (கரு)

இன்ன பலவா றியம்பலொடுங் குச்சகனோர்
மன்னில் லொழுக்கம் வழுவென்றான்—பன்னுந்
தவமே தலைக்கொண்டான் சாற்றுவதென் னென்னாத்
தவமே விடுக்கணுற்றான் றான். (கசு)

மன்னும் புலத்தியனே மானும் பெருந்தகையோய்
பொன்னின் கலத்துமணம் பூண்டேயோர்—கன்னி
தனைக்கலத்தல் செயது தனயரைப்பெற் றன்றோ
நினைக்கருநோன் பாற்றுவார் நேர்ந்து. (கஎ)

உலகத் தவர்போன்மா லுற்றுழலுங் காம
நலநுகர்தற் கன்றிறந்தோர் நல்ல—புலமுறவே
குத்திரவெந் நீரகக் குண்டத்தி னின்றெடுப்போன்
புத்திரனப் பேறுதந்தெற் போற்று. (கஅ)

விண்ணிவந்த வெற்பினுச்சி மேவுவோர் சாரலின்க
ணண்ணிவந்து பைப்பயவே யார்வதன்றி—மண்ணினின்று
பொன்னனார் முடியுகளல் போலுந் தவவொழுக்கி
லிவனே முயலு மிது. (க௯)

தருவில் விலங்கிற் றருபயன்சோ டற்கன்
றிருமையுமே யீயுமக வெய்தற்—கொருமகளை
வேட்டில் லறம்புரிந்து விண்ணோர்க் கவியளித்து
வீட்டினெறி சார்வாய் விழைந்து. (உ0)

ஓர்வில் லறத்தார்க் கொழுக்கந் தவறினுமே
தீர்வுண்டா மஃதில்லை செய்தவர்க்குக்—கார்வணன்மு
னேவருந்தம் மாதரோ டில்லறமே வப்பணித்தா
னேவருங்கன் மாதுபங்க னோர்ந்து. (உக)

அறக்கலைநூல் சொல்லி லறத்தின் மனத்தை
யிறக்கலைமேல் வைப்பையென் னின்சொ—லறக்கலை
முன்னோ ரியற்று முறைபோ லியற்றுவையே
லென்னோர் மகனே யினிது. (உஉ)

மாதவத்து மிக்க வசிட்ட முனியென்போ
னோதுமனை யாளோ டொருங்கமர்ந்து—போதநோன்
பாற்றிப் புகழடைந்த தன்றியிகழ் வுற்றதுண்டோ
சாற்றித் துணிதி தவம். (உங)

காண்டகுசீர்த் தங்கள் கணவரைத்தே வென்னவன்பு
பூண்டொழுகு வார்பாற் புவனநிற்கு—மாண்டவரை
மேவிற் றவமாகும் விண்ணுமுண்டு மண்ணுமுண்டு
தேவிற் றிகழ்வரென றேர். (உச)

மன்றல் வினைமுடித்து மன்னில் லறமதனை
நன்று புரிதி நமதாணை—யென்றலுஞ்சேய்
மின்செய் விதியும் விமலன் பணியுமென்றா
லென்செய்வ லென்றினைவா னிங்கு. (உரு)

தாய்தந்தை மார்புரிந்து தாவெரியில் வீழ்கெனினும்
போய்விழுவ தல்லாற் புதல்வருக்கு—வாய்திறந்து
மற்றதுசெய் வேனென்னு மாற்றமுள தோவையா
சொற்றதுவே செய்வனென்றான் சூழ்ந்து. (உசா)

தந்தை யுரைகடந்தோர் தாய்சொற் றுறந்தோர்சீர்
வந்தகுரு வாணை மறுத்திகந்தோர்—தந்திரநூன்
மாற்றனா ரின்னவரை மாநரகத் தீக்குழியிற்
கூற்றனார் கொண்டுய்ப்பார் கொன்று. (உஎ)

ஆதலினா னான்விலக்கே னத்தவெனக் குச்சகன்பொற்
பாதம் பணிந்துன் பணியினிற்ப—னோதினுரை
கொள்ளா மனைவாழ்க்கை கொள்வதினும் வெந்நிரயத்
துள்ளாழ் வதுநலமா முற்று. (உஅ)

என்னுரைக டாதவிய லேந்திழையுள் ளாளேலக்
கன்னிகையை யான்மணப்பன் காயெரிமு—னென்னமுனி
யானுங் கிளையுமுய்ந்தோம் யாருமுய்ந்தார் ஞாலமொடு
வானுமுய்ந்த வென்றான் மகிழ்ந்து. (உகூ)

மைந்தநீ சொற்றவியன் மன்னுமொரு பூவைதனை
யிந்த நிலந்துருவி யான்கொணர்ந்து—வந்துன்
வயிற்புணர்க்கு வேனதுதான் வாய்க்கா விடினா
னியற்றுதவ மாய்கவென்றா னிங்கு. (ஙO)

குச்சகன்சூள் கூறுதலுங் கோகனகக் கோவுடையா
னிச்சகன்மு னேத்த விடுபெயரோன்—மெச்சவன்றாள்
பூண்டுமைந்த னுய்வான் புகன்றனைநீ வேண்டினையேல்
யாண்டுளது நிற்கரிய திக்கு. (௩௧)

ஆயினிவ ராகா ரரியதந்தை யாயற்றோர்
மேயசன்னை தங்கைமார் மேவாதார்—நேயமுறு
மாடவர்தம் மோடுதியா ரன்றோர் தமையிழந்தோர்
மாடகன்றோர் சுற்றமற்றோர் மற்று. (௩௨.)

நற்குடியிற் றோன்றிலர்நோய் நண்குரவர் பாலுற்றோ
ரற்சளத்த ராநியர்பே ராங்கிடார்—மக்கடம்பே
ரிட்டோ ரலகைதன்பே ரெய்தினோர் புன்னெறியிற்
பட்டோர்தா மாகார் பளகு. (௩௩)

நோயினர்மூங் கையர் நுவல்பங் கினர்வெதிரர்
மேயபிறர் தம்மனையின் மேவுவோர்—மாயக்
கணிகையரிற் பார்ப்போர் கடைவாயி னிற்போ
ரணிபெறப்பூண் போராகா ராசு (௩௪)

மருவூண் மிகவயில்வோர் மன்றுயிலர் மூத்தோ
ரொருகோத் திரத்த ருயர்ந்தோர்—வருகுறளர்
பேருருவர் மெல்லுறுப்போர் பீடில் கருநிறம்பொன்
னேருருவ ராகா ரிழிபு. (௩௫)

இருபசப்பர் மாவிளர்ப்ப ரேரெருவை யின்மா
வுருமிக்கோர் நாணிலா ரொன்றி—வருபுணர்ச்சி
மன்னநகைக் கின்றோர் வலியிலார் மாமடல
ரின்னவரு மாகா ரிழுக்கு. (௩௬)

ஈன்றவர்சொ னீத்தோ ரிகலினர்சீற் றத்தினர்கொல்
வான்றொடங்கு வார்நடன வாவிமதன்—சான்றருங்கோல்
பட்டுழல்வோ ரீசன்பார் பத்தியிலார் மாதவரை
விட்டிகழ்வோ ராகார் விலக்கு. (௩௭)

ஆவிமே னேசமிலா ரார்குலமா வாற்றினில்லார்
மேவுகுண மில்லார் விளிநிறையோர்—மூவியல்சொன்
மன்றே சிகனை மனிதனென்போர் தேவரைக்கல்
லென்றோரு மாகா ரிழுக்கு. (௩௮)

ஐந்திரண்டின் மேற்பட்ட வாண்டினர்பூப் புப்பருவம்
வந்தடைவோ ரொத்தபண்பு வாய்ந்திலார்—தந்தைதாய்
தந்தருளு முன்னரே தாமொருவர் மேல்விழைவோர்
மைந்தருமென் சொல்லரொவ்வார் மாசு. (௩௯)

மன்பெருமி தத்தர் மடம்பயிர்ப்பில் லார்விழிதான்
சனமைதொட் டில்லார் சனித்திழந்தோ — ருன்குறிப்புக்
கண்ணார் படலிகைசூழ் கண்ணார் மறப்பூனைக்
கண்ணரிவ ராகார் கரிசு. (௪௦)

தூறுசென்னி யுற்றோர் துகளமபா லார்நரையார்
வீறுகுழ லார்சின்ன மேவளக — நீறில்
விரிகுழலர் செம்பங்கி மேயவர்நீள் பார்தோய்
புரிகுழல ராகார் புகர். (௪௧)

சிறுகுகண்ணர் நீண்முக்கர் சேர்ந்தபுரு வத்தோர்
குறுசெவிய ரோங்கெயிற்றர் கோண — லுறுகளத்தர்
மன்மறுவு லாமுகத்தர் வார்சுணங்கு றுமார்பர்
வன்மருங்கு லாரொவ்வார் மாசு. (௪௨)

வன்கிலையின் மேவு வயிறுளார் காயநான்
மன்னிதியோ வல்குலார் வாய்கைநக — முன்கழல்க
ளஞ்சிவப்பி லார்மயிர்தா ளுர்பதத்த ரன்னத்தின்
மஞ்சுநடை யில்லரொவ்வார் மாசு. (௪௩)

அங்குலிபார் மேற்றோயா ராகா ரிவரொழியத்
துங்கமுறு மாநூலிற் சொல்லியலார் — நங்குலத்துக்
கேற்றவொரு கன்னியுண்டேல் யான்மணப்ப னல்கென்று
றேற்றபுக ழாள னுனித்து (௪௪)

மைந்தனின்சொற் கேளா மகிழ்ந்தவனை யங்கனிறீஇத்
தந்தையொல்லை சென்றுலகிற் றுபார்கள் — வந்தணுக
வுன்னியவ ரோடுவினை யோர்மகளைத் தேர்வான்சீர்ச்
சென்னிமகிழ் தேயமுற்றான் சேர்ந்து. (௪௫)

அங்க னநாமய மாம்வனத்து சத்தியன்பா
லங்கன்னி யுண்டா மதுணர்ந்தே — யங்கவன்பாற்
சேறலுங்கண் ணுற்றிறைஞ்சச் செய்யோ னெதிர்வணங்கக்
கூறுறையுள் கொண்டணைந்தான் கூர்ந்து. (௪௬)

கருதா சனத்திருத்திக் கன்னிகையோ டேர்சீர்
வருதாரந் தன்னை வரித்துக் — குருதாள்
பணிமினீ ரென்னப் பணிவித்துப் பூசை
யணிபெறச்செய் திட்டா னமர்ந்து. (௪௭)

இன்னமுது நன்கருத்தி யின்சொல் பலநவின்று
மன்னடிக ளென்கருதி வந்ததென — வென்னருஞ்சேய்க்
காசி லருந்தவநீ யன்பிற் பெறுமகளைப்
பேசவந்தே னென்றான் பெரிது. (௪௮)

இன்னவுரை கேட்டுமகிழ்ந் தென்மகனை நீயயர
மன்னன் மகற்குதவு மாதவனன்—றென்னவே
சாற்றி மணக்கிசைந்து சாபதனை யாங்கிருத்திப்
போற்றிசெயா நின்றனன்சில் போது. (௪௯)

அன்றுசத்தி யன்பன்னி யாமங் கலைவிடுப்ப
மன்றன் மகள்விருத்தை மாதுதான்—றன்றிகுலை
யாயமத னோடு மவிர்கயல்பாய் நீர்த்திளைப்பா
னேயமுறப் போனா ளெடித்து. (௫௦)

பூங்கலுழி நீராடிப் பூக்கொய்து பண்ணையொடு
மாங்குவிளை யாடிவரு மச்சமயத்—தோங்கல்
வருவதுபோல் வன்மா வரக்கண்டு மாதர்
வெருவி யுளம்பதைத்தார் வேர்த்து. (௫௧)

மதமா தூரத்தலுமே மாது விருத்தை
யிதமாத ராயமிரிந் தேக—வதரினனி
யாழ்ந்து புதன்மறைவுற றார்கூ வலினோடு
வீழ்ந்து விளிந்தாண் மெலிந்து. (௫௨)

இரிந்தகல வந்தவிப மேகிற் றதனாற்
பிரிந்தலமந் தேயுழன்று போந்தன்—விரிந்தவிளம்
பூணார் தொகையானா பொற்பார் விருத்தைதனைக்
காணா ரினைவார் கலுழ்ந்து (௫௩)

மங்கையர வாவெழிலாய் வாரிசத்தில் வாழ்கிருவே
யங்கயனே ராகாத வம்பகத்து—நங்கையே
நின்றனையோ வேங்கநப நீரா டவுங்குறித்துச்
சென்றனையோ வெம்மைவிட்டுச் சேண். (௫௪)

கானப் புனலாட்டிக் காத்தென் றொருமகளா
மானைத் தருதியென வல்லைவிடை—தானளித்த
தாய்க்கென் னுரைப்போந் தனியே நினைவிட்டுப்
போய்க்கொ ளுயிர்தாங்கினமிப் போது (௫௫)

தாய்தந்தை மாருந் தனிவந்த மாதுலரு
மாய்தந்த மாற்ற மனங்கொண்டே—யாய்தந்து
பேரிடரின் மூழ்கப் பிரிந்தா யினியொருகா
லேருருவைக் காட்டாயோ வீங்கு (௫௬)

உன்னிப் பலவிரங்கி யொள்வனத்து சத்தியன்றன்
பன்னிக் கிவைநவின்றார் பாவையன்றோ—ரன்னையது
கேட்டுணையா நினறந்தோ கெட்டே னெனக்கணவன்
றாட்டுணையில் வீழ்ந்துரைத்தா டான். (௫௭)

தூயனிவை கேட்டினைந்து தோகையொடு போயமயிற்
சாயனுங்கை மார்க்க டமைநோக்கி—மேயமத
மஞ்சா மெனப்பொழியு மாதங்கங் கொன்றதுவோ
வஞ்சாமற் சொன்மினென்றா ளங்கு. (ருஅ)

நீராடிப் பூக்கொய்து நேரிழைபா ரோடாடி
நேராக வந்த நெறியின்க—ணோராம்ப
லோடிவரக் கண்டிரிந்தோ மூய்ந்தோம் விருத்தைதனைத்
தேடியுங்காண் கில்லமென்றார் சேர்ந்து. (ருக)

அன்னா ரொடு முனிபோ யவ்வெல்லை காணுமே
மின்னார் கலனெறியின் மேவிடக்கண்—டுன்னாத்
துருவியெங்குஞ் செல்கையிலோர் துன்னரும்பாழ்ங் கூவன்
மருவிமகட் கண்டான் மருண்டு (சு0)

கான்கிணற்றின் கண்ணிழந்து கன்னிதனைக் கண்டெடுத்து
வான்கரையின் மேல்கிடத்தி மாமுனிவன்—றான்வருந்த
மாயமட வாரிரங்கு மார்ப்பொலிகேட் டன்னைநொந்து
வீயவண்மேல் வீழ்ந்தழுதாள் வேர்த்து. (சுக)

என்றன்மகளே யெனதுயிரே யென்கண்ணே
மன்ற னறுங்குழலாய் மாவனப்புங்—குன்றநினைந்
தெல்லா வியலுநினைக் கென்றமைத்தோ னின்னுயிர்நா
ணில்லாமற் செய்ததென்கொ னோர்ந்து. (சுஉ)

மின்னென்ன மேவிடையாய் வேழந் தூரத்தும்போ
தென்னென்ன வெண்ணி யினைந்தனையோ—பொன்னென்னப்
போற்றி வளர்த்தமெய்யைப் பொய்யெனவிட் டின்னுயிர்கொள்
கூற்றினிய லம்மா கொடிது. (சுஙு)

அறந்தா னிலையோ வருந்தவத்தின் பேறாய்ப்
பிறந்தா யதுவும் பிழைத்துத்—துறந்தா
யினியா ரிருந்துமெ னேந்திழையே யிங்க
னினியா ரெவரா மெக்கு. (சுச)

என்றுபல வாறாற்று மெல்லைமட மாரிரங்க
வொன்றுபுலக் குச்சகன்றா னுய்யெனமுன்—சென்றணங்கை
மீட்டுத் தருவன் விழிநீர் துடைமினென
மாட்டுறுதந் தைக்குரைப்பான் மற்று. (சுரு)

மறைமுதனூ லெல்லாம் வரம்புகண்டோ யூழின்
முறையுணராய் நீதுயரின் மூழ்கி—னறைபவிர்ர்
நின்மகளை நானையா னின்பால் விளித்தளிப்பன்
மன்மகற்குச் செய்வாய் மணம் (சுசு)

உள்ளமதி லேயமுதே னூழுமற்றை மாமுனிவ
தெள்ளறிவி னுலுணர்ந்து செப்பினேன் —மெள்ளவெண்ணெய்த்
தோணியின்கட் டோகைதனைத் தோய்விப்பாயாவிதவம்
பேணி யளிப்பனென்றான் பேர்ந்து (கூஎ)

அன்னபடி யாற்றிமுனி யாங்கிருப்பக் குச்சகனேண்
மன்னமனை நோக்கி மலர்ப்பொய்கை—தன்னினின்று
நோற்கமத மாமுன்போ னெய்தினுற்றன் றூற்பிடர்மே
லேற்கவைத்துப் போயதுசே ணெய்ந்து. (கூஅ)

திண்களிற்றை நோக்கியிதன் செயகையென்னென் றுள்ளுணர்ந்தா
னண்கலிங்க நாட்டி லரிபுரத்தி—லெண்வணிகர்
தங்குலமிக் கோன்றேவ தத்தன் மகன்றிருவிற்
பிங்கலனை சேர்வான் பெரிது. (கூகூ)

தருமதத்த னென்பேர் தரிததோ னளித்த
விருவருமே யூழா லிறக்கப் —பருவாலுற்
றேறுதியிற்பின் றேர்ந்திருக்க வுங்கவன்பால் வேங்கலிபோல்
வாதி யொருத்தனுற்றான் வந்து. (எ0)

கண்டிகையு நீறுங் கவினவணிந் தோனவனை
யெண்டிகையு மேத்துமிறை யென்னவன்பிற்—கொண்டில்
விருத்தி முகமனவின் றின்னடிசி லார
வருத்தியவற் போற்றிநின்ற னாதகு (எக)

அன்னா னடிதாழ்ந் தடிகளிவண் வந்தவா
றென்னா வெனக்கரவ னீசனெமக்—குன்னாவோர்
விஞ்சைதந்தா னஃதெவர்க்கு மேவரிது வஞ்சமிலா
நெஞ்சநிற்கு நல்கவந்தே னோர்ந்து (எஉ)

மின்னுமை யீதானின் மேவிரத முண்டதுபொன்
னென்னவிழைத் தோமெமக்கிங் கேதரிதா—மன்னதுபோ
லுள்ளபல தாழ்ந்த வுலோகங் களையும்பொன்
வெள்ளியெனச் செய்குவோம் வேட்டு (எங)

ஒன்றுதரி னம்பொன் னொருகோடி யாக்குவோ
நன்றதன்மே லோர்கோடி நல்கினுற்—குன்றெனவே
செய்குவநிற் குள்ளநிதி சேர்த்தளிக்கி னின்முழுதும்
வைகநல்கு வோமென்றான் மற்று. (எச)

என்னமொழி சோர னிணையடிக டாழ்ந்திமைப்பின்
மன்ன விருவகைய மாநிதியு—மின்னணியு
முன்கொணர்ந்து வைத்தான் முழுதுமிது வோவென்ன
நன்கு புரிந்தா னவை. (எரு)

இந்த நினதுபொரு ளெம்விஞ்சைக் கேலாது
செந்தழலி னுருக்குந் தேத்திருந்து—நந்திடவே
சிந்துதற்கொவ் வாது சிறிதிஃதென் பின்றிரியிற்
றந்திடுவ மென்றுரைத்தான் றான். (எசு)

முனியனீ யைம்பநிதி முற்றுங் கொணர்வ
னினிதிருத்தி யென்றுரிய வெல்லா—நனிவிற்
றுநமதத்த வும்பலின்மா லுற்றரமும் விற்றேற
தருமதந்த னுயினுன் றான். (எஎ)

உற்றநிதி யாவு மொருங்கவன்முன் னாணவைத்து
நிற்றலுங்கண் டுண்மகிழ்ந்து நீணிதிய—முற்றுங்கொண்
டோங்கனலில் வைத்துருக்கி யோருருவ மாக்கினு
னுங்குருவின் வந்தா னமைத்து. (எஅ)

சொன்ன மிரட்டியது தூக்கிய மாவிரத
முன்னு சிலையிட் டுரைத்துருக்கி—மன்னுமோர்
மட்குகையி னின்மருந்துள் வைத்துறுத்தான் மெய்ப்படிம
வுட்காவி னுற்றுறு னுகந்து. (எகூ)

பன்கனமுள் ளிட்டவதன் பானு மிசைக்கண்ணு
மன்களங்க மொன்றிட்டு வான்றுகிலா—னன்குபொதி
தந்தீனச் சோரன் றயங்கியெரி யாநிற்குஞ்
செந்தீ மிசைக்கரந்தான் றேர்ந்து. (அ0)

கொன்னூற்றெட் டுக்குக் குடபுடம்வெவ் வேறிட்டே
யுன்னேக்கி னுலதனை யுற்றுநனி—முன்னுநன்
மாற்றுற் றதுபழுக்கும் வராகி யின்மருளேல்
காற்றிலறை காட்டென்றான் காண். (அக)

சேமவுறை யுள்காட்டச் சென்றிந் தனக்குவைமே
லீமவெரி யில்வராகி மேலிட்டுத்—தூமமுறச்
செய்ய வனலுரந்தான் றீயிலுற்றான் போல்வணிக
னைய வெதும்பினு னுங்கு. (அஉ)

அன்னபொழு தன்னதிலா ரப்பொற் குகையெடுத்துத்
தன்ன துடை யிற்கரந்தான் றந்திரத்தான்—முன்னமெனப்
பாங்கிருந்த வொன்றைப் பழமைபோற் செல்லவைத்தா
னேங்குபுகை தான்றணித்தா னோர்ந்து. (அங)

இக்குகைநின் கைக்கொண் டெரிதழன்மேல் வைத்திடென
வைக்கவவன் சேமித்தோர் வான்விதித்தான்—மைக்கட்
டிருவுணவு வெஃகல் செழுமனத்தெம் மைக்கொண்
டிருமுப் பகலென்று னேய்ந்து. (அச)

செய்யசடை நீலிமுன்னோர் செய்கடனுண் டஃதுமுற்றி
யையநால் வைகலின்வர் தண்ணுதுயிங்—குய்யுமா
செய்முறையே செய்கென்னச் செல்வனவன் றொடொழலுங்
கைதவன்றான் சென்றான் கடிது. (அரு)

காதமொரு கன்னலிற்போயக் காயங் கரவெய்தி
யேதமிலோர் பாடியுற்றா னோர்வணிக—ஞேதியதோர்
மூப்பகலும் போக முடிவுன்னி மெய்த்தவத்தோன்
றப்புவனோ வென்றினைந்தான் றான். (அசு)

நீலியுறை கோட்டமெங்கு நேடியுமே காணுய்
மாலின் மனவணிகன் மாழாந்து—கோலமனை
சென்று குகைதகர்த்தான் செம்பொனய மானதென்கொ
லென்று விழுந்தா னினைந்து. (அஎ)

மாயுறுவா ரென்ன மதிமயங்கிச் சோர்வுற்றா
னாயு ளளவுமவ் வாறாகத்—தூயதா
மத்தவுல குற்றா னருநிதியந் தானிழந்த
தத்தனென்னு நாமத்தன் றான். (அஅ)

தருமந் தனைவிற்ற நன்மையாற் றத்தன்
பெருமதமான் மாவாய்ப் பிறந்தான்—கருமமுன்ன
தாற்றமறந் தானென் றசத்திற்கொண் டிப்பவத்தை
மாற்றுவன் வல்லையென்றான் மற்று. (அகூ)

முற்றவஞ்செய் வேலை முனிநோற்கு மோர்பகனோன்
புற்றகரிக் காகுகவென் றோதிடலோ—டறமறைபண்ணன்
மேவருமா வேழத்தின் மெய்ப்படிவம் வீட்டினான்
றேவுருவ மானான் சிறந்து. (கூ0)

வந்ததோர் மானமதில் வானவர்கள் வாழ்த்தெடுப்ப
விந்திர னென்ன விவர்ந்தவனூர்—தந்தவெழிற்
றேசிகவென் வல்வினையைத் தீர்த்தனையென் றுப்பணிந்து
மாசிலுல குற்றான் மகிழ்ந்து. (கூக)

அன்னவன்விண் ணேக வருந்தவன்முன் போனேற்க
வென்னமன்வந் தென்னவரம் வேண்டுமென—மன்னவற்றாழ்ந்
துன்னுசத்தி யன்மகளென் னோர்மகன்வேட் காதொழிந்தா
ளென்னவவ ணல்கென்றா னோர்ந்து. (கூஉ)

காலனது கேளாத்தங் காற்படரை யேவவன்னார்
சாலம் வியப்பவுயிர் தான்விடுத்தார்—சாலவே
நல்ல நினைவின்றி நன்கு துயின்றவள்போன்
மெல்ல வெழுந்தாள் வியர்த்து. (கூ௩)

தாய்தந்தை மார்தாந் தனயை தனைத்தழீஇ
யாய்நந்த வம்மா னருந்தவத்தான்—மாய்தந்த
நின்னை மறுத்துழற்றேற் நேரிழா யென்றிரங்கி
யென்னைவிதி யீதென்றா ரிங்கு. (கூச)

சுற்றமுமற் றேருந் துவன்றி யதிசயிப்ப
வுற்ற வணங்கை யுறநோக்கிப்—பொற்றொடிநீ
சென்றதுமுன் சேர்ந்தவரைச் செய்நிமுறை செப்புகென
வொன்றுமொழி யாதுரைத்தா ளோர்ந்து. (கூரு)

மாற்றமுணர்ந் தாரு மகிழ்கூ ரமையத்திற்
கூற்றனருள் பெற்றுவருங் குச்சகன்றாள்—போற்றிமுனி
பன்னிதன் னோடும் பணிந்து பலபுகழ்ந்து
தன்னுறையுள் கொண்டணைந்தான் றான். (கூசு)

சின்னாட் செலமுனிதன் செல்வி தனைமணப்பான்
கொன்னார் வரனைக் கொணர்கென்ன—நன்னாடோர்ந்
தன்னான் கொடுவருஞ்செய்க் காரணங்கை நல்கினன்றீ
முன்னா னவர்தம் முனம். (கூஎ)

காதலிரு வோருங் களித்தில் லறமியற்ற
மாதவனோன் பாற்ற வடபுலத்திற்—போதலுற்றான்
மாய்வி னலத்தவர்பான் மண்மிருகண் டென்பெயர்கொள்
சேய்வந் துதித்தான் சிறந்து. (கூஅ)

மறையவர்க்குக் கூறும் வணஞ்சடங்கு கால
முறைபிறழா வாறு முடித்து—நிறைதவஞ்செய்
வான்சென் றனன்முனிவர் மன்னகல வனனற்குத்
தான்செய் கடன்புரிந்தான் சார்ந்து. (கூகூ)

வருகண்டு மன்சொன் மருத்து வதியை
மிருகண்டு வேட்டான் விதியிற்—குருகண்
டனமயத்திற் சேயின்றி யாரனர்கொண் டன்னா
னுவடைந்தான் காசிநக ரோர்ந்து. (க00)

கங்கைநீ ராடிமிரு கண்டு மனைவியொடு
மங்குமணி கன்றிகையா மாலயத்திற்—புங்கவன்றா
னூற்றினன்பி னேத்தியத னோர்பாற் பரசிவனைப்
போற்றிவழி பட்டான் புரிந்து. (க0க)

அன்னான் மகற்குறித்தோ ராண்டருநோன் பாற்றவரன்
முன்னாற் குறுக முனிபோற்ற—வென்னாநீ
சிந்தித்த தென்றானென் சிந்தனைதான் மைந்தன்மேற்
பந்தித்த தென்றான் பணிந்து. (க0உ)

புன்முறுவல் செய்திறையோன் பூரணமா நூறாண்டின்
மன்முடங்கூ* ளொக்குமின்றி வன்பிணிகொண்—டுன்மெய்மைப்
போதமுமில் லாதவோர் புத்திரன் றன்னைநினைக்
கீதுமோ வன்ப வினிது. (க0௩)

ஏரா ருருவாய்ந் தெமக்குமன் புள்ளவனாய
பாராய நோயின்றிப் பன்னிடுமாண்—டீராறிற்
பல்கலைநூல் பண்பிற் பயின்றுவல்ல பாலகனை
நல்குதுமோ வென்றா னயந்து. (க0௪)

அறைந்த வவையோர்ந் தருந்தவத்தோ னாண்டு
குறைந்திடினுங் கூறறிவுங் கோல—நிறைந்தமெய்யு
மல்குமுடற் குற்றமின்றி யத்தநின்பாற் பத்தியுள
செல்வனைநீ நல்கென்றான் றேர்ந்து. (க0௫)

என்றுமுனி கூற விறையருள்கூர்ந் தைம்புலனும்
வென்றவநிற் கோர்சேய் விழைந்தளித்தோ—மென்றுரைப்ப
மன்னுமவற் போற்றி மகிழ்வுற்றுக் கேளிரொடுந்
தன்னுறையுள் சார்ந்திருந்தான் றான். (க0௬)

திருத்துவதி லாச்செய்கைச் சீர்கொ ளணங்கா
மருத்துவதி மாது வயிற்றிற்—கருத்துவன்றத்
திங்கடொறுஞ் செய்கடன்கள் செய்து சிவனடியா
ரங்குவிழை வானதந்தா னார்ந்து. (க0௭)

தெய்வதநாள் கோள்சிறந்த தேத்தமரா வைதிகமுஞ்
சைவமுமெஞ் ஞான்றுந் தழைத்தோங்கப்—பைவை
கறைமிடற்றான் றூய கருணையினோர் சேயைப்
பொறையுயிர்த்தாள் பூவை புரிந்து. (க0௮)

தாதையது கேளாத் தனிக்கங்கை நீராடி
வேதியர்முன் னேவருக்கும் வித்தநல்கப்—போதமர்வோன்
பார்க்கண் டரணி படவருசேய்க் கோர்நாம
மார்க்கண்ட னென்றுசெய்தான் வந்து. (க0௯)

மைந்தன் மதிபோல் வளர மதிதோறு
முந்து கடன்புரிந்தாண் டொன்றிரண்டோ—டைந்தினல்லோ
ரோதியவா றாற்றிமுன்னூ லோதியுணர்ந் தெப்பொருட்கு
மாதிசிவ னென்றுணர்ந்தா னாங்கு. (கக0)

சங்கரனைத் தாழ்ந்தடியார் தம்மைப் பணிந்தாசான்
பங்கயத்தாள் போற்றிப் பயந்தவரை—யங்கிறைஞ்சி
மாணியியன் மாறாமே மன்பிரம மாவொழுக்கம்
பேணி யிருந்தான் பெரிது. (ககக)

இவ்வா றியலும்போ தெண்ணிரண்டா மாண்டுவரத்
தெவ்வா மெனவிருவர் சேர்ந்துமன—னொவ்வா
விருந்தனர்சே யாங்கதுணர்ந் தென்னிமித்த நீவிர்
வருந்துவது சொல்விரென் றான் மற்று. (ககஉ)

அன்னதுதேர்ந் தங்குமா வத்த னினக்களித்த
முன்னுபதி னாறாண்டு முற்றியதா—லின்னலுற்றே
மென்ன வவரினையீ ரீசனைப்பூ சித்துவல்லை
தென்னவனை வெல்வனென்றான் சேய். (ககங)

ஈங்கிருத்தி ரென்னாப்பல் லேதுவினாற் றேற்றியன்னார்
பூங்கழல்க டாழமகற் புல்லிமகிழ்ந்—தாங்கிருப்ப
வாரா லயமா மருவுமணி கன்றிகையாம்
பேரா லயம்புக்கான் பேர்ந்து. (ககச)

அன்பா றெனக்கண்ணீ ராகவலம் வந்தீசன்
முன்பாகத் தாழ்ந்து முறையேத்தித்—தென்பாற்
றிருந்தொருசா ரெய்திச் சிவவுருச்செய் தர்ச்சித்
தருந்தவஞ்செய் திட்டா னவன். (ககரு)

ஈசனங்க னெய்திநினக் கென்னவரம் வேண்டுமென
நேச னடிபணிந்து நின்மலயான்—பாசதரன்
கையுறா தாள்கெனலுங் கான்முடிவைத் தஞ்சலைநீ
யைய வெனமறைந்தா னாங்கு. (ககசு)

பின்னாருண் மைந்தனுக்குப் பேசிடுமாண் டெண்ணிரண்டுந்
துன்னநமன் றூதுவன்முன் றோன்றவான்—மன்னடியான்
பூசனைகண் டஞ்சியே போயினன்றன் னாயகன்பாற்
றேசனையன் செய்கைசொலத் தேர்ந்து. (ககஎ)

சென்றுதூ தன்றென் றிசைக்கா வலற்றொழுது
நின்ற னுரைப்படிபோய் நேடினையான்—குன்றவில்லி
பூசனை செய்கின்றான் பூசுரன்மார்க் கண்டனெழிற்
காசியிலுள் ளானென்றான் காண். (ககஅ)

அன்னோன் றனையனாக வஞ்சினே னஞ்சயின்ற
முன்னோ னருளுடையோன் முன்னுதிநீ—மன்னோ
வெனாநங் கரணிகரை யீங்கழைமி னென்றான்
சினமன் னியமன் சிவந்து. (கககூ)

அஞ்சித் திரகுத்த ரஞ்சியடி தாழநமன்
வஞ்சியிடத் தாற்பரசு மார்க்கண்டன்—துஞ்சுவரை
யென்றெனநன் கேத்தி யிருவோரு மேட்டினைப்பார்த்
தென்றுமக னென்னலென்றா ரீங்கு. (கஉ0)

ஐயவ ரர்ச்சனைசெய் தண்ணியமா புண்ணியத்தாற்
றுய்ய விசும் பெய்தலன்றிச் சொல்லரிய—வெய்யதாந்
தீநரகெய் தானிஃது திண்ணமென்றார் தங்குறிப்பே
டான கணக்கினையா ராய்ந்து. (கஉக)

கால னமைச்சனுங் காலன் றனைவிளித்து
ஞாலமுறு காசியின்க ணன்மறையோன்—பாலனுயிர்
நல்கெனலு மங்கவன்போய் நற்றவன்செய் பூசைகண்டு
வெல்குணமில் லென்றுணர்ந்தான் வேர்த்து. (கஉஉ)

ஏர்மைந் தனைத்தொழுதான் யாரைநீ சொல்கெனலு
கார்மெய்ந் நமற்றொழூஉங் காலன்யான்—சார்வதிங்க
னென்னநினக் கேய்ந்தவய தெண்ணிரண்டு மேகியதே
நென்னலோ டென்றா னடிது. (கஉங)

தடைசெய் பவரார் சமைப்பளிப்பு வீப்பு
விடையனருள் வேலை விதித்தான்—படைமறவி
யொன்றுமுன்னீ ரந்தகனூ ருற்றீரேல் வான்பதவி
நன்றுதவு மென்றா னயந்து. (கஉச)

அன்னதுகேட் டீசனன்ப ரார்விண் பதம்போகார்
கொன்னமன்ற னூருங் குறுகார்சீர்—மன்னுஞ்
சிவபதஞ்சார் வார்யானுஞ் சிந்தியேன் வேறு
தவறிலேன் போதியென்றான் றான். (கஉரு)

காலனும்போய்க் கூற்றுவனைக் கண்டு நிகழ்ந்தவெலா
மேலவுரைக் கக்கண் ணெரிசொரியச்—சாலவே
சீற்றங் கொடுவெந் திறன்மேதி மேலிவர்ந்தே
யாற்றலொடு வந்தா னடுத்து. (கஉசு)

நீல நிறமு நிவரம்போ ளீள்வடிவுஞ்
சூல முறுகாமுந் தோன்றவே—பாலனெதிர்
நின்றா னமன்சேய் நினைந்திறைஞ்சி னன்புரத்தை
வென்றான் மலரடியில் வீழ்ந்து. (கஉஎ)

மைந்தநீ யூழின் வலியுமரன் சொல்லாறுஞ்
சிந்தனைசெய் கில்லாய் சிறிதுமிஃ—தந்தவர்க்கும்
போக்கவரி தேயீசன் பூசனையென் பாசமதை
நீக்குமோ வென்றா னடிது. (கஉஅ)

அத்திமண வெண்ணினுமென் னாணையின்மா ளிந்திரனை
யித்தனைபே ரொன்றே யெணலாமோ—நத்தன்
றனக்கு மலரோன் றனக்குமெற்கு மூண்டே
யுனக்கும் பிறப்பொடிறப் புண்டு. (கஉகூ)

வாச மலர்தூய் வழிபட்டு மாபதியாற்
பேசிறைமைக் கேற்றபடை பெற்றுளே—னீசற்றுந்
தன்புறிலை யேவரையுஞ் சூழ்தென் புலமுய்ப்பே
னென்பினே னென்றா னினிது. (ககூ0)

மைந்தனது கேட்டு மறலிகே ளீசனன்ப
ரந்தமுறிற் கைலை யடைவான்றி—நந்துமயன்
மன்பதமு மேவார்மால் வான்பதமு மேவாரே
யுன்பதமு மேவா ருவந்து. (ககூக)

அன்னோர் தகையறிவா ராரயன்மா லாதியரை
யுன்னா ரரனையே யுள்குவா—ரெந்நாளுந்
துன்பமே யில்லார் துறந்தே தலைநிற்பா
ரின்பமே யெய்துவா ரீங்கு. (ககூஉ)

சிவநேயச் செல்வர் திறன்றெரியாய் ஞாலத்
தவர்போ னினைந்தாய் சமனே—யவமேநீ
யென்னு ருயிர்க்குமிட ரெண்ணினா யிங்கிவைதா
னுன்னு ருயிர்க்கொழிவென் றோர். (ககூங)

தீதாய் தருசொல் செவியேறச் செப்பினாய்
பேதாய் நீ முன்னின்று பேசாமே—போதா
யெனமைந்தன் கூற வியமனிரு கண்ணுங்
கனலுகவே பார்த்தான் கறுத்து. (ககூச)

பாசந் தனையெடுத்துப் பாலகன்றன் மேலெறிய
நேசமுளான் கண்ணுதலா னீழலுற—வீசன்றான்
மார்க்கண்டன் முன்றோன்றி மைந்தவஞ்சே னின்றுன்பந்
தீர்க்கின்றா மென்றான் றெரிந்து. (ககூரு)

மைந்த னிடரு மறலியிறு மாப்புநந்தச்
சிந்தைதனி லுன்னித் திருவருள்கூர்ந்—தெந்தைபிரான்
சீற்றங் கொடுவாமச் சேவடியி னாலுதைத்தான்
கூற்றன் விழுந்தான் குலைந்து. (ககூசு)

விழும்போ தவனி வெரீஇக்கீண் டதுமால்
கொழும்போத னாதியர்மால் கொண்டா—ரெழும்போத
வாழ்வேலை யார்த்திலபல் லண்ட மனைத்துமே
கீழ்மேலா யுற்ற கிளர்ந்து. (ககூஎ)

பானின்ற தானை பகடும்பார் வீழ்ந்திறந்த
தானவுயிர் காப்பா னாரனுண்டா—னீனிறங்கொள்
கூற்றனென்செய் வானென்னாக் கோதில்வட மொழியாற்
போற்றல் புரிந்தான் புரிந்து. (ககூஅ)

பாலகீ பூசனைசெய் பான்மையினிற் காயுளெந்தக்
காலமுநந் தாதளித்தாங் காணென்னச்—சீலமொடு
பூசைசெய்சம் புக்கிடையிற் பொற்பிற் குறுகினா
னீசனென் கோமா னினிது. (கஙகூ)

தந்தைதாய் தாடழுவித் தாழ்ந்தயருண் ணோய்மாற்றி
யுந்து சிலபகலங் குற்றிருந்து—நந்துமன்பி
னத்தனம ராலயங்க ளத்தனையுஞ் சூழ்ந்தேத்தி
முத்தியெய்தி னான்மா முனி. (கச0)

நற்றவஞ்செய் தாரு ணனிநல்லன் மூவுலகு
மற்றவன்சீ ரென்றும் வயங்குமல—ருற்றவனும்
பொற்பதுமை கேள்வனுமே பொன்ற வவன்கண்ட
கற்பங் கணக்கில்லை காண். (கசக)

அன்னாற் கலக்கண்செ யந்தகனு மந்தமுறப்
பன்னாக மன்சுமந்த பாரினுயிர்—மன்னா
வளர்ந்துமடி வின்றிமல்க வன்பரத்தாற் பூமான்
றளர்ந்தரிதாள் வீழ்ந்தறைந்தா டான். (கசஉ)

மாலயனும் வாசவனு மன்கயிலைக் கேகியங்க
ணீலகண்டன் றாள்பணிந்து நின்றேத்த—வேலவே
மாயவனை நோக்கிநீர் வந்ததென்கொ லென்னவன்னான்
றாயவற்குச் சொல்வான் றுதித்து. (கசங)

ஐயநின தாணையா லம்புயத்தோ னாதியர்தஞ்
செய்யதொழில் போற்றினார் சேவடியா—லுய்யவே
சீறு நமன்றனைநீ செற்றமையா னாயேற்குக்
கூற வுளதோர் குறை. (கசச)

வையமகண் மன்னுயிர்கண் மாய்வின்றி வைகநனி
பையுளுற்றாள் பாரம் பரிப்பதனா—லைய
செறுத்தனீ தேர்வின்றித் தென்னவன்செய் தீமை
பொறுத்தவற்பே ணென்றான் புரிந்து (கசரு)

செங்கண்மால் வேண்டத் திருவருள்கூர்ந் தெம்பெருமா
னிங்கந் தகநீ யெழுகென்ன—வங்கண்
வளர்ந்தவன்றான் போன்றெழுந்து வந்தான்றாள் போற்றித்
தளர்ந்தனனுய்ந் தேனென்றான் றாழ்ந்து. (கசசா)

அம்மையப்ப னந்தகற்பார்த் தண்மணிவெண் ணீறுபுனைந்
தெம்மை நினைபவர்பா லேகலைநீ—செம்மனநந்
தொண்டரையா மென்னத் துணிதியன்னார் நேர்பட்டாற்
கண்டவர்தாள் வீழ்தி கடிது. (கசஎ)

புந்திசொன்மெய் யாருப் புரிபுண் ணியபவத்தா
ரந்தரமேல் கீழாக வாற்றுதியென்—றெந்தைபிரா
னின்படையோ டேகெனமா னேடடிதாழ்ந் தூரடைந்தான்
கொன்படையோ ரேபகடுங் கொண்டு. (கசஅ)

தென்றிசைக்கோன் போய்த்தன் செயல்புரிந்தான் தேவரெலாம்
பொன்றலிலான் றாள்பணிந்து பொற்கயிலைக்—குன்றினின்று
தத்தமிடஞ் சென்றார் சமன்படரான் மார்க்கண்டன்
மொய்த்தவருட் காதைசொல்வார் முன். (கசகூ)

ஆதலினற் குச்சகனோற் றாரணங்கி னுவிதந்தான்
போதகமெய் நீக்கிவிண் போக்கினான்—மாதவத்திற்
போகா மறலிவலி போக்கியே மார்க்கண்டன்
சாகா வரம்பெற்றான் றான். (கநூ௦)

மார்க்கண்டேயப் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா உ௲ ரு.

---

# மாயையுபதேசப் படலம்.

---

ஆயதுண்மை யாமறிதி ராற்றுநோன் பின்னுமுண்டென்
றேயமுனி கூற வினிதுநகு—மாயவனன்
மாமுனிவ விவ்வுறுதி மாமுனிவர்க் காகவிறல்
நாமருள்வார்க் காங்கொலோ நன்கு. (க)

மேவியலார் செல்வமின்பம் வெற்றிநிறை யாயுள்சீர்
மாவியலார் வாழ்க்கையிவை மைந்தரெய்த—நீவகுத்தி
மாமுனிவ வென்னவிதன் மன்னுகருத் தோவவருக்
காமியல்பு சொற்றியென்றா னுங்கு. (உ.)

தேமொழியா மாயவடன் செல்வர் தமைநோக்கி
மாமுனிவன் கூறிய து வாய்மையே—யாமவைதா
முங்களியற் காவதன்று ணொன்றிநீர் கேண்மினென
வங்கவர்க்குச் சொல்வா ளமர்ந்து. (ங)

மயனுறு புந்தியின்கண் மன்சே தனம்பல்
வியனுறு மின்னுயிர்கட் கெல்லாம்—பயனுறு
மார்தருவண் கல்விதனி லாக்கத்தின் மேலொன்று
சீர்தருவ தில்லை சிறந்து. (ச)

இருமைத் திருவிலொன்றை யெய்சா வுயிரின்
பெருமைத்து பேயின் பிறப்பே—யருமையாங்
கல்வியின்மேம் பட்டுக் கவினச் சிறந்ததே
செல்வமெனச் செப்பலாந் தேர்ந்து (ரு)

பன்னரிய மாநூல் பயின்றுகலை தேர்ந்துலகி
லின்னமைநேர் வாரில் லெனவிசைகொண்—டென்னபய
னேய்நல் லிருநிதிய மெய்தாரை பெய்தியென்றுங்
காய்நல் குரவுற்றக் கால். (கூ)

அளவின்மாக் கல்வி யறிவொழுக்கஞ் சீர்த்தி
பளகில் குணமாப் பயன்க—ளுளரேனு
மேலதா மாநிதிய மேவாக்கா லன்னவரை
ஞாலமணி கூறு நவை (எ)

தெருளுடைய ரேனுந் திறலுடைய ரேனு
மருளுடைய ரேனு மவர்தாம்—பொருளுடைய
ரில்லாரே லீன்றுரு மில்லாளு மேய்ந்தவரு
மெல்லாருஞ் சொல்வா ரிழுக்கு. (அ)

ஆக்க மடையநினை வாராகி லாங்கவருக்
கூக்க முறவன்ன துண்டாகு—மீக்கொள்ளு
மந்தவளம் பல்வகைத்தா மாரும் பெறுகிலர்நீர்
சிந்தைசெய்மின் மேவுந் திரு. (கூ)

நிருநலின்யா மந்தோன்று நீர்மையினுற் றுங்க
நிருதர் கதியுற்றீர் நீவீர்—கருதுமுங்கட்
கொன்று ருயர்சாரா மோது மூவர்முயற்சி
தன்னுற் றலைமைபெற்றார் தாம். (க0)

மாவிமையோர் தம்மினீர் மாட்சி நனிபெறுவீர்
மூவிரும்யாங் கூறு முறைமுயல்வீர்—மேவுதிக்கி
லானவா லந்தி வதனுதக்கார் பூமியது
தானவர்க ளேற்குந் தகைத்து. (கக)

ஆயிடையமஃ தாற்ற வளவில் சனத்தொடும்போய்
மேயகுண்ட மாதிசெய்து வேள்வியின்கட்—டூயவாய
காரிகொள்வெங் காட்டமிட்டுக் காயெரிசேர்த் தூனெய்த்தோர்
மாரியிற்பெய் தாற்றீர் மகம். (கஉ)

அம்மை வரற்குறித்தே யவ்வேள்வி யாற்றுதிரே
லிம்மையினீ ரெய்துவது யாவுநல்குஞ்—செம்மையின்
மூவிருமங் கட்போய் முயலவதற் காகுவன
மேவி யருள்வனென்றாள் வேட்டு. (கங)

தந்திரநூ லாறுந் தனிமந் திரம்யாவு
மிந்திரசெல் வங்கொ ளியலுமுள்ளு—கந்தறைந்தான்
பொன்னவனை மாமுனிதாள் போற்றிவிடை பெற்றுமுன்னோன்
பின்னவரோ டேகினான் பேர்ந்து. (கச)

மாயையுபதேசப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா உ௲௦.

---

# மாயை நீங்கு படலம்.

---

ஆங்கவனை ரேகவனங் கம்முனியை நோக்கியினி
யீங்கிரேன் செல்வமைப்பே ணெண்ணங்கொண்—டேங்கவெனப்
போதியோ வென்னைவிட்டுப் பூங்கொடியே நீயேக
வேதியோ வென்றா னினைந்து. (க)

சேயிழையாள் செய்பெறநிற் சேர்ந்ததன்றிச் சேரவன்று
மாயையறி கென்ன மறைந்தசன்று—யேமுனி
வன்னாள் செலவவளோ டாயபொருள் போயதுணர்ந்
துன்னு வுளைந்தா னுளத்து. (உ)

சாரோதி மாயை கவினுருவங் காணாய்ப்
பேரோதிக் காசிபன்றான் பேதுறுங்கா—லூரோதி
மத்தன் மகன்றுயரான் வாடினமை நாடியே
யத்தநெறி வந்தா னணைந்து. (ந)

செந்தா மரைப்புத்தேள் சேணுறத்தன் றாதையென்றோர்ந்
தந்தா ளிறைஞ்சவன்று ளுசிசொலி—மைந்தா
நினதரிய நோன்பிழந்து நீமெலிவ தென்கொ
லெனநிகழ்ந்த சொற்றா னினைந்து. (ச)

ஆரணநூ லெல்லா மறிந்தமுனி நீபிறர்போற்
காரிகையை மேவிக் கவன்றனைமா—லோருமிடத்
துண்டழிக்குங் கள்ளி னுறநோக்கி னாவியையுங்
கொண்டழிக்குங் காமங் கொடிது. (௫)

நூரகதச்செந் தீக்குக் கொடும்பகையாய்ப் பொல்லா
நரகதச்செந் தீயினுக்கு நட்பா—யுரகதத்திற்
சேர்ந்தாற் கொலுந்தீயிற் றீயதே சேராமே
தீர்ந்தார்க் கொலுங்காமத் தீ. (௬)

காமங் களவுபொய் கள்ளுண்ணற் கேதுவாங்
காமங் கடுநரகின் கண்ணுய்க்கு—மேமனுங்
காமம் பிறவிக்குக் காரணமாய் விற்குமதாங்
காம மெவைக்குங் கரு. (எ)

ஆதலின்வெங் காமத் தழுங்கனீ கூடணங்கு
மோதருமா மாயையெனை வோர்கிலாய்—மாதவமே
போற்று கெனநிற்றீஇப் போனு னாறக்கருதி
நோற்றனன்மெய்ந் நூலோ னுனித்து. (அ)

ஆங்ககலு மாயை யருள்புதல்வர் செய்மகத்திற்
கோங்குபொருள் யாவு முதவுவான்—றீஙகினரை
வேண்டான் கழல்போற்றி வெங்குருவி னேவலாற்
பூண்டா டவமே புரிந்து. (கூ)

மாயை நீங்கு படலம் முற்றிற்று
ஆக திருவெண்பா உநிகூ.

# அசுரர்யாகப் படலம்.

அன்னையறை யாகமுறை யாற்றநினைந் தேகியசூர்
பின்னவரை நோக்கிமகம் பெட்டுளுற்ற—வுன்னுதக்கின்
மன்னிப் படைசெலுங்கான் மல்குகடை நெறறியின்கட்
டுன்னிப் படர்திரென்றுன் சூழ்ந்து. (க)

நன்றென்று தாழ்ந்தனிக நண்கூழை நெற்றிதனிற்
றுன்றுமிரு வோமுமுறை சூழ்ந்துசெல்வ—மென்று
விடைகொண்டு சென்றூர் விரைந்தவர்செல் லாறே
படைவெள்ளஞ் சென்ற பரந்து. (உ)

தார்துளங்க மேவுகுந் தனியிப் படையதிர்ப்பாற்
பார்துளங்க வன்னதாற் பன்னருமுந்—நீர்துளங்க
மாமை மணிச்சேடன் மன்னு முடிதுளங்க
வாமை துளங்கிற் றயர்ந்து. (ங)

இந்திரனே யாதியா மெண்டிசைகாப் பாளரெலாந்
தந்திறல்கொள் காவ றலர்ந்துநொந்தா—ரந்தரமேல்
வாழ்வார்வான் காற்றெறிதிரின் மன்னேர் தருவினின்று
வீழ்வார்போன் மெய்விதிர்ந்தார் வேர்த்து. (ச)

ஆழிமீப் போர்த்துப் புகலருமா வான்மறைப்ப
வாழி யுடைந்ததுபோ லார்ப்புமிக—வூழிக்
கண்டவெள்ள மென்று கலங்க வுலகம்
படைவெள்ளம் போர்ந்த பரந்து. (ரு)

செல்லுந் திறலவுணர் சேனையின்முன் சீயமுகன்
வெல்லு மிடற்கூழை வேழமுக—னெல்லும்
படியேகச் சூர பதுமனென்போ னுப்பட்
கடியேறச் சென்றான் களித்து. (சு)

மல்கவுணர் வாளெயிறும் வான்குடையுங் கூன்மதியம்
பல்கலையுஞ் சேர்மதியின் பண்பேய்ப்ப—செல்படையைப்
பண்டா ரெவருமிந்தப் பான்மையில ரென்றுபுகர்
கண்டான் வியந்தாள் களித்து. (எ)

செல்கின்ற வீரர் திறலும் பெருமிடலும்
வெல்கின்ற மாவிகலும் வேறுளவு—மல்கத்
தெரிவுற் றமர்ந்துபுகர் தேவரிவர்க் காணி
னிரிவுற் றகல்வரென்றா னீங்கு. (அ)

இவர்வன்மைக் கீறில்லை யேனுமுன்னோர் போற்செய்
தவம்வரமே யாதிகொளாத் தாழ்வுண்—டெவர்தமக்கு
மோதுகுறை வொவ்வொன் றுளதா மதற்குறுசீர்க்
காதிசே யாகுங் கரி. (கூ)

என்றிசைத்து நின்றவுணர்க் கேந்தலாஞ் சூரபன்மன்
முன்றகவி னேக முகமனுரை—நன்றியம்ப
முன்னினன்போய் வெந்தகுவன் முன்னுறவும் பேசிடவு
முன்னினனோர் விஞ்சை யுளத்து. (க0)

மன்னு முயிரை வசீகரிக்கு மந்தரமொன்
றுன்னி விதியி னுறநோக்கித்—துன்னரிக
வாழியிடைப் புக்கவுண ரஞ்சலிக்க மூவர்முன்
னூழினவில் வாஞசி யோர்ந்து. (கக)

இந்திரன்முற் றேவர்க்கு மேவர்க்கு மேலாதி
வெந்திறல்கொள் வாளவுணர் வேந்தவென—முந்துலகி
லெந்தவுல கத்தையோ வெந்தையே யாரைநீ
வந்ததென்கொல் சொல்லையென்றான் மன். (கஉ)

நின்பா லெனதுள்ள நெக்குருகா நிற்குமா
லன்பா லுலக மளிக்குமன்னே—முன்பாற்
றமியே னிழைத்த தவவலிமை யன்றோ
விமையே நினையெதிர்ந்தே னீங்கு. (கங)

எனமழைக்கோள் கேளா விருவிசும்பிற் செல்வே
னானதுமா பிற்குருவா யுற்றே—னானுமோர்
புகரெனாநா மம்பெற்றேன் போற்றுறுதி யொன்று
பகரவந்தே னென்றான் பரிந்து. (கச)

தானவர்கோன் கேட்டுவந்தெந் தாயுந் தனையென்று
வானவெள்ளி தாள்பணிய வன்பினனான்—மானவட்க்
குந்து தவக்கிடையூ றொன்னார் செயாவண்ண
மந்திரமொன் றீந்தான் மதித்து. (கரு)

நமன்றனைவென் மந்திரத்தை நல்கியிதை நாளு
மமர்ந்துன்னி மாதவநீ யாற்றாய்—நிமிர
வெனநவில வன்னவற்றாழ்ந் தேத்தவெள்ளி யாசி
மனநவின்று சென்றான் மகிழ்ந்து. (கசு)

மாயவடன் மைந்தன் வடபுலத் தேகிவடத்
தூயவனச் சூழலுற்றுச் சொன்மகத்திற்—காயமதி
லாதி யுறுப்பயுத மாம்யோ சனையளவின்
மாதிகிரி கொண்டமைத்தான் மற்று. (கஎ)

சுற்று மதிலைச் சுலவத்தன் றானைதனை
புற்றவா ணுக வுணற்றுவித்து—விற்றயங்க
நாற்புறமும் வாய்த னவிற்றியதிற் போர்மாதை
யேற்புறவே வைத்தா னினிது. (கஅ)

கோவுயர்வெற் பாலமைத்த கூரெழில்கொள் வாரிமுன்சீர்
மேவவுணர் கோனியற்றும் வேள்விக்குக்—காவலா
யாளியூர் காளி யினநிறீஇப் போற்றிவைத்தான்
ஞாளியூர் வைரவரை நன்கு. (ககூ)

மன்னதனு ளாயிரமெண் மாயோ சனைநீள
முன்னுவதோ ராழமுள வோமகுண்டந்—துன்னதைச்சூழ்
வேதிபுரி வித்தனன்மன் மேதினிமா துண்மெலிந்தா
ளாதியரா வச்சமுற்றா னாங்கு. (உ0)

கூரதலர் சோர்வுறச்செய் குண்டமுற்ற நூறுடனெட்
டாரவதைச் சூழ்வேதி யாயிரத்தெட்—டோடமரச்
செய்வித் தெழிற்றாயைச் சிந்தித்தான் செய்பொருள்கள்
பெய்வித் தருள்வான் பெரிது. (உக)

மாயவளெங் கோனருளான் மன்சீயம் வேங்கையெண்கு
பாயசுவம் யாடாதி பன்மிருகந்—தூய
வயிர்புழுக்க லின்னா னவிநேமி மெய்யி
லிவர்குருதி வாரிபெய்தா ளேய்ந்து. (உஉ)

மாசுபடு மெண்ணெய் மதுவிழுது பாறயிராம்
வீசலைய நீத்தம்வெவ் வேறமைத்தாள்—பேசுகறி
யைய்யவியோ டேண்மா வசலம் பசுயாவுந்
துய்யவொவ்வோர் பாணிறைத்தாள் சூழ்ந்து. (௨௩)

இருநா யகவேதி யின்னடுவ் ணுட்ட
வொருவச் சிரக்ம்ப முய்த்தா—ளுருநெலரி
தார்மன் னரிசனந்தோய் தண்டுலநன் மான்மதஞ்சி
ரார்தருப்பை சேர்வித்தா ளாங்கு. (௨௪)

சார்வெவ் விடங்கால் சமிதைபொரி யொண்முதிரைக்
கூர்திரள்கள் யாவுங் குலவிடவே—யோர்மும்மை
யாயிரமா யோசனைத்தேத் தாரவுய்த்தா ளாயினியான்
மேயிழைப்பேன் வேள்வியென்றான் வேந்து. (௨௫)

மன்வே தியிணுப்பண் வச்சிரமா கம்பநிறீஇப்
பின்வேள்வி யாற்றிடநாற் பேர்வாயி—லுன்வீர
மாதுபேய் பூதர் வயிரவர்க்கு மர்ச்சனையிற்
போதநல்கி னான்பலிகள் போந்து. (௨௬)

மேவா யிரத்தெட்டு வேதிதொறு நாப்பணச்சுத்
தீவாய் சமிதையிட்டுத் தீமூட்டி—மூவாத்
தகைமைபெறு வெஞ்சூரன் றம்பிமா ரோடு
மகமியற்ற நேர்ந்தான் மகிழ்ந்து (௨௭)

ஊனவியின்!வர்க்க முதவு தொறம்பரன்பேர்
வானெறியிற் கூறியன்னான் மாட்டுறவுய்த்—தானவெஞ்சூர்
பின்றா ரகற்பாராப் பேர்வலிடோ யிவ்வேள்வி
குன்றாமற் போற்றுகென்றான் கூர்ந்து. (௨௮)

ஓதியவாம் பன்முகனை யூங்கிருத்தி நூற்றெட்டு
வேதிதொடர் வேள்வி விழைநதியற்றிக்—கோதிலாள்
சீயமுகற் பாராத் திண்டிறலோ யிம்மகீ
நேயமொ டாற்றென்றா னின்று. (௨௯)

அரிவெம் முகத்தானை யங்கிருத்திச் சூரா
னுரியதன்மா வேதியின்க ணுற்றுப்—பரிவின்
விதியினருச் சித்து விமலனைநெஞ் சத்து
மதியி னினைந்தான் மகிழ்ந்து. (௩0)

நச்சார் தருச்சமிதை நண்வேதி யிற்றாவி
வெச்சா ரரணியிற்கொள் வெந்தழலிட்—டசசார
மந்திரத்தின் வானிழுது மாமழைபெய் தங்குழிசி
யுந்தரத்த மூனுய்த்தா னுற்று. (௩௧)

மகவெந் தழன்மேன் மடைநெயெண்ணெய் சோரி
நகுபா றதிபொரிமு னல்கித்—தகுமறைபெய்
தைவனநீ வாரமென் னாதி முதிரைவர்க்கம்
பெய்து வளர்த்தான் பெரிது. (௩௨)

இன்ன வகையியல்பி னீசன் றனையுன்னி
மன்னவுணர் கோன்பேர் வளஞ்சுட்டி—யுன்னரிய
வீரமுறு வேள்விதனை வேட்டலுந்தீ விண்புவியச்
சாரவெழுந்த ததிர்ந்து (௩௩)

என்று பதவிசுட்ட திந்துபதஞ் சுட்டதுமீ
னென்றுறைவோர் தம்பதஞ்சுட் டிந்திரனார்—துன்றுபதந்
தாயதன்மே லோர்பதமுந் தான்சுட்ட தேமுனிவன்
செயுஞற்று மாமகச்செந் தீ. (௩௪)

மண்போர்த் ததுசுலவு மாதிரங்கள் போர்த்ததுமேல்
விண்போர்த் ததுமால் விரிஞ்சனமர்—கண்போர்த்த
தார்த்து வருவிடத்தி னப்புகைபோ லெப்புறமும்
போர்த்ததந்த வேள்விப் புகை. (௩௫)

சூர்வேதி யிவ்வணந்தீத் துன்னவவன் பின்வந்தோர்
பேர்வேதி யெட்டிலக்கம் பேதஞ்செய்—தோர்வே
மனலூழித் தீயி னதிர்ந்தெரிய வானோர்
மனன்கேட் டுலர்ந்தான் மனன். (௩௬)

பார்விண் ணடுங்கப் பதினா யிரமாண்டு
சூர்தன் னினைஞரொடு சூழ்மக—மார்தரவே
கண்டுமவன் முன்னிறையோன் காட்சி தராமையினால்
விண்டலமேற் சென்றான் விரைந்து. (௩௭)

வானின்று சூரன்கை வாள்கொண்டே யீர்ந்துதன்மெ
யூனினைத்தீ மேலவியி னூச்சிநெய்த்தோ—ரானவிழு
தென்னவிட் டாற்றமெய்பூ னீரமுன்போ லாகவிண்ணோ
ரின்னரஞ்ச வார்த்தா னெழுந்து. (௩௮)

உள்ள முறுமகிழ்ச்சி யுற்றிச் செயலெந்தை
வள்ளலரு ளென்ன மனத்தெண்ணிக்—கொள்ளுமக
மோரா யிரமாண் டுஞற்றியுமா தேவனங்கு
வாராமை யாற்றுணிந்தான் மாய்வு. (௩௯)

உன்வகையிற் றுயருளா லோங்குகுண்ட நள்வதிந்து
மின்வச் சிரகம்ப மேற்றுதித்தான்—கொன்முனையி
னின்றுருவி யக்கம்ப நீளடியிற் சென்றமையாற்
ஒன்றுடறா னாய்முடிந்தான் சூர். (௪௦)

சிங்கமுகன் காணுத் தெருமந் தளம்பதையாச்
செங்கணின்று சோரிநீர் சிந்தவா—யங்கையொரு
குண்டத் தொழின்மறந்த கூருயிர்ப்பின் மையுணர்ந்தே
ருண்டுகொலோ வென்ரு ருயிர். (௬௧)

ஆர்துயர வாழியின்க ணாழ்ந்தயர்ந்து தொல்லுணர்ச்சி
சார்தரவே மாயை தருமகனே—பேர்மகநீ
பன்னுட்செய் துற்ற பயனிதுவோ வெவகொளித்தா
யென்நா ணினைக்காண்பேன் யான். (௬௨)

சூரனென நின்பேர் சொலினெவர்தாஞ் சூருரூர்
வீரனினைப் போலிவ் வியனுலகில்—யாருளா
ரிந்திரனு நீயிறக்க வின்னறவிர்ந் தின்புற்ருன்
வெந்தயர்ந்தோம் யாங்கண் மெலிந்து. (௬௩)

கூற்ற னுயிர்கவர்ந்த கோமானை யுட்டழீஇ
யாற்றவுநீ நோற்றிறந்தா யந்தோமுன்—சாற்று
புறந்தழீஇ யேற்ற புரமெரித்த காதை
மறந்தனையோ மன்ன மருண்டு. (௬௪)

இன்னபல சொல்லி யிரங்கி யரிமுகத்தோ
னின்னருளி லல்கா யினைக்காணு—தின்னலுறு
கன்றெனவீழ் தந்தலையக் கண்டுதிறற் ருரகனுங்
குன்றெனவீழ் தந்தான் குலைந்து. (௬௫)

வீழ்ந்துயிர்த்துத் தாரகன்ருன் வேள்விக் களமுழுதுஞ்
சூழ்ந்தாற்று மோதை துணைச்செவியுற்—ருழ்ந்த
பொருமிக் கலைநீர்போற் போர்த்தா னவர்கள்
பொருமிப் புலம்பினுர் போந்து. (௬௬)

தாரகனுஞ் சிங்கத் தனிமுகனுக் காரவுண
ராரு நெடிதாற்று மார்பினைக்கேட்—டேரிகல்கொள்
வெஞ்சூர் மகத்தீயில் வீந்ததுணர்ந் தாறெற்ருன்
மஞ்சூர் மகவான் மகிழ்ந்து. (௬௭)

வானுலக நீங்கி மதியுலக நீங்கியுயர்
பானுலக நீங்கிப் பயிறவத்தைத்—தானுளத்தி
லெண்ணு வியந்திரங்கு மேரவுணர் தம்மினத்தைக்
கண்ணுரக் கண்டான் களித்து. (௬௮)

வாளா வெனதாவி வாழ்வதென்கொ லென்றெண்ணி
வாளா ரரிமுகத்தோன்வானின்று—வாளாற்ற
ஞேரா யிரஞ்சிரமு மொவ்வொன்ருய்க் கொய்திட்டான்
வீராவே சங்கொடுதீ மேல். (௬௯)

மூன்போற் சிரமுளைப்ப மொய்ம்பினைப் பேர்ந்திடமன்
றன்போற் சிலரிட்டுத் தாவதுகண்—டுன்போர்த்
துணையிலரி மாமுகத்தோன் சூரனைப்போற் றனு
மிணையிலுயிர்க் கிறெணினு னேய்ந்து. (ருo)

மூன்மா வுயிர்நீத்த முன்னவன்போற் பின்னவனு
முன்மா விசும்பெழுவா னுட்கொளலு—மின்மா
சடையனறும் பூங்கடுக்கைத் தாமனேனர் தூவெண்
விடையனது கண்டான் விரைந்து. (ருக)

அசுரர் யாகப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா கூகo.

---

# வரப்பெறு படலம்.

---

இந்திரன்முற் புங்கவர்க ளேத்தவரன் வெண்ணையின்முன்
சுந்தரனை யாட்கொண்ட தொல்லுருக்கொண்—டந்தமக
வேதியண்மிச் சிங்கமுக வீரனைப்பார்த் தும்பரிசெ
னேது மெனநவின்று னோர்ந்து. (க)

சீயமுகன் றேர்ந்தான்றன் சென்னி யுறத்தாழ்ந்து
மேயதந்தை காசிபனு மேவுமன்னை—மாயவளாம்
யாங்கண் மகர்மூவ ரின்னுமுளர் யாப்பணியா
லீங்குமகஞ் செய்தோ மினிது. (உ)

ஆண்டுபல வாக வரும்வேள்வி யாற்றிடலு
நீண்டசடை நீத்த நிருமலன்வந்—தாண்டிலனன்
முன்னவனஃ தோர்ந்துடல மொய்யூ னரிந்திட்டுப்
பின்னவனும் தீப்புகுந்தான் பேர்ந்து. (ங)

ஓங்கனலின் முன்னேன்வீழ்ந் தொள்ளியநீ றாகியதை
யாங்கண் டகத்துயர்கொண் டெம்முயிரு—நீங்க
நினைந்தனமும் மைக்காண நேர்ந்தமையாற் றாழ்த்தோ
மினைந்ததிது வென்று னெடுத்து. (ச)

அங்கணின்ற வீச னருளாற்சூர் தன்னையின்னே
செங்கனலி னின்றுவரச் செய்கின்று—மிங்கதுநீர்
காண்டிரின்ன நீர்திரெனக் கங்கைதனை யுன்னவது
சேண்டலநின் றேகியது தேர்ந்து. (ரு)

விண்ணின் றிழிந்து விரைவிற் றரையிடனு
யண்ணறிருத் தாடாழ்ந் தவன்பணியா—னண்ணனலெய்
குண்டத் துறவவுணர் கோன்கடனஞ் சார்த்தெழல்போன்
மண்டத் துறவெழுந்தான் வாய்ந்து. (சு)

வேதியிற்சூர் தோன்றுதலு மேவுதம்பி மாரனையான்
பாதமேல் வீழ்ந்து பணிசெயலே—யோதவுண
ரேந்தல்வந் தான்வந்தா னென்றெவருங் கேட்பநவின்
றுந்தகையை வாழியென்று ரார்த்து. (எ)

சூர்தனைக்காண் வாளவுணர் சூழமா ராந்திறத்தோர்
கார்தனைக்காண் மஞ்ஞை கருங்குயிலை—நேர்தரவே
பின்னவருங் கண்டிடமுன் பேசுருவ நீத்திறையோன்
முன்னுருவின் விண்ணின்றான் முன். (அ)

நாரியொரு பாகமுந்திண் ணாற்புயமு முக்கணுமாய்க்
கூரியல்கொண் மால்விடைமேற் கொண்டிறையோ—னூர
வினையிலெழிற் சூர னிறைஞ்சியன்பிற் போற்றித்
துணைவரொடு நின்றான் றொழுது. (கூ)

புகல்சூர் முகநோக்கிப் பொற்பினமை யுன்னி
மிகன்மா மகமியற்றி யெய்த்தாய்—தகநினக்கு
வேண்டுவதென் சொன்னீ விளம்புதி யென்னவிண்ணோ
ரீண்டுழலச் சொல்வா னெடுத்து. (க0)

அண்டமெலா மாளு மாசு மதற்கேற்ற
தண்டனைசெ யாழித் தனிப்படையுந்—திண்டிறல்கொ
ளூர்தியும்பே ராற்றலும்பல் லொண்படையு மெஞ்ஞான்று
மார்மெயுநல் கென்றனன்சூ ராங்கு. (கக)

பண்டரும்பா ரண்டம் பலவவற்று ளாயிரத்தெட்
டண்டநூற் றெட்டுயுக மாளநல்கித்—திண்டிறல்கொ
ளிந்திரஞா லத்தேரு மீந்தயன்மா லஞ்சாழி
தந்தரியி னூர்திதந்தான் றான். (கஉ)

பின்வானோ ரார்க்கும் பெருமுதன்மை தந்திகலை
வென்மாண்பண் பாசுபத மின்படையே—முன்வாய்ந்த
வானோர் படையுநல்கி வச்சிரமா யாக்கையுமே
தானோகை யோடுதந்தான் சம்பு. (கங)

கங்கையைவா னேவியந்தக் கங்கைக்கு மாவேள்விச்
செங்கனற்குந் தோற்றமெய்திச் சீர்க்குமா—பொங்குதிரைப்
பள்ளமுந்நீர் போலோர் பதினா யிரகோடி
வெள்ளவகைத் தானைதந்தான் வேட்டு. (கச)

இன்னவணஞ் சூர்க்கருள்செ யெல்லை யவர்க்கிளைஞர்
மன்னி யடிபணிய மாதேவன்—முன்னவன்போல்
வீர மொடுவிளங்கி மேவுறுநூற் றெட்டுசஞ்ச்
ராரநீர் வாழ்திரென்று ஞங்கு. (கரு)

பத்தியின்வாய்ந் தண்டர் பாசுறுசீர் நுங்களைநஞ்
சத்தியன்றி வெல்லுபவர் தாமிலையென்—றுத்தமமாம்
பாகினூர் தேரும் படையும் பிறவுநல்கி
யேகினு னெங்கட் கிறை. (கசு)

வரம்பெறு படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ...

---

# சுக்கிரனுபதேசப் படலம்.

---

அவ்வேலை முன்றோ ரரண்போற் சுலவவுணர்
வெவ்வேலை வேந்தினைச்சேர் மேவினனென்—றவ்வேலை
யார்த்தனபோ லார்த்தவைபொன் னங்கிரியை யுழியின்கட்
போர்த்தனபோற் போர்ததார் புகழ்ந்து. (க)

முன்னுற்றுர் தம்மை முகநோக்கிச் சூரனெனு
மன்னுற்று ளின்னருள்செய் மாண்புவந்து—துன்னுற்றார்
நேயுற்றுற் றேவுண்டு நீயுண் டிடரற்றேன்
தாயுற்றூர்க் குண்டோ தளர்வு. (உ)

என்றவர்பா லன்பினுற வேந்தலண்ட ரித்தகுவன்
வன்றிறலார் தன்மையினைவ் வண்ணமுய்யோ—மென்றினையப்
பேசவுணர் பூமாரி பெய்துசூர் வாழியென
வாசிமொழி கூறினு ராங்கு. (ஙா)

ஈசனருள் கொண்டுவந்த வெண்ணில் படைக்கெல்லா
மாசிலரை நற்றலைவ ராக்கியே—வீசுதெவ்வை
மாள்விக்குந் தானைகள்விண் மண்செல்லப் பின்னரொடும்
வேள்விக் களமகன்றுன் வேந்து. (ச)

தாதைதா டாழ்ந்தரன்பாற் றுங்கொள் வரநவின்று
போதவினி யாங்கள்புரிவதியா— தோதுகென
வீசனரு ணன்றுநன்றென் றெண்ணியவர்ப் பார்த்தடைதிர்
நேசமுறு பார்க்கவன்பா லீர். (ரு)

உற்றிரே லன்னவன்ற னுங்கட் குலவிறிரு
பெற்றிடுநற் புந்திநனி பேசுமெனு—நற்றவர்கோ
னங்குவிடை நல்க வவுணர்கோன் றனையொடு
சுங்கனிடஞ் சென்றான் றதைந்து (சு)

அங்கதுகேட் டாசா னகமகிழ்பூத் தார்சீடர்
தங்குழுவி னேடுவரத் தான்காணப்—பொங்குபெருந்
தானைமுன்போய்த் தம்பியர்க டம்மோடு சார்புகரின்
கானளினந் தாழ்ந்தான் கனிந்து. (எ)

வாழியவென் றுசி மகிழ்ந்துரையாச் சூர்முதலைக்
கேழிருங்கை யாற்றழுவாக் கேடிலான்—சூழிருக்கை
கொண்டணையத் தாரகனைக் கூர்படைகள் போற்றுகென
மண்டிளவ லோடடைந்தான் மன். (அ)

ஆசனந்தந் தாங்கிருத்தி யாசானீர் வந்ததென்கொல்
பேசுமெனச் சூரபன்மன் பேர்மகனுஞ்செய்—தீசன்
கரிசினலந் தந்தமையுங் காசிபன்றான் கூறும்
பரிசும் பகர்ந்தான் பணிந்து. (கூ)

இவ்வினி யாமூக்கி யாற்றுமுறை சாற்றுதியென்
றய்யவே சூர்நவில வோதுவான்—வெய்யபுகர்
பாசம் பசுபதியென் பார்த்லையா மித்தைமற்றி
லாசி லுயிர்சிவனென் றாம். (௧0)

தீயநல்ல வென்னவே செய்வினைக ளாயிரண்டா
லேயும் பிறவிதுன்பின் பெய்துமென்பர்—மேயதன்றி
யூழ்முறைவி ராய்த்துய்சகு மூழ்வினைக ளீட்டுமே
லூழ்வருதற் கென்ப ருயிர். (கக)

மேவுவினை யான்மீட்டு மீட்டும் பிறக்குமா
ராவியியல் போர்ந்தனவை யாக்குமென்பர்—தாவிலா
வாதியுபி ரொன்றலவொன் றானுற்றோ முண்டிறைவற்
சேதினவில் வேன்கேட்டி யிங்கு. (கஉ)

ஆதியிந்த மற்றமல மாஞ்சோதி யாயசிவன்
கோதிலருண் மாநடத்தின் கொள்கைதனிற்—காத
லுறுமொருதன் மாயையா லொண்பூதம் யாவும்
பிறவும் புரிவான் பெரிது. (கங)

அடன்மாயை யாலாக்கை யாக்கியவற் றாடு
கடன்கொள்வா னிற்றான் கலந்தவ்—வுடன்மடிந்து
மெல்லையின்முன் போலுறவ னீசனடஞ் செய்யுமென்று
மொல்லைமுத்தி மேவு முயிர். (கச)

பொய்யாம் பொறிபுலனென் போதிலவை காண்பொருளு
மெய்யாமோ புந்திசொன்மெய் மேவுசெய — லையா
வவையுமது வாஞ்செயலன் றாமதினாந் துன்பின்
பிவைமெய்யோ முன்னதா மிங்கு (௧௫)

மித்லைதயைமெய் யாக்கொளினு மேவுதுன்பு மின்பமுமெ
வித்தகனை யெய்துமோ மேயவிருப் — பத்தினாற்
றோன்றுவது மாய்வதூஉஞ் சூழ்வினைகள் செய்வதூஉ
மான்றபரற் கில்லையுடற் காம். (௧௬)

தோற்றமழி வாதி தொடக்கின்றி யாவியொன்றாய்
வேற்றுமையில் லாப்பரன்சீர் மேவொரியல் — பெற்றதுமெய்
நெஞ்சுணர்தி தீதுநல நேர்பாவம் புண்ணியமென்
றஞ்ச லறிவின்மை யாம். (௧௭)

யாதுவந் தெய்தியதோ வீதுநலந் தீதென்றை
தாதியா மாயையென்றாய்ந் தாற்றலவை — நீதி
யறஞ்செய்க பாதகஞ்செய் யற்கவென்பர் செய்யி
னுறவருவ தில்லையிங் கொன்று. (௧௮)

கனவில் விழைந்தனவுங் கண்டுவந்த யாவு
நனவுவரிற் கண்டதில்லை நாமே — யனையசெய
லிம்மையிலே செய்வினைப்பே றெய்தினுண்மை யாமதுதான்
பொய்ம்மையெனக் கோடி புரிந்து. (௧௯)

சிறியர் பெரியரெனச் சிந்திக்க லாமோ
விறுதியிற்பல் லாவியுமொன் றென்றோர்ந் — தறிதலுண்மை
யீங்கிவைமே லோர்கொள்கை யேந்தனீ கேட்டிநுங்கட்
காங்கருமஞ் சொல்லே னமர்ந்து. (௨௦)

சீதரனே யாதியாந் தேவரினுங் கோவியற்கை
யோதருமாச் செல்வநின்பா லுற்றதோ — ரேதுயினி
லுன்னைப் பிரமமென்றே யோதியய னாகியரைப்
பன்ன லிறைஞ்சல் பரிந்து. (௨௧)

தேவர்தா முங்கட்குத் தெவ்வ ரவர்ச்செறுநி
மேவுமன்னர் தாம்பணியும் வேந்தனென்னன் — மாவவுண
ராரச் சழித்தா னவற்பற்றி வன்னிகளுஞ்
சேரச் சிறைபுரிதி தேர்ந்து. (௨௨)

சிறைபுரிந்து தீயபல செய்துமுனி வோர்வா
னுறைபவர்க ளாதியரை யோர்ந்து — முறைமுறையா
யேவனீ கொண்டிடுதி யேய்ந்தவவர் வான்பதமு
மாவவுணர்க் கீதி மகிழ்ந்து. (௨௩)

காமங் களவுகொலை கட்பொய்மை யாதியெலா
நேமமெனச் செய்தியற்றா னிற்குவருந்—தீமையொன்று
மில்லையவை செய்யாக்கா லெந்தனீ வேட்டவைதா
னொல்லையி லாமோ வுனக்கு. (௨௪)

அண்டர் பிரானளித்த வாயிரத்தெட் டண்டமுற்றுந்
திண்டிறன்மாத் தானையொடு சென்றுகண்டு—கண்டவணீ
யாற்று முறையிறைமை யாற்றி யிவணிசையின்
வீற்றிருத்தி யென்றான் விழைந்து. (௨௫)

சுக்கிரனுபதேசப்படல முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௩௫௪

---

# அண்டகோசப் படலம்.

---

தீய வினையவுரை செப்பவிது நன்றெந்தை
யேய பணியினிற்ப னீசனரு—ளாயிரத்தெட்
டண்டங் களினிலைநீ யாய்ந்துரைக்க வென்னவெள்ளி
திண்டிறல்வாட் சூர்க்குரைப்பான் றேர்ந்து. (௧)

மேலுள் பொருடம் விளைவதுதா னிற்கவிப்பான்
மூலமுறும் புந்தியதின் முந்துமந்தை—யாலம்
புலங்காணு மாங்கே புனிதவான் தொட்டு
நிலங்காறும் வந்த நெடிது. (௨)

அப்புலா மப்புவிகங்கா ராயிர கோடியண்ட
மொப்பிலவே யென்னவுண்டா லொன்றினுக்கொன்—றெப்படி
சொற்றிடுநீர் மைத்தன்று சூழ்ந்திடின்மா வைப்பெனலா [மேற்
மற்றவையம் பொன்னின் வணம். (௩)

உன்னருமா ஞாலவண்ட மோரா யிரகோடி
யன்னதினீ பெற்றவண்ட மாயிரத்தெட்—டின்னவற்றோ
ரண்டத் தியற்கை யறைகின்றேன் செங்கரத்திற்
கொண்டநெல்லி யின்னுளத்திற் கொள். (௪)

கதிரெழுதூ ளெண்மூன் றுகசாக் கிரக
மிதுவிருநான் கேய்ந்த திலீக்கை—நுதலிலீக்கை
யேயிருநான் காம்யூகை யீதெட் டியவையிது
கூரிருநான் காமங் குலம். (௫)

அங்குலமெண் மூன்றுகர மக்கரமோர் நான்குதனு
தங்கு தனுவிரண்டு தண்டமே—பொங்குதண்ட
மீரா யிரங்குரோச மீநாநான்கி யோசனையென்
றோராய்ந்தோர் சொல்லு மளபு. (௬)

பன்யோச னையைம் பதிற்றிரண்டு கோடிவந்த
துன்னண்டத் திற்காழி யோர்வைப்பு—மன்னிவப்பு
மாநிலவண் டங்கட்கிவ் வாறளவைத் தென்றறிதி
யூநிலவும் வேலோ யுகந்து. (எ)

ஒண்புவனிக் கேகீழாம் யோசனையைம் பான்கோடி
மண்புவிக்கு மேலாச்சேர் வானமுமஃ—தெண்புகழ்சொண்
மாடியன்மா மேருவுக்கு மாதிரமோ ரெட்டுமைம்பான்
கோடிகடா கத்தினெல்லை கொள். (அ)

அண்டகட மோர்கோடி யாககன்மே லோர்கோடி
யொண்டிறற்கா லத்தீ யுருத்திரர்பொன்—கொண்டதனி
தாமவனை லெல்லை தசகோடி யாமீக்கட்
டேமவைப்பைங் கோடித் தொகை. (கூ)

சிம்மா தனத்துயர்ச்சி சேரா யிரமளவைந்
தம்மானத் திற்கிரட்டி யாம்பரப்புச்—செம்மா
ணுருத்திரர்தீ மெய்யயுத யோசனையே யாகுந்
திருத்தகுவா ளேந்திநிற்பர் சேர்ந்து. (க0)

உருத்திரரைப் போல்வா ரொருபதின்மர் சூழ்வா
ரருத்தியொடன் றேவ லாற்றிப்—பருத்ததச
கோடிப் பரிசனங்கள் கூடுமென்றோர் தாள்வழுத்தி
நீடுகம டப்புலமா நேர்ந்து. (கக)

அப்புவன மீக்க ணடுக்கு நிலையவாய்ச்
செப்புநா லேழ்கோடி சேர்நிரய—வைப்புயர்வு
கோடியொன்று நீங்கமூப்பான் கூப்பன் னிரண்டிலக்கம்
பாடியலா ரண்டப் பரப்பு. (கஉ)

உன்னிரய மீதொன் றெழியிலக்க நூறுயர்வு
தன்னிலுறு மோர்புவனந் தாழ்சீழ்மண்—டுன்னுமிரும்
பார்நாப்பண் மேற்பசும்பொ னஞ்சோதி மற்றதன்மேற்
கூர்மாண்டர் வாழ்வர் குறித்து (கங)

கூர்கா ழகமுகத்தர் கூர்வாய்க் கணிச்சிபினர்
பேர்கனலை யன்ன பிறங்குருவர்—சூர்கணற்பொற்
பீடிகைசேர் கூர்மாண்டர் பேசுதம்பாற் சூழுருத்திரர்
கோடியளவு வாரளப்பார் கூர்ந்து. (கச)

அன்னபுவனத்துமீ தங்கரமி லக்கமொன்பான்
பன்னுவா தற்தும்பர் பாதலங்க—ளன்பயில
மொன்றற்கொன் பஃதாக வுன்னறுபான் மூன்றிலக்க
மென்றறைவ ரேழ்பிலத்திற் கீங்கு. (கரு)

பார முறுங்கனிட்ட பாதலமோ ரெட்டிலக்க
மாரகவ்வெவ் வேறயுத மாமகயதா—னேர்மும்மைப்
பாற்கா ரவுணர்கீழ் பாலுரகர் நன்னரக்கர்
மேற்பா லுறைவார் விழைந்து (கசு)

இதன்மே லிலக்கமொன்பா னேரா டகாவைப்
பிதன்மேல் வெளிகோடி லக்க—மதுவிருபா
னேரிதன்மேல் யானைபணி யேந்திநிற்கு மாங்கதன்மேற்
பார நிலக்கமெட்டுப் பத்த. (கஎ)

ஏனோர் பிலங்கட் கெலாமிறைய ராய்க்காப்போர்
மானு டகர்நாகர் வாளவுணர் — காணரக்கர்
தாமொழுவோ ரண்டகடந் தன்முற்பா ரீரைம்பான்
கோடியெனக் கோடியென்றுன் கூர்ந்து. (கஅ)

பலபிலங்கட் கெல்லாம் பரமதாய்ச் சேர்பா
ருலகின் விரிவுளவு மூன்னிச—செலுவன்மேகள்
சம்புமுற்றீ வேழுமுறை சாருமத்தீ வேழுமப்பால்
வெம்புவிசூ ழுந்திகிரி வெற்பு. (ககூ)

அதற்கப்பால் வேலைக் கரசுபுற வாழி
யதற்கப்பாற் பேரிருள்வைப் பாகு—மதற்கப்பான்
மண்டுறுமண் டத்தோடு மன்பொருள்யா வுஞ்சூழ்ந்து
கொண்டிருக்குங் கண்டிமன்னே கூர்ந்து. (உ௦)

முற்றீப மோரிலக்க முந்நீரு மற்றேறமாற்
றுற்றனநே மிக்கொன்றற் கொன்றிரட்டி—பெற்றவென்பர்
கொண்ட தொகையிரண்டு கோடியைம்பா னுன்கிலக்கங்
கண்ட தொகையாங் கணித்து. (உக)

ஐயிரண்டு கோடிசொன்னத் தார்தலமஃ தண்ணேமிச்
சைய மயுதமாஞ் சார்புறத்தி—னெய்துகடல்
கோடியிரு பானேழ் குலவிலக்க மையிருள்சேர்
பீடுலகி னெல்லைசொல்வேன் பேர்ந்து. (உஉ)

கூடிருட்பார் முப்பானேங் கோடிபத்தொன் பானிலக்க
மாரு மொருநான் கயுதமாம்—பேரிருள்சூ
ழண்டச் சுவர்க்கனமொன் றண்கோடி பாரகலங்
கண்டவதிற் பாதியது காண். (உ௩)

தொன்னூற் படியாஞ் சொலுங்கணிதந் தன்னையே
மன்னுதிசை போன்மற்ற மாதிரத்துந்—துன்னவைக்கிற்
கூறுதிக்குங் கோணமுற்றுங் கூரிரண்டு கோடிமே
லாறுமா யோசனையா னோக்கு. (உரு)

அம்புயமாம் பீடத் தமர்வோன் றனுதவல
மொய்ம்பி னுதித்த முரண்டருசா—யம்பமைந்தன்
வேலவிருங் கைந்நம்பி மேவன் புடைவிரதன்
ஞாலமுற்று மாண்டான் றனித்து. (உ௬)

அன்னவன்றன் மைந்தரா மங்கிதீரன் மேதாதி
துன்னு வபுட்டிமனொடு சோதிட்டிப்—பன்னுதுதி
மானவ் வியன்சவனன் மன்னெழுவ ரேழ்தீவு
மானபய்குற் றண்டா ரரசு. (உ௭)

ஆரியனு வற்றீவா ளங்கிதீ ரன்பெற்ற
பாரதன்முன் னொன்பதின்மர் பன்பேரா—லோரொருவர்க்
கொவ்வொன்ற வத்தீவை யொன்பதுகண் டஞ்செய்தே
யெவ்வமறத் தந்தா னினிது. (உ௮)

மேலுயரத் தீவினடு மேருமுள ரிப்பொகுட்டி
னேலுமதற் கியோசனைதா னெண்பத்து—நாலா
யிரமாகும் ஞாலமாழ்ந் திட்டதீ ரெண்ணா
யிரமாகு மென்ப வினிது. (உ௯)

அத்தீவின் சென்னி யகலமெண்ணான் காயிரமாம்
மைத்த பராரையதிற் பாதியா—முற்றவண்ண
மேகலைமூன் றன்னதுச்சி மேவும் பலசிகர
நாக மளாவிநிற்கு நன்கு. (உ௯)

பேரு வரைக்குநடு வேதனண்ம நோவதியாங்
காருங் குடதிசையி லச்சுதன்வாழ்—சீரியவை
குண்டம் வடகீழ்பாற் கூற்றதைத்தோன் கைலையெண்ம
ரெண்டிசையு மேவு மிடம். (௩0)

ஆருந்தெற் கர்திவடக் காமளவு மத்திதனி
னேரியதரோர் தேசமது நேர்போகு—மாரதற்கு
நேராகச் செல்லு நெடும்பூழை யொன்றுளது
சீராகத் தேர்க தெரிந்து. (௩௧)

மேருவுக்குக் கீழ்பான் மிளிர்மந் தரம்வெண்மை
சாருந்தென் பாற்கந்த மாதனம்பொன்—ஞருமேற்
கார்விபுல நீலமுதக் காம்ஞ்சு பார்சுபமாம்
வார்மா துளம்பூ வணம். (௩உ)

அங்குக் கடம்புசம்போ டாரசா லிந்நான்கும்
பொங்குருண மாதி பொலிந்துநிற்கு—தங்குசம்புத்
தாரு விரண்டா யிரயோ சனையேனை
யாரு மதிற்பாதி யாம். (௩௩)

அன்னகுண பான்முன் னருண மசிதோத
முன்னரிய மானதமே யொண்மடுவாம்—பன்னுந்
தருசைத் திரநந் தனம்வைப் பிரசந்
திருதாக் கியமேவுஞ் சேர்ந்து. (௩௪)

நாவலொன்றூர் காரணத்தா னற்பார தன்கண்ட
நாவலந்தீ வென்னவே நாமமுறு—நாவனறுந்
தீங்கனிநீ ராறுதக்குச் சென்றுசாம் பூநதப்பே
ராங்கடையு மந்த வயம். (௩௫)

பொருந்து பொருப்பைப் புடைசூழ்ந்து போகுந்
திருந்துசெழுஞ் சாம்புநதத் தீர்த்த—மருந்திறேனர்
மேயவுடன் பொன்மயந்தான் மேவி யொருபதின்மூ
வாயிரமாண் டாங்குறுவ ராம். (௩௬)

மன்றுற் றிசையில் வரைப்பரப்பு மேல்கீழ்தான்
மின்றுக மாமேரு விற்பாதி—பொன்றூர்கீழ்
பான்மா லியவான்மேல் பாற்கந்த மாதனமேதன்
பான்மா நிசதவெற் பாம். (௩௭)

கூறுந்தென் பாலேம கூடமிம முத்தரத்தில்
வீறுறுநீ லஞ்சவே தஞ்சிருங்கம்—பேறெணக
நீலநிதி மாமணிபொ னீள்பனிநீ லம்வெண்மை
சாலுமதி காந்தநிறந் தாம். (௩௮)

நிசதம்பொற் கூடமிம நீள்கிரிகீழ் மேலாத்
திசைமருவு மாக்கடலைச் சேரு—மிசைவடபா
லாரு மலையு மனையவே யெண்கிரியு
மீரா யிரமான மே. (௩௯)

வார்கந்த மாதனநன் மாலியவான் வெற்பயுத
மேர்மற் றிருமூன் றிராயிரமாஞ்—சார்விற்
பொருவடமுந் நீர்முற் புகல்சிருங்கங் காறுங்
குருவருட மாகக் கொளும். (௪0)

தின்னுசருங் கம்முற் சுவேத வரையளவு
மன்னு மிரணியமா மாவருடம்—பன்னருஞ்சு
வேதமுரு நீல விலங்கலுக்கு நாப்பணுல
கோது மிரமியமா முற்று. (௪௧)

மேருவரை சூழ்வருட மேவு மிளாவிருதம்
வாரருவி யார்கந்த மாதனமேல்—வீரைநடுக்
கேதுமான் மாவருடங் கீழுதநி மாலியவா
னேதிடையிற் பத்திரமென் றுன். (௪உ)

காணிசித முன்னேமங் காறு மரிவருடஞ்
சேணுலவு மேமமுதற் சிரிமயம்—பேணுநடுக்
கிம்புருடந் தென்கடற்குக் கேழிமவெற் புக்குநடுப்
பம்புருமா பாரதமென் பார். (௪௩)

கேதுமால் பத்திரமுங் கேடிலெண்ணுன் காயிரமற்
றேதொன் பதினயுத மொண்பரதம்—போதலுற
நின்றகண்ட மெட்டு ணிறைந்தோர் தமக்காயு
ளென்றறைவர் மேலோ ரிசைந்து. (௪௪)

குருநாட் டுறைவோர் குலவாய்பா லாண்பெண்
ணுருவாகத் தோன்றியுட லொன்ருய்—மருவுவா
ராங்கவர்க்குத் தெய்வ மணிகருபூ நல்குமுணுத்
தீங்கனியுங் காயுமெனத் தேர். (௪௫)

அன்ஞர்மெய் பச்சையா யுள்பதின்மூன் ருயிரமாம்
பன்ஞங் கதற்குவட பாகத்திற்—றுன்னுவா
ராயமுனி வோர்சா ரணர்சித்தர் முன்னையர்க்கா
மாயுள் படிகநிற மாம். (௪௬)

பத்திராசு வத்தோர் பலங்காய்துய்ப் போர்பதின்மூன்
றுற்றிடு மாயிரமாண் டுற்றோர்மெய்—யத்த
ரிரமியத்தோ ருண்கனிக ளிந்துறழ்மெய் யோர்மூன்
கரையதற்கைஞ் ஞுறு கழிவு. (௪௭)

ஆரு மிரணியத்தி லாலின் கனிநுகர்வர்
நேருங் கவலை நிறமுடையர்—சேரு
மவர்க்குவரு டம்பன்னீ ராயிரமாச் சொற்ற
நவர்கரிய தொன்மைமுன் னூல். (௪௮)

இளாவிருதத் தோர்வெண்மை யேற்றோர் கரும்பூ
ணளாவுபன்னீ ராயிர மாகக்—கொளும்யுகங்
கேதுமா லோர்வண்ணங் கேழ்குவளை யூண்கைதை
யோதுபதி ஞயிரமென் றுன். (௪௯)

அரிகண்டத் தோர்பதி ஞயிரம தெல்லை
புரிய கனிகா யுணவிந்—திரிநிறங்
கிம்புருடத் தோரிறலிக் கேழ்கனியுண் பார்நிறம்பொன்
பம்பயுத மாய்வுவென் பார். (௫0)

ஏமவரைத் தென்பா லிமயவட பாறன்னிற்
காமருசீர் மேவுங் கயிலைநிற்கு—மாமதற்கு
மீதிமையா முக்கண் விமல னுமையென்னு
மாதி னுடனமர்வான் வாய்ந்து. (௫௧)

ஊழியிலண் டம்வரைமே லோடுகீழ் மேவுமலை
யூழிநெட்டுக் கண்டத் துறைநீரார்—பீழைபிணி
யுன்னு நரைதிரைமூப் பொன்று மடைகிலா
ரொன்னு மிறைஞா லிசைந்து. (௫௨)

முந்தையுகம் பேரலேனே மூன்றுளுமொய்ம் பாரறிவு
சந்தவுட லாயுளோர் தன்மையர்முன்—னுந்தலைசூழ்
பாரதத்தில் வந்துதித்தோர் பண்வினையின் பேறடைவர்
காரதங்கட் பெய்யா கவிந்து. (௫௩)

பாரத்ததுள் ளாருலகிற் பல்கித் தொழில்புரிந்து
போறம்பா வம்மீட்டிப் பேசுமருள்—சேர்பௌ
திகமுதலா மூன்றினிற் றேர்பயன்கொண் டுய்வர்
யுகமதிற் கேற்ப வுளர். (௫௪)

ஆற்ற லறிவுசீ ராயுளுரு வுண்டிசெய்கை
யேற்றமிகு பாரதத்து ளேய்ந்தவர்கண்—மாற்றரிய
தோளைமுதற் பைங்கூழ் துதையும் விளைவாக்க
லாருவர்கந் தங்கனிகா யாங்கு. (௫௫)

எண்கண்டத் தோர்விண்ணோ ரேழ்நரகோ ரங்குவைகி
நண்வினையாற் றிப்பயன்க ணன்றுதுய்ப்பர்—பண்பினெனப்
பன்னுவகை யாற்பரதம் பல்வினைக்கெல் லாமூல
மென்னவடை வாரெவரு மெய்ந்து. (௫௬)

பன்னுகண்டந் தம்முட் பரதகண்டஞ் சிர்த்ததென்றுங்
குன்னு குறைபெறினே யுற்றமர்ந்து—துன்னரிய
வாசவனும வானவரு மாதவரு மாதவமும்
பூசனையுஞ் செய்வர் புரிந்து. (௫௭)

பரதனிந்தி ரப்பேரோன் பனகசேரு கன்று
மிரபன்னன் மின்கபத்தி நாகன்—றருசவுமி
யன்கந் தருவ னவிர்வருண னுமகரோ
டுன்குமரி மாதுதந்தா னுற்று. (௫௮)

மாயிருமா மண்போற்று மன்னவர்தம் பேரினென்றற்
காயிரமா யோசனைய தாகவே—மேயவர்க்கே
யூக்கமிகும் பாரதத்தை யொன்பதுமா கண்டங்க
ளாக்கி யளித்தா னமர்ந்து. (௫௯)

கங்கையமு னைகவுரி காவிரிபாஞ் சாலிகம்பை
துங்கபத்தி ரைபம்பை சூரிசிகி—பிங்கலை
சார்வரி வெஃகாச் சரயு பொருநைமுத
லோர்வரிய வுந்தி யுறும். (௯0)

உச்சவிந்தஞ் சையமுத லோரேழ் சிகரவெற்புங்
கச்சிமுத லேழாங் கடிநகரு—மிச்சை
தருமா யிரத்தெட்டுத் தானமுஞ் சேர்வ
திருங்குமரி யேனைவியப் பில். (௯௧)

சாகத்து மன்கோமே தாதிமைந்தர் சாந்தவயன்
சோகச் சிசிரன் சுகோதயன்—வாருறுவா
னந்தசிவன் கேமக னற்லுருவ னென்றெழுவ
ருந்து புகழா ருளர். (௯௨)

மன்னவர்பே ராலேழ் வருடஞ்செய் தங்கவர்க்குத்
துன்னவளித் தான்காற் றெழுந்தெய்வ—மென்னவே
கொள்ளுவா ராரியர் கொன்விந் தகர்குக
ருள்ளுமா வாண்டுறைவ ருற்று. (௯௩)

சோமகமுன் னேழ்கிரியுஞ் சொல்சிவைமுன் னேழ்நதியுந்
தாமுறவே மேவுந் ததிக்கடலுஞ்—சேமக்
குசத்தீவி னில்வபுட்டுக் கோவவற்குச் சேயாங்
கசத்தின் னெழுவரென்பர் காண். (௯௪)

உன்சுப் பிரத னுரேகிதன் றீ ரன்முகன்சீர்
மன்சுவேத கன்சித்தி யின்வயித்தி—தன்னென்னு
மிப்புதல்வர் பேரினு லேழ்வருட மாக்கியே
யொப்பிலவர்க் கீந்தா னுகந்து. (௯௫)

உன்னதமுன் னேழ்மலையு மோதரிய வான்சோனை
யென்னு திரைநதிமுன் னேழுமுள—முன்னுதெய்வ
வந்திறையாந் தர்ப்பகரே வான்கபில ருள்ளிட்டோர்
சந்ததமங் காருஞ் சனம். (௯௬)

ஒண்ணெய்ப் புண்ணரிகிர வுஞ்சதீ பத்திற்கே
யண்ணலவிர் சோதிட் டவன்மைந்தர்—நண்ணரிய
வேண்சா ரணன்கபில னெண்கிருதி கீர்த்திவேணு
பேணிலம்ப கன்னுற் பிதன். (௯௭)

மற்றவர்பே ராலேழ் வருடங்கண் டங்கவர்க்குக்
கொற்றமுறத் தந்தான் குசேசயமு—னுற்றமலை
யேழுசிவை முன்னுந்தி யேழு தபதர்முன்
வாழுஞ் சனமயன்றெய் வம். (௯௮)

இன்னலின்னீர் சூழ்தீபங்கான்மலியுஞ் கான்மலியா
மன்னதனுக் கேந்த லவிர்துதிமா—னின்றனையர்
மன்குசலன் வெய்யன்றே வன்முனி யந்தகாரன்
றன்மனோர தன்றுந் துபி. (சுகூ)

மற்றவர்க்கேழ் கூறாக்கி மன்னதனை நல்கினான்
சொற்றிமிர முன்னேழ் சுடர்வரைவே—ழுற்றநதி
போது குமுதமுன்னும் புட்கலாதர் முற்சனமாங்
காதிபது வன்கடவு ளாம். (எ0)

மதுக்கடல்சூழ் தீபங்கோ மேதகப்பேர் மன்னு
மதற்கவ் வியனே யரசாம்— புதல்வரவி
மோகனன்மோ கன்சகலன் சோமன் சுகுமாரன்
மாகுமா ரன்மரீச கன். (எக)

கூறுமவர்க் காங்கதையேழ் கூறாக்கி யேகொடுத்தா
னேறுசிங்க மத்தமுத லேழ்கிரியும்—பேறயாதி
முன்னேழ் நதியுமுள மூன்னங்கர் முன்மாக்கண்
மன்னோர் கடவுண் மதி. (எஉ)

போற்றுநன்னீர் சூழ்தீபம் புட்கரமன் னன்சவனன்
பேற்றுமைந்தர் தாதகிமா பீதர்க்குச்—சாற்றதிரு
கூறுசெய்து தந்தான் குலவிடய முன்வரையே
யூாறுகுடி லேமுதலே மூாம். (எங)

சொன்னகரர் நாகரென்பர் சூரியனே தெய்வதமா
மன்னதந்தத் தில்லைம்ப தாயிரமா—முன்னந்
தருமான சோத்தரக்கல் சக்கரம்போ லாமங்
கரும்பதவி யெண்டிசையர்க் காம். (எச)

புணரியந்தந் தோறும் புடையுறவொவ் வோர்வெற்
பணவிநிற்கு மன்சாக மாதி—நணுந்தீப
முற்று மிருக்குநர்க்கு மூப்பு நரைதிரைக
ளற்றமின்ன லாதுயிலே யாம். (எரு)

அன்னர் கலியிறுமே யார்கிம் புருடரியன்
மன்னுவா ராண்டயுதம் வாழ்வரே—பொன்னிறப்பார்
தன்னையே சூழ்போய்த் தடம்பெருசே மிப்பொருப்புத்
துன்னியங்குச் சார்வுற்ற து. (எசு)

நேமிவரைக் கிப்பா னிகழ்சுடரே யப்பாலாஞ்
சேம நிசிப்படலஞ் செம்மணிபோற்—காம
ரியக்க ரிராக்கதரே யெய்பேய்க் கணங்க
ளியக்க முறவமர்வ ரே. (எஎ)

ஓரும் திசைக்கடவு ளூர்றதத்த மாதிரத்தின்
மேருவின்கட் டங்குதல்போன் மேவுவா—ராருமதற்
கப்பாற் புறக்கடலா மாங்கதற்கப் பாலிருளா
மப்பாற் றயங்குமண்ட மாங்கு. (எஅ)

ஊழினெறி யாற்றம் முயிர்விடுவோர் ஞானமிலா
ராழி வரைப்புறஞ்சூழ் வாரப்பாற்—சூழிருள்சே
ரெல்லை தனிலநாதி யீசர்வா ழுங்கயிலைத்
தொல்லை வரையுமுண்டு சூழ்ந்து. (எகூ)

அன்னவண்டத் தின்மருங்கி லாருங் கணநிரைகண்
மன்ன வதிசந்து மல்குமே—பன்னரிய
வச்சம்புத் தீபமுத லண்டச் சுவர்காறு
மெச்சுபுவி யென்பர் வியந்து. (அ0)

இப்புவியின் மேற்கணத்தி னேருலக மாமிதன்மே
லப்பரிசே யார்குய் யகலோகஞ்—செப்புமிதன்
மீதுறகால் வாழுலக மேவிதன்மே லேழ்புயலு
மாதரவின் வாழுமெல்லை யாம். (அக)

மூவயுத கோடி முகிலொய்வொன் றைமுடைறாசூழ்ந்
தேவமற மேவி யிருக்குமே—மேவரிதாய்க்
காண்கிம் புருடர் கருட ரியககர்சித்தர்
மாண்வித்தி யாதரார்வாழ் வைப்பு. (அஉ)

இங்கிதன்மேல் வானகிசெல் லெல்லையப்பாற் பாநுலக
மங்கனிக் கோரிலக்க மாகுமோர்—பொங்கதனின்
முப்பான்மூக் கோடியண்டர் முன்னு மருக்கருட
னப்பால் வழிக்கொள்வா ரங்கு. (அங)

ஓரதன்மீ திந்துலக மோரிலக்க மும்பரிற்சேர்
தாரகையின் மாணுலகந் தானிலக்க—மாரதன்மேற்
புந்தியுல கீரிலக்கம் போற்றதன்மேல் வெள்ளியுல
கந்தி லிரண்டிலக்க மாம். (அச)

எண்ணதன்மேற் சேயுலக மீரிலக்க மேலரச
னண்ணுலக மீரிலக்க மாங்கதன்மே—னண்ணுமந்தன்
றன்னுலக மீரிலக்கஞ் சாற்றதன்மே லேழ்முனிவர்
துன்னுலகி லக்கத் தொகை. (அரு)

அப்பாற் றுருவ னமரு முலகிலக்கஞ்
செப்பார் புவர்லோகத் தின்றொகைதா—னெப்பார்
பதினைந் திலக்கமாம் பன்னு மதன்மேல்
வதியுமா வேழு மருத்து. (அசு)

சொல்பதத்தின் மீதிற் சுவர்லோக மெண்பத்தைத்
தல்கிலக்க மாங்கே யமரரொடு—மல்குபிறர்
பேர்ற்றப் புரந்தரன்றன் பொற்புறவே வீற்றிருந்தே
யாற்றப் புரிவா னரசு. (அஎ)

அப்பான் மகலோக மாகு மிருகோடி
செப்பார்மார்க் கண்டாதி சீர்முனிவர்—வைப்பாமே
வண்ணிகலோ கஞ்சனலோ கத்தினள வெண்கோடி
யெண்ணுபிதிர் தேவ ரிருப்பு. (அஅ)

பன்னு தவலோகம் பன்னிரண்டு கோடியா
முன்னுசன காதியாங் குற்றுறைவா—ரன்னதன்மே
லெண்சத் தியவுலகே ரெண்கோடி யாங்கயன்றன்
மாண்பின் றலமளிக்கும் வைப்பு. (அக)

சாரும் பிரமபதந் தான்மூன்று கோடிமா
லாரும் பதவியுமெண் ணத்தொகையே—யோருஞ்
சிவலோக நாற்கோடி சேணதன்மேற் கோடி
யவிரண்ட கோளகையு மாங்கு. (கூ0)

வேதமுத லாக விளம்பிடுநூல் வெவ்வேறு
வோதிடுமெண் டத்தியற்கை யுன்னிற்பல்—பேதமுற
வவ்வவற் றின்றிரிபா ராய்ந்தவுனக் குண்மை யசொற்று
மெவ்வமிலா வேந்தே யினிது. (கூக)

ஏதமிலிவ் வண்டத் திவர்புவன நூற்றெட்டா
மோதான்சீ ரேத்து முருத்திரர்க—ளாதரவி
லின்பார் தரவே யினிதி னுறைந்தருளு
மன்பா ரிருக்கையுமாண் டாம். (கூஉ)

இவ்வண்டத் தின்னியற்கை யேமு னுனக்கிறைநல்
கவ்வண்ட மாயிரத்தெட் டாமவைக்கு—மூவ்வியல்பே
யெந்தனீ சென்றுகாண் கென்ன வகுத்துரைப்ப
வேந்த னுணர்ந்தான் விழைந்து. (கூங)

அண்டகோசப்படல முற்றிற்று.

ஆ. திருவெண்பா சஎ...

# திக்குவிசயப் படலம்.

சூரவனடி போற்றிவிடை கொண்டிளவ லோடும்
பரவையென மன்படைகள் பார்சூர்—வூரவுணர்ந்து
தாரகன்முன் போயிறையைத் தாழ்ந்துமுன்னோன் றன்னையண்மி
யார வணங்கிநின்றா னாங்கு. (௧)

சிங்கன் மகிழ்ந்துரைத்த சூழ்ச்சியெலாந் தாரகற்குச்
சிங்கமுகன் கூறச் சிரித்துநன்றென்—றங்கவனு
நற்றலைவ னள்ளாரை நாமினிவெல் வான்விரைவி
லுற்றிடவே வேண்டுமென்றா னோர்ந்து. (௨)

சந்திரமா மோலியான் றன்னருளான் மைந்தருற்ற
வெந்திறலுந் தொல்வரமு மேவியன்னை—யந்தரத்தில்
வந்துநிற்கக் கண்டவளை வந்தித் தகமுகியோ
டந்தகுவர் தாழ்ந்தா ரடுத்து. (௩)

மாயைமிகு மாண்புணர்ந்து மைந்தரைத்தா னீன்றபொழு
தாயமகிழ் வின்மிகவுற் றாசிசொலி—மேயமகத்
தீச னருள்வரங்கேட் டீண்டுமைக் காணவே
நேசமொடு வந்தே னினைந்து. (௪)

மைந்தர்கா ணீவிர் மகவான் முதலோரை
வெந்திறலான் வென்றவனி மேல்வாழ்தி—ரந்தமின்றி
மாயைகள் வேண்டினெனை மன்னுமுளத் துன்னுதிறங்
கேய முடித்துநிற்பேன் யான். (௫)

என்று முமைப்பிரியேன் யானுமைக்காண் பான்பலகாற்
சென்றிடுவ னீர்பேதந் தீர்ந்திருத்தீர்—நன்றெனவே
யீர்வளைசென் றாளளகைக் கேகவிறற் றானவர்க்கூய்
வார்முரச மெற்றுமென்றான் மன். (௬)

தாமன்ன னேவலினாற் றானவர்கள் சாற்றுமுர
சார்முழக்கங் கேட்டனிக மத்திசையே—சார்தரவே
யூழியின்கண் மிக்கார்த் துயர்ந்து பரந்துவரு
மாழியெனச் சென்றதே யாங்கு. (௭)

வரையெனவே சென்ற மதமா வானூர்
தரையெனவே சென்ற சடந்தேர்—திரையெனவே
சென்ற பரிமா திறனிருதி தானெனவே
சென்ற பதாதி திகழ்ந்து. (௮)

கூடு படைமூன்று கோடியாம் யோசனையின்
காறும் பரவிக் கடிதேக—வீறு
மளகா புரியை யடைந்தனவே தூசிப்
பளகார் தராத படை. (௯)

மண்ணிற் பரப்புளது வாரியின்மிக் கார்ப்புளது
விண்ணிற் புகுவதுகால் வேகத்த—தண்ணருந்தீ
பேரிந் திரவியினும் பேரொளிய துன்னிமயன்
றேரிந் திரஞாலத் தேர். (௧௦)

நாரி யொருபாக னல்கிந் திரஞாலத்
தேரி லிவர்ந்திறைவன் செல்லவிரு—சாரி
லணித்தே ரிகலிளையா ராளரிமான் பூண்ட
மணித்தேரிற் சென்றார் மகிழ்ந்து. (௧௧)

கரிமே லிவர்ந்துங் கலினத் தொடர்பூண்
பரிமே லிவர்ந்தும் பருந்தேர்க்—கிரிமே
லிவர்ந்துஞ்செல் சூர்தனைச்சூழ்ந் தெண்ணணிக வீர
ரிவர்ந்துபுடை சென்றா ரினிது. (௧௨)

மன்னும் பதினெண் வகைமாப் படையேந்தித்
துன்னும் பலநிருதர் சூழ்ந்துவர—வுன்னளிகத்
தார்த்தவிய மார்த்தரத மார்த்தகய மார்த்தவய
மார்த்தகழ லார்த்தபடை யாங்கு. (௧௩)

மண்ணின் றெழுபுழுதி மார்த்தாண் டனைமறைப்ப
விண்ணின் றமரர் வெருவினைந்தா—ரெண்ணின்று
சாரசர மெல்லாஞ் சலித்தவிறல் சூரனெனும்
போரவுணன் றனைசெலும் போது (௧௪)

இத்தன்மை யாக விருஞ்சேனை யோடிறைவன்
சுத்தன்மை யின்னகரைச் சூழ்ந்தனனங்—கத்தன்மை
மேவலுறு மொற்றர் விஞவி நெடிதோடிக்
காவனகர் சென்றார் கடிது. (௧௫)

வயக்கயமாச் சூர்நகரை வந்துவளைந் தானென்
றியக்கர்கோன் முன்றாழ்ந் தியம்ப—மயக்கமுற்றுத்
தேர்ந்தனையார் பாகனருள் சேர்த்தலினும் வெல்வதிலென்
றோர்ந்தனையார்த் தாழ்தலுற்றா னுற்று. (௧௬)

புட்பகமேற் சென்றியக்கர் போற்றண்ணல் சூர்முதலை
நட்பகமேற் கொண்டாசி நன்கியம்பித்—திட்பமிலா
யானு முமக்கடிய னென்னநீ வாழ்கியென்று
தானவர்க ளேத்தநின்றான் றான். (௧௭)

அதுகண் டாசுமினை யாரு மகிழ
முதுநகரி லுள்ளபொருண் முற்றுங்—கதுமெனவே
காரவுணர் மேவிக் கவர்ந்துசென்றார் மீண்டுமக்கோ
னாருரோ டேகினா னங்கு. (கஅ)

பிங்கலனைத் தொண்டுகொண்டு பேரணிகத் தோடிறைசேர்
தங்களைகை நீங்கியா னைக்கடையாங்—துங்கநக
ரெய்தினன்மா ணைநதியுரு வெய்துபவன் வாழ்க்கையெனச்
செய்திறனின் றென்றுசென்றான் சேண். (கக)

தானவர்கோன் பொன்னகரந் தான்புகவிஃ தோர்ந்தயர்ந்து
வானவர்கோன் விண்போய் மறைந்திட்டான்—மாநகரைக்
காயனற்கு நல்கிக் கடிதகன்று தானையொடு
தீயினகர் சென்றான் சினந்து. (உ௦)

அந்தநகர்க் கேகலுந்தி யண்ணல் சினங்கொண்டு
வெந்திறல்கொள் பல்கோடி வீரரொடும்—வந்திடவே
சாரிருவர் தம்படையுந் தாவிச்சமர்புரிய
வாரனலின் சேனைபட்ட தாங்கு. (உக)

வன்னிபடை தோற்றலுமே மாதுயரங் கொண்டுழி
தன்னிலுல கெல்லாந் தகிக்குமெறுழ்—மின்னுபடை
யேநதி யவுணர்கோ னேண்படையெல் லாஞ்சிதைத்தா
னாந்திறல்கண் டானினையோ னங்கு. (உஉ)

சீற்றமொடு தாரகன்றன் றேரிற் கடிதேகி
யேற்றவனற் றேவை யெதிர்ந்துகையி—லாற்றலெண்வில்
வாங்கியரன் மாப்படையை வந்தித் தெடுக்கவும்ப
ரேங்கியயர் வுற்றா ரினைந்து. (உங)

எடுத்தபடை தன்னைவிடி னேவரையு நாசப்
படுத்துமெனத் தீயோன் பணிவுற்—றடுத்துப்
பொறுத்திபிழை யென்றேத்தப் பொற்படையன் றன்மே
லுறுத்திலனுள் ளூற்றா னுவப்பு. (உச)

பற்று மிவனைப் படுத்துந் துயரொன்னா
மற்றதுவர் தீயை வளைக்கவே—சுற்றவரை
நன்றகற்றித் தாரகனீ நம்மே வலினிற்றி
யென்றுவிடை தந்தா னெரிக்கு. (உரு)

அங்கிபடை தோற்றலுமே யன்னான் றிருநகரிற்
றங்கியசெல் வங்கவர்ந்தார் தானவருண்—மங்கியன
லூர்புகவெஞ் சூர்நவெ னூர்செலவான் றேர்விடுதி
யேர்வலவ வென்றா னினிது. (உசு)

வென்றிசையார் வெந்தகுவர் வெள்ளம் விரைந்துவரத்
தென்றிசையான றேத்துழைஞன் சென்றிறைஞ்சி--நின்றுநின்றன்
றென்னகரஞ் சூரனிகஞ் சூழ்ந்தனவென் சொற்கேளா
மன்னனாரி லாழ்ந்தனனே மன். (௨௭)

நிதிபதியு நேர்ந்தாரை நீறுசெய்வோ னென்று
துதிபதியும் போனாமுஞ் சூரெ—னதிபதிதா
டாழ்ந்தவனைச் சார்வெமெனத் தானையொடும் போய்ஞமலி
வீழ்ந்திறைஞ்சி னானே விரைந்து (௨௮)

தீய மறலி செயனோக்கிச் சூரனீ
யேயசனத் தோடிருந்தி யென்றேவி—யேயபடை
வானிதியெ லாங்கவர்ந்து வாரியென வார்த்தேக
மாநிருதி பாலடைந்தான் மன். (௨௯)

நிருதிமற்றை யோர்த நிலைமைதெரிந் தன்னார்
பொருதிசைகொள் வன்பிலெனப் போதக்—கருதித்
தனது படைசுலவத் தாரவுணன் றாழ்ந்து
நினதுதமர் நானென்றா னின்று. (௩௦)

நிருதிநகர் நீங்கி நிருதர்சோ னேக
வருணனுநல் வாயுவுமை வாரி—யிருஞலகம்
போயதுணர்ந் தன்னார் பொருள்கவர்ந்து சூர்படையோ
டேயதலம் புக்கா னினிது. (௩௧)

பன்னகனார் சேனை படரவன்னான் போரியற்றிப்
பின்னடைந்து போற்றவைகல் பேணிவைகி—முன்னமரர்
வைத்தவமு தத்தைவன்பின் வாங்கி யிளையரொடுந்
துய்த்து மகிழ்ந்தகன்றான் சூர். (௩௨)

பிலங்களிற்சென் றாங்காங்குப் பேர்விருந்து நாடி
நிலங்கடல்போய்த் தீவனைத்து நீங்கி—வலங்கொ
ளயில்வேலை யேந்தனிக மார்த்துவர மாயோன்
றுயில்வேலை புக்கான்வெஞ் சூர். (௩௩)

வஞ்சரிகற் றானை வருமோதை கேட்டவனி
கஞ்சமனை யாள கலந்தழுவி—யஞ்சமா
லஞ்சாதி ரென்றோதி யங்கையி லொண்சங்காதி
யஞ்சா யுதமெடுத்தா னார்த்து. (௩௪)

தின்றனிவில் வாங்கிச் சரங்க ளெறும்பொழுக்காய்
மன்றுளவத் தாம மணிமார்பன்—றன்றுபடை
யார்போர்க் களத்தி லவுணர்மேன் மின்சேனைக்
கார்போற் பொழிந்தான் கனன்று. (௩௫)

போர்செய் யவுணர் புரஞ்சிரங்கை காலொழிந்த
தேர்பரிமா வேழஞ் சிதைந்தழிந்த—கூர்சமரி
லெண்ணிலுருக் காட்டி யெவரும் பெயராமே
விண்ணிலந்துன் பெய்தவெய்தான் விண்டு. (௩௬)

தின்றானை தாழ்வடையுந் தன்மைகண்டு தாரகன்மு
னின்றா தரவினஞ்ச னீரென்னக்—குன்றா
மெனவொருவில் வாங்கி யிகலரிமேற் பெய்தான்
கனமுகில்போ லார்த்துக் கடிது. (௩௭)

ஊரத்திவர்க்கொப் பில்லென் றலகேத்த வாழிக்
கரத்தமைமால் பல்வடிவங் காட்டிப்—பொரத்தகையார்
தாய்சொன் மனுவோதித் தாரகனும் பல்லுருக்கொண
டோய்வின் றமர்புரிந்தா னுற்று. (௩௮)

மாயன் றருவன் மணித்தேர் வலவன்மா
வீயவொரு கோடி விசிகமுய்த்தான்—நீயனது
கண்டளவிற் றண்டமொன்று கையேற் றரியெதிர்போ
யண்டமுக வார்த்தெழுந்தா னங்கு (௩௯)

ஏந்துபுகழ்த் தாரகன்மே லெண்ணில் கணைமாரி
சேந்தகண்ணன் சிந்தச் செலுமவற்றைக்—காந்திதரு
தண்டத்தி னாலே தடுப்பவெய்யோன் மாலாழி
கண்டத்தில் விட்டான் கனன்று. (௪0)

இமைக்குமுன்ன ரெவ்வுலகு மீறுசெய வல்ல
வமைக்கருமா வாற்றலுறு மாழி—சுமக்கருஞ்சீர்த்
தாரகன்றன் கந்தரத்திற் றானுவரத் தான்மணியி
னார மெனக்கிடந்த தாங்கு. (௪௧)

அன்னதுகண் டச்சுதனு மற்புதத்த னாகியே
மன்னிளவற் றாரகன்றான் மாவலிய—னென்னநினைத்
தாரவுணர் வானமர ரானவரி னிற்குநிகர்
வீரனல்லா னில்லையென்றான் வேறு. (௪௨)

மன்னாழி நிற்கு மணியார மாய்க்கிடக்கி
னென்னும் வலிபிறர்க்குன் னேணிதென்றான்—முன்னவா
ராசி லிகலுரைப்பா ராமெமக்கு நீர்தமரென்
றாசிசொல்லிப் போனா னரி. (௪௩)

ஆங்கதுகண் டாரவுண ரார்த்தா ரமரரெலாந்
தாங்கரிய துன்பந் தலைக்கொண்டா—ரோங்கருஞ்சீர்த்
தாரகன்முன் போகத் தமய னவற்றழீஇப்
போனிகத் தோடகன்றான் போர்ந்து. (௪௪)

நேமிவரை காறு நிலவரைப்பு முற்றும்போய்த்
தேகமில் விசும்பேகிச் சூழ்தபன—ஞமுதலோர்
வாழியென் றாசிசொல வான்றுறக்கம் புக்கான்சூர்
மாழிமையோர் மன்கேட்டான் மற்று. (சரு)

வேந்த னடுங்கி விழுமந் தலைக்கொடவட்
போந்த வவுணனெதிர் போயமரி—னேர்ந்தனனே
லிந்தவுயிர்க் கீறு மிருக்கி னிடர்ப்பவ்வத்
தந்துடழிக் காளாவே னுற்று. (சகு)

ஆகையாற் போருஞற்றி யாவிவிடேன் பேதுறே
னோகைகொளன் னூர்நகையு மூட்கொள்ளேன்—வாகையுறு
சூரபன்மற் காணிற் றுகளார் தலையிடுமென்
றூர நினைந்தினைந்தா னங்கு. (சஎ)

இந்திரனிவ் வாறெண்ணி யேய்ந்தகுயின் மன்னுருவஞ்
சுந்தரியோ டெய்தித் துறக்கமுற்றான்—வெந்தகுவர்
தேடியுங்கா ணாரஃது தேர்ந்தொளிகொள் பொன்னகரம்
வாடியதே தன்பொலிவு மாய்ந்து. (சஅ)

பிடித்தா ரிமையவரைப் பேரவுணர் குற்றி
யடித்தார் புயங்களையத் தத்தா—லொடித்தார்பின்
கொற்றவன்றன் முன்னர்க் கொடுவுய்த் தலுமிறைஞ்சி
யுற்றவரும் போற்றுவா ரோர்ந்து. (சகூ)

தானவரில் வந்தாய் தவஞ்செய் தருள்பெற்றா
யானதிசை காவலரை யாட்கொண்டா—யூனமிலா
யின்றுமுத லெங்கட் கிறையுறவும் யாவுநீ
நின்றனதே வல்புரிது நின்று. (ருo)

என்ன விவைகேட் டிமையோர் தமைநோக்கி
மன்னனகை செய்துதலை வாங்கிநீ—ருன்னுபணி
செய்குதிரென் றேவிண் டிருக்கொண் டிளைஞரொடு
மும்மகலோ கம்புக்கா னுற்று. (ருக)

காலன் றனைவென்மார்க் கண்டேய னுதியும்பர்
மேலதா மூன்றுலகு மேவியவர்—சாலப்
பரவ விவைகடந்து பங்கயன்பாற் போக
வுரவனெதிர் போதனுற்றா னோர்ந்து. (ருஉ)

மன்னவநீ வைகலுமே வாழியென வாசிசொலி
யென்னதவஞ் செய்தனனோ வீங்குவா—மின்னுசடை
யத்தனடி பேணி யருந்தவஞ்செய் துன்னைப்போ
லித்தனைபே றுற்றா ரெவர். (ருங)

வளையாழி கைக்கொண்ட மாலா னியலை
யிளையாற் கொடுவென்ற தென்சீர்—கிளையார்கீ
வாதையிலாக் காசிபன்றன் மைந்தனென்று ஞானுன்மூ
தாதைபிர மனல்லனென் றுன் றுன். (ருச)

என்று முகம னியம்பியிளை யாரையுங்கண்
டொன்றுபடை யாதி யுதவச்சூர்—நன்றயனை
யங்க ணிருத்தி யரியுலகஞ் செல்லவந்து
செங்கண்மா லாசிசொஞன் றேர்ந்து (ருரு)

பாயனுல கண்ணி மகிழ்வுறக்கண் டன்னவனை
நேய முடனிருத்தி நித்தனுறை—தூயவுல
கேகிப் பணியநந்தி யெந்தையுய்ப்ப வீசன்முன்
போகிப் பணிந்தான் புரிந்து. (ருசு)

திண்டிறல்வெஞ் சூரன் றிருமுன் றொழுதேத்தக்
கண்டங் கரியன் கருணைபுரிந்—தண்டமுற்றுஞ்
சென்றுநின தாணை செலுத்தி யிறைபுரிதி
யென்றுவிடை தந்தா னினிது. (ருஎ)

புறமடைந்து சூரன் பொருமனிகஞ் சார்ந்து
திறலண்ட கோளகையைச் சேர—மறனுமலி
மேலோ ருருத்திரர்தா மேவினரன் ஞருமையோர்
பாலோ ரெனவுணர்ந்தார் பார்த்து. (ருஅ)

காழண்டஞ் செல்வாயில் காட்டியவ ருய்க்கமற்ற
வாழண்டஞ் சூரபன்மன் வன்படைகள்—சூழவே
யண்டங்க டோறுமே யவ்வண்ணஞ் சென்றுவென்றி
கொண்டு வளங்கவர்ந்தான் கூர்ந்து. (ருகூ)

இவ்வண்ணம் வெவ்வேறு மெல்லையிலண் டந்தோறு
மவ்வவுணர் தம்மையர சாகவைத்தே—தெவ்வடுசூ
ரின்றுணைவ ரோடுமீண் டேகியண்டப் பித்திகையுட்
சென்று துறக்கமுற்றுன் றேர்ந்து. (சுo)

திக்கு விசயப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ருoச.

---

## எதிர்கொள் படலம்.

---

சொல்லருஞ்சீர்ச் சூரன் றுறக்கமுற்ற காலைதனில்
வல்லவுணர் காணு மகிழ்வுற்று—சொல்லையி
லன்ஞன் வரவை யரையன்முன் போயொற்றர்
சொன்ஞர் களிப்புற்றுன் சூழ்ந்து. (க)

பின்றருவர் கோன்சூர் பெறுமா வளம்பலவுங்
குன்றவில்லி யின்னருளுங் கொண்டுளத்திற்—றுன்றுபுகா
தன்னை யடைந்திறையைத் தானுறச்செல் வன்முன்போய்ப்
பன்னுதிநீ யென்றான் பரிந்து. (௨)

பாயொளிவி மானமேற் பார்க்கவன்செல் காலைவெஞ்சூர்
நேயமொடு கண்டிறைஞ்சி நேர்நிற்பத்—தூயவனும்
பன்னரிய வாசி பகர்ந்துபணி தம்பியர்க்கு
மன்ன பரிசுரைத்தா னங்கு. (௩)

பார்த்திபகேள் காசிபன்றன் பன்னிருங்கை யைப்பயந்தான்
கூர்த்திமொ கேள்வியான் கூறவுணர்க்—காத்தமொய்ம்ப
னந்தார்கோ னேற்றமர்செய் தாற்றலுற்று ணுதலான்
வெந்துயரின் மூழ்கினான் வேர்த்து. (௪)

மன்னவநீ நோற்றுவரம் வாங்கிவிறல் கொண்டடைதல்
பன்னவுணர்ந் துன்வரவைப் பார்க்கின்று—னென்னவெஞ்சூர்
மொய்யா ரகமகிழ்ந்தான் முன்னவுணர் மன்னெதிர்ந்தங்
கையாற் றொழுதான் களித்து. (௫)

அன்னபோ தொள்சூ ராசை யினிதிருத்தி
யென்னவைய நீயுளையே லோர்குலத்திற்—குன்னுங்
குறையுளதோ வென்றினிய கூறியயல் சென்று
னறைதருவர் கோமா னடுத்து. (௬)

பார்தனில்வெஞ் சூர்வந்த பான்மைதெரிந் தம்புயத்தோன்
சீர்கொள் வலாரிமுதற் றேவரின்பா—லார்கலியிற்
றுஞ்சுதிரு மாலைத் தொழுதுவெய்யோன் செய்கைபகர்ந்
துஞ்சுவகை சொற்றியென்று னோர்ந்து. (௭)

சக்கிரியம் மாற்றந் தகக்கேளாப் புன்மையா
நக்கன் றனையிகழ்ந்து நாசமுறு—தக்கன்
மகத்தான் வருபாவ மன்பயனுந் துன்பை
யிகத்தான் விலக்குபவர் யார். (௮)

முன்னெயிலோர் மூன்றின் முரணடர்ந்த முன்னவன்பாற்
பன்னுவரம் பெற்றுளான் பல்லண்டந்—துன்னிவென்று
னுதலா னம்மா லவனைவெல்ல லாகாது
காதலாற் சென்றடைவோங் கண்டு. (௯)

மன்றலல ரோனுதி வானோர் முனிவரிது
நன்றென் றிசைந்துநிற்ப நத்தனவர்—பின்றொடரச்
சென்றுவிறற் சூரன் றிருமுன்னின் றுரிசொலத்
துன்றுமன்பிற் போற்றினார் சூழ்ந்து. (௧௦)

கண்டவுணர் கோமான்முக் கட்பெருமா னென்னவுருக்
கொண்ட தொகையினர்யார் கூறுகென—மண்டு
முருத்திரர்தம் மேன்மை யுரைப்பான் றுளவ
மருத்தெரியன் மார்பன் வகுத்து. (கக)

எதிர்கொள்படலம் முற்றிற்று

ஆகு திருவெண்பா ருகரு.

# உருத்திரர் கேள்விப் படலம்.

மன்னவர்மன் னேகேண்மோ மன்னயன்முன் ஞோர்கற்பத்
துன்னுலகு மூன்று முயிருநல்கித்—துன்னும்
பரனெனவே தன்னையுன்னிப் பாழகந்தை மேற்கொண்
டரனை யயர்வுற்று னன்று. (க)

பிரமன் விதித்த பெருகா வகையாற்
பரமன் றனைமறந்த பண்போர்ந்—துரவினினைந்
தன்று னருள்கொண் டளிப்ப லெனத்தவஞ்செய்
துன்று விருந்தா னுகம். (உ)

பன்னெடுநா ளொற்றும் பரன்வந் தருளாமை
யென்னவென வெண்ணியெண்ணி யேங்கியழு—முன்ன
ருலகையாக் காண்டகைதன் ஞெண்கணீர் வீழ
வலகையா யீண்டிற்றே யாங்கு. (ங)

கண்டளவிற் பேய்கள் கருத்தி லிடர்விளைப்ப
விண்டனன்றன் றுவியென வீழ்ந்தயர்ந்தான்—மண்டறிவு
தந்தன் னவன்கனவிற் சார்ந்தினிநீ யஞ்சற்க
மைந்தவெழு கென்றான் வரன். (ச)

பரமென் றுனைமதித்த பான்மையா னீசெய்
கருமங்கை வந்ததிலை காணல்—துரவினுற
நந்தம் பதத்தினரை நன்றுநின்பா லுய்ப்பமென்றான்
சந்தமறை தேடரிய சம்பு. (ரு)

அன்றான் கனவி லரன்வந்து தேற்றவுணர்ந்
துன்று விருக்கவிறை யோங்குமரு—டன்றாற்
பதினோ ருருத்திரர்கள் பாலத் துதித்தே
விதினோன்மை மேவநின்றார் வேட்டு. (சு)

ஐயநீ ரிங்க ணடைந்ததென்கொ லென்னநீ
செய்யுஞ் செயன்முடிப்பான் றேவுய்ப்பத்—துய்யநின்பால்
வந்தே மெனநவின்றார் மன்னுமரன் றன்னுருப்போ
லந்தேக முற்றா ரடுத்து. (எ)

அன்னவரிவ் வாறருள வம்புயனென் பால்வந்தீர்
மன்னுயிர்க டம்மை வகுக்குதி—ரென்ன
வுருத்திரண்ட தம்வடிவி னோர்பதினோர் கோடி
யுருத்திரரைத் தந்தா ருகந்து. (அ)

அதுநேர்ந் தயனுயிர்க ளார்வினைக்கீ டல்லா
லிதுநீர் செய்நெறியன் றென்னப்—பதினோ
ருருத்திரரு மெம்பதத்தி லொல்லையிற் போதா
மிருத்திமுறை செய்தியென்றா ரிங்கு. (கூ)

பாங்கலரோன் யாவும் படைப்பா னருள்புரிந்தே
யோங்கறிவின் மிக்க வுருத்திரர்சீர்—தேங்காண்மு
னல்கு புவனமுற்றார் நாசரிற்றா நல்கினரை
மல்க விருத்திரொன்றார் வாய்ந்து. (கO)

புவனமுன்னர் நல்கம் புயனுதலின் மேய
தவலில் விறலினர்தாந் தந்த—பவர்முதலாம்
பன்னுருத்தி ரேசர் பதினொரு கோடியரா
மின்னரும்ப ரோடுற்றா ரிங்கு. (கக)

உருத்திரர்கேள்விப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ருஉசு.

# நகர்செய் படலம்.

என்னவவர் கூற விதுவோ நிகழ்ந்ததென்றான்
பின்னமரர் கம்மியனைப் பெட்பினிற்பார்த்—துன்னிப்
பகாருஞ்சீர் மன்சூர பன்மன்யா மேவ
நகரொன்று செய்தியென்றா னன்கு. (க)

மயனதனைக் கேட்டிறைஞ்சி மன்னுமக்குச் செய்யும்
வியனகருக் கேற்றவிட மேவ—வியம்புகென
வன்பார் புகரோன் வளநகர்கட் கெல்லைசொலத்
தென்பா லுததி யுற்றான் றேர்ந்து. (உ)

அல்லுறழுமுந் நீரு ளயுதமெட்டி யோசனையி
னெல்லைநகர் முன்னோர்க் கெனக்கோலி—யொல்லை
நிலம்படுத்த நீண்மா நிவரத்தாற் றூர்த்துத்
தலம்படுத்தி னன்முன் றறை. (ரு)

இந்திரவி நாடொறுஞ்சூழ்ந் தேகவுயர் மாமதினீண்
மந்திரநாற் கோபுரம்பொன் மாளிகைக—டந்திரநூ
லோதியவா றூற்றி யொருநூறி யோசனைமா
வீதிபல செய்தான் விரைந்து. (சு)

மாளிகைசெய் குன்ற மணிமன்ற முன்றிலம்பொற்
சூளிகையின் செய்யரங்கஞ் சூழ்நியமங்—கோள
ணெழில்வாய்ந்த மேற்றலத்தோ டெண்ணிலாத் தெற்றி
பொழில்வாவி செய்தான் புனைந்து. (ரு)

அன்னதனுப் பண்ணோ ரயுதவெல்லை யின்மணிசெம்
பொன்னெடுமா நாஞ்சில் புனைவனல்கி—மின்னு
மருங்கோ விலையென்னு மாயைமகன் வைகப்
பெருங்கோ விலைவகுத்தான் பேர்ந்து. (சு)

சிந்துரமா சேருமிடஞ் சேனையந்தேர் சாருமிடம்
வெந்தகுவர் தந்தலைவர் மேவுமிட—மந்தாம்வாழ்
நாரிமா ராடரங்க நல்லிசையார் பாடரங்கக்
கூரியலிற் செய்தான் குறித்து. (எ)

மாமறைதேர் மண்டபமும் மந்திரர்சேர் மண்டபமு
மாமகவான் வந்திருக்கு மண்டபமு— மாமகஞ்செய்
மண்டபமுந் தானவர்கோன் மன்னியல்செ யத்தாணி
மண்டபமுஞ் செய்தான் மயன். (அ)

பன்னிதியார் மண்டபமும் பல்படையார் மண்டபமு
மன்னமிர்தி னின்னமுதுண் மண்டபமு—நன்னறுஞ்சாந்
தந்துவர்க்காய் வெள்ளிலைமுன் றூர்ந்திருக்கு மண்டபமும்
விந்தைபெறச் செய்தான் வியந்து. (கூ)

பன்மணியின் மேவப் பலமண் டபமாற்றிப்
பொன்மணியி னாலே புனைந்துறையுண்—மின்மருவ
மன்குலமாண் போங்க வகுத்தானஞ் சூரபன்மன்
றன்குலமா தோடமாத் தாண். (கo)

அங்கதனைச் சூழ வகனிரைநீள் வீதியன்னு
ளங்கையர்தம் மோடுறைய நன்கியற்றிப்— பொங்க
ரனத்தான் மலிகமல வாவிசெய்குன் றூதி
மனத்தான் வகுத்தான் மயன். (கக)

புன்மையின் விண்ணுளி முதற் புங்கவரை மன்னவர்மன்
வன்மைகெட வென்றிகொடு வந்திறைமை—மன்முறையான்
வாமமுற்ற வீர மகேந்திர மாபுரமென்
னுமமுற்ற தம்மா நகர். (௧௨)

ஏம மிமைய மிலங்கை யொடுநீலஞ்
சோமமென்சு வேதந் துலங்கவுணர்—வாமம்
பதுமநா மப்புரங்கள் பன்னகர்க்கெண் டிக்குஞ்
சதுர முறவகுத்தான் றான். (௧௩)

மன்னுறுசீர் வீர மகேந்திரமிவ் வாறுநல்கி
யன்னதுதா னென்றயர்க்க வாசுரமென்—றன்னரிய
மாநகர மொன்றுவட வாரிநடுச் சீயமுகத்
தானவற்கு நல்கினன் றான். (௧௪)

வாரியுறு தீவுதொறு மன்னனிகஞ் சுற்றமெலா
மாருதற்குத் தொன்னகர மாங்கமைத்து—மேருவின்றென்
பானு வலந்தீவிற் பன்னுபொற்கூ டத்தருகிற்
சானுகர் தச்சனுற்றான் சார்ந்து. (௧௫)

சாற்றிடுமெவ் வெல்லைதனிற் றாரகற்கா வேவருமே
போற்றிடுசேர் மாயா புரமெனக—ராற்றிமன்னர்
மன்னவர்க்குக் கூற மகிழ்வினன்றென் றுங்கனெறுழ்
றுன்னனிகத் தோடடைந்தான் சூர். (௧௬)

நகர்செய் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௬௪௨

---

# பட்டாபிடேகப் படலம்.

---

மன்னவர்மன் வீர மகேந்திர மாபுரமுற்
றுன்னருஞ்சீர்த் தன்கோயி லுட்புகுந்தா—னன்னவனுக்
கீண்டுமுடி சூட்டுதுமென் றெண்கணன்முற் றேவரெலாம்
வேண்டுபொருள் யாவுமுய்த்தார் வேட்டு. (௧)

மாடியலோர் பீடமுற்று மன்சுரர்நன் னீராட்ட
வாடியுடையுடீஇ யாய்ந்தமலர்—சூடி
யணிபூண் டினனொருகு காக நிருதர்
பணிபூண் டிசைபகர்ந்தார் பாங்கு. (௨)

வென்னிருதர் வேந்திறைஞ்ச வெங்குருவின் ணோர்போற்றத்
துன்னிந் திரன் றுயரச் சூரபன்மன்—மன்னரியின்
கான்முகத்தோர் பீடமுற்றான் காமருசீர் மோலிகொடு
நான்முகத்தோன் சூட்டினு னன்கு. (ங)

கண்டவுணர் மாயைமகன் கான்மலர்த்தா டாழ்ந்தெழீஇ
மண்டுபெருங் காதன் மகிழ்ச்சியுற்றா—ரண்டரொடு
மாமுனிவர் மன்னவர்மன் மாமுடிமேற் றாமுறையே
தூமலர்கள் பெய்தார் துதித்து. (ச)

திருத்தவிசின் பாற்றுணைவர் சீரயன்மா றம்மை
யிருத்திரென வன்னு ரிருந்தார்—கருத்திலும்பர்
கோன்மன் களாசியக்கர் கோனடப்பை கூர்சமிரர்
வான்கவரி கொண்டார் மகிழ்ந்து. (ரு)

ஆரவுணர் கோனுடைவா ளங்கைதனிற் கொள்ளக்
கூரிரவி திங்கள் குடைநிழற்ற—வாரிமன்னே
டானமகா ராலவட்ட மாங்கசைப்ப விஞ்சையர்கள்
கான மிசைத்தனரங் கண். (சு)

கூற்றுவனுஞ் செந்தழன்மெய்க் கோமானும் வேத்திரங்கை
யேற்றெவரு நீங்க வெரிவிழியி—னார்த்து
நிரலுறவன் னுரை நிறுவிச்சூர் தன்சீர்
பரவியய னின்றார் பணிந்து. (எ)

நிருதர்கோன் கோடிகந்தா னீள்காத்திற் கொண்டா
னிருகுரவர் மாமுனிவர் யாருந்—தருகலச
வாசவற னார்வையான் மாமறையோ தித்தெளீஇ
நேசமுற வாசிசொன்னார் நின்று. (அ)

கூரமரர் மாத ரிசைபாடி யாடினார்
ஏரமரர் தத்தமுறை கொண்டாற்றச்—சூரபன்மன்
சீயத் தவிசிற் றிருநிகழ மேவியிவை
நேயத் துடனவில்வா னேர். (கூ)

பட்டாபிடேகப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ருருக

---

# அரசுசெய் படலம்.

---

தளிர்த்ததுழாய்த் தாமனைவெந் தானவர்கோன் றன்பார்த்
தளித்தவன்மூ தாதைமுறை யானீ—விளித்திடுங்கான்
மேவுகென்றிங் கன்னவன்சேய் வேதனைப்பார்த் துன்மகரோ
டோவிலங்க மோதுகென் றூ னுற்று. (க)

வெங்கதிரை நோக்கிமன்னன் மேவுகம்மூர் காறுமினஞ்
செங்கதிர்கான் றந்தரத்திற் செல்லெனத்தண்—ணங்கதிரைப்
பார்த்துன் கலைகுறைதல் பல்கலின்றி யோர்படித்தாய்ச்
சீர்த்தினன்போற் செல்லென்றான் றேர்ந்து. (௨)

வன்னிதனை நோக்கி வளநகரில் யாரெனினு
முன்னிலவர் தம்பணிசெய் தொண்மலரின்—றன்னியல்கொ
ளென்றெமனைப் பார்த்துநம்மூ ரெல்லையில்வாழ் மாபரியைக்
கொன்றகுவர்க் கொல்லவென்றான் கோ. (௩)

காற்றிறையைப் பாராக் கடிநகருள் ளார்நீத்த
நாற்றமல ராடைபணி நற்சாந்த—மாற்றுதியென்
றூழிமன்னைக் கண்ணுறீஇ யாரநரந் தம்பனிநீர்
சூழிடத்திற் றாவென்றான் சூழ்ந்து (௪)

இந்திரனை நோக்கி யிமையோர் திசைகாப்போ
ரந்தவரோ டார்ந்துபணி யாற்றுகென—வெந்திறலோ
யேவுபணி செய்குதுமென் றேவருமவ் வாறொழுக
மேவுமண முன்னினான் வேந்து. (௫)

பொருவிலெழில் விண்ணோர் புனைவன் றவத்தான்
வருபதும கோமளையா மாதைக்—குருவெங்
கதிரயன்மா லும்பரொடு காரவுணர் போற்ற
விதியின் வதுவைசெய்தான் வேந்து. (௬)

ஆங்கதற்பின் வானோ ரசுரரொடு கந்தருவ
ரோங்குசித்த ராதியர்த முண்கணறுங்—தேங்குவளை
மானனையார் தம்மைவெஞ்சூர் மாமணஞ்செய் தின்பமலர்த்
தேனுகர்வண் டிற்றுய்த்தான் சேர்ந்து. (௭)

அரிமுகனும் பின்னவனுக் கந்தகன்றா னன்பாற்
றருவிபுதை யைக்கடியிற் றந்து—நிருதியென்பான்
றன்மகளாந் தையற் சவரிதனைத் தாரகற்கு
மன்மணஞ்செய் வித்திட்டான் மன். (௮)

ஏர்மணஞ்செய் பின்ன ரிளைஞரைப்பார்த் துங்களுக்காற்
றார்புக் கிருகோடி யோங்குவெள்ள—மார்படைக
ளோடிருத்தி ரென்றேவ வொண்புகழ்ச்சூ ரன்னவர்தா
நாடியவ ணேகினார் நன்கு. (௯)

தீன்வன் படையின் றலைவரிற்பல் லோரைப்பார்த்
துன்மற் றிருகோடி யோதுவெள்ள—மன்படையோ
டாழியின்கட் டீவுதொறு மாற்றிய மூதூரேகி
வாழுதிரென் றானவரை மன். (௧௦)

தெறுமவுணர் தம்மைவான் றிக்கதலம் யாவு
மறுகோடி வெள்ளமோ டாங்குக்—குறுகச்செய்
தெங்கு மனிகமுற வெண்ணிலக்கம் வெள்ளமுற்றோர்
துங்கநகர் மேவவைத்தான் சூர். (௧௧)

யானைபரி யேனமரை யாளிபுலி சீயமெண்ணி
ஞனமா வீரரைத்திக் கார்நகரிற்—றானமர்த்தி
மன்னகர்காப் பான்செய்து வான்வீர ரைக்கோயின்
மின்னெயின்முன் காக்கவைத்தான் வேந்து. (௧௨)

கொன்றூர்க் குணன்றரும கோபன் முதலோரைத்
துன்மந் திரியாத் துணைகொண்டு—பன்மலர்தூ
யாரமரர் போற்ற வரியணைமேல் வீற்றிருந்து
சூரரசு செய்தான் றுதைந்து. (௧௩)

அரசுசெய்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௫௬௪.

# தேவரையேவல்கொள்படலம்.

மேவுமர சாளுகையில் வேந்திமையோர் மாமுனிவ
ரேவரும்வெஞ் சூர்க்கு மிளையோர்க்கும்—யாவர்க்கு
மன்னூர் பதிதொறுஞ்சென் றங்கேவல் செய்துரச
லென்று வுழல்வா ரினைந்து. (௧)

பணிசெயுங்காற் சூர்சுரர்க்கூய்ப் பன்னவுண ராற்றும்
பணியவர்க்குத் தம்பியராம் பண்பாற்—பணியுமதே
மைத்தகடன் மீனை வலையிட் டவர்க்குவைக
லுய்த்திடுதி ரென்று னுகந்து. (௨)

சொன்மொழிகேட் டன்னூர் துயருற் றுளநடுங்கி
மன்சொன் மறுக்கும் வலியினமோ—வென்செய்வ
முய்திறன்வே றில்லமெனு வோர்ந்திறையைத் தாழ்ந்தவனுஞ்
செய்துமெனச் சென்றூர் செறிந்து. (௩)

சென்னெறியி லிந்திரனுந் தேவரும்புன் கண்ணுற்றே
யன்னெறிய தாயபழி யண்ணுதற்கு—முன்ன
ரிறப்பதுநன் றஃதுமெய்க் கெய்தாதந் தோவென்
றறப்புலம்பி வீழைபுக்காருற்று. (௪)

பகரா யிரங்கண்ணன் பன்வருணற் கூவி
மகரா லயந்தனக்கு மன்னும்—தகவோய்
திரையேய் கரத்தாற் றிமிங்கலமுன் மீனிக்
கரையேற் றுதியென்றான் கண்டு. (ரு)

வானத் திறையிராங்கும் வாய்மொழிகேட் டேர்வருணன்
யானத் தொழில்புரிவே னென்றியம்பி—மீனத்
தொகைபாவும் வாரித் துணைக்கரத்தாற் சேர்த்தான்
வகையார வரைபோன் மருங்கு. (சு)

ஊனமினீ ரேந்த லுவந்தொல்லை யிற்றந்த
மீனவெற்பை நோக்கியரி விண்ணவரைத்—தானமையா
வின்னமச்ச மெல்லா மெடுப்பதும் வேலையென்றா
ருன்னமச்ச முற்றா ருலைந்து. (எ)

மின்னுந் திமிங்கிலமா மீன்முதலா மீன்வரையை
யுன்னிரவி காய்தந் துலர்த்தவிண்ணோர்—மன்னன்
சுமையாத் ததனைச் சுமந்தநகர் மீதாறு
மிமையா ரெடுத்துழல்வா ரேற்று. (அ)

இன்னலங்கொள் சூரபன்ம னென்னுங் கொடியவனான்
முன்னந் துயர்க்கடலின் மூழ்கினோம்—பின்ன
மிழிபாந் தொழிலா மிதுவும் புரிந்தே
பழிபாவ முற்றோம் பரிந்து. (கூ)

மக்கட் கதியினிலும் வானோர் கதிசிறப்பின்
மிக்கதென்பர் மேலோர் வியனுலகம்—தொக்குநகக்
கான்சுமந்த கற்பகந்தார்க் கம்மேற் கடல்படுபன்
மீன்சுமந்தம் வீந்திலநீர் வீழ்ந்து. (க0)

மறையொழிக்கிற் றீர்ந்தம் வலைஞர் தொழிலாந்
துறையொழுக்கிற் றேர்ந்தமெனத் துன்ப—நிறைய
வலம்பித் திரையு மலைபோற் றெருவிற்
புலம்பித் திரிவார் புலர்ந்து. (கக)

அன்ன செயல்கண் டவுணர் கடல்கலக்கி
யின்னமீ னல்கினா ரென்றுரைப்பார்—மின்னிரவி
யுண்ட வெறுங் கோதோ வும்ப ரெமக்குகந்து
கொண்டடைவ தென்றுரைப்பார் கூர்ந்து. (கஉ)

மீனந் தலைக்கொண்டு மேவு மிவர்தமக்கு
மானமில்லை யோவென்பார் மற்றவர்தாம்—ஞான
மதியின் மிகவும் வலியவரென் றாலும்
விதியின் பயனென்பார் வேறு. (கங)

வானவர்கோன் மண்ணிசழும் வன்பழிவந் தெய்தியுமே
யூனமென வோரா துயிர்வாழ்த—லீன மன்றோ
வன்னவன்பெண் கொல்லோ வலிதானோ பேருவோ
வென்ன வுரைப்பா ரிகழ்ந்து. (கச)

இவ்வணம்பல் லோரியம்ப வேந்தலும்ப ரோடேக
வவ்வயின்வா யில்காப்போ ராக்குப்பச்—செவ்வி
யிருங்கோதின் மீன்கொடிபோ யேரவுணர் கோமான்
பெருங்கோயி லுள்ளுய்த்தார் பேர்ந்து. (கரு)

துன்னமா ருய்த்தமீன் சூர்முதல்கண் டோகையுற்றே
வன்னவும்பர் வந்தளித்தீர் மாண்பிதென—மன்னகல
வேதவழு வத்தில்வீழ்ந் தேயல்செய் தென்றுநொந்தும்
வேத வொழுக்கமற்றார் வேர்த்து. (கசு)

தேவரையேவல்கொள்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ரு ௪0.

# புதல்வரைப்பெறு படலம்.

மருவியவஞ் ஞான்றவுணர் மன்றவத்தின் சீரா
லொருபதும சோமளேயென் றோதுந்—திருவனையா
டன்னுதரத் தோர்மைந்தன் றான்வந்தான் கூற்றஞ்ச
வுன்னுமிளந் திங்கள்போ லுற்று (க)

மைந்தனைச்சூர் கண்டு மகிழ்வெய்தி மாவெறுக்கை
யந்தணர்க் கண்டரெலா மல்லலுறத்—தந்தனன்பின்
பொற்றொடியா ராசிசொலிப் போற்றிடவச் செல்வனைச்சீர்
நற்றொட்டி லிற்சேர்த்தார் நன்று. (உ)

மாழைமணித் தொட்டிலின்கண் மைந்தன் றுயிலுகையி
லேழை யிவுளியந்தே ரேந்தலென் றாழ்—தூழையிலுற்
றூரியன்மெய் யிற்பட்ட தாங்கதனை நாடியன்னான்
சூரியனைப் பார்த்தான் சுளித்து. (ங)

பார்த்தெழிலார் தொட்டினின்று பால னிருவிசும்பிற்
கூர்த்தெழுந்து பாய்ந்தினனைக் கோளரவிற்—கார்த்தநெடுங்
கைத்தலத்திற் பற்றிவந்து கட்டியங்குக் கண்வளர்ந்தான்
மெய்த்தவத்தின் மிக்கதுண்டோ வேறு. (ச)

செங்கதிரோன் சேணகத்திற் சேறலின்றித் தீங்குறாத
லங்கசயன்வா னோர்கண் டயர்வொடுபோய்—நங்கள்
குறைநீத் தலரிதனைக் கொற்றவனின் சேய்செய்
சிறைநீத் தளித்தியென்றார் சேர்ந்து. (ரு)

பன்சூர பன்மன் மலரோன் றனைநோக்கி
யென்சூரி யன்றீங் கிழைத்தனனென—நின்சே
யெழின்முகத்தி லாதபந்தா னெய்தவவற் பற்றி
யிழிசிறையிட் டானென்றா னீங்கு. (சு)

மகவுசெயல் கேட்டு மகிழ்ந்திறைநீ ரன்பின்
மிகுசொனவின் றோர்சேய் விடுப்பப்—பகலவனைக்
கொண்டே குதிரென்றான் கோகனகக் கோன்விடைகொண்
டொண்டேவ ரோடுசென்றா னாங்கு. (எ)

அன்ன வமயத் தாமகளி ராடவிசை
மன்னமணித் தொட்டிலிலார் மைந்தன்பாற்—றுன்னிநின்றே
யாசிசொல வன்று னளிப்பதென்கொ லென்னவினன்
மாசிறையைத் தீர்த்தியென்றான் மற்று. (அ)

பார்தந்த நான்முகனைப் பார்த்துன் படைதந்தா
லோர்தந்த வெல்லோனை யான்விடுப்ப—லோர்தியென
வங்கயன்றன் னாயுதத்தை யாசிசொலி நல்கமைந்தன்
செங்கதிரை விட்டான் சிறை. (கூ)

படைதந் தமையும் பரசுமனை யோர்க்கும்
விடைதந் தமையும் விளைவி—மிடைபுகழ்சூர்
தாமம் புனைமதற்குத் தான்பானு கோபனென
நாமம் புனைந்தனனந் நாள். (க0)

உருவி லெழிற்பானு கோபன் மடவா
ருருவின் மதனென் றுரைப்பப்—பொருவிற்
றிருமா லொடுசமருஞ் செய்தனையான் றன்னைப்
பெருமா விறல்கொண்டான் பின். (கக)

பகலோன் பகையைப் பயந்தமைபோற் பின்சூ
ரிகலோன் மயன்மகட்சேர்ந் தேர்தீ—முகவனொடு
செப்பிரணி யன்வச் சிரவாகு வைப்பெற்றான்
முப்புவன முந்துளங்க முன். (கஉ)

மற்றமனை யார்தோண் மருவிவெஞ்சூர் பத்துநூ
றுற்றமும்மை யார்புதல் வோர்தம்மைப்—பெற்றமர்ந்தா
னாற்றலினை யான்பா லகிசூரன் றோன்றினன்பின்
றூற்றுவர்வந் தெய்தினார் கொய்து. (கங)

திக்கிமுகத் தாரகன்பாற் சார்முன் றயவலியான்
மைந்தனை சேந்திரன் வந்தனனற்—சிந்தையுளான்
பாவம் புரியான் பழிபூணா னீதியன்றி
யாவும் புரியா னிசைந்து. (௧௪)

பகைமையுளார் வீரம் பகர்ந்தெதிர்ப்பி னன்னோர்
வகைமைகெட வெல்வான் மனத்தன்—றகைமையுளான்
றீயகள்ளி நல்கில்போற் சேயைநல்கித் தாரகன்றான்
மாயநகர் வைகினன்சீர் வாய்ந்து. (௧௫)

புதல்வரைப் பெறுபடலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௫௬௫.

---

# வில்வலன் வாதாவிப் படலம்.

---

அன்னோர்க் கிளையா ளசமுகியென் றோர்த்தா
ளின்னோர்க் கிவளில்லா ளென்பதில்லள்—பொன்னோ
நிறையில்லா ணல்ல நினைவில்லாள் வெள்கித்
துறையில்லா தூறுசெய்வாள் சூழ்ந்து. (௧)

தேசுற்ற காளையரைத் தேடிப் புணர்கிற்பாண்
மாசுற்றத் தாரையிகழ் வாரைவகைத்—தாசுற்ற
வாயிலிடு வாளொருநாண் மாசிறுரு வாசனெல்லை
மேயினளவ் வல்லாள் விரைந்து. (௨)

மன்னிடலு மாமுனிவன் மாதே தனியே நீ
யுன்னிவந்த தென்கொ லுரைத்தியென—நன்னியம
மாதவநின் பான்மேவி மைந்தர்ப் பெறவந்தே
னோதுவதீ தென்றா ளுகந்து. (௩)

நின்றனொடு கூடுவனே னீடு தவமெல்லாங்
குன்றிடுமே யென்னநினைக் கூடாதே—யின்றகலேன்
வாட்டமொழி கென்று வலிமையினாற் புல்லியவ
னோட்டவமிர் துண்டா ளுவந்து. (௪)

மைமுகத்தாண் மாமுனியை வன்மையினாற் புல்குதலு
நொய்தினிரு மைந்தருற்றார் நோன்மைமிக்கா—ரைதவரை
யண்ணவருகென்றுதழீஇ யாரவுண ரில்வந்தீர்
மன்னவலி நோற்பீரென் றாள் வாய்ந்து. (௫)

செல்வர்தாந் தாய்தந்தை சீரு நவமெய்திணர்பேர்
வில்வலன்வா தாவியென மேவினராபச—சொல்வண்ண
மாசிலான் றாள்பணிய யன்று னவாப்பாரப்
பேசுகிற்நம் வேட்கையென்றான் பின். (சு)

செய்தவநல் கென்னச் சிறுவ ரவைசாரே
னுய்பொருள்வே றுண்டே லுரைத்திரென—வெய்துசினங்
கொண்டு கயவர் கொலநினைத்தா ரன்னதனைக்
கண்டுமுனி செல்வான் கடிந்து. (எ)

சாருமைந்தர் நீவிர் தவச்சோர்க் கிடர்செய்வீ
ரோரு மலயமுனி யும்முடைய— ருயிரைக்
கொள்க வினியென்னக் கூறிவிஞ்சை யிற்கரந்தான்
னுள்கலைநூ றோர்ந்தமுனி யுற்று. (அ)

தந்தை தனைக்காணார் தாய்பால் விடைகொண்டு
மைந்த ரிருவருமோர் மாவனமுற்—றந்தவரைக்
கொல்வான் மனத்துன்னிக் கோதி லயற்குறித்து
நல்வான் றவம்புரிந்தார் நன்கு. (கூ)

ஆரழலி னேற்று மயன்வந் தருளையுன்னிக்
கூரயில்வாள் கொண்டிளையோற் கொன்றுடலின்—சோரிதசை
நெய்யவியாத் தீயிலன்னோ னீண்மந் திரத்தினுய்த்து
வெய்யவனோர் வேள்விசெய்தான் வேட்டு. (க0)

அதுகண் டயன்வந் தரியசெயல் செய்வா
யெதுநெஞ் சுகந்ததென வோதை—பதமிறைஞ்சி
யேவென்னற் றம்பிவர வேண்டுமென வாதாவி
வாவென்ன வந்தான் மகிழ்ந்து. (கக)

வில்வலனென் பின்னோன் விளிந்தக்கால் யானெழுப்பின்
வல்விரைவி லன்னோன் வரவரமே— நல்கென்ன
வவ்வண்ண மேபலநா ளாக வெனநவின்றான்
செவ்வண்ண மேவலரோன் றேர்ந்து. (கஉ)

போதனருள் செய்திருந்தேன் போகமைந்தர் சூர்முன்போ
யேதமிலுன் மாமருகோர் யாமாகு—மாதலத்தி
னற்றவரைக் கொல்வலிமை நண்ணியதோ தத்தமீது
மற்றவரை வைத்தான் மருங்கு (கங)

அன்னர் சிலவைக லங்கமர்ந்து பின்குடகி
னன்ன ருறுகவலை நண்ணடவி—தன்னிலிக
லாரவுண ராச்சிரம மாற்றியதி லெப்பொருளுங்
கூரவைத்தா ராருமெச்சக் கொண்டு. (கச)

ஆங்கா ரிடராயுற் றருயிர்கொள் வான்கருதித்
தீங்கா ரிளையோன் செழுந்தகரா—யூங்கார
முன்னோன் முனியாய் முனிவராய்ச் செல்வாரைத்
தன்னோ ருறையுளுய்ப்பான் றாழ்ந்து. (கரு)

மூசம னுரைத்து முனிவீர்யா னேற்ற
வசமன் றவத்திய வைட்டீ—ரிசமன்
பயனுற்றே னில்விற் பரிந்தடிசி லுண்டு
நயனுற்றே செல்விரென் றானன்று. (கசு)

வில்வலன்பின் பின்னும் வெறிதுணித்தட் டீனருத்தி
மல்வலவா தாவி வருகென்ன—வல்விரைவிற்
கிழோன் றவர்வயிற்றைக் கீண்டுவா வாண்டவரு
றாழா டயில்வா ருகந்து. (கஎ)

மாமுனிவ ருன்வாய் மடுத்துப் பழமைபோற்
காமுறுநல் லாடாக் கவினமரு—மாமுனியா
வன்னா ரிருவோரு மாங்கமர்ந்து நாடோறுங்
கொன்னூர் செயலினுற்றார் கூர்ந்து. (கஅ)

வில்வலன் வாதாவிபடலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா கூகக.

---

# இந்திரன் கரந்துறை படலம்.

---

இன்னவணங் காரயுண ரோர்முனிவ ரைச்சுரரை
யுன்னுநரர் தம்மை யொறுப்பவிகன்—மன்னவர்ம
னாயிரத்தெட் டண்டமெலா மாங்காங் கணித்தேர்மேற்
போயிறைமை செய்தான் புரிந்து. (க)

பாதலத்து மீதலத்தும் பன்மா நிரத்துமெழிற்
போதன் பதத்தும் புனத்துளவோன்—மேதக்க
வைகுந்த மென்பதத்தும் வைகியங்கங் கோர்பகற்சூர்
வைகுந்தன் மந்திரத்துள் வந்து. (உ)

அவ்வகையா லாளு மடற்சூர் மகவானென்
றெவ்வைச் சிறைபுரிந்து தேவிதனை—யவ்வவுண்ணித்
தானைத் தலைவன் றனைவிளியா வொல்லையும்பர்
கோனைத் தருகென்றான் கூர்ந்து. (ங)

கூற்றனைய வெண்பதெனுங் கோடியரைக் கூய்நீர்மாற்
கேற்றவனை யாட்பற்றி யீமெனச்—சீற்றமுளார்
செல்லவொற்றர் போயிறைக்குச் செப்பமன்னோர் தில்லாளோ
டொல்லையிற் சென்றா னுலகு. (௫)

போயபின்வெஞ் சூர்விட்ட பூவையரும் வீரரும்போய்க்
காயநகர் நாடியெங்குங் காண்கிலார்—மேயசசி
யிந்திரனோ டேகினா னென்செய்து மென்றயர்ந்து
வெந்துயரின் மூழ்கினார் வேர்த்து. (௬)

பன்னருஞ்சீர் வேந்தன் பணிமுடித்தி லேமென்னாத்
துன்னி நகரெங்குந் துருவியவண்—மன்னமரர்ப்
பற்றிமக வானைப் பகர்சசியைக் காட்டென்னக்
குற்றினர் மெய்த் தோருகவே கூர்ந்து. (௭)

வானமர்வார் யாரு மகவானுந் தேவியுமே
போனதுணை ராதுற்றோம் புன்கணென—மானவரை
விட்டு மகேந்திரத்துண் மேவியிறை பாற்றுயரப்
பட்டு நிகழ்ந்தசொற்றார் பாங்கு. (௮)

செப்புவெஞ்சொற் கேட்டிறைவன் றீயின் வெகுண்டரிய
வைப்பிழந்தான் போல மறுக்கமுற்றே—யொப்பதிலா
வொற்றரைக்கூ யொண்டொடியோ டும்பர்கோனுற்றுழிநீ
ருற்றறிதி ரென்றனன்கூ ரோர்ந்து. (௯)

மன்னவர்மன் றாண்டவொற்றர் மாவுலகெ லாந்தேடித்
துன்னினர்காண் கில்லர் துயர்ந்துநிற்கப்—பொன்னகரம்
வானிழந்த மாமதியும் வானுமவும் போற்பொலிவு
தானிழந்த தன்றே தளர்ந்து (௧௦)

உயிரிழந்த மெய்போ லொளிபோய்த் துறக்க
மயர்வுறவு மேந்திரனு மாண்டைப்—பெயர்வுற்று
வைகுண்ட மேவுமக வானைக்காண் பான்போய்ச்சில்
வைகலங்குற் றான்சயந்தன் வாய்ந்து. (௧௧)

சார்ந்த முறுசயந்தன் றந்தையொடு தாய்காந்து
போந்ததுமுன் னாகப் புகலக்கேட்—டாந்துயருற்
றென்னகர மேதமற யான்புரப்ப லென்றுன்னிப்
பொன்னகரம் புக்கான் புரிந்து. (௧௨)

புக்க சயந்தன் புலம்பண் டரைக்கண்டான்
றக்கதந்தை யன்னை தனைக்காணான்—மிக்கதுயர்
மன்னுததி மூழ்கினன்யாழ் வல்லவனங் கண்ணவெழீஇப்
பன்னுதவி சேர்ந்துநின்றான் பாங்கு. (௧௩)

நின்றசயந் தன்வருத்த நீத்துலுஞ்செய் சூர்க்கஞ்சி
யென்றந்தை தாய்செல் லிடந்தெரியேன்—மன்றயரா
மென்றகலு மெனனமுனி யோர்மா மணித்தவிசி
னன்றிருத்திப் பின்னுரைப்பா னன்கு. (கங)

நலன்றீது வந்தெய்தி னுஞ்செய் வினையின்
பலனீ தெனத்துய்ப்பர் பண்பார்—புலன்வென்றோர்
துன்பின்போ டாக்கமின்மை துன்னலையின் மன்னுயிர்க்கு
முன்பின் வருமூழ் முறை. (கச)

ஆதலினுந் தாழ்வு மவுணருயர் வுந்தரியா
வீதுண்மை யாக்கோடி யிங்கசன்றே—யோது
மிருதூரவர் தந்த மொழின்மெய் சாந்து
மருவினர்முந் நீர்மா வரைப்பு (கரு)

அந்நினீ தோற்றமுன்ன ரண்டர்க ளிடுக்கண்செய்
தந்திமுகத் தானவன்றன் சாகவந்நா—ளுந்தை
முயன்றதும்போ லின்று முயல்வான்சூர் மாளும்
வியன்றநசீர் கொள்வாய் விரைந்து (கசு)

நன்றிஃ தெனத்தேற்றி நாரதன்செல் லச்சயந்தன்
முன்றுயர்கொள் வானோர் மனந்தேற்றி—வன்றிறல்கொள்
வெஞ்சூர் பணித்த விதஞ்செய் திடத்தூண்டி
மஞ்சூர் விசும்பிருந்தான் வாழ்ந்து (கஎ)

மூள்புவியிற் சென்மகவாள் மொய்குழலோ டாறு
மன்பெயர்கொள் காழியுற்றிம் மாதலத்திற்—றன்பதியை
யந்தமல ராற்பூசை யாற்றுதுமென் றுன்னியங்கோர்
நந்தவனம் வைக்கலுற்றா னன்கு. (கஅ)

எல்லையுறு வேலி யிலாங்கலிமா சந்தகிலா
வில்லுவமார் கொன்றைகர வீரமௌவன்—முல்லைமரு
வந்தவன மாதி யளவி றருப்புசரா
னந்தவனம் வைத்தா னயந்து. (ககூ)

அந்தவனத் தார்மலர்கொண் டத்தனடி யர்ச்சித்துச்
சுந்தரியுந் தோன்றலுமன் சூழலின்கண்—வெந்துறற்கு
ரோற்றர் துருவவஃ தோர்ந்திறைவி யோடமையா
யுற்றிறைவ னேற்றிருந்தா னாங்கு. (உ0)

வேவினர்கா ணாரகன்றூர் வெய்யவராற் கார்மறுப்ப
மாவனந்தீப் பட்டதுபோல் வாடியது—கோவயர்ந்து
மின்செயலொன் றஞ்சடையார் வித்தகனை யுண்ணினைவா
னுன்செயலொன் றில்லா னுளத்து. (உக)

தெவ்வர் திறலொழிக்குஞ் சேவகனைப் போற்றிடனு
மவ்வனம்வா டிற்றெனினு மங்கொருயா—றெவ்வமற
வெய்துமகத் தேந்தலின்னே யின்னலுறே லென்றொருசொ
லெய்தெழுந்த தந்தரத்தி லார்த்து (௨௨)

காயமொழி கேட்டங் கருத்தனரு ளிஃதென்று
நேயமுறத் தாழ்ந்தேத்தி நெஞ்சமகிழ்ந்—தாயிடையார்
வன்போ டிருந்தான் வளநகரங் குற்றவா
றன்போ டறைவலமர்ந்து. (௨௩)

இந்திரன் காந்துறைபடலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௯௩௫.

# விந்தகிரிப் படலம்.

அந்த வமயத் தானருள்கூர் யாழ்முனிவன்
விந்தமுன்னூற் றுசிசொல வெற்பண்ணல்—வந்தனைசெய்
தெந்தை யிவண்வந்த தென்கொ லெனநவில்வான்
முந்தைமக மேருபெறு மொய்ம்பு. (௧)

ஈசனுள்வில் லாகையா லீசையுறு மோகையாற்
பேசு மலைக்கிறையாம் பெற்றியா—லாசிலண்டர்
வைகையாற் கோனுள் வலம்வரலான் மேருவொளி
செய்கையாற் கொள்ளுஞ் செருக்கு (௨)

மன்னசல மேன்மை மதித்திடுமாப் பெற்றியெலா
முன்னுழையா னெல்லை யுரைக்கவந்தே—னென்னமுனி
செப்புமொழி கேட்டலுந் தேவுருவா யார்வரையுள்
வெப்புமிக நக்கான் வெகுண்டு. (௩)

வல்லாத் தருக்குமுக யாரு மிகழ்வதன்றி
வில்லாக் குனிப்பதுவும் வீறுமோ—நல்லாள்
புரிதவத்தில் வந்தாள் புதல்வியோ கோனுள்
பரிதியெனைச் சூழ்ந்திலரோ பாங்கு. (௪)

தின்பா லமர்வானோர் தாமென்பால் வாழ்ந்திலரோ
மன்பா யரவ மறைத்திடுநாள்—வன்பாருஞ்
சண்ட வளிபறித்துத் தன்றலையுண் மூன்றுதலை
கொண்ட துணர்ந்திலனோ கூர்ந்து. (௫)

ஊங்கொருமா புள்ளாமா லொருவீ ரண்டமெலா
மோங்குருக்கொள் ஞான்றே ருமைபால்போ—லாங்குளப்புண்
மன்னியதுந் தன்சிறைகொள் வன்மருத்தான் மின்மினிபோற்
றுன்னியது மோர்ந்திலனோ சூழ்ந்து. (௬)

மின்று விகழ்ந்துரையா யானங் ககத்தகங்கை
பன்று ரதவொழிப்பல் பார்க்கவென—முன்று
முருவிகந்து விஞ்சையினு லும்பர் பதம்போய்
மருவிநின்ற தம்மா வரை (௭)

மேக்குயர்ந்தான் றவ்விந்த மேயவின னிந்துக்கோள்
போக்குவா வின்றயர்ந்து புன்கண் ணுற்றே—யாக்கமிகல்
கூர்தருவர் வல்லரக்கர் கூறயன்மா லண்டரிவ
ரார்செயலோ வீதென்பா ராங்கு (௮)

யாதிதுவென் றெம்பெருமா னின்னருளா னுடியுணர்ந்
தீதுவிந்த மேருவிக லேய்ந்ததென்றூர்ந்—தாதரவின்
மன்னகத்தி னேற்றிருந்த வாரியினீ ருண்டவனை
யுன்னகத்திற் கொண்டுரைப்பா ருற்று (௯)

விந்தகிரிப்படலம் முற்றிற்று.

ஆகூ திருவெண்பா ௩௱௯.

---

# அகத்தியப் படலம்.

---

அந்நாட் கராப்பற்று மாம்பல் விளிப்பவரி
முன்னாகிக் காத்ததுஞ்சீர் முண்டகனல்—கின்னரி
மேன்மயலாய்த் தத்தையாய் மேவவா காத்தியென
வான்முதலோ னுண்டதுமோர் வாய். (௧)

வித்து பிருகுதன் னில்லைத் தடிந்தவெல்லை
மாத்தலத்தெண் ணில்பிறவி மன்னுமென— வாத்த
வருமொன் றரிநோற்க வையன்பத் தாக
வருளினது மாங்கறிவா யன்று. (௨)

கருங்கடலை நீயோர் கரத்தி லடக்கி
யொருங்கவுணன் றன்னிலைகாட் டுன்றன்—பெருங்கருணை
யிவ்வுலகன் றெந்தா யிமையோ ருலசன்றே
யெவ்வுலகுஞ் சொண்ட தினிது (௩)

நாரதனார் சூழ்ச்சியினா னாகமற்ற மேருவுற்ற
சீரதனாற் கொள்ளிகலிற் சேணிவந்து—கூரொளக்குஞ்
சென்மா நெறிமறைத்துத் தேயம் பொழுதுணரா
துன்மாறு காண்கிலையோ வுறறு. (ச)

அன்ன தினித் தீங்ககல வையவராய் வேண்டுமென
வுன்னவிறை வெற்பினிலாற் றெண்டவத்தோன்—றன்னுளத்தின்
மேக்குயரும் விந்தத்தின வீறுமிமை யோர்குறையு
நீக்குவா னூக்கினா னோர்ந்து (ரு)

உள்ள முருக வுரோமம் பொடிப்பவிழி
வெள்ளம் பெருகவங்கை மேற்குவியா—வள்ளறனைச்
சிந்திக்கச் சேவேறித் தேவர் பிரான்பூதர்
வந்திக்க வந்தான் மகிழ்ந்து (சு)

ஆத்த னுறவெழீஇ யச்சமொடு கும்பமுனி
பூத்தடங்கு கொம்போடு பூமியிற்றாழ்ந்—தேத்த
விரும்பியதி யாது விளம்புதியா லென்று
னரும்பியபுன் மூர லரன். (எ)

விந்தவரை மேருவரை மேன்மாறு கொண்டுவிண்ணி
னந்த மறவடைத்த தன்னதனே—னந்தவென்கண்
வண்மை சிறிது வழங்குகென முத்தமிழ்தேர்
தன்மையுளான் சாற்றினான் தாழ்ந்து. (அ)

அவ்வா றுனக்கே யளித்தோமா விந்தத்தை
யிவ்வா றுலகிலிரா தேவீட்டி—யொவ்வாச்சீர்த்
தென்றிசையிற் சென்று திகழ்பொதியில் வைகென்றான்
மன்றனறுங் கொன்றையந்தார் மன். (கூ)

என்றலுந்தாழ்ந் தேத்தி யிறைவநின்றன் பூசைசெயத்
தென்றிசைக்கோர் தீம்புனலார் தீர்த்தமொன்று—நன்றுநல்க
வென்னவிறை யோர்கயிலை யில்வைகு மேழ்நதியுட்
பொன்னியையுட் கொண்டான் புரிந்து. (க0)

அன்னதுணர்ந் தஞ்சி யனையபொன்னி தாள்வணங்க
மன்னிறைவ னோக்கியிம் மாமுனிவன்—றன்னொடுநீ
போதியா லென்றான் புகன்முனிபின் யான்போத
னீதியா வென்றா ணினைந்து. (கக)

தூய மனத்தன் றுகளில் குணத்தனன்ப
ராயவ ருட்சிறந்தோ னன்னவன்பி—னேயமொடு
செல்கென்றான் றீதிலன்பின் செல்வனவற் றீர்வதென்று
சொல்கென்றாள் பொன்னி தொழுது. (கஉ)

ஆயிழைநின் காரணத்தென் றம்முனிகை காட்டவனன்
றேயவன்பா னீங்கிநிலத் தின்பால—தாயகன்று
வைகு கெனவதற்கு மன்னதியுந் தன்னகத்தி
லுய்குவா னேய்ந்த துவந்து. (௧௬)

கூறு குடிஞையைநின் குண்டிகையிற் கோடியெனத்
தேறுவா னவ்வாறு செய்தலுமே—பாறுபுலன்
சிந்து மகத்தியதென் றேயஞ்செல் கென்னவிடை
தந்து மறைந்தகன்றான் சம்பு. (௧௭)

அத்த னவனொருவ னம்மா தவனீங்கிப்
புத்திரனை வேண்டிப் புகழ்லோபா—மித்திரையை
மனறல் வினைமுடித்து மன்மகனைப் பெற்றமுனி
தென்றிசையாய்ச் சென்றான் செறிந்து. (௧௮)

அகத்தியப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௩௯௦

---

# கிரவுஞ்சப் படலம்.

---

பொன்வரையி னின்றதென்பாற் போதமுனி செல்லுமெல்லை
வன்மைபெற சீயமுக மாவவுணன்—பின்வந்தோன்
மாயநகர் வந்துறவம் மாறிறையன் றிற்பெயரோன்
மேயதன்மை கண்டான் விரைந்து. (௧)

ஒன்றுமுள யோகியர்க்கு முன்னரிய மாயையினான்
மன்றிரைநீர் வன்னிநிலன் வானனுவெற்—பென்றுமதி
யொன்றினையொன் றாக்கு முறநெடுநா ளன்னிலவன்
வன்றிறலார் சொல்வர் வகுத்து. (௨)

அன்னதிறற் றானவர்கோ னேயகிர வுஞ்சனென்பான்
றென்னற் றமிழ்முனிவன் சென்னெறியைப்—பன்னுவிந்த
மென்னமல்கி வெற்புருக்கொண் டேகும் வழிபோக்கி
முன்னமர்தல் கண்டான் முனி. (௩)

அம்மா லசலநடு வாகவோ ரத்தமுறச்
செம்மா நெறியெனவே செல்லமுனி—வெம்மா
னெறியறமுன் போந்த நெறிசெலலு மஃது
மறிவரிதாய்க் கண்டனன்வே றாறு (௪)

அந்தநெறி போம்போ தனலூருமு மாரிமழை
சிந்தவிருள் சூழையுறச் செய்தனன்மால்—வந்தமுனி
யின்னவைதாம் வஞ்சமென்றோர்ந் தெண்ணரிய வூழ்வலியை
யுன்னிநக்கான் கைபுடைப்பி னூற்று. (ரு)

ஈங்கவுணன் கொல்லா மிவன்வலியா னீப்பலெனு
வோங்கலுரு விற்குற்றி யோதமுண்டோன்—றாங்குதண்டாற்
பூழைசெய்து வெய்யோய் புகலுருபபோய் வெற்பாகிச்
சூழெழவர்க்குந் தீங்கிழைத்தி சூழ்ந்து. (சு)

வென்றண்டான் மன்புழைகண் மாயைக் கிருப்பாக
வென்றிதரு வேளாயிலா ல வீகுதி—யென்றறைந்து
தன்கரக நீர்மந் தணத்திறைத்து மாயைத்
துன்முனிதென் பாற்சென்று னுற்று. (எ)

கிரவுஞ்சப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா சுசுஎ.

# விந்தப்பிலம்புகு படலம்.

அன்ன தருவர்கோ னன்றுமுதல் வெற்பாகி
னென்னலின்மு னொள்வரையி னின்றனனவ்—வொன்னலலைக்
கூடருளின் மிக்க குணகுன்றே நீயன்றி
யாரடுதல் செய்கிற்பா ராகுக. (க)

தண்ணசல நீங்கியும்பர் சாரசலச் சாரெய்திக
கண்ணகன்மா ஞாலஞ்சூழ் காசிபுக்கங்—கண்ணகில
நாயகன்றா டாழ்ந்தகன்று நன்முனிபா லேகிவிந்த
மேயதன்மை கண்டான் வியந்து. (உ)

மீயார் வியன்பதந்தோய் விந்தங்கேண் மோபொதியிற்
போயாங் கிருக்கமுன்னிப் போந்தனம்யா—நீயா
றினிது சிறிதளித்தி யென்றான் முனைநாட்
பனிதருநீ ருண்டான் பரிந்து. (ங)

செங்கதிரும் வெண்கதிருஞ் செல்லுநெறி போக்கிவிண்ணின்
மங்குனிற மால்போல் வளர்ந்துநின்றே—னிங்கெனது
தோற்றமரி யாய்குறியாய் தொன்னெறிநல் கேனென்று
சாற்றியது வெம்பூ தரம். (ச)

அதுகேட் டுஞ்சினங்கொண் டத்தனற்றா ளுன்னிப்
பதுமன் பதங்காறும் பாணி—துதைதரவே
நீட்டிவிந்த மேல்வைத்து நீளனந்த னூர்பிலத்தில்
வீட்டினனே மாதவத்தோர் வேந்து. (௫)

புரையார் பிழையைப் பொறுத்தியெள்ள லுள்ளேல்
கரையார் முனிவரனே காவாய்—வரையா
முருவதென்று கொள்வதென வோங்கல்யா மீண்டு
வருவதென்றன் றென்றான் வரன்.  (௬)

மாதலத்தில் விந்த மறையவெழி னீள்கரத்தை
மாதலத்தி னின்றெடுக்க விண்ணவர்பூந்—தாதலர் தூய்
வந்தனைசெய் தேத்த மலயஞ் செலவுளத்திற்
சிந்தனைசெய் தான்முனிவன் றேர்ந்து. (௭)

அன்றருண னுதியா மண்ட ரகத்தியன்பாற்
சென்றிறைஞ்சி யேத்தியெந்தாய் செய்தவிந்த—நன்றியெவா
செய்வார்வின் ணுறுபெற்றோந் தென்மலையி னீயாங்க
ணுய்வா னிருத்தியென்றா ருற்று. (௮)

என்னநல்ல தென்ன விசைந்தண் டரைவிசும்பிற்
றன்னவுய்த்துத் தென்றேயஞ் சூழ்ந்துசெல—மன்னசல
மீயுயர்மேற் றேயமுறம் வில்வலன்வா தாவியுயிர்
மாயமுனி வற்கண்டார் வந்து. (௯)

விந்தம்பிலம்புகு படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௬௭௬.

---

# வில்வலன்வாதாவிவதைப்படலம்

---

வில்வலன்வா தாவிகண்டு வெந்தருவ ராருயிரைக்
கொல்வலன்கொண் டோனிவனே கொல்லற்கு—நல்விருந்து
ணூணருத்தி யாவியொடு முண்குதுமென் றுன்னியே
வீணருத்தி யுற்றார் விழைந்து. (௧)

தன்பின்வா தாவி தகரா யுலவமுன்னோ
னன்பி னருட்படிவ மாமுனியாய்—வன்பினுறு
வஞ்ச மனத்தினனாய் மாமுனிவற் போற்றியெதி
ரஞ்சலிசெய் தோதுவா னிங்கு. (௨)

அடிகளிங்குப் போத வரியதவஞ் செய்தேன்
முடியவந்தீர் யானு முனியாம்—வடிவுற்றேன்
றீய னுறையுளிதிற் செல்குதிர் தூய் தாம்வணமென்
றுயபின்னுந் தாழ்ந்தா னவன். (௩)

தாழ்தலுமா தூய தமிழ்முனிவெய் யோன்காவு
சூழ்தலுணா ராதுவகை தோன்றவே—வீழ்தவத்தின்
மிக்கோ யெழுதியென் றுன் மேவிருக்கை கொல்லுதுமெத்
திக்கோ வருகவென் றான் றேர்ந்து. (௪)

ஈதென் னிருக்கையாம் யானுமெம்ம னோருமுய்ய
மாதவநீ யின்றிருந்து வாய்ந்தபுற்கை—யாதரவி
னுண்டகல்கென் றோர்பீடத் தும்ப ரிருத்தியன்னான்
முண்டகத்தாள் வீழ்ந்தான் முறை. (௫)

வில்வலள்சொற் கேளா வியந்துபுரி வின்மிக்கோ
யொல்வதோ ருண்டிநின்பா லுண்டுபின்னர்ச்—செல்வமென
வாலமன்னான் றாழ்ந்தீங் கனைக்கணரீ தாழ்த்தியெனச்
சீலமொடு செய்வனடி சில். (௬)

பூமயநீர் தோய்ந்து புனிதனா யட்டிலண்மிக்
கோமயத்தாற் பூசிவண்ணக் கோலமிட்டங்—காமனைத்துந்
தேடிவேந் தண்டிலத்தைத் தேசுறமுக் கால்கழீஇச்
சாடிவே றொன்றினுய்த்தான் றான். (௭)

தேக்கிலா ரங்கொளீஇத தியார் கருவிமேல்
வாக்குலைப்பெய் தேற்றியுயர் வாலரியு—ளாக்கிப்
பதங்கொண்டே னாக்கிப் பயறடிசி லட்டு
விதங்கொள் கறியமைத்தான் வேறு. (௮)

ஆடா மிளையவனை யம்முனிமுன் னுய்த்தீர்ந்து
கூடா தனவகற்றிக் குட்டமிட்டுப்—பீடாரு
மூனசும்பிற் பெய்துமண்ணி யுண்கறிக்கு வேண்டுவர்முன்
னானவெலா மிட்டட்டா னாங்கு. (௯)

அலைப்புண் கறித்தூடே யாநறுநெய் பெய்து
பொரிப்பபொரித் தாவியுறப் போற்றி—விரைப்பொடியுங்
காயமொடு கூட்டிக் கமழ்தருகுய் காதமுற
வாயசில பாகுசெய்தா னாங்கு. (௧௦)

முன்னளிக்க நின்ற முதிரைப் புழுக்கலட்டுக்
கன்னற் புளிங்கறியுங் கீழுறச்செய்—தன்னதற்பின்
றீங்கனியின் சாறோடு தேன்விரவு மாமலர்க
ளாங்கமைத்தான் பூசனைக்கா மாறு. (௧௧)

ஆலை வகையுணவு மாற சுவைபடவே
யோரிமைப்பி லேயமைத்தாங் கொல்லையிற்போய்—பூரணற்றுழ்ந்
தெந்தை பசியிறுந்தை யின்னமுதுட் டீடனயில்வான்
வந்தருள்க வென்றான் மகிழ்ந்து. (௧௨)

அடுசாலைக் கண்ணகத்தி யற்கொடுபோ யங்க
ணிடுபீ டிகையி லருத்தி—நெடுமுகமன்
கூறிவிளை நீர்மலர்கள் கூர்புகைதீ பங்கொடுணமை
மாறியலிற் பூசைசெய்தான் வாய்ந்து. (௧௩)

செம்பொனவிர் தட்டை திருமுன்னர் வைத்துவளம்
பம்பரிசை யாத்திருத்திப் பன்னரிய—கும்பமுனி
யுள்ள முவப்புறப்பல் லுண்டிவகை நல்கிநெய்மேல்
கொள்ளவிட்டான் வஞ்சங் குறித்து. (௧௪)

முறையா முதற்கண் முதிரைப் புழுக்கல்
கறையார் கறிகள் கலத்தி—னிறையா
மதுர முறுவனவு மல்கவைத்துச் செய்யோன்
முதிர்காத்து ணீர்பெய்தான் முன். (௧௫)

தெண்டிரைநீ ருள்ளடங்குஞ் செங்கைநீர் தன்னைவளா
வுண்டிவகை மேற்சுற்றி யோர்தரமுட்—கொண்டமுத
மன்னவுண வாதி யனையா னருத்தளவு
மன்னநனி யுண்டான் வரன். (௧௬)

கும்பனை யானீர் கொணர்ந்துய்ப்ப வுவந்தெழுவா
னம்பொடிகொண் டங்கை யலர்நீவி—வம்பறலான்
மண்ணிநீர் கொண்டுமிழ்ந்து வாய்பூ சறுத்தங்கோர்
நண்ணிடத்தில் வீற்றிருந்தா னன்கு. (௧௭)

விதியின் வரமுன்னி விலவலன்மாய் வுன்னி
மதியின் மிகுந்தோன் வயிற்றில்—வதிபவனை
வாதாவி யெம்பிநீ வாதாவி யென்னவஞ்ச
வாதாவி மாய்பவன்சொல் வான். (௧௮)

எண்ணுதென் னூனயின்றோ னேரகடு கீண்டின்னே
யண்ணு வருவலென வார்ப்பமுனி—விண்ணாரும்
விந்த மடக்குமர் விந்தவங்கை யாற்றடவ
வந்த மடைந்தா னவன். (௧௯)

வெய்யவன்முன் னேன்வெகுண்டு வேறுருக்கொண் டோர்தண்டங்
கையதனி லேந்திவருங் காற்றருப்பை—யையவொன்றை
யீசன் படையாக வேவ வவனொழிந்தா
னூசின் முனியகன்றா னங்கு. (௨௦)

வில்வலன்வாதாவிவதைப்படலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௬௯௬.

# காவிரி நீங்கு படலம்.

---

கரதலத்திற் றூங்குங் கரகநீ ரோடும்
வரமுனிவன் கொங்கின் வழிப்போ—தரவழுங்கம்
மைந்த ரிருவோரும் மாதவர்போற் றீரமுடன்
வந்தணுகி னார்நேர் வலிந்து. (க)

சென்று மறைந்துநின் றுஞ் சேணுற்றுஞ் சூழ்பவர்தந்
துன்றுசெய லோக்கிமுனி துன்னவரைக்—கொன்று
மவத்தோர் நமைக்கருதி யண்மிவந்தார் சீர்மா
தவத்தோன் மகரா தலால் (உ)

அன்னார் பிரமகத்தி யங்கடையக் கொங்கருகின்
மின்னறவோ னோகத்தில் வீற்றிருந்து—துன்னியநோய்
தீர்வுறுவா னங்கோர் சிவலிங்கந் தாபித்தன்
பார்வுறவர்ச் சித்தா னமர்ந்து. (௩)

தூய்வன்றன் பூசனையாற் சூழ்ந்த பிரமகத்தி
போயதன்ன போதுதமிழ்ப் போதமுனி—மேயசெயன்
முன்னியுயர் யாழ்தேர் முனிவ னமரர்கோன்
மன்னுறைபு ளெய்தினன் வந்து. (௪)

உமையாண் மகிழ்ந ளொளிர்மலர்த்தா ளுன்னி
யமையா யிருந்துதவ மாற்று—மிமையார்தங்
காவலன்சென் றாதனைக் கண்டுகழ லாழவன்றான்
கோவெழுக வென்றனனார் கூர்ந்து (௫)

மன்னன் றனையெடுத்து மார்ப முறத்தழீஇத்
துன்னுமிவட் சார்தியெனச் சுந்தரிகே—ளுன்னித்
தொழுதகையா னும்முனிவர் தொன்றலிது காறுன்
கெழுதகையா னுய்ந்தேன் கிளர்ந்து. (௬)

மாசின் மகரயாழ் வாசிப்ப தில்வல்லே
யீசன் றனையருச்சித் தேத்தவே—வாச
நறையுளதென் றுல்வகைய நாண்மலர்க ணண்ணுக்
குறையுளதொன் றென்றனன்விண் கோ. (௭)

மன்னவநின் னூராசு மற்றுளவு மெண்குணத்தோன்
றன்னருளாற் கிட்டுக் தளவோனீ—யுன்னவன்றன்
பூசைக்கூ றுள்ளதென்றாய் போகுமதன் பெற்றிசொல்வ
னசைக்கோ கேட்டி யமர்ந்து. (அ)

தென்றலையே ராகச் சிவன்முனியை யேவியதூஉந்
துன்றுவரை தாழ்த்ததூஉவுஞ் சூர்மருகர்க் — கொன்றதூஉங்
கொன்னார் பழிக்கிலிங்கங் கொங்கிற்றா பித்ததூஉஞ்
சொன்னான் முனிவன் றொகுத்து. (௯)

பின்னுமொரு செய்கையுண்டு பேசருஞ்சீர்க் கொங்குதனின்
முன்னவனை யர்ச்சித்து மூதறிஞன் — மன்னுகின்றான்
பண்டுவரி யுண்டவனான் பாலேகிக் குண்டிகைநீர்
கொண்டுவரிற் றீருங் குறை. (௧0)

நாரதன்சொற் கேளா நவின்முனிவர் கோன்காக
நீர திங்கெவ் வாறு நிகழ்த்துகெனப் — பேரமுத
வேழ முகற்கருத்தி வேண்டினந்த நீர்கவிழ்க்கும்
வாழரசே யென்றான் வரன் (௧௧)

மற்றவன்றன் கூற்றுணர்ந்து மன்னரசு சூரினின்று
பெற்றதுபோ லிந்திரனும் பேருவகை — யுற்றறவோ
னுய்ந்தே னுனதருளா லும்பன் முகமுடைய
வந்தேவை யர்ச்சிப்பே னாங்கு. (௧௨)

என்றலுமவ் வாறே யியற்றுகியென் றிந்திரனை
மன்றலத்தில் வையா மறைமுனிவன் — சென்றனன்ம
னீசை யளித்த விபமுகனைத் தாபித்துப்
பூசை புரிந்தான் புரிந்து. (௧௩)

புண்ணியமே யாய புகர்முகற்குத் தேங்கனிகள்
பண்ணியமே யாதி பலவகையு — நண்ணியநி
வேதித்து வேண்ட விமலன் வெளிப்பட்டா
னாதித் திருவுருவி னாங்கு. (௧௪)

உன்னத் திருவுருக்கண் டும்பர்கோ மான்வெருவ
மன்னனீ யஞ்சேன் மனத்துற்ற — தென்னவென
வுய்ந்தனனென் றெங்கோ னுகளமலர்த் தாளிறைஞ்சி
யிந்திரன்றான் சொல்வா னெடுத்து. (௧௫)

நந்தவன நம்பனுக்கு நன்குவைத்தே னாமின்றிச்
செந்தழறான் பட்டதுபோற் றீந்ததெனத் — தந்திமுகன்
முந்நீரோ கங்கையோ மூவுலகத் தொண்ணீரோ
வெந்நீர்நீ வேட்டதென்றா னீங்கு. (௧௬)

முந்தைமறை தேர்ந்தறியா மூலாதா ரப்பொருளே
சிந்தைதனக் கெட்டாச் சிவன்மதலா — யெந்தையே
கொங்கிலமர் கும்பமுனி குண்டிகைநீர் நீகவிழ்க்கி
னிங்குவரு மென்றா னினிது. (௧௭)

எண்டிகையா ரேத்துகொங்கி லீசனையர்ச் சித்தொழுகுங்
கண்டிகையார் கண்டக் கலயமுனி—குண்டிகைமேற்
காக்கையைந்து பெற்றவன்வான் காக்கையிறை வேண்டவொரு
காக்கையுரு வாயமர்ந்தான் காண். (௧௮)

கொங்கமரு மாமுனிபாற் குண்டிகைமேற் பொன்னியரன்
றங்கருளின் வந்ததன்மை சார்புணர்ப்போர்க்—கைங்கரனோர்
வாயசமாய் மேவமுனி மன்னவனென் றோராமே
யேயொருபுள் ளென்றுகண்டா னேய்ந்து. (௧௯)

பமண்டலத்தின் மீதெழுகும் பன்கரமோச சப்புள்
கமண்டலத்தி னீரைக் கவிழ்த்த—தமண்டலத்தில்
வாரா றிழிந்தவான் மானவத னுட்பொன்னி
வாறா றொழுகியது வந்து. (௨௦)

பேருதலுஞ் சத்திமைந்தன் பிள்ளையுரு வத்தணைந்து
தேருமறைப் பாலகன்போற் செல்லமுனி—கூருமுனி
வெய்தியிவன் யாரோ விவன்வலிமை காண்பமென
வைதிர்ப்பின் சென்றா னடுத்து. (௨௧)

குட்டுவான் பின்படருங் கும்பமுனிக் கண்மையனாய்க்
கிட்டுவா னாசையெட்டுங் கேசமொடு—முட்டுவா
னன்னவன்செய் மாய மறிந்தினைய வஃதுணர்ந்து
தன்னுருவங் காட்டினான் றான். (௨௨)

ஆனைமுக னாவிங் கடைந்தனனந் தோகெட்டே
னேனையரென் றெண்ணி யிதுபுரிந்தேன்—யானினியென்
செய்வலென நெற்றியிற்றன் செங்கரத்தாற் றாக்கினான்
னுய்வ துணர்முனிவ னோர்ந்து. (௨௩)

ஐங்கரனப் போதருளி னம்முனியை நோக்கியன்ப
விங்குன் செயலெ னியம்பென்னத்—துங்கமறைச்
சேயென் றிதுசெய்யச் சிந்தைசெய்தேன் றீர்வதற்கு
மேயமுன்செய் கின்றனனா னிங்கு. (௨௪)

என்னநகைத் தின்னறவி ரென்னமுனி யன்னவன்றன்
பொன்னடியிற் றாழ்ந்தவன்சீர் போற்றியே—மன்னுள்
றிறமுணரேன் செய்தபிழை சிந்தைகொளே றீமை
யறவருடி யென்றா னடுத்து. (௨௫)

அந்தரத்தர் கோனெந்தை யர்ச்சனைக்கோர் நந்தவனஞ்
சந்தமுற வைத்தான் சலிலமின்றி—வெந்தவனம்
போற்கிடப்ப நீர்வேண்டிப் போற்றவெவை யாங்காக
மேற்கொடிபோ லாய்க்கவிழ்த்தோம் வேட்டு. (௨௬)

ஈங்கதனையேக வியம்பினஞ் செய்தவருந்
தீங்கதனை யெட்டுணையுஞ் சிந்தைகொளே—லோங்கறியா
தாற்று செயலெமக்கோ ராடலெனக் காண்டிமுனக்
கேற்றவரங் கேளென்றா னீண்டு. (௨௭)

நின்பாலு மின்பாலார் நின்மலன்பா லுந்தமியே
னன்பார் தரவளித்தே யையநின்றன்—முன்பாக
வென்போ னுதலி லிருகையாற் றாக்குநர்க்குந்
துன்போவச செய்தியென்றான் சூழ்ந்து. (௨௮)

அன்ன பரிசே யருளினா யன்னமுனக்
கென்னவரம் வேண்டு மிசைதியெனத்—தென்னசலன்
வள்ளலீ சாயத்தீர் மாலருந்தி லோடியே
யெள்ளளவுந் தங்கியில திங்கு. (௨௯)

ஐயவந்நீர் போல்வேற் றறலுளதோ நாமேயற்குத்
துய்யநன்னீர் நல்கென்னத் தும்பிமுகன்—கையதனாற்
போகும் புதிய புனலிற் சிறிதள்ளி
மாகுண் டிகையிலுய்த்தான் மற்று. (௩௦)

கைம்மா முகத்தோன் கமண்டலத்தி லுய்த்திடலும்
பைம்மா வறனிரம்பிப் பார்மேய—தம்மாவி
தென்னற் புதமஃதி யார்க்கமையு மென்றுனினான்
முன்னற் பொதியார் முனி (௩௧)

என்றுநினைத் தோம்ப னேரடிக டாழ்ந்துகுறை
யொன்றுமிலை னாறு மொழுகியது—நன்றருளா
லுய்ந்தனனா னின்னொருக்கா லுன்னையன்பினு னுன்னுழிநீ
வந்தருள்க வென்றான் வரன். (௩௨)

அன்னவா றாகவென வாரருள்செய் தானைமுகன்
றன்னவாந் தானையொடுந் தான்மறைந்தான்—மின்னவாஞ்
செஞ்சடையான் சிந்தனைச சிந்தித்துச் சிந்தைமகிழ்
தஞ்சடையான் கொங்ககன்றா னாங்கு. (௩௩)

காவிரிநீங்குபடலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௭௨௯.

# திருக்குற்றாலப் படலம்.

---

சிற்றால வித்திற் சிறுத்தோங்கு மெய்த்தவத்தோன்
பற்றால முண்ட பரற்போற்றி—முற்றால
நற்றால முண்டளந்த நாரணமால் வைகுமெழிற்
குற்றால மேவினனன் கு. (க)

அந்தப் பதியின்க ணச்சுதற்கோர் முற்றமுள
தெந்தப் பதியினுமஃ தேற்றமென்பர்—கந்தமுறு
செம்மறைநூன் மெய்ப்பொருளைத் தேர்ந்துமகத் தீவினையார்
தம்மதமேற் கொண்டுள்ளார் தாம். (உ)

அன்னவரெங் கோமா னடியார் தமைக்காணின்
முன்னலர்போ லெள்ளி முகநோக்கார்—துன்னெறிய
ரந்தணரென் பேர்க்கியைந்த வங்கமிலா ரங்கிருந்தார்
செந்தமிழ்வேந் தஃதுணர்ந்தான் றேர்ந்து. (௩)

மூத்தமிழோன் குற்றால மூதூர் மறுகாக
நத்தனம ராலயமுன் னண்ணுகையி—லத்தலமன்
வைணவர்கள் கண்டழுங்கி மாற்றலரைப் போற்கருதி
வெய்துயிர்த்துச் சொல்வார் வெகுண்டு. (௪)

வெய்யதா நீறுமணி மெய்யணிந்தா யாருமெள்ள
வைய மெடுத்தாற் கடியவனீ—கையதிலோர்
கோலாங் தரங்கொண்டோய் கோமா னகாணுகற்
கேலா தகல்கென்று ரீங்கு. (௫)

என்னநகை செயதுமறை யின்று திகழ்ந்துநின்றார்
துன்னியிங்கு மேவுந் தொடர்புணரே—னன்னெறியென்
றுன்னிவந்தே னும்பான்மை யோர்வேனே ஞனிவ்வூர்
தன்னிலுறேன் செல்வனென்றான் றான். (௬)

பொதியமுனி யீது புகலப் போறுதிப்
பதியில் வருவதூஉம் பாவ—மிதியனீ
மீண்டே குதியென்றார் மேலோர் முறையமிதென்
றூண்டே யகன்றுசெல்வா னுங்கு. (௭)

நந்தியெங்கோன் மாமலரோ னற்றருவா சன்பிருகு
கந்தமுறு கௌதமன்சீர்க் கண்ணுவனோ—டந்தநிசி
யின்றோ றிடுசாப மெல்லாம்பொய் யாமோவென்
றன்றோ னினைந்துசெல்வா னுங்கு. (அ)

ஏகி முனிவ னிறையோன் றனையிகழ்வார்
மோகமுறு மந்தை முதலோடும்—போகமுன்னிப்
பன்னரிய மாலையினுற் பாகவத மாகுவதோர்
நன்னருக் கொண்டா னயந்து. (௯)

நாயகன்பா லன்புடையா னத்தனடிய வன்போன்
மாயமுறு மேனிகொடு மன்னவங்கு—நேயமொடு
வைணவர்க ணோர்போய் வழுத்தியந்தாள் வீழ்ந்திடலு
மைவணத்தாற் காகவென்றான் மற்று. (௧௦)

தாளாரத் தாழுந் தணர்தம்மை நோக்கியன்பு
கோளாழி யான்கணனி கொண்டிரெனக்—கேளா
வதுகாண்பா னுள்ளிவந்தா மாருமக்கு நேர்வார்
கதுவறிவுற் றானம்மைக் கண்டு. (௧௧)

மூத்திதரு பேரழகர் மொய்வரையி லுற்றேமு
னத்தி கிரியுறச்செல் வாநின்றோ—மித்தலத்தார்
நம்பெருமான் கோயிறொழ நச்சிவந்தோ மென்னவன்றே
ரம்பகவன் வாழ்வதென்றா ராங்கு. (௧௨)

காரவணன்வாழ் வஃதென்னக் காட்டிடலுங் கைதொழுது
சார்வலஞ்செய் தச்சுதன்றா டாழ்ந்தேத்தி—யோர்வி
லுணர்வினரை நோக்கி யுவகையருச் சிப்பான்
கொணர்மினென்றான் வேண்டுவன கூர்ந்து. (௧௩)

தூய திருமஞ்சனமுந் தூமலருஞ் செஞ்சாந்து
மேயு மணித்துகிலு மேனையவு—மேயசிலர்
கொண்டுமுனி முன்னுய்ப்பக் கூர்ந்திவரை யர்ச்சிப்பேன்
கண்டிருமி னென்றான் களித்து (௧௪)

அறுகு மதிபுனையு மண்ணலையுட் கொண்டே
யுறுகும்பன் மான்முடிகை யொச்சிக்—குறுகுகுறு
கென்றிருத்தித் தீயரக்கி னெய்து திறங்குழைவித்
தொன்றுசிவ மாக்கினு னோர்ந்து. (௧௫)

பங்கயன்மால் காணரிய பண்ணவனைத் தாபித்துத்
துங்கமனுக் கொண்டோதிச் சூழ்முனிதொல்—லங்கமுற்றுச்
சந்தமலர் தூய்தாக்கிச் சம்புவையர்ச் சிப்பக்கண்
டந்தணர்கள் சேர்ந்துரைப்பா ராங்கு (௧௬)

தேக மிகச்சிறியன் றீவணற்கன் பன்னிவன்முன்
னுகவந்தா னுமிகழ்ந்தோ மாயத்தான்—பாகவத
மாவிப்படிவமுற்றான் மான்மதத்தைத் தானொழித்தான்
மேவிப் பிடிமினென்றார் வீழ்ந்து. (௧௭)

பற்றகன்றான் றன்னவனை பாதகரை நோக்கிவிட
முற்றதெனச் சிற்றத்தீ யுய்த்திடலு—மற்றவர்தாம்
வெந்துமன நொந்தயர்ந்து மேவப் பதிபிகந்து
சிந்தினர்பார் மேலெங்குந் தேர்ந்து. (௧௮)

இன்றமுத வீசனிட மீதாயிற் றென்றுமணி
மன்றகனை யர்ச்சித்து மன்விடைகொண்—டொன்றருவி
தாய்வீழ் மலயத் தனிவரையின் மாமுனிவன்
போய்வீற் றிருந்தான் புரிந்து (௧௯)

திருக்குற்றாலப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௯௪௪.

---

# இந்திரனருச்சனைப் படலம்.

---

மன்னிந் திரன்வேண்ட மாமுகவ ஞேர்கொடியாய்த்
தன்னிகர்கும் பன்கரகஞ் சாய்த்தலுமப்—பொன்னிதான்
மாதவன்முன் வேண்டவிடு மந்தா கினியெனப்பேர்ந்
தோதவனி மேற்படர்ந்த துற்று. (௧)

மன்கலையத் துற்றுவந்து மாவரையா டாழ்த்திறங்கித்
தென்கலையு மோதியலை தேக்குண்டு—நன்குற்
றிகத்தியனுன் மாநிலம்வா னேத்தவரு நீரா
லகத்தியனர் போன்றொழுகு மாறு. (௨)

பன்னாட் சிறையிருந்தான் பல்வகையூண் வேட்பதுபோற்
பொன்னூர் கடத்துவந்த பொன்னிமலை—நன்னூரி
பாறயிர்செய் கன்னல் பருகிமணி பூமிலைந்து
வீறுகொடு சென்றதுமண் மேல். (௩)

மேல்கடன்மாக் கீழ்கடலை வேவிடச்சென் றங்குமுனி
சால்கடனீ ரோடித் தரணியின்கண்—மால்கடன்மா
வீர்த்துத் தருக்க ளிறமுரித்து வேரோடும்
பேர்த்துக் கொடுபோம் பெரிது. (௪)

வேந்தனருச் சிப்பான்கா வேரிமலர் மான்மதஞ்செஞ்
சாந்தகிலா னைந்துகனி தண்ணறவந்—தீந்தடிமுன்
ஞானவெலாங் கொண்டுவந்துய்த் தார்த்தந் திரைக்கையினங்
கோனழைப்பச் செல்லுமன்பு கூர்ந்து. (௫)

மன்கயிலா யத்திருந்து மாபதிகூய் நல்கமுனி
மின்கடத்துற் றைங்கரன்மால் வேண்டவுந்தித்—தென்கண்
வருங்கா விரியின் மகிமையெவர் சொல்வார்
சுருங்கா விரியுஞ் சொலின். (௬)

மன்னன் மனமும் வனமுங் குளிர்தருவான்
பன்னங் குடநீர்போய்ப் பாய்தலும்வேக்—தன்னைக்
தருவுற் றதுபோற் றளிர்ப்பவுளம் பூங்காத்
தருவுற் றனைபைந் தளிர். (௭)

பல்வான் றருவோடு பைங்கொடிமா நீர்நிலப்பூ
நல்வாசந் துன்னி நவமணியின்—வில்வீச
வாங்கா மகவா னகத்தின்மகிழ்ரும்பப்
பூங்கா வரும்பினமென் போது. (௮)

காதனின முஞ்சுரப்போக் காரணமு மோர்ந்துபல
காத மருவீசிக் கற்பமுற்றுக—காதன்
மரபுன்னை ராணிமகிழ் மன்றார மென்னச்
சுரபுன்னை பூத்த துதைந்து. (௯)

தன்னையெந்தத் தெய்வதமுந் தாரகமென் றோர்தருவா
னென்னை மிலைந்தா னிறப்பவரை—முன்னி
யடுக்கைபல வில்லெனல்போ லாங்கதில்வண் டார்ப்பக்
கடுக்கை மலர்ந்திடுங்கொள் ளை. (௧௰)

ஆலங் கனிந்து ணாருறோர் களதமரால்
போலங் கறையுட் பொலிந்திலங்கிப்—பாலங்கொ
ணேத்திரனே நித்தியனெ னீர்மை தெரிப்பதுபோ
லாத்தி மலர்ந்த வவண். (௧௧)

வான்பார்ப்பா ரிக்காக மாமுனிநல் கம்பகத்தாற்
றேன்பார்ப்பார்ப் போவாச் செழுவனத்தைத்—தான்பார்ப்பான்
சந்தாரம் பூத்த தடம்புயத்தோ னிற்பதொக்கு
மந்தாரம் பூத்த வனப்பு. (௧௨)

எல்லாத்தெய் வத்தினுமெம் மீசனுயர்ந் தாங்குமண
மெல்லாத் தருவினுந்தா னேற்றமுற்றே—றெல்லாம்
பெறுஞ்சண் பகவனமென் பேர்கொடுல கேத்த
நறுஞ்சண் பகமலர்ந்த நன்கு. (௧௩)

சேணுறமே லோங்கித் திகழ்மானும் வல்லிடும்பல்
சாணுறமே லோங்கித் தளிர்பூடு—மாணுறவே
தாரினல்குஞ் சில்ல தவிரினல்குஞ் சில்லவுறு
வேரினல்குஞ் சில்ல விரை. (௧௪)

எக்கிளையார் தாரு மெமக்கிணையா மோவெனவிண்
புக்கிளையா துற்றதருப் பொற்பிழித்து—முக்கிளையாய்ச்
சொல்வந் தனைக்கருளுஞ் சோதிசத்தி மாவடிவாம்
வில்வந் தளிர்த்த மிளிர்ந்து. (க௫)

வேந்தன் காந்தகன்றான் மேதினியி னுழுமறைந்
தேந்த விருக்குமிட மெய்துவமென்—றோர்ந்தங்கண்
வான்பொழிலும் பூந்தடமும் வந்தமைந்த வென்னிலவை
நான்புகழப் பாலதோ நன்கு. (க௬)

நந்தவன மெல்லா நறுமா மலர்பூப்ப
வந்தமல ரிந்திரன்வண் டாருதற்கு—முந்திவிடி
வைகறையிற் கொய்துவந்து மன்விதியி னீசனொளி
செய்கழலி லர்ச்சித்தான் றேர்ந்து. (க௭)

அன்றுமுத லாக வரனையிவ்வா றர்ச்சித்து
மன்றனறுங் கற்பகத்தார் மன்னவனேற்—றென்று
மனத்தினன்பு மல்க மருச்சண பகமா
வனத்தில் வதிந்தான் மகிழ்ந்து. (க௮)

இந்திரனருச்சனைப்படலம் முற்றிற்று

ஆக திருவெண்பா எ௬௬.

---

# தேவர்புலம்புறு படலம்.

அந்நாளிற் சூரேவ லாற்றிச் சிலதேவ
ரெந்நா ளுமைநீங்கு மின்னலெனப்—பொன்னாடு
விட்டவணி போந்துகொச்சை மேவிமன்னைக் கண்டடிதாழ்ந்
துட்டளர்ந்து சொல்வா ருகந்து. (க)

எந்நா யகனே யிடருழற்றுஞ் சூரபன்மன்
றன்னான் மெலியுந் தமியேமை—யுன்னா
தகல்வானி னின்றகன்றா யையநினை யன்றிப்
புகல்வே றுளதோ புகல். (௨)

தீய களிறுந் திறலரியுஞ் சூர்வரிய
மேயசிறை யிற்பசுவா மேவுமெமை—நீயடைத்தா
யூனமுற்று மாண்படுத்த வூன்பிடித்த மீனெடுத்தே
மானமுற்று மற்றோ மனத்து. (௩)

முன்னாளின் மாமுகனான் மொய்ம்பிழந்தோ மாயவன்
பின்னாளிற் சூரனாற் பீடழிந்தோ—மென்னாளு
நின்னா தரவதனி னிற்குமெமைக் கைவிடுதன்
மன்னா நினைக்கே வசை. (௪)

வெஞ்சூர னாதி விளம்புபல வெவ்வவுணர்
தஞ்சூர மென்மை தனிவலிவு—நஞ்சூர்
மயலொன்று நெஞ்சத்தே மன்றுயருந் தீர்வான்
செயலொன்ற செய்வாய் தெரிந்து (௫)

என்று பலவா றிரங்குமொழி கேட்டிறைவன்
துன்றமரர் துன்புகண்டு சோர்ந்துயிரா—வொன்றறிவான்
மாயை மகன் சூரன் மகஞ்செயன்றே நம்வாழ்வு
போயதென்றே சொற்றனன் புலர்ந்து. (௬)

அன்றே மகஞ்செய் தரன்பால் வரம்பெற்ற
கன்றே நமதுபதங் கைக்கொள்ளா—நின்றே
நமையேவல் கொண்டா னலிந்தனந்தீ தொன்று
கமையேய விலன்றுறித்தான் காண். (௭)

மற்றதியா தென்னிற் பூமானேர் புலோமிசையைப்
பற்றியவனை யுஞ்சிறையைப் பானினைந்தான்—கொற்றவெஞ்சூர்
யானுளத்தி லோர்ந்ததனை யாளியிடை யாளொடுமே
மாநிலத்தில் வந்தேன் மறைந்து. (௮)

உள்ள முலர்ந்தே யுழலு முமைவிட்டுக்
கள்ளவுருக் கொண்டுபுலிக் கண்ணேற்று—வள்ளற்
றிருச்சித் தருவாஞ் சிவபெருமா னற்றா
ளருச்சித் திருந்தே னமர்ந்து. (௯)

இன்ன லுழற்றவுண ரேவல் புரிந்துழன்று
தொன்னிலைய மேன்மைமுற்றுந் தோற்றனமா—லின்னினியா
மெல்லவருங் கைலைமலைக் கேகியரற் கோதிநம
தல்ல றவிர்ப்பமென்றா னங்கு. (௧௦)

மேவுமொழி கேளா விபுதர் மகிழ்ந்தெங்கள்
கோவுநீ கூறுங் குருவுநீ—தேவுநீ
யெல்லாநீ யென்னி லெமக்கோர் குறையுளதோ
சொல்லாய் புரவலனே சூழ்ந்து. (௧௧)

ஏத்தல் கடனெமக்கே யெந்துயர் தீர்த்தெம்மைக்
காத்தல் கடனினக்கே காணையா—மாத்தகுவர்
தீரந் தடிந்தாய்சூர் தீங்கொழிப்பா னீயன்றிச்
சோரந் தார்க்கார் துணை. (௧௨)

ஆகையாற் றுன்பகல்வா னங்கயிலைக் கெங்களைக்கொண்
டோகையாப் போதநீ யுற்றென்ன—மாகபதி
நன்றென் றுட் கொண்டொன்றை நாகரையங் கண்ணிற்றீ இக்
குன்றுசசி பாலடைந்தான் கூர்ந்து. (௧௬)

தேவர்புலம்புறுபடல முற்றிற்று.

ஆக திருவெண்பா ௪௪௬.

# அயிராணிசோகப் படலம்.

அங்கமலை யன்று ளரிவாலு முன்னெதிராப்
பங்கயத்தாள் பல்காற் பணிந்தெழீஇ—யிங்கடைந்த
தென்னென்னவெஞ் சூர்பணியா லேய்சிலண்டர் நாம்வருந்தி
முன்னரிடர் சொன்னார் முறை. (௧)

சோர்விபுதர் தந்தயருஞ் சூர்வலியுந் தீர்தரத்தொல்
சீர்தரவீ சற்குரைப்பான் றேவரொடு—மோர்மலைக்குப்
போகின்றே னீது புகலவந்தே னின்பாற்சொற்
பாகின்றே னன்னாய் பரிந்து. (௨)

என்றளவி லேவெய் திரங்குமயி லென்னநங்கை
மன்றிருமுன் வீழ்ந்தாண் மயங்கியறி—வின்றியென்றுந்
தற்பிரியா மாதின் றளர்வுகண்டு சோர்வொடுவேந்
தற்பிரியா வாறெடுத்தா னங்கு. (௩)

சோருமா மாதைத் துடைமே லிருத்தியுணர்
வாருமா தேற்றி யறிவுவரக்—கூருமா
சிந்தா குலமுற்றுந் தேவி நவில்கின்றா
ணந்தா வரன்பா னயந்து. (௪)

பொன்னு டிகந்து புலியின்கணுறைவனத்தி
னின்னு தாவி னெடிதிருந்தேன்—மன்னு
வெனைப்பிரிய நீநினைந்தால் யார்தாந் துணையா
முனைப்பிரிய முற்றேற் குரை. (௫)

கூருந்து வைரவேற் கொற்றவனே நீபிரிந்தே
யாருந் துணையின்றி யானிருந்தாற்—சூரூர்ந்து
தொண்டா ரவுணர் துருவிநிற்பா ரிங்கென்னைக்
கண்டால் விடுவரோ காண். (௬)

வன்புறவெவ் வாளவுணர் மாயம் பலபுரிவா
ருன்புதல்வ னிங்கில்லை யும்பரிலை—மன்புழைக்கை
மாவிலையா மாதரிலை மாவொருத்தி யான்றனித்தே
மேவிலையா வஞ்சேனோ வேர்த்து. (௮)

அன்னே ரவுணர்வந் தல்லா நனபுரிந்தால்
என்னே பழியார்க்கு வந்தெய்து—மின்னே
ருயர்வாங் கயிலைவரைக் குன்றோ டடைவேன்
பெயர்வா யெனநவின்றாள் பேடு. (௯)

யாரா யணங்கே வனத்தினினக் கோர்துணையா
யாரா யினுமின்றி யேகுவனோ—வோராய்நீ
யையனமற் காய்ந்தவனு நத்தனுமே சேர்ந்தளித்த
வையனமக் கோரரணா மாம். (௧)

ஈசனருண் மைந்தனைவா வென்றுளத்தி லுன்னினிங்கு
நேசமுற மேவுவா னீடுகயி—லாசவரை
யையடையா மீளளவு மாங்களிப்பா னின்னையன்றான்
கையடையா நல்குவேன் காண். (௧௦)

சாற்றிமெய் வையன் றனிவனத்தி லன்பினிளைப்
போற்றிடுவ னஞ்சலெனப் புந்திதனைத் தேற்றிடலு
மன்றான் சிறப்பென் னறைகென்ன நங்காய்கே
ளென்று வியம்பு மிறை. (௧௧)

அயிராணிசோகப்படல முற்றிற்று.

ஆ திருவெண்பா ௭௬௦.

---

# மகாசாத்தாப் படலம்.

---

முன்னஞ்ச ஞ்தியர்கண் முன்றோ னருளின்றி
மின்னஞ் சலதிகடை வேலையெழு—மன்னஞ்சம்
பற்று வரவிரியாப் பன்கயிலைக் கேகியா
னற்று மதித்தார் நயந்து. (௧)

அன்னவனுண் டண்டமரைப்பார்த் தஞ்சலிர்நீ ரார்கலியை
யின்னமொரு காற்கடைமி னெய்துவீர்—மன்னமிர்த
மென்று னதுகேட் டிமையோ ரெண்ணங்களித்துச்
சென்றார் பயோததியிற் றேர்ந்து. (௨)

தந்திமுகத் தானையுன்னாத் தன்மையினான் மததம்வீழ்ந்
துந்துமணி நாக ருறைவெய்த—வந்தரத்த
ரன்னதுணர்ந் தர்ச்சிக்க வன்னவன்ற னாருளான்
முன்னதுபோ னின்றதுவே முன். (௩)

கருமான் முதலோர் கடலகடையும் போது
வருமா வமிர்தை யகிழா—விருமாத்
தரத்தாருந் தத்தந் தகையினுற்ற தென்னாப்
பொரத்தா நினைந்தார புகன்று. (௪)

தாமோ தரனுரன்வாழ் சாக்கணங்கும் வெஃகவோர்
மாமோ கினிவடிவம் வாய்ந்துநின்று—னாமோ
ரிருதிறத்த மாண்பினரு மின்னமுதை விட்டே
யொருதிறத்த ராய்ச்சூழ்ந்தா ருங்கு. (௫)

மாலாக மோகினியா வானவருந் தானவரு
மாலாக மன்மதன்பூ வாளியைந்தின்—மாலாக
மெய்த்தார் கருக விரகத்தீ மூளுறவு
முய்த்தான் கணைநான் கொருங்கு. (௬)

எண்ணாசை மூன்று ளிழைதுகிலான் மால்புரியும்
பெண்ணாசை போலிரண்டும் பித்திழையா—விண்ணுட
ருண்மயன்மே லுற்றணங்கை யுன்னியுன்னி மாழ்குவரேற்
பெண்மயறீர் வாரோ பிறர். (௭)

மோகினியாம் புத்தேண் முனைநிற் பவர்ப்பாரா
வாகினியாம் போர்விடுப்பன் மன்னினனான்—பாகினியா
வின்னமுத முள்ள தெதுநீவிர் வேண்டியது
முன்னமுறக் கொண்மினென்றான் முன் (௮)

பொன்னிறத்தன் கூறவது புந்தி நனிதிரிந்தே
யன்னிறத்தர் நோக்கியெம்பா லாவதுநீ—யென்னமுன்மன்
றன்மையினா லின்னமுதந் தாவென மக்கென் றம்பரதை
நன்மையுறக் கொண்டகன்றார் நன்கு. (௯)

மன்னவுணர் மோகினியா மாலையொரு சார்கொடுபோய்த்
துன்னினர்கு ழாநோக்கிச் சூழமரி—சன்னிலையை
மாண்கிளரு மோர்வீரன் வஞ்சணைவா னின்னமுமே
காண்கிலனா னென்றான் களித்து (௧௦)

அன்னா னுரைகேட் டகமகிழ்ந்திம் மூவுலகி
லென்னாற் றலுக்குறழ்வா ரில்லையெனப்—பன்னாத்தத்
தம்மின் மொழியாச் சமர்புரியா மாய்ந்தனரே
வெம்மின் படையவுணர் வேட்டு. (௧௧)

தீயவுணர் தந்தொகையிற் சேரிருவர் மாயவன்றன்
மாயமுனி முன்னுருவ மாற்றியும்—ராயவருக்
கொண்டமர ரோடிருந்தார் கோதையெனப் போந்தகள்வ
ரண்டர்க் களிப்பா னமுது. (௧௨)

நந்தலிலா வானவர்த நாப்பணிரு கள்வருஞ்சேர்
வந்தவெழின் மால்பகிரு மாவமிர்தை—மந்திரத்தாற்
கொண்டில ருண்டார் குறிப்பா லிருசுடரும்
விண்டறியப் பார்த்தார் விரைந்து. (௧௩)

விட்டுணுவு மக்கள்வர் விண்ணவரோ டுண்பரெனச்
சட்டுவங்கொண் டன்னோர் தலைதுமித்து—மட்டுப்
பொருந்தின் னமுதம் புலவர் களிப்ப
விருந்தி னளித்தான் விழைந்து. (௧௪)

இன்னமுத முண்டா ரிருவிசும்பி னிற்பரெனச்
சென்னியற்று மாயாத தீயவர்க்கு—மன்னுமைதன்
கேளா மிறையோன் கிளரருளைக் கொண்டுவிண்டு
கோளா நிலையளித்தான் கூர்ந்து. (௧௫)

அன்னா ரனா ரடிபோற்றி யார்சவத்தாற்
செந்நாக மைந்நாகச் செய்கைபெற்றே—யுன்னா
மறைப்பார் தமைக்காட்டு வான்சுடரை விண்மேன்
மறைப்பார் வெருவ மகிழ்ந்து. (௧௬)

கேடிலவ ராகு கேதுவெனா முன்னாமத்
தோடியைந்தேர் பானு வொளிர்திங்க—ணீடுறுசெய்
மின்புதன்பொன் வெள்ளிசனி மேவெழுவ ரோடமர்ந்தே
யொன்பதின்ம ராயினா ருற்று. (௧௭)

இன்னா ரமுதுண்டோ ரேத்தவரி யாங்கிருந்தான்
றன்னான்கு சத்திகளுண் மாவொருவ—னென்னா
முனக்கோல மாய்க்காணன் முன்னிறையோன் காண
வனக்கோல மாய்நின்றான் வந்து. (௧௮)

கார்வண்ணன் கந்தரனைக் கண்டுவெஃகக் காமாரி
யார்வ மெமக்குள தன்புறுகிற்—சேர்வுறநீ
கொண்டவுரு நன்றெனமால் கூசியுமை பாலுறமைக்
கண்டவெனை வேட்டதென்கொல் காண். (௧௯)

வேதன் செயன்முற்ற வேண்டினமுன் மாதைவெஃகக்
காதலினா லோநீ கலந்ததுதா—னோதுனக்கி
யார்வயினும் பற்றிகலே யில்லையென்னா கந்தழுவு
மார்வமுற்ற துண்மையதே யன்று. (௨0)

என்னினைவி னேகினையோ வெம்பெருமான் யானறியே
னின்னினைவை யாரறிவார் நீயன்றி—மன்னின்ப
மாடமைத்தோ ணல்லாரோ டார்வாது விட்டெனைவன்
போடமையப் புல்வதுபொற் போ. (உக)

மாயன் விளம்புதலு மாதேவ னீயுநமக்
காயசத்தி தாருவணத் தாயிழையா—யாயினும்
சந்தியபோ தஞ்சனினை காந்தமுவ நீயவனை
யந்தியிற்றந் தாயலையோ வுற்று. (உஉ)

ஆதலினின் னின்னலமன் பார்ந்துதுய்ப்பன் செல்கென்னக்
காதலிற்கைப் பற்றவாக் கண்டோடிப்—போதலுமே
செங்கையா னரணனைச் சேணிலயன் போற்றிடவே
செங்கையாற் பற்றினன் சென்று. (உங)

பற்றிப்போய்ப் பாரிற் பகர்நா வலந்தீவி
லெற்றுகடற் சார்பினே ரேய்வடவைப்—புற்றவோர்
சாலநண்ணி யங்கண் சயம்புமான் மால்கொடின்பஞ்
சாலவெய்தக் கூடினன் றான். (உச)

மூக்கண்ண னக்கண்ணன் முன்னிருவர் கூடுமெல்லை
யுக்கபுனல் கண்டகியென் றோர்நதியா—யக்கவினீர்
சாராழி தந்தலைச்ர தந்தியென்பேர்க் கீடமுறை
யோராகத் தோன்றினபொன் னேய்ந்து. (உரு)

மல் கூங்குப் பஞ்சரம்போல் வாய்ந்துசில நாளுயிர்போய்த்
தொல்கூடு நேமியுருத் தோன்றவே—பல்கூடு
கண்டகியாந் தீர்த்தங் கடிதீர்த்து வந்திமோ
மண்டலத்தர் கொள்ள மகிழ்ந்து. (உசா)

அக்குடம்பை யையிலத்தா ரங்கெடுத்துட் பொன்வாங்கி
மெய்க்குறியை நோக்கியரி மெய்ம்மூர்த்தந்—தொக்கதென
நாளர்ச் சனைபுரிவார் நன்குசில ரங்கதன்பேர்
சாளக் கிராமமென்பர் தாம் (உஎ)

தாருவனக் கொன்றையர்சேர் சால முறுநகரா
மேதுவினு லங்காம மேய்ந்ததனை—தோதரியாய்க்
கந்துதித்தான் காம்புதித்தான் காமுறவுங் கம்முயக்கில்
வந்துதித்தான் வல்லையையன் வாய்ந்து. (உஅ)

காருருவுஞ் செஞ்சடையுங் காமருசென் டார்கரமு
மேருருவு முக்கிரமு மேய்ந்தொளிசெய்—சேருதலு
மத்தனந்தச் செல்வற் களிகூ புத்திரனென்
றுத்தமகற் பேர்புனைந்தா னோர்ந்து. (உகூ)

உன்னு முருத்திரரோ டொப்பவைத்து நல்லவர்க்
துன்னு புவனநல்கிச் சூழதற்கு—மன்னிறைமை
தந்திமையோ ரொண்மா தவரெவரும் போற்றுயர்வு
மந்திவண னீந்தா னவற்கு. (௩0)

அன்னவர்க்கு மற்றவர்க்கு மன்பின் விடைநல்கி
முன்னவனங் கேக முராரியுந்தன்—றொன்னகரம்
புக்கனன்பின் னையன் புவனமுற்றுந் தன்னியலிற்
றொக்கவுல கேத்தநின்றான் சூழ்ந்து. (௩௧)

மண்ணவரும் விண்ணவரு நற்றவரு மற்றவரு
வெண்ணவரும் பூசனைசெய் தேத்தநிற்க—மண்ணலிவன்
றெவ்வின் றிறலொழிப்பான் சீர்த்தியினு னன்பினினை
யெவ்வமின்றிக் காப்பா னிவண். (௩௨)

வானவர்கோன் மங்கை மனவிசைவோர்ந் தையனையே
தானகத்தி லேத்தவுன்னித் தந்தியூர்ந்—தானதிறற்
பூதர் புடைசூழப் பூரணையும் புட்கலையுங்
காதலுற வந்தான் களித்து. (௩௩)

மன்னவனு மையன் மலர்த்தாள் பணிந்தேத்த
வென்னவிவண் வேண்டு மியம்புகென—வின்னலங்கொள்
சூர்செய் கொடுமைமுற்றுஞ் சொல்லியயான் கைலைசெல்வே
னீர்வளையைக் காக்கவென்றா னீண்டு. (௩௪)

மாதலமோர் மூன்றளிக்கு மன்னவனே நின்னருமைக்
காதலியைத் தீதின்றிக் காத்திடுவ—னீதனியென்
றெண்ண லிவண்வைத் திருங்கயிலைக் கேகுதியென்
றண்ண லருள்புரிந்தா னாங்கு. (௩௫)

வெற்றிபெறு காளனெனு மீளிதனை நோக்கியையன்
கற்றவருள் கத்தன் கயிலைசென்று—பற்றமரர்
கோமான் வருமளவுங் கோதைதனைத் தீதின்றி
காவென்றா னின்று. (௩௬)

மகாசாத்தாப்படல முற்றிற்று.

ஆக திருவெண்பா ௮௨௮.

---

# இந்திரன்கயிலைசெல்படலம்.

---

அத்துணைதா னண்டர்கோ னோரா ணியைநோக்கி
யெய்த்திடனீ யைய னினிதளிப்பன்—சித்தம்
வருந்தலெனத் தேற்றியவண் வைத்தமர ரோடுந்
திருந்து கயிலைசென்றான் றேர்ந்து. (௧)

அங்க ணடைந்துநந்தி யந்தாள் பராய்நிற்ப
விங்கனீ வந்ததி யாதென்ன—வுங்கதனைச்
சொற்றனனஃ தோர்ந்தெங்கோன் றொன்மையி னுடியே
யிற்றிலகொ லின்னலென்று னீண்டு. (௨)

யோகநிலை நால்வர்க் குணர்த்தியுற்றான் கோனைவரு
மேக வமையமிதன் றென்றுரைக்கா—னேகமநா
றேர்ந்தநந்தி யஃது செவியுற்று மாகபதி
சோர்ந்து விழுந்தான் றுயர்ந்து. (௩)

கலந்தான் கடலிற் கவிழுக் கலங்கி
யுலந்தா னெனமன்னோ டும்பர்—புலர்ந்தார்சீர்
நந்தியெங்கோன் பொன்னார் நளினமலர்த் தாள்போற்றி
யிந்திரன் சொல்வா னெடுத்து. (௪)

நீயவனுஞ் சூரபன்மன் செய்தவமோர்ந் தீசனவற்
காயுவட னுற்ற லவிர்திருவ—மீயநின்றான்
றுய்யநெறி நீங்கியன்னான் றொண்டுசெய்தெய்த் தோமிதுவு
மையன் செயலென்று னுங்கு. (௫)

ஆனர் தொழில்புரிந்து சூராற் றுயர்ந்துழறுன்
பான துணர்த்தியடைந் தாமெனிலம்—மான துபோ
தாண்டகற்றல் வேண்டுஞ்சூ ராவியட னுற்றல்சீர்
மாண்டளித்தல் வேண்டுமென்றான் மன் (௬)

அதுபுரியிற் சூர்மு னருந்தவஞ்செய் காலை
யுதவுவரம் பொய்த்தனனென் றோர்ந்து—நுதல்வரல்ல
தெம்மல்ல தீர்த்திலனே லோருளுக் கோர்குறைவு
மம்ம வருமே யடுத்து (௭)

ஆகையினு லின்னவகை யாய்ந்துவர வோர்ந்துபரன்
யோகியனுல் வர்க்குணர்த்தி யுற்றனன்கொ—லேகனிவ
னன்றியிடர் தீர்ப்பரெவ ரன்னவரோ டேற்றரியும்
வென்றிதரு மாழியற்றான் வேர்த்து. (௮)

தூயோன் செயலி தெனிற் றெல்பு யிற் போந்திடினத்
தீயோர் கிறைபுரிந் திண்ணமது—தீயோர்தி
புங்கவர்தம் மோடியான் போகிலனீ சற்காண்பா
ஹுங்கமய மோர்வனென்று ஹுற்று. (௯)

அந்நந்தி தேவ னதுசேனா வாய்ந்தபெரு
மின்ன லிகந்தே யிவணீவீர்—துன்னுமென
வாங்கா ரருள்செய்ய வண்டரொடு மன்னவனேர்
பாங்கார்ந் திருந்தான் பரிந்து. (௧0)

இந்திரன் கயிலைசெல்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் அ௩௩

# அசமுகிப் படலம்.

ஆழிவனத் தாரரிமுன் னண்டரெலாம் போற்றிடவோ
ரூழிவனத் தோர்கலனு வோங்குபுகழ்க்—காழிவனத்
தெண்ணமுற்றிக் கேள்வருவா னிர்வளைபன் னுனேற்பா
னண்ணிலனேந் துண்மெலிந்தா னைந்து. (௧)

மன்னன் பிரிவுன்னி மாகிரங்கி நோற்குமெல்லை
யுன்னரும்வெம பாவமுரு வுற்றதொசரு—மன்னிறத்தள்
சொற்கிளையாள் சூழலின்சட் சூர்க்கிளையா டுன்னலர்செய்
மற்கிளையாள் வந்தாண் மகிழ்ந்து. (௨)

காய்கின்ற காமக் கனறணிப்பான் கானையர்வெற்
பேய்கின்ற தோளணைவா னோர்முகிலின்—வாய்குரலாள்
பொற்பில்லாள் பூணும் புசழில்லா ளுணில்லாள்
கற்பில்லா ளற்பில்லாள் காண். (௩)

உலக மனைத்து மொருநா ழிகையி
லுலவிவரு மொய்ப்புயா ளுன்னு—முலமுள்ளா
ளன்மையுளா டமையுளா ளுற்றமுளாள் சீற்றமுளாள்
வன்மையுளா டயவுண மாது. (௪)

சீயமுகன் முரகனோர் திண்டிறலாண் மால்வரையொப்
பாயமெய்யாள் பொய்யுடையா ளாடகன்முன்—மேயவொரு
சிங்கமன்னுள் கூற்றடக்குந் திண்மையுளாள் பெண்மையுளாண்
மங்கு லெனவுலவு வாள். (௫)

கூடு மவுணர் குலத்தினுக்குத் தீயினையே
நாடு மசமுகியா நாமத்தா—ணீடுறுகாண்
பொங்கரெழி ளோக்கியிகப் பொற்புளதவ் வான்பொழிலே
யிங்குளதன் றென்று ளினிது. (௬)

மன்மலர்ப்பூங் காவின் வனப்பை யசமுகிதான்
றன்முகிக்குக் காட்டிக் சொலிக்காண்ப—லென்றே
மிசையெட்டும் வாண்பொழிலின் மேவுவார் தம்மைத்
திசையெட்டுந் தேடலுற்று டோர்ந்து. (எ)

அதுகண்டே டையய னவிர்படைமா வீரன்
முதமைம் முகத்தாடான் முன்னி—யெதுகண்
டிவண்வருவ தோர்ந்ததன்மே லேற்பசெய்வே னென்று
வவண்மறைந்து நின்று னருத. (அ)

அத்துரும மெங்கு மலேந்துதுரு வித்தவஞ்செய்
வித்துரும வாய்ச்சசிதான் மேவுமிட—மைத்துருமஞ்
சேண்குரலாள் கண்டா ளிவளிந் திராணியஞ்சிச்
சேண்கரந்து வந்தனளித் தேத்து. (௯)

திங்களின்பே ராளையெங்குந் தேடியுங்காண் கில்லமெனச்
சிங்கமெனச் சீறித் திரும்பவுஞ்சூ—ரிங்கிருப்ப
தோராம லொற்றரையங் குய்த்தா னவரின்னுந்
தோரா ரிருக்குந் திசை. (௧0)

மின்னே யிடையிவளை வேந்தன் மகிழ்பூப்ப
வின்னே கொடுபோ யியம்புமவன்—முன்னே
விடுவ னெனக்குறித்தாண் மேவவுணர் செய்யுங்
கொடுவினைக்கோர் வித்தன்னாள் கூர்ந்து. (௧௧)

பாகின் மொழியாளைப் பண்ணவர்கோன் றன்றனிவைத்
தேகினன்காப் பாரொவரு மீங்கிலைப்போ—தாகுமுனங்
கொண்டே குவனென்னுக் கொண்டலிழிந் தேவரல்போற்
றண்டேம் பொழில்வந்தா டான். (௧௨)

அத்துன் முகியோ டசமுகிவெற் பென்னவர
மெய்த்தவஞ்செய் மின்காணு வெந்துளனொரங்—தெய்த்திவடாண்
வஞ்சிபோல் வாளெவளோ வாய்மை யறியனெனு
வஞ்சி யெழுந்தா ளணங்கு. (௧௩)

எழுவா டனேகில் லெனச்சொலிநே ரெய்தி
வழுவிலயி ராணியின் வாய்மண்—கெழுநலனே
யாரவருந்தவமே யண்டமெலா மான்கின்ற
சூரபன்மன் செய்கின்றுன் சூழ்ந்து. (௧௪)

அண்டமெட்டோ டாயிரஞ்சூ ழாள்வனவோ ரண்டத்து
ளண்டமட்டு முன்கேள்வ னுள்வனிறை—யண்டவத்திற்
பெற்ற வரமும் பிறவு மறிந்திலையோ
நற்றளிர்போல் வாய்நீ நயந்து. (கரு)

கண்டனைய வின்சொல்லாய் காமருசூர் மேல்விழைவு
கொண்டனையி னிற்கோர் குறைவுளதோ பண்டவமு
மெய்வருந்தச் செய்வசென்கொன் மேவுபொருள் யாவுநின்
கைவருந்தப் பாதிதுநீ காண். (கசு)

மின்னவா மெல்லிடையாய் மேயினல முண்டிலையே
லென்னவா மன்னலமெய் வெப்பொருளு—நின்னதன்கேண்
மன்னேவல் செய்சூர் மகிழ்மடவா ரெல்லாரு
நின்னேவல் செய்வார் நிசம். (கஎ)

பஞ்சூர் பதுமப் பதப்பதும கோமளையை
யஞ்சூர் வெறுத்திடுவ னையமிலை—மஞ்சூர
வன்பி னினைமகிழ்வ னாரணங்கே நீவிரும்பி
யென்பின் வருதியென்றா னீண்டு. (கஅ)

அசமுகிப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா அநிச

---

# இந்திராணிமறுதலைப் படலம்.

---

மையயா னனத்தாள்சொல் வன்னியின்வேல் போனுழையக்
கையாற் செவிபொத்திக் காரிகைகார்—மெய்யாளே
யேடிநீ சொற்றவுள்வா றெய்துநா னென்னினிற்காங்
கேடினைத்தென் பாரார் கிளர்ந்து. (க)

சுருதியுணர் காசிபன்றன் றோகைநீ தீய
கருதிவெய்யோ னென்னக் கரைந்தாய்—தருமமுமே
நோக்கிலனோன் போடுகற்பு நோக்கிலமே லாம்பிறப்ப
நோக்கிலனன் றாக நுனித்து (உ)

மின்னுவளன் வன்பாயுண் மேவார்க் கிதுதோன்று
மன்னுவை நீதுணியன் மாண்பிலவேம்—தென்னிறைக்கே
யல்லா தெவரிடத்து மாசைவையேன் கற்பினேன்
சொல்லாது சொன்னாய் துணிந்து. (ங)

கொடுமைசெய்து வாழ்வார் கொடுநரகில் வீழ்வார்
கெடுநிலையர் தீமை கெடமேல்—படுவார
வின்பமொடு துன்பமிவை யார்க்கும் பொதுவன்றோ
வென்பகர்ந்தாய் நீதியிலா யிங்கு (௪)

தீநெறிய னாதலினாற் சிந்தியா தீதுரைத்தாய்
வானெறிய தன்று மறந்தியம்—தீனமெனை
யெய்தற்பா லார்யா ரெவர்வரினுங் காப்ப நம்பர்
வெய்தி னகறியென்றாள் வேர்த்து. (௫)

சுந்தரிசொற் கேளாத் துருவைமுகி பற்கறியாச்
செந்தழனீள் கண்ணின்று சிந்தவே—நந்தவிதழ்
இன்றிருமாக் கைபுடையாச் செல்லுருமி னார்ப்புற்ற
நன்றுநன்றென் றாள்கனன்று நக்கு. (௬)

உன்றுசகி சொல்லுறுதி யூற்றஞ்செப் பில்லவட்
கென்னசொலி னும்பேதைக் கேறுமோ—வன்னதுபோல்
வெந்துயரங் கொண்டு வெறிமுகத்தாள் கற்புடைய
சுந்தரியை நோக்கிச் சொலும். (௭)

நல்லசொற்றேன் மாறுரைத்தாய் நங்கைபட்டு நுங்குவேன்
வெல்லண்ணற் காகவிட்டேன் மேவியென்பின்—செல்லலையே
லீர்த்தேகு வனின்னை யீதுண்மை யாகுமென்றாள்
கார்த்தேக வல்லரக்கி காய்ந்து (௮)

மூவர் தடைபுரிந்து முன்னின்று போர்செயினு
மேவர்வரி னும்விடேன் யானென்றுத்—தேவிகரங்
கையினாற் பற்றிக் கடிதீர்க்கப் போயினா
ளையகோ வென்று ளணங்கு. (௯)

தீயவன்று மண்டுதலுஞ் சிந்தா குலமெய்தி
மேய வுணர்வுபோய் வீழ்ந்தவள்போ—லாயவச
முற்றிருவேற் கண்ணீ ருறையுகவே தேம்பினாள்
பொற்றிருவே யன்னாள் புலர்ந்து. (௧௦)

பூசைவா யுற்ற பொருவிலெழிற் கிள்ளையுந்தென்
னாசையான் பாசமுற்ற வாவியும்போன்—மாசைய
மென்முலையாள் கொண்டேகு மெல்லை யாற்றினாண்
மின்மகவான் றேவி மெலிந்து. (௧௧)

இந்திராணி மறுதலைப் படலம் முற்றிற்று

ஆக திருவெண்பா ௮௯௫.

# மகாகாளர் வருபடலம்.

---

மாலான்சே யேயோலம் வானவர்கோ வேயோல
மாலவண்ணா வோலமே யையனே—யோலநாத்
தீரனே யோலமெங்க டெய்வமே யோலமெறும்
வீரனே யோலமென்றான் மின். (௧)

அன்னதுகேட் டைய னடுபடைமா வீரனும்பர்
மன்னவையெல் லாம்வியக்கு மாண்பினன்கை—தன்னிலொளிர்
வாளனென்போ டாரணிவான் வான்பெயரோன் வீரமா
காளனென்போன் வந்தான் கடிது. (௨)

மஞ்சனையான் வந்தாற்று வான்சசியை நோக்கிரங்கை
யஞ்சனீ வாழி யசமுகியாம்—வஞ்சகியைச்
சார்ந்துநினைத் தீண்டு தடக்கையை வாளினா
லீர்ந்துவிடு விப்பனென்றா னிங்கு. (௩)

வீரனுரை கேட்டளவின் மெல்லியலாள் செல்லியல்பா
ராருயிரே பெற்றா ளசமுகியத்—தீரனைக்கண்
டேவருமென் முன்னில்லா ரீண்டெற் சினந்திகழ்ந்தான்
றேவருளோர் வீரனென்றா டேர்ந்து. (௪)

செந்தழற்கண் சிந்தவிதழ் தின்று கறகறெனத்
தந்தங் கறித்தார்த்துச் சாற்றிவனைத்—தொந்தியின்கட்
பெய்துவலி தீர்ப்பனெனாப் பேழ்வா யரக்கிநிற்ப
வெய்தினன்வாள் வீர னெதிர். (௫)

கற்பார் சசியைக் கரவிற் கொடுபடர்வாய்
பொற்பா ரிவளைவிட்டுப் போதியுற்ற—வற்பார்
பிழைபொறுப்ப னீயும் பிழைத்தியென்றான் வீர
னுழைபொருகண் ணாளைநோக் குற்று. (௬)

உருத்திரக் கூற்றுரைத்தா யுன்னையிவட் போற்றென்
றருத்தியிலார் சொன்னா ரவரைத்—தெரித்தியென
வாருலக மூன்றளிக்கு மையன் பணியிதென்பேர்
வீரமா காளனென்றான் வேள். (௭)

என்ன விவன்மகவா னேவலா னென்றளத்தி
லுன்னியரி யெற்றொழுவா னாறுசெய்யான்—மன்னிவனைச்
சிந்திநான் றீன்பனெனாச் செங்கையிலார் சூலத்தை
யுந்தினாள் வீர னுரம். (௮)

வருமுனைதை வீரன் மாய்த்தூங்கு வாளா
விருதுணியாச் சூலத்தை யீர—வொருமைந்தன்
மேகத்தின் மின்போல் விடுசூல மேலவன்கார்த்
தேகத்தின்பாற் பொழிந்த தீ. (௯)

ஆலந்தோய்த் தூழிந்தீ யார்ந்ததுநேர் மைம்முகத்தான்
சூலந் துணிபடலுந் துன்முகிகைக்—கோலமுறு
சுந்தரியைச் சேர்த்தவடன் சூலங் கொடுவீர
னுந்தூரத்தி லுய்த்தா னுருத்து. (௧௦)

ஏவியவம் முத்தலைவே லெண்வீர மாகாள
னுகமிசை மேவுமின்கூ டார்வசியாற்—பாகமுறக்
கண்டா னதனையவள் கண்டா ளிடையவுளங்
கொண்டா ளெழுந்தாள் குலைந்து. (௧௧)

சென்றாள் கிரிபெயர்த்துச் சீயமன்னான் மேலோச்ச
நின்றான் றடிதலும்வா ணொரொடிந்த—தொன்றாக்
கருங்கடல்போற் கார்நிறத்தாள் காணுக் கறங்கு
பெருங்கடல்போ லார்த்தாள் பெரிது. (௧௨)

வீரமா காளகேள் வேதா முதற்றேவர்
தேரவந்தே யாசிசொலச் சீருலகாள்—சூரனெம்முன்
றோளாரக் கொண்டுய்ப்பேன் றோகையைப்பே தாயுணராய்
வாளா விலக்கினையே வந்து. (௧௩)

தடுத்த றகைமையன்று தாரகன்மாத் தானை
யடுத்துப் படிக்குமலி தன்றி—யெடுத்தியா
னின்றனையுஞ் பேன்றுய்க்கி னீள்பசிதா னீங்கிடா
தென்றுவிட்டேன் போதியென்றா ளிங்கு. (௧௪)

கண்டகிசொற் கேட்டளவிற் காளைவசி யாற்சூலந்
துண்டு படவெறிந்தேன் றொட்டநினைப்—பெண்டெனவே
வீக்கலைநின் றேனிவளை விட்டுநீ போதியாற்
போக்கலைகை யென்றான் புரிந்து. (௧௫)

என்றதுகேட் டங்கிவள்வா ளின்றி யிருக்கின்றா
ளென்றியம ராற்ற லொழுங்கன்றே—யன்றியுமே
வெல்ல லரிதிவளை மின்சசியைக் கொண்டுவல்லை
செல்லறிட மென்றெணினு டோர்ந்து. (௧௬)

துன்முகிதன் கையுற்ற சுந்தரியைத் தான்பற்றிப்
பொன்மலையின் கோடுகொடு போம்வளிபோல்—வன்மையொடு
தண்டமதி தோற்பத் துலங்குந் துணையயிற்றுக்
கண்டகிகொண் டேகினளங் கண். (௧௭)

போதலுமே பார்த்தையன் போகலகின் னில்லென்றுத்
தீதிலான் செங்கரத்தாற் றீயவட—னேதியா
மையைப் பிடித்துடைவாள் வாங்கியின்னைத் தொட்டதின்
கையைத் துணித்தான் கடிது. (கஅ)

இருள்பிலத்துற் றூரையெடுத் தேவெளிவிட் டாங்கு
வெருள்சசியை வீடுசெய்து மேட—மருண்முகியைத்
தாளிணுதை தந்துதள்ளிச் சார்துன் முகிகரமும்
வாளி னரிந்தான் வரன். (கக)

மகாகாளர் வருபடலம் முற்றிற்று.

ஆகூ திருவெண்பா அஅச.

---

# அசமுகி சோகப்படலம்.

---

பொன்னங் கழல்வீரன் புல்லவுண மாதர்கை
சின்னம் படவேசே தித்தளவி—றன்னெய்த்தோ
ராறுபோற் செல்ல வாற்றி விழுந்தனளே
யேறுநீர் போல விரைந்து. (க)

கெழுவா டியக் கிடந்த வாம்பில்
வழுவா டியர்வாள்பேழ் வாய்விட்—டழுவா
ளெழுவாணின் றையகோ வென்பாண் மலைபோல்
விழுவாள் புரள்வாண் மெலிந்து. (உ)

இந்திரன்றன் தேவிதனை யின்னே பிடித்துவயிற்
செந்தழலுக் கீவனெனச் சென்றிடும்பின்—னெந்து
திகைக்குநன்று நன்றுநந்தஞ் செய்கையீ தென்று
நகைக்குங் கறிக்கு நகை. (ங)

அற்ற கரத்தை யருதகரத் தாலெடுக்கு
மொற்றும் விழிநீ ருகுக்குங்கம்—மெற்றுமினிச்
சாவதுவே திண்ணமெனுஞ் சாற்றுமெங்க ளண்ணர்முன்
போவதெவ்வா றென்னும் புலர்ந்து. (ச)

பங்கமுற்று மங்கமென்றன் பங்கயநே ரங்கைதனைப்
புங்கவர்கள் போவான் புணர்த்தினரா—லங்கவரைக்
கொன்றுலக மெல்லாங் குலைப்பனென்றாள் சீறியான்
பொன்றுவனே னென் முன்னம் புகைந்து. (ரு)

பாரு ளுயிரைப் படுத்திடவோ முந்நீரு
ளாரு மழலை யவித்திடவோ—மேருவினைப்
பந்தெனவே யேந்திடவோ பல்லுடுக்கோ ளைக்கழங்கா
வுந்திடவோ வென்னு முருத்து. (௬)

ஆருமஞ்ச விவ்வா றசமுகிசொல் வீரமொழி
சாருறுவா னென்முகியாந் தையல்கேட்—டோருந்
தருவர் குலத்துதித்துந் தக்கோ ரெனப்போ
யிருளை முன் சொல்வா ளெடுத்து. (௭)

உலகமென் செய்யுமா வும்பரென் செய்வ
ரிலகொருவ னூற்கை யிழக்கி—னலகிலா
வண்ட மனைத்து மழிக்கினும்யார் கேட்கவல்லா
ரெண்டகுவர் மானே யியம்பு. (௮)

அன்னவை யாவுமுடை யண்ண னினைமுனிவன்
முன்னலைநீ யொன்றுஞ்சூர் முன்னுறப்போ—யின்னவெலா
மாதரவிற் சொல்லினவ னண்டர் தமைமுடிப்பன்
போதறுணி யென்றாள் புரிந்து. (௯)

தக்கன்செய் வேள்வியின்கட் சாரமரர் தானவருண்
மிக்கவர்மெய் யங்கபங்க மேவினரா—னக்கனெழிற்
கானையகத் தார்க்கன்றிக் காயமதிற் காயவடு
வேனையர்க்கு நீங்குமோ வீங்கு. (௧௦)

ஆதலினு னங்கைநீ யங்கைநீங் கிற்றென்ன
வோதருமாச் சோகமுத லுன்னலைவெம்—மாதுயர
மோகமுட னின்ப முறைமுறையெல் லாவுயிர்க்கு
மாகுமெனத் தேற்றினு ளாங்கு. (௧௧)

இன்முகிசொற் கேளாத் துருமுகிநன் றென்றெழுந்து
மன்சசியைக் காணூஉ மானவெந்தீ—வன்பினெழ
வெங்கணெளித் தானு மினிப்பிழைப்புண் டாங்கொனுமக்
கெங்கள்சூ ராளு மிடத்து. (௧௨)

காந்திடுநின் கேள்வனொடிக் கான்வாழ் நினையும்
புரந்தனில்வாழ் தேவரையும் போயீர்த்—துரந்சனிற்கொண்
டென்னகரந் தன்னி லிருஞ்சிறையில் வைப்பறிண்ண
மன்னன் செயலால் வலிந்து. (௧௩)

இயங்கு முமையான் சிறைபடுத்தே னென்னிற்
றயங்குலகெ லாம்வென்று தாவா—வயங்கொளுஞ்சூர்
நாடியநற் றங்கையல்ல னென்றனமார் புற்றிடினும்
பேடியென்றெ ணென்றகன்றாள் பேர்ந்து. (௧௪)

அசமுகிசோகப்படல முற்றிற்று.

ஆ. திருவெண்பா அகூஅ.

# இந்திரன்மீட்சிப் படலம்.

---

ஆங்ககல நின்ற வடல்வீர மாகாள
னெங்குமயி ராணியைப்பார்த் தோன்னை—யிங்குறைக
வான்புரக்கு மன்னன் வருமளவுந் தீங்கின்றி
நான்புரப்ப னென்றுரைத்தா னன்கு. (௧)

போனபின்னர் மாதப் புறவிலொரு பால்வைகிக்
கோனுறுதி பெற்றுவரக் கோதிறவந்—தானிழைத்தா
னன்னா னுறுதுயர மங்கயிலைக் கேகிமன்பாற்
சொன்னா னிசைவல்லோன் சூழ்ந்து. (௨)

இன்னன் மொழிகேட் டினைந்துபின்ன ருட்டெளிந்து
மன்னமர ரோடசன் மாண்புகழ்தான்—பன்னிநந்தி
தேவன் பதமலரைச் சென்னி தனிற்சூடி
மேவன்பிற் சொல்வான் விழைந்து (௩)

உய்வினையே யுன்னி யுயர்கயிலைக் குற்றனன்முன்
செய்வினையே நாடியருள் செய்கிலன்ம—னைவினையும்
போயின் புறநோற்பான் போகவிடை நல்கென்றா
னோயின் றழல்கோ னுனித்து. (௪)

நின்றபோ மென்னவரு ணந்தியெங்கோன் கூறமனங்
கன்றமர ரோடுங் கழுமலம்போய்—மன்றவனை
மெய்யன்பாற் புல்லியின்சொன் மிக்குரைத்து வீரவினி
யையன்பாற் போதியென்றா னாங்கு. (௫)

அன்னமன்னா னோற்குமடத் தண்மயவள் சோர்வகற்றித்
துன்னு மசமுகிசொல் சூள்வினவி—யென்னசெய்வ
தென்றிற் குரியனுட னேகியண்டர் சூழ்ந்திடப்பொற்
குன்றிற் கரந்திருந்தான் கோ. (௬)

இந்திரன்மீட்சிப்படல முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௯௦௪

---

# சூரனரசிருக்கைப் படலம்.

---

இவ்வகைவிண் ணேந்த விருந்தனன்பின் வைம்முகத்தா
னெவ்வமொடு மன்னகர மெய்தினா—னவ்வமய
மாவீற் றிருக்கு மகேந்திரத்திற் சூரபன்
மாவீற் றிருந்தான் மகிழ்ந்து. (௧)

ஆயிரமாங் கோடியண்டத் தாடகமாப் பித்திகையு
மேயகொடு விண்ணிழிந்த தொல்புவியிற்—பாயொளியிற்
சேயிதழும் போருகத்தோர் செய்தெனவம் பொற்பொதுவோ
ராயிரமா யோசனையே யாம். (உ)

இத்தரையார்ந் துள்ளதண்டத் தின்னிடையே யெய்ந்துநிற்கு
மத்தவரை யாவுமெடுத் தம்புயத்தோர்—வைத்தன்ன
வத்தாணி யம்பொற்றா ஞயிரமாங் கோடியுள
வத்தாணி யொன்றவிரு மாங்கு. (ந)

கண்டோர் மனங்கண் கவரோ வியமிலங்க
விண்டோய்செய் வானின் விதானமேற்—கொண்டோங்கு
வெண்ணிலா தித்த ரிறைபணியி னிற்பபோற்
கண்ணடிக ளாங்கவிருங் காண். (ச)

பல்லண்டத் துள்ள பகலெவெந்தீ யில்லுருக்கி
யொல்லவொன்றாக் கித்தவிசா வோங்கிடச்செய்—தெல்லுடுக்கள்
கொண்டு குயிற்றிக் குழுமதியைக் கோளரியாக்
கண்டனபீ டந்திகழுங் காண். (ரு)

அன்ன வரியணைமே லாயிரமாங் கோடியண்டத்
துன்னுவட வைவிடஞ்சேர்ந் தோருருக்கொண்—டென்னவங்கைக்
கூற்றிருந்தா லன்னபடை கொண்டவுணர் போற்றெடுப்ப
வீற்றிருந்தான் வெந்தகுவர் வேந்து. (சு)

ஓங்குபுக ழோரீ ருருக்கொண்டு சூரபன்மன்
பாங்குவந்தாங் கொண்கவிகை பாலவுணர்—தாங்கவிறற்
றாரகன்றிண் சீயமுகன் சார்பினுற மைந்தரொடு
கூரமைச்ச ராங்கமர்ந்தார் கூர்ந்து. (எ)

ஆயிரமா மண்டத் தமர்மருத்து நீர்க்கிறையுந்
தூயபனி நீர்தூய்த் தொழுதெழல்போன்—மேயவெஞ்சூர்
பாங்கிரட்ட வெண்கவரி பன்னவுண ரண்டத்தோ
ராங்கரிய கல்கிகிற்பா ரங்கு. (அ)

கான்றம் பலம்பொற் களாசியொளிர் வான்பொருள்க
டேன்றயங்கு தாரவுணர் செங்கைகொள்—வான்றயங்கு
மென்கா னறியமணம் வீசவமிழ் திந்தளாய்
மின்கான் முகிறுளிக்கும் விண். (கூ)

வானவர்க டம்மகளிர் வாளரக்கர் தம்மகளிர்
தானவர்க டம்மகளிர் சாரணர்மு—னேனைக்
கயனயனக் காரிகையார் காமுறவே வெவ்வே
றியனடனஞ் செய்வா ரினிது. (க0)

அங்கமைந்துங் காலை யுறைவா னமையந்தான்
பங்கயனோர் பாங்கொதுங்கிப் பார்க்கவவன்—றங்கமைந்தர்
நன்றுகன்ன லீர்க்கடத்தி னோடிப் பதந்தோறுஞ்
சென்றுமுறை சொல்வர் திரிந்து. (கக)

மீன்னும் வரமுனிவர் வாழ்கெனவே யாசிசொலித
துன்னுங் கரம்விரித்துத் தோத்திரிக்க—தின்னிலெனை
நீள்கடைகா வல்லோர் நெருக்கிற் புடைப்பவும்பர்
மீள்குவர்தம் முள்ள மெலிந்து. (கஉ)

திருவனையார் தன்மனையிற் றீபிகைமாத் தட்ட
மிருகாத்தாற் சுற்ற விசைக்கந்—தருவர்நன்
மங்கலமாப் பாட்டிசைப்ப மாகதர்பல் லோர்புடைநின்
றங்கவன்சீர் சொல்வ ரமர்ந்து. (கங)

கார்த்தரூவ ரெண்டிசைமாக் காவலர்தன் னோன்கழற்காற்
றார்த்து மலர்தூவிப்பத் தூமுனிவர்—சீர்த்தவனுள்
ளக்கதமுந் தாமலடுத் தாசிசொலி யாய்துணரு
மக்கதமுஞ் சிந்துவா ராங்கு. (கச)

ஆடுநர்க்குந் தன்சீ ரறைகுநர்க்கு மின்னிசைகள்
பாடுநர்க்குத் தக்க பரிசளிப்பன்—பீடுறுமாத்
தேவருமற் றேவருமன் சிற்றமுறி னச்சமுறீஇ
யோவறவே நிற்ப ருவந்து. (கரு)

சூரனரசிருக்கைப்படல முற்றிற்று

ஆ திருவெண்பா சுகசு.

---

# அசமுகிநகர்காண் படலம்.

---

இன்னபரி செய்திடச்சூ ரேந்த லிருக்குமெல்லைத்
தொன்னகரின் மைம்முகத்தா டுன்முகிமின்—றன்னொடுற்றாள்
சீர்தரும கேந்திரமார் செல்வ முகந்தெளவை
யோர்துணையோ டுற்றதுபோ லுற்று. (க)

கைதுமிக்கப் பெற்றவளைக் கண்டினைய தீமைதனைச்
செய்தவரா ரோதேர்ந் திலமென்று—வெய்துயிர்த்துக்
கொந்தா ரவுணர் குழுக்குழுவாய் நின்றுநின்று
சிந்தா குலமெய் தினர். (உ)

அன்னதுகண் டங்கநான் காடுநரு மாடுகரி
முன்னெதிர்க்க விட்டமர மூட்டுநரு—மின்னபல
வாட்ட மயர்குநரு மன்னவைவிட் டாங்கெழுந்து
கூட்டமுறக் கூடுவார் கூர்ந்து. (ரு)

பாடகயாழ் பாடுநரு மாதரிசை கேட்குநரும்
பாடகமின் கிண்கிணிக்காற் பாவையர்செய்—நாடகநற்
கண்களிக்கக் காண்குநருங் கையறுசெய் கையுணர்ந்து
விண்களிக்க நொந்தெழுவார் வேர்த்து. (சு)

சொற்கலைநூல் கற்பாருந் தூங்கலரி தேருகைக்கு
நற்கலைநூல் கற்பாரு நாந்தகமா—விறகலைநூல்
கற்பாருந் தத்தங் கழகமிகந் தன்னவட்கண்
டற்பா ருறக்கவல்வா ராங்கு. (எ)

நன்மங் கலவேள்வி நன்மையுறச் செய்குநருங்
கன்மங் கடிந்து கடிதெழுந்து—துன்முகியோ
டங்கை துமிந்த வசமுகியின் கோலங்கண்
டங்கை குலைப்பா ரடுத்து. (அ)

அத்தகையர் பல்லோரு மன்னவனைக் கண்டழுங்கி
யெத்தகைய ரோவீ திழைத்தனர்கொ—லித்தகைய
செய்தா ரினியென்ன செய்யா ரெனப்புழுங்கி
யெய்தா விசைப்பா ரிவை. (எ)

மன்னவர்மன் றங்கை மறிமுகத்தி ளுளநகை
யின்னபரி செய்திடுமேல் யாமெல்லா—மென்னபங்க
மெய்துவமோ வென்றுபல வெண்ணியெண்ணி யேங்கியினி
யுய்திறமே தென்பா ருயிர்க்கு. (அ)

அந்தகனை வென்ற வரன்செயலோ மேதியங்க
மந்தமுற வாற்றியவை யைசெயலோ—வந்தநர
சீயத்தைக் காய்ந்த திறல்வீரன் றன்செயலோ
வாயத்தேர் கில்லமென்பா ராங்கு. (கூ)

மையணெழின்மேனி மாயனரன் சேரவந்த
வையன்றன் செய்கைகொ லாமென்பார்—வெய்யதிறல்
வெள்ளைமணித் தந்தநந்தம் வேழமுகற் காய்ந்தவைங்கைப்
பிள்ளைசெய லோவென்பார் பேர்ந்து (க0)

போற்றுபரற் போற்றுது போற்றுபரந் தாமெனவே
சாற்றுதலை வர்க்கேற்ற தண்டநனி—யாற்றுவிறற்
சங்குகன்னன் குண்டோ தரன்பானு கம்பனு
துங்கவர்தஞ் செய்கையென்பார் சூழ்ந்து. (கக)

மாலுமிந் தா செய்யான் மலரோ னிதுகினையான்
சாலநமக் கஞ்சுஞ் சதமகனோ—வேலவிது
செய்வானன் றண்டர்தாஞ் செய்குவரோ வென்பருரு
மைவா யவுணர் மருண்டு. (கஉ)

மன்னிருவர் தாஞ்சூன் வழங்கியொள்வாட் போர்புரியாப்
பன்னுகர மிற்றனரோ பார்மினென்பா—ரின்னவரை
நாடிவின வின்முனிவர் நாமே நிலவரைப்பி
லோடி யறிதுமென்ப ருற்று. (கங)

இன்ன பலவா றிருநகரத் தார்சோராப்
பன்ன வசமுகிதான் பாங்கியொடு—மின்னலுற்று
வன்மருங்கு லாரிரங்க வாளவுணர் போற்றமன்னர்
மன்மருங்கிற் கிட்டினாள் வந்து. (கச)

அசமுகிநகர்காண்படல முற்றிற்று.

ஆ திருவெண்பா ௬௩௩.

---

# அசமுகிபுலம்புறு படலம்.

---

இன்ன லுற்றே யாரு மிரங்க வசமுகிமன்
றென்னகர்வா யில்கடந்து சூர்முதன்முன்—றன்னி
யினைந்தனையை முன்னோரை யேனையரை நெஞ்சி
னினைந்து புலம் புற்ற ணடிது. (க)

ஆங்கால கால னருள்புரிந்த ஞான்றுவந்தாய்
நீங்கா துமைப்போற்றி நிற்பனென்றாய்—திங்காய
போதுமன்னே யஞ்சலெனப் போந்திலையந் தோகரம்போ
யேதிலர்போ னிற்கின்றேன் யான். (உ)

எவ்வயினு நீர்வருவீ ரென் றுதுணிந் தேர்சசியை
வவ்விவந்தே னென்கையை வாங்கியே—வெவ்விறல்கொள்
வீரமா காளனென்போன் மெல்லியலை மீட்டகன்றான்
சூரர்காள் வந்திலிர்நீர் சூழ்ந்து. (ங)

ஆழிதனிற் றியடங்கி யாங்கமயம் பார்த்திருந்தே
யூழி தனில்வெளிப்பட் டோங்கியுல—கேழினையும்
பாழ்படுத்து மாபோற் பதுங்குதெவ்வ ருங்களையு
மூழ்படுத்து வாரே யொளித்து. (ச)

காண்டகுசே யாயுறுநாட் காய்கதிரோ னாதபமெய்
தீண்டவவற் பற்றிச் சிறையிலிட்ட—மாண்டகுசீர்
வாய்ந்தமரு காவோ மருகாவோ வீண்டொருவன்
காய்ந்தனன்கை யீர்ந்தகன்றான் காண். (ரு)

அச்சுதன்ற னாழிதனை யாரமெனமார்பணிந்தோய்
வச்சிரத்தா னேவலினால் வந்தொருவ—னச்சுறுவை
வாளா லெனதுகரம் வாங்கியகன் றானந்தோ
வாளாநின் றாயுலக மாங்கு. (சு)

இந்திரனை யோர்கரத்தா லெற்றினைவா னின்றனையான்
றந்தியொடு வீழவுதை தந்தையென்பர்—நந்தவன்கேள்
வீரனென் கைதடிந்தான் வென்றியுறு சிங்கமுகா
சூரவிது காண்கிலையோ சூழ்ந்து. (எ)

சூரனெனப் பேர்படைத்த தோன்றறொல் லண்டமெங்குஞ்
வீரமொடு சென்றிடுநின் வெம்பரிதி—தீரமொடென்
கைதானீர் வீரமா காள னுறைவனத்தி
லெய்தாதோ வன்மையுளா ரென்று. (அ)

ஒண்டலர்தஞ் சூழ்ச்சியினா லோர்முனியென் மைந்தருயிர்
கொண்டகன்றான் மற்றொருவற் கொண்டென்கை—துண்டுசெய்தா
ரென்னா குலங்களையா தென்னரசு செய்கின்றாய்
மன்னாவோ மன்னாவோ வாய்ந்து. (கூ)

அண்டமெலாங் காத்தருளு மண்ணாவோ வண்ணாவோ
துண்டமுறு மென்கரத்தைத் தோகையர்கள்—கண்டிகழப்
பண்பிறந்து மின்னுமுடல் பாவியேன் மேவிநின்றேன்
பெண்பிறந்து பெற்றனளிப் பேறு. (௧0)

அசமுகிபுலம்புறுபடல முற்றிற்று.

ஆ திருவெண்பா கூமாகூ.

---

# சூரன்றண்டஞ்செய் படலம்.

---

பேரன் புடையர் பெரிதிரங்கத் தான்புலம்பிச்
சூரன் சுவணத் துணைக்கழன்முன்—வீரன்வாள்
போழ்ந்த புழையினின்று புண்ணீர் பொழியவெய்யோன்
வீழ்ந்து புரண்டாண் மெலிந்து. (க)

ஆழிபோ லன்று ளவையிற் புரண்டலற
வூழிபேர்ந் தென்னவச்ச மூட்கொண்டார்—பாழி
விழவிழித்துச் சூரன் வெருண்டுகெண்ணிற் செந்தீ
யெழவிழித்துச் சொல்வா னிவை. (உ)

என்னையோ விங்கெற் கிளையோய் புலம்புகின்று
யுன்னையோர் கில்லா ருறழ்வில்லேன்—றன்னையுமே
தேர்கின்று ரில்லையிந்தத் தீங்குவிளைத் தாருயிரோ
டார்கின்று ரார்நீ யறை. (௩)

வானோர்க்கு மன்மனைவி மாதலத்தி லோர்புறத்திற்
றேனெற் றனணின் றணக்கென்னக்—கோநோக்கிச்
சென்றெடுத்தே மோர்வீரன் சீறியெங்கள் கைதுணித்து
நின்றவளை மீட்டகன்று னோர்ந்து. (௪)

என்னுமுன்னேக் கிற்புலிங்க மெய்ந்துகழூக் கிற்புகைதான்
றுன்ன வுயிர்ப்பிற் சுவாலையெழ—மன்னித்
தொழுந்தகைய சூருன்னுந் தோறு முளத்தி
லெழுந்ததுசீற் றத்தீ யெரிந்து. (ரு)

சீற்றமுறச் சூர்நடனஞ் செய்கின்றுர் பாடுகின்றுர்
வேற்றருவ ராரும் வெருண்டிரிந்தா—ராற்ற
நடுங்கினமண் மூந்நீர் நடுங்கினவிண் மேரு
நடுங்கினமற் றெல்லா நலிந்து. (சு)

எண்ணருஞ்சீர்ச் சூர னிளையோர் தமைநோக்கி
விண்ணவர்கோ னேவல் வினைஞனு—மண்ணகத்தோர்
கானுறைவாற் கொண்டிவர்தங் கைதடிந்தா னென்னிலினி
மானுடரு மேயடுவார் வந்து. (எ)

அரனே யலனயனே யல்லனெழிற் றுமோ
தரனே யலன்வைரத் தானைக்—கரனே
யலனவனே வல்புரிவோ னுமிவர்கை யீர்ந்தே
நிலனுலவி வாழ்வா னெடிது. (அ)

வானவரைப் பற்றியென்முன் மன்னவுணர் வெம்பசிக்கிவ்
வூனயின்மி னீரொன் றுதவுகிலேன்—கோனையவன்
வண்மையுறு மாதுதனை வான்சிறையில் வையாமே
யெண்மையரென் றெண்ணினேன் யான். (௯)

கைத்தலத்துண் டப்பவிட்ட கார்மதத்த யானையொத்தே
னித்தலத்தி லேயிவர்கை யீர்ந்திட்ட—தய்த்துணரி
னீனமன்றி யெற்குவே றில்லை யவர்த்துருவப்
போனவரும் போந்திலரிப் போது. (௧௦)

ஏனுடைய நீரிருந்தி ரேற்றமைந்தர் தாமிருந்தார்
மானுடைய தேர்நேமி வாய்த்திருந்த—நாணற்
றவரிருந்த கைவீரர் சாரிருந்தா ரந்தோ
வெவரிருந்து மாநின்ற தென். (கக)

தின்னு மசமுகிகைச் சோரித் துளிபரந்து
மன்னும் புகழை மறைத்ததென்று—லுன்னரிய
வென்றனர சின்னியரு னிவ்வண்டத் திவ்வுலகி
னன்றுநன் றென்றுநக்கா னோர்ந்து. (கஉ)

பன்னருஞ்சூர் தானைக்கப் பானுகோ பன்கவன்று
மன்னவர்மன் முன்புக்கு வந்தனைசெய்—தென்னேய
கேணமதே வல்செயண்டர் கேடுபுரி யார்நுங்கை
யேணமர்கை போமாய மென். (கங)

மீன்சுமந்துன் னேவல் வினையினிற்கு மும்பரிது
தான்செய்யற் பாலரோ தாழ்ந்தவர்மேல்—வான்சினநீ
கொள்ளுதியோ மூவர்மேற் கொள்ளினுமேன் மைத்தாகு
முள்ளுதியோர்ந் தெந்தா யுளத்து. (கச)

என்றுநவின் றெந்தா யெடுத்த சினந்தவிர்தி
சென்றுநொடி யிற்சுவர்க்கந் தீக்கொளீஇ—யொன்றுபொரு
ளெற்றி யிமையவரை யிந்திரனை யோர்சசியைப்
பற்றிக் கொணர்வேன் பணி. (கரு)

தாதைசின நீங்கிவிடை தந்துமை ந்த போதியெனக்
காதலனுந் தாழ்ந்திருவர்க் கண்டிறைஞ்சிப்—போதலுஞ்சூர்
தம்முனுமை யர்ப்பார்த்தஞ் சன்வருவ னிங்கவனை
நம்முன் கொணர்திரென்று னன்கு. (கசு)

தூதரயற் கண்டுன்னைச் சூரழைக்கின் றுனென்னப்
போதனெல்லை மன்னவன்முன் போயங்க—மோத
வெவர்க்குமத்த ஞரீ யிழந்தகைமுன் போல
விவர்க்குதவு கென்று னிறை. (கஎ)

மன்மலரோன் கூட்டரிவை மார்கரத்தைப் பார்த்துமெச்சி
வன்மறியி ஞனோநகர் வாயிருத்தித்—துன்முகிமூ
தாட்டிதனைச் சேயொடுய்த்தா னோராணி மேவிடத்தைக்
காட்டிவரு கென்னக் கரைந்து. (கஅ)

பாங்கிருந்த வேவலரைப் பார்த்தினனுர் கோளிவரை
யீங்கழைத்தீ ராலென் றியம்பவெஞ்சூ—ராங்கவர்போய்
நேடியவர்க் கொண்டு நிறுவவனுர்க் கண்டளவி
னீடியதே சீற்ற நெருப்பு. (ககூ)

வெங்கதத்த வேந்தன் விசிகதிரோ ஞூழியர்க்க
யெங்கைகாஞ் சேதித்தோ னின்னுயிரை—ஙங்கிலீர்
சேணிற் றிரிலீரிச் செய்தி தெரிகிலிரோ
வேணுற்றீர் சொல்வீ ரெமக்கு (உ०)

என்டகுவ ரேந்த விவள்கரத்தை யீர்ந்தவரைக்
கண்டிலே மென்னக் கரையவவர்க்—கொண்டு
வருத்த முறச்சிறையில் வைத்துழையர்ப் பாரா
மருத்துவரைத் தம்பியென்ருன் மன் (உக)

ஓறறர் சிலரோடி யொல்லை மருத்துவரைப்
பற்றிமுன்ன ருய்த்திடலும் பார்சதெங்கு—நிற்றிரெங்கை
கைதுமித்தோன் றன்னைநீர் காண்கிலிரோ வென்றவரைச
செய்தவதரோன் வைத்தான் சிறை. (உஉ)

மன்ஞண் டிருது மதியெல்லை யாளரையு
முன்ஞற் றருதிரென மொய்ம்பருய்ப்ப—வுன்ஞவிண்
கோன்சிறையி லுற்றீர் கொடியீர்நீ ரென்றவரை
வான்சிறையி லிட்டான் வலிந்து (உங)

வலவரை நோக்கி யிறைப்பொழுதி லிப்புவியின்
காவலரைத் தம்பியெனக் காலிற்போயப்—பூவலயத்
தோடியெங்குந் தேடியொற்ற ருற்றவரைப் பற்றியுய்த்தார்
மோடியுறை தோட்குர் முனம். (உச)

அச்சமுறு மன்னவரை யாற்ற லவுணர்கோன்
வெஃசெனப்பார்த் தெம்மேவல் விட்டும்பர்—மெச்சிறைவன்
மின்ஞெ டொளித்தனனிம் மேதினியில் விண்ணிலில்லை
யென்ஞெ வளித்ததுநீ ரிங்கு (உரு)

வானவர்கோன் ஞதன் மறிமுகத்தா டன்கரத்தைத்
தானறுதது நின்ருன் றலத்தரியீர்—பானறைக்க
ளுண்டிறங்கி னீரோநீ ரோம்பலிர்கொல் லோபகைஞர்க்
கண்டிறவு கொண்டீரோ காண். (உசு)

கோவேநீ கூறிமா கொண்டிலநின் றெவ்வா
மேவே வரையுமே மேவிலங்கை—யோவே
ணிருவரையுங் கண்டிலே மிஃதென்ன மாயம்
பொருவரைய வென்ருர் புலர்ந்து. (உஎ)

எற்றவெறுக் கையான்மா லேய்ந்து புடவிநன்ருப்
போற்றல் புரிந்திலீர் பொற்பிதெனக்—கூற்றின்
மினித்தயங்கு வாளுரீஇ வீரரைச்சூ ரேவித்
தனித்தனியே தண்டித்தான் ரூன். (உஅ)

சில்லோர்கை நாத்தடிந்தான் சில்லோர் செவிகளைந்தான்
சில்லோர் சிறந்துண்டஞ் சேதித்தான்—சில்லோர்தோள்
சென்னிதுமித் தானித் திறம்பலமா தண்டங்க
ளென்னி யுஞற்றினன்வெஞ் சூர். (உக)

மா திறல்கொள் சூரன் மலரோனை நோக்கிநீ
போதியெனப் போதன் புரவலகே—ளாதவன்மீ
னேனோ ருலகிலிவ ரின்றிமுடி யாதுநமக்
காஞர் சிறைவிடென்ற ஞங்கு. (௩0)

அன்னுரை யொற்றரைக்கொண் டாங்கழைத்து நீவிர்க
மொன்னுரைச் சேரீரென் றேதிவிட்டுத்—தன்னார்
புடைநின்ற சேயமைச்சர் போதனுள்ளிட் டோர்க்கும்
விடைதந்து கோயிலுற்றான் வேந்து. (௩க)

சூரன்றண்டஞ்செய்படல முற்றிற்று.

ஆ திருவெண்பா கூஎகூ.

---

# அமரர்சிறைபுகு படலம்.

---

செல்படியுந் தன்கோயில் சென்றபின்பே ரோர்புனையாத்
தொல்படைகைக் கொண்டுதம்பை சூடிமுற்ற—வெல்படைக
வீரா யிரமிவுளி யீர்த்திடுந்தே ரேறியுய்ததான்
சீரா யிரங்கதிரோன் றெவ். (க)

ஆரவுண ராகீத்த மாயிரமா வத்தொகையே
தேரிபமஃ திற்பாதி சேரனிக—மாரதுண்டு
ளாடன் மலிவீர ரார்ப்பொடுவிண் சென்றனவே
சேட னெளித்தான் றிகைத்து. (உ)

பன்னிறமார் கேதனங்கள் பல்கவிகை யீட்டங்க
டன்னிறமா கத்தூளி தாவியெழ—மன்னிளவ
றுற்றநகர் நீங்கிப்போய்த் துன்முகியை நோக்கிநுங்கை
யிற்றதெவண் சொல்கென்ற னீங்கு. (௩)

அங்குமர கேண்மோவெம் மத்தமறுத் தோர்வீரன்
தங்கினனே ரைராணி தானுமுற்றாள்—பொங்கரிங்க
னென்றுசுட்டிக் காட்ட வியமுறங்காக்காழிநகர்
மன்றனறுங் காவடைந்தான் மன். (௪)

சூர்மைந்தன் முன்சென்ற தூசிப் படைசென்று
கார்மல்கு காவைவெளி காணவழித்—தார்வுறவி
னன்னுதலை மீளிதனை நாடியெங்குங் காண்கிலன்சீர்ப்
பொன்னுலகிற் புக்கான் புலர்ந்து. (௫)

காரவுணர் கூம்புக் கலனிருமீன் சிகரமாத்
தேரிபமா வோதை செயமுரசா—வாரணிக
முள்ளம்போர்க் கூக்கவெழுந் தூசியின் மேலோங்கவெழு
வெள்ளம்போற் போர்த்த விரைந்து. (௬)

மிக்கு மயேந்திரம்போன் மேவுகையாற் பொன்னகர
மொக்கு மெனும்பண் பொழியவே—புக்கவுணர்
வீரம்போர் சானையதை வீட்டிக் குரங்கின்கை
யாரம்போ லாகியதே யாங்கு. (௭)

வானுலகில் வந்தோன் வலிசெழுசூர் மைந்தனும்
பானுகோ பப்பேர்ப் பதகனென—வான
பயந்தலைக்கொண் டோடிப் பதைபதைத்து வானோர்
சயந்தனிடஞ் சாற்றினர் தாம். (௮)

ஓது குரவனில்லை யும்பர் பலரில்லை
தாதையன்னை யிங்கில்லை சார்ந்தநும்மோ—டேதிலன்மெய்
வெவ்வண்ண மானேன் விளைவும் விதிவசமு
மெவ்வண்ண மாமோ வினி. (௯)

தந்தையெம்மோய் தாங்கரந்து தாரணியிற் றங்கினர்
நிந்தைவரா மேபுகலா நிற்பவரார்—சிந்தைநொந்தொன்
றுவதே யில்லை யமர்புரிந்தே யாகவத்திற்
சாவதே நன்றென்றான் றான். (௧௦)

வருதீர ரேடமர்செய் வான்செல்வே னீவீர்
பொருதீரேல் வம்மினன்மேற் போமின்—கருதீரவ்
வான்போர்க் செலீரும் வராவிடினும் வீரமுடன்
யான்போய்ப் புரிவே னிகல் (௧௧)

இன்னசயந் தன்சொலநின் னெண்ணமெவ் வண்ணமோ
வன்னவண்ண மேயாங்க ளாற்றுவமென்—றன்னித்
தொழுதவுணர்ப் போற்றுவதிற் றுஞ்சுவதே நன்றா
மெழுதிமைந்த வென்றா ரிகற்கு. (௧௨)

சயந்த னிமையோர் தமைவியந்து தன்வெண்
கயந்தனையே நெஞ்சிற் கருத—நயந்தஃதோர்ந்
தோங்கனடந் தாங்குவந்த வும்பறனை யூர்ந்தகன்றான்
பாங்கமரர் சூழப் பரிந்து. (௧௩)

பூழியிருள் செய்யப் பொருபடையென் றாழ்விளைப்ப
வாழியுடைத் தேர்கயமா வாளனிகஞ்—சூழியவென்
னாளையிவர்த் தெஞ்சயுந்த ஞாவுண னின்றமைந்தன
ருளையெதிர் சென்றான் சமர்க்கு. (கச)

புகலவுணர் கண்டற் புதமெய்தி யாரு
நகநமக்கே வல்புரியு நாகர்—தகவினவ
ருன்னினார் யாதோ வுணர்கிலே மென்றவரைத்
துன்னினார் துன்னலார் சூழ்ந்து. (கரு)

நெருங்கியிரு வோருநின்று நேர்கேர் கணைதூ
யொருங்கயின்முன் மொய்படைமெய் யுய்ப்ப—வருங்குருதிச்
சோரிநீர் தோய்ந்து துறக்கமது தோன்றுசெக்கர்ப்
பேரியல்வா னுயதே பேர்ந்து. (கசு)

இருதிறத்தி னுரு மிகல்விளக்குங் காலை
யொருதிறலின் றும்பரொழிந் தோடப்—பொருதகுவர்
பின்றொடர்ந்து பற்றிப் பிணித்திறைவன் முன்னருய்ப்ப
நன்றுகொனங் காவலென்று னக்கு. (கஎ)

கண்டான் சயந்தன் கனல்விழிகா லச்சீற்றங்
கொண்டான் றனுவைக் குனித்திகல்செ—யொண்டார்
பணைமார் பிருதோள் பதைபதைப்ப வூழிக்
கணைமாரி யுய்த்தான் கடிது. (கஅ)

அன்ன பொழுதவுண ரண்டர் படையெதிர்போய்
முன்னரன்வெற் பைக்கடைநீர் முற்றுதல்போன்—மன்னவனார்
வெண்கரியைச் சுற்றியது மேற்சயந்தன் மேற்கோடி
யெண்கணைக ளேர்த்தா ரிரைந்து. (கசு)

சயந்தனவை சிந்தித் தவர்வளைஇத் தெவ்வர்
கயந்தடந்தேர் மாவீரர் கள்சாய்ந்—தயர்ந்திரிய
வெங்கணைதூய் நூறுவெள்ளம் வீரரையு மாய்வுசெய்தான்
செங்குருதி யாறுய்ச் செல. (உ0)

நீலகே சன்சயந்த னேர்போய்த் தனுவளைஇக்
கோலனிதம் பெய்தரவே கோவிளவல்—சால
வவசந் தலைக்கொளவும் பாயிரந்து யன்னான்
றவுசந் துணித்தான் கறுத்து. (உக)

அன்னு னிளவலத்தத் தார்தனுவைக் கூர்கணைதூய்ச்
சின்னுபின் னஞ்செய்யச் சேயுளத்தி—னுன்னுவோர்
மாயமதா லெண்ணிலுரு மன்னியெங்கு மாய்நின்றான்
றீயவுணர் கண்டார் திகைத்து. (உஉ)

சயந்தன் பலவுருவந் தாங்கியம ராற்ற
வயந்தன்பா லின்றியொன் றன் மாழ்கி—யயர்ந்தனின்றான்
மாயமது மாற்றும் வலியிலன்சூர்மாபடையேன
போயலமந்த புலர்ந்து. (உ௩)

சோமா சுரன்முதலாச் சொல்லும் படைத்தலைவ
ராமாய மீதென் றறிந்துணரார்—தாமாய்ந்த
விஞ்சைபலி யாதிருக்க வெய்யரென்செய் வோமென்று
நெஞ்சங் குலைந்தார் நினைத்து. (உ௪)

அன்னபொழு தாயிரத்தெட் டண்டமுமாள் வான்மைந்தன்
தன்னனிகத் தாழ்வதனைத் தான்காண—வின்னதிக
லிந்திரன்சேய் செய்மாயை யென்றெண்ணி முன்புகர்சொன்
மந்திரமுட் கொண்டான் மதித்து. (உ௫)

மதிக்கவுஞ்சூர் மைந்தன் வலாரிமகன் மாயை
கதிக்குமுரு நீங்கக் கரிமேன்—மதிக்குறைபோற்
றோன்றினனிவ் விஞ்சைபுகர் சூழ்ச்சியெனு மானக்கோ
வூன்றினன்றன் னுள்ளத் தருத்து. (உ௬)

வருதிமக வான்மகனின் மாயைவலி தீர்ந்த
கருதியான் போதருமுன் கண்டா—யிருகண்
டருதிவலை யேலவென்றிற் றாழ்சிறையில் வைப்பன்
பொருதிவலை யேலென்றான் போந்து. (உ௭)

வல்லுநர்தாம் வெல்வதூஉம் வல்லரல்லர் தோற்பதூஉ
மில்லையா னாழ்புணர்த்து மேய்ந்துனைநீ—சொல்லுறுத
லொல்லுறுமோ வென்ன வெய்யோ ளெதுவரிச் சொன்மடியார்
செல்லுவரோ வீரரென்றான் சூழ்ந்து. (உ௮)

செங்கரவி னன்பகைஞன் சீறிச் சயந்தன்மே
லங்கரவி னன்குவளைத் தாயிரங்கோன்—மங்குலெனப்
பெய்தா னவனும் பிறங்குதனு வாங்கியே
வெய்தா னவன்மே லெதிர்ந்து. (உ௯)

தானவர்கோன் சேய்விடுகோற் றக்கவெதிர்ந் தேவிடுத்தான்
வானவர்கோன் சேயிவ் வணம்பலகா—லானை
யிருவருமே விற்குனித்தம் பெய்திருந் யின்னும்
பொருவதுபோற் செய்தனர்வெம் போர். (௩0)

விண்ணவர்கோன் மைந்தன் விடுசரம்போய்ச் சூர்மகன்றே
ரண்ணனிகத் தைப்பதித்த வன்னவன்மேற்—றுண்ணெனப்பெய்
கூர்ந்தகணை பட்டுநெய்த்தோர் கொப்பளிக்கப் போரிழந்து
சோர்ந்து கிடந்தான் சுரன். (௩௧)

சயந்தன்பா லின்றிச் சயந்த னறிவு
வியந்தந்து சோருமெல்லை வேழந்—துயர்ந்தவுண
னூரிரத மேற்பாய்ந் தூறுசெய நோக்கினன்
சூரிவெழுின் மைந்தன் சுளித்து. (௯௨)

மற்றவன்றன் மார்பினிடை மாதங்கந் தாக்குதலு
மிற்றனகாற் கோடு மிபக்கரத்தைப்—பற்றியொரு
கையிற் கவுளிற் கடிந்தொறுத்தா னஃதரற்றி
யைய விழுந்த தயர்ந்து. (௯௩)

சேயஃதோர்ந் தம்மாயை தீர்ந்திதுவெல் வன்மையிலேந்
தீயரினிப் பற்றுவார் சீர்கெடுவூர்—நீயிரங்கே
னெஞ்சமே யூழி னெறிகாணென் றான்சயந்தன்
துஞ்சவுணர் கண்டார்த்தார் சூழ்ந்து. (௯௪)

தானைத் தலைவர் சயந்தன் றனையுழுவை
மானைத் தெறல்போல் வதைக்கவதைப்—பானுப்
பகையவனை யீர்த்தொறுத்திர் பாழ்ஞ்சிறையி லாரோர்
தொகையொடிவற் சேர்மினென்றான் சூழ்ந்து. (௯௫)

அன்னதுசெய் காலை யருங்கா வலரைவிளித்
தன்னு சயந்தனிவ ரோடமற்ற—மன்னமரர்த்
தங்தெழிலூர் நீக்குத் தருதிரெனத் தேர்ந்தவரை
யுந்திமுன்பின் றீயிட்டா றுற்று (௯௬)

அரிபுரந்தா விக்கிளர்தீக் காயபின்னவ் வூர்தீர்
திரிபுரந்தா னென்னத் திரியப்—பரிபுரந்தாட்
கிட்டசயந் தன்னிவர்க்கொண் டேகுதிர்நீர் முன்னரென
விட்டவனி வந்தனன்சேய் மீண்டு. (௯௭)

வீர மகேந்திரம்போய் வேந்தன்றா டாழ்ந்தவன்முன்
கூரமரர் தம்மைக் கொடுத்திட—யாரணங்கைக்
கண்டிலன்வி ணனொளியையுங் காணேனெனத் தாய்நகர்தீ
மண்டவைத்தே னென்றான் மகிழ்ந்து. (௯௮)

மகன்செயலோர்ந் தேந்தன் மகிழ்ந்தினவற் புல்கி
யிகன்மகனை விண்ணவரை யீர்த்தே—யகன்மெலிய
மோதிமின்னீர் வாளான் முகம்புயந்தா ளாதியங்கஞ்
சேதிமினீ ரென்றான் சினந்து. (௯௯)

புல்வா யினமேற் புலிபாய்ந் தெனத்தகுவர்
சொல்வாய் சயந்தனண்டர்ச் சூழ்ந்துபற்றிப்—பல்வாய
வங்கந் துணித்தா ரசமுகிதான் காணவெய்யோர்
பங்கமின்றவ் வங்கமுற்ற பண்டு. (௱)

அன்னதனைக் கண்டுவெகுண் டாரவுணர் கோன்சிறையி
லின்னவரைக் கொண்டிடுதி யென்னவெய்யோர்—மன்னிளவ
றன்னையண்டர் தம்மையுந்தித் தாளிற் றளைபூட்டி
யுன்னுசிறை யுய்த்தா ருருத்து. (சக)

சூர னகரிற் சுரமகளிர் தாங்குறுகிக்
காரவுண ரேவல் கலையாற்றி—வீரத்
தடம்பாய் புலிவா யகப்பட்ட மான்போற்
படம்பா டுறைபவர்யார் பார்த்து. (சஉ)

இன்னற் கடலி லிமையோர் விழுந்தழுந்தித்
துன்னற் கரிய துறைகாணு—துன்னுமெல்லை
வெந்தகுவர் கோன்மகனல் வெண்கோ டிழந்ததந்தி
யந்தலம்வந் துற்ற தயர்ந்து (சங)

பண்காட்டும் வேதப் பரியுடைய தானுவினை
வெண்காட்டு ளர்ச்சித்து மெய்யெய்தும் -கண்காட்டு
மாற்கோடு மூர்த்தியா மாவிறையோன் மேவருளா
ற்கோடும் பெற்றதுவே நன்கு (சச)

அன்ன வமயத் தணங்கினொடு மேருவின்பாற்
றன்னமரர் கோனகருஞ் சூர்மகனல்—வன்னி
கொளுவித் தனயனும்பர்க் கொண்டு சிறையிற்
றளுவித்தது தேர்ந்தான் றன். (சரு)

ஆண்டமுங்கி மாறேற்ப வத்தனினக் கென்னவரம்
வேண்டுமெனச் சூரினத்தை வீட்டுகென்று—ஞண்டடைய
மாதினையா மேவியொரு மைந்தற் றரவவன்கு
ராதியரை வெல்வனென்று ஞங்கு. (சசு)

சொன்மகவான் றேர்ந்தயன்மால் சூழ்தரப்போய்ச் சோதிதன்பான்
மன்மதனை யுய்ப்பவன்ஞன் மாய்ந்தெழுந்த—பின்மலைமன்
யின்னையரன் மன்வரையில் வேட்டுவெள்ளி மால்வரையி
னின்னை யளித்தா னெடிது (சஎ)

எந்தைநீ வந்தபின்ன ரெம்மனே ரெல்லோரு
முந்தைநீள் செல்வமுற்ற மொய்ம்பினர் போற்—சிந்தையுற்று
மஞ்சிக் கரந்திருந்தா ராரவுணர் கோன்காணில்
வெஞ்சிறைக்கண் வைப்பனென வேர்த்து. (சஅ)

கரந்திடுமோல் காயத்தார் காரவுணர்க் காணி
னூரந்துளங்க வேர்த்தலந்தா ரொத்துத்—தூரந்தவுயி
ருற்றுயிர்ப்பர் சூரையுன்னி னுண்மெலிவ ரேகண்டாற்
சிற்றுயிரு நீப்பரம்மா தீர்ந்து. (சகூ)

பொன்னகரைப் பாழ்படுத்திப் புத்திரனை யும்பரொடு
மன்னுசிறை செய்துபொருள் வவ்விமன்னைப் — பின்னு
கரந்துணைவா ளுற்றவிடக் கண்புரிவா னன்று
னுரந்துணைவா ராரிவ் வுலகு. (௫௦)

அண்டத் தனியண்டத் தாற்றினனிவ் வாறேனை
யண்டத் தவன்செய்கை யாரறிவா — ரண்டத்
தமரா ரறியா ரயன்மா லறியார்
குமரநீ தேர்வை குறித்து. (௫௧)

பூமனவர்க்குப் புகல்வனித னைந்தங்க
மாமன் பொருது வயமிழந்தான் — றேமனறுங்
கொன்றையா னன்னவரைக் கொல்லான் வரத்தினீ
கொன்றையா வாளென்றான் கூர்ந்து. (௫௨)

இன்னவகை யன்பினு லெந்தை யுயக்கிளையப்
பொன்ன னுரைப்பப் புதல்வர்சொ — லன்னையத்த
ரென்ன வினவி யினிதுரைத்தா யாவுமெனப்
பன்னியருள் செய்தான் பரிந்து. (௫௩)

எல்லா மொருங்குணரு மெந்தா யெளியேன்புன்
சொல்லா லுணர்வதுண்டோ தோம்பொறுத்தி — நல்லார்
கருத்திலமர் வோயென்னக் கந்தவே ளுன்னே
யிருத்திநீ யென்றா னினிது. (௫௪)

பொன்ன னிருக்கப் புரந்தரனை நோக்கிவெஞ்சூர்
மன்னினத்தின் மாய்த்திமையோர் வன்சிறைநீத் — துன்னரிய
விண்பதத்தை நீயாள மேவியளிப்பமென்றா
னெண்பதத்துக் கெட்டா விறை. (௫௫)

குணங்குறியில் கோனிதனைக் கூறுதலு மேவி
மணங்கமழுங் கற்பகத்தார் மன்னன் — வணங்கித்
திருந்திமையோ ரோடேத்திச் சிந்தை மகிழ்ச்சி
பொருந்தி யிருந்தான் புரிந்து. (௫௬)

அமரர்சிறைபுகுபடல முற்றிற்று.

ஆக திருவெண்பா ௧௦௩௨

அசுரகாண்டம் முற்றிற்று.

---

மூன்றாவது

# மகேந்திர காண்டம்.

---

## வீரவாகுதேவர் மாதனஞ்செல் படலம்.

மனவாக்குக் காயமினை வந்தனைசெய் தேத்தி
யுனவாக்கு நன்மையிலே னுய்யக்—கனவார்
திருகுமரக் கோட்ட திறன்மறியி லேறி
வருகுமரக் கோட்ட வர. (க)

இந்திரனே யாதியும்ப ரேவரும்பாங் கேத்திநிற்பச்
செந்தியமர் செவ்வேள் சிவனளித்தோ—ருந்திவந்தோ
னாதியர்வெங் காரவுண ராயினுந்தீ யோரையட
ளீதியெனத் தேர்ந்தா னினைந்து. (உ)

சூர்தருவெஞ் சூர்வயினோர் தூதைவிண்ணோர் வன்சிறைதான்
றீர்தருவா னுய்ப்பினவன் செப்பியநற்—சீர்தருசொற்
கேளாமற் போகினவற் கேளொடட முன்னின்
றான வர்க்கருள்வா னங்கு. (ந)

அங்கதிர்வே லண்ணலய னாதியரைப் பார்த்தவுணர்
தங்களைவெல் வானொருதூ தைவிடுத்துப்—பொங்குவெஞ்சூர்
தன்கருத்தை யோர்துமெனத் தாழ்ந்து சுரரிஃது
நன்கறத்தி னீர்மையென்றார் நன்று. (ச)

கந்தவே ளிந்தக் கடுந்திறவோர் மூன்றாதா
வுந்துவதி யாரை யுரைத்திரென—வந்தினுக்கும்
வீர மகேந்திரத்துண் மேவரிது போய்வருவான்
வீரமொய்ம்ப னென்றான் விதி. (ரு)

போதனுரை தேர்ந்துவகை பூத்துவிறல் வாகுவைப்பார்த்
தோதரும கேந்திரமூ தூரேகிப்—பீதமுடிச்
சென்னியன்முன் வானோர் சிறைவிட் டறத்தினுய்தி
யென்ன நவிறி யினிது. (சு)

அதுமறுத்த னானே லவுணனின்றன் கேளைக்
கதமெனமாய்த் துன்னையெஃகாற் காயத்—துதைநாளைச்
சீறிகளுற் சேனையொடுஞ் செல்லுதும்யாந் திண்ணமெனக்
கூறிமீள் கென்றான் குகன். (எ)

வென்றியவுணர்சூழ் வீர மகேந்திரத்துட்
சென்றுவெஞ்சூர் முன்பானீ செப்புமரு—ளொன்றமொழி
நன்றியம்பி மன்கருத்தை நாடி வருகின்றே
னென்றிறைஞ்சிப் போனு னெழுந்து. (அ)

மாலவன்பின் சென்று மகேந்திரத்தில் வெஞ்சிறையுட்
சாலவண்ட ரோடுஞ் சயந்தனுற்று—னேலவவற்
றேற்றியதன் பின்னின் செயல்முடித்தி யென்னநிற்றி
யாற்றியது செய்வனென்று னுங்கு. (க)

எண்மரிளை யோரு மிலக்கரும்பின் சென்றிடக்கண்
டொண்டிறலீர் நீர்கேண்மி னென்னகர்போய்த்—திண்புயவெஞ்
சூர்கொளவேள் சொற்றவெலாஞ் சொல்வனவன் சொன்மறுக்கி
னூர்கொளுத்தி மீள்வனெல்லை யுற்று. (க0)

என்றவரைப் புல்லி யினிநின்மி னென்றருளி
மின்றாளம் வீசலைக்கண் மேருவெனத்—துன்றி
யிலகுகந்த மாதனமே லேறினன்றிண் வீரன்
கலகலவென் றார்ப்பக் கழல். (கக)

சீருருக்கொள் சேவடியைத் தோருஞ்சேய் தேவருக்காப்
பேருருக்கொண் டாங்குப் பிறங்கலின்க—ணோருருக்கொண்
டோகை யுறநின்று னும்பர்க் குறுதிசெய்வான்
வாகை யுறுவீர வாகு. (கஉ)

வேதன்பல் புள்ளுருவா விண்டெல பாம்புருவா
மீதல நாடுறல்போல் வீயாவம்—போதரவே
வேணுவேய் வெற்பில் விறல்வீரன் வெற்புருவாந்
தாணுவே யென்னநின்றான் றான் (கங)

விரைகமழுதார் வீரன் விலங்கலின்மேற் செந்தாள்
வரிகழல்க ளார்ப்பவைக்க வன்க—ணரிதாலுங
கண்டிசைதான் கேட்டரிமான் கைம்மா முதலியன
வெண்டிசையுஞ் சென்ற விரிந்து (கச)

வலாரிமுதற் றேவர் வழுத்துதிறல் வாகு
சிலாதலமே னிற்கச் செறிபுள்—ளெலாவிட்
புலஞ்சென் றனவே பொறியரவ மெல்லாம்
பிலஞ்சென் றனவே பிழைத்து. (கரு)

எண்டிசையே ழாழி யிருநிலம்விண் ணூழிநக
மண்டமுல கெல்லா மகன்விழியிற்—கண்டு
திகழ்கயிலை தாழ்ந்துமற்றச் சீர்நகர்கண் டொண்சூர்
நகரிதற்கொப் பில்லையென்று னன்கு. (கசு)

வான்புரிசை வெஞ்சூர் வளநகர்கண் டேசினந்து
தான்பிசைய வெண்ணியதிற் றாழ்சிறைமன்—கான்முதலோர்
கையவரு மென்றுவிட்டு நாமுருக்கண் டஞ்சுநரைக்
கையமைத்தே யஞ்சலென்றான் காண். (௧௭)

மின்வீர வாகு விலங்கலிலிவ் வாறுநிற்பப்
பொன்வீ ழரியிணையோர் பூதரும்பர்—மன்முனிவ
ராரும் வியந்தார்த் தலர்தூய்த் தொழுதுவெஞ்சூ
ரூரடைந்து தீர்க்கென்றா ரூறு. (௧௮)

அன்னதோர் காலையெந்தை யாறிருதோள் வாழ்கவருண்
மன்னுமறு மாமுகங்கள் வாழ்கதிண்ப—தின்னொருவர்
துங்க மணிப்படையுஞ் சூரவிலும் வாழ்கசெவ்வே
ளங்கழல்கள் வாழ்கவென்றா னங்கு. (௧௯)

கூரன்பு கொண்டு குமரற் றொழுதேத்தி
வீரன் புலனொன்ற மெய்பொடிப்பப்—பேரருளின்
மூழ்கிக் குதூகலிப்ப மூதுலகத் தாவிமகிழ்
வாழ்கடலில் வீழ்ந்த வடுத்து. (௨௦)

ஆங்கணெழிற் செவ்வே ளருள்பெறுமா வீரனிந்த
வோங்குருவி னேகி னுலையுமெனாத்—தீங்கிலுரு
மெய்ந்நிலவக் கொண்டோங்கி வீர மகேந்திரமா
மொய்ந்நகரம் போந்தனனே முன். (௨௧)

வீரவாகுகந்த மாதனஞ்செல்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா உ௧.

---

## கடல்பாய் படலம்.

புனைகழற்கால் வீரன் புவிக்கீழ்வீழ் வெற்பை
யினையனீ மீண்டெழுதி யென்ன—முனையினெழப்
பன்னவண்செல் கால்விசைப்பிற் பார்வரைகள்பாற் படர்ந்த
பின்னவர்தற் சேறவெனப் பேர்ந்து. (௧)

விண்டலத்தா றேகுமையன் வேகத் தெழுமருத்தா
லண்டந் திரிந்தவுயி ரார்த்தயர்ந்த—கொண்டல்
சுழன்றகறங் கிற்கடலிற் றோன்றூழித் தீயு
மழன்றதன்மை போய்க்குளிர்ந்த தாங்கு. (௨)

பன்வரைத்திண் டோளான் படர்விசையி ஞர்வளியான்
மன்கவினூர் மாட மகேந்திரத்த—முன்கமழுஞ்
சோலைதனை சாய்ந்த சுறாமுதலாம் பல்வகைமீன்
வேலைதனிற் பாய்ந்த வெருண்டு (௩)

மூதிர்ந்தவழி வார்வீர மொய்ம்புபாய் வேகத்
ததிர்ந்தசலங் கீழ்போ மமையத்—ததிர்ந்தகன்வான்
மீன்போய் விழுவுவரி மீன்பாய்ந் தெழவிரண்டும்
வான்மேயார் புரிவதொக்கும் வாய்ந்து (௪)

தேருந் திறல்வீரன் சென்றிடப்பாற் செங்கரத்தி
லாரு மணிக்கடகத் தாரொளிபோய்க்—கூருமணி
நேமிவெற்பிற் சூழிருளை நீக்கியிகல் செய்கின்ற
வேமகண்ட வில்லோ டெதிர்ந்து. (௫)

தெவ்வரும் வீரன் சிலம்பினின்று பாய்ந்தமரர்
வெவ்வேய சனைதொலைப்பான் மேவருளிற்—செவ்வேள்
கடுவே நிகரவணர் காமர் நகர்மேல்
விடுவேலிற் சென்றான் விரைந்து. (௬)

பொன்வரையின் கோடு பொருவளியின் வேகத்தாற்
றென்கடலிற் போய்விழல்போற் செல்வீரன்—மன்வளங்கொள்
சூர னகர்வடபாற் றன்யாளி யானனன்போற்
றாரணித்தா மெல்லையுற்றா னோர்ந்து. (௭)

கடல்பாய் படலம் முற்றிற்று.

ஆகத் திருவெண்பா உஅ.

---

# வீரசிங்கன் வதைப் படலம்.

அன்னதன்முன் யாளி யபிதானன் சேனையொடு
பன்னருஞ்சீர்ச் சூரனைக்காண் பான்செல்ல—மன்ன
னலங்கலதி வீரனென்சே யாயிரவெள் ளத்தோ
டிலங்கைவைகிப் போற்றியுற்றா னேய்ந்து. (௧)

நோயிலதி வீர னுவறகுவர் போற்றநகர்க்
கோயிலின்க ணண்ணக் குலவடபால்—வாயிலின்கண்
ணோரவுணர் தானைவெள்ள மைஞ்ஞூறோ டங்குற்ற
வீரசிங்கன் கண்டான் வெகுண்டு. (௨)

ஒல்லையிவ ஞவி யொருங்குண்பே னென் றுன்னிச்
செல்லையுறழ் மெய்வீர சிங்கனென்போன்—வல்லைவின்
ணேகுவின்மன் றனையைஞ்ஞா றேய்ந்தவெள்ளஞ் சூழவிறல்
வாகுவின்முன் சென்றான் வலிந்து. (௩)

சென்றளவில் வீரசிங்கன் றிண்வீர வாகுவைப்பார்த்
தின்றளவு மெங்காப் பிணிலெவருந்—துன்றினவ
ரில்லையார் நீவந்த தென்னையுயிர் நண்பில்லாய்
சொல்லையா வென்றான் சுளித்து (௪)

மன்னிலங்கை வாவி வயமுறுசூர் வைகுமெழின்
மின்னகர்ம கேந்திரம்போய் மீளுவா—னுன்னிவந்தே
னீதென் செயல்வலியை யேல்வேண்டிற் றூற்றுதியென்
றோதினன் றிண் டோள்வீர னோர்ந்து. (௫)

அன்றான் மொழிகேட் டவுணர் திறலானை
புன்றான் வலியோர்தா மூங்குறனன்—றென்றாச்சேசாம்
பறறவிற லோரையிவ ஞவிகொள்வீ ரென்னவவர்
சுற்றினர்றிண் வாகுவினைச் சூழ்ந்து (௬)

வேல்விடுப்பர் தண்டெடுத்து வீசுவார் வில்வளைஇக்
கோலவிடுப்பர் சூலமது கொண்டெய்ப்பர்—சால்பரிது
தன்னையுரு முக்கொண் டூழித் தான்வளைந்தாற் போலவுணர்
துன்னியபர் செய்தார் துதைந்து. (௭)

[illegible]யதுயராக் தோடும் பனித்திரளை யோட்டுகின்ற
காய்கதிரோ னென்னக் கனன் றுறையுள்—வாய்திணிவாள்
கொண்டவுணர் தங்கள் குழுவனைத்துந் தான்றுமித்தான்
றிண்டிறல்கொள் வாகு திரிந்து. (௮)

சிலர்கை யிழந்தார் சிலர்தோ ளிழந்தார்
சிலர்கம் மிழந்தார் திகைத்துச்—சிலர்தாம்
புரிந்தா ருயிரினையே போற்றிடுவான் மண்வா
னிரிந்தா ரவுண ரெதிர்ந்து. (௯)

சென்றிடலும் வீரசிங்கன் சீறிவிறல் வாகுவின்மே
லொன்றவொரு சூலமுய்ப்ப வோங்கதனை—வென்றிதரு
மேதியினு னீக்கவெய்யோ னேண்குலிசம் வீசவதை
யேதியினுன் மாற்றினன்கோ வேற்று. (௰)

சென்றுமுன்றன் வாளோச்சிச் செங்கை துமித்துவெய்யோ
னொன்றுமுடி கொய்துவரி யுள்வீட்டி—வென்றிகொடு
மின்றான் விடுவாண் மிளிருறையுட் பெய்துறையுஞ்
சென்றான் குகன்றூதன் றேர்ந்து. (கக)

வீரசிங்கன் வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௩௯.

---

# இலங்கைவீழ் படலம்.

---

அலங்கலந்திண் டோளா னவுண ரிருப்பா
மிலங்கையின்மேற் பாய்தலுமே மயங்கிக்—கலங்கித்
தயங்குமதி வீரன் றகுவரிடி யேற்ற
புயங்கமென வீழ்ந்தார் புலர்ந்து. (க)

வீரமொய்ம்பன் றாளூன்ற வேலையிடை வீழிலங்கை
கூரமரர் கோமான் குலிசமுறு—தார்கலியி
னூடு புகலுற் றொளிதருமை நாகமெனுங்
கோடு தனைநிகர்க்குங் கொல். (௨)

ஓர்தரும கேந்திரமூ தூர்வடபான் மேவிலங்கை
சீர்தருதிண் டோள்வீரன் செய்யகழ—லார்தந்தே
யூழியின்க ணாற்புறமு மோதநீ ரார்த்தெழுந்து
சூழியவாழ் பாரிணையுஞ் சூழ்ந்து. (௩)

கோளிலங்கை வேலேந்துங் கோமான் விடுதூதன்
வாளிலங்கை யத்தனடி வைத்தளவில்—வாளிலங்கை
யாழ்கடலிற் சோமுகன்மா வாரணநூ றான்கவர்ந்து
மூழ்கிக் கிடந்ததொக்கு முன். (௪)

இலங்கிலங்கை மூதூ ரிருங்கடலுண் மூழ்கத்
தலங்கொடதில் வைகுந் தகுவர்—கலங்கி
மருண்டார் கவன்றார் மலங்கினார் சூழ்ந்து
வெருண்டார் புலம்பினார் வேர்த்து. (௫)

கரமீர்ப்ப சில்ல கழலீர்ப்ப சில்ல
சிரமீர்ப்ப சில்ல திணிதோ—ளுரமீர்ப்ப
சில்லவுண விற்றம்மைத் தின்று பருத்தவுட
வல்லவுணர் தம்மைமச்ச மாங்கு. (௬)

ஆயினோ டத்தனையு மன்பின் மனையோடு
சேயினையுங் கொண்டு சிலரகன்றார்—மேயசில
ரத்தமுற வெய்ய வயிர்மாப் படையுய்த்துத்
தத்தமுயிர் தாங்கினார் தாம். (எ)

கலங்கவிழ்ந்தாங் காடற் கவின்புயமா வீரன்
பொலங்கழற்கா ளூன்றப் புனலு—ளிலங்கைபுக
வக்கலஞ்சூ ழும்பியின்மே லாங்குளா ரேறுதல்போன்
மிக்கவுண ரேறினர்மீன் மேல். (அ)

வாரியதன் மீதெழுசில் வாளவுணர் வேள்விடுதிண்
சீரியல்கொண் மீளி செயல்காணா—வோரி
னயரு நமையு மடுவனென வல்லே
துயரினயல் போனார் துடித்து. (க)

இலங்கைவீழ்படல முற்றிற்று.

ஆ திருவெண்பா சஅ.

---

# அதிவீரன்வதைப் படலம்.

---

ஆரிலங்கை மூழ்க வதிவீரன் கண்ணுற்றுக்
கூரின்ன ஞானுட் கொடுசினவி—யாரிழைப்பர்
சூரபன்மன் றானோ துணைவரோ மைந்தரோ
தேரிவரல் லாலிச் செயல். (க)

அன்ன ரிதுபுரிதற் காவதோ ரேதுமில்லை
பொன்னாட் டிறையுமுயிர் போற்றியுய்வான்—பின்னருந்
தெவ்வடுசூ ராணையுன்னிச் சிந்தையினு மெண்ணுகிலார்
செவ்விதென்றன் காவற் றிறம். (உ)

மின்றங் கிலங்கைதனை வீழ்த்தார் தமைநாடிக்
கொன்று குருதி குடிப்பலெனாத்—துன்றனிகத்
தாரையுங் காண்பா னதிவீரன் சீற்றமொடு
வீரைமேல் வந்தான் விரைந்து. (ங)

செழுந்திரைமூழ் கீருட் டிகழ்வடவைச் செந்தீக்
கொழுந்தினிகல் வாகுவெனக் கூறுந்—தொழுந்தகையைச்
சோனைமுகி னேர்நிறத்த தோன்றலதி வீரன்றன்
சேனையொடு கண்டான் சினந்து. (ச)

சீற்றமொடு கண்டுநகை செய்திலங்கை வீழ்தருவா
னாற்றிநின்று னாவண னானானென்றென்—றேற்றினதி
வீரனிவ னவிதனை வீப்பனெனுச் சென்றிடனு
நீரனது கண்டான் றெரிந்து. (௫)

அந்த வமயத் தவன்புடையி லார்த்துவந்த
வெந்தகுவர் போர்விளைப்ப வீரமொய்ம்ப—னந்தலில்கூர்
வாள்கொண்டு வீசவெங்கண் மார்பிருதோள் கைநெடுந்தா
ேள்கொண்டு வீழ்ந்த துடித்து. (௬)

தின்னனிக மாயத் தரியா திகல்புரிவான்
மன்னனதி வீரன் வருதலைக்கண்—டுன்னுதிறல்
வாகுவரு கென்றழைப்ப மற்றவனோர் குந்தமதை
யாக மிசையெறிந்தா னங்கு. (௭)

உந்துமொரு குந்த முரத்தி லுறுமுன்னர்க்
கந்தவே டுதன்றன் கைத்தலத்தார்—கொந்தழனோர்
வாளிலிரண் டாய்த்துணித்தான் மன்னனது கண்டுதண்டம்
காளைநிறத் துய்த்தான் கனன்று. (௮)

தண்டந் தனைவாளாற் சண்முகன்றா தன்றுணிக்கக்
கண்டங் கதிவீரன் காய்தந்து—திண்டடமார்
புய்க்கவொரு சூல முரவோ னதைநொடிப்பிற்
கைக்கொண் டிறுத்தான் கடிந்து. (௯)

அதுகண் டிவனைவெல்ல லார்க்குமரி தென்னுக்
கதிர்தருவாள் கொண்டிலைந்து கஞ்ச—னுதவினது
சாதிக்க வல்லையேல் சார்திநீ யென்றுசில
வோதிக்கற் றேன்முனுற்று னுற்று. (௧௦)

நன்றுநன்று னுண்மைநமை நாடிவெல்லை யேல்வியப்பார்
நின்றுசில கூறுவதே னேர்தியால்—வென்றிதரு
வீரருந் தம்மை வியப்பரோ வென்றுன்மா
வீரருண்மா வீரனும் வேந்து. (௧௧)

என்னவெய்யோ னோர விருவோரும் வாள்விதிர்த்து
மின்னுமுகி றேன்றி மிளிர்வதுபோன்—மன்னுமொவ்வோ
ரங்கமுறை நாடி யமர்புரிந்தார் சாரிவந்து
செங்கணனல் சிந்தத் திரிந்து. (௧௨)

ஓதுயிரு வோரு முறைபோ ருஞற்றுகையிற்
கோதில் குணத்தெங் குமரவே—நீத
னறைத்தா ரவுணனைக்கூர் நாந்தகத்தாற் சென்னி
குறைத்தா னுயிர்கொண்டான் கூற்று. (கூ)

அதிவீரன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா சுஙக.

# மகேந்திரஞ்செல் படலம்.

மேவும் விறல்வாகு வீர மகேந்திரத்துட்
போவதுன்னி வான்னெழுந்த போதுவரி—யோவில்
கலங்கைநிமிர் பாரங் கழியவெழு மாமபா
விலங்கைநகர் மீண்டெழுந்த தீங்கு. (க)

நீரார் நெடுங்கலமே நேரிலங்கை நீத்தெழுந்து
சாரா யிரயோ சனைவிசும்பிற்—போரா
மணிச்சிகரங் கண்டான் மகேந்திரவெல் லைபோய்க்
கணிச்சிகரங் கொண்டவன்சேய் காண். (உ)

மன்னூர் வதியு மகேந்திரமூ தூர்வடபாற்
பொன்னூர் மணிக்கோ புரத்தருகிற்—கொன்னூருங்
கோரனதி கோரனெனுங் கூர்வீரர் சேனையொடு
மாரநனி காத்திருந்தா ராங்கு. (ங)

கரியா யிரவெள்ளங் காற்றேரு மற்றே
பரியா ளதற்கிரண்டு பங்கா—மிரியா
மிகுந்தானை வாரிகண்டு விம்மிதங்கொண் டாங்குப்
புகுந்தா னவில்வான் புலத்து. (ச)

ஈண்டுறி னித்தானை யேற்றே யிகல்விளைக்கு
மூண்டுநா னேரினுநாண் முற்றுமுற்று—மீண்டுநகர்ச்
சாரனிக மேவுஞ் சமர்புரியிற் பல்பகலாங்
காரவுண ரெண்மையரோ காண். (ரு)

பல்பகல்சென் றாலும் பரப்பவுணர் தானைசெற்று
வெல்குவனேல் வெஞ்சூர் வெகுண்டுதிறன்—செல்வர்
துணைவரையுய்ப் பானவரைச் சூழ்ந்தடுவே னேனு
மிணையிலன்சா கான்வரத்தா லீண்டு. (சு)

அன்னான் றனைமா லயன்றனக்கும் வெல்லரிதாற்
பின்னா ரவனைவெலும் பெற்றியார்—பன்னாட்
சமர்செயினுஞ் சாகான் சயமின்றி மீள
னமர்தமக்கே யாகு நகை. (எ)

இத்தன்மை யாகவே யான்போ ரிழைத்திருந்தா
லுத்தமமாந் தூதுணர்த்த வொல்லுமோ—பத்திமையு
ளாரனைவார்க் காரருள்செய் யாறிருதோ ளண்ணலன்றிச்
சூரனையார் வெல்வார் சுளித்து. (அ)

இங்கியான் போர்தா னிழைத்துவெல்வ னேனுமிற
மங்கியான் செய்பினண்ணி யச்சூரைச்—செங்கையார்
வேலாற் றடிந்தமரர் வெஞ்சிறைமீட் பாரொருநா
ளேலா வரல்வேண்டு மீண்டு. (௯)

ஆதலால் வெஞ்சமர மாற்ற னியதியன்றே
யீதெங்கோ மாற்கு மிசைவன்று—தூதர்செய்
தன்மையாங் கொல்லோபோ தன்முறைமை யாமென்றான்
வன்மையார் மன்வீர வாகு. (௰)

இப்பா லணிக மிருப்பதனு லெய்தலரி
தப்பா லடைகுதுமென் றாவுன்னி—வெப்பார்
நிணவா யுடைவா ளெடுங்கரங்கொள் வீரன்
குணவாய் தலிற்சென்றான் கூர்ந்து. (௧௧)

மேடதிக் கனனு மிளிர்வீர பானுவுமா
மாதிக்கத் தாரவுணா ரந்தலைவர்—மாதிக்
குதக்கண்வா யில்புரந்தா ரோங்குமங்க ணின்ற
கதக்கண் ணவுணவெள்ளங் காண். (௧௨)

மன்றனாறுந் தார்வீர வாகு வதைக்கண்டு
துன்று கடிக்காவல் சூழ்ச்சியுணர்ந்—தொன்றுநெறி
செல்லரிதென் றுன்னித்தென் றிக்குவழி போய்த்தருவ
னல்லதென்றட் கொண்டகன்றா னங்கு. (௧௩)

மகேந்திரஞ்செல்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா எச.

---

# கயமுகன்வதைப் படலம்.

---

செல்லுகையி லேந்தல்கீழ்த் திக்கு மாக்கலத்திற்
புல்லுமீ காமணின்விண் போற்றுவா—னொல்லுங்
கதப்பற் றகலாக் கடுங்கூற் றனையான்
சதப்பத் திபமுகத்தோன் றான். (௧)

ஈரா யிரமொய்ம்ப னெண்ணு ரிலாக்குறையான்
காராழி யுண்டுவான் கார்கறிக்கு—நீரான்
கரும்பா தகஞ்செய் கயமுகவன் கண்டான்
வரும்பா டுடையவனை வாய்ந்து. (௨)

கண்டான் கனன்றிவனென் காவல் கடந்துவந்தாய்
கொண்டாய்கொ லோமாயை கூர்வறியு—மண்டாதே
யேணையிலா ரேரினூ ரென்றெணினு யிந்நகர்நம்
மாணையறி யாயோ வணைந்து. (௩)

மூள்சினத்துற் றேன்வீர மொய்ம்பவல்லை மாய்ந்தனைநீ
மீள்கின் றனையல்லை மேதகுகு—ராள்புரியிற்
சேர்கின் றனையீது சீயவிய லாயவுழை
பேர்கின்ற தாகும் பெரிது. (௪)

சார்தற் கருமிலங்கை தாவியவ்வூர் காணவந்தா
யோர்தற் கருமாயை யுற்றையுனை—யார்விடுத்தா
ரால மயின்றவனோ வம்போ ருகத்தவனோ
ஞால மயின்றவனோ நன்கு. (௫)

சுற்றுநின் றுயிநகர் சூழவொற்றாய் வந்தனைதேர்
வுற்று ருனையுய்த்தா ருற்றதென்கொ—லிற்றுயு
ஞவியுய்தி யல்லைசிறை யண்டார் செயலுணர்வான்
மேவினைநீ போலும் விரைந்து. (௬)

வான்றோய் கனலின் மருத்துந்தப் பூனைபோ
லூன்றோ யுனைக்கொண்டே மூற்றதினை—னீன்றோ
னெனச்செலுமென் முன்னில்லா யெங்கன்றீர் வாயென்
றுணச்சொற் றுரப்பினன்றெவ் வோர்ந்து. (௭)

இவ்வா றியம்பி யெதிரி லெழும்போது
தெவ்வாங் கயாசுரன்முன் சென்றுகொடு—வெவ்வாயோய் *
சாவா யினியென் றலஞ்சார்ந் துளாய்கொலாம்
வாவாவென் றுன்வீர வாகு. (௮)

உன்னுங் கயமுகனே ரோங்கல் பறித்தெறிய
பன்னருந்திண் வீரன்றன் பாற்படலும்—மன்னதிரும்
பூதிவட்டு விண்டமைபோற் போயதுகண் டாயிரங்குன்
றேதியன்மேல் விட்டா னுருத்து. (௯)

விற்றாணி வீரன்மேல் வேழமுகன் விட்டவெலாங்
கற்றாண்மேல் வீழ்மட் கலம்போன்ற—நற்றாதன்
றிண்மை தெரிந்து திகைத்தா யிரமரம்போர்த்
தொண்மையன்மேல் விட்டா னுருத்து. (௧௰)

தாராரு மொய்ம்பன் றருவான வையெலாங்
கூராரும் வாளாற் குறைத்தெறிந்தான்—காரம்பற்
பேரான்கல் பேர்ப்பப் பெருந்தலையன் றன்புழைக்கை
யோராயிர மறுத்தா னுற்று. (௧௧)

தீயனீ ராயிரங்கை சேர்த்திவனைக் கொண்டுணவா
வாயிடுவ னென்றுவர வாளினாற்—சாயத்
தறித்தா னொருசார் தழுவா யிரங்கை
வெறித்தார் விறலோன் விரைந்து. (௧௨)

மற்று மிரங்கையான் மாமுகத்தோன் வீரன்மார்
பெற்றுநிற் குங்கா லிளவலுங்கை—முற்றுக
வீழ்தருவா னந்தகத்தால் வெட்டினன் வெய்யவன்வீழ்
போழ்தருவா னேர்ந்தனனப் போது. (௧௩)

துன்று கரமிழந்த தூங்கன் முகனவனைக்
கொன்றுயிரைக் கொள்வமெனக் கொண்டுளத்திற்—குன்றனைய
தோளாற் குகன்றாதன் றேண்மோதிக் கோடுடைகார்
கோளார்ப் பெனவார்த்தான் கூர்ந்து. (௧௪)

கரத்திலொளிர் வாளோச்சிக் காலை யவனை
யுரத்திலுயி ரோவ வுதைத்தா—னிரத்த
முடலினின் றுந்தியா யோடி யுவரிக்
கடலின்மே விற்றேற கடிது. (௧௫)

குன்றுறழ்தோண் மீளியவற் கொன்றகலக் கண்டவுணர்
துன்றுநெறி தோறுந் தொடர்ந்துவந்தார்—நின்றுசமர்
செய்தா லிவரோடு செல்லுநெடுங் காலமிது
நொய்தாமென் றோர்ந்தா னுனித்து. (௧௬)

சீர்தருமா வீரனன்னார் சேனையெங்குஞ் சூழ்தாலாற்
போர்தருவேற் புங்கவன்றாள் போற்றியே—சூர்நகரி
லாய்தற் கரிய வணுவுருவங் கொண்டுகுண
வாய்தல் சிகரியுற்றான் வந்து. (கஎ)

கயமுகன்வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா சஉஞ.

---

# நகர்புகு படலம்.

---

கந்தவே ளெந்தை கருணைகொடு தூதாக
வுந்தவே வந்த வொருவீர—னந்த
வியப்பார் மகேந்திரத்து மேவுவளம் யாவு
முயப்பார்த் துனுவா னுளத்து. (க)

அண்டத் தமரு மசல மருவியொடு
மண்டத்த வந்தனைகம் மாநிலைவிண்—கொண்டல்
பலவுங் குழீஇப் பயிலேங் கதியி
னிலமுற் றனமா நிலே. (உ)

ஆழியார் ஞாலத் தசலஞ்சூ ராணையாற்
பாழியங்கே ராநின்ற பான்மையே—சூழனிகத்
தெண்ணிடவு மேலா தெனினவையோர் கண்ணிலா
னெண்ணிடவு மேயுமோ வீங்கு. (ங)

பன்னுகரிக் கூடம் பதினு யிரமிரத
மந்நிலையக் கேமா வதற்கிரட்டி—யின்னுந்
துருவிடினோர் யோசனையே தோற்றுமெனிற் சீர்த்தி
மருவிநகர்க் கொப்பாமோ மற்று. (ச)

ஆழி யகழியண்டத் தார்மாவெற் பேர்மாடஞ்
சூழிஞ்சி கோபுரங்கள் சூரியற்கே—யூழிற்
றிறங்கொணகர் செய்தயன்மார் தேர்ந்துபின்ன ரிந்தப்
பிறங்கொணகர் செய்தார் பெரிது. (ரு)

அண்டங் களின்மல் கரும்பொருளெ லாங்கண்டே
னெண்டரும மேய்ந்ததயை யெவ்விடத்துங்—கண்டிலேன்
மஞ்சிறைகொண் மாநகரில் வானவர்க ளோடவற்றை
வெஞ்சிறைகொண் டான்கொலோ வேந்து. (சு)

மேவுசத யோசனைவிண் மேவியறு யோசனையா
மாவகலம் பெற்ற மணிகிளர்பொன்—ஞாவணங்க
ளேண்மேவு நாற்படையு மெய்தவிட மின்மையாற்
சேண்மேவுஞ் சேனை சில. (எ)

ஓங்குமணி மேற்றலத்தி லொள்ளலரி மேவுதலுந்
தீங்கனியீ தென்னச் சிறார்பற்றித்—தாங்கறித்துத்
தீயுறைப்ப விட்டினைய ரேர்ந்தவர்த நற்றாயர்
தூயகங்கை நீரளிப்பார் சூழ்ந்து. (அ)

கொல்லவுணர் கோனாணை கொண்டுகட னீர்பருகி
மல்லனாறுங் காவளவி மாக்களிபோன்—மெல்லமென்கான்
மின்சான் முகிறவழும் விண்மா ளிகைதோறு
மன்சா ளரத்துலவும் வந்து. (கூ)

ஏதமென்ப தெட்டுணையு மில்லா வெழில்கூர்ந்த
மாதரார் விண்டொருநீண் மாடங்கண்—மீதுவருங்
கோளுருமுப் பற்றாக் கொடுகழுங் கம்மனையா
நாளுமெறிந் தாடுவார் நன்கு. (க0)

செங்கதிரோன் றேரிவர்ந்து செல்லச் சிலமடவார்
தங்கண் மகாரையதிற் றன்வைத்தூர்ந்—திங்குக்
கொடுவா வெனவே கொடுபோ யவர்முன்
விடுவா னெனிற்றவமே மேல். (கக)

காரவுணர் காரிகையார் கால்வருடிக் காட்டேவ
லேரமரர் மாத ரியற்றுவரைந்—தாரு
மணியு மிருநிதியு மற்றுளவும் வேண்டி
னணியுதவி யேதிரியு மாங்கு. (கஉ)

மாசி லிருங்காலேர் மாட முறைசீப்ப
வாசநீர் கொள்கலவை வாரிதிமன்—வீசவே
யீரமொளிர் வெய்யோ னினிது புலர்த்திபிட
வாரவுணர் மேவுவா ராங்கு. (கங)

விண்ணூறு செல்கின்ற வெய்யோன் றனைப்பற்றிக்
கண்ணாடி யிற்கவினைக் காரிகையார்—பண்ணூரக்
கண்டெறிவ ரங்கவர்சேய் காமுறத்தேர் மாவினைக்கைக்
கொண்டளிப்பர் பின்விடுவர் கூர்ந்து. (கச)

விண்டோய் நெடுமாட மீதுசெலும் வானவரைக்
கண்டோர் சிலமடவார் கைப்பிடித்—திண்டோள்க
டுன்னமணந் தின்பநலந் துய்த்துநீர் போதிரா
லென்ன விடுப்ப ரிசைந்து. (கரு)

குழலினொலி யாழினொலி கோட்டினொலி வார்கொண்
முழவினொலி பாட்டின் முழக்கம்—விழவினொலி
மேலை யொலியாவு மேதினியைச் சூழ்கிடக்கும்
வேலை யொலியின் மிகும். (௧௬)

மானநெடு மாளிகைகண் மன்னு வணத்திலிந்தொப்
பான மருப்பிருங்கை யத்திசொரி—தானநீ
ராறுபடர்ந் தாங்கேகி யாடுசிறார் வண்சுண்ணஞ்
சேறுபடு மாறு செயும். (௧௭)

சொற்கலையும் வாட்கலையுஞ் சொல்பல் படைக்கலையும்
விற்கலையு மாய வினைக்கலையு—மற்கலையு
மாற்றுபுல மிக்கோ ரவிர்கட் புலனுக்குத்
தோற்றுபுலந் தோறுந் தொகும். (௧௮)

நரைதிரைமூப் புற்று நலிகின் றவரை
யுரைநமனு லாவியுலை வோரைக்—கரைநிரப்புக்
கொண்டவரைக் கூற்றனைய கொல்பல் கொடும்பிணிநோய்
கண்டவரைக் கண்டிலமங் கண். (௧௯)

கன்னற் சுவைநீர் கமழ்நெய் கடுந்தேற
லின்னற் பயவாரி யேசுருங்கி—மன்னவர்மன்
றன்னுனை கொண்டிநகர் சார்மனைதோ றுங்குளனு
மன்னு மருவுமால் வந்து. (௨௦)

பொன்னிறத்த வன்னமஞ்ஞை பூவைபுறாக் கிள்ளைமுதற்
பன்னிறத்த புள்ளினைய பல்வளங்கூ—ரிந்நகரிற்
கோதில் கொழுநலங்கொள் கோதையர்தங் கோல்வளைக்கைப்
போதி லிருப்ப புரிந்து. (௨௧)

கள்ளாற் றலினுங் களிப்பார் நறவினைக்கைக்
கொள்ளாக் கிளியாண் கொளவருத்தி—யுள்ளார்வ
மல்கச்சே வல்லிரங்க மன்னெகிள மென்பெடைமேற்
புல்கப் புணர்ப்பார் புரிந்து. (௨௨)

இடமா ரியன்மாடத் தேரிரதி யேயென்
மடமாதர் மாரனேர் மைந்தர்—தடமார்
புரவுறவே புல்கி யுவப்புறுநீர் மையா
லிரவுபக லோரா ரினிது. (௨௩)

பன்னசத்தின் சோரி பலியுடனேக் கித்துணர்தூய்
மன்னகத்தெய் வம்பரவி வான்கடவு—டன்னை
நெறியாற் றுறப்படுத்தி நேரிழையார் பல்லோர்
வெறியாட் டயர்வார் விழைந்து. (௨௪)

கடுத்தடுசி யம்புலிமான் கண்முதலா வுண்ணற்
கடுத்த விலங்கனைத்து மாங்குப்—படுத்தவற்றின்
வண்டசையூண் வேண்டி மறுகுளர்கொள் வான்பண்டி
கொண்டளவி லார்வருவார் கூர்ந்து. (உ௫)

முன்சென் முரசினர்வாண் மொய்தீவி கைச்சுடரார்
மின்செய் படைக்கலத்தார் மேவரிய—பொன்செயொற்றை
முக்குடையார் பாங்கார் முதுக்கவரி யார்வென்றி
மிக்குடையார் வீரருற்றுர் வேர்த்து. (உ௬)

உற்ற மகேந்திரமூ தூர்வண்மை பல்விழிநாப்
பெற்றவருங் கண்ணுற்றுப் பேசரிதான்—மற்று
வகுத்தும்யா மென்னவே வாய்திறந்தோர் நாவாற்
றொகுத்துஞ் சொலப்படுமோ சூழ்ந்து. (உஎ)

சீருருக்கொள் சேயருளாற் றீண்பே ருருக்கொள்வேன்
காருருக்கொள் வெந்தகுவர் காண்பரென்றிச—கூருருவிற்
பேணித் திருப்பதியின் பெற்றியெலா நோக்கினேன்
பாணித் திருப்பதிலில் பண்பு. (உஅ)

என்றுபல வாவுன்னி யேண்வீர வாகுபொன்னங்
குன்றுறழ்கீழ் கோபுரமேற் கொண்டுநக—ரொன்றி
மிடையத் திருநோக்கி வெஞ்சூர் நகர்தா
னடையத் துணிந்தா னடுத்து. (உ௯)

அங்கணிருந் தாறுமுக ஞாருளால் வானெறிதாய்த்
துங்கன்சூர் மைந்தர்நகர் துன்னியப்பால்—வெங்கதத்தி
வத்திரன்பொன் ஞமத்தோன் வச்சிரமொய்ம் பேமுதலாம்
புத்திரர்தம் வாழ்வுகண்டான் போய். (௩0)

பெருமந் திரர்தம்முண் மன்றலேமை வாய்ந்த
தருமகோ பன்மனேமேற் றங்கிக்—கருமைக்
கறைக்களத்தன் சேய்தூதன் காளையண்ட ரோடார்
சிறைக்களத்தைக் கண்டான் றெளிந்து. (௩க)

நகர்புகுபடல முற்றிற்று.

ஆ திருவெண்பா கஉஉ.

---

# சயந்தன் புலம்புறு படலம்.

---

பாற்கடலின் மாலோன் படுத்துக் கிடந்தாங்கார்
பாற்கடவா ஞேர்தம் பரவையின்—பாற்கண்
சயந்த னமர்ந்து தளர்கோலங் கண்டான்
வயந்தனமர் வாள்வீர வாகு. (க)

விற்றழும்பு பெற்றகையன் மேவுசிறைச் சாலையின்கட்
டுற்றநிக ளத்தாற் றுணைக்கழலா—நற்றழும்பன்
மானகாண் போய்ப்பழித்தீ மல்கவுயிர்ப் பாலவின்ன
லானகட லாழ்ந்தயர்வ னுங்கு. (௨)

உன்பழியிற் றஞ்சமமு துண்டமையா லஃதொழிவான்
மன்பகல்பற் பல்லுகமா வைகுவான்—மின்பசுமை
யேய்ந்தமணி யோவியமா சேறினமை போன்மழுக்கம்
வாய்ந்த வுருவினன் மன். (௩)

துன்புமல்கு மாற்றூற் றுயில்கிலான் கண்ணிமையான்
மன்புரிதீங் குன்னியுன்னி மாழ்குறுவான்—வன்பின்
றழுதிடுவா னச்சமுறீஇ யஃதொழிவா னங்கண்
விழுதருநீர் மெய்குளிப்பான் மீண்டு. (௪)

சசியிந் திரனைத் தமர்பற் றினரென்
றுசிதமில்பொய் மாற்ற முரைப்ப—விசனமுறு
மன்றருமுன் னெல்லா வளமுமெண்ணிச் சோருக
ரென்றுமுன்போ லெய்து மெனும். (௫)

ஏண்டகுவர் கோன்சேனை யேவிடவீன் றோர்கரந்து
சேண்டுறந்து பாரகத்திற் சென்றவர்க—ளாண்டையரோ
வாங்கண்டார் பற்றினரோ வண்டர்சில ரேகினவர்
தாங்கண்டா ரோவென்னுந் தான். (௬)

கொன்கயவர் செய்கொடுமை கூறவுமை கேள்வனுறை
மின்கயிலைக் கேகினனோ வேந்தென்னு—மென்கண்மு
னன்னைதனை யத்தனையீர்த் தார்த்தவுணர் பற்றிவிடி
னின்னுயிர்நிற் குங்கொல் லெனும். (௭)

எற்பகையோ டந்நா ளிகல்புரிந்து கோடிழந்த
வெற்புறழும் வேழமெங்கன் மேவியதோ—மைப்பிறங்க
வச்சிறைகொள் கண்டன் வரத்தவுணர் கோன்விளியா
னிச்சிறைதீர் நாளென் றெனும். (௮)

ஆற்றேன் றுயர்குரவ ராகுலந்தீர் வான்புகுந்து
தேற்றேன் றமியேனுந் தேறுகிலே—னூற்றே
சிறந்ததோ பாவஞ் சிவன்றா னிலையோ
விறந்ததோ வேத மெனும். (௯)

சந்தியினன் செய்கடனுந் தாவழலு மோம்புகிலே
னந்தியினல் வேத மயர்ந்துறைவே—னெந்தைவழி
பாடுபுரிந் தேனில்லேன் பாழு முடல்சுமந்தேன்
வீடுகிலே னென்னும் வியர்த்து. (௧0)

மன்கருணை யேவடிவாய் மாநடஞ்செய் வானல்லா
லென்குறையை யோர்வா ரெவரான்றோ—னன்கணருட்
பேறுடையே னென்னிற் பெருந்துயர மாக்கடலின்
றேறுவே னென்று மினிது. (௧௧)

இன்னபல வெண்ணியெண்ணி யேங்கிச் சயந்தனிடர்
மன்னமர ரோடங்கண் வைகினான்—றன்னக்
கறைக்களரோர் கண்டகன்மூற் காரவுணர் பல்லோர்
சிறைக்களமுற் றேம்பினார் சேர்ந்து. (௧௨)

அன்னதோர் காப்பி லறுமுகக்கோ மான்றாதன்
மன்னுபகல் காவலர்கள் வானவரைத்—துன்னிறைமி
னன்னாளோ டெங்குற்றா னவிதொலை விப்போநீர்
சொன்னாலுய் வீரென்றார் சூழ்ந்து. (௧௩)

சாற்றுமொழி கேட்ட சயந்தனச்ச முற்றெமன்போற்
றோற்றுமவர்ப் பாராத் துயர்ந்தெந்தை—கோற்றொடியா
மாயோ டகன்றா னதுகண்டா மற்றொன்றுந்
தீயோமோர் கில்லமென்றான் றேர்ந்து. (௧௪)

அண்டருமவ் வாறுரைப்ப வஃதோர்ந் தகமொன்றாக்
கொண்டவர்மெய் கூறுவரோ கொல்லென்னக்—கண்டகர்கள்
கண்டம் புயநிறங்கங் கன்னமுத லங்கமெங்குந்
தண்டம் பலபுரிவார் தாம். (௧௫)

இவ்வண்ணங் காவலரெண் ணில்லுடற்றுன் பாற்றிமெய்
செவ்வண்ண மாகமைந்தன் றேவரொடு—மெவ்வமுற
வாற்றலரா யங்கபங்க மாகிநிற்பச் சோர்ந்தகங்கை
கூற்றனையார் நொந்தார் குலைந்து. (௧௬)

அக்கா வலரணித்தா யாங்கிண்டிக் காப்பவும்பர்
தொக்காரோ டிந்திரன்சேய் துன்பமுற்று—மிக்கார்விற்
பன்னிப் பலவாறு பண்ணவனுங் கண்ணுதலை
யுன்னிப் புலம்புவா னுற்று. (௧௭)

கைம்மா முதலாக் கருதுமெறும் பீறாக
வம்மா மலர்தூ யருச்சிக்கப்—பெம்மானே
பேருருண்முன் செய்தனையால் பேரிடருண் மூழ்குமெமக்
காருள்செய் யாயோ வமர்ந்து. (௧௮)

சங்கரனே கங்கா தரனே சயிலநங்கை
பங்கரனே சோதி பரனேயென்—றெங்களுடை
வாயகமெய் யொன்ற வழுத்த லுயிர்க்குயிரா
நாயகநீ கேட்டிலையோ நன்கு. (௧௯)

மூரண்டமால் வீப்பான் முயன்றுமுற்றூ தேத்தக்
குரண்டமாந் தானவனைக் கொன்று—இரண்டமா
மன்சிறையி லொன்றணிந்து வானோர் நமைப்புரந்தோய்
வன்சிறையி னின்றெடுப்பாய் வந்து. (உ௦)

அன்பா னவர்க்கருள்வா யஃது சிறிதேனு
மென்பா லிலையருளற் கேதுமுண்டோ—வின்பா
நிறைந்தவருள் கொண்ட நிமலநின்பா ணேந்தே
யறைந்தமையென் பேதைமையே யாம். (உக)

ஆயினுநா யேனழுங்க வத்த வருள்சுரந்தே
யாயினுநீ யாரருள்செய் தாண்டாயே—லாயினுயர்
வென்னுந் துறக்கவள னெய்தே னதிலடைவ
பன்னுந் துயரம் பல. (உஉ)

வானோர் பதமு மலரோன் பதமுமற்றை
யேனோர் பதமுமவ ரிற்றெரிலவா—மானோவாத்
தற்பதமாஞ் சம்புவே தாவாத நின்றனிதெரா
னற்பதமே வேண்டுவே னுன். (உ௩)

என்பதமும் வேண்டே னினித்தவமே யாற்றுவேன்
மின்பதமின் போற்றோன்றி வீவுறலா—னின்பதமே
சிற்பரவி யோமமாஞ் சிற்றம் பலத்தாடும்
பொற்பதனே தந்தருள்வாய் போந்து. (உ௪)

இன்னபல வேத்தி யிமையவர்கோ னின்றருள்சேய்
மன்னவச மாய்க்கிடந்தான் வன்சிறையி—லன்னவன்போற்
றோர்ந்து துதித்தும்பர் சிந்தை தளர்வுற்றுச்
சோர்ந்து கிடந்தார் துயர்ந்து. (உ௫)

சயந்தன் புலம்புறு படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா க௪௱

# சயந்தன்கனவுகாண் படலம்.

செம்மனத்தர் தீயர் திறந்தேர்ந் தருள்புரிவான்
றெம்மன் னகருட் சிறையிலும்பர்—தம்மொடுசோர்
தந்தையுற வீழ்நற் சயந்தன் கனவிலுறச்
சிந்தைசெய்தான் செந்தியமர் சேய். (க)

தேர்கே தனம்வச் சிரமங்கு சம்விசிகந்
தார்வே லபயவர தங்கமல—மேர்கூர்
மணிமழுத்தண் டேண்வின் மலர்க்கையுறச் சேய்தா
னணிசதங்கை யார்ப்பவுற்றூ னுண்டு. (உ)

சயந்தனுட னுட்கண்ணாற் சண்முகனை நோக்கி
வியந்தன்பிற் றாழ்ந்திடேக்கண் வீப்பா—னயந்துவந்தாய்
நத்தனல்லை யத்தகளி னத்தனல்லை யத்தவுமை
யத்தனல்லை யார்நீ யருள். (௩)

என்ன வறுமுகத்தே யாமச் சுரன்குமா
றுன்னல் லலையுணர்ந்திங் குற்றனமான்—முன்னார்தை
தன்குறையோ டென்குறையுஞ் சாற்றிநமை வேண்டலும்பார்
மன்குறைதீர்ப் பானடைந்தாம் வந்து. (௪)

பாரகனாற் றனை பரவவெய்தி வெற்பினொடு
தாரகனுஞ் சூரன் றனையுமட்டுச்—சிரலைவா
யங்கையமர்ந் தாமயன்மா லாதியர்நம் பாலுறைந்தார்
றங்கையுமா மேருவுற்றா னேற்று. (௫)

சொல்வீர வாகுவாந் தூதனையா மிங்குய்த்தோங்
கொல்சூர் மகனொருவற் கொன்றெதிர்த்த—வல்வீரர்
விம்மவீத் திங்கரை வீட்டியுலைத் திப்பகலி
லம்மமீன் வான்புரிது மாங்கு. (௬)

நாளையே செந்தி நகர்நீங்கி யிங்குவைகி
வாளையேந் தேண்சூர் மாபோடும்—பூளையே
யென்னப்போய் வீந்துலைய வீரைம் பகலிற்சீர்
துன்னப்போர் செய்தடுதுஞ் சூழ்ந்து. (௭)

செற்றபின்ன ரேநின்னைத் தேவருடன் வெஞ்சிறைநீத்
துற்றதிரு வெல்லா முகந்தீது—மற்றமொரீஇ
மைந்தநீ யின்னலுறேல் வாழியென்றான் கேழ்கிளர்நற்
கந்தநீ பத்தன் கனிந்து. (௮)

அத்தனீங் கின்ன வறைந்த வெலாம்வினவிச்
சித்தமகிழ்ந் தேமெய் சிலிர்சிலிர்த்துப்—புத்தமுதங்
கூரவுண்டா ரின்றகமை கொண்டாடிப் பாடினா
னுருவகைக் குண்டோ வளவு. (௯)

மறவியகன் றிந்திரன்சேய் மாதேவன் பொற்றா
ளுறவிறைஞ்சிப் போற்றி யுளயோ—வறவளித்தி
யையநின்க ணேகை யடைபுகுந்தோங் காத்தியெனச்
செய்யனது செய்துமென்றான் றேர்ந்து. (௧௦)

இந்த நகரடைவான் யாமே வியதூதன்
சந்தநினை யண்டர் தமைக்கண்டு—நந்தமிர்திற்
றுன்றினைய மாற்றஞ் சொலிநடப்ப வுய்க்குதுங்காண்
கென்றருளிப் போனா னினிது. (௧௧)

மன்றனாறுங் கற்பகத்தார் மன்மைந்தன் றுஞ்சினன்போற்
பொன்றா புலங்கள் பொறியின்கட் — றன்றக்
கனவகன்று கண்ட கருத்துறவேற் காளை
தனதருடோர்ந் தின்புற்றான் றான். (௧௨)

அண்டர் கனவினும்வே லவ்வா றறைந்தேகக்
கண்டகன வோர்ந்து களித்தும்பர் — மிண்டரிது
தேர்ந்தாற் செகுப்பனெனச் சேய்க்குமெலச் செப்பமகிழ்
வார்ந்தான் றுதித்திருந்தா னாங்கு. (௧௩)

சயந்தன் கனவுகாண் படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௧௩௦

---

## வீரவாகு சயந்தனைத் தேற்றுபடலம்.

---

தேசிறையோன் மைந்தன் றிறல்வீர வாகுவெந்தை
யாசிறையு மில்லானை யண்டரைவெம் — மாசிறையிற்
றன்கா ரவுணர் தொகைகாத் திடக்கண்டான்
பொன்காத் திடுகணமே போல். (௧)

காவல் புரியவுணர் காணா தயர்தரவுந்
தேவர் தனைக்கண்டு தேறுறவு — மேவர்க்கு
மன்னாங் குகன்றாள் வணங்கியன்னான் மந்தணத்தை
யுன்னா வடைந்தா னுகந்து. (௨)

திண்டா னவரிற் சிறைகாப் பவர்மையல்
கொண்டா ரியலோவக் கொள்கையுறத் — தண்டார்வே
ந்தனாங் கேகத் துயர்சயந்த னோடும்பர்
காதலுட னுள்ளுவார் கண்டு. (௩)

அன்னார் களமேய்ச்சே யார்பேர் புகன்றேத்தி
மன்னா மகன்முனடல் வாகுவர — முன்னானார்
நந்தமகி ழூற்றிறைஞ்சி னையுமுளத் தேமுழைநீ
வந்ததென்கொல் சொல்கென்றான்மன். (௪)

வன்பேர்கொள் வீரனந்தி மைந்தன்வேள் பின்வந்தே
னன்பே யவன்றாத னாயினே — னென்பேர்
திவள்வீர வாகுஞ் சிறைவிடுப்பான் சூர்மு
னவிலவந்தே னென்றா னயந்து. (௫)

அன்னதுகேட் டேந்த லமர ருடன்மகிழ்பூத்
துன்னுகுறை தீர்ப்பா னுகந்துவந்தா — யின்ன
சிறையகன்றே மின்னலெலாந் தீர்ந்துய்ந்தேம் யாங்க
ளறைகழன்மா வீரவென்றா னாங்கு. (௬)

ஏண்டகுசூர் மேவொற்றா யென்னைவிடுத் தோன்வல்லே
யாண்டிடுமுன் னுக்கநல்கு மன்னவனாற்—காண்டகுமான்
மாறிலயன் வானோர்தம் வான்குடிக ளுய்ந்தவென்றாற்
கூறுநமக் குண்டோ குறை. (௭)

அம்மலரோற் கூர்சிறைசெய் தாருயிர்கள் கண்டோனிங்
கும்மைச் சிறைநீக்க வுற்றனனே—லம்மவன்பி
னீர்செய் தவம்பெரிதிந் நீணகருற் றேமெலிந்தே
னோர்நுமைக்கண் டேமகிழ்ந்தேன் யான். (௮)

என்னமகிழ்ந் திந்திரன்சே யெம்மை யிருஞ்சிறைசெய்
முன்னகன்றா ரீன்ற முதுகுரவர்—மன்னவர்தா
மன்றுமுத லின்றளவு மாற்றுசெய லோடுபய
னொன்றவிடா தோதுகென்றா னோர்ந்து. (௯)

ஆழிவரை நேர்புயன்கேட் டாரணங்கோ டும்பர்கோ
னூழியின்கண் ணூர்கலம்போ லோங்குமெழிற்—காழியின்கட்
சேர்ந்ததுமுன் னுசவைப்பிற் சீரலைவாய் வந்தவரை
யோர்ந்து நவின்றா னுகந்து. (௧௦)

வயந்தருதோள் வீரன் வலாரிசெயல் கூறச்
சயந்தனுவந் தன்னையொடு தாதை—நயந்தகுரு
வேர்கொணித்த னாமிவரை யிங்கனெதிர்ந் தாலொத்தே
னார்கொணின்சொற் கேட்டென்றா னன்கு. (௧௧)

உறைதருவா னோர்தம் மொடுமகவான் சேயை
நிறையறிஞன் கண்டமல னீடுஞ்—சிறையகற்று
மின்னுஞ் சிறிதுவைக லிங்கிருத்தீர் நீரென்னாப்
பின்னுஞ்சொல் லின்றான் பெரிது. (௧௨)

தன்னிகரின் றுள்ளொளியாந் தற்பரனே யாறுமுகம்
பன்னிருகை கொண்டெழில்கூர் பாலகன்போன்—றுன்னருஞ்
கந்தனென்பேர் பூண்டெவருங் கண்டு களிப்பெய்த [சீர்க்
வந்தனனெங் கோமான் மகிழ்ந்து. (௧௩)

எம்பெருமா னீங்குவந்த வேதுமற்றி யாதென்னிற்
செம்பதும நோக்கனயன் றேவர்கோன்—வெம்புமனத்
துன்பார் சிறைதொலைத்துத் தொல்லுலகெ லாமளித்தே
யின்பார்தரக்கண்டா யேய்ந்து. (௧௪)

தக்கன் மகத்திலவி தானயின்ற பாவமுற்று
முக்கிரன்முன் செற்று மொழிந்ததிலை—யக்குறையி
னுற்றவிந்தத் துன்ப முமக்குமுரு கேசனன்றி
மற்றெவர்தா நீக்கவல்லார் வந்து. (௧௫)

வாசவன்றன் மைந்தகங்கை மைந்தனெந்தை வேலினாற்
காசறுவெற் பேண்டார கற்கடந்த—பூசலிகற்
றோட்கொண்ட சூர்முதலைத் துன்னிக் களையமுன
நாட்கொண்ட தல்லவோ நன்று. (௧௬)

வில்லைக் குனித்துய்க்கும் வெங்கணைக்கே பூணாகார்
கல்லைப் பிளந்த கதிர்வடிவே—லெல்லையில்
பார்முதலெல் லாம்படுத்தற் பாலதுசெவ் வேள்விடின்வெஞ்
சூர்முதலை வீப்பரிதோ சூழ்ந்து. (௧௭)

நீள்கடன்மன் சூர னிறத்திலெறி மைவேலான்
மாள்கினல்லால் வன்கிறையுள் வைகுநீர்—மீள்கலின்மை
தேற்றாப் பொருநர்செய் தீங்குமுன்னி வன்பருளந்
தோற்றா னெனைவிடுத்தான் றாது. (௧௮)

நாயகன்றன் மாற்ற நகுதகுவர் கோன்முன்னர்ப்
போயிதுகே ளென்றுரைப்பிற் புந்திகொளா—ராயிடைமீண்
டுற்றவெலா மோதுவன்கேட் டொள்ளயிலோ னுனைவந்து
மற்றிவரை மாய்ப்பன் வலிந்து. (௧௯)

திங்களா வோடணிந்த செஞ்சடையோன் சேய்கதிர்வே
லங்கிருந்து முய்த்தவுண ராருயிரை—நுங்குங்
கொடுமணிகஞ் சூழக் கொடிஞ்சியந்தேர் மேல்வந்
தடுதலன்றூற் கின்னதுமோ ராட்டு. (௨௦)

ஈரைந் தெனுநா ளிடையே யிமயமின்சேய்
போரைப் புரிந்தவுணர் போயொழியச்—சூரை
யறமுடித்தும் வெஞ்சிறைநீத் தார்சிறப்பு நல்கும்
பிறவொன்று மெண்ணல் பெரிது. (௨௧)

என்றுபல வேந்த லியம்பவும்ப ரோடிளவ
னன்றென்று வந்தயில்வே னம்பிநனி—வென்றிடுக
வென்னத்தாழ்ந் தாசிநவின் றெந்தைக் கறைதிகழன்
மின்னற்றான் வீரவென்றான் வேட்டு. (௨௨)

வென்றியுறு மீளியவண் மேவவரை நீங்கியே
வன்றிறல்கொள் காவலருண் மாலகற்றிச்—சென்றகலச்
சுற்றியவர் தேறியண்டர் சூழச் சயந்தனையு
முற்றிமுன்போ லோம்பலுற்றார் மொய்த்து. (௨௩)

வீரவாகு சயந்தனைத் தேற்றுபடல முற்றிற்று.

ஆ திருவெண்பா ௧௮௩.

---

# அவைபுகு படலம்.

---

மற்றிறலோ னாங்ககன்று வானெறியுற் றாழ்ந்தகன்று
முற்றுங் கிடங்கிகந்து மொய்படைகள்—சுற்றியவோங்
கெற்கோ புரமதின்முன் னேகிவரை யென்னநிமிர்
பொற்கோ புரங்கண்டான் போந்து. (க)

முந்நீர் கலந்த முரிதிரைவா னுந்தியெலாந்
தந்நீர்மை போயுவரி தன்மையுற்றாங்—கென்னீ
ணகரியிற் சூரனையா னாகமெலாம் போந்து
சிகரியுரு வாய்ந்ததுவே சேர்ந்து. (உ)

அகனீ ரகழி யதினில் கலமா
நகரமுயர் கூம்பு நலங்கொள்—சிகரிநிமிர்
பாங்கேய் புரிசை பலதளம்பன் மேனிலையா
வாங்கேய் தருமே யமைந்து (௩)

பரனளித்த தேர்நிலையோ பல்லண்ட மும்போய்
வரவமைத்த சோபான வைப்போ—பிரதாபத்
தம்பமோ மூதூர் தனைக்கா ணறிகுறியோ
விம்பமோ வில்சிகரி வீறு. (௪)

மன்கொடியார் கோபுரத்தின் மாமையெலா நோக்கியே
வன்கழற்கால் வீரனவ் வாயிலின்கட்—டுன்கதமா
ருக்கிரன்முன் னோர்படையோ டோம்புதல்கா ணாவவுணன்
மிக்குயர்கோ வில்புகும்விண் மீது. (௫)

சூளிகைமேற் போயிருந்து சூர்மா ளிகைவளங்கண்
மீளிநனி நோக்கி வியந்தடலார்—வாளரியொண்
சென்னிகொள் பீடத்தாணை செய்மண் டபவண்மை
யுன்னி யுணர்ந்தா னுளத்து. (௬)

ஆயிரமா யோசனையான் றாடகத்தா னாகிமணி
பாயிருளைப் பாற்றுமண்ட பத்துவின்றா—லாயிழையார்
வண்கவரி வீசவொளிர் வட்ட மசைக்கவல்லோ
ரொண்கவிகை தாங்கிநின்றா ருற்று. (௭)

மன்னடப்பை கோடிகம்வாள் வட்டிலிவை தாங்கியுழைப்
பன்னவுணர் நிற்பப் பகற்பகைமு—னுன்னுமகார்
மூவா யிரவரொடு மூவர் முறையாகத்
தாவா மருங்கிருந்தார் தாழ்ந்து (அ)

தாவிலெழுச் சாரணர்காற் றனைமன்னர் சார்பினிற்ப
மாவரம்பை மாநாட மாடகயாழ்—மேவிசைகள்
காந்தருவர் பாடக் கடுங்கஞ் சுகர்பிரம்பு
தாங்தரித்து வாழ்த்திநின்றார் தாழ்ந்து. (௯)

சாரா பிரம்யோ சனையெல்லை யெள்ளிடவு
மாரா தெவரு மடர்ந்துநின்று—போரச்
செலற்கரிய தென்னிற் சிறந்துளதோ யார்க்கும்
வெலற்கரிய வேத்தவையின் வீறு. (௧௦)

மின்னு முடிபுனைந்து மேவருவி யின்னாங்
துன்னு நிறத்திலங்கச் சூரபன்மா—மன்னுங்
கரியரியி னேடுவந்தண் கார்நீல வெற்பி
னரியணையில் வீற்றிருந்தா னங்கு. (௧௧)

கமஞ்சூற் கொடுமின் கருமுகில்போற் சூர்மன்
சிமஞ்சுமந்த பீடந் திகழ—வமர்ந்திருந்த
கோலங்கண் டுள்ளன்பு கூர்ந்தறையுஞ் சூளிகையின்
மேலுறைதிண் மேகம் வியந்து. (௧௨)

காரவுணர் கோன்போற் கடுமா தவம்புரிந்தோ
ராருமிலை யன்றாற் களித்ததுபோ—லோரரிய
மூவர்க்கு மூந்து முதல்வன்றான் முன்னமர
ரேவர்க்கு மீந்ததுவு மில். (௧௩)

பொருவி றவமே புரிந்திறையா முக்க
ணொருவன்பாற் சூரபன்ம னொப்பி—றிருவமுட
னூடூறு வச்சிரமா வாக்கைபெற்று மாவியதி
னீடரவெண் ணில்லா னினைந்து. (௧௪)

கச்சோதமென் றுகனற்கொள்ளி யைக்குடம்பை
வச்சோதியில்குரீஇ மாள்கதைபோ—லச்சோரு
ராய்வின்றிங் கிச்சிறைவா னந்தரனை வைத்தமையான்
மாய்வெய்து நாளை வதைந்து. (௧௫)

சிறுபகையார் புாலேனுஞ் செய்யினவர் வீர
முறுவளமிக் குற்றூறு மய்யார்—தெறுசிறையி
லண்டரைவைத் தந்தோ வழிதறிண்ண மொல்லைவெஞ்சூர்
திண்டனயர் செல்வமொடுந் தீர்ந்து. (௧௬)

என்றிவ் வணம்பன்னி யேண்சூ ளிகையின்க
ணின்றவிரத் தாணி நிலயம்போய்—மன்றலந்தார்
மன்னவனை யண்மிவிறல் மன்னெவர்க்குந் தோன்றவெழிற்
றன்னுருவங் காட்டினன் றான். (௧௭)

வெல்லுமழு வாளனருள் வேற்சாமி தூதெனயான்
சொல்லியின்று சூர்மருங்கிற் றுன்னிநிற்ற—லொல்லுபரன்
றன்பெருமை யின்னிழிபு சார்பிருப்ப தந்தகவன்
றன்பவமென் றுன்னினு னுள். (௧௯)

திண்டிறலோன் சிந்தைகொடு சேர்ந்தனற்றுள் சிந்திக்கக்
கண்டனையா னின்னருளாற் காயிரவி—மண்டலம்போற்
பொன்மணிமாப் பீடமொன்று போந்தது திண் சூரபன்மா
வுன்மணிமாப் பேரவையி னூடு. (௧௯)

அண்டங் களிலா ருக்கரொன்றுய்ச் சூர்முதலாங்
கண்டகன் முன் காணவந்த காட்சியே—விண்டனினின்
றேரமார் வீரமொய்ம் பேந்த லிருக்கவெட்சித்
தாரமலன் விட்ட தவிசு. (௨௦)

ஆரவுணர் கோன்மணிசெ யத்தாணி மண்டபமா
பேரவையி லுள்ள பெருந்தகுவர்—காருருவைப்
பொன்மயமா மேருவெனப் போந்தமர்ந்த மாபீடந்
தன்மயம தாக்கியதே தான். (௨௧)

அருமா தவஞ்செய் தவுணர்கோன் பெற்ற
திருமா னவரிற் சிதையுந்—தரமோர்
தருமமே சந்தாகச் சாருந் தகைத்தெண்
கருமமே காண்பீடி கை. (௨௨)

ஆனதருக் கேண்சூர்க் கழிய விறல்வாகு
தானிருக்கச் செவ்வே டருந்தவிசு—வானின்
றிழிதந் திமையோ ரிடுக்க ணிரிய
வழிதந்த தேயெனலா மற்று. (௨௩)

மன்னு மவுணன்முன் வந்திருந்த பீடிகைகண்
டென்னு யகன்விடுத்த திஃதென்ன—வுன்னு
விருந்தா ளிறைஞ்சியண்ண லென்றுநடு வீச
னிருந்தாங் கிருந்தா னினிது. (௨௪)

கனத் தமனியனுங் காரவுண ரும்மஞ்ஞா
னணத் தமர்ந்தருளுஞ் சூரரிபோன்—மாணத்
தகமைபெறு வீரன் றவிசிருந்த கோல
மிகநோக்கி யுற்றுர் வியப்பு. (௨௫)

கண்டா னயனல்லன் கம்பியனு மல்லனென்பர்
கண்டான் கதுவுமெழில் காதலுறக்—கண்டார்மற்
றம்மா தனத்தி னமைந்துமணி வொள்ளொளிகால்
சிம்மா தனத்தின் செயல். (௨௬)

வார்கழன்மன் முன்றவிசின் மன்னினன்வீ ரன்போலு
மோர்கின் றிலம்வினைய மோங்குமிவன்—யார்கொலோ
மன்ற நடுவணுற்ற மன்னவையெ லாங்கடந்து
சென்றதெவ்வா றென்பார் சிலர். (௨௭)

காயுறுவெஞ் சூர்முன் களிமனத்தோ டுற்றுளான்
மாயையின் மிக்க வலன்போலு—மேயவனை
நம்மிறைவ னாணைகொடு நாமடுவோ மென்னிலது
செம்மையல்ல வென்பார் சிலர். (௨௮)

மூவருள் யாரோ முனிவனோ சித்தனோ
தேவருள் யாரோ தெரிந்திலங்—கோவின்
றவனோர்ந் தினும்வரந்தான் றந்திடுவான் மேவுஞ்
சிவனிவனே யென்பார் சிலர் (௨௯)

தாரகனைக் கொன்ற தனிநெடுவே லத்தனணன்
சூரனையுங் கொல்லத் துணிந்தனன்கொ—லேரண்
வியனுருவை நோக்கினிவன் வீரனே யாகுஞ்
செயலுணர்வோ மென்பார் சிலர். (௩௦)

மன்னவையி னுள்ளார் மனக்கிசைந்த பற்பலவாப்
பன்னவிறல் வாகு பரனளித்த—மின்னுமணிப்
பீடிகையில் வீற்றிருந்த பெற்றிதனை நோக்கிவெஞ்சூ
ராடிவர்வோன் போன்றா னழன்று. (௩௧)

பொறியுகக்க ணோக்கிப் புரவலனிச் சித்து
சிறிதெவர்பாற் கற்றோ சிறியோ—யறியவே
யம்மநின்போற் காட்டினவ ராருமிலை நன்றுநன்று
நம்முனநீ காட்டு நடம். (௩௨)

சித்தர்மா லாதியருந் தேர்ந்தீது காட்டவஞ்சித்
தத்தமெல்லை யாற்றிநிற்பர் சாருணர்வில்—பித்த
தெரிவையருஞ் செய்வார் சிறுமகவு மாற்று
மரியதன்று நீபுரியு மாட்டு. (௩௩)

என்னையுமெண் ணாய்நே ரிருந்தா யிதனானின்
சென்னிகொய்வேன் வாளினெல்லாச் செய்கையுந்தேர்ந்—தன்ன
செய்வா னகங்கொண்டேன் செய்விஞ்சைக் கேபரிசா [துபின்
வுய்வா னளித்தே னுயிர். (௩௪)

மகவான் கரந்தகன்றான் மற்றவரிஃ தெண்ணா
ருகவா னிதுதிருமா லும்பர்—தகவா
வருகிலிருந் தாசி யறைவார னென்பால்
வருகிலனார் நீயென்றான் மன். (௩௫)

தீயன்சொற் கேட்டலுமே சீற்றங் கொடுதிறலோன்
மாயஞ்செய் வார்போன் மதித்தையெனா—நீயமன்ற
வீண்மதியை விட்டு விமெதியான் சொல்லுமிதைக்
கேண்மதியென் றோதுங் கிளர்ந்து. (௧௬)

வேந்தன் குறையும் விதிமுதலோர் புன்மையுமென்
னீந்தமா ரார்சிறையும் வீத்தவர்தம்—யாந்துமின்பச்
சிந்தா வளமூழ்கச் செந்திநகர் வந்திருந்த
நந்தா விறையடியே னன். (௧௭)

தானைத் தலைவராய்ச் சண்முகத்தோன் பின்வந்தோ
ரானவொன்பா னோடிலக்க ராம்போம்—மானவருண்
மன்னு மொருவனந்தி மாட்டமர்ந்தேன் வீரமொய்ம்
பென்னும் பெயருளேன் யான். (௧௮)

தாரகனை வஞ்சவரை தன்னனொடி யிற்படுத்த
கூரயில்வே லாறுமுகக் கோமான்றன்—சூரெனும்பே
ருன்பாற் றமியனைத் தூதுய்த்தனனென் றனருளால்
வன்பார் புகழ்வீர வாகு. (௧௯)

அன்னதுமன் றேர்ந்துசின மார்ந்துநம்பாற் றூதுவிடற்
கென்னிமித்த மென்னநீ யிந்திரனைப்—பன்னியொடு
வான்றுரந்தூர் தீக்கொளீஇ வானவரை வன்சிறைவைத்
தான்றசெயல் கேட்டனன்வே ளாங்கு. (௨௦)

அந்தார்மால் வேண்ட வவர்குறைதீர்ப் பான்குகன்பார்
வந்தும் பியைவரையை மாய்த்துகென்னல்—செந்தியுற்று
னொல்லை நினையுமட வுன்னினனின் மேலருட்சில்
சொல்லையெனைச் சொல்லவுய்த்தான் றூது. (௨௧)

வானவரை வன்சிறையில் வைத்து வருத்தினைசெங்
கோனடத்து கொன்வேந்தர் கொள்கையன்று—மானவர்தஞ்
செய்கையுமன் றாரணநூல் செப்பொழுக்கு மன்றெங்க
னுய்கையுண்டு நீயோ யுனக்கு. (௨௨)

தூய நெறியிற் றுலங்கு பவர்ச்சீறித்
தீயபல செய்யுந் திறலுடையார்—மேய
விழுமையும்போ யொல்லையினில் வீந்துதம ரோடு
மெழுமையுந்துன் பெய்துவா ரீண்டு. (௨௩)

தீயநல தேர்ந்தே திலர்க்கவைதாஞ் செய்குவரே
லேயவர்க் கெய்துமொல்லை யேழைநீ—மேய
வுறுதியுமே போவதன்றி யும்பர் சிறையா
லிறுதியுமே கொள்வை யினி. (௨௪)

ஆயுமள வில்லாண் டருமையினேற் றூய்மகஞ்செய்
தேயுமனன் மூழ்கினேய்க் கொந்தையருண்—மாயுதலி
னீளா யுளுந்திருவு நீதியிலா வாறுளுற்றி
வாளா விழுக்குவதோ மாண்பு. (௪௫)

நீண்ட வளத்தினொடு நீயுந் தமருமுய்ய
வேண்டினும்பர் வெஞ்சிறையை விட்டறமே—பூண்டுய்தி
மற்றிதனை மாறா மறுத்தனையே லீங்குவந்து
செற்றிடுவன் றிண்ணந் தெளி. (௪௬)

என்றினைய யாவு மெழிற்குமர வேணினக்குச்
சென்றறைகென் றானீயுந தேவர்தம்—வன்றளையாந்
தாழ்சிறையை நீத்தறத்திற் சார்வளங்க டுய்த்தனைநீ
வாழ்க வெனநவின்றான் வாகு. (௪௭)

வீரனிவை கூற வெகுளி தலைக்கொண்டே
ணுருமண்ட மாயிரத்தெட் டாள்வலியேற்—கேரெயிறே
யின்னமுமுன் றேன்றா விளங்குதலைப் பாலகனே
வின்னபுந்தி கள்புகல்வா னீங்கு. (௪௮)

தாரவுணர் தங்குலத்தைச் சாய்த்து வறுமைசெய்தார்
சீரமர ரன்னார் திருமாற்றிக்—கூரவே
குற்றேவல் கொண்டு குலவொழுக்குங் கொண்டுசிறை
வைத்தேன் குடிமைசெய்தேன் வாய்ந்து. (௪௯)

போதிலயன் றஞ்சுநாள் பொங்கிமுந்நீர் விண்ணுறினு
மேதிலர்வா னோரைவிடே னெண்சிறையு—மீதிலுய்ப்பேன்
றேராசைத் தேடிச் சிறைபடுத்துஞ் சிந்தையுளேன்
சூரனெனும் பேருமுளேன் சூழ்ந்து. (௫௦)

மன்வச் சிரயாக்கை மாவரங்க டன்றாதை
முன்பெனக்கு நல்கு முறையையெவர்—பின்பெயர்ப்பர்
குன்றனையா ரன்றிக் கொடுஞ்சமர மாற்றிவன்பா
லென்றனையார் வெல்வா ரெதிர்ந்து. (௫௧)

தாரகனுந் தம்பி*தனைமுன் றடிந்திட்ட
கூரயில்வேல் வேண்மேற் குறுகலுற்றேன்—சாரமர்ந்தோர்
தேனலர்பூம் பானல்வாய்ச் சேயொடுபோர் நீயியற்ற
லூனமென்றார் தேர்ந்தொழிந்தே னோர்ந்து. (௫௨)

தோட்டுணையாந் தூங்குகைய தும்பிமுகத் தெம்பியைத்தொல்
கோட்டுடனே யட்டசெயல் கூறநின்னல்—கேட்டுணர்ந்தேன்
பாங்குளரைப் பாலகன்றன் பாலுய்த்தே யென்பழியும்
வாங்குகின்றேன் காணுனை மற்று. (௫௩)

மாயவரெண் ணில்லார் மகபதிக ளெண்ணில்லார்
தூயசுர ரெண்ணிலரண் டந்தோறு—மேயவர்போ
ராற்றார் துதித்தகன்றா ரார்த்தெதிர்நிற் பான்சிவன்க
ணொற்றார் சிறுவனோ நேர்ந்து. (௫௪)

காதையிலென் னும்விபுதர் காவல் விடுகிலனோர்
மேதையில்சேய் புன்சொல் வியந்தேற்றுப்—பேதைமையா
னீரதினொற் றாய்வந்தாய் நீபிழைத்துப் போதிநின்ற
னாருயிர்தந் தேனென்றா னாங்கு. (௫௫)

ஐயன் வெகுண்டெய்ய லாவதோர் பண்புணராக்
கையதேள் கானிதழிக் கண்ணியான்—செய்யநுதன்
மின்னனற்கண் மேவுபரன் மேன்மைதெரி யாய்பால
னென்னவுரை தந்தா யிசைந்து. (௫௬)

மக்கடமைத் தேவரென்பர் வானவரை மூவரென்பர்
மிக்கிருவ ரைப்பிரம மேயென்பர்—தொக்கபுகழ்
நீதத் துவமுணராய் நித்தியமா யோகியர்தம்
போதத்திற் கெட்டாப் பொருள். (௫௭)

மாலயனு மாபறவை மாவடிவாய் மேவரிய
நீல மணிமிடற்றா னெற்றிவிழிப்—பாலந்
தகவார் சுடருருவாய்த் தாவி லருளான்
மகவா யுதித்தான் மகிழ்ந்து. (௫௮)

ஈசனவ னுடலா வேர்மதலை யாயினான்
தேசனவ னாறுமுகந் நேர்ந்தறிநீ—மாசிலண்ட
மோரா யிரத்தெட்டு முன்வளனு முன்கொடுத்தோன்
போரா விலக்கரிதோ பேசு. (௫௯)

மாதா ரணியண்ட மல்கிடப்பெற் றோமென்றே
பேதாய் நினைந்தையவன் பேரன்பர்—மீதாம்
பாசியலே யண்டம் பலவற் றினுக்கு
மாசியலே செய்வா ரமர்ந்து. (௬௦)

ஆதிக் குடிலையு மாரணமு மாகமமும்
பேதித்த பல்கலையும் பேசவற்று—ளோதி
யிருக்கு மனைத்து மெழிற்பன் னிருகை
யுருக்குமா னேரி லுரு. (௬௧)

எங்குந் திருவதன மெங்குந் திருநோக்க
மெங்குந் திருக்கேள்வி யெங்குமெழிற்—செங்கரமே
யெங்குந் திருச்சரண மெங்குந் திருவுருவ
மெங்குஞ் செறிவே னிறைக்கு. (௬௨)

ஓமென் குடிலையே யோர்முகமா னேன்சம்பு
மாமன்முற் றேவர்க்கு மற்றவன்மே—லேமிலா
வெல்லா வுயிர்க்கு மிருவினைப் போகநல்க
வல்லா னவன்கண்டாய் வாய்ந்து. (௬௩)

இம்மன் னுயிர்த்தொகையுங் காணருமைம் பூதத்
தமரண்டத் தோடனைத்து மாதிக்—குமரன்
கதித்த திருவுருவின் கண்ணிமிரு ரோமத்
துதித்திறுதி நாளொடுங்கு முற்று. (௬௪)

மேருவிலங் நாட்கந்த வேளமரர்க் காக்காட்டு
மேருருவ நீகண் டிலையவன்மெய்—யாருரோ
மத்தளவி லண்டநின்ற வன்கொடியோய் பாலனென
வுய்த்துணரா தோதினை யுள். (௬௫)

குறைவில் குணமுடையெங் கோமா னமரர்
சிறைமாற் றவுஞ்சலசத் தேசா—ரிறைமுதலோ
ராற்றவுமே யல்ல லகற்றவுமே வாரையட்டுப்
போற்றவுமே வந்தான் புரிந்து. (௬௬)

வாழியுன்ற னுள்வாம்வன் மையுறவு வான்படையை
யூழிவளி போலடுஞ்சே யொள்ளொளிவே—லேழை
பழையமறை நாயகனைப் பாலனென்றா யந்தப்
பிழையும் பொறுத்தாம் பெரிது. (௬௭)

உன்னுறுதி யின்னமுமொன் றோதுவநீ யுங்கிளையு
மன்னுறவே வேண்டுமேல் வான்றலத்தோர்—துன்னு
முரண்சிறையை விட்டு முனைதவிர்தி செவ்வேள்
சரண்சரணென் றோர்ந்தமர்தி சார்ந்து. (௬௮)

என்றுபல செவ்வே ளியல்விளம்ப வீரன்சூர்
கன்றுசினங் கொண்டெயிறு காணருஞ்சேய்—துன்றிடுதா
தென்ன நினைவிடுத்தே னேகலையென் கூறுகின்றா
யுன்னுகிலா யென்சீற்ற முற்று. (௬௯)

முன்னி மொழிபயில்சேய் மூவா முதல்வனே
யென்னினுநா னஞ்சுவனோ வேற்றவண்ட—மன்னியமா
தேவரைவென் றேன்வெஞ் சிறைகனவி னும்விடே
னுவதினிப் பாரென்றா னுங்கு. (௭௦)

செற்றமிகு சூரனிவை செப்பி யருகிருந்த
கொற்றவெய்யோ ராயிரரைக் கூர்தரப்பார்த்—தொற்றி
யறையொற் றினையடனன் றன்றிவனைப் பற்றிச்
சிறைபடுத்தி ரென்றான் செறிந்து. (௭௧)

என்னவவ ராயிரரு மேற்றனலைத் தூமமுற
வென்னமணிப் பீடத் தினிதமர்ந்த—வென்னத்தன்
றன்னைவளை யன்னவர்தந் தாழ்சிகைகைப் பற்றியெற்றி
மன்னவைமுன் வீசினன்மின் வாகு. (எஉ)

எந்தை வடிவே லினியுன்னை மாய்த்தறிண்ண
முந்தை வகைய வுறுபுலன்கள்—சிந்தையுற
மாந்திடுவ வெல்லா மடுத்தே யினிதமர்ந்தி
போந்திடுவ னென்றான் புரிந்து. (எங).

கூர்ந்தவிறல் வாகுவெனுங் கோமா னிவைபுகன்று
பேர்ந்தகலப் போது பிறங்கவன்றான்—றேர்ந்திருந்த
வெல்லை மணித்தவிசு மீயுறப்போய் மாயையென
வொல்லை மறைந்த துயர்ந்து. (எச)

அவைபுகு படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா உ௱அ

# சதமுகன்வதைப்படலம்.

அண்ணலட லாயிரனை யட்டங் ககல்காலை
கண்ணுஞ் சதமுகனைக் கண்ணுறீஇ—யெண்ணருமென்
வெற்றியெள்ளி மேன்மைசெப்பி மேவுமிவற் கொல்லாமே
பற்றிவரு கென்றான் படர்ந்து (க)

சூரனடி தாழாத் துணிந்து சதமுகன்மா
வீரர் புடைவரக்கை வெம்படையேற்—றூரவே
சென்றுசெவ்வே டேன் றிறல்வாகு வையெய்தி
யொன்றுநவில் கின்றா னுருத்து. (உ)

காவல் கடந்துவரு கள்வ வகிலத்தா
ரேவருநன் சேத்தவரு மெம்மிறைமுன்—மேவியிகழ்
தந்துசில வீரர் தலையட்டுப் போவதெவன்
வந்துநில்காண் போநின் வலி. (௩)

கொன்றார்வே லத்தனின்சொற் கொள்ளா னிகழ்ந்தென்மேன்
மன்னு யிரரையுய்த்தான் மாய்த்தகல்போ—துன்னுவோர்
மீளியைவிட் டானவனை வீத்தூர்தீர்த் தேகுவனென்
றாளியனை யானினைந்தா னங்கு. (௪)

கண்ணிச் சதமுகனுங் காவலனை நோக்குநீஇப்
புண்ணியவேள் பூங்கழல்கள் புந்திகொடு—திண்ணிகலே
யுன்னியறை கூவினு யொல்லை வருதியென்றான்
மன்னியசீர் கொள்வீர வாகு. (௫)

ஆண்டுச் சதமுகன்சூழ்ந் தண்ணிலக்கர் பல்படைகொண்
டாண்டுணைவன் மேல்விடமற் றாய்ந்தகளா—யாண்டகவே
வெண்கு ளிகையொன் றெடுத்தெறிந்தான் மாவிலக்கத்
திண்கு ரனிகந் தெற. (௬)

இலக்கமொடு சூளிகைத னேர்முடிகள் சிந்தித்
தலக்கணிற்க வீரன் றருவன்—கலக்கமுற்றுத்
தன்படைகா ணுன்கவன்று தான்றேறி யேந்தன்மேற்
கொனபடைகள் கொண்டுய்த்தான் கூர்ந்து. (௭)

உற்றபோ தண்ண லொருசிகரி பேர்த்தெறிய
வற்றதுவன் விற்குனித்தம் பாயிரம்விட்—டிற்றுகுவான்
பேர்ந்துமின்கோ ளூறுய்ப்பப் பெம்மா னவன்வில்லை
யோர்ந்து முறித்தெரிந்தா னுற்று. (௮)

சாற்றுஞ் சதமுகத்தோன் றன்னு யிரங்காத்தாற்
போற்றுங் குரிசிறனைப் போய்ப்பிடிக்கச்—சீற்றமொடு
தோளா னெருக்கவன்ஞன் சோர்ந்து விழுந்தெழப்பின்
றாளா லுரத்துதைத்தான் றான். (௯)

தாதை முயலகன்மேற் றானென்று காட்சிநல்கி
வேதை சதமுகத்தோன் மேவிடக்கொன்—றோதைய
னத்தன் றனையிகழ்ந்தோ னாவைதீர்த் தூரழிப்பான்
சித்தந் தனினினைந்தான் றேர்ந்து. (௧௦)

சதமுகன்வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா உ௬அ.

---

## காவலாளர் வதைப்படலம்.

---

சோதிவே லண்ண றுணைவனிணை யின்முடிவின்
மீதிவரத் தோளாசை மேவிடப்பொற்—பாதம்
புடவிமுற்றும் பற்றப் பொருவி லுருவந்
திடமுறவே கொண்டுநின்றான் றேர்ந்து. (௧)

பேருருக்கொண் டண்ணனிற்பப் பேரரவுங் கூர்மமும்பூ
பார மிசையாற் பயமுற்ற—வாரு
மதலையுற்ற மாட மகேந்திரமா மூதூர்
விதலையுற்ற தாற்ற மெலிந்து. (௨)

தூயவன்றா ளூன்றுபுழை தோறுமுறு நீத்தஞ்சூர்
கோயில் வளைந்து கொடிமாடஞ்—சாயகனி
வீதி வழிசென்று வேலை மடுத்ததே
யாதி நதியி னணைந்து. (௩)

வீரனுருக் கண்டெவரும் வேர்த்திரியக் காவலர்தா
மாரவொருங் குற்றிவற்கிங் கஞ்சினோம்—பேருவமே
லாடலுற்றி லேமென் றரசனமைச் சாடறிண்ணம்
வீடலிற்போர் செய்வமென்றார் வேட்டு. (௪)

மாரிபெய்யு மாறுபோல் வான்படைகள் வீரருய்ப்பச்
சோரிமெய்யிற் சோரநின்ற தோன்றல்வாள்—வீரரல்லார்
மேலெடுக்க லேனென்று வேலை யலைக்குமதிற்
சாரவுணர்ச் சாடலுற்றான் றான். (௫)

உதைத்தான் மிதித்தா னுருட்டினா னங்கஞ்
சிதைத்தான் குதித்தான் செகுத்தான்—புதைத்தான்
சிரநெரித்தான் மெய்யுரித்தான் றிண்டோ ளிறுத்தான்
கரமுரித்தான் வீரன் கனன்று. (௬)

எடுத்துச் சுழற்றி யெறிந்தான் சிலரைத்
தடுத்துவதைத் தான்சில்லோர் தம்மை—யடுத்துப்
பிடித்தான் பிசைந்து பிழிந்தான் சிலரை
யடித்தான் சிலரை யணைந்து. (௭)

மருவுமின மானிரைந்து வந்துழியோர் சீற்றம்
வருபுலிபோற் புக்கு வளைஇ—யொருவனே
கானம் பதுவெள்ளங் காவலரைத் தான்றடிந்தான்
றானைவிறற் றோளான் றுதைந்து. (௮)

இன்னவணம் வீற்றுவீற் றின்னவுணர் சேனையெலாஞ்
சின்னபின்ன மாகச் சிதைத்துநின்றான்—முன்னுமுன்ம
றாண்டிறந்தார் தாதேழு மள்ளனீர் மைத்தாகிக்
காண்டிறந்தா னில்லைவிழி கட்கு. (௯)

காவலாளர் வதைப்படல முற்றிற்று.

ஆக திருவெண்பா ௨௭௭.

# நகரழி படலம்.

---

காரவுண வெள்ளமாங் காவலா ளர்ச்செருத்தான்
மேருவென வான்றுயர்ந்த வித்தமணி—கூர
விரசிலக்க மாமுடிகொள் வேரமொன்றைச் சூர
னரசவையிற் பேர்த்தெறிந்தா னார்த்து. (௧)

வீரனுரு மார்த்துருத்து மின்பொன் மணிச்சிகர
வேரமது நீண்டிலங்க வீசியமர்—சூரன்
பொருவிலவை தீர்த்தீற்றிற் பொன்னண்டந் தீர்க்கு
மொருவனையே யொத்துநின்றா னாங்கு. (௨)

மன்று தகர்தலுமே மன்னவன்றன் பாங்கமர்ந்தோ
ரொன்றுசில ரோடினர்சில் லோரொழிந்தார்—துன்றுசிலர்
தீங்கவத்தை யுற்றார் திசைசென்ற பூழியொலி
யாங்கவற்றைக் கண்டா னரசு. (௩)

அன்புடையார்க் காரருள்செ யண்ண லவனையை
வன்புடையான் றன்மையுன்ற மன்சினந்து—தன்புடையா
ராயிரநீ டோளைஞ்ஞூ றானனங்கள் கொள்கொடிய
ராயிரரைப் பார்த்தறைவா னார்த்து. (௪)

சேயொருவன் றூதனுய்த்த செய்குன்றத் தான்மன்றம்
போயொழிந்த தென்சீர்த்தி போய்ப்பழிப்பு—மேயதொற்றன்
றன்னையமர் செய்தேனுந் தந்திடுதிர் மெய்வருத்த
மன்னுசிறை யுய்ப்பனென்றான் மன். (௫)

அன்னரது கேளா வரசவிது கேளொற்றன்
றன்னுயிருஞ் செந்நீருந் தான்குடிப்போ—நின்னுடைய
வானைதனக் கஞ்சியன்றோ வஃதுபுரி யாதுநின்றோந்
தோனைதரச் செய்துமது சூழ்ந்து. (௬)

நன்றென் றிறைவ னவின்றுவகை கண்டெய்ப்ப
வொன்றுதிற லாயிரமொய்ம் புற்றவர்தாஞ்—சென்றனர்சூர்
நந்துவளம் யாவு நகரோ டழிப்பனெனு
முந்துவிறல் வாகுனின் றுளன். (௭)

மண்டபமா தெற்றி மணிச்சூளி கைகழகங்
கண்டபல பொன்மாளி கைவீசி—விண்டபமன்
மாபுரத்தை மாய வயங்கு மணிச்சிகரக்
கோபுரத்தைப் பேர்த்தெறிந்தான் கோ (௮)

வேலா யுதன்றாதன் விண்ணு ரகப்பாவைக்
காலாற் சிதைத்துக் கமலமினன்—போலா
ரிடங்கருமே நீங்கா வியன்மதில்சூழ்ந் தாழ்ந்த
கிடங்கருமே தூர்த்திட்டான் கீண்டு. (கூ)

மன்னவர்மன் வாச மணிக்கோயின் மற்றவர்வாழ்
மின்னகர்மா வாரிபரி மேவிடக்தேர்—துன்னுறையு
ளங்கங் குலைத்தாழ்ந் தவிர்தடங்கா வேனையவு
மங்கங் குலைத்தா னணைந்து. (க0)

தூய்ய வுயிர்த்தொகைகள் சூழ்ந்துசில போழ்துகந்து
செய்யறந்தா னுய்ப்பவுயர் சேணிவர்ந்து—வையகத்தில்
வந்தமர்வ மானும் வயவீர னுந்துபொரு
ளந்தரம்போய்க் கீழ்விழுவ வாங்கு. (கக)

பொன்னகரந் தன்னைப் புரைபொற் பகலப்பன்
மன்னகரந் தன்னுறப்பான் மாய்ப்பகொக்குந்—துன்னெவரும்
பேசுமதின் மாடம் பிறவுமெடுத் தேவீரன்
வீசுவவிண் போய்விழுவ மீண்டு. (க௨)

அலைந்ததினை ஞெங்க லதிர்ந்ததுமா மேரு
குலைந்ததுசூழ் குன்றுவரி கொட்புற்—றலைந்ததுயிர்
வாடினமன் னுருயிர்கண் மாழ்கி யகமெலிந்தே
யோடினதிக் காம்ப லுடைந்து. (கரு)

விந்தமுறழ் மாடநிரை மேருநிகர் பொற்சிகரி
சந்தமதின் மூதூர் தகர்ந்துவிழப்—பந்தவுயி
ரொன்றுவன மீப்போ யுலகழிக்கு மீறநாட்
பொன்றுவன போன்ற புலர்ந்து. (கச)

காவினொடு வாவி கவின்கோ புரமிஞ்சி
மாவியல்கூர் மாடமணி மன்றமற்ற—யாவுமே
யுள்ளிடையாய் தந்தே யுரைக்கருஞ்சீர் மாநகரம்
வெள்ளிடையா யிற்றே விளிந்து. (கரு)

வன்றறிபேர்த் திர்த்துமத வாரியொடு சோரிநீர்
துன்றுமெய்யிற் கூரத் துதிக்கையெடுத்—தொன்றுமுகி
லன்ன முழக்கோ டவிர்கோ டொடிந்துபிடி
யென்ன விரிந்த விபம். (கசு)

கொடிமுரிந்த கொன்னுர் கொடிஞ்சி குலைந்த
வடிநெரிந்த வார்கொடுக்கை யற்ற—வடிவு
துதைந்தசில்லி யோடார் துணிந்தமணிப் பீடஞ்
சிதைந்தபொடி யாயினதிண் டேர். (கஎ)

பந்தி யிகந்து பரவைங் கதியிகந்து
புந்தி கலங்கியெழில் போர்மெய்—நந்த
நெரிந்தோ டிரத்த நெடுங்கடலின் மேலாடப்
பரிந்தோ டினவே பரி (௧௮)

வீரமொய்ம்பன் வீசினஞ்சூர் வீழ்ந்தபின்கண் வீழ்தலுமே
யாருயிர்போய்ச் சில்லோர்சூ ழாடிபுக்கார்—போரமருந்
தோளிழந்தார் சில்லோர் துணிவிழுந்தார் சில்லோர்கை
வாளிழந்தார் சில்லோர் மரிந்து. (௧௯)

ஒப்பிலவ னுய்த்த வுயாவளங்க ளும்பர்போய்
வைப்பிலவை வீழ்தலுஞூர் வாழவுணர்—தப்பி
மருவவன்னை தாதைமைந்தர் மாதரிவர்ப் பற்றித்
தெருவெருவி நிற்பார் சிலர். (௨௦)

கடியேறு காமருதோட் காளைவிட்ட காருந்
திடியே றெனவீழு மெல்லை—குடியேயா
மல்லா ரவுணருண்மெ யங்கபங்க மாய்க்குருதி
யில்லா ரெவரு மிலை. (௨௧)

அங்கமார் நெய்த்தோ ரமர்ந்தவுணர் பூணினொடு
பங்கமார் பற்கள் பலவிலகித்—துரங்கமார்
வீர மகேந்திரந்தான் மேவியல்போய்ச் செக்கர்வா
னீரதாய் மேவிற்றே நேர்ந்து. (௨௨)

நகராழிபடலம் முற்றிற்று.

ஆகத் திருவெண்பா ௨௬௬

---

# சகத்திரவாகுகள் வதைப்படலம்.

---

உன்னருஞ்சீர் வீரன்மூ தூர்மாய் தருமெல்லை
துன்னரும்வெங் காளத்திற் றோற்றுமெய்யர்—மன்னசுவத்
தீயினவிர் புன்சிகையர் செல்லுருமின் வன்குரல
ராயிரமா மொய்ம்பருற்றா ரார்த்து. (௧)

ஐம்பதிற்றுப் பத்துவரை யார்முடிநேர் வான்மறைவருஞ்
செம்பங்கி சேர்தலையார் திக்களவும்—வெம்புயத்தர்
பல்படையார் கையர் பசியடங்காப் பேருதரர்
வெல்கழற்கால் வீருற்றார் வேர்த்து. (௨)

இருபுயமு மோர்முகமு மெய்திவனை வெல்வான்
பொருவகை யாஞ்சென்றிடுதல் புன்மை—மருவிவன்முன்
மாயையினால் வந்தமையால் வான்செலுமு னேகுமினென்
றாயிருஞ் செல்கின்றா ரார்த்து. (௩)

ஏந்தலெறி வேல மெழின்மாளி கைவீழ்வ
வாந்தகுவ ரேற்றுத்து ளாக்கிவிழி—சேந்த
வெரியுகவே மீளிதனை யெய்தியடல் கூரு
மரியெனவே யார்த்தா ரடர்ந்து. (௪)

ஆர்க்கு மொலிகேட் டரன்போ னகைசெய்து
பார்க்கு மெவரும் பயங்கொடுமெய்—வேர்க்கவே
மந்தரமே யன்ன மராமர மொன்றுபறித்
தந்தரமே சுற்றினா னார்த்து. (௫)

அன்னதனை நோக்கியோ ராயிர மா மொய்ம்புடையார்
கொன்னயில்வாண் முற்படைகள் கொண்டெய்ப்ப—வன்னவனும்
வன்பின் மரஞ்சுழற்றி வான்போர் புரியவன்னார்
மன்புயனை யண்மினார் வந்து. (௬)

ஒட்டி யமர்செ யொராயிரருங் கெட்டிரியக்
கிட்டிவிறல் வாகு கிளைமரங்கொண்—டட்டிடவுஞ்
சென்னிமுத லங்கமெலாஞ் சிந்தினர்செய்த் தோரோடிச்
செந்நிறமாக் கிற்றுமுந்நீர் சென்று. (௭)

வீழ்ந்தார் சிலவர் மிதிபட் டுடலநனி
தேய்ந்தார் சிலர்குடர்கள் சிந்திடவே—சாய்ந்தார்
சிலர்குருதி தோய்ந்தார் சிலரென் பொடிந்தார்
சிலர்மெய் துடித்தார் சிலர். (௮)

மரமா னவன்வீச வாளவுணர் மாய்ந்து
சிரமாதி யங்கம்விண் செல்ல—வுரமான
வான்கழுகி னின்குழூஉ வானெறியிற் போர்புரியு
மூன்குடர்க்கொண் டோடொன் றுடன்று. (௯)

இனைய பலநிகழ வேந்த லொருவன்
றினையளவு போதிற்றென் றிக்கார்—நினைவில்
சமர்க்களப்பி லாற்றற் சகத்திரரை யட்டுச்
சமர்க்களத்தி னின்றான் றனித்து. (௧௦)

சகத்திரவாகுகள் வதைப்படலம் முற்றிற்று.

ஆகு திருவெண்பா ௩௦௯.

# வச்சிரவாகு வதைப்படலம்.

விண்ணின்ற வொற்றர் விரைந்தோடிக் கொற்றவன்பா
லுண்ணின்ற வச்சமுட னோர்வீரன்—றிண்ணெனுந்தோ
ளாயிரரைத் தானையொடு மட்டனனோர் பாதவம்பேர்த்
தேயிறையென் போதிலென்றா னேற்று. (௧)

கூறுமெல்லை வல்லவுணர் கோன்வடலைவ போற்கனன்று
சாறுயரங் கொண்டுமைசெய் சாரொருவன்—மாறினம்முன்
வந்திகழ்ந்து வெஞ்சமரில் வன்பலரை யட்டுநின்றா
னந்திறனான் றென்றுநக்கா லைந்து. (௨)

மன்னவனை நோக்கியுயர் வச்சிர வாகுமைந்தன்
றுன்னுமொற்றன் றன்பொருட்டிச் சொன்னவிற—னின்னியலுக்
கேற்குமோ வையவிறை யீங்கமரத் தூதனையுன்
பாற்கடிது கொண்டுய்ப்பேன் பார். (௩)

என்னலுமன் மைந்தனைப்பார்த் தின்புறநீ செய்தியெனப்
பன்னவவன் பாதம் பணிந்தகன்று—தன்னிருக்கைச்
சாரிருந்த போர்ப்படையார் சாலையின்கட் புக்கனன்சே
யாரும் வழுத்த வினிது. (௪)

போர்க்கவயம் பூண்டு புனைபட்டி கையணிந்து
தோற்கருங்கோற் றூணிகொடு தும்பைமிலைந்—தேற்கவே
கார்க்கோல மெய்யிற் கவின்சேயோர் வில்லேந்திப்
போர்க்கோலங் கொண்டான் புரிந்து. (௫)

பாங்கர் நிழலிலுறும் பாங்கர் தமைநோக்கி
ஞாங்கர்வே தேவனை ஞாட்பினில்வென்—றீங்கொ
ரிமைதருமுன் றாம்பினில்யாத் தெந்தைமுனுய்ப் பேனீ
ரமைதிரமர்க் கென்றா னரசு. (௬)

பாலனுரை கேளாப் பரிந்திளைஞர் நன்றெனப்போர்க்
கோலமுறீஇக் கூட்டமுற்றுக் கொட்புறவே—காலதிற்செ
லாறுறா றென்னு னெறில்பரிமான் பூண்டேரில்
வீறுபெற வேறினான் வேந்து. (௭)

தந்திரர்தஞ் சீர்மைந் தருமந் திரர்மகருஞ்
சுந்தரமார் தேரிவர்ந்து சூழமன்னைக்—கந்தரநேர்
யானைமேற் கொண்டுரவோ ரெற்றுபறை யார்ப்பேற்றுச்
சேனைதம்முன் னுற்றசில சேர்ந்து. (௮)

ஐந்நூறு வெள்ளந்தே ரத்தொகையே வேழமீ
ரைந்நூறு வெள்ள மசுவநான்—கைந்நூறு
வெள்ளம் பதாதி வியனூற் படைசூழீஇ
வெள்ளம்போற் சூழ்ந்தார்த்த வேர்த்து. (௯)

பல்லியமன் கார்ப்பப் பலகொடிகள் விண்போர்ப்ப
வெல்லியலார் நாற்படைகள் மேவிவர—நல்லியலார்
கள்ளவிழ்பூந் தாமக் கவின்வச் சிரமொய்ம்பன்
பெரன்னெனவே போனான் புரிந்து. (௧0)

போரவையிற் சூர்மைந்தன் பொற்றேர்மேற் பேய்மலைந்த
கூகைகொடி சேனஞ் சூழீஇயிரைந்த—மாசையி
லேந்தடன்மால் வில்வீழ்ந்த தெற்றாணி யிற்றதிட
மாந்தடந்தோள் கண்டிடித்த வாங்கு. (௧௧)

உற்றவந்தத் துன்னிமித்த முள்கிலன்சேய் செற்றமொடு
மற்றொருநற் றாணி வரிசிலைகொண்—டெற்றுபடை
வெள்ளமுட னேகிச்செவ் வேடுே னின்றகளத்
துள்ளணலுங் கண்டுரைப்பா னோர்ந்து. (௧௨)

பொருவவுணர் கோனல்லன் புத்திரரு ளாரோ
வொருவன் வருபவனோ டோரீ—ரிருபடையை
வான்போர் புரிந்துமுரண் மாய்த்தொல்லை யெந்தையடி
யான்போய்த் தொழுவனென் றானின்று (௧௩)

மற்றவனைச் செற்றீண்டு மாலைவரு முன்விசயம்
பெற்றடியேன் மீளேனேற் பேராவே—னொற்றனே
வென்றார்த்தார் மன்மகன்ற னேத்தியினைத் தோள்கொட்டி
நின்றார்த்தான் வீர னெடிது. (௧௪)

ஆர்த்திடுமொ வார்ப்பினைக் கேட் டாரமருக் காங்குவந்தோர்
வோத்தனருன் னுள்ளம் வெருவினரிக்—கார்த்தொனியின்
பேரொலியோர் நாளும் பிறந்ததில்லை யெவ்விடத்து
மாரொலியா தென்று னரசு. (௧௫)

தேர்வலவ னும்விசையன் றேர்ந்தொற் றெனநின்றோன்
போர்புரிவா னோர்க்குமொலி பொற்கழலோ—யோர்தியென
வோதகனி சீறிமுரா னோர்கணத்திற் றீர்த்தவனைத்
தாதைமுன்கொண் டெய்ப்பனென்றான்றன். (௧௬)

என்றிஃது கூறிப்போ மெல்லையின்முன் செல்லவுணர்
துன்னு படைவகுத்துச் சூழ்ந்தொற்றூ—நின்றவன்மேற்
றெவ்வண் படைபலவுந் தேர்ந்துமழை போற்பொழிந்தார்
செவ்வன்வந் துற்ற செறிந்து. (௧௭)

அன்னபொழு தாடலந்தோ ளண்ணன் மறிக்குழுவிற்
றன்னுபுலி போற்றொடர்ந்து சூழவுணர்—செந்நிறத்த
குஞ்சியைக்கை யாற்பற்றிக் குன்றகத்து மன்றலத்தும்
விஞ்சவெற்றி வீசிடும்வின் மேல். (கஅ)

மேவுபடை யாவும் வியன்கரத்தி னூற்பிசையு
மாவவுணர் தேர்கரிமா மன்னனிகம்—யாவுமிரு
தாளாற் றுகைத்தொழிக்குந் தாரணிகொள் வீரமணித்
தோளாற் றதிபெயரோன் சூழ்ந்து. (கக)

சிலரை யடித்தான் சிலரை யரைத்தான்
சிலரைக் கழற்காலாற் றேய்த்தான்—சிலரை
யுடைத்தான் சிலரை யுலைத்தான் வலிமை
யுடைத்தா னவரை யுருத்து. (உ0)

தேருற்ற பாரிற்ற திண்புரவி வாரிற்ற
கூருற்ற கொல்களிற்றின் கொம்பிற்ற—சீருற்ற
தாரோடு மிற்ற தகுவர்தோ ளன்னவர்செய்
போரோடு மிற்ற புகழ். (உக)

பன்னவன்சேய் பாங்கர் வருகுமரர் நாற்படையோ
டுன்னவற்சூழ் தோரொ ருளுற்றமொய்ம்ப—னுன்னுதண்டா
லன்னரடற் றூளையோ டங்கமெலாம் பங்கமுற்றுச்
சின்னமுறச் செய்தான் றிரிந்து. (உஉ)

வேல்களிற்ற பாலமிற்ற விற்களிற்ற சூலமிற்ற
கோல்களிற்ற நாஞ்சிலிற்ற கொட்புறுமா—சோல்களிற்ற
வாள்களிற்ற மன்வீர வாகுவெனும் வார்கழலார்
தாள்களுற்றோன் றண்டாற் றகர்ந்து. (உந)

சிரந்துணிந்தார் சில்லோர் செவிதுணிந்தார் சில்லோர்
கரந்துணிந்தார் சில்லோர் கவின்கொ—ளுரந்துணிந்தார்
சில்லோர் புயந்துணிந்தார் சில்லோர் உயந்துணிந்தார்
சில்லோர் வரனொடமர் செய்து. (உச)

நோக்காற் சிலரையட்டா னொய்தி னிடியுரப்பு
வாக்காற் சிலரையட்டான் வார்கழல்கைத்—தாக்காற்
சிலரையட்டான் றண்டாற் சிலரையட்டான் மிண்டாற்
சிலரையட்டான் றீரன் றிரிந்து. (உரு)

போர்புரிந்து பின்னிடைந்து போகாமற் பொன்றினவர்
சேர்துறக்க மேல்வீ சினன்சிலரைக்—கூர்திசையி
லுந்தினன்சில் லோரை யுததியிலுய்த் தான்சிலரை
நந்தி கணத்துவந்தோ னன்கு. (உசு)

மன்னிலைமை கண்டு வயவச் சிரவாகு
தன்னனிகம் பட்ட தகைநினைந்தொற்—றென்னலன்முன்
சூரன் வலவனன்ன சூதவித்தேருந்தெனை
வீரன்முன் னுய்த்தான் விரைந்து. (௨௭)

சீற்றமொடு சூரன் சிறுவன் வரக்காணுக்
கூற்றமன்ன னுள்ளமகிழ் கூர்ந்தெவரும் —போற்ற
வுலகளந்தோன் சிந்துவென வோருருவேற் றோங்கி
யலகிலண்ட மூட்டநின்றா ளார்த்து. (௨அ)

புரம்வெல் சரமனையான் பொன்னனுரங் கீண்ட
நரமுடங்க லஞ்ச நகைத்தா—னுரமன்
முறுவலொலி கேட்டழன்று மொய்கந் துளக்கிச்
சிறுவ னவில்வான் சில. (௨௯)

வீரநன்றுன் றுண்மைநன்று மேதக்க பேருநன்று
சீருநன்று விஞ்சைநன்று செய்கின்ற—போருநன்று
றாற்றனன்று நின்ற னடன்மிடலு நன்றுநினக்
கேற்றதிவ்வார்ப் பென்றா னிறை. (௩௦)

விண்வந் தெதிர்மலைந்த வீரரையட் டோமென்ன
வுண்மகிழ்வுற் றாய்மற் றொழிமதிநின்—றிண்மிடலை
முற்றுமலைத் தெந்தைதிரு முன்னுய்ப்பே னின்னையென்றா
னுற்றுமலைத் தோளா னுருத்து. (௩௧)

நினைவென் றிடமுயல்வ னீயும் விழைந்தே
யெனைவென் றிடமுயல்வா யீங்கு—நனியிதுபு
கன்றுபய னில்லை கடிதமர்முன் செய்குதிபின்
வென்றுளார் வெல்கவென்றான் வேட்டு (௩௨)

என்றுமுன் வச்சிரமொய்ம் பென்போன்றன் விற்குழைத்தே
யன்று னொலிகொண்டோ ராயிரமாங்—கொன்னார்கோ
லொற்றன்மே லுய்க்கவன்று னோர்காதை யோச்சியம்பை
விற்றுகளா கப்பிசைந்தான் வேர்த்து. (௩௩)

பன்னரும்வில் வாங்கிப் பதினாயிரங்கணைவே
டன்னிளவன் முன்னமுறத் தான்விடுத்தான்—முன்னமரிற்
றானவர்நல் கம்முசலந் தன்னாற் புடைக்கவவை
யாங்கதிசை போய்வீழ்ந்த வார்த்து. (௩௪)

வாளி வறிதுபட மன்னுபதி னாயிரமே
மீளியெழு மேற்றூண்டி வீட்டிவிறற்—றோளினன்பொற்
காலாகந் தோள்கங் களத்திற் றனித்தனியாக்
கோலா யிரமுய்த்தான் கோன். (௩௫)

கைமெழுவி யப்பகழி காமருமெய் முற்றமுற
வைய னிறைவருந்தி யாங்கதன்பின்—வெய்யவனூர்
வையந் தனையுதைத்தான் மாவலவன் றேருகக்கண்
டொய்யெனவோர் தேரிவர்ந்தா னோர்ந்து. (௩௬)

சூர்மகன்பொற் றேரிவர்ந்து தொல்சிலையி லாயிரமாங்
கூர்கணையாய்ந் தேந்தல் குளத்துய்க்க—வார்கழலோன்
றீயவன்றன் றேரினைநீள் செங்கரத்தி னாலெடுத்து
மீயெறிந்தான் விண்ணகத்தின் மேல். (௩௭)

வானெறிந்த பின்வீர வாகுகளத் தேமமாய்த்
தானமர்தேர் யாவுந் தகர்க்குமெல்லைக்—கோனமர்சே
யோதிலக்கம் யோசனைமே லும்பருற்றுத் தேரொடுவே
றேதன்முன் வீழ்ந்தான் றுயர்ந்து. (௩௮)

மைந்த னெழுந்துசிலை வாங்கியம ருன்னுதலும்
வெந்திறலோன் கண்டுகையில் வில்லைமுரித்—துந்தவே
வச்சிரமொய்ம் பந்தரத்தில் வந்தெதிர்க்க வீரமொய்ம்பு
நச்சயில்வாள் கொண்டடைந்தா னன்கு. (௩௯)

மன்வச் சிரவாகு வாளை விலக்கியெங்கோன்
றன்வலிவாள் கொண்டு தடியவங்கை—வன்மகனுங்
கையிருந்த தண்டெறியக் கண்டுதுணித் தாரவுண
னையிரண்டு கந்தடிந்தா னாங்கு. (௪௦)

தாரவுணர் கோன்மைந்தன் றன்றலைபோய்ப் பொன்றுதலுங்
காரவுண ரஞ்சிக் கவன்றிரிந்தார்—சேரலிவ
ணின்றுமகிழ் கின்றனனே னோர்ந்திறையென் செய்குவனோ
வென்றுகரந் தாங்ககன்றா னென்று. (௪௧)

வச்சிரவாகு வதைப்படலம் முற்றிற்று.

ஆக. திருவெண்பா ௩௫௦.

---

# யாளிமுகன் வதைப்படலம்.

---

சூரியன்மா சேய்மடிந்தான் சூழ்ந்தமர்செய் வாருமிலை
சூரியனு மாய்ந்தான் றுதைந்தவிர்மஞ்—சூரியன்ம
னிஞ்சிநகர் மாய்த்தே னெதிர்ந்தார் தமைவீத்தேன்
செஞ்சினமு நீத்தேன் சிறிது. (௧)

மாலையும்வந் துற்றதுயர் வான்புவிநன் கேத்துவெட்சி
மாலைபுனை வேளை மறப்பேனோ—மாலைமனத்
தேவரல்ல றீரவல்லைச் செல்வனெனச் சிந்தைகொடு
மேவுமறு குற்றான் விரைந்து. (௨)

வன்றிறலோன் சென்மறுகின் மன்றருவர் கூற்றனிவன்
றன்றுகிலீர் கொல்வனெனச் சொல்லவவ—ணின்று
நிலங்கிளர்ம கேந்திரத்தை நீங்கிவரற் போற்றி
யிலங்கைநண்ணி னான்விசும்பா றெய்ந்து. (௩)

ஆங்கதுபோ தங்க னவிர்சூர் நகர்க்குதக்கார்ந்
தோங்கரண மேவிலங்கை யோம்புவோ—னீங்கரிய
வாயிரமா மாமுகனீ ரா யிரமா மொய்ம்புடைய
னாயிரமாம் வெற்புருவ னாம். (௪)

தண்ணளியி லுள்ளத்தான் றூவழல்கா ளூட்டத்தான்
பண்ணருமா பாவம் பலபயின்றோன்—றிண்ணியவில்
வாளிமழு நாந்தகமுன் மன்படைகொள் வன்கரத்தான்
யாளிமுகத் தியனுளா னேண். (௫)

தூயவனங் கெய்துறுங்காற் சூரையடைந் தேமீண்டு
மேயவன்றன் மைந்தன் விளிந்தமைதேர்ந்—தாயதுயர்
சார்ந்திலங்கை யுற்றான் றமியன் செலவிவன்யா
ரோர்ந்திலனென் னச்சொலுமோ ரொற்று. (௬)

நங்குலக்கோ வேசூரை நண்ணவங்குப் போந்தனைநீ
யிங்குன் மதலையிருந் தேமமுறத்—தங்கிவன்ற
னேரா வரிப்பேரோ னேர்ந்துபடை யோடெதிர்க்கப்
போரிழைத்துக் கொன்றனனப் போது. (௭)

வீரமொய்ம்பு தாளிலங்கை மேல்வைப்ப வாழியிலுற்
றூரவது மாய்ந்தா ரளப்பிலர்நின்—சீரமர்சேய்
போர்தரவன் னாற்கொன்று போயினன்சூ ரூர்க்கிலங்கை
பேர்தாமேன் மேவியது பேர்ந்து. (௮)

சூரமரூர் துன்னியங்குத் தொல்சீர் தொலைத்துநந்தம்
வீரரொடு போர்விளைத்து வென்றெதிர்வா—ராருமிலா
நீங்கடைந்தா னென்றலுங்கண் ணிற்செந் தழல்பொங்கத்
தாங்கருமாச் சீற்றமுற்றான் றான். (௯)

காண்டியென் காவல் கடந்துமகற் கொன்றார்போய்
மீண்டிடுமோக் கள்வனிவ் வீரமொடு—மாண்டிடவே
வெல்வனெனத் தானையொடும் வீரன்முன் போயினைய
சொல்வன் மிகவுஞ் சுளித்து. (௧௦)

அம்மகற்கொன் றங்குற் றழிவுசெய் திங்குற்று
யம்மகா வாரி யகல்வரிதா—மம்மரினை
மொய்சமரஞ் செய்தவென் முன்னிவனீ வல்லதுவே
செய்மதியி லாயென்றான் றேர்ந்து. (௧௧)

சொற்கேட் டலும்வெகுண்டு சூழ்வீர மொய்ம்பமரி
னிற்கேற்ற வன்மை நிலைதெரித்தி—மற்கேற்ற
வாளிமுக நின்முகங்க ளாயிரமு மீண்டறுத்து
ஞாளிகொள வீவனென்று னன்கு. (௧௨)

பன்னு மளவிற் படையுததி சூழ்ந்தாங்கு
மன்னுவரை நேர்புயனை வந்துவளைத்—தன்னவன்மேற்
கொல்படைக ணேடிக் கொடும்போர் விளைக்கவவன்
வெல்படைவாள் கொண்டடைந்தான் வேர்த்து. (௧௩)

துண்டநிறஞ் சென்னிகளந் தோள்கரந்தா ளானவெலாம்
விண்டழிவு கூரவே வெந்தகுவர்—தண்டமதைச்
செற்றிடவன் றான்வீரற் றிண்கரமோ ராயிரத்தா
லெற்றினான் பேரிடியி னேய்ந்து. (௧௪)

அடித்த கரம்பிடித்தே யையனங்கை வாளாற்
றடித்திடு மாறு துணிக்கத்—தடித்தவன்மற்
றாயிரமாங் கையினு லாயிரமா வெற்பெடுத்து
மேயவன்மேல் வீசினான் வேர்த்து. (௧௫)

பொற்றைமுற்றும் பூழியாய்ப் போகவையன் றாதுவன்றான்
மற்றையோ ராயிரங்கை வாளினறுத்—தெற்றியே
யாளிமுகன் சென்னிகளோ ராயிரமு மீர்ந்தெறிந்தான்
கூளிவிருந் தார்விற் கொள. (௧௬)

யாளிமுகன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௩௬௬.

---

# வீரவாகு மீட்சிப்படலம்.

---

இன்னதன்மை யாளிமுக னென்பவனை யட்டபின்னர்த்
தன்னுடைவாள் பொன்னுறையுட் டான்செறித்து--மின்னவிர்மெய்
வெந்திறல்கொள் வீரன் வியனகரம் விட்டெழிலார்
செந்திநகர் சென்றுபுக்கான் றேர்ந்து. (௧)

புக்கபோ தேந்தல் புகல்பா ரிடர்காணு
மைக்கடலி ஞர்ப்ப வயவீரர்—மிக்கவிறல்
வாகு தனைத்தழுவ மற்றவனைத் தான்றழீஇ
மாகருணை கூர்ந்தான் மகிழ்ந்து. (௨)

ஏரிலக்கத் தெண்ம ரெதிர்ந்தவன்றா டாழ்ந்திடமெய்
யாரவர்ப் புல்லி யவரொடும்போய்—வீரன்பின்
விண்ணோரக் கண்டார் வியன்கோயி லுட்குகனைக்
கண்ணாரக் கண்டார் களித்து. (௩)

உள்ள முருக வொளிர்கண் ணுறவெள்ளம்
வள்ளலடி தாழ்ந்துவிறல் வாகுநிற்ப—நள்ளலன்முன்
மேவிநந்த மாற்றம் விளம்பவவன் சாற்றுமொழி
யாவு மிசைத்தியென்றா னீண்டு. (௪)

சூர்முனம்போய் நின்மாற்றஞ் சொற்றே னமரர்தங்
கூர்சிறைதா னீக்கவுளங் கொண்டிலன ஃ—தோர்ந்தந்திங்
குற்றனனென் றன்குகனின் ஞேர்செயலுஞ் சொற்றிலனீ
மற்ற திசைத்தியென்றான் வாய்ந்து. (௫)

தொடுத்தவண்டார் மொய்ம்பிறைஞ்சிச் சூர்நகர்செல் போது
தடுத்தவரை நின்றா டகையாற்—படுத்துவந்தே
னென்ன வருந்தினைகொ லேலண்டகுவ ராலென்றான்
முன்னருள்கூ ராறு முகன். (௬)

அங்கவ் வமையமய னாழியா னண்டர்கோன்
றுங்க முகநோக்கிச் சூரன்பாற்—பொங்கருளிற்
றேவர் சிறைவிடுப்பான் செப்பவொரு தூதுவிட்டோம
பாவியது கேளான் பரிந்து. (௭)

வீதல் விதியவன்றன் வீறொழிப்பா னாளையே
போதுநா மென்று புகலவச்சொல்—காதுறுமு
னின்னலெலா மாறிற் றெனத்தம் மனத்தின்க
ணுன்னமா ருற்றா ருவப்பு. (௮)

ஆய வமையத் தடல்வீர மொய்ம்பவுணர்
மேயபதி யிற்சயந்தன் மேவியதுந்—தீயவர்செ
யின்னலுமற் றேனையவு மின்பினுளைத் தேர்மகவான்
றன்னுளத்தைத் தேற்றினான் றான். (௯)

வீரவாகு மீட்சிப்படலம் முற்றிற்று

ஆக திருவெண்பா ௩௭௫

# சூரனகர்புரி படலம்.

---

மன்வச் சிரவாகு மாண்டதுந்திண் வாகுசெலுந்
தன்மையுமே வன்றூதர் தாரவுணர்—மன்முன்போய்ச்
சோரியல்பிற் சொற்றலுமே சூரடைந்து துன்பமெனும்
வாரியின்கண் வீழ்ந்தான் மருண்டு. (௧)

ஓங்குந் துயர்க்கடலு ளூற்றவுணர் கோன்மெலியப்
பாங்குற் றவரும் பரிசனரு—மாங்கழவே
கற்பிற் றிகழ்பதுமை காரளகஞ் சோரவிழுந்
தற்பிற் புலம்பினா ளார்த்து. (௨)

அல்லாருங் கூந்த லவிழ்ந்தலைய மாதரா
ரெல்லாருஞ் சூழ்தந் திரங்குமொலி—வல்லார்
கலியி னொலியைக் கறங்லைகந் தியமா
வொலியை மறைத்த துயர்ந்து. (௩)

அன்ன பொழுதி லறந்தனைக்காய் மந்திரிசூர்
முன்னடைந்து தாழ்ந்து மொழிதவா—னுன்னுமெட்டோ
டாயிரங்கொ ளண்டமா ளாற்றலுளா யீங்கிதற்கு
நீயிரங்க லாமோ நினைந்து (௪)

தந்தை யிறந்திடினுந் தாய்மாய்ந் திடினுமனை
மைந்தர் மடிந்திடினு மற்றுமுள்ளோர்—நந்திடினு
மண்ட புவன மனைத்து மொழிந்திடினுங்
கொண்டதிண்மை நீங்குவரோ கூறு. (௫)

மல்குவார் வீரரையு மாதரா ரூழ்சேரின்
வெல்குவா ராங்கவர்தம் வென்றியெனச்—சொல்குவா
ராதலினின் சேய்க்கற்ப வாயுள் விளைந்ததுகாண்
டேதணட்டா னென்பதோர் சொல். (௬)

ஒன்னார் வினையு முரனு மிகநாடி
யுன்னு வுறுதி யுனாற்றுமே—மன்னுவெஞ்
சூரனெனும் பேர்பெற்ற தொன்றா லிரங்கலே
தீரமிலார் போலே திகைத்து. (௭)

அறங்கா யமைச்ச னவுணர்கோ னெஞ்சந்
திறங்காண் டறநவின்று தேற்ற—வுறங்காத
வொற்றரைப்பார்த் திங்குற்ற வொற்றனெங்குற் றானென்ன
மற்றதனைச் சொற்றார் வகுத்து. (௮)

அந்தமொழி தேர்சூ ரயனின் றவர்ப்பாராச்
சந்த வயனையிங்குத் தம்மினெனை—வுந்தமவ
ருந்திவந்தோ னும்பரொடு மொள்ளையில்வே ளோடெயிலார்
செந்தியமர்ந் தானென்றார் தேர்ந்து. (௪௯)

வேந்தனது கேளா விழுமிதென வெய்துயிராக்
காந்தனலிற் சீறிக் கமலத்தா—ரேந்தலைமற்
றண்டத் திருந்தே யழைமி னெனக்கொணர்ந்தார்
தண்டத்திற் கஞ்சுகையர் தாம். (௫௦)

மற்றயனை நோக்கிவெஞ்சூர் மாணழிந்த மாநகர
முற்றிறத்திற் செய்திடென முண்டகனப்—பெற்றியுறப்
பொன்மதில்வே ரஞ்சிகரி பூம்பொழின்மன் றேனையவுந்
தொன்மைபோற் கண்டான் றுதைந்து. (௫௧)

மன்மந் திரமு மலரோன் வகுத்துநிற்பக்
கன்மந் திரமென்று கண்டுவந்து—பொன்மணிசெ
யாதனத்தில் வீற்றிருந்தா னூரவுணர் போற்றவிடை
யோதனத்த னுதியர்க்கீந் தூங்கு. (௫௨)

சூரனகர்புரிபடலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௩௮௭.

---

# சூரனமைச்சியற் படலம்.

---

அந்தவமை யஞ்செந்தி யம்பதியிற் கந்தவேள்
புந்திகொளீ ராயிரமாம் பூதவெள்ளம்—வெந்தலைவ
ரோரிலக்கத் தொன்பதின்ம ரோடுற் றனனென்றார்
சூரிலக்கின் முன்செலொற்றர் சூழ்ந்து. (௧)

தாரகனை மாயவெற்பைச் சாய்த்தனன்முன் றாதினொரு
வீரனையே யேவவன்னுன் மேவிலங்கை—யூரழித்தே
யாளிமுகற் கொன்றுசென்று னுடல்செய் வானெனணினன்
வேளிதுண்மை தேர்தியென்றார் வேர்த்து. (௨)

ஒற்றர்சொற் கேட்டிறைவ னோர்தன் னிளவறனை
யுற்ற வமைச்சரைநன் றோர்மகரைச்—சுற்றத்
துணர்வினரைத் தானைக் குறுதலைவர் தம்மைக்
கொணர்வித்தா னோர்கணத்திற் கூர்ந்து. (௩)

அங்கழலூழ்த் தன்னா ருருகுவைக ளாடலஞ்சூர்
பொங்கழலிற் சீறிப் புகலுவான்—புங்கவர்கோன்
றேவர் தலைமையான் சிறைவைத் தமைதீர்ந்து
தாவிலாற் கோதினன் றான். (௪)

கண்ணுதலோர் சேயைநல்கிக் காமருசீர் மைந்தநீ
விண்ணவர்தம் வெஞ்சிறையை வீட்டுகென—வண்ணனந்தி
யங்கணத்து வீரரொடு மாரணிகப் பூதரொடு
மிங்கணுற்றே வந்தா னினிது. (௫)

கூர்தருவேல் கொண்டுகொன் குன்றோ டிளவலைக்கொன்
றூர்கலியின் பாங்கமர்ந்தோ ராண்மையொற்றென்—சார்விடுப்ப
மன்னவனீர் பாய்ந்திலங்கை வீட்டி நகர்நடுப்புக்
கென்னவைக்கண் ணுற்றா னினிது. (௬)

உற்றவனென் முன்சில் லுரைபகர்ந்து வீரர்போன்
மற்றவனென் முன்சிலரை மாய்த்துநகர்—செற்றழித்துப்
போயவன்மேற் சில்லோரைப் போக்கவவர்ச் சாய்த்தெளிளஞ்
சேயுயிருங் கொண்டான் செகுத்து. (௭)

எண்ணில் படைக ளிறந்த களேபரங்க
ணண்ணினவே தூதனையும் நான்சிறையிற்—றிண்ணமுற
வைத்திலனென் செய்கேன் வசையுற்றேன் யாளிமுகப்
பைத்தகுவற் கொன்றகன்றான் பார். (௮)

பொங்கரவம் பூண்டோன் புதல்வனமர் புந்திகொண்டே
யிங்குவரு வான்போலும் யாவுமொற்றர்—நன்குரைத்தார்
சூரனென்றோர் பேர்படைத்தேன் றான்றன்மேற் போர்புரிதல்
வீரமன்றென் றுன்னினேன் வீண். (௯)

திருவிற் றிறலிற் றிகழ்சூழ்ச்சி யின்மாண்
டருபெரியர் தாமெனினுந் தக்கோ—ரொருவினைசெய்
போதுரவர்க் கேட்டுப் புரிகுவர்நா னுற்றலிதென்
றோதுதிரென் றோதினன்சூ ரோர்ந்து. (௧௦)

அன்னதுணர்ந் தேமேதி யம்பெயரி னானிறைஞ்சி
மன்னவனுஞ் சூரபது மன்முனிவை—பன்னினான்
மாலினைவெ லும்பிதனை மால்வரையை யட்டவனைப்
பால னெனலாமோ பார்த்து. (௧௧)

தாதவிர்தார்த் தாரகன்றன் றானைமுற்றுஞ் சாய்த்தவரைப்
பூதரென வெள்ளுதலும் புன்மைத்தூர்—சேதித்துன்
காதலன்றன் னாவி கவர்ந்தகொடுங் கள்வனையுந்
தூதனெனற் பாலதோ சூழ்ந்து. (௧௨)

குன்றிளவல் பொன்றிடுங்காற் கூரியவேற் காளைமேற்
சென்றிலையல் லாமலுநின் சேனையுய்த்து—வென்றிலைநீ
யாரணலை யற்பமென்றஃ தாற்றலடக் காரயிற்
பாரனைத்து மாய்க்கும் படர்ந்து. (௧௩)

ஒன்னலர்தஞ் சூழ்ச்சி யுணர்ந்தசனுக் கேற்பசெய்வார்க்
கின்னலும்வந் தெய்துமோ வேண்குகன்மேன்—முன்னுடன்றே
சேறியே லொற்றுமிங்குச் செல்லுமோ சேயுயிருர்
வீறழிந்த தென்றிரங்காய் வேர்த்து. (௧௪)

கழிந்த பிழையைக் கருதி யுளந்தா
னழிந்திடனன் றன்றறிஞாக் காயின்—விழைந்துநீ
போதியமர்க் கென்றான் புரமெரித்தான் மைந்தன்மேன்
மேதியனன் றென்றனன்சூர் வேட்டு. (௧௫)

பின்றார்க் குணனவில்வான் பேரமரர் மேலமர்க்குச்
சென்றிலைமெய்ப் பாலன்மேற் செல்லுதற்கோ—வன்றிறலு
மீறில் வயது மிருந்தியு மற்றுமுள
பேறுநனி பெற்றாய் பெரிது. (௧௬)

காதியண்டர்க் காய்ந்துபுறங் கண்டோய் கணங்களையுந்
தூதனையுஞ் சூழ்ந்து தொடர்ந்தமர்க்குப்—போதியோ
துன்றன் படைத்தலைவர்த் தூண்டுவையே லாண்டவரை
வென்று வருவரென்றான் வீத்து. (௧௭)

அறங்கா யமைச்ச னறைவா னமரர்
திறங்காய் திறலோய் திடங்கொண்—மறங்காண்
பருமஞ் சரியன்றாய் பாலனொடு போர்செய்
கருமஞ் சரியன்று காண் (௧௮)

கண்ணுதலு மல்லை கரியவனு மல்லையயன்
றிண்ணமனு மல்லை சிறுவன்மே—லண்ணனீ
நேர்தரினின் றாற்ற னினைந்துடைவ தன்றியெதிர்
போர்செயவல் லானோ புகல். (௧௯)

கூறுகிறாற் கின்னுமொன்றைக் கோடரியால் வெட்டுகின்ற
நீரதுதா னீனினைந்தாய் நின்மகரு—ளாரொருவற்
காற்றலரங் கந்தனுமே யாரிலக்கத் தொன்பதின்ம
ராற்றலரும் பூதருமே யாங்கு. (௨௦)

வெற்பினொடு தாரகனை வீத்தா னெனமதித்தாய்
வெற்பகத்தி யன்மொழியால் வீங்கதுவில்—வெற்பகத்தான்
றந்தவயில் கொண்டுபிள்ளை தான்விடுக்க மாறுபடை
யுந்திலன்பின் மாய்ந்தா னுலைந்து. (௨௧)

மைந்தனொரு தூதுவனான் மாய்ந்தா னெனவினைந்தாய்
மைந்தனெறழ் வன்படைக்கண் மன்கையுற்று—மைந்தன்மே
லுந்தா தொழிந்தா னுரைத்தனனீ துன்மை நீ
சிந்தா குலந்தவிர்தி தேர்ந்து. (௨௨)

தானை யதிபர் தமிலொருவர் கூய்விடுக்கிற்
சேனையொடு சேய்வலிமை செற்றடைவன்—மானவநீ
யேலவிது செய்தியென்று னேந்தன் முறவலிக்கக்
காலசித்து சொல்வான் களித்து. (௨௩)

செந்தியமர் சேயமேற் சிலரைநீ யேவலன்றி
மந்திரமும் வேண்டுமோ மற்றிதனுக்—கிந்திரனை
மேலவரை வென்றிநாள் வேந்தே வினவலையோர்
பாலகற்கஃ தாற்றல் பழுது. (௨௪)

தந்தையென் றனைப்பணித்தி சாரதரை வேலை
யிமையளவிற் கொண்டடைவே னென்ன—வமைசமரிற்
றண்டனென்போன் றுனுட்கத் தாக்குஞ் சதருடைய
சண்டனென்போன் சாற்றுவான் றாழ்ந்து. (௨௫)

ஏவுதிநா யேனையின்னே யேவர்தாங் காப்பினுமே
மேவலனை வென்றிங்கன் மீள்குவேன்—காவன்
மனவென் றிசைத்தளவில் வல்லவுணனாய
வனலியென்பான் சொல்வா னழன்று. (௨௬)

தெம்முனையிற் சேயெனினுஞ் சென்றேற்கிற் சொல்லாமே
யெம்மொடுமா மந்திரத்தி லெய்வரெனி—லம்மவன்
சூரர்க் கழகிதெனச் சொல்லலுமே சிங்கனென்போ
னாக் கனன்றறைவா னார்த்து. (௨௭)

வெய்யமற வோரை விளித்தமையு மந்திரமுஞ்
செய்யசிறு சேய்வன்மை சிந்திடவோ—வையதெவ்வா
யோர்ந்தண்டத் தோரெல்லா முராறும் வெல்லுவனாற்
றேர்ந்திலையே நாயென் றிறல். (௨௮)

வன்மைசொல னின்றன்று மற்றென்னை யுய்க்கிற் றெவ்
வின்மையென வட்டடைவ னீண்டென்று—றன்மனன்மு
னின்னபல மந்திரரு மேனையருஞ் செப்பவெய்யோ
னென்னலன் சொல்வா னுகந்து. (௨௯)

குன்றுடன்வல் லும்பியைச்சேய் கொன்றிடுநா ளேவுகிலா
யின்று வினவுவதென் னெந்தை நீ—தன்றுமொற்றுற்
பாலனுயிர் தீர்த்தாய் பழிபூண்டா யூழொழித்தாய்
சாலவறி வின்மையினாற் றான். (௩௦)

பொருளலா தொன்றைப் பொருளெனக்கொண் டஞ்சி
வருவினைய மோராது வல்லை—யொருசெயல்செய்
தின்னலுற்று வாழ்தலுஞ்சீ ரேய்ந்தோர் கடமையோ
மன்னவாநன் காய்க மகிழ்ந்து. (௩௧)

ஆயிரத்தெட் டண்டமுமா ளத்தநீ கத்தனல்கு
சேயொடமர் செய்யவெழல் சீரியதன்—றேயினெனை
யேற்றவரைக் கொன்றிமைப்பி லெய்துவனென் றுன்கனகன்
சாற்றுவன்றன் றந்தையெதிர் சார்ந்து. (௩௨)

ஆர்வலிகொள் சூர்சே யமர்க்கிரங்கி னானெனுமோர்
கூர்மொழிதத் தஞ்செவியிற் கொண்டுமுன்னின்—பேர்நினைப்புற்
றுள்ளத் தலமந் தொடுங்கு மருவிலா
ரென்னத் தகுமா மிது. (௩௩)

செந்நாவின் மாற்றந் திருந்தாத பாலன்மேன்
மன்னாநீ போர்க்கேகன் மாண்புடைத்தோ—வொன்னா
ரிரியவமர் செய்வனெனை யேவுதியென் றன்பின்
னெரிமுகவன் சொல்வா னெடுத்து. (௩௪)

ஈரண்ட மோரா யிரத்தெட் டினுக்கிறைநீ
தாரமர்தோட் சிங்கனுந் தம்பியுளன்—வாரமகா
ரெண்ணிலார் யாமுளோ மேய்கரிமா தேர்வயவர்
நண்ணனிக முள்ளபல நன்கு. (௩௫)

திண்மாப் படையோடு தெய்வப் படையுமுள
வொண்மாப் பரிதியுமான் றுண்டுலக—மெண்மாத்தே
ரேயிந் திரஞால மோர்மடங்க லூர்தியுள
மாயை பலவுமுள மற்று. (௩௬)

இன்ன வரும்வெறுக்கை யெய்ந்தீ றிலாதுறையு
மன்னநினைப் போன்றுளர்யார் மாதுமைசெய்—தன்னையொற்றைப்
பூதர் தமைவெல்லப் போற்றெமரை யேவாமற்
போதவிரங் குற்றாய் புலர்ந்து. (௩௭)

ஆற்றவெம்போர் செய்யென் றுளைவன் சிரந்தடிந்த
வொற்றனொடு பூத ருறுவீரர்—மற்றவரைக்
கொன்னே தடிந்தலது கோதினகர்க் கேமீண்டு
துன்னே னெனப்பகர்ந்தான் சூள். (௩௮)

வன்சிலையீ றில்கவசம் வான்படைகள் பெற்றுளே
னென்செயனீ தேர்ந்திலா யெந்தையெனைக்—கொன்செயுமா
வெய்யவயில் வேண்மேல் விடுத்தியெனச் சிங்கமுகன்
கையமைத்துச் சொல்வான் கடிது. (௩௯)

மந்திரத்தர் வன்படையின் வான்றலைவர் மைந்தரவர்
தந்தமெறுழ் சாற்றியே தாமகன்றார்—புந்தியுற
வுன்றனக்கே யொன்று முரைத்திலரிம் மாற்றங்கே
ளென்று புகல்வா னெடுத்து. (௪௰)

உற்றசினங் கற்றா ருணர்வையும் வாங்குமது
முற்றுமுனன் புள்ளார் முறையுணர்த்தல்—பெற்றியது
மன்னர்செவி யிற்றீ மடுத்தாங்கு நீதிசொலு
மன்னர் துணையமைச்ச ராம். (௪௧)

முற்று வதுமுதலு முன்பயனு மற்றுமுன்னித்
தெற்றெனத்தேர்ந் தொன்றினைப்பின் செய்வரேற்—குற்றமுண் [டோ
மால்விளையூண் மேவிமீன் மாய்வதுபோல் வேந்தேநீ
மேல்விளைவ தோராய் விழைந்து. (௪௨)

வானவரை யிந்திரனை மற்றவரை நோன்மைசெய்தா
ரான திரு வோடுய்ந்தா ராருமிலர்—மீன
மிமையார் தமைக்கொணர்வா னேவினையன் பச்சி
லமையா ரலதுசெய்வா ரார். (௪௩)

இந்திரற்காய்ந் தேரூ ரெரிக்களித்தா யித்துணைத்துன்
பந்தரத்த ரானங்கட் காயதெனப்—புந்திகொளா
யார்சிறைவிட் டாயில்லை யன்னதனுக் கன்றோவேள்
போர்புரியப் போந்தனனிப் போது. (௪௪)

திகழுமையோர் பங்கன் றிருவுடனீர் நூற்றெட்
டுகமிருமென் றோதினா னுற்ற—தகவையெஞ்
சத்திவெல்லு நம்மையென்றான் றாரகன்ற னாவியையே
னுய்த்தசெவ்வே லுண்ட துருத்து. (௪௫)

சூரவர் சிறுபாலர் கோதையர்தீ தில்சீர்
விரதமது பூண்டுளோர் மேலோர்—வரமறையோர்
தம்மையொறுத தாரன்றோ தாழ்நிரைய முற்றுமுற்றே
யம்ம வலமருவோ ராழ்ந்து. (௪௬)

அமரர் சிறைவிடுவை யாயிலம ராற்றக்
குமரவே ளீண்டுக் குறியா—னமதுபெருங்
குற்றமுற்றுஞ் சிந்தைகொளான் கொன்கைலைக் கோனை
யுற்றிடுவ னோர்நொடியி லோர்ந்து. (௪௭)

அன்னதுசெய் யாதிருப்பை யாயி லரன்குமர
னுன்னையொக்க லோடடுதே லுண்மையே—யென்னலுஞ்சூர்
கைபுடைத்தங் கம்பதைப்பக் கட்புலிங்கங் காலவே
வெய்துயிர்த்துச் சொல்வான் வெகுண்டு. (௪௮)

ஏவல்செய் தேவர்க்கு மிந்திரற்கும் பாலற்குங்
காவல்செய் பூத கணங்கட்கு—மாவிதிர்ப்புக்
கொண்டனையோ வென்னைக் குலைந்தனையோ மூவர்க்கு
மண்டருமா மொய்ம்புடையோ யாங்கு. (௪௯)

மன்றானங் கட்கு வரந்தருவா னெஞ்சத்தி
யன்றியழி வில்லெனுஞ்சொ லாங்கறியே—னின்று
மதியுடைய வெம்பிநீ வல்லைவல்லை வஞ்சம்
புதிதொன் றுரைத்தாய் புனைந்து. (௫0)

நூற்றெட் டுகங்க ளுவலரிய மாத்திருவின்
வீற்றிருந்து வேத்தியலை மேவுதிறன்—றூற்றினுட
ஞூரேய் சடையண்ண லன்றளித்த மாப்பேற்றை
யாரே விலக்கவல்லா ரின்று. (௫௧)

ஆதிபரா னெஞ்சத்தி யன்றிவல்லார் வெல்லாரென்
றோதிடினுஞ் சத்தி யுடனிறையும்—பேதமோ
வன்றுவரந் தந்தா னடுமென் பதுபிழையிஃ
தொன்றுவழக் குண்மையன்று லூங்கு. (௫௨)

செழியாகந் தாரகனுஞ் செய்துநம்போல் யாக்கை
யழியா வரம்பெற்று னல்லன்—வழியா
மலைந்தா னலனுணர்வில் வச்சிரமொய்ம் பென்சேய்
குலைந்தா னிதுகொல் குறை. (௫௩)

தவஞ்செய் துழலமரர் தம்மி லரக்க
ரவுணரிலோ ராயிரத்தெட் டண்டந்—துவரப்
புவனமுற்று மோராழி போக்கிப் புரந்தா
ரெவரெனக்கு நேரிருந்தா ரிங்கு. (௫௪)

மூண்டகத்தோ னாதி முதுவரள வில்கால
மண்டர் தமைச்சிறையா னூற்றிடுதல்—கண்டுமவர்
மன்றவெனக் கஞ்சியுயிர் வாழ்ந்தனரோர் பாலனோ
வென்ற னுயிர்படுப்பா னிங்கு. (௫௫)

எண்ணிலொரு பால னெனைவெல்வ னென்பதும்ப
ரண்ணினனை யங்கனியென் றாசைகொடு—கண்ணிலவ
னுற்றதனைக் காட்ட வுறுகரமி லாதவன்போய்ப்
பற்றுறுவ தொக்கும் பரிந்து. (௫௬)

என்றிவைசூர் கூற விளவனன்று நன்றெனக்கேட்
டொன்றுசொல்வன் கேட்டியென வோதுவான்—றுன்றுமதி
மின்சடையுஞ் செம்பவள மேனியுங்கொண் டேநின்றான்
மன்சகமெ லாநிறைந்த மன். (௫௭)

தன்னே ரிலாதான் தனியுருவங் கொண்டதுதா
னென்னே து வென்பையே லெண்டொழில்கள்—கொன்னேயைத்
தாற்றியுயிர்ப் பாச மகற்றியுயர் வீட்டின்க
ணேற்றின் னருளி னியல். (௫அ)

அப்பரனை நோக்கி யருந்தவம்பன் ணளியற்ற
வொப்பில் வரந்தந் தொழிவுமே—செப்பிவைத்தா
னேரிமையோர்க் கின்னல்செ யேதுவினிற் கீறுசெய
நாரிபங்கன் றனிவேந்தா னன்கு. (௫௯)

வந்தந்த யாமழித்தன் மாண்பன் றெழிற்கு
ருநர்தொலைப்பார் யாருளரென் றுன்னி—நிரந்தரமாந்
தன்னினுரு வாமொருசேய் தன்னான் முடித்துமென
வுன்னினா னீச னுளத்து. (௬0)

செய்யதிரு மேனியுமோர் சேர்முகங்க ளோராறுந்
துய்யவவற் றிற்கிரட்டித் தோள்களுமா—வுய்ய
முனிக்குமா ரற்காய் முளரிக்கண் ணுலோர்
தனிக்குமா ரற்றந்தான் சம்பு (௬௧)

மாந்தரிற்புண் மாவினத்தின் மற்றுமுழல் யாக்கையினி
லேய்ந்து பிறந்தார்போ லெண்ணலீ—யாந்தற்
பரனுதற்கண் வந்தவனைப் பாலனென்றாய் வித்தின்
மரனெனுங்கல் போல்வனவன் வாய்ந்து (௬௨)

அருவமா வானுருவ மாவா னுருவ
மருவமிலாத் தன்மையுமே யாவான்—கருமமுதீ
லாவான் மறைக்கு மறிவரியான் யாவுமே
யாவா னமல னமர்ந்து. (௬௩)

ஏயுமறி வாயவுரு வேந்தலியல் பையானு
நீயு மிசைத்துமென நேரினஃ—தோயுமோ
வார்ந்தமுனி வர்க்குமுற்றா வாதுளமுற் றந்திரநூ
றோர்ந்தவரு மோர்வர் சிறிது. (௬௪)

இத்தன்மை யாய விறையைச் சிறுவனெனச்
சித்தமதிற் கொண்டிகழ்ந்து செப்பினாய்—மைத்தகுவர்
தங்கிளையோ டுன்னைத் தடிந்திடுவ னோரிமைப்பிற்
பொங்கிகன்மேற் போந்தனனிப் போது. (௬௫)

ஆயிரத்தெட் டண்டம்பெற் றாமெனவே யெக்கழுத்த
மேயினைமா தத்துவத்தின் வேற்றுமைதா—னீயுணர்ந்தா
யில்லை புவியளப்பின் றெஞ்சமண்டங் கேட்டியே
லொல்லை மருளுதிகா ணோர்ந்து. (௬௬)

ஆனவண்டம் யாவையுந்தன் னுணையினு லோரிமைப்பிற்
றானளித்துப் பின்னழிக்குஞ் சத்தியுள—ஞான
வுருச்செய்ய கந்தவே ளுன்னோ டெதிர்ந்து
செருச்செய்யச் செந்திவந்தான் றேர்ந்து. (௬எ)

வச்சிரமா யாக்கைபெற்றோ மாய்விலையென் றேமதித்தா
யச்சுறுமவ் வாவி யழிந்திடுத—னிச்சயமே
வானிலத்து வந்துதித்தோர் மாள்வதுண்மை மண்ணுரிமை
யானதினின் னுக்கைபொன்று மாம். (௬அ)

அல்குமிமை யோரை யலைக்கின் றமைகுறியா
மல்கு முயிர்க்குயிராய் மன்னிறையோ—னல்கு
முனம் வரத்தைத் தான்றவிர்த்தான் முன்னின்றேன் செய்தா
யெனவினவித் தட்பா ரெவர். (௬௯)

நிகரில் வளநோடு நின்கிளையு நீயு
மிகலின்றி வாழ்தியென் றின்ன—பகர்தந்தேன்
வன்சிறைநின் றும்பரைநீ வல்லை விடுதியென்றான்
மன்சினமேற் கொண்டறைவான் மன். (எ0)

காற்றிற்றள் ளுண்டு கனலிற்சு டுண்டுகங்கை
யாற்றிற்றாக் குண்டுபொய்கை யார்ந்தலையுண்—டேற்றறுவர்
பாலுண் டமுதாடும் பாலனையோ வான்பொருளா
மாலுண்டு நீநினைந்தாய் வாய்ந்து. (எக)

பிரமமாம் வத்துயிரிற் பேர்பெற் றளவி
லுருவமுற்று மாயையா லுன்பல்—கரும
முனித்தனியாற் றும்மென் றுருநீர்க் கடத்துட்
டனித்தனியாய்க் காட்டிடல்போற் சார்ந்து. (எஉ)

கடங்கடகர் காலையங்கண் காயங் ககனத்
தொடுங்குதல்போன் மெய்ப்பேத முற்ற—வடங்கலுமே
பொன்றுங்காற் றொன்மையே போல வபேதமா
யொன்றும் பெருஞ்சோதி யுற்று. (எ௩)

வன்மையிலார் தாழ்வர் வலியுளா ரோங்குவரித்
தன்மை யுலகிற் றலைப்படுமீ—றின்மையுள
யான்பெரியன் வேள்சிறிய னென்பதினு லன்னவனை
யான்வெலுவன் றிண்ண மிது. (எ௪)

பன்னரிய நங்குரவர் பல்லோ ருயிர்தொலைத்த
வொன்னலராம் வானவரை யோர்சிறையுட்—டுன்னவைத்தேன்
வல்லமிகை செய்தவரை மன்னொறுத்தன் மாண்பெனவே
தொல்லைமனு நூல்கள் சொலும். (எ௫)

விண்ணோர் சிறையை விடேனிந் திரன்றனையுந்
திண்ணோர் சிறையிலுய்ப்பேன் செப்பருமுக்—கண்ணோ
ரரனெய் தினும்பொருவ னுகையினிம் மாற்றந்
தாலயர்த்தி தம்பி தளர்ந்து. (௭௬)

என்னினியான் பண்ணுவதே யென்றெடுத்துத் தொன்னலரை
மன்னினியா ரென்ன மதித்தயர்பாற்—றுன்னிலையேல்
வேறு பகைவருமே வேண்டுமோ நீயிருக்க
வேறுமுக மேற்றோ வெனக்கு. (௭௭)

ஆயிரமாஞ் சென்னியும்ப லாயிரமாந் தோளுமீ
ராயிரமாங் கையுமெந்துக் காற்றினை—யாயிருமேன்
மாதை ரியம்வீர மானமற்றுப் பித்தரினும்
பேதைமையே பெற்றாய் பெரிது. (௭௮)

வன்றகுவர்க் காய வழியிகந்தா யும்பரொத்தாய்
மன்றிறலுங் கொன்விறலு மாண்டனைசீர்—குன்றப்
பிறந்தாய் பயனொன்றும் பெற்றிலாய் பேதா
யிறந்தா யிலையிருந்தா யீங்கு. (௭௯)

அன்றுணர்வில் லாப்பருவ மாதலிற்கூற் றைக்கடிந்தா
யின்றுணர்வெய் தப்பெண்மை யின்மெலிந்தாய்—நின்றிறலு
மாடலுமே காணவரு ளன்னையின்னும் வந்திலா
னேடருவங் கொண்டமையா னேர். (௮௦)

பகையெனவொன் றுற்றாற் பதைத்தெழுந்து சீய
மிகைவிறலார் தன்மையாய் மிக்க—சிகையுறல்வீ
ணேதிலரை யான்வயங்கொண் டேகுவனீ நின்னகர்க்கே
யோதியிலான் போதியென்றா னுற்று. (௮௧)

என்றிவைசூர் சொல்ல விவனுணர்வு நன்றெனக்
கொன்றுசினம் பொங்கவுளத் துன்னுவா—னன்றுரைத்தேன்
புந்தியிலா னென்னைப் புகைந்திகழ்ந்தான் மாண்பிலர்க்கு
முந்தறிவு கூறன் முரண். (௮௨)

தேன்பெய் யினுங்காஞ் சிரங்கனிதன் கைப்பறாப்
பான்மையின்வெஞ் சூர பதுமன்றான்—யான்பன்
மதியையுட்கொள் ளானுய் வகைகருதி லான்முன்
விதியைவெல்வார் யாவர் வெறுத்து. (௮௩)

ஈசனு ரீந்தநா ளேகியதீ றெய்தியது
பூசலின்மால் செய்தவமும் பொய்க்குமோ—நாச
மிறைவனெய்த நின்னநா னேகிமுடி வாதன்
முறையதென முன்னினான் முன். (௮௪)

சிந்தனைசெய் சிங்கமுகன் செப்புமுன்னோன் றாடொழுது
பிந்தெளியேன் செய்த பிழைபொறுத்தி—மைந்த
மறுத்தெதிர்கொண் மாற்றலரை வான்போரில் யான்போ
யொறுத்திடுகின் றேனதனை யோர். (௮௫)

செருவினுக்குச் செல்வேன் செருநர்மேற் செல்வ
தருதி விடையென்னத் தம்பி—வருதியென
வன்னோன் றனைத்தழீஇ யையநிற்கி யாதரிதா
மென்னா விசைத்தா னெடுத்து. (௮௬)

ஆன்றமா கேள்வியா யாய்ந்துநீ சொற்றவென்னெஞ்
சூன்ற வுளத்துணிவோ டேக்கமுற்ற—மான்றலர்தங்
கூற்றவிறன் மாக்கடமைக் கொல்லுவதோ ரேறனையோ
வாற்றலுணர் கில்லே னமர்ந்து. (௮௭)

ஈண்டுனக ரேகியவ ணெய்ந்தபடை யோடிருநீ
யீண்டுருவே ளெய்தினினை யேயழைப்ப—ஞாண்டுறினு
மொல்லை யொருவனைத்தூ துய்க்குதியா னேங்கமர்க்கு
வல்லை வருவனென்றான் மன். (௮௮)

என்றலுஞ்சூ ரிங்கிதநன் றென்றுவிடை யேற்றிறைஞ்சிச்
சென்றுநகர் சேர்ந்துறைந்தான் சீயமுகன்—பின்றனைய
ரானபடை யாள ரனைவரையு மாங்குய்த்து
மாநகரின் வைகினான் மன். (௮௯)

சூரனமைச்சியற்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௪௭௬.

மகேந்திரகாண்டம் முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

நான்காவது

யுத்தகாண்டம்.

# ஏமகூடப் படலம்.

---

அஞ்சவயற் றாழ்சிறைவைத் தன்னான் றொழில்புரிவே
டஞ்சமெனக் காயவன்றேஞ் சார்பவர்க்கு—நெஞ்ச
முருகுமரக் கோட்டமா முற்பவநற் சீர்த்தி
வருகுமரக் கோட்டமா வைப்பு. (௧)

செந்தியமர் செவ்வே டிறனுறவெந் தீயவுணர்
வெந்திறலை வீப்பான் விழைந்தேகு—நந்திமையோ
ரன்னவன்பாற் செல்வா ரவண்யானுஞ் செல்லுவே
னென்னவந்தான் போலுதித்தா னென்று. (௨)

இரவிவந்து தோன்ற வெழிற்குமரன் வேதன்
றரவமரர் கேட்பத் தருவ—னுரமடங்கப்
போர்கொளமேற் கொண்டோம் புனைவீர வாகுநந்திண்
டேர்கொணர்தி யென்றான் றெரிந்து. (௩)

ஐயன்சொற் கேட்டயன்மா லாதியோ ருண்மகிழ்ந்தெம்
பையுளற்ற தென்றாடிப் பாடினார்—செய்யமொய்ம்பன்
வாமான்றே ரோடு வலவனைக்கூய் வல்லேயங்
கோமான்றே முய்த்தான் கொணர்ந்து. (௪)

காலுந்தும் பொற்றடந்தேர் கந்தவே ளேக்கியரி
மேலுந்தும் பீடிகையின் மீதிழிந்து—நாலுந்து
வேதநனி போற்றவதன் மீயிவர்ந்து சூழ்பவருக்
கோதுசின்றா னோர்ந்தினைய தொன்று. (௫)

வாரிதியி னுப்பண் வரம்பி லளவைத்தாய்த்
தேரியன்ம கேந்திரப்பேர்ச் சீர்நகர்மேய்ச்—சூரையடப்
போதுநந்த மூர்தியுந்திப் பொள்ளெனநீ ரிங்கிமையாம்
போதுள் வருதிரென்றான் போய். (௬)

அத்தனுரை யாய்ந்தயன்மா லண்டர்கோ னாதியர்க
டத்தமுய ரூர்தியுறச் சாரிலக்க—ரொத்தவெண்மர்
மந்தரமே நேர்வீர வாகுமணித் தேரிவர்ந்து
சுந்தரவேட் சூழ்ந்தார் துதைந்து. (௭)

சுப்பிரன்க பாலி சுசிமுகன்சோ மன்குமுத
னப்பிரசித் துச்சித்தி ராங்கனந்தி—பிப்பலனுன்
மத்தன் மனோபவன்வீ மன்மங் கலகேசன்
மத்தன் மதங்கன்வா மன். (அ)

மத்தகன்வி யாக்கிரன்சு வாலகே சன்முதலா
மொத்தவிறற் பூதவெள்ளத் தட்டலைவர்—மொத்தநூற்
றெண்மர் புவனமெலா மெண்ணின் முடிக்கவல்லார்
சண்முகனைச் சூழ்ந்தார் சார்ந்து. (கூ)

ஈரா யிரவெள்ள மென்னனிக மின்னசெயல்
பாரா வுலகம் பனிப்பவே—போரா
வெழுந்தனவே கத்தார்த் திமையோர்பூ மாரி
விழுந்தனவே வெள்ளத்தின் மேல். (க0)

பொன்பா ரிடம்பூழி போர்ப்ப வசலநிக
ரன்பா ரிடம்பல் லியமியம்ப—வன்பார்
கடைவெள்ள மென்னக் கறங்கிப் பெயராப்
படைவெள்ளஞ் சென்ற பரந்து. (கக)

சென்றடன்மா சேனைவெள்ளஞ் சேயிருந்தாள் சேவித்துப்
பன்றலைவ ரோடளக்கர்ப் பாங்கிறுத்துப்—பின்றிரைநீ
ராறு நடந்தபொறை யாற்று தாரநெளிந்த
சேறுயிற் றந்நீர் திரிந்து. (கஉ)

இவ்வகைவே லேந்தலோ ரீரா யிரம்வெள்ளங்
கவ்வையி னேகக் கடல்வரைப்புற்—றெவ்வமஃ
தேய்ந்த விலங்கை யெனுங்கோ டிகந்தகன்று
போந்தனன்சூர் மூதூர் புரிந்து. (கங)

அப்போ தயன்மா லயனுற்றெந் தாய்காண்டி
யொப்போ தருஞ்சூர னூரிஃதுள்—வெப்போவா
நீசருறை நீரினவ ணோர்ந்தடைத னீத்துழையோர்
பாசறைசெய் வித்தமர்தல் பாங்கு. (கச)

அன்னதுசெய் தாவணபி னுய்ந்து புரிதியென
மின்னயில்வேள் கம்மியனை மேவிவிளித்—துன்னருமோர்
பாசறையீண் டாற்றெனலும் பண்பிற் படைக்குவனென்
றூசகன்றான் றாள்பணிந்தா னுங்கு. (கரு)

மாடமண்ட பம்பொதும்பர் வாவி சிகரிஞெள்ள
னீடருதிக் கோர்கோடி நேருறச்செய்—தாடகத்தின்
வாம நகரியற்றி மன்னேம கூடமென
நாமமொன்று நாட்டினு னன்கு. (கசு)

கருத்தி லவன்செய் கவின்மா புரங்கண்
டருத்தியினோ டாரருள்செய் தத்தன்—மருத்தன்று
லுந்தி ரதத்திழிந்தே யும்பரெலாம் போற்றிசெய
மந்திரத்தைச் சார்ந்தான் மகிழ்ந்து. (௧௭)

அந்தமிலாச் சாரதரை யாவணத்தி லேநிறீஇ
யுந்தயன்மால் வாள்வயவ ரும்பரொடு—மந்திரத்துண்
மேவிவேள் சிங்கணைமேல் வீற்றிருந்தா னென்பதின்மர்
மாவிலக்கர் போற்ற மகிழ்ந்து. (௧௮)

எமகூடப்படல முற்றிற்று.

---

## வரவுகேள்விப் படலம்.

---

என்னா டயிற்குமர னிங்க னிருந்தவெல்லை
நன்னா தன்வா னலநாடிப்—பொன்னார்
புரிசைகொண்ம கேந்திரத்திற் போயிறைவன் மேவும்
வரிசைகொள்கோ யில்புக்கான் வாய்ந்து. (௧)

காரவுண ருய்ப்பவுள்போய்க் காவலனா மாவலகூர்
சீரமர வீற்றிருக்குஞ் செவ்விகண்டு—நாரதனு
ளாக்கமும்பர்க் காகமுனி யாசிமொழி மாகமுனி
வாக்கினவின் றுற்றான் மருங்கு. (௨)

அங்கை யலர்தரநின் றாசிநவில் வாற்கானா
வெங்குளையீங் குற்றதென்னீ யாரையெனப்—பங்கிலொரு
மங்கையுளான் வைகும் வடகைலை வாழ்வனும்பாற்
றங்கநலஞ் செய்வேன் றவம். (௩)

வஞ்சம் புகல்கிலன்செய் மாதவம நேகமுளேன்
விஞ்சமரர்க் கின்னல் விளைவிப்பே—னெஞ்சமகிழ்
நண்புகர்பா னண்புடையே னாரதனென் னாமத்தேன்
பண்பினொன்று சொல்வேன் பரிந்து. (௪)

செல்குடிஞை நீர்வேணிச் செல்வனினைக் கொல்வதுனி
வெல்குகனும் வேலை விழியனலா—னல்கத்
துணிந்துவந்த சேயுழையுன் றொண்டுசெய்விண்ணோர்போய்ப்
பணிந்து பரசியுற்றார் பாங்கு. (௫)

உற்றவர்க்கு நின்னு லுறுதுயர்செவ் வேள்கேட்பச்
சொற்றலுமஞ் சேலென்று சோதியருள்—பெற்றவெய்ய
பூதப் படையோடும் பூமியிற்சென் றும்பவரை
வேதை யுறவெறிந்தான் வேல். (௬)

செற்றபின்னர்ச் சேந்தனெழிற் செந்திநகர் சென்றுணக்கோ
ரொற்றன் றனையுய்ப்ப வொப்பிலன்மீண்—டுற்றதன்மேற்
றத்தலைநீர் தாண்டியடற் றானையொடன் ஞனிநக
ருத்தாரத்தில் வந்தா னுகந்து. (௭)

ஆங்கெழில்வேள் பாடிவீ டாக்குவித்து மாவனிகம்
பாங்கி லுறவிருந்தான் பார்த்தனனீ—டீங்கு
நிகழ்ந்தவண மென்றலுஞ்சூர் நீள்சினத்தி னனக்
கிகழ்ந்து நவில்வா னிவை. (௮)

இந்திரனம் போருகன்மா லின்னோர் நகரென்னப்
புந்திதனி லெண்ணினனோ போற்றுமண்ட—முந்துமோ
ராயிரமாங் கோடியுமே யாள்வேன்மா நீள்புரமேற்
சேயொருவ னும்பொருவான் சேர்ந்து. (௯)

செங்க ணரிக்குழுவைச் சீற்றத் தடலுன்னி
வெங்கரிமான் கன்றொடுற்று வெல்லுமன்றோ—வங்கதுபோ
னண்படையும் வானோர் நலம்வேட்டு வன்பூத
வண்படையோ டங்குவரு மாண்பு. (௧௦)

நேமிகடந் தென்னுணை நீங்கிநெடுந் தானையொடு
மாமிநகர் சார்வானு மாண்பழிப்ப—னாமின்
றிசைவி லிளம்பால னென்றும் விடேன்மா
வசையென் பதும்பாரேன் மற்று (௧௧)

அந்நா ளசமுகிதன் னத்த முறிவித்தே
யொன்றாய் மேவிமையோ ருய்ந்தாரோ—பின்னுவாற்
றென்னகத்தோ டட்டமெனத் தேர்வினுயிர் தீர்வறிபா
திந்நகர்க்கண் வந்தா னினிது. (௧௨)

பாலயன்வா னுடரிறை வாழியநம் பேர்கூறிற்
சாலவச்ச மேவிமறை தந்துறைவார்—மேலெங்கும்
பூழி புனைந்தோன் புரிபா லகனோபோ
நூழி னுஞற்றுவா னுற்று (௧௩)

வான்மேல் வருமினனை வன்சிறைசெய் மைந்தனையோர்
நான்மே வனிகமுட னன்கேவி—வான்போரால்
வெந்திறல்கொள் பூதரொடு வீரரையும் பொன்றுவித்தே
கந்தனைவெல் வேனிதுநீ காண். (௧௪)

என்றிவைசூர் கூற விசைகார தன்சேனா
கன்றிஃது தாழ்க்கலையுன் னன்னகரிற்—சென்றவனை
யின்றுபொர நின்றானை யேவுதியான் செல்கின்றேன்
வென்றுறுநிற் கென்றகன்றான் விண். (௧௫)

நாரதனங் கேகியபின் னாடுமென்றன் பாங்குநின்ற
கோரனொடுற் கோரவொற்றர்க் கூய்நோக்கி—வாரி
யிறைவற் கொணர்திரென வேகியவற் பற்றி
யிறையிற்கொண் டுய்த்தா ரெதிர். (௧௬)

நின்று மனத்தனாய்க் கைதொழுது நின்றவனை
மன்றகுவ னோக்கி வருணநீ—குன்றவில்லி
மைந்தனொடு வன்பூத வான்படையை மாறாவிங்
குந்தினமை யென்கொ லுரை. (௧௭)

சாந்தோடுந் தார்மார்ப தானவர்தங் கோவேகேள்
பூந்தோடோ ராயிரங்கொள் பூமகன்மால்—வேந்தோடும்
வானாறு சென்றாங்கு வான்றுணைவர் பாங்காக
வானாறு சென்றான்வேள் வாய்ந்து. (௧௮)

வானாறு சென்றிடவே மல்கெண்பாற் செல்கணங்கள்
கானாறு வன்பாட்டிற் கால்வரையே—நானானே
னென்னிற் றடைசெய்ய வேலுமோ செல்செயலை
யுன்னிற் றுளங்கு முளம். (௧௯)

குறுமா தவன்முன் குடங்கையிற்கொண் டுண்டாங்
குறுமா விறற்பூத மொன்றுண்—டிறுமாக்கு
மங்கையா லள்ளுதற்கஃ தாற்றுகிலே னாதலினா
லுங்கையா வுய்ந்தே னுழன்று. (௨௦)

விண்ணேற்றைப் பாந்தள் விலக்கவற்றோ சீற்றமுறு
திண்ணேற்றைச் சிந்துரந்தான் செற்றதுண்டோ—வெண்ணேற்
றெளியேயஃ தேயன்றோ வெண்பூதர் தம்மை
யளியேன் றடுப்பதென்றா னங்கு. (௨௧)

எற்றுநீர்ச் செல்வ னிவையிசைத்து மெய்விதிர்த்து
நிற்றலுஞ்செவ் வேற்பெருமா னீணகர்க்க—ணுற்றதன்மை
யொற்றர் சிலரோடி யொல்லையிற் சென்றிறைஞ்சிக்
கொற்றவன்பாற் சொல்வார் குறித்து. (௨௨)

அராவணைமால் போத னரியிமையோர் சூழ
விராவிலக்கத் தொன்பானும் வீர—ரிராயிரமாம்
பூதவெள்ள மீண்டப் புராரிமைந்த னம்பதியிற்
போதவட வாசையுற்றான் போந்து. (௨௩)

உத்தரமா திக்கினிற்போந் தும்பர் புனைவனாற்
சித்திரமா பாசறைதான் செய்வித்தங்—கெத்திசையு
நாற்றிருந்து தானைசுற்ற நாப்ப ணகரமர்ந்து
வீற்றிருந்தான் வெங்கதிர்வேல் வேள். (௨௪)

கண்டோ மிதனைக் கடவதொல்லை யிற்செயெனத்
திண்டோள் வயவொற்றர் செப்பலுமுட்—கொண்டோத
மண்ட புவன மலமரவே சேந்துரைப்பா
னெண்டருவர் கோமா னிவை. (௨௫)

வரவுகேள்விப் படலம் முற்றிற்று.
ஆக திருவெண்பா ௪௯.

## முதனுட்பானுகோபன்யுத்தப் படலம்.

கொற்றவேற் சேய்வலியுங் கொன்பூத ரேய்வலியு
மற்றவர்த மாவலியும் வாளமர்செ—யொற்றன்
றனைவலியு மேதொலைப்பன் றூழாது நீரெற்
பனைவற் கொணர்திரென்றான் பாங்கு. (௧)

நன்றெனவே சென்றலரி நள்ளலன்கோ யில்புகுந்தங்
குன்றகுவற் றூழா வுழைஞருழை—நின்றரிய
வம்மான் பணியியம்ப வஃதுணர்ந்து வெஃகுமணிச்
சிம்மா தனத்தெழுந்தான் சேய். (௨)

தொன்மந் திரத்தலைவர் சுற்றத் தவானிக
வன்மந் தருதலைவர் மாடுறவே—மன்மைந்த
னைந்தியமு மார்ப்ப வணிமணித்தேர் மேலிவர்ந்து
தந்தைநகர் வந்தடைந்தான் றான். (௩)

தேரி லிழிந்து திருக்கோயி லுட்புகுந்து
சூரன டிதாழ்ந்தொளிர்சீர் துன்வீர—வீரநீ
யென்னவென்னை யீங்கழைத்த தென்ன விருங்கழற்கான்
மன்னனின்ன சொல்வான் வகுத்து. (௪)

மூன்று ரகனை முரண்வெற் புடன்முடித்த
யின்றார்க் குகன்செந்தி விட்டரிதாய்ச்—சென்றார்
திடவா னனிகமொடிச் சீர்கொ ணகர
வடவா யினிலிறுத்தான் வந்து. (௫)

சிந்துருவாங் கள்வன் றிசைமுகன்வேந் தாதியரும்
வெந்திறலார் பூதமாம் வெள்ளமுமே—கந்தனே
டின்றிவண்வந் தெய்தற் கெளிதுபட்ட தோசால
நன்றுநன் றம் மாவிந் நகர். (சு)

பின்னைவெற்பைச் சேயைப் பிறரைமுன்ன மட்டிடுமோ
வொன்னலர்க டம்மை யொறுத்திடுவான்—முன்னியெதிர்
போதல் கடனனையர் புன்மையர்யான் மன்னவர்மன்
ஞதலின்வா ளாவிருந்தே ஞய்ந்து. (எ)

எண்மகவான் வேண்டலுமே யீசனரு ளாற்றந்த
சண்முகனைப் பூதத் தலைவரொடும்—திண்மையுறு
நந்தமைப்போ ராற்றவுய்த்தா னும மதனல்வெற்றி
மைந்தநிற்கொண் டெய்தல் வழக்கு. (அ)

ஆகலாற் றனையொடு மாகவமுற் றாணங்கோர்
பாகனுர் மைந்தனையும் பன்வீர—வாகுவையும்
பூதரையு மேவரையும் பொன்றுவித்து வென்றிகொடு
காதலநீ மீள்வாய் கடிது. (கூ)

என்றிவைகூர் கூற விருந்தடந்தோ ளும்பருற
நின்றுதிருச் செல்வனவிர் நீலகண்டன்—வன்றிறல்கொண்
மைந்தனையும் பூதரையு மற்றவர்தம் மோடுவென்று
வந்தடைவ லையுறனீ மற்று. (கo)

என்னினியான் சொல்வதுவே ளிங்குறுமுன் போர்புரிவா
னென்னல் வினவினே னீயதனை—யுன்னலைபின்
கூறல் பிழையனிகங் கொண்டமர்செய் தேவரையும்
வேறலுற்று மீள்வேன் விரைந்து. (கக)

கந்தனைவென் றன்னவன்றன் கட்படுமோ ளுன்முகத்தோ
னிந்திரன்முன் னேரை யிமைப்பினின்முன்—றந்திடுவன்
றக்கசெய்தி யென்றிறைஞ்சச் சார்மகநீ போய்வருதி
மிக்கதிற லோடென்ருன் வேந்து. (கஉ)

விடையிற் பிரிந்திரத மேவியிய மார்ப்பப்
புடையிற் றுணைவர் பொலிய—நடையிலுறு
தொண்டடையொற் றர்க்காணுத் தொல்படையெல் லாமிங்கண்
கொண்டடைவி ரென்றகன்ருன் கோ. (கங)

மேய பரிசனரை விட்டொண் கலைமகள்வா
ழாயுதமா சாலை யரசிளஞ்சேய்—போயிறைஞ்சிப்
பூசைமுற்றிப் பூங்கச்சுப் பொற்பினுற வீக்கியொள்வாண்
மாசையெற்றச் சேர்த்தான் மருங்கு. (கச)

காலிற் கருங்கழல்கள் கல்லெனவார்ப் பான்யார்த்துச்
சாலிகையொண் மார்பிற் றயங்கிடப்பூண்—டேலுகையிற்
கோதைசுற்றித் தூணிவெந்நிற் கொண்டுபட்ட நெற்றியிற்றெவ்
வேதையுற வீக்கினான் வேட்டு. (௧௫)

பொன்மணிப்பூண் பூண்டுதும்பைப் போதணிந்து போர்க்குடை
கொன்மணிப்பூண் வின்மோகக் கோலேந்தி—மன்மகன்றான் [யாக்
போரணியின் வாய்தலுறப் போனவொற்ற ருந்தனிகப்
பேரணியும் பேர்ந்த பெரிது. (௧௬)

விசயன் கனலி விசண்டன் மகிடன்
முசலிகண்ட கன்னசனி மூர்க்கன்—றசமுகனே
யாதியர்தெய் வப்படைக ளங்கையுற வந்தனர்போர்
காதியலிற் றேர்ந்தோர் களித்து. (௧௭)

பதினா யிரவெள்ளம் பன்றருவ ராளோர்
நதிபதியி னார்த்தருகி னண்ண—துதியயில்வேன்
மைக்கொடுவில் வாளி மழுத்தண்டம் பாலமிவை
கைக்கொடுசென் றாரே கடிது. (௧௮)

கதிமா கடமா கவின்றேரிம் மூன்றும்
பதினா யிரவெள்ளம் பாங்கிற்—றுதிதலைவர்
தம்மைச்சூழ் தந்துவரத் தாஞ்சென் றணர்பணிந்து
வெம்மைச்சூர் சேய்பால் விரைந்து. (௧௯)

என்றுதன்றெவ் வீங்கிவைகண் டேவலனை யேவியொரு
குன்றுறழ்தேர் நம்முன் கொணர்கவென—நன்றெனப்போ
யாயுதவைப் பண்ணிமுப்பா னாயிரமான் பூண்டரதம்
வேயுதவ மேலிவர்ந்தான் வேட்டு. (௨௦)

காரவுண ரார்ப்பக் கவரி குடையடப்பை
கூரயில்வாள் காளாஞ்சி கோடிகமுன்—வீரர்கொடு
சுற்றிவர வொற்றரைக்கூய்த் தொல்படையார் கோடியந்தேர்
பற்றிக் கொணர்மினென்றான் பாங்கு. (௨௧)

கொற்றமுறு கோடியந்தேர் கோமகன்பாற் கொண்டுய்ப்ப
வுற்றவல வர்ப்பாரா வொல்லையித்தேர்—துற்றகந்தன்
சார்வுழித்தூண் டென்னலுமே தாழ்ந்தசுவந் தூண்டிநெடுந்
தேர்கடவி னான்வெய்யோன் றேர்ந்து. (௨௨)

எழுந்த தருவ ரிகற்படைமா வெள்ள
மெழுந்தபொலந் தேரெழுந்த யானை—யெழுந்தபரி
யார்த்த வியங்க ளதிர்ந்த நிலமசலம்
போர்த்தவிண்பார் பூழி பொலிந்து. (௨௩)

வாரிபெயர்ந் தாங்கு வருமனிக மாவெள்ளம்
பாரினெறி யின்றிவிண்ணின் பாற்படாச்—சூரியனை
வன்சிறைசெய் வீரன் வருதிறங்கண்டி யாழ்முனிவேண்
மன்செழுந்தா டாழ்ந்துரைப்பான் வந்து. (உச)

பூதவனி கத்தொடுநீ போந்தமைதேர்ந் தொற்றாற்
றீதுறுசூர் நின்மேற் சினந்துபொரக்—காதலனை
யுய்ப்பவவன் போர்க்கோல முற்றுவந்தான் மாக்கடல்போன்
மெய்ப்படைகள் சூழ வெகுண்டு. (உரு)

நேருமிவ னோடெதிர்ப்போர் நீயுஞ் சிவனுமன்றி
யாருமிலை யோர்நா ளரியைவென்றான்—போரி
லிசைமிகுந்தோன் மாயைவல்லோ னேண்மாப் படைக
டிசைமுகன்பாற் பெற்றோன் றெரிந்து. (உசு)

வாரிமன்னே மன்பாசம் வவ்வினன்மா யோனேமி
தாரகனுந் தந்தையணி தன்மையினா—லோருகிலா
னுண்டுவனை யாள்கொண் டடலரிது நீயேகல்
வேண்டுமெட வென்றுரைத்தான் வேட்டு. (உஎ)

நாரதன்சொற் கேளா நகைபுரிந்து வேள்புடையார்
வீரமொய்ம்பற் பாரநா மேவியது—சூரறிந்து
தன்மகனைத் தானையொடு தானுய்த்தா னீயும்போய்க்
கொன்மதிலைச் சூழ்திபடை கொண்டு. (உஅ)

சென்றுகடை வீத்தருணன் றெவ்வனிகத் தோடேற்று
வென்றியின்மீ ளென்ன விடுத்தவனை—மன்றுணைவர்
சாரதமாத் தானைத் தலைவருட னேவினன்பூ
மாரதமா தேவன் மகன். (உகூ)

வேளின் விடைகொண்டு மேருநிகர் விற்பிடித்துத்
தோளிலொண் ணேணி துலங்கவிட்டுத்—தாளிற்
கருங்கழல்கள் வீக்கிக் கவயம்பூண் டேசீர்
வருங்கவின்றே ரேறினன்றிண் வாகு. (௩0)

படைவையம் பாங்கிற் பலசெலவெண் வீரர்
தொடையிலக்கர் பூதகணந் துன்ன—மிடைமணிப்பொற்
பாழியந்தே ரேறிப் பகர்வீர வாகுவின்பா
லாழிபெயர்ந் தாங்கடைந்தா ரார்த்து. (௩க)

வையமெலா மோர்புயத்தில் வைக்குந் திறலுடையார்
வெய்யருக்குள் வெய்யர் விழுப்படைகொள்—கையர்
வரத்தினின்மே தக்கோர் வயங்கண்டம் வீக்கு
முரத்தினர்தம் மோடுசென்று னுற்று. (௩உ)

இருதிறத்த தானை யிடையெழுந்த பூழி
யொருதிறத்த வாய்நே ருறுதல்—கருதவுணர்
பூதரிரு வோரும் பொருதிடுமுன் றம்முனே
யோதமர்செய் கின்றதொக்கு முற்று. (௩௩)

செல்லலுமே பேரி திமிலை துடி தாரைபம்பை
பல்லியங்க ளார்ப்பப் படைசுலவ—வில்லுழவர்
வன்புரிசை யம்புரைதிண் வாகுவெய்ய சூர்மூதூர்
மன்புரிசை மாடுற்றான் வந்து. (௩௪)

ஆனதொரு காலை யவுணர் சிலரோடித்
தானவன்பாற் சார்ந்திறைஞ்சிச் சண்முகனு—மானவரும்
பூதருமே போர்க்குநம்மூர்ப் பொன்மதிற்சார் போந்தனர்க
ளீது நிகழ்ந்ததென்று ரீங்கு. (௩௫)

மற்றிவைதிண் டானவர்கோன் மைந்தன் செவியுறலுஞ்
செற்ற முடனுயிர்த்துச் சேயையெதி—ரொற்றனைவெம்
பூதரையான் போர்க்களத்திற் போர்புரிந்து போக்கேனேற்
காதுசின நீங்குமோ காண். (௩௬)

விடுகிலனன் ஞரையெவண் மேவிடினுஞ் சென்று
கொடுவருகின் றேன்பின் கொடுபோய்க்—கெடுதலில்சீர்க்
காவலன்முன் காணியவே காட்டிக் கடிந்திங்குத்
தேவரொடு வைப்பேன் சிறை. (௩௭)

என்றிவைசூர் மைந்த னியம்பிப் படர்தலுமே
கொன்றகுவர் தம்வீரங் கூறியே—துன்றுகணச்
சேனைநேர் சென்றார் தெழித்தார் திறலிருவர்
தானை கலந்த சமர்க்கு. (௩௮)

தந்திகையிற் றண்டநல்கித் தானவர்தாக் கென்குறிசெய்
துந்தினர்மா பூதர்மே லொல்லையவர்—சிந்தித்
திவையா வெனக்கலங்கி யெண்ணில் பரிமா
வவையாவை யுந்துகைத்தா ரார்த்து. (௩௯)

மைந்தகுவர் பூதர்மேல் வைவேன் முசுண்டிமுத
லெத்திறத்த மாப்படையு மேயவெடுத்—துய்த்திடலு
மன்னர் கரங்கொண் டவைவிடுத்தோ குட்கமர
மின்னர் மழுவெறிந்தார் மேல். (௪௦)

ஏய்ந்தமர்செ யெல்லையினி லேற்ற விருபடையுண்
மாய்ந்தனரெண் ணில்லார் வயப்பூதர்—சாய்ந்தொன்னார்
தேரொடுதேர் மாவொடுமா திண்கரியி னோடுகரி
வீரரொடு வீரரட்டார் வேர்த்து. (௪௧)

ஏற்றவெய்ய பூதரெற்ற வேய்தா னவரிரிய
வாற்ற லனலி யதுகண்டு -சீற்றமொடு
கைதனில்வில் வாங்கியே காய்கனற்கோன் மாரியெனப்
பெய்தனனன் னார்மேற் பெரிது. (௪௨)

அங்கிப் படைவிடுப்ப வவ்வுழித்திண் சாரதனுஞ்
சிங்கனெங்க னுய்தியெனாச் சீறிவெய்யோன்—றங்கிரதத்
தார்தருமாச் சேக்கையிற்கைத் தண்டினாற் சாடினா
னோர்தருமா வீந்த வுலந்து. (௪௩)

மாவிறக்கத் தீயினன்வில் வாங்கியிருஞ் சூள்புகன்று
மேவலன்மேல் வெங்கணை தூய் மெய்மறைத்தா—னாவி
யயர்ந்திலனன் னான்றுயருற் றாழ்கிலன்போய்ப் பார்மன்
சயந்தனத்தி லேறினான் றான். (௪௪)

தேர்முகத்திற் றீயோன் சிலைகைக் கொடுவாங்கிப்
பார்முகத்தில் வீசவவன் பன்னரியின்—பேர்வலியோன்
சென்னியிற்றண் டாற்றாக்கச் சீறிவண்கைப் பற்றியுரந்
தன்னிலுற வெற்றினான் சார்ந்து. (௪௫)

சிங்கன் சினந்தெழுந்து தீயவனைச் செங்கையிற்கொ
ளங்கதையி னோடுசுற்றி யார்ப்பமருள்—வெங்கனலோன்
றேரினுணர் வின்றித் தியங்குகையிற் றேரைவிட்டுப்
பாரினெற்ற வீந்தான் பதைத்து. (௪௬)

ஆங்கவன்றான் மாண்டமைகண் டங்கிகண்ணிற் கால்சண்ட
னோங்கு மிவன்றன் னுயிர்குடிப்ப—னீங்கெனப்போய்
மாண்மே வனலிதண்டம் வாங்கித்தே ரிற்றாய்த்தெவ்
தோண்மேற் புடைத்தான் றொடர்ந்து. (௪௭)

புடைத்திடலுஞ் சண்டன் புழுங்கித்தன் றண்ட
மெடுத்தெறுழ்கூர் சிங்கனிறந் தெய்த—வடித்திட்டா
னன்னானுந் தானு முனார்மாக் கடலின்கட்
டொன்று விழுந்தார் துயர்ந்து. (௪௮)

தீதவுண ரின்மாயன் தேரி னுடன்குறுகப்
பூதரின்மா நீலனோர் போய்க்கதையின்—மோதவவன்
மாய்ந்தனன்போ னின்றயர்ந்து மற்றவன்மேன் முத்தலைவேல்
காய்ந்தெறிந்தான் சோர்ந்தான் கவன்று. (௪௯)

சின்னேரஞ் சென்றுணர்ந்து தேறிவன்கை யாலெதிர்ந்தோன்
மன்னே றாத்தினெற்ற மாயனாந்தே—யுன்னேய்ந்து
நீலனவற் பற்றி நிரையெயிற்றி னாற்கவ்வி
மேலுறுசெந் நீர்குடித்தான் வேர்த்து. (௫௰)

மாயன் மடியமுன்போர் வாய்ந்துழந்த வன்சண்டன்
சேயனமர் செய்யுங்காற் றிண்பூத—னையமன்னன்
காரவுணன் கையிற் கதைசிந்தக் கூதினான்
னோரணிமன் றண்ட மெடுத்து. (௫௧)

திண்டங் கொடுசிங்கன் றாக்கவஞ்சி னாரவுணர்
சண்டனினைக் கஞ்சேன் சமர்செயெனத்—திண்டிறலோன்
றண்டாற் புடைக்கவவன் றன்றோ ளுகக்கதைதான்
றுண்டாய்க் கிடந்தவவண் சூழ்ந்து. (௫௨)

பூரிப்புய்த்தண் டார்சண்டன் மோத நிறத்தி
லரியெனும்பே ரண்ண லடிகொண்—டரவரையைச்
சாய்த்தான்விண் ணோரார்த்துத் தாழ்த்திடலன் னான்றன்னை
மாய்த்தா ருயிர்கொளென்றார் வாய்ந்து. (௫௩)

அன்னவன்சொற் கேளா வரிநாமத் தோன்கரத்தான்
முன்னுங் கொடிறுடைய மோதவே—யொன்னலன்றா
னார்க்குமுகில் போல்வீழ்ந்தா னார்குருதி கூரெயிறண்
போர்க்களஞ்செவ் வானைப் பொரும். (௫௪)

அவன்மாய்ந் ததுகண் டசமுகனோர் தேர்மே
லிவர்ந்து செல்லமது வென்போன்—றவவழன்றே
யங்கணையும் போழ்தத் தவன்மேல்வில் வாங்கியெண்ணில்
வெங்கணைகள் விட்டான் வெகுண்டு. (௫௫)

பாங்கார் பழுமரத்தைப் பற்றிமது தெவ்விரதத்
தாங்கா லெனச்சென்றாங் கார்த்திடலு—மேங்கா
வயரவற்பா ராத்திர னல்லைநீ போர்க்கா
ருயிர்கொண்டுபோ கென்று னுகந்து. (௫௬)

பாரிடன்பார் மேவப் பகரு மசமுகன்றன்
போரில் வெருவிப் புரையுற்றே—னரிடத்திற்
றீர்வனிது வென்னத் திகைத்தமரங் காற்றலனு
யார்மனத்திற் கொண்டா னனுர். (௫௭)

மானத்தீச் சுட்டு மனம்வேவக் காரவுணன்
கானத்தீ யென்னக் கனன்றுசமர்க்—கான
மூயன்றுசின்னி லென்றார்த்து முன்வரிவில் கோட்டி
வியங்செய்தான் கோன்மதுவின் மேல். (௫௮)

பூதன் றளர்ந்தவுணன் பொற்றே ரினையெடா
வோதமே லுய்ப்பவஞ்ச னெண்புவிபாய்ந்—தேதமுறு
மற்றொழினன் காற்றவவன் வான்செல்லத் தன்றாளா
லெற்ற வுரத்திடித்தா னேற்று. (௫௯)

வாத்தணரி யாழிவையக்கை வைத்தருச்சித் தேத்தி
யுரத்தணன்மா பூதன்மே லுய்ப்பக்—கரத்திற்
படையின்மை யான்விடுத்தோன் பாற்போ யவற்கொன்
றடைதந் ததுமா லருகு. (௬௦)

சாற்றவுணர் நாற்றிறத்த தானையொடும் போய்ப்பொரவே
யேற்றெதிர்மா பூத ரிரிந்தகன்ற—ராற்றல்
கதுவிலக்க வீரருளோண் காண்டண் டகன்று
னது வெகுண்டு கண்டா னடுத்து. (௬௧)

திண்டகன்வில் வாங்கித் தருவர் நெடும்படைமேற்
கொண்டலெனக் கோல்சொரியக் கூர்குருதி—மண்டுநதி
யென்னவந்த தேரிரத மேற்றபரி தோல்பட்ட
வுன்னவுணத் தானைபட்ட துற்று. (௬௨)

பண்டா ரவுணப் படையிவணுஞ் சார்ந்ததூஉ
மெண்டானை மள்ள ரிறந்ததூஉந்—தண்டாது
விண்டாவு வெய்யவனை வெஞ்சிறைகொள் வீரனரி
கண்டா னகைத்தான் கனன்று. (௬௩)

என்று தனைச்சிறைசெ யானுநிற்க வேற்றமரி
லொன்றலர்வல் லாராய்க்கோ ளூற்றநன்று—துன்றியே
கொல்லாது சீற்றங் கொளாதிருந்தாற் றியமதை
வெல்லாதோ வேழம் வெகுண்டு. (௬௪)

ஈரா யிரம்வெள்ள மேரமரா ரான்மாய்ந்த
வோரா யிரம்வெள்ள முற்றவென்பா—னோராநான்
சென்றுசெருச் செய்திடுவனென் சேனையெலாஞ் சேதமுறா
நின்றுபய னில்லென்று னோர்ந்து. (௬௫)

ஓர்வதிலென் போயமர்செய் தோர்கணலில் வெல்லேனேற்
சூர்மகனு னல்லனெனச் சூண்விண்று—தேர்வலவ
னெல்லையுய்ப்பச் சேனை யுததியுடன் சென்றினன்றெவ்
வில்லை வளைத்தான் விரைந்து. (௬௬)

சாரதர்மேல் வெய்யோன் சரமாரி பெய்யவவர்
கூரனற்கண் காலக் குலவரைபோர்த்—தாரவன்மேல்
வீசவொரு கோடியம்பு விட்டவ்வொவ் வொன்றினையு
நாசமுறக் கண்டா னலிந்து. (௬௭)

அம்மலைக ளுண்டுகளா யந்தரம்போ யங்குளார்
மெய்ம்மருவிக் கண்டுயே மேவவிண்ணீ—ரம்மபுக்கா
ராகவத்தி லேதிரிந் தாயிரமாங் கோடிவெங்கோன்
மாகணங்கண் மாளவிட்டான் மற்று. (௬௮)

ஏலனனஞ் செய்ந்நெய்தோய்ந் தென்மின்னின் றன்மைபெற்
காலனஞ்சத் தூண்டுவெய்யோன் காய்கணைபோய்ச்—சாலச் [றுக்
சிரந்துணிக்குந் தாடுணிக்குந் திண்டோ டுணிக்குங்
காந்துணிக்கும் பூதர்க் கடிந்து. (௬௯)

விண்ணோர் தமைச்சிறைசெய் வீரன்மற் றிவ்வாறு
திண்ணோர் சிலைவலியாற் சீர்ப்பூத—ரெண்ணோ
ரளவிலார் மாண்டிடவு மாற்றவிலாவேனோ
ருளமுடைந்தே யோர்வரிவை யுற்று. (௭0)

மின்னயிலோ னங்குளான் வீரமொய்ம் பீதுணரான்
பின்னின்றோ ரோர்வார் பிறருமற்றே—முன்னின்ற
நம்மை யிவனடுவா னுமிவனின் றுவதென்னென்
றம்மவிரிந் தார்பூத ராங்கு. (௭௧)

சாரதர்க டாமிரிந்து சாற்றணிகத் தீற்றினின்ற
வீரனுழைச் செல்குறிப்போர் மீளிகதை—மேநுவிற்கை
தாங்கிவா விற்குழைத்துத் தானு யிரகோடி
வேங்கணை தூய் மெய்மறைத்தான் வேந்து. (௭௨)

மேவுக் கிராம வேதா ளனைவஞ்ச
னேவுறத்தைக் கின்றிலகூ ரிற்றயலிற்—றுவிவிழப்
பானுவின்றெவ் பார்த்திவனைப் பாற்றுவதெப் பாற்றெனுத்
தானெழுவ மொன் றுவிட்டான் சார்ந்து. (௭௩)

உக்கிரன்றன் றண்டா லுலைத்ததனை மற்றவன்றேர்
தொக்க பரியைத் தொலைக்கவெய்யோன்—பக்கலுறு
தட்டிரதந் தாயவன்மேற் சாபம்வாங் காச்சதமா
மொட்டம்பு தொட்டான் முனிந்து. (௭௪)

கூர்கணையாற் றண்டங் குலைந்துதுக ளாகவன்றன்
றேர்தனைக்கை யாற்பற்றிச் சேணவீசப்—பேர்விறலோன்
பாற்சென் றவனைப் பணிக்காத்தி னும்பர்
மேற்சென் றிடவெறிந்தான் வேந்து. (௭௫)

வெய்தவுணன் வேறொருதேர் மேலேறி வேதனல்கு
தெய்வதவே லுக்கிரன்மேற் சீறியுய்ப்ப—மெய்மருமங்
கீண்டதவன் சோரக் கிரிபெயர்த்துத் தண்டியென்போ
னுண்டகையின் மேலெறிந்தா னார்த்து. (௭௬)

தண்டிவிடு குன்றைத் தகுவர்கோன் பல்கணையா
லுண்டுகளாய்ச் செய்யமர நொய்தினகழ்ந்—தண்டலன்றேர்
மாவைப் புடைக்கவவை மாய்ந்தமுன்னே சூலமுட
னேவைவிட்டான் பூதன்மே லேற்று. (௭௭)

பின்னையவன் சோரப் பிணியாஞ் சாரதனோர்
குன்றெடுத்து மேவவெய்யோன் கோல்சொரிய—நின்றனனஃ
தோர்ந்தசில பூத ருடன்றுடைந்தார் வெய்யகணத்
தார்ந்தபடை வீரருற்று ரார்த்து. (எஅ)

திண்ணிலக்க வீரரும்பொற் றேரோ டவுணன்மு
னண்ணியங்கை விற்குனித்தார் நாணொலிகேட்—டண்ணன்மா
மேருஞ் சலித்ததே மேவரிய விண்ணோடு
பாருஞ் செவிடுபட்ட பாழ்த்து. (எகூ)

பானுவின்றெவ் வஃதுகண்டு பாரநெடு வில்வணக்கி
யானகுணத் தோதைசெய்தா னண்டமஞ்ச—மானலக்கர்
சிந்துவின்க ணூந்திபல செல்வனபோ லன்னவன்மே
லுந்தினர்கோன் மாரி யுடன்று. (அ0)

இலக்கர் விடுசரங்க ளெய்ந்தவுணர் நெஞ்சங்
கலக்கவரல் சூர்மைந்தன் கண்டு—கொலைக்கண்ண
வாயிரமாங் கோடியம்பா லாங்கவைதீர்த் தேமற்று.
மாயிரமாங் கோடியுய்த்தா னார்த்து. (அக)

வீரதற் கேழ்மடங்கு விட்டவன்கோன் மீள்விக்கச்
சூரன் மகன்சீறித் துன்வயிரக்—கூரியவம்
பெண்ணில் லனவிட் டிலக்கவில்லு மேயறுத்தான்
திண்ணியர்வில் வேறுகொண்டார் தேர்ந்து (அஉ)

சூரியன்றெவ் வாளி துணித்துவல வன்றுவசந்
தேரிலொவ்வோ ராயிரங்கோல் சேரவுய்த்துக்—கோரமே
னூறா யிரங்கணை தூய் நூறினா ரொல்லைவெய்யோன்
வீரர்தேர் மேற்பாய்ந்தான் வேர்த்து. (அங)

நோன்விற் குனித்துவிடு நூறுநூ றாயிரங்கோல்
வேன்முருகன் விட்டவர்தேர் வில்லறுத்தே—யூன்மெய்யி
லெண்ணிலம்பு விட்டா னிலக்கருநொந் தாற்றலர்போர்க்
கெண்ணிலர்பின் போனா ரிடைந்து. (அச)

மன்வீர கோளரியாம் வல்லோ னதுகண்டு
மின்வீர வில்வளைத்து வெய்யவன்றெம்—முன்மேவி
வான்மாரி விம்மிதங்கொள் வான்பிளிறித் தான்பிறைகொள்
கோன்மாரி பெய்தான் குறித்து. (அரு)

அன்னான்பி னூறுநூ றாயிரமாங் கோடியம்பான்
முன்னானோன் விட்டசர மொய்ம்பொழித்தப்—பின்னாற்றோ
ராயிரங்கோல் விட்டழுத்த வன்னவனுஞ் சூர்மகன்மார்
பாயிரங்கோல் விட்டா னழன்று. (அசு)

கோன்மகனே வுற்றழுன்று கோளரியை வெல்லரிது
நோன்விற் றிறத்தினென்று நோக்கருமால்—வான்படைகொண்
டேவ வரியுருப்பெற் றேகியவன் மார்பினுட்சென்
றுவிகொளா தோர்வுகொண்ட தாங்கு. (அஎ)

செய்வேற் படைக்கஞ்சிச் செந்நீ ரருந்திமா
லாய்படைதன் வன்மைசிறி தாற்றிமன்பாற்—போய்மருவிற்
றுங்கரிமாய்ந் தானெனக்கண் டார்த்துமார்த் தாண்டன்வில்
வாங்கியண்ணி னுன்வெய்யோன் மாடு. (அஅ)

வீர னெதிர்ந்திடுமுன் வில்லினையே வாயிரத்தாற்
கூறவறுத் தத்தொகைய கோனுதற்கண்—சேரவுய்த்தா
னூறம்பிற் காய்ந்துபத்து நூறிற்றேர் மாவழித்தேழ்
நூறம்பு தோளுய்த்தா னெய்து. (அகூ)

தேரழிய வேகனுய்த் தீக்கதிரோன் போலுற்றான்
காரழிய வார்த்தான் கதமுற்றான்—சூரன்
றருமகன்மேற் பாய்ந்து தனுவொடிக்க வாளான்
மருமமதிற் குற்றினன் மன். (கூ௦)

குற்றிவாள் வாங்குமுன்னர்க் கொற்றமார்த் தாண்டனழுன்
றுற்ற சுரிகை யுறுகவச—மிற்றிடுவான்
குற்றினன்சூர் சேய்மீட்டுங் கூர்வாளின் வீரனுதல்
குற்றினன்வீழ்ந் தான்றுயரங் கூர்ந்து. (கூக)

வீழ்ந்த விறலோனை வீந்தா னிவனென்று
சூழ்ந்தபடை யோடேற்றான் சூர்மகன்விண்—போழ்ந்தபுகழ்
தன்வீர ராந்துணைவர் சோர்ந்தமைகண் டான்வெகுண்டான்
மன்வீர ராக்கதநா மன். (கூஉ)

அன்னுன் சிலைகுனித்தோ ராயிரங்கோல் சூர்மகன்மே
லுன்னு விடவிலகி யுத்தொகைக்கோ—றன்னுற்றேர்ப்
பாகனைநூ றம்பாற் படுத்தினன் வேறுமோர்
பாகனைத்தே ரூரவைத்தான் பாங்கு. (கூ௩)

வீரராக்க தன்குகன்றுண் மேவிவெங்கோ லாயிரத்தாற்
சூரராக்கத் தோன்றல் சுடர்மகுடம்—போராக்க
மாமை மணியிழந்த வாறுபோற் கூறுபட
மாமையிலா னுயினன் மன். (கூ௪)

ஏவலர்கல் கேர்மவுலி யேற்று முடிகவித்து
மாவிறலோன் கோல்விலக்கி மற்றவன்றிண்—மாவிலையோ
ராயிரங்கோ லாற்றுணித்தா னுதவன்றெவ் தேர்ப்பரியை
யாயிரங்கோ லாற்சிதைத்தா னுங்கு. (கூ௫)

மாவொழிய வீரனேர் மாமணித்தே ரேறியினன்
மேவலன்கை வில்லையம்பால் வீத்தவன்மேற்—றாவயிலை
யோர்ந்துவிட வன்ன தொழித்தேவா லன்னவன்றோர்
தேர்க்கெடுத்து வீசினன் சேண். (கூசு)

காரவுணன் விண்ணெழுந்து கஞ்சனருள் வேலைவிட
வீரன்மேற் பட்டவனும் வீழ்ந்தனன்வே—ளாருளாற்
போந்திலதன் ஞனவி போர்புரிவான் மற்றவர்மேல்
வேந்து மகனெதிர்ந்தான் வேர்த்து. (கூஎ)

வீராந்த சன்முதலா மேவைவர் வில்வளை இப்
போராவே சங்கொண்டு போர்புரிவா—னோராகிக்
கோன்மாரி பெய்யப்பின் கோன்கணைமெய் தைத்திரிந்தார்
நான்மா னவரொருவர் நைந்து. (கூஅ)

வீரர்க ளோவரையும் வீற்றவீற் றூவெலும்போ
தாரவுணன் றூனைகனைன் காசைநின்று—சேரவே
வந்துவந்து மன்னவனை மன்னுமதைக் கண்டனன்சீர்
நந்தி கணத்தலைவ னன்கு. (கூகூ)

செங்கதிர்வே லத்தன் றிருத்தாண் மனத்துன்னி
வெங்கதிரோன் றெம்முனுற்று வீரமொய்ம்ப—னங்க
ணுனித்தா னவர்விளிப்பா னுமபரளிப் பான்விற்
குனித்தான் குணங்கொண்டான் கூர்ந்து. (க00)

நாஞெலிகேட் டண்டர் நயந்துமமர்க் கேகுவனைக்
காணலுஞ்சூர் மைந்தன் கனன்றுகையி—லேனுடைவில்
டென்பினெலி கொள்ள வருந்தியுமன் ஞரிமைப்பி
லின்பதுன்பங் காண்டுமென்றூ ரீங்கு (க0க)

மாலயன்முற் றேவரெலாம் வானிலுற்றூர் போர்காண்பான்
சீலனைவெய் யோன்பாராச் செப்புவான்—வேலினுற்
றூரகற்கொன் றூனல்லை சாரனு நீகொலென்முன்
போரியற்றப் போந்தாய் பொலிந்து. (க0உ)

மாயையின்முற் போந்தனையெம் மன்முன் பழிபகர்ந்தா
யாயினவற் கொன்றூ யழித்திநகர்—மேயவிடு
தோர்தந் திலனதனு னுய்ந்தனைபோர் செய்துசம
னூர்புகுவிப் பேனின் னுயிர். (க0ங)

மூனைநின் றுனைவரைமுன் மோதிவென்றேன் பூதந்
தனையடாத்தேன் றூனைசெற்றேன் சார்ந்த—நினைமுடிப்ப
னுன்னைவிடுத் தோனை யுலைவித் தறுமகவான்
றன்னையுஞ்செய் வேன்சிறைதேர் தந்து. (க0ச)

என்றலுமா வீரமொய்ம் பெண்போ னெவரேனுஞ்
சென்றமர்செய் வாரைவெல்வ தேதிறலாம்—பின்றுவார்
தம்மை யடுவதே தாழ்வசையாம் வென்றிகொள்வோ
ரம்மவுரைப் பாரோ வது. (௧௦௫)

என்னு மிமைப்பி லினன்பகைஞ னீரைந்து
பொன்னம் பெடுத்துவில்லிற் பூட்டியே—மின்னுவா
மென்னவிடுத் தான்வீர னீரைம் பகழிகொண்
டன்னவற்றை யார்த்தறுத்தா னங்கு. (௧௦௬)

நூறு'யிரமயுத நூறு யிரங்கோடி
நூறு யிரகோடி கோன்கணைகண்—மாறாக
மாரிமா ரித்திறத்தின் மாறிமா றிப்பொழிந்தார்
பேரிகல்வல் லோர்பேர்ந்து பேர்ந்து. (௧௦௭)

சீர்மனிரு வோருஞ் செலுத்து கணைசெறியப்
பார்மறைந்த வான்மறைந்த பன்னவரூர்—தேர்முடுகிச்
சாற்றண்ட வட்டமுற்றுஞ் சாரிதிரி யச்சூறைக்
காற்றினமர் செய்தார் கனன்று. (௧௦௮)

செங்கதிரோன் மேறரிடத்துந் திங்கள் விமானத்தும்
வெங்கரிகண் மீதும் விசும்புளார்—தங்கணுமே
வீரர் விடுகணைகண் மேவுபொருள் யாவுமட
வாரமர ரார்த்திரிந்தா ராங்கு. (௧௦௯)

வெய்யன் விறன்மொய்ம்பன் வெங்கணையெ லாந்தொலைத்துக்
கையி லிருந்திடுமோர் கார்முகத்தை—யையிரண்டு
நூறம்பா லார்த்தறுப்ப நோன்வீர வாகுபத்து
நூறம்பால் வில்லறுத்தா னெய்து. (௧௧௦)

விற்றுணிக்க வெய்யோன் வெகுண்டுகையின் மற்றொருவில்
பற்றிவளைத் தாயிரங்கோல் பன்னூத்தி—லுய்த்தலுமேழ்
மாறுகணை பெய்தன்னோன் மௌலிசாய்த் தான்மணிசெய்
வேறு முடிகவித்தான் வேந்து. (௧௧௧)

மேயிதன்முன் னாயிரங்கோல் விட்டவன்மேற் சாலிகைதான்
வீய வறுத்திடலும் வெய்யவனு—மாயிரங்கோல்
வீரனுத லுய்க்க மெலிவின்றி யாங்கவற்றை
யார வகழ்ந்தெறிந்தா னங்கு. (௧௧௨)

சேயினவல் சூர்மூத்த சேய்முகந்தோண் மார்புகையி
லாயிரங்கோல் வெவ்வேறு யார்த்துவிடத்—தீயினவை
தைத்தவச மாகின்றான் சாருதிரங் கூர்ந்துசெவ்வான்
மொய்த்தமுகில் வண்ணமொத்தான் முன். (௧௧௩)

அருமவுணர் மாத்தலைவ ராகித்தன் மாற்றான்
பொருவலிமை யின்மைகண்டு போர்நாற்—பெருமனிக
மோடுமுன்போய் வீரன்மே லொப்பில் படைவிடுத்தெம்
மாடு மறைத்தார் மறைந்து. (௧௧௪)

கூறு யிரகோடி கோடிவெங்கோ லோர்தொடையா
வீறார் புயன்றாண்டி விட்டபடை—நீறாக்கி
யேவனந்த கோடி யிருந்தகுவர் தானைமுற்று
மேவவொல்லை யிற்படுப்பான் விட்டு. (௧௧௫)

துன்னங்க நான்குந் துணித்தவற்றை யோர்நொடியிற்
பின்னங்க ளாக்கிப் பிறங்கினவே—கொன்னங்கக்
கூளிவிருந் துண்ணக் கொடுங்களத்தில் வீரத்தோண்
மீளி விடுவான் விரைந்து. (௧௧௬)

பாரோடுங் கானோடும் பானூடு தானோடு
நீரோடும் வெற்போடு நேர்ந்தோடுங்—காரோடு
மீயுயர்ந்து விண்ணோடும் வீரமொய்ம்பன் விட்டநெடுந்
தீயகணை சிந்துஞ் சிரம். (௧௧௭)

மேவுங் களேபரமாம் வெற்புறுநெய்த் தோர்பெருகி
மாவுந்தி யாய வயஞ்சிதற—மாவுந்தி
யூனெலா மீர்த்துக்கொண் டோதநீ ருற்றருத்து
மீனெலா முண்ண விருந்து (௧௧௮)

பன்னனிகத் தின்மெலிவும் பானுகோ பன்னலிவு
முன்னருமா பூத ருணர்ந்தெழுந்தே—துன்னருஞ்சீர்
வீரமொய்ம்பு தன்புடையின் மேவி வளைதந்தார்
பேரடனன் குற்றார் பெரிது. (௧௧௯)

சோருணர்வு தோன்றவெய்யோன் சுற்றிடமெ லாநோக்கிப்
பேரனிகங் காணான் பிணங்கண்டான்—வீரனிவ
னின்றான் சிலைவளைத்து நீளமர்செய் தேவரையுங்
கொன்றான்சீர் நன்றென்றான் கூர்ந்து. (௧௨௦)

கின்னலொன் றுமளவிற் கந்தவே ளொற்றனங்கஞ்
சின்னபின்ன மாச்செய்வேன் செய்யேனேற்—பின்னருயிர்
வாழ்வுதனை வேண்டேன் வரிசிலையும் யானுமெரி
வீழ்வனென்றான் சூர்மைந்தன் வேர்த்து. (௧௨௧)

வஞ்சினமவ் வாறறைந்து மன்னவன்சேய் மீளிமுன்போ
யஞ்சிலையங் கைவாங்கி யாயிரங்கோ—னஞ்சினுய்த்தா
னத்திரக்கோ லாயிரம்விட் டையனறுத் தாயிரங்கோ
லுய்த்தனனே பின்னு முருத்து. (௧௨௨)

ஆயிரங்கோ லான்விலக்கி யம்பயுதங் கொண்டுவெய்யோன்
சேயிளவ றேர்மா செலுத்தவோன்—மாயவுய்த்தான்
வேறொருதேர் மேற்பாய்ந்தே வெங்கணை தூய் வீரனும்பல்
கூறுசெய்தான் றேர்வலன்மாக் கொன்று. (௧௨௩)

எழுநூறு திண்டோ ளிறைமகன்வில் வாங்கி
யெழுநூறு வச்சிரக்கோ லேவக்—கெழுமார்பிற்
பாய்ந்து துயர்ச்சுவையும் பார்த்தனனுன் றன்சென்னி
மாய்ந்துலையச் செய்வனென்றான் வாகு. (௧௨௪)

வீரனீ ரேழ்கணைகள் விட்டறுத்தான் வில்லைப்பின்
வாரம்போ ராயிரந்தூய் மாவினொடு—தேரழித்து
நூறம்பான் மார்பிடந்த நொந்திலன்மன் றாணிபத்து
நூறம்பாற் சேதித்தா னெய்து. (௧௨௫)

வில்லி யிவன்றன்னை வெல்லலரி தென்றுன்னி
யல்லறரு மோகமா வத்திரத்தை—யொல்லையிற்
சிந்தனைசெய் தொன்னலனைச் சேனையொடு மால்புரிந்து
வந்திடுக வென்றுவிட்டான் மன். (௧௨௬)

வெய்யோன் விடுமோக வெம்படைமா சீற்றமுற்று
வெய்யோன் சுடர்மாற்றி வீங்கிருள்செய்—தையோ
வெனப்பல் லுயிருமயக் கெய்தியஞ்சப் போர்ந்த
துனற்கருமா வீரருற்று ரோய்வு. (௧௨௭)

மோகப் படைசெல்லு முன்னோர் படையுமுந்தா
ரோகப் படையைவெல்வ தேதுமிலென்—றேகன்
கலக்கமுற்று நின்றான் கரையுமற்றோ ரெண்ம
ரிலக்கர் விழுந்தா ரினைந்து. (௧௨௮)

மன்னும் விறல்வாகு மற்றவரு முற்றநிலை
யுன்னு நகைத்துவய முற்றனன்பின்—பொன்னுருங்
கையிற் சிலைகுனித்துக் காண்டமழை பெய்தனையார்
மெய்யிற் றுளைத்தான் விரைந்து. (௧௨௯)

அன்னதையோர்ந் தன்னு ரகனுர் மயல்கடிவான்
பன்னருமா மோகப் படைபுரிந்து—மன்னெமர்தம்
புந்திதெளி வித்தொன்னுன் பொன்றவிடு மாப்படையைச்
சிந்தியரு கென்றுவிட்டான் சேய். (௧௩௦)

ஐயனரு ளத்திரந்தா னுகவமுற் றங்குளார்
மைய லகற்றிடலு மாவீரன்—றுய்ய
புடைநின்றோ ரோரிலக்கர் பூதர்மற் றோரப்
படைகண்டு வந்தார் பரிந்து. (௧௩௧)

பின்னிரத மேயவனும் வீருமே தாழ்ந்திறைஞ்சி
மன்னுதுதி செய்து மனத்திலுற்ற—துன்னிருடான்
மேயதன்மை யோர்ந்தறிவன் விட்டனனிம் மாப்படையென்
றுயவுளத் தெண்ணினு ராங்கு. (௧௩௨)

செங்கதிர்வேற் செவ்வேளைச் சிந்தித் தருணீர்மை
பொங்கவர்தாம் புந்தியின்கட் போற்றிடலுந்—துங்கப்
படைபோய்க் குகன்பாற் பயின்றதுமன் சேய்மேல்
விடைபோன் றவரெதிர்ந்தார் வேர்த்து. (௧௩௩)

பின்னலங்கல் வாகு வெகுளியொடு மானங்கொண்
டொன்னலன்முன் விட்டபடை யூறுநினைந்—தன்னதற
வின்னே யடுவெனென்றோர்ந் தீசன் படைகொண்டான்
கொன்னே யதுகண்டான் கோன். (௧௩௪)

தன்னார் படைமெலிவுந் தக்கோன் படைவலிவு
மின்னார் விறல்வாகு வீரமுமே—யுன்னுமன்
செய்வதினி யொன்றுமிலை தெய்வப் படைதூண்டி
னுய்வதிலை யென்றறிந்தா னோர்ந்து. (௧௩௫)

வென்றி கொளலரிது வீரமா மொய்ம்பினனைச்
சென்றுநகர்த் தெய்வத் திறற்படைதந்—தொன்றலனே
பாற்றுவே னிற்றல் பழுதென் றுணிக்கசன
வாற்றிலரு விற்படர்ந்தா னங்கு. (௧௩௬)

கொற்றன் மறைந்தகன்ற கொள்கைதனைக் காண்டலுமே
சுற்றவுண ராருந் தொலைந்தகன்றார்—வெற்றியெம
தென்றிமையோர் பூப்பொழிந்தா ரேந்தலிரிந் தோன்வினைய
நின்றனனோர் வூற்றா னெடிது. (௧௩௭)

விண்டிடுமன் சேய்வெருவி வெங்கிடலோர்ந் தன்னவனைக்
கொண்டணைவா மென்னவுற்றோர் கூறுதலைக்—கண்டரவோ
னோடினவன் பின்போ யொறுத்திடன்மாண் பன்றுவரிற்
சாடிடுவ னனென்றான் றான். (௧௩௮)

என்றினைய வேந்த லியம்பிடாசன் றென்றிசைத்துக்
குன்றுறழ்தோள் கொன்பூதர் கொட்டினு—றொன்றலன்று
னோடினன் வீரனில்லா னெல்லையிற்செல் வாமெனவே
யோடினன் செங்கதிரோ னுற்று. (௧௩௯)

செந்துகிலின் முத்தந் தெளித்தாங் குடுவிளங்க
நந்துவெள்ளித் தட்ட நடுவைத்த—வந்திறத்தின்
வெங்க ணவுணரென மேவிருளை லாயிரியத்
திங்கண்மன் செக்கருற்றான் சீர்த்து. (௧௪௦)

இந்தவம யத்திலக்கத் தெண்மரொடும் பூதவெள்ளம்
வெந்தறுகட் டானைசெல வீரமொய்ம்பன்—விந்தையமர்
செம்மா நிலங்கடந்தேர் சேர்பா சறையிலுறை
யம்மான்முன் போய்ப்பணிந்தா னங்கு. (௧௪௧)

தொழுதெழுந்து வேடோரச் சூர்மைந்த னேற்றுப்
பழிதுன்பத் தோடிரிந்த பான்மை—மொழிதலுஞ்சே
யன்னவன்மே லின்னருள்செய் தாரமர்செய் தாயிருக்கை
பின்னவரோ டேகென்றான் பேர்ந்து. (௧௪௨)

நந்தி கணத்தலைவ னம்பி யிடைவிடைகொண்
டந்திலினை யோருடனே யங்கமர்ந்தான்—வெந்தகுவன்
வன்றுயரு மானமுமுண் மன்னியெலாம் விட்டவர்போன்
மின்றிருவில் வைத்தான் வெறுப்பு. (௧௪௩)

அல்லகன்ற பின்குகனை யார்படையை யாடமரில்
வெல்ல வுளத்து வினவிநிற்ப—வெல்லினள்ளான்
மேதகுபேர் ஞாட்பின் விளைவனைத்து நோக்கியே
தூதர்போய்த் தாழ்ந்துரைப்பர் சூர்க்கு. (௧௪௪)

கேட்டிநின்றன் மைந்தன் கிளர்மணித்திண் மொய்ம்பொடுவிற்
பூட்டியம ராற்றிப்பல் பூதரையே—வீட்டினன்பி
னீங்குற்ற வாறறியே மேதிலார் பாசறையா
மாங்குற் றனரென்றா ராய்ந்து. (௧௪௫)

மாற்றலரை வாட்டும் வலியிலா னாகியே
யூற்றமாச் சேய்வந்த தோர்தருமுன்—சீற்றமுற்றுத்
தன்றெவரும் வேண்டுகிலேன் றுன்னவரை நாளைநான்
சென்றுவென்று மீள்வனென்றான் றேர்ந்து. (௧௪௬)

என்றலுமே தூத ரினிதிறைஞ்சிப் போயினார்
மன்றலந்தார் வேந்தன் மருவலரை—வென்றிடுவான்
காதலொடு வைகினான் கங்குலா நங்கையவற்
காதரவின் மேவினா ளாங்கு. (௧௪௭)

சூரன் காவா டினிவரவே வீசிவரின்
வீரனெதிர்நின்று வெல்லுவான்—நீரமிலன்
மாதுநில்லே னென்று மதிவத் திரங்கோட்டி
யேதிலர்போற் சென்றா ளிசைந்து. (௧௪௮)

முதனாட்பானுட்கோபன் யுத்தப்படலம் முற்றிற்று.

ஆ௳ திருவெண்பா ௧௬௧.

---

## இரண்டாநாட் சூரபன்மன் யுத்தப்படலம்.

---

சாற்றுமறை யோராத் தலைவன் றுணைவனுட
னேற்றுச் சமர்க்களத்தி லேலாமே—தோற்றுவந்த
தற்பகைஞன் கண்டு சமழ்ப்பக் கரம்வீசி
யற்பகைஞன் றோன்றினா னங்கு. (௧)

அரிசெலுமுன் வேந்த னனந்த லொரீஇப்
புரிகடன்க ளாற்றிப் புதல்வ—னொருநூற்ற
நீள்வசையை நெஞ்சி னினைந்துசின மேற்கொண்டா
னாள்வினைசெய் மன்றத் தமர்ந்து. (௨)

இனியமருக் கேவரையு மேவுகிலேன் யானே
யனிகமொடு போய்ப்பகைஞ னாண்மை—தனையழித்தே
யொண்புகழ்கொள் வேனெனத்தேர்ந் தொற்றரைக்கூய் வாரியெங்கு
மண்படையைத் தம்மினென்றா னங்கு (௩)

என்றலுமே தாழ்ந்தா யிரகோடி யோரெங்குஞ்
சென்றறைய னிட்டபணி செப்பிடவே—துன்றிரதம்
பொள்ளற்கை மாபரிமேற் போயினர்நூ றாயிரமா
வெள்ளத்தின மிக்கோர் விரைந்து. (௪)

சூலங் கணிச்சிகுந்தந் தோமரவில் வேல்பிண்டி
பாலங் குலிசமுதல் பல்படைக—ளேலவங்கைக்
கொண்டவர்சூ தூர்சுலவிக் கூர்ந்தார்ப்பக் கோபுரம்போய்க்
கண்டனன்மன் றானைக் கடல். (௫)

நோக்கினான் றானைவெள்ள நோய்மைத் துயரனைத்து
நீக்கினா னென்னநின்றா னேரலரைத்—தாக்கிடுவான்
மன்படையும் வானோர் வயப்படையுங் கொண்டனன்வெம்
மின்பகழிப் புட்டி லிட்டான் வேந்து. (௬)

மந்திரவே தன்கவிக்கு மாமுடியிற் றும்மைமிலைந்
திந்திரஞா லத்தேர்மே லேறிமதத்—தந்திபரி
தேரினங்கள் செல்லத் திறல்வீரர் தேரமைச்சர்
சீரினுறச் சென்றான் றெரு. (௭)

கோயில் கடந்துயர்ந்த கோபுரத்தின் வாயினண்ண
வாயிலக்க வெள்ளத் தவுணருற்றார்—மேயவதி
சூரனசு ரேந்திரனுஞ் சூழ்மைந்தர் சாரடைய
வார வறைவா னரசு. (௮)

கரையில் வழிநீர்க் கயங்கெடல்போற் றூனை
யரைய ரிலாக்கா லழியும்—புரையினீர்
மொய்திண் படைக்கு முதல்வராய்ப் போதிரெனக்
கைதொழுது சென்றார் களித்து. (௯)

தேரிவர்ந்து சென்றநோற் சேனை யணிவகுத்துப்
போரியைந்து காரவுணர் புந்திமகிழ்—கூரவமர்
செய்களத்திற் கேகினார் சேட னிராங்கமன்னன்
தெய்வதத்தே ரூர்ந்துசென்றான் றேர்ந்து. (௧௦)

பல்லியத்தி னார்ப்பும் படையார்ப்பும் வீரர்தாம்
வல்லியத்தி னார்க்கும் வயவார்ப்புஞ்—செல்லியத்தின்
மேலா வுலகுலைய மேவினதுள் விண்படர்ந்தற்
போலாய் மறைத்தபகற் போது. (௧௧)

இரும்பூழி விண்போ யினனை மறையா
வரும்பூழிக் காலவிரு ளாக்கின்—விரும்பூழிற்
செல்லனிக வெள்ளச் செறிவெடுத்துச் சேடற்குஞ்
சொல்லிடவும் போமோ தொகுத்து. (௧௨)

ஆன வியல்பி லவுணப் படைசுலவக்
கோநெறியில் வையமேற் கோன்செல்லத்—தானதனைக்
கண்டமரர்க் காப்பான் கடிதோடிக் கந்தவேண்
முண்டகத்தா டாழ்ந்துசொல்வான் முன். (௧௩)

அன்று மகத்தின்க ணுதி யருள்படையோ
டின்றுபொரச் சூரபன்ம னேகினன்—சென்றவனை
வென்றெமது தொல்சீர் விழைந்தருள்க வென்னவன்னு
னன்னெனன் றருள்புரிந்தா னன்கு. (௧௪)

ஆம்பரிவி னேற்றனைநீத் தத்தன் வலவனைக்கூய்
வாம்பரித்தேர் கொண்டு வருகெனவ௦—தோம்பரியுங்
குன்றனைய தேர்கொணர்ந்து கோமான்மு னுய்ப்பவதில்
வென்றியுற வேறினன் வேட்டு. (௧௫)

வெங்க ணவுணர் விறலடச்சேய் சென்றிடுதல்
புங்கவர்க ளன்பிற் புகலவே—யங்க
ணடாரனிக மாபூத ரன்னது கேட் டார்த்துப்
படர்கின் றணரதிரப் பார். (௧௬)

திக்கைமுழா வீணைகுழல் சல்லரிமுற் பல்லியங்க
டொக்ககண நாதர் துவைக்கவே—மிக்கவிசை
பன்னு ரதன்முதலோர் பாடவிண்ணோ ராடினார்
தொன்னு யகன்று டொழுது. (௧௭)

சண்முகன்றன் சேனைவ றனைக்கொன் னிளையவனோ
டெண்ம ரிலக்கர்க ளீண்டுகணத்—தண்வயவர்
தேர்பிசையாய்ச் சேனையிடைச் செல்லமணித் தேரிற்போய்ப்
போர்முனையிற் புக்கான் புரிந்து. (௧௮)

வடவனலை யாழி வளைத்தாங் கவுணத்
திடவனிகஞ் சூழ்தந்து சேரத்—தடவனித
பூதவெள்ளம் போய்த்தாக்கப் பொய்த்தகுவ ரும்மடர்த்தப்
போத விளைந்ததுவெம் போர். (௧௯)

மால்வரையு நீண்மரமும் வைவேலு நெய்வாளுஞ்
சால்வரைநேர் வெம்பூதர் தாமவுணர்—மேல்விடுத்தார்
வெந்தகுவர் சீறிவிற்கோல் வேல்கணிச்சி தண்டாழி
யுந்துகணை மேலுய்த்தா ருற்று. (௨௦)

கரிமா விரதங் களைக்கரத்தில் வாரி
விரிமா நிலந்திசைவான் மேவப்—புரிவாரோ
ராயிரமாங் கோடி யவுணர் தமைச்சிதைப்பர்
காயனற்கட் பூதர் கடிந்து. (௨௧)

தேர்கரிமா காலாட் டிரளவுணர் சூழ்ந்துவில்லிற்
சார்கணையி னூற்பூ தரைத்தடிந்து—பேர்நெடுங்கை
சிந்துவார் தாணிலைகள் சிந்துவார் சென்னிதனைச்
சிந்துவார் வெந்தகுவர் சென்று. (௨௨)

இவ்வகைப்போ ராற்றுமெல்லை யெண்பூத வேந்தரால்
வெவ்வசுரத் தானை மிகமாய்ந்த—தவ்விடையெண்
வானும் புவியுமா மன்னவுணர் நீள்பிணக்குன்
றானுதிரஞ் சென்றதத்தி யூடு. (௨௩)

பிணப்பிறங்க லார்களத்திற் பேர்கொளதி சூரன்
கணப்படையின் வென்றிதனைக் கண்டு—தணப்பருமா
சீற்றமுற்றீ ராயிரமாந் தேர்செலவீ ராயிரமா
வேற்றமணித் தேரிவர்ந்தா னேய்ந்து. (௨௪)

வரிவிற் குழைத்தளவில் வாளியினேற் றூரை
யரிமகன்மெய் சேதிக்க வாங்குப்—புரிகணத்தி
னுக்கிரப்பேர் வேந்தெதிர்போ யோர்கதையன் ஞனிறத்தின்
மிக்கிரத்தங் கக்கவிட்டான் வேர்த்து. (௨௫)

மாறுய தண்டனையான் மார்பிலுறு சாலிசிந்த
நூறு யிரம்பகழி நொய்தினெய்தா—னேறுய
வுக்கிரன்மெய் முற்றுநெய்த்தோ ரூற்றெடுப்பச் சீற்றமொடு
மிக்கவுணன் றேரினுய்த்தான் வெற்பு. (௨௬)

அதிர்கழலான் விட்டவெற்பா லாரவுணன் றிண்டே
ருதிர்தாலு மற்றொருதே ருற்றான்—மதியினனத்
தேரைவலி கொண்டீர்க்குந் திண்மா விறவுதைத்தான்
பாரிலவை வீழ்ந்த பதைத்து. (௨௭)

உக்கிரன்மே னூறுகணை யுய்ப்ப வவனவற்றைக்
கைக்கதையின் வீட்டிக் களித்தார்ப்ப—மிக்கொளிசெய்
வேறொருதேர் மேவிவெய்யோன் வீந்தனைநீ வீரவென்று
னீறிறெய்வ மாப்படையி னின்று. (௨௮)

வன்னியவிர் மாப்படையை வாங்கிமன்னர்ச் சித்துவிட
மின்னிவரு வெம்மைகண்டு வேண்மலர்த்தா—ளுன்னலுமத்
தேவனருள் செய்யவல்லோன் றீச்சரங்கைப் பற்றிமிக்க
வாவலன்போ னுங்கினூ ளார்த்து. (௨௯)

றுங்குதிற லுக்கிரனை நோக்கியதி சூரனென்போன்
பொங்குபுனல் சண்டன்கால் போதனரி—தங்களுடை
யோங்கு படைமுறையே யுய்ப்பவவை யாவையுமே
வீங்குகையால் வாங்கியுண்டான் வேட்டு. (௩௦)

அதிசூரன் யானினிச்செய் யாறறலென்னிவ் வீரன்
மதிசூடி யோவரியோ மன்பூ—வதிவானோ
வென்னவவ னேற்றங்கண் டென்செய்து மென்றனர்சீர்
துன்னமன்கொ ளாவியன்னோர் சூழ்ந்து. (௩௧)

இந்திரன்முற் றேவரெலா மிச்செயல்கண் டெண்கணன்முன்
வந்திறைஞ்சி யெம்மால் வருபடைநீ—நந்தனின்றன்
வன்படைகள் யாவுமன்னோன் வாங்கி நுகருமா
றென்பகர்தி யென்று ரிசைந்து. (௩௨)

ஏவருங்கேண் மின்களிவ னீசன் வரத்தினான்
பூவயிலோன் பூங்கழல்கள் போற்றிவந்தோன்—மாவலியர்
தம்மிற் றலைவன் சயம்பருள்கொள் செம்மையா
னெம்மிற் பெரியோ னெணில். (௩௩)

சக்கரமுன் மாந்துந் தலைவனினு மிக்கவல்லோ
னுக்கிரனா மன்னூ முதவுபடை—தொக்கவுண்ட
தற்புதமோ வொல்லையெண்ணி லண்டமழித் தாக்குமிவ
னற்புகழார் சொல்வார் நயந்து. (௩௪)

என்னவிதி கூற விமையோர் சிரந்துளக்கி
யின்னு மிவற்குவிற லெய்துகென்று—ரன்னபொழு
தேண்படைமன் பூதனைப்பார்த் தின்றுன்னை மாய்ப்பலரான்
மாண்படைகொண் டென்றான் வலிந்து. (௩௫)

மந்திரத்திற் பூசைமுற்றி மாதேவன் மாப்படையை
யுந்தமுக்கண் மூர்த்தி யுருக்கொண்டு—வெந்தீ
கடியரவம் பூதங் கணமெவையு மஞ்சும்
படிநடந்த தந்தப் படை. (௫௬)

உக்கிரனெய் தப்படைகண் டொண்கதைவிட் டஞ்சலித்தைத்
தக்கரத்தைப் பன்னி யடிதுதித்து—நிற்கவிவற்
றீண்டுகிலேன் யானென்றுச் சிந்தனைசெய் தந்தகையின்
மீண்டுபோ யிற்றே விரைந்து. (௫௭)

அண்ணல் படைபோ யரனை யடைந்ததெங்கு
மெண்ணு மிவன்சிவன்கொ லென்றயிர்த்துத்—திண்ணவுண
னஞ்சினான் விண்ணோ ரலர்மழைபெய் தாரசுர
ரஞ்சினார் சென்றா ரிரிந்து. (௫௮)

செல்லவுணர் தங்குழுவைத் தேற்றியதி சூரனங்கோர்
வெல்லுகதை யுக்கிரன்றோண் மேல்விட்டா—னொல்லையதை
மற்றவன்கைப் பற்றியவன் மார்பிற் புடைத்தலுமக்
கொற்றவன்ற னாவிகொண்டான் கூற்று. (௫௯)

துஞ்சி விழுந்தவதி சூரன் றனைநோக்கி
நஞ்சிற் கொதித்துவலி நண்பூத—ரஞ்சிடநீள்
விற்குனிக்க வன்னவன்மேல் வெற்புமரம் வீசவெய்யோ
னற்குயினிற் பெய்தனன்பல் லம்பு. (௬0)

வெந்தறுகட் பூதர் விலங்கலுய்ப்ப வங்கவர்பாற்
கந்தரமு னங்கநெய்த்தோர் கான்றிடலு—முந்தவெங்கோல்
தோண்முகந்தா ணீள்கை துமிந்து கணமிறப்ப
வேண்கனக னுற்றா னெதிர். (௬௧)

வருகனகன் மேலவுணன் வண்டொன் றழுத்தக்
குருதியுகத் தேர்மேற் குறுகி—யொருவலவற்
கொன்றசுரன் வார்சிலைநாண் கொய்துகரு மேகம்போன்
மின்றரணி யில்லிழிந்தான் மீண்டு. (௬௨)

அந்தில் வரையொன் றசுரேந் திரன்மேலே
யுந்தலும்வில் வாங்கியெண்கோ லுய்த்தவெற்பு—நந்தவிட்டே
வாயிரம்பெய் தாடகன்சோர் வார்ந்துநிற்ப வுன்மத்தன்
வேயசல மொன்றெறிந்தான் வேர்த்து. (௬௩)

அன்னா னெறிவெற் பதிவிரைவில் வந்தடர்க்கச்
சின்னா பினமாமா சிந்தினகண்—டுன்னாவோர்
தேரதன்மேற் பாய்ந்தான்கோல் சிந்தநெய்த்தோ ரோடமந்தன்
றாகன்சேய் நேர்வந்தான் றான். (௬௪)

மைந்தன் வரவவன்மேல் வாளியி ரைந்துவிட்டான்
கொய்தெரியிற் சிறியவன் கோபெறித்—துந்துமார்
புற்றகன்ற தாயிரங்கோ லுய்க்க வவனயர்ந்தான்
செற்றமொடு சிங்கனுற்றான் றேர்ந்து. (௪௫)

வெற்பொன் றவனிறத்தில் வீசவம்போன் றுலகற்றி
வற்புறமோர் தண்டெறிய மன்னூறு—விற்பகழி
கொண்டனற்சிங் கற்றொலைத்தான் கூர்கணை தூய்ப் பூதரைப்பின்
கண்டனன்றிண் டாரகன்சேய் காய்ந்து. (௪௬)

கண்டிலக்க ருட்டண்ட கப்பெயரோன் விற்குழையா
வண்டிரண்டைஞ் ஞூறுவெய்யோன் வத்திரத்தின்—மண்டவிட
மொந்துசிலை வாங்கி நுதலிலெண்கோ லுய்ப்பனைந்தான்
முந்தினன்மன் முன்சோ முகன். (௪௭)

எதிர்வந் தவனிறமே லீரைம் பதுகோ
லதிரவுணர் வேந்த னழுத்த—விதிர்தருதன்
றொன்மா சிலைகுனித்துச் சோமுகனோ ராயிரங்கோன்
வின்மாரி யிற்பெய்தான் வேர்த்து. (௪௮)

செல்லுங்கணை தாரகன்சேய் தேரைவல வற்சிதைப்ப
மெல்லவந்தேர் மேற்பாய்ந்தோர் வேலையுய்த்தா—னொல்லை
மருமம திற்படலு மால்கொடவ னிற்ப
வொருவிசய னுற்றா னுருத்து. (௪௯)

கொன்விசயன் வில்வாங்கிக் கோலா யிரமுய்த்து
மன்வலவ னைத்தடிந்து மற்றவன்கை—வின்முரிக்க
நாரியற விற்றவில்லை நன்கேந்தித் தானவர்கோன்
றேரினிற்பா கிற்பொலிந்தான் றேர்ந்து. (௫௦)

ஓர்பா கனைநிறுவி யுற்றவன்மேற் றண்டெறியக்
கூர்விசய னெல்லையில்வெங் கோல்விடுத்தா—னேர்கணையை
யொல்லையிற்றா ளாக்கியுரத் தூடுறவன் றன்பதைத்து
வில்லினொடு வீழ்ந்தான் மெலிந்து. (௫௧)

அதுதெரிந்து மற்றோ ரசுரேந் திரனோ
டெதிர்ந் திகல்செய் திரிந்தார்—கதிர்வடிவேற்
கந்தவே டாள்போற்றிக் கார்முகம்வாங் கிக்கணை தூய்
மைந்தன் றனைமறைத்தான் வாகு (௫௨)

மற்றவனோர் வில்வளைத்து வண்டா யிரமழுத்த
வுற்றதுநெய்த் தோரொழுகோ லுய்த்துவரி—விற்றுணிப்ப
மேலாந் தனுவாங்கி வீரன் விடங்கால்வெங்
கோலா யிரம்விடுத்தான் கூர்ந்து. (௫௩)

ஏருகணை தாரகன்சே யேண்வில் வினையிறுத்துப்
பாகனுயிர் கொண்டு பரிபடுப்ப—வாலகயின்றி
வேறொருதே ரேறினன் வீரன் பொருதவனை
யீறுசெய்வ னென்ற னினி. (௫௪)

வேறொருதே ரேறியவன் வெம்மாத னுவளைத்து
நூறுகோ லுய்த்திரத நூறவே—வீறுளா
னநகையற் போற்றிவிண்மே லாயொளிர்வாள் கொண்டவனை
வெங்கையி லொன்றெறிந்தான் வெட்டு. (௫௫)

தாரகன்மைந் தன்வெகுண்டு தண்டொன் றெடுத்தெறிய
வீரன் சினந்தவன்க மீதுதைத்தான்—காரவுணன்
சேர்ந்தசத்தி கொண்டெதிர்ப்பச் செம்ம லவன்சிரந்த
னேந்தசத்தி னலெறிந்தா னன்கு. (௫௬)

மக்க ளிருவருமே மாய்ந்ததும்போர் செய்திரிந்து
பக்கமுறு தானை படர்ந்ததுங்கண—டக்கதனிற்
செந்தீப் பொறிசிதறச் சீறிதன் மீறெய்தி
வெந்தீச் சிலைகுனித்தான் வேந்து. (௫௭)

வாணிதுதி வீர மகளகுடிகொண் மாசிலையி
னணிஞெலி காட்டவெஞ்சூர் நாமுறீஇச்—சேணிவந்த
பாரிடர்கள் வெற்போடு பன்வீர மும்விட்டே
யாரிடரு ளாழ்ந்தகன்ற ராங்கு. (௫௮)

சிலர்பதைத்து நின்றார் சிலர்வீழ்ந் திறந்தார்
சிலர்மயக்க முற்றார் தெரிந்து—சிலரிறந்தார்
வேதன்மா லஞ்சினர் மேவுயிர்க ளஞ்சினநா
ணோதை தனைக்கேட் டுலைந்து. (௫௯)

பன்றனுவி னணிஞெலி பன்னிரண் டாண்டளவு
நின்றிலது பாரிடர்போர் நேர்ந்தழித—னன்றுணரா
நோன்கழற்காற் றானைமன்னர் நூற்றெண் மரும்பொருப்பும்
வான்மாழும் பெய்தனர்சூழ் வந்து. (௬௦)

நோக்கிமைக்கு முன்பத்து நூறு யிரகோடி
மாக்கணைவெஞ் சூரன் வான்முறையே—போக்கித்தன்
சாரி லுறுவ தழ்ந்து கணத்தலைவர்
மேருவுறழ் மெய்துளைத்தான் வேர்த்து. (௬௧)

முடிவத் திரங்காது மூக்குவிழி மார்பு
கடிகை குறங்கு கழலா—ரடிதுளைக்கப்
போதத் துயர்ந்தார் புழுங்கினர் வெய்துயிர்த்தார்
பூதத் தலைவர் புலர்ந்து. (௬௨)

வியர்த்தார் சிலவர் வெதும்பினார் சில்லோர்
ரயிர்த்தார் சிலவ ரலமந்—துயிர்த்தார்
சிலவ ரிரங்கினார் சில்லோர் மறிந்தார்
சிலவர் தலைவருட்போர் தீர்ந்து. (௬௩)

இனையதன்மை யெய்தினர்நூற் றெண்மரெனுமா
வனிகமன்ன ராண்மை யழிய—நனியிலக்க
ரோலா சுகம்விடவஃ தேவிலக்கி வில்லிறுத்தான்
கோலா,யிரகோடி கொண்டு. (௬௪)

மைத்தகுவன் விற்கொளுமுன் வண்டா யிரகோடி
யுய்த்தசுவத் தேர்வீத் துரத்தவர்க்குத்—தைத்துருவ
வோரிலக்க மாயிரங்கோ லுய்த்திடவீழ்ந் தாரிலக்கர்
வீரமார்த் தாண்டனுற்றான் வேர்த்து. (௬௫)

வில்வளைத்து நாணேற்றி வெங்கோல் விடவவுணன்
பல்கவைநீத் தாயிரமே பாலத்தின்—மல்கவுய்த்தான்
மின்னார் சரந்தூண்டவேந்தா யிரங்கணையா
லன்னா னுரம்பிளந்தா னங்கு. (௬௬)

விட்ட கணையினால் வீரமார்த் தாண்டனொந்து
பட்டனனென் றன்னவெய்ய பார்விழுந்தா—னொட்டலான்
மன்வீர முற்றுமே மாய்ப்பனா னென்னவந்தான்
மின்வீர ராக்கதனும் வேந்து. (௬௭)

வந்தவிறல் வீரன்வில் வாங்கியோ ராயிரங்கோ
லுந்தமன்ன னாயிரமே வுய்த்தார்ப்ப—வந்தவம்பை
நீத்துச் சிலைதுணிக்க நீள்விசும்பில் வாள்கொண்டு
கோத்தனுவின் மேலெறிந்தான் கூர்ந்து. (௬௮)

நெடியவா ளிற்றிடலு நேரலன்வில் லெற்றும்
படிமுயலப் பார்த்துப் படையில்—கொடியவனைக்
கொல்லல் பழியெனவுட் கொண்டவுண னுந்தவிண்போய்ச்
செல்லலுற்று வீழ்ந்தான் றிகைத்து. (௬௯)

மன்னதனை வீர மகேந்திரன்கண் டார்பகழி
யொன்னலன்றன் றேர்மறைய வுய்த்தெதிர்ந்தா—னன்னதனை
யட்டணையம் பெய்ய வதுசிந்திச் சாரிவா
வட்டணைவந் தான்கணை தூய் மன். (௭௦)

பேரூ ரிரண்டுமொன்றும் பெற்றியினார் தம்முணிறங்
காரூ ரவுணன் கணைகுறைத்துச்—சீரூரும்
வட்டடிதோண் முப்பதுமே மார்ப மிருபதுமே
விட்டவன்வன் மைதொலைத்தான் வேர்த்து. (௭௧)

வீர மகேந்திரன்றன் வீழ்தலுமே சூரன்மேல்
வீரதீ ரப்பெயரோன் வில்வளை இ—வீரமா
வம்பு விடவதனை யாயிரங்கோ லாற்கடிந்தே
ழம்புவிட்டுத் தொழித்தா னங்கு. (௭௨)

தண்டமொன்றேந் தித்தீரன் றனோர் வீரநான்கு
வண்டி ணைத்துணித்து மார்பொய்ம்பு—விண்டிடவீ
ரேழ்தனிக்கோ லுய்த்தே யெவரையும்வென் றனவனை
வீழ்தரச்செய் தான்புவியின் மேல். (௭௩)

வீரமகே சப்பேர் விடலை யிவனைவில்லா
லாரும் வெலவரிதென் றாய்ந்துதெய்வக்—கூரயில்கொண்
டெய்த்துழிம னுயிரங்கோ லுய்ப்பவவை நீத்தவுணன்
மைத்தநிறத் தூற்றதுமின் வாய்ந்து. (௭௪)

உற்றவெஃகந் தூளா யுலவவெகுருஞ் சூரன்மேன்
மற்றோர் கதைவிடுமுன் மன்னவனைழ்—கொற்றவெங்கோ
லெய்பமகே சன்மொய்ம் பிடந்த துயிர்துரியம்
பையவடைந் தன்று பரிந்து. (௭௫)

வீரமகே சன்மயங்கா வீரசிங்க னோரயிலை
யேயவெழுகோ லாற்றுணித்தே வோர்நூற்றற்—றேரழித்தம்
பாயிரம்பா லத்தழுத்த வங்கவன்றன் றங்கைகொடு
மாயைமகன் மேல்விடுத்தான் வாய்ந்து. (௭௬)

சூனறந் தனையவுணர் கோவொருகோ லாலறுத்து
மனறனிறத் தோர்நூறு வாளியுய்ப்பத்—தன்றமணித்
தேர்மிசைவீழ் சந்தடித்தான் செங்கை பிளந்தனையான்
பார்மிசைவீழ் தந்தான் பரிந்து. (௭௭)

வீரன பதைத்து வியன்றேர் மிசைவீழச்
சூரனிவற் கொல்லல் சுருதியன்றென்—றூரவனை
வாரி யிடையெறிந்தான் மற்றே னினமுற்றன்
வீரனொரு வன்னெதிர்த்தான் வேர்த்து. (௭௮

வீர புரந்தரனிவ் வேந்தைவெல்லேன் வில்லிலெனக்
கோர நமன்படையைக் கொண்டெய்ப்பச்—சூரன்
வரமுன்னி மேலுற்று மாய்ந்ததயன் வேந்த
னூரமன் படையெடுத்தா னோர்ந்து. (௭௯)

எடுக்குமுன்வில் வாங்கி யிலக்கங்கோல் வேந்தன்
விடுக்கநிறம் போழ்ந்தகன்ற வீர—னெடுக்கமுற்றன்
சூராந் தகமையன்செய் சூழ்ச்சிநன்றென் றிகழ்த்தி
வீராந் தகனெதிர்ந்தான் வேர்த்து. (௮௦)

சார்ங்கமன்ன வில்வளைஇத் தானவர்கோன் மேன்மழைபோற்
கூர்ங்கணையெய் தானதனைக் கோல்கொடுகீத்—தீர்ங்களச்சூ
ரோரா யிரம்பகழி யுய்ப்பவதை யத்தொகையால்
வீராந் தகன்றடுத்தான் வேர்த்து. (அ௧)

தடுத்திடச்சூர் சீறித் தனியா யிரங்கோ
லெடுத்துவிட வீர னெதிரா—விடுத்தகணை
யெல்லாஞ் சிதைத்திரதஞ் சிந்தியந்த கன்னிறத்துட்
செல்லா வகன்றதுவே செற்று. (அ௨)

வீராந் தகன்சுணையால் வீழ்ந்தயர வாகைமொய்ம்பன்
றேரா வுறுமரணஞ் செற்றமுற்றுச்—சூராமன்
முன்னிரத மூர்ந்துவர முன்னுருப்பார்த் தொற்றிவனென்
றுன்னி வெகுண்டுரைப்பா னோர்ந்து. (அ௩)

எம்மகேந்தி ரஞ்சாடி யெண்ணி றமரையட்டாய்
வெம்மனிகத் தெண்ணிலவே வீத்தனையார்—செம்மக்க
டங்களைக்கொன் றுய்கின் றனியுயிர்கொண் டேயாற்ற
லிங்கன் முடிக்குவே னின்று. (அ௪)

பற்றுபட்டி மைபயிற்றிப் பன்னமைச்ச ரிற்பன்னி
யொற்றனாய் வந்தனையே யுய்திகடன்—மற்றதுவே
வார்விற் பிடித்தனையே மாண்டனையிவ் வைகலே
யார்நினுயிர்க் கீறென்று றங்கு. (அ௫)

தூதுவுமே யாகுவேன் சூழமைச்சு மாவனென்னோர்
மீது சமர்புரிவேன் வேற்சாமி—யோதும்
பணியனைத்துஞ் செய்வேன் பயிலேதும் வல்லே
னணியமாஞ் செய்தியென்று ரங்கு (அ௬)

என்றுதிறல் வீர னியம்பலுந்தீக் கான்றினகண்
டின்றவெயி றேட்டஞ் சிலிர்த்தமயிர்—துன்றுசின
மேலுறச்சூர் விற்குனித்தான் விண்புவியோங் கல்பணிகள்
சாலத் துளங்கினவே தாழ்ந்து. (அ௭)

வேலையிற்றிண் வாகுவுந்தன் விற்குனியா நாணொலிசெய்
காலையிலோர் மூர்த்தங் கலங்கினபார்—மேலையண்டங்
கூரா யிரகோடி கோலுய்த்தான் கோன்கணை தூய்க்
கீரா மெனத்தடுத்தான் காய்ந்து. (அ௮)

விலக்கவிலக் கங்கணைகள் வேந்துவிட வேந்த
விலக்கா யிரகோடி யேவின்—விலக்கவெய்யோன்
பின்னுங்கோ லோர்கோடி பெய்தனன்றிண் வாகுவுமே
மன்னுதலுய்த் தானூறு வண்டு. (அ௯)

மேவுகணை பாலமுற்று வீந்தனசெய் வேலன்றிச்
சாவிவன்ற னக்கை தனக்கிலையென் — றேவளவில்
கோடிபெய்ய வெய்யவன்கோல் கொண்டவைமாற் றிப்புயத்தி
னூடியலே பூம்பெய்தா னுற்று. (௩௦)

அன்னவைமெய் யுற்றநெய்த்தோ ரார்ந்துபிடர் போழ்ந்தகன்ற
பன்னவன்றேர்ப் பாகர்மேற் பல்கோடி — யென்னும்
வலவயிற்கோ லுய்ப்பவவை வாய்ந்துடலூ னுந்த
விலவமலர்ந் தாங்கிருந்தா ரெய்ந்து. (௩௧)

ஆங்கதுசூர் கண்டழன்றே யைம்பதுவெங் கோலோச்சி
யோங்கிரத்தத் தோட்டரியை யொல்லையட்டான் — வீங்குபுயன்
மாவாய் மணிநெடுமா வையத்தி லேறிவளி
தீவாய் படைதொட்டான் றேர்ந்து. (௩௨)

பன்னன் முறுவலித்து வாளாவில் லோடுநிற்ப
வன்னி வளிப்படைபோய் மற்றவன்மேற் — றுன்னியிற்ற
கூற்றின் படைகதிரின் கொன்படைசூர் மேல்விடலு
மேற்றமிழந் தேயிறந்த வேற்று. (௩௩)

வருண னிருதிமக வான்படைகண் வீரன்
முரணுறுசூர் மொய்ம்பினுய்ப்ப மோதி — முரணற்ற
மாயப் படையவுண மாப்படைவல் லேவிடுப்பப்
போயப் படையிழந்த பொற்பு. (௩௪)

வானோர் படையாவு மாய்தலுமே விம்பிதனைத்
தேனோர் மலரவன்மால் சீர்ப்படைக — டானேச்ச
வாரழல்கால் பல்படைக ளாயவுல கும்பனிப்பச்
சூர னெதிர்நடந்த சூழ்ந்து. (௩௫)

மேய விருபடையும் வெய்யோ னுரம்பாய்ந்தே
யாயதிருத் தொல்வலிநீத் தாங்கெவரு — மேயென்
வசையெய்தி யேயிரிந்த வாகுவியப் பார
விசைகொளிறை சொல்வா னிவை. (௩௬)

முத்தேவர் தம்முண் முதலானோன் மாவரத்தா
லெத்தேவர் மாப்படையு மென்னைவெல்லா — புத்தேள்வெல்
வானீந் தனவெனைச்சார் தல்லனலை யூனிதெனத்
தேனீசூழ்ந் தாருந் திறன். (௩௭)

தெரிந்தனைநன் கோச்சு திறல்வெம் படைகள்
புரிந்தவென்றி யொன்றுமிலை பொன்றி — யிரிந்தனநீ
வெல்வன்மை யுங்கண்டேன் வில்படையொன் றானின்னைக்
கொல்வனெனக் கூற்றினின்றேன் கூர்ந்து. (௩௮)

என்றசுரன் கூற விளவலரன் மாப்படையை
யன்றருச்சித் தன்னவன்மே னன்குவிடத்—துன்றெரிகான்
றாகமுற மேவவவ னத்தன் படைமுறையே
வாகுவின்மேல் விட்டான் வலிந்து (௯௯)

காரியா காரிபடை காய்ந்திரண்டு மொன்றொடொன்று
போரியா வோரும் புகழ்ந்திடச்செய்—சீரியா
ரீண்டறைவர் விண்ணோர்க ளேத்த வவையிரண்டு
மீண்டனவுய்த் தார்பால் விரைந்து. (௧௦௦)

அன்னதனை நோக்கி யவுணன் றனுவளைஇ
வன்னெடுங்கோ லுய்ப்ப வயவன்றன்—றன்னுசிலை
வாங்கிவெங்கோல் சிந்தினான் மன்னுமைம்மூன் றத்திரத்தால்
வீங்குபுயன் விற்றுணித்தான் வேந்து. (௧௦௧)

சிலைதுணியச் சீறிநல்லோன் றீயோன்மேற் செவ்வே
றொலையவிடத் தொல்வரங்கொள் சூரன்—மலையுரத்தின்
மேவியிற்ற தேணயன்மால் வீறடக்கு மோர்கதையை
மாவயவன் மேலெறிந்தான் மன். (௧௦௨)

வெங்கதைநேர் மேவலுமே வீரனோர் தண்டமுய்ப்ப
வங்கதைநீ றாக்கியுரத் தார்த்தடர்க்கப்—பொங்குநெய்த்தோர்
போக்கையா றென்னப் புகலவே போழ்ந்தநெடு
மாக்கையான் வீழ்ந்தா னயர்ந்து. (௧௦௩)

ஆற்றலின்றாய்த் தண்டிறலா ரண்ணல் விழவலவன்
றேற்றுறுவான் கொண்டணைந்தான் றேருகைத்தே—மாற்றலன்
றன்றனியில் வாங்கிச் சரமாரி பெய்தலுமே [றான்
துன்று கணமிரிந்த சோர்ந்து. (௧௦௪)

தாக்கிகன்மா வீரர் சயமொய்ம்பன் மற்றையோ
னூக்கியவன் பின்றெய் துடைதலைவே—னோக்கியே
பாகரொடுஞ் சூர்மிசைநம் பாண்டிநெடுத் தேரைவிரை
தேக விடுதியென்றா னெய்ந்து. (௧௦௫)

சிவனிளைய செல்வனிது செப்பலுமஃ தோராப்
பவனன்றேர் தூண்டவிருள் பாற்றித்—தவனனுயர்
வான்றவிர்ந்து மண்ணுற்ற மாண்புபோற் போரிற்சேய்
தோன்றியதோற் றங்கண்டான் சூர். (௧௦௬)

ஏர்மல் கியவாறு விருமுகமுங் கண்ணுமணி
யார்மவலி யுந்திறமு மாயுதமுங்—கூர்நல்
லரிதருபொற் றண்டைசிலம் பார்க்குஞ் சரணுந்
தெரிதரவே கண்டான் றெளிந்து. (௧௦௭)

சூரனெனுந் தானவர்கோன் றொல்லைநா ளேற்றதுவும்
பாரினெடுங் காலம் பயின்றதுவுஞ்—சீருள்கூ
ராறுமுகத் தெம்பிரா னோருருநோக் கிப்பெறுமாப்
பேறுபெறற் கன்றோ பெரிது. (௧௦௮)

சிதையின்க ளோராத் திருவுருக்கண் ணேற்கண்டு
முந்துநின்ற சூரன் முனைவனருண்—மைந்தனிவ
னென்ன நினைந் தேயுள்ளத் தில்வெகுண்டு கந்தவே
டன்னைநோக் குற்றுரைப்பான் றான். (௧௦௯)

சேனையாய்ச் சூழ்ந்தோர் செருவன் பழிந்திரிந்தா
ரேனையரும் போர்செய் திறந்தனர்நின்—றானைப்
பதிபொருந்தா னீயினியோர் பாலனே வெல்லை
யதிசயமே யார்க்குமுள தாம். (௧௧௦)

பங்கயன்மா லீசன் பயிலவரா ரென்றொடமர்
தங்குவலி யில்வளையுந் தாரகனும்—பொங்குசமர்பின்
றந்தவவன் றானைத் தலைவருமே போலவெனை
மைந்த நினைந்தாய் மனத்து (௧௧௧)

ஆக்கமுண்டோ யார்வரத்தி றாண்மையுண்டோ யாடலதின்
வீக்கமுண்டோய் தானையுண்டோய் வெம்போரி—னூக்கமுண்டோய்
மன்வரையின் மன்னிரங்க வாமோ ரழுங்கவில்லி
னின்வலிமைகொள்வனென் றானேர்ந்து. (௧௧௨)

சூரனிகல் கொண்டினைய சொல்லவரு ளாங்குமரன்
மூரல் சிறிதரும்ப முன்னவில்வான்—கூரவுநின்
னாற்றலினிக் கூறி யகந்தைசொளே லன்னதனை
மாற்றுதும்யாம் வல்லை வலிந்து. (௧௧௩)

பன்வரமா மாண்பினெனைப் பால னெனமதித்தாய்
நின்மடமை யாஞ்சம்பு நெற்றிவிழி—மன்பொறியொன்
றன்றோ வெலாமடுவ தாடலுரை யாரெதிர்ந்து
வென்றோது வார்வயவர் வீறு. (௧௧௪)

நூற்றுடனெட் டென்ன நுவலு முகங்காறும்
பேற்றுடனே வைகுநின்றன் பேர்வலியை—யாற்ற
விறையி னளவா லிரும்பாலிற் புக்க
வுறையி னடுவெனென்றா னுற்று. (௧௧௫)

என்னுமுன்மன் சீறி யிரும்பா ரளந்தவன்போன்
மின்னண்ட மீதுறவோர் வில்வளைக்க—வன்னதுகண்
டாலவனத் தத்தனட மாடமண்ட மேலெழுந்தாட்
கோலமெனை வில்லெடுத்தான் கோ. (௧௧௬)

எடுத்ததனி வில்வளை இ யேந்தலொலி கொள்ளக்
கடுத்துவெஞ்சூர் நாணொலிதை காட்டித்—தொடுத்துச்
சாமழைதூ யன்ன றனைத்தேனைப் போர்ப்பச்
சாமழைதூ யன்னசெற்றான் றான். (௧௧௭)

செற்றலும்பின் வெஞ்சூர் சினவிப்பல் கோல்விடவே
மற்றவைநீத் தம்போச்சி வாளியெய்து—கொற்றவனு
மன்னவுணன் றன்னை மறைத்துநெறி மாற்றினன்விண்
மின்னுசுடர் வேலுடைச்செவ் வேள். (௧௧௮)

ஆனகவேன யிட்டமன்ன னப்புமழை யான்வீட்டி
வானவர்சே னைக்கா வலற்கண்டு—கோனவிலும்
பத்துநா றாயிரகோல் பண்பினுய்ப்ப வேளவைநீத்
துய்த்தனனே வேழ்புயமே லோர்ந்து. (௧௧௯)

மாயைமகன் றிண்புயத்தை மன்னித் துளைத்திலவே
சேயதனைக் கண்டுநகை செய்தழன்று—தீயவன்பி
னெய்கணையெ லாஞ்சிந்தி ...றாயிரம்பகழி
பெய்தவன்றன் வில்லறுத்தான் பேர்ந்து. (௧௨௦)

சிலையைத் துணித்தலுமே தீயோன் சினவி
மலையைச் செகுத்தவன்மேல் வாணி—தலைவனரு
ளேண்டிண் படையெறிய வீரே ழடுகணைக
ளேண்டி யதையறுத்தான் சூழ்ந்து. (௧௨௧)

மன்ன னயிலிறலு மற்றோர் சிலைவளைஇ
வன்னுதியே மாரிசிந்தி மாறமா—றன்னவன்பெய்
கூர்கணையெ லாமாற்றிக் கொற்றவேற் காளைபுயத்
தார்கணையேழ் விட்டார்த்தா னங்கு. (௧௨௨)

சூர்விட்ட மாப்பகழி தோள்புக்குத் தூள்படலு
மார்வலிநன் றென்றுசினந் தையிரண்டு—வார்கணையா
லன்னோன் சிலையறுத்தோ ராயிரமாம் வெஞ்சரத்தாற்
றென்றாழித் தேர்சிதைத்தான் சேய் (௧௨௩)

ஆழியந்தேர் விற்றுகளா யாதலுஞ்சூர்க் கேமமா
மேழிரண்டு நூறா யிரந்தேரை—யூழிநெடுங்
கோலிற் சிதைத்தான் குமரனது கண்டுமன்னன்
சூல மெறிந்தான் றுணிந்து. (௧௨௪)

சூர்விடுவெஞ் சூலந் துணித்துநாற் றொல்கணையா
லார்குடையே ழம்பி னறுத்திலங்கு—மேர்முடியோர்
கோலிற் றுணித்தெங்குங் கூர்கணை தூய்ப் பூணணிகள்
சால வறுத்தனன்சேய் சார்ந்து (௧௨௫)

கொற்றவன்றன் வன்மை குறைந்ததனைக் கண்டனிகப்
பற்றுதலை வோர்நாற் படையொடுஞ்சேர்ந்—துற்றபடை
மாரிபொழிந் தேசூழ்ந்தார் மாமேரு வையேழு
வாரிமுந்தச் சூழ்ந்தனபோல் வந்து. (௧௨௬)

சூர்தருமா சேனைதனைச் சூழ்ந்து வளைந்தமைகண்
டோர்தருசேய் செங்கரத்தி லேந்துதெய்வஞ்—சார்பரிதி
விட்டனனஃ தென்றினிற்போய் வெய்யவுணர் மெய்துணித்த
தெட்டெனுந்திக் கங்கமுக வேய்ந்து. (௧௨௭)

தேர்துணிக்கு மாதுணிக்குந் திண்குஞ் சரந்துணிக்குந்
தார்துணிக்குந் தானை தகர்த்துணிக் கும்—வார்துணிக்கு
மேந்து கொடிதுணிக்கு மேர்கொள் குடைதுணிக்குஞ்
சேந்தன் றிகிரி திரிந்து. (௧௨௮)

கொற்றமிகு மோர்சோல் கொடுந்திண குலாலனனி
சுற்றுசக்க ரம்போற் சுழன்றுவிறற்—பற்றலர்தம்
பாழிப் படைதூள் படுத்தி முருகவே
ளாழிப் படைதிரிந்த தாங்கு. (௧௨௯)

தீர்த்தன் விடுநேமி செப்பில சவெள்ளமுற்ற
மூர்த்தமொன்றிற் போழ்ந்த முடித்ததே—கார்த்தநிற
வச்சுரன்ற னதுதத் தமையார்த்தி யஃதுகண்டு
மெச்சிப் புகழ்ந்ததசீர் வேட்டு (௧௩௦)

காரவுண ரங்கட் கருமலைபாய கார்குருதி
வாருவி யாங்கதிற்செல் வான்பரிசை—யூருவன
மன்றேர் கலமீகா மன்கொடியா மேவமுந்நீர்
சென்றே கலந்ததொலலை சேர்ந்து. (௧௩௧)

ஒருவட் பறைகலமா வூனடிசி னெய்த்தோர்
பருகுவடன் மூளைகறி பற்று—மருவுதிணைத்
தூவினிய பக்கணமாச் சூழ்ந்திருந்து பேயினங்கள்
மேவியினி தாரும் விருந்து. (௧௩௨)

இனைய வெல்லை யிற்பரிதி யிவ்வா றியற்ற
னினைகிலன்வேள் வேற்படையி னித்தன்—புனைபடையின்
வீட்டினனே வோர்மொழியால் வீகவென வாற்றினனே
சூட்டனிகந் தன்னையென்றான் சூர். (௧௩௩)

தேரிழந்து வில்லிழந்து சீரிழந்து பூணிழந்து
பேரிழந்து தானைப் பெருக்கிழந்தே—யேரிழந்த
வஞ்சன் முடிதுளக்கி மஞ்சன் வலிதன்றென்
றஞ்சன் படைவிடுத்தா னைந்து. (௧௩௪)

சென்ற வயன்படையைச் செவ்வேள் காத்தயில்சென்
ெறான்ற விழுங்க வுலகுண்டோன்—றன்றபடை
யன்னதுய்க்க வன்னதனை யன்னதுபோ லன்னதுண்ணக்
கன்னிசர்மன் கண்டயர்ந்தான் காய்ந்து. (கஙரு)

புரமெரித்தோன் மாப்படையைப் பூசனைசெய் தேர்தல்
பாவிவிட வஃதார்த்துப் பண்பின்—வருதிறலா
லண்ட மதிர்ந்த வவற்றுள் ளனவுதிர்ந்த
வெண்டிசைமா சென்ற விரிந்து. (கஙசு)

எந்தைபடை யீதெனவே யெண்ணியொரு கைநீட்டி
வந்த படைதன்னை வாங்கினன்மு—னந்தவன்போன்
மற்றதனைக் கண்டான் வயமாயை மைந்தனுய
கொற்றவேற் கோமான் சொதித்து. (கஙஎ)

விட்டபடைக் கெல்லாம் வேறுபடை தொட்டிலான்
கிட்ட வவைகவர்ந்தான் கேடிலா—வட்டமா
மூர்த்திதா னென்பதனை மூவுலகு மேயுணரச
சீர்த்தியுறக் காட்டினான் சேய். (கஙஅ)

என்னொடுபோ ராற்ற விவனலால் வேறிலையே
டன்னொடுபோ ராற்றயான் றனலதி—லன்னதா
லென்றனக்கு நேரா விவனலதி யாருமிலை
மன்றமியே னுக்குவமை மற்று. (கஙகூ)

மன்றனுவேல் வான்றொழிலு மற்றுளவுங் கண்டனன்சேய்
பன்றொழிலு நன்றினியான் பார்ப்பனெனு—நின்ற
வனையனிய னெக்கிவள்ள லாருளி னீரா
வினைய நவில்வா னெடுத்து (கச0)

இந்திரன்றன் சேயை யிமையோர் தமைச்சிறைபி
லந்தமிழுள் வைத்தா யதற்காக—மூந்தவோ
ரொற்றன் றனைவிடுத்தோ மோது மவன்முறையே
சொற்றனவுங் கொண்டிலையுள் சூழ்ந்து. (கசக)

அத்தன்மை யாலீங் டைடைந்தனம்யாம் போரின்கண்
மைத்தடந்தோட் டாரகனைமாய்த்தனமு—னுத்தகைபோற்
போக்கி னினையும் பொருதிந்த வைகலே
வீக்குதுமென் றேகினோ மீண்டு. (கசஉ)

ஈண்டுநின்பா லுற்ற விலக்கம்வெள் ளத்தானை
நீண்ட சிலவன்மை நின்றனுற்—றாண்டி
யெறிதெய் வதப்படைக ளெல்லாந் தொலைந்தே
வறியனாய் நின்றாய் வதைந்து. (கசங)

தாரகனைச் செற்ற தனிவே லிருந்ததுவோர்
பாரமன்று நின்னைப் படுத்தற்கே—யாரும்
படையிழந்த நின்னுயிரைப் பாற்றல் பழியாய்
முடியுமெனத் தாழ்க்கின்றோ முன். (௧௪௪)

பன்னுகின்ற தென்பற் பலபலவா றோர்குழுக்கண்
மன்னுசிறை விட்டனையேல் வாழ்தியுயிர்—சொன்னவாம்
வண்ண மறுத்திடினும் வல்லை யடுதுமென்னி
னெண்ண முரைத்தியென்றா னீங்கு (௧௪௫)

உனற்கரிய பெம்மா னுமைகேள்வ னல்கு
மனக்கினிய செல்வமுறு மன்னன—றனக்கனைய
வள்ளற் பிரானுரைப்ப மாறொன்றுங் கூறுகில
னுள்ளத் திவைநவில்வா னோர்ந்து (௧௪௬)

படையிழந்தா னென்னவுன்னிப் பண்ணவர்தம் யாப்பை
விடுதியென்றான் பிள்ளைமையால் வீயா—மிடலுணரான்
சேயாவா வல்லன் றெறத்தந்தை முன்றந்த
மாயா வரத்தினனை வாய்ந்து (௧௪௭)

மற்றநீர் வாவி மடுப்பதன்றி மாவெள்ள
வெற்றுநீர் வாரிகொளற் கேலுமோ—வுற்றமரி
லேற்றநெடுந் தானைதனை யேண்படையை மாய்ப்பதன்றி
மாற்றுமோ சேயென் வரம். (௧௪௮)

என்னையவன் வெல்வரிதி யானும் வலியவவன்
றன்னைவெல்வ தும்மன்ன தன்மையே—துன்னி
யருந்திறனாற் றூளையொடு மாரமர்நன் காற்றிப்
பெருந்திறலுங் கொள்வேன் பெரிது. (௧௪௯)

என்றுபல சூழ்ச்சிமனத் தெண்ணி நனிதேர்ந்து
மன்ற வயந்தருமோர் மாயையின்—றுன்றுநெறி
மன்மந் திரமுன்னி மன்மறைந்து தன்புரியுட்
பொன்மந் திரம்புகுந்தான் போய். (௧௫௦)

மறைந்துசென்ற சூர்முயற்சி மன்னுயிர்க டோறு
முறைந்தகுகன் கண்டா னொருவே—லெறிந்தனையா
னின்னுயிர்கொள் வானினையா னின்னுமறிந் துய்புமோ
வென்னுந் திருவருளா லிங்கு. (௧௫௧)

ஆயபொழு தேந்தல்பா லாயனயன் வேந்திமையோர்
போயிறைஞ்சிக் காசிபன்பாற் போந்தான்சீ—ரேயவுணர்
மன்னன் வயமுற்றே வாழ்ந்திருந்தா னின்றுதா
னின்னொடமர் செய்திரிந்தா னோர்ந்து. (௧௫௨)

சூருடனீ போர்புரிதல் சூழ்தருமோ ராடலன்றி
யாருயிர்கொள் வான்கருதி னாயில்லை—பேரருளி
னல்னான் றனைவேலா லட்டிடுதி யெம்மிடைவை
யின்னா ரருளன்றோ வீது. (௧௫௩)

என்றலுமெங் கோனன் றெனநகைத்து நம்முனினிச்
சென்றமர்செய் வானாகிற் றீயவனைக்—கொன்றிடுது
மென்றா னனையவனை யெண்சா ரதர்சூழ்ந்து
நின்றார்த் தனர்க ணெடிது. (௧௫௪)

போரிலெமை யெள்சூர் புரியிம் மதில்சிகரி
யார வகழ்ந்தெடுத்தே யாழியுய்ப்போ—மாருமே
வம்மி னெனக்கூய் வருசா ரதரமுங்க
வம்மகேந்தி ரத்தருற்றா ரார்த்து (௧௫௫)

உற்றபொழு தொண்மதிலை யோம்புமதி கோரன்பாற்
சுற்றனிகத் தோடுநின்றான் றன்பூதர்—கொற்றந
திகழ்படைகண் டேசினவித் திண்டானை யோடு
மிகல்புரிய வந்தா னெதிர். (௧௫௬)

சூலமெஃக மாதி சுடர்படைவிட் டாரவுண
ரேலமரம் வெற்பெறிந்தா ரேனையோர்—கோலமணித்
தேர்பரிமா வைப்பிசைந்தார் திண்பூதர் பல்படையாற்
போர்புரிந்தார் தீயோர் புரிந்து. (௧௫௭)

சோரிசுடர் மூளைநிணந் துன்னுஞ் சமர்க்களத்திற்
காரியெரு வைசூழ்ந்த காய்கணமும்—வீரருமே
யானார் பலர்வீந்தா ரக்கணங்க டாக்கவிரீஇப்
போனா ரவுணர் புலர்ந்து. (௧௫௮)

வீரனதி கோரன் வெகுண்டதனை நோக்கியே
யோரெழுக்கைப் பற்றி யொருகணத்திற்—சாரதர்கள்
கோடிகோ டிக்கதிகங் கூறாகங் கூறாக
வோடியோ டிக்கொன்றா னுற்று. (௧௫௯)

பூதவனி கத்தலைவன் பூதரமொன் றங்கைகொடு
மோதவதி கோரனதை முன்னெழுவாற்—போத
விறத்தகர்த்தான் சிந்துமுகி லேந்தறனை யெய்தி
நிறத்தடித்தான் றன்பெய்த நேர்ந்து. (௧௬௦)

பூதன்மே லேவுமெழுப் பொன்றவவன் பல்லுறுப்பின்
மோத வவுணன் முடிவானான்—மூதெயிற்கண்
சாரதமா வீரர் தலைத்தலையார்த் தேசென்றார்
வாரிதியார்ப் பின்னேழ் மடங்கு. (௧௬௧)

சீரா ரிரம்யோ சனைவிசும்பிற் போய்வடலை
நேரா வுயர்சிகரி நின்றதனைப்—பாராம
னந்தரம்போ தக்கரத்தா லாங்ககழ்ந்தே யாழியுய்த்தார்
மந்தரம்போல் வீழ்ந்ததுவே வாய்ந்து. (கசுஉ)

மன்மணிகண் மின்சிகரி வாரியிடை வீழ்தலுமே
பன்மணியின் சோதிபடர் பான்மையுன்னார்—தன்மருங்கிற்
றூக்கலினு மெய்த்தோரோ தாழ்வடவைத் தீக்கொழுந்தோ
தேக்களறோ வென்பார் திகைத்து. (கசுங)

பதும மணிநிழலைப் பங்கயமென் றேமா
மது நுகர்வான் சென்றுமால் வாய்ந்த—வதனையூ
னென்னப்புள் போய்ப்பார்த் திகழ்ந்தகன்ற தீயெனமீன்
மன்னப்பு ளுற்ற மருண்டு (கசுச)

திவலை விசும்புந் திசையுமுற மேகங்
கவலையுற்ற விஃதென்ன காலந்—தவலிலும்பர்
நின்றுமழை பெய்த னியதியிது நிற்கமண்ணின்
றின்றுமழை பெய்ததென்கொ லென்று. (கசுரு)

மாநகருக் கங்கமா மன்சிகரி தன்சிறைவீழ்ந்
தானவுயிர் யாவும் மலைத்தலாற்—றூனெதிர்ந்து
போர்புரிவா னெண்ணிப் பொருதிரைக்கை யோச்சிவரு
நீர்மையினுட் புக்கதுமுந் நீர். )கசுசு)

வல்லையெறி கோபுரந்தான் வாரியிடை யுற்றலுமே
மல்லலம்பொற் சோவின் வடாதுபக்க—மொல்லையிற்றம்
பாதத் துதைதந்து பாற்றிநக ருட்புகுந்தார்
மேதக்க பூதர் வெகுண்டு. (கருஎ)

மன்னகருட் புக்கேற்ற மாத்தா னவரையட்டு
மினனுமணி மாளிகைகள் வீட்டினார்—புன்னெடுந்தூள்
பொன்னகர மேவியதன் பொற்பைமறைத் தேபுவியிற்
றுன்னகர மாக்கியதே தோய்ந்து. (கசுஅ)

திண்ணியதோட் பூதர் செயல்கண் டருள்புரிந்து
புண்ணியவேற் சாமி பொருநரொடு—பண்ணவரு
மன்பான் வழுத்த வணிகமனைத் துங்கொண்டு
தன்பா சறைசேர்ந்தான் றான். (கசுகூ)

பாசறையுட் செல்குமரன் பாரிடர்க ளாவணத்திற்
பேசறையுட் போயமரப் பேணியே—மாசி
லரியா சனத்த னமரர்கோன் போற்ற
வரிசயா சனத்தமர்ந்தா னங்கு. (கஎ0)

மாயத்தான் மாயையினோர் மைந்தன் மறைந்தகன்றா
னாயத்தா னிற்கி னவுணர்கோ—னேயத்தார்
சேயா லொறுக்குமெனாத் தேர்ந்தொளிப்போன் போற்கரந்தான்
போயா தவன்மேற் பொருப்பு. (௧௭௧)

ஆய வருவா யகன்று மகேந்திரத்துக்
கோயிலிற்போய்க் கோன்பதும கோமளைவாழ்—தூயமணி
மாட மிசையமளி மன்னியங்கண் டுஞ்சலன்சொ
லாடலன்போர்க் கானவுள்வா னாங்கு. (௧௭௨)

ஆனபொழு தொற்ற ரரசன் செயலுரைப்பப்
பானுவின்றெவ் கேட்டுப் படரடைந்து—மாநகர்போய்
விந்தைமணிக் கோயிலெய்தி மேவணையிற் சூழ்ச்சியொடார்
தந்தைசரண் டாழ்ந்தறைவான் றான். (௧௭௩)

நாற்றானை யிற்போய்மா ணண்படையிற் சேயொழிந்த
மாற்றார் வலியுணர்வு மாற்றினே—னேற்றானை
வென்றேன் குமரன் விடுபடையா லோர்வுற்றா
னீன்றே யறைகிலனிற் காங்கு. (௧௭௪)

மல்கரனல் கொண்படையான் மாயையான் மாற்றலரை
வெல்லுவே னாளையெனா மிண்டனானான்—செல்கதிரோன்
வந்தபின்னர்ப் போர்புரிவான் மன்புறம்போ னெனதன்மு
னெந்தைநீ சென்றா யிகற்கு. (௧௭௫)

இத்திறமோர்ந் தாயிலையோர் வேய்ந்தவரோ டாய்ந்திலைநீ
நதெதனையுங் கூவி நவின்றிலையேயன்—மொய்த்த
மதுகையுடைத் தானையொடு மன்னவபோர்ந் தாய்போர்க்
கிதுபெருமைப் பாலதோ வீங்கு. (௧௭௬)

அமரருக்கே யாக்க மவுணருக்கே யேக்க
மிமையவர்கோ மாற்கேயின் பீந்தாய்—குமரனைதிண்
மாகணங்க டம்மைமுன்னி மன்னவனே நீபோருக்
கேகறலை யையாமோ வீங்கு. (௧௭௭)

இகழ்ச்சிதரு மேலோர்சிறியவர் தம்மோடு
நிகழ்ச்சிதரு போரிலவர் நேரிற்—புகழ்ச்சியிலை
வான்போர் புரிந்து வயங்கொளினு மேயிகழ்ச்சி
தான்போர்வை யாக்கொள்வர் தாம். (௧௭௮)

சென்றதுநிற் கச்சிறியேன் செப்புவேன் கேட்டியா
லின்றிரவு போயபின்போ யேவரையும்—வென்றிகொடே
யேகுவனென் னைவிடுத்தி யாவுமொற்ற ரால்வினவி
யோகையுடன் வைகுவா யுற்று. (௧௭௯)

வீரொடு செய்வேலை வெல்லேனேன் மாட்சிதரு
மோரசு மேவுகிலே னென்னலுமே—சூரனையு
மேவருமென் பின்னவனை வீத்தவனை மூவருமற்
றேவருமே வெல்லலரி தேற்று. (௧௮௦)

மின்னயில்வேற் காளையொடு மேவியமர் செய்பவரா
ரொன்னலா ரில்லை யிவன்சேயென்—றுன்னலைநீ
யொற்றேய் விறலோனை யொப்பில் படையுடன்போய்ச்
செற்றே குதியென்றான் றேர்ந்து. (௧௮௧)

தந்தையுரை கேளாத்தடிந்தவனை யோரிமைப்பில்
வந்தடைவே னென்னமகிழ் வாய்ந்தனன்மன்—மைந்தன்சென்
றேதமிலாத் தன்குலங்க ளேகலுமங் கண்வந்தார்
தூதுவர்கள் பல்லோரா றுதைந்து. (௧௮௨)

சூர்மகன்றன் றாள்பணிந்து தூதரிவை கேட்கமன்னன்
போர்புரிந்து மீண்டபின்றிண் பூதர்க—ளோர்நகரின்
மன்வடபா லெய்திக்கா வல்லோன் றனைச்செகுத்துத்
தன்படையுஞ் சிந்தினார் சூழ்ந்து. (௧௮௩)

பின்னர் நெடுஞ்சிகரி பேர்த்தளகர் மேலெறிந்தார்
பொன்னகப்பா வுங்கழலாற் போசுகிறு—ரொன்னலுமே
னம்மாயிற் றச்சனைநீர் நம்முன் றா ிரென
வம்மகொணர்ந் தொற்றருய்த்தா ர ந்து. (௧௮௪)

மன்னடியைத் தச்சன் வணங்கம தியெலாந்
தொன்னெறிசெய் தென்றுரைத்துத் தூண்டியே—கன்னவிரோ
மாகா யனையயுத மாவெளநகொண் டேவடபாற் [ண்
சோகாத்தி யென்றகன்றான் சூழ்ந்து. (௧௮௫)

அத்துணையே தச்சன்போ யவ்வூர் மதில்சிகரி
சித்தத் துணிவிதித்துச் செல்லவே—மததமா
மாவிரதந் தானையொடு மாகாயன் போய்வடபாற்
காவெயிலைக் காத்துநின்றான் காண். (௧௮௬)

அன்ன பொழுதிரவி யாழிவெற்பி லாரவல்லென்
மின்னவற்கா ணுதெங்கு மோடித்—துன்னிவெள்க
வங்கதிர்வே லண்ண லவிரொழில்கூர் மேனியெனச்
செங்கதிரிற் றோன்றினன்கீழ்த் திக்கு. (௧௮௭)

இரண்டாநாட் சூரபன்மன் யுத்தப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவெண்பா ௩௭௮.

---

## மூன்றாநாட் பானுகோபன்யுத்தப் படலம்.

செங்கதிரோன் றோன்றுமுன்னர்ச் செய்கடன்மன் சேய்முடித் [துப்
பொங்கமரிற் றோற்றமையைப் புந்திகொளாப்—பங்கமில்சீர்
மாயவனைப் போற்றவவண் மைந்தன்முன் றோற்றிநிற்ப
மேயவனைத் தாழ்ந்தறைவான் வேட்டு. (௧)

தந்தைதன தன்னையர்கள் சண்முகத்தோன் றூதனொடு
நந்தமர்செய் தாற்ற நலிவுற்றே—நொந்தனன்
மான மிழந்தேன் வலியிழந்தேன் பின்னடைந்தே
னான பழிப்பிணிமே லாம். (௨)

வேத நெறிவிலக்கி விண்ணோர்ச் சிறைவைத்தாய்
மாதவர்செய் மாதவத்தை மாய்வித்தா—யோதயன்மால்
செவ்வண்ணன் றேவரிவர் தெவ்வராய் நிற்கிருந்தா
லெவ்வண்ணம் வாழ்திநீ யிங்கு. (௩)

பிழைத்திறத்தாற் றோல்வி பெரும்பழிமுன் பூண்டா
யிழைத்திடுமோ சொல்விதியை யாவ—ரொழித்துளா
ரீண்டுகவின் றூவதென்கொ லேந்தலெழின் மைந்தகேள்
வேண்டுவன வீவனென்றாள் வேட்டு (௪)

நேற்றமர்செய் தென்னைவென்ற நீள்வீர வாகுவையின்
றூற்றலணி கத்தொடுமீ றக்கிடவோ—வேற்றபடை
நல்குவா யென்ன நயந்தவடன் மாப்படையை
வெல்குமா றீந்தாள் விதித்து. (௫)

மற்றதனை நீவிடுத்தால் வாகு தனைப்பிறரை
யுற்றுணர்வை வீட்டி யுலக்குமா—லிற்றைச்
சயமுன்ன தேகென்னத் தானும்பர் போந்தாள்
வயமன் றிறம்பெற்றான் மன். (௬)

கூர்விசிகத் தூணிபுறங் கொண்டுகவ யம்புனைந்து
கார்முகங்கை யேந்திக் கருவிபல—போர்புரிதற்
காவனவுந் தெய்வதமா வத்திரமு மேற்றவுணர்
மாவனிகஞ் சூழவுற்றான் மன். (௭)

சயந்தனைவென் றுட்கொள் சயந்தனத்தி லேறச்
சயந்தனைக்கொள் கென்றுசி சாற்ற—வியந்தவுணர்
சூர்மகன்போர்க் கேகுகின்றான் சூழ்மினென்று கூறவொற்ற
ரார்படைக ளார்த்தெழுந்த வாங்கு. (௮)

ஓரயுத வெள்ளமா வொண்கரிதே ரொவ்வொன்று
மீரயுத வெள்ளமா வேனையோர்—வாரியென
வார்த்துவர மன்னனைச்சூழ்ந் தாங்கெழுந்த தூளிபோய்ப்
போர்த்ததிசை விண்மாப் பொருப்பு. (௯)

குன்று முயர்வரையுங் கூர்திரையுங் கார்முகிலு
மொன்றுபடப் போர்ந்துசெல லொக்குமே—துன்றுமதக்
கைம்மா கவின்றேர் கலிமாகா லாட்படைக
ளம்மா படர்வ வடர்ந்து. (௧௦)

அந்தரம்வெண் டாமரைபூத் தாங்களவி லொண்கவிகை
கந்தரமின் பூத்தாங்குக் காரவுண—ருந்துபடை
யம்பரம்பற் புட்பறந்தாங் கண்கொடிநீள் வான்போர்ப்ப
வெம்படைகள் சென்ற விரைந்து. (௧௧)

இன்னவணந் தானை யிரைந்திருபாற் சூழ்ந்துசெல
மன்னன் மகனகர்ப்பொன் வாய்புரிசை—துன்னுகைபி
லங்கன் பரிமுகங்க ளாயிரங்கொள் வேயினைப்பார்த
திங்க னவில்வா னினிது. (௧௨)

பன்னுமரன் பாலனமர் பாசறையிற் சென்றுநீ
மன்னுபுக ழார்வீர வாகுவைப்பார்த்—துன்னருமை
னணையிற்போர் செய்துதனை யாவிகொடு சீர்த்திபெற
வேணினுற்றேன் யானென் றியம்பு. (௧௩)

என்றசொல்லென் சொல்லா விசைத்துநீ மீள்கென்ன
நின்றதிறற் றூதுவனை நீசனுய்ப்ப—நன்றிதென
வேமகூ டம்போ யெழில்வீர வாகுவைக்கண்
டாமிவைநன் றோதுவா னுய்ந்து. (௧௪)

சூர்மகனின் னுவி தொலைககவின்று செல்கின்று
னோர்தாவிம் மாற்ற முரைத்துநினைப்—போர்தரவே
மாவலோய் கொண்டுவரு வாயென்று னேகுகிநீ
நாவலோ யென்றறைந்தா னன்கு. (௧௫)

தூதனிது சொல்லிநிற்பத் தூயோ னகைத்தியா
னுதவன்றன் வெம்பகைஞ னுவியுணணப்—போதுகின்றேன்
போய்நவில்வா யென்னவொற்றன் போகமொய்ம்பன் சுற்றமுற
வாய்முருகன் றாள்பணிந்தா னங்கு. (௧௬)

மன்றனய னின்னைமுன்னி வன்மையொடும் போந்துளான்
றன்றனிக வீரரொடுஞ் சூழ்ந்துநீ—சென்றெதிர்ந்து
போர்புரிதி மாயையெயிற் பொள்ளென நம் வேணிக்கும்
பேர்தியெனத் தாழ்ந்தகன்றான் பேர்ந்து. (௧௭)

தானைபுடை சாரச் சயந்தனத்திற் றம்பியரு
மேனையரு மேவி யிவர்ந்துவா—வானவர்க
ளாசி நவிலவெய்யோ னுருஞ் சமர்க்களத்தின்
மாசிகந்தோ னெய்தினன் வந்து. (௧௮)

பாரிடமா வெள்ளமூழ்ந்திண் பன்றருவர் மாக்கடலு
நேருநீஇ யாற்ற னிசழ்த்தியே—போரின்கட்
பல்லியங்க ளார்ப்பப் பலபடைவில் லம்பினுட
னல்லவுணர் சிந்தினு ரார்த்து. (௧௯)

அத்தகைய பல்படையோ டார்வரையு மாமரமுங்
கைத்தலத்திற் கொண்டு கணவருய்த்தார்—மைத்தருவர்
வாளிற் சிரந்துணித்தார் வன்மை கெழுவெழுவாற்
றோளிற் புடைத்தார் தொடர்ந்து. (௨0)

பிடித்தா ரவுணரைப் பீறிநெய்த்தோர் கால
வடித்தார் மிதித்தா ரலைத்தார்—தடித்தகையாற்
பற்றினர் வேழத்தைப் பாற்றினுர் தேரின்மே
லெற்றினர் பூத ரெடுத்து (௨௧)

ஓத நெடும்பரவை யூழித்தீ யீங்கிரண்டும்
போதவமர் செய்தாங்குப் பூதரும்வன்—போதரிய
தாரவுண ரும்மலைந்தார் சார்களத்தி லாறெனச்செல்
சோரிவிழைந் தார்ந்தனபுள் சூழ்ந்து. (௨௨)

துணிந்தனகை மொய்ம்பு துணிந்தசிர மார்பு
துணிந்தனவன் றாள்க டுதைமெய்—துணிந்த
சிலகணவர் துஞ்சினுர் செம்போர்க் களத்திற்
பலவவுணர் மாண்டார் பரிந்து. (௨௩)

மன்றருவர் மன்னவரும் வன்பூதர் வேந்தருந்திக்
கொன்றொடொன்று போர்புரிவா னுற்றமைபோற்- -சென்று
சிரந்துமித்தார் தோலுரித்தார் திண்டோ டடிந்தா
ருரந்துமித்தார் நேர்நே ருடன்று. (௨௪)

இலக்கமொண்ம ரேற்றமரி லேமழை தூய்ச் சுற்றிக்
கலக்க வவுணர்க் கடலை---யலக்கணுற்றே
யோடினரஃ தோர்ந்தா னுயிர்த்துநக்கான் முன்கனன்று
தேடினனை வைத்தோன் சிறை. (௨௫)

பாரிடர்தந் தானையின்கட் பானு தனைவெகுண்டோன்
சேருதலு மஃதுணர்ந்து திண்வாகு—சாரிலுளோர்
தம்மொடெதிர் போயோர் தனுவெடுத்தான் வெய்யவனு
மம்மவொரு வில்லெடுத்தா னார்த்து. (௨௬)

வீரனுமாத் தீயனுஞ்செய் வின்னு ணொலிகேட்டுப்
பாரதலம் வானம் பனிப்புற்ற—மாரியொன்று
யூழியின்கட் பெய்திறம்போ லொண்கோ லிருவோரு
மூழினனி பெய்தா ருருத்து. (௨௭)

மண்கடந்த வாரி வரையிகந்த மேகமூர்
விண்கடந்த விண்டயனூர் மேற்படர்ந்த—வெண்கடந்த
வண்ட வரம்பிகந்த வண்சா ரிகைதிரிந்த
திண்டிறலோ ரொருநெடுந் தேர். (உஅ)

இத்தகையை யோதுவெய்யோ னேவ யிரந்தூண்டி
யுத்தமமா வீர னூரத்தெய்ய—வித்தகனு
மாயிரங்கோல் சூர்மகன்றே ரார்வலவன் மாவிரதம்
போயிறப்ப விட்டான் புகைந்து. (உகூ)

வெய்யனோர் வையமேன் மேவிவில்லை வாங்குமுன
மையனோ ராயிரங்கோ லன்னவன்மார் —பெய்பநொந்தா
னூர்த்தனர்மா பூத ரதுகேட் டனன்றிமையோர்
கூர்த்தபடை கொள்வனென்றான் கோன். (௩௦)

வேந்தன் மகன்வருண வெம்படையை யர்ச்சித்துச்
சேந்தன் றுணைவாடற் சேனைமேற்—சாந்தகையி
னேவவஃ தூழிவெள்ள மென்னவிண்டோய்ந் தார்ந்தேகத்
தேவர் பனித்தார் திகைத்து (௩க)

அன்னதனைக் கண்டிளவ லங்கிப் படைவிடுப்பத்
துன்னெறிழி கான்ற சுவாலையுற்ற—பன்னண்ட
கோளகையெய் பாங்குங் கொளித்தனதிண் பார்வெடித்த
வாளொளிவான் றிக்குற்ற வாய்ந்து. (௩உ)

சீர்த்ததிறல் வாகு செலுத்துபடை யிவ்வணம்போய்
மூர்த்தமொன்றி லேவருண மொய்படையைத்—தீர்த்தவுணர்
கோன்புறத்திற் சுற்றிடலுங் கொன்காற் படைதுரப்ப
வான்மருத்திற் சென்றதுவே மற்று. (௩௩)

மருத்துப் படைசென்று வன்னிப் படையை
யுருத்தஃதின் றன்மை யொழித்து—வருத்தவுயர்
சாரதர்தம் மேல்வரலுஞ் சர்ப்பப் படைவிட்டான்
வீரருண்மா வீரன் விரைந்து. (௩௪)

அஃதா யிரத்தோ டயுத மிலக்கமெண்ணில்
பஃறலைய பாந்தட் படிவமுற்றுக்—கஃறென்னக்
காயமெங்கு மோடிக் கடுக்கான்று செங்கதிரை
யாயபடத் தான்மறைத்த தாங்கு. (௩௫)

வின்னுக மாப்படைபோய் வாயுப் படையையுண்டு
மன்னுக மேலுலவ மன்னதுகண்—டுன்னுக்
கருளப் படைவிடுக்கக் கண்டதனை யஃது
வெருளூற் றிரிந்ததுளம் வேர்த்து. (௩௬)

செம்புட் படைபலவாச் சென்றிடலு மண்ணுன்
வெம்புளத்த ஞகி வியனந்தி—யம்படையை
யேவவிட பத்துருவ மெண்ணில்கொண் டார்த்துலகம்
யாவுமஞ்ச வந்த தெதிர்ந்து. (௩௭)

நந்தி யிரும்படைபோய் நாகாரி தன்படையைச்
சிந்தி யெதிர்ப்பத் திறலவுண—னந்தகன்வெம்
மாப்படையுய்த் தானதையு மாய்ப்பவதன் மேல்வேதன்
மாப்படையை விட்டான் வலிந்து. (௩௮)

வேதனேப் படைபோய் விடபப் படையினைக்கண்
டேதனி கொண்டிறைஞ்சி யேகலுமப்—போதன்றன்
றதை படைதுரப்பத் தானெதிர்ந்து போர்புரிந்த
தோதைநந்தி மாப்படையோ டுற்று. (௩௯)

நாரா யணன்படைதா னந்தி படைக்கெதிர்போய்ப்
போராற்றி நிற்பப் புனிதனது—பாராவோர்
சிம்புளாம் வீரன் றிறற்படையை யுய்ப்பவரி
வெம்படையை வீத்ததது வேர்த்து. (௪௦)

மாயன் படைதொலைய மன்னுலகெல் லாமழிக்குந்
தூயன் படையைத் தொழுதுவிட—மேயவது
திண்புயத்தோன் கண்டு சிவன்படையை யர்ச்சித்து
விண்புகழ விட்டான் விரைந்து. (௪௧)

ஒருபாற் புகையு மொருபாற் கனலு
மொருபால் விடமு முமிழ்ந்த—வொருபான்மி
னித்தன் மகனு நிருபன் மகனுநே
ருய்த்த விருபடையு மொத்து. (௪௨)

போற்றுபல தேவர் புணரிமுகில் பாந்தண்மா
சீற்றமுறு வெம்புலிமா சீயந்தே—ரேற்றமுள
செம்மாப் படைசிந்தித் தீக்க ஞருத்திரரை
யம்மா விதித்த வவை. (௪௩)

வேதன்மால் வேந்து விமல னமலிமுத
லோனு படைக ளுதவினவே—பேதமின்றி
யிம்முறையா நல்கி யிறையோன் படையிரண்டுந்
தம்மிற் சமர்புரிந்த சார்ந்து. (௪௪)

வற்றியேழ் வாரி வறந்தனவான் கங்கைநீர்
சுற்றியமா நீத்தந் தொலைந்துவிண்பார்—முற்ற
வெரிந்த வுடுப்பொரிந்த வெற்றேர் கெரிந்த
விரிந்த பலமா வினம். (௪௫)

அத்தன்ற னத்திரத்திற் கஞ்சியஞ்சி லோடியர்க
டத்தந் தலைவர்த் தழுவினார்—சித்தமயர்ந்
தச்சமுற்று வன்மைகுன்றா வாற்றலரு மாற்றலர்மேல்
வைச்சவன்மம் போயிரிந்தார் மற்று. (௪௬)

பூத ரிலக்கர் பொருதுலைவர் மாழ்கியே
தூதுசென்ற வீரற் சுலவினார்—காதவுணர்
பொன்றார் புரண்டார் பொடிந்தார் புலர்ந்தார்நேர்
நின்றா னொருவனே நேர்ந்து. (௪௭)

ஆழிமன்ம கேந்திரத்தி லாரவுணர் சூழ்ந்தயர்ந்தே
யூழியிது கொல்லென் றுளம்பதைத்தார்—வாழிறையோன்
பேரொலிகேட் டிஃதென்ன பேசுதிர்நீர் தேர்ந்தென்னாச்
சாரர் தமைவிடுத்தான் றான். (௪௮)

ஐயகே ணின்சே யமர்விளைத்து வீரன்மேல்
வெய்யபடை விட்டுப்பின் வேணியான்—செய்யபடை
யேவ வவனுமதை யேவவவை பல்லுருவாய
மேவவிகல் செய்தவென்றார் வேர்த்து. (௪௯)

என்று தனைமுனிந்தோ னீசன் படைவிடுத்தும்
வென்றிலா னின்னுமொ ராற்றை மேவுமென்னன்—மன்ற
சிறிய னெனநினைந்தா னோர்வுருவன் றற்ற
லறிதலுணர் வென்றா னரசு. (௫0)

மேவரும்ப் பான்மை விளைய விருபடையு
மோவுமண்ட முன்போ லுற்றியான்றார்—வீவுறவே
மன்னுயிரெல் லாமளித்து மற்றிருவர் பாலுற்ற
வன்னதுகண் டாரமா ரார்த்து. (௫௧)

பாங்கினின்ற நான்மாப் படைகாணான் சூர்மகன்பி
னாங்கவைகள் யாவு மழிந்தனகண்—டேங்கியே
யீசன் படையானு மில்லைவென்றி யென்றக்காற்
பேசுவதென் னென்றான் பெரிது. (௫௨)

மாயத் தருவுகொடு வல்லை யெழுந்துசென்று
காயத் தினினிற்பக் காரவுணன்—றீயன்
புறங்காட்டி னென்னனப் பூத கணங்க
டிறங்காட்டி யார்த்தார் செறிந்து. (௫௩)

புங்கவனீள் வானெழுந்த போதுடையார் மேல்வஞ்சந்
தங்குபடை தூண்டியடுந் தானவனான்—றங்கடர்த்தா
னின்றென் னிழைக்குமோ வென்றஞ்சி யேகுவன்போ
லென்றுகரந் தேகினா னிங்கு. (௫௪)

மைப்புயன்மெய்த் தீயோன் மறைந்ததடல் வீரன்கண்
டிப்பகலு மாய்ந்தா னிலையிரிந்து—தப்பினா
னின்றினியான் செய்திறந்தா னென்றுரைத்தி ரென்னவே
தன்றுணைவர் சாற்றுவர் தாழ்ந்து. (௫௫)

உரந்தான வத்தண் டொழிந்ததனி நின்றான்
கரந்தா னினிவருவோர் காணோ—நிரந்தாரு
மந்தியும்வந் துற்ற தனிகமொடு மீண்டியாங்
கந்தனைப்போய்த் தாழ்வமென்றார் கண்டு. (௫௬)

தன்றுணைவ ரின்னசொலச் சண்முகன்றாள் காணுநினை
வொன்றுமனத் துற்றிடலு மும்பரின்க—ணின்றவெய்யோன்
முன்னைவைக லுற்றவசை மூளவசை பின்னுமுற்றே
னென்னையெள்ளு வாரெவரு மிங்கு. (௫௭)

தொக்கவம ரில்லொருவித் தோற்றோர் தமைவிழையுந்
தக்கதுணை வோர்தாயர் தந்தைமார்—மக்கண்
மகிழ்மனைவி மாரு மறப்பரென்னின் மற்றோ
ரிகழ்தற் களவுளவோ விங்கு (௫௮)

இன்றுயிரிந் தேனென்னி லேந்த லெனைவெகுளா
நின்று துறக்குமுன்சீர் நீங்குமா—லொன்றுபடை
துன்னமா வீரன்மேற் றூண்டினெதிர் மாப்படையாற்
சின்னமாச் சிந்துவான் றேர்ந்து. (௫௯)

தெய்வப் படையுய்க்கிற் றெவ்வருயிர் வீத்தலின்றி
வெவ்வுருக்கொண் டேவாளா மீள்வதல்லாற்—செய்திறத்தி
னாயப் படையினா லாவனவொன் றில்லையினி
மாயப் படைவிடுத்தன் மாண்பு. (௬0)

என்றிளைய வுன்னியஞ்ஞான் றேர்மா யவணல்கு
வன்றிறல்கொண் மாப்படையை வல்லையெடுத்—தொன்றலர்ச்சார்ந்
தாருணர்வு கொண்டனையா ராருயிரு மாற்றியே
வீரையுள்வீ சென்றுவிட்டான் வேந்து. (௬௧)

அம்மாப் படைவந் தறிதற் கரிதாகு
வெம்மாப் படையையெய்தி வீரரொடு—செம்மாண்
பிருங்கணத்தோர் தம்மை யிலக்கரைச்சூழ் தந்தே
யொருங்குற் றுணர்வொழித்த தோர்ந்து. (௬௨)

தோன்றுமா மாயைவெங்கோ றொல்லறிவுண் ணத்திறலோர்
மான்றுகிடந்தார் மறிந்தஃதனா—னான்றவரு
மோலமிட வீசுமோ ரூழிக்கா லின்னுருவேற்
றாலமென வான்றுனதன் றாங்கு. (௬௩)

ஆயிடையன் னானையெடுத் தாழி நதிகடந்து
தூயபுனல் வாய்ந்தவிருந் தொல்கடலூற் —றேய
வவர்தொகையை விட்டே யகன்றிடா தோம்பிற்
றிவாசுரன் காணா வினிது. (௬௪)

நின்றாங்குழ் வென்ன நகைத்தமகிழ் வெய்தியொல்லை
துன்று மகேந்திரமாத் தொன்னகர்போ —யென்று றுதெவ்
வெண்டிசையும் போற்ற விறைபுரிதன் றந்தைதனைக்
கண்டிறைஞ்சிச் சொல்வான் களித்து (௬௫)

இன்றியான் சென்றே யிரும்போர் விளைத்துப்பின்
வன்றொழில்செய் திண்வீர வாகுவினை —யன்றியவன்
சாருறுமா வீரரொடு சாரதரை யாருயிர்கொண்
டோரமுவத் துய்த்தே னுடல். (௬௬)

சிறிதுங் கவலையுறேல் சேனையொடும் யான்போ
யெறிவளிபோற் பாசறைவீத் தீறி —லறுமுகனை
வென்றே யரியயன்மான் மேவிவரைப் பற்றியா
னுன்றேத் தளிப்பலென்று னுற்று. (௬௭)

என்றலுமே யெந்தற் கெழுந்த கனியுவகை
பொன்றிணிதோள் வீங்கிப் புளகமுறத் —தன்றனயன்
றன்னைத் தழீஇத் தனியா சனத்தின்மேன்
மன்னிருத்தி ஞனோர் மருங்கு. (௬௮)

மைந்தன் குடிதாங்கின் மன்றந்தைக் கென்குறைவு
சிந்தையில்வே றெண்ணமில செய்தவத்தான் —முந்தைநா
ளூற்றனனென் சொன்னிறக வொண்டிருநீ நல்கவின்று
பெற்றனன்யா னென்றான் பெரிது (௬௯)

என்றுபல கூறி யியன்மாப் பணிபுனைந்து
முன்றந்த சொற் படிநீ முன்குகனை —வென்றமரி
லேனையரை வீத்தே னிகன்முடித்தி காலையென்றான்
சோனைமுகில் போனிறத்த சூர். (௭0)

அன்னதியான் செய்குவே னத்த வெனப்புகல
மன்னமரி னொந்தனமா மைந்தனின்றன் —பொன்னகருக்
கேகென்றுரைப்பவிடை யேற்றுப் படைசுலவப்
போகியில்வாழ் வுற்றான் புரிந்து. (௭௧)

பானுகோ பப்பேர்ப் பதகன் படையினன்
மானவராம் வல்லோர் மயங்கினமை —தானுணர்ந்தே
யண்ட ரயர்ந்தா ரரந்தையுற்று ரஙகனொந்தார்
கண்டுளிகள் காலக் கலுழ்ந்து. (௭௨)

இன்னலின்க ணேங்கி யிமையோ ரிரிந்துகுகன்
றன்னிடஞ்செல் வானேகத் தந்திரியாழ்—மன்னவர்க்கு
முன்னோடிப் பாசறையுண் முன்பணிந்து பின்பணியார்
மன்னோ டிசைப்பான் வகுத்து. (எ௩)

மன்மா மகன்கரந்து மாயப் படைதுரந்து
மின்வாகு ளெண்டுணைவர் வெஙகணத்தோ—ரன்மால்
கொளக்கடிந்தே யன்னதாற் கொன்னவரை வெய்யோ
னளக்கருளுய்த் தானென்று ளுகு. (எ௪)

நாரதன்சொற் கேளா நயந்தயிலை நோக்கினன்னீர்
வாரிசென்றங் கார்படையின் வன்மைசிந்தி—வீரருள
மல்குமிருண் மாற்றியன்னோர் வந்திடுவான் றந்துநீ
செல்கென் றிசைத்தனனற் சேய். (எ௫)

செய்யவேற் கின்னதன்மை செப்பியைய னங்கனுப்ப
வெய்யகதிர் பல்கோடி வீசியிரு—ளைய
விரைந்த தடன்மா விடமுமிழ்ந்த தாற்ற
விரைந்த தெரியுமிழ்ந்த தேய்ந்து. (எ௬)

எரிபனித்த வென்றயர்ந்த விந்துலைந்த வெண்பாற்
கரிதளர்ந்த பாம்பிரிந்த காணக்—கிரிநலிந்த
தெய்வப் படைதொடர்ந்த செங்கதிர்போல் வேல்வரலான்
மொய்வதனர் தீர்ந்தார் முயக்கு (எஎ)

இத்திறத்தின் வேற்படைதா னீசனகை போலோடிச்
சுத்தநீ ராழிபுகத் தொல்படைவன்—சித்தமஞ்சி
யையமயல் வீரரைவிட் டாங்குலைந்து போய்மறிந்து
மொய்யிழந்த தன்றே முடிந்து (எஅ)

ஆயபொழு தெந்தை யயில்வேற் கெதிரடைந்து
தூயகடல் வேந்தன் றொழுதஞ்சி—நேயமொடு
சொல்லுமன்சேய் மாயைவெஙகோ றாண்டிவய வீரரைநல்
வல்லுளத்திற் பூட்டினான் மால். (எ௯)

மன்னுணர்வு தீர்வோரை மற்றென் றுழைவிடுத்தே
யென்னிடத்தி லன்ன திருந்துளது—பன்னிறைநீ
யிங்குவரக் கண்டுடைந்தே ரேண்வீர ரைநீங்கிப்
பங்கமுற்று மாய்ந்ததங்கம் பாழ்த்து. (அ०)

வெந்திறல்கொள் சூரான் மெலிந்தனனென் செய்வனிவ
ரெந்தவம யத்தெழுவா ரென்றயர்ந்தேன்—கந்தவேண்
மையவுணர் தங்குழுவை வாட்டினுய்வே னென்கருத்தே
ஐயமுனி யேயென்றா னங்கு (அக)

நேமிவேந் திஃதுரைப்ப நீதளரே லென்றயில்வே
லாமு ளெழுந்தினரை யண்ணுமுனந்— தூமம்போ
லொள்ளொளிதான் மேவுதல்போ லுண்மா லகன்றுணர்வே
யுள்ளமுறத் தாமெழுந்தா ரோர்ந்து. (௮௨)

சூரர்திண் மாத்தலைவர் சாரிலக்கத் தோரொன்பான்
வீர ரிவரெழுந்து மேவிவல்லை—வாரி
மிசைப்பெயர்ந்து செவ்வேல் விரைமலர்த்தா ளேத்தி
யிசைப்பிற் றொழுதா ரினிது. (௮௩)

வீடினவெய் யோன்மாயை வீந்த பவத்தீட்டம்
பாடினமா வேதம் பரசறத்தே—வாடியது
தூமா முனிவர் துறக்கத்தோர் வாசநறும்
பூமாரி தூர்த்தார் புகழ்ந்து. (௮௪)

அன்னபொழு தாறுமுக னாயில்வா ளூறுறப்பார்த்
துன்னி யிறைஞ்சியெதி ருற்றறிஞன்—மின்னொளிசீர்
கொண்டுமென்க ணின்றுவந்துங் கோமானே யென்னநின்னைக்
கண்டுகவ னீத்தேங் களித்து. (௮௫)

குன்றிலெமை வீட்டிக் கொடியோன் புணர்ப்புச்செ
யன்றும்வந் தோர்வளித்தா யன்னதன்றி—யின்றும்வந்
தெம்மையாண் டாயதனால் யாங்களுய்ந்தோ நிற்குலகி
லம்மகைம்மா றில்லையென்றா ராய்ந்து. (௮௬)

தூயனிவை சொல்லச் சுடரயில்வேல் கேட்டுணர்ந்து
நீயிர் விளிந்ததிற நேடியே—சேயென்னை
யேயவத னால்வந்தேன் யான்வரவம் மாயைசென்ற
தாயிடைவம் மின்னென்ற தாங்கு. (௮௭)

நன்றென் றிறைஞ்சி நகைமுகத்த னாய்வீரன்
பின்றுணைவ ரேனையோர் பேர்ந்துசெலச்—சென்றனனா
லங்கதிர்வேன் மாப்படைதா னாறுமுகப் பெம்மான்றன்
செங்கை யமர்ந்ததே சென்று. (௮௮)

மூன்றுநாட் பானுகோபன் யுத்தப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௪௬௬.

---

# நகர் புகுபடலம்.

முன்னயில்வேல் செல்ல முருகவேள் சேவடிக
ளுன்னி யுவரிவைப்பி லொல்லையிற்போந்—தென்னகத்தோன்
வீரன்வெஞ் சூரன் வியனகர்கண் டேசினந்தா
னோருருவ மேயதொத்தா னுற்று. (க)

போர்க்குடைந்து மாயம் புரிந்துநமை வென்றகள்வன்
கார்க்குடலை வீட்டியல்லாற் கந்தனற்றாள்—பார்க்கிலே
னின்னி தியற்றேனேல் யானு மெனதுவில்லு
மின்னெரியில் வீழ்வனென்றான் வேர்த்து. (உ)

சூளிதனைக் கேளாத் துணைவோரு மற்றோரும்
வாளரியன் றாய்நின்சொல் வாலிதென—மீளனன்றன்
றிம்மென் றயலாரு சேர்ந்தியடு வோம்யாரு
மம்மென் றுரைத்தனன்றிண் வாகு. (ங)

ஆரியன்சொற் சேனா வனைவருஞ் சேர்ந்தொல்லையில்
வீர மகேந்திரத்தின் மேற்றிசைவாய்—சேரவுற்று
ளார்த்தார் கணத்தோ ரவுணரிதென் னென்றுவிண்போய்ப்
பார்த்தார் பதைத்தார் பனித்து. (ச)

ஒன்னார் துழனியென வோர்ந்துகுட வாயிலுள்ளான்
றன்னனை தீர்ந்தோர் தமைச்செகுப்போன்—மின்னுரு
மெய்யன் புலிமுகத்தோன் மேவுசிங்கப் பீடிகையார்
வெய்யனது கண்டான் வெகுண்டு. (ரு)

தன்கண்ண தானைசெலத் தாழா துரனுடன்போய்ப்
புன்கண்ண தீயனெதிர் புக்களவில்—வன்கண்ண
பூதரெதிர்ந் தாரவுணர் போழ்மாப் படைதூர்த்தார்
பாதவமுய்த் தார்மற்றோர் பார்த்து. (சு)

வெஞ்சினமூண் டின்னோர் விளைசமரிற் றானவர்க
ளெஞ்சினர்பல் பூதர் தொலைவுற்றார்—மஞ்சினத்தி
னார்த்தவுணர் மோத வனையர் தமைக்கணவர்
போர்த்தொழிலிற் சாய்த்தார் புகைந்து. (எ)

முன்கூ மூனிக முடிவா னதுகண்டான்
மன்சூழ் வரிமா வதனவெய்யோ—னென்சூழ்
வினியென்றோர் சூல மெடுத்தேகு வான்மேற்
றனிவரையுய்த் தார்கணத்தோர் சார்ந்து. (அ)

பூதருய்த்த வெற்பைப் புலிமுகத்தோன் சூலத்தாற்
காதியதைத் தூள்படுத்தக் காய்ந்துசிங்கன்—போதரமுன்
முத்தலைவேன் மேல்விடுத்தான் முன்னவனும் பின்னவனு
மத்தலைவேன் மேல்விடுத்தா னார்த்து. (கூ)

செறித்திடுமோ சூலந் திறத்திருமா வீரர்
புறத்தினிலே தைத்திரத்தம் பொங்க—மறத்தலையா
ருற்றுமுறை முத்தலைவே லுய்த்தமர்செய் காலையவை
யிற்றசெய்தார் மற்றொருழினே ரேற்று. (௧௰)

புன்முகவன் மற்போர் புரிந்துதிறஞ் சிந்தவரி
தன்கழலி னுலுருட்டத் தானிறந்தான்—மன்ககன
ரார்த்தனர்மே லாசை யரண்வீட்டி மாநகருட்
போர்த்தனர்மா பூதர் புகைந்து. (௧௧)

பொற்கோ புரமகழ்ந்து பூதர் புரத்திண்க
ணெற்கோ விரிய வெறிதலுமே—பற்கோர
வெந்தகுவர் சிந்தினார் வீதியிற்போய் மற்றவரை
நந்த மலைத்தகன்றார் நன்கு. (௧௨)

நீண்டமதின் மாட நிரைகள் கரிபரிதே
ராண்டகுவ ராரும் மழிந்திடலு—மாண்டுணைவர்
செல்கணைபல் கோடியெய்யத் தீமருத்து மாப்படையை
மல்குநகர் மேல்விடுத்தான் வாகு. (௧௩)

உந்து படையிரண்டு மொன்றா யிறுதியிற்கொ
ளந்தவுருக் கொண்டீ ரனல்கொளுவி—நந்த
வெரிந்தசில பாக மிரும்புகைமேற் சூழ்ந்து
கரிந்தசில பாகங் கவிந்து. (௧௪)

இன்னனவோர்ந் தொற்றர்போ யேந்த றனைவணங்கிப்
பன்னருஞ்சேய் மாயப் படைவிடுத்த—பின்னரிவை
சீர்நா ரதனறையச் செவ்வேள்வே லேவுதலு
மார்மாயை போய தகன்று. (௧௫)

ஆருமய நீர்ந்தோ ரயில்வேலைத் தாழ்தலுமே
யாரும்வம் மென்னமன்கை யெய்தியது—கூறுமொன்னார்
சேனையொடு போய்மேற் றிசைகா வலனைக்கொன்
றேனையரைச் சிந்தினா ரேற்று. (௧௬)

பூதர் துணைவரொடு போர்வீர வாகுவுமே
காத னகரிற் கனன்மடுத்தா—ராதலா
லோரயுத யோசனைநீ யுண்டவெல்லை கண்டனதீ
தேருதியென் றூரொற்றர் சேர்ந்து. (௧௭)

ஒற்றருரை கேளாச்சூ ருள்ளத்திற் செற்றமிக
மற்றவரை நோக்கிநீர் வான்சென் றங்—குற்றமுகில்
யாவையுமே தந்திடுதி ரென்னப்போ யாங்கவற்றை
கோவிளித்தா னென்றறைந்தார் கூர்ந்து. (௧௮)

எழுமுகிலு மேகி யிறைவ னிணைத்தா
டொழுதுநிற்க விவ்வூர் தொலைக்கு—மழலைத்
தணிவித் திடுதிரென் றான் றாழ்ந்துவிண்போ யார்த்த
பணிமுடிகம் பித்த பயந்து. (கக)

இம்மா நகரெரியை யீர்ந்தாரை பெய்தவியா
தம்மா விருந்தா லரசனமும்—பெம்மான்
சினந்தினுயிர் வீடிடினுஞ் சீருளதா மென்று
கனந்தம்மு டேர்ந்த கவன்று. (உ0)

துளியொன் றிபத்தின் றுணைசொரிய மேகந்
தளியொண் குடதிசையிற் சார்தீ—விளிதந்த
துன்னதனை நோக்கியையன் சூர்செயலோ கார்செயலோ
வென்னவோ வென்றுள்வா னேய்ந்து. (உக)

தேருழிமா நாரதன்விண் சென்றைய கேளிவைகார்
சூரழைப்ப வந்த சுடர்வடவை—யாரழற்கோ
றாண்டிடுதி யென்றகன்றான் றாண்டிடலுங் கார்புடைத்தே
யாண்டகைபா லுற்ற தது. (உஉ)

கார்மறிந்த வெல்லையிற் கந்தவே ளாறெழுத்தைத்
தேர்மனத்தர் வன்புறல்போற் செல்லெழுந்து—கூர்புறமார்
வாரியின்கட் சென்ற மலர்மழைபெய் தாரிமையோர்
சூரிடமுற் றொரொற்றர் சூழ்ந்து. (உ௩)

மன்னனடி தாழ்ந்துகொண்மூ வல்லைநின்சொல் விற்பொழிந்து
வன்னி தனையழித்த வாகைமொய்ம்ப—னன்னதுகண்
டேழி யனற்படையை யுய்த்தலுமே மாய்ந்தமுகி
லாழியா யென்றா ரணைந்து. (உ௪)

சீற்றமுற வேந்தன் செருவிளைத்துப் பூதரையுங்
கூற்றமுறழ் வீரரையுங் கொன்றுபின்ன—ரேற்றமுறு
மீசன் மகன்றனைவென் றிடிகடைது நீர்கொணர்திர்
தேசணிகொ டேரென்றான் றேர்ந்து. (உ௫)

நகர்புகுபடலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௪கூக.

# இரணியன் யுத்தப்படலம்.

ஒற்றரைநோக் குற்றரைய னேறினதோர்ந் தேங்கினான்
மற்றவன்சே யெண்ணின் மறையுணர்ந்தோ—னுற்ற
முரணரக்கர்ச் செற்றுளான் மூன்றுசிரங் கொண்டோ
னிரணியனென் பேரினு னீங்கு. (௧)

தந்தை தனைத்தாழ்ந்து தானெழுந்து சாற்றுவன்சே
யந்தரரை நாஞ்சிறைசெய் தாவதென்னை—நொந்திடுமா
பாவமன்றி யாக்கமுண்டோ பார்த்திபவெல் லாமுணர்ந்தோய்
போவதுயிர் திண்ணம் புலர்ந்து. (௨)

பாரிற் புவனம் பலபோற்றிம் மாச்செல்வ
மாரிடத்திற் பெற்று யதுநினைநீ—சீரயன்மான்
மாதவரை யேவுவதூஉம் வானவரைக் காதுவதூஉ
மோதரன்ற னாற்றலா லீங்கு. (௩)

நோற்றிடுநன் மாதவத்தை நோக்கி யளவிலாப்
பேற்றினையே தந்த பிரானவற்றை—மாற்றிடுவ
னன்றிசெய்தார்க் கின்ன னவிற்றுவரேன் மற்றவரைக்
கொன்றிடுமஃ தல்லதில்லை கூற்று. (௪)

கந்தன் றனையளித்த கண்ணுதற னானைதனைச்
சிந்தைதனின் மாறுக்கொ டையரெலா—மந்தமுற்று
ரன்றிவன்மை கொண்டெய்ந்தா ராரன்று ரின்னார்தா
மென்றுரைக்க வல்லமோ வீங்கு. (௫)

காமன் றனையெரித்தான் காலன் றனையுதைத்தான்
பூமன் சிரத்திலொன்றைப் போக்கினான்—மாமன்
தனையடர்த்தான் றோலுரித்தான் சந்திரனைத் தேய்த்தான்
வினைவிலைகொ லாங்கவற்றை வேட்டு. (௬)

எத்தனையோ விவ்வா றியற்றியுயிர்க் கின்பளித்தா
னத்தனையுஞ் சொல்லலரி தாதலா—னித்தனையே
சார்ந்தவருய் வாரல்லார் சாகுவர்நூல் கூறுநீ
யோர்ந்தறிதி யெந்தா யுகந்து. (௭)

இன்னமுமொன் றெந்தா யியம்புவேன் கேட்டிவன்மை
தன்னிலுமேம் பட்டார் தமைநெருங்கா—ரன்னதன்றி
மன்னு வரமளித்தோன் மைந்தனொடு நீபொருதா
லுன்னுவய முண்டோ வுனக்கு. (௮)

அண்டமுற்றும் பல்வளனு மாருயிரு மூவருஞ்சேர்
மண்டலனைத்து மாகியதன் மாமேனி—கண்டிடவா
னட்டினார் தங்கட்கு நாடரிய யாவையுமே
காட்டினான் கந்தனென்பர் காண். (௯)

மறையவனை முன்னமொரு வைகறனை யிட்டுச்
சிறைவைத் துலகளித்துச் சீர்சா—லிறைவனன்று
னுய்கையிற்பின் வேண்ட வுகந்துவிட்டா னென்பரவ்வேள்
செய்கைவியப் பாங்கேட்கிற் றேர்ந்து. (௧0)

வானவர்கோன் மாமலரோன் மாநிறத்தோன் மன்குறைதீர்த்
தானபெரும் வேட்கைநல்க வங்குழவி—போனளின
வாறுமுகங் கொண்டா னரன்றனே யென்பதல்லால்
வேறுசொலற் கில்லையதன் மேல். (௧௧)

பன்புயமீ ராறுடையான் பானுப் பகைசூழ்வாற்
றன்படைஞர் மாய்ந்த தகைவினவிப்—பின்பவர்கண்
மீளுவான் வீரைமேல் விட்டவே லிங்குவிடின்
மாளுவா ராரும் வதைந்து. (௧௨)

தாரகனை மாய்த்ததென்றாற் றாழ்வரையைச் சாய்த்ததென்றால்
வீரையின்க ணுய்த்தவரை மீட்டதென்றாற்—சீருடைய
கூர்பொலியும் வேல்போற்றிக் கோமான்றாள் சார்வதல்லாற்
போர்புரிவி னுண்டோ புகல். (௧௩)

சேர்ந்தனெற்றார்ச் சீரழித்துச் செங்கதிரோன் றெவ்வினைவென்
றூர்ந்தருவர் தானையட்டெம் மண்ணன்மா—லேய்ந்தபடை
வீரையுய்ப்ப மீண்டயிலான் மேவுனகர் வீப்பனென்றால்
யாரவனை வெல்வா ரெதிர்ந்து (௧௪)

ஆனவொரு வேலா லழியுமிந்த மூதெயில்சூழ்
மாநகரந் தானவரு மாள்வரென்னில்—வானவரு
ளாதியந்த மில்லா வறுமுகன்போர் முன்னிவரி
னேதுலகும் வீயு முலைந்து. (௧௫)

கந்தவேள் வந்தெதிர்க்கிற் காருருமு வீழ்வரைபோ
னந்தம் வரம்படையே ணற்றிருவஞ்—சிந்து
மிருணைவா னெற்றனையுய்த் தின்றனவு நம்பாற்
கிருவைா புரிந்திருந்தான் காண். (௧௬)

கருணைகொண்ட வத்தன் கருத்திடைவெஞ் சீற்றம்
வருமுனும்பர் வன்சிறையை மாற்றி—யருளுடையான்
பாத மிறைஞ்சிற் பரிந்தகல்வா னுமுய்து
மீது துணி பென்றனன்சே யேய்ந்து. (௧௭)

அன்பிற் றனக்குறுதி யாய்ந்துரைப்பச் சீற்றமுறீஇ
மின்புரைவேற் சேயொருவன் வீரமொடு—தன்புடையா
ரொற்றனெறும் செய்வனயா ளேதிங்கின்று யீதனக்குச்
சொற்றனரார் சொல்லடுவேன் சூழ்ந்து. (௧அ)

எண்கணன்முற் றேவரெலா மேவற் பணியினின்று
ரெண்கணனே டேய்மகனே வேணுழிப்பா—னெண்குணனு
மீசனே ரேற்றிடினு மென்னைவெல்லான் முன்னைவா
நீசற்று மோர்கிலாய் நேர்ந்து. (௧௯)

ஆற்ற விழுந்தா யாசினிலை நீஙகினு
யேற்ற குலத்தி னியல்பிழைத்தாய்—மாற்றலருக்
கஞ்சிநவின் றுயல் தறைவையே னின்னைவல்லை
வெஞ்சமனூர்க் குய்ப்பனென்றான் வேந்து. (௨0)

நஞ்சொலிவர்க் கிறுறலா னஞ்சா யதுதாதை
துஞ்சுமுன் யான் றுஞ்சலே சூழ்ச்சியெனு—வஞ்சன்றாள்
வான்முடிப்பன் மாமணிகள் வைத்திறைஞ்சி வஞ்சினத்தை
யான்முடிப்ப னென்றனன்சே யீங்கு. (௨௧)

முன்மருவார்க் கஞ்சினைபின் மொய்ம்புற்று யென்னெனச்சூ
ருன்மகனு னஞ்சுவனோ வோவென்றான்—மன்மகனைப்
புல்லிநன்று நன்றுன் பொருதானை யோடெழுந்து
செல்லுதியென் றன்பெயர்ந்தான் றேர்ந்து. (௨௨)

தன்மனையுட் சென்று தமனியமா மெய்யதனின்
மின்வச் சிரகவயம் வேய்ந்துபுட்டில்—பின்செறித்தான்
கூற்றெனும்வில் லேந்தினன் கோமுடியிற் றும்பைகொண்டா
னேற்றிரதத் தேறினு னேய்ந்து. (௨௩)

ஆற்ற லுறுதுணைவ ராயிரரு மாரணிகம்
போற்றுமன்ன ராயிரரும் போர்க்கோல—மேற்றுவெய்ய
காற்று மெனப்படர்மாக் காற்றே ரிடைக்கலந்து
நாற்றானை யோடுசெல்வார் நன்கு. (௨௪)

எண்ணூறு வெள்ளந்தேர் யானையற்றே நானூறே
டெண்ணூறு வெள்ள மிவுளியனைத்—தெண்ணூறு
செய்யவுணர் நின்சேனை செல்வன் படைசூழ்ந்த
வெய்யமருத் தென்ன விரைந்து. (௨௫)

பேரிதுடி காளம் பிறங்குவளை கோடுமுதற்
றாரியங்க ளார்ப்பத் துவசம்விண்—ணூரா
வுறந்தலைக்கொள் பொன்னே னனிகமொடு பேர்ந்து
பறந்தலைக்கண் புக்கான் படர்ந்து. (௨௬)

தன்மா நகரழிவு தான்கண் டிளைர்துசினர்
தன்மாத் தலைவரைப்பார்த் தெவ்வொருதிக்—கென்மாத்தி
ஆயிரம்வெள் ளந்தானை யாக்கிநீர் பூதரைச்சூழ்
மேயிகல்செய் வீரென்றான் வேந்து. (உள)

வன்றலைவர் மாத்தனைவர் மாதிரங்க டோறுமே
சென்றபொழு தாடகன்மேற் றிக்கிலுறு—மன்றனிக
முன்கொடுசென் றானிதனை மொய்ம்பன்கண் டையுற்றான்
றன்கொடிய ஞர்கொளெனச் சூழ்ந்து. (உஅ)

நாரதன்சென் றையன்மு னன்றிரணி யன்றனைவெஞ்
சூரனிங்க னேவினன்பல் சூழ்ச்சியுளான்—றேரவனை
யெய்திவெல்வார் நீயலா தில்லைநினக் கேய்ந்தவமர்
செய்தியா லென்றகன்றான் சேண். (உகூ)

நன்றென் றுறநகையா நற்றலைவ ரைப்பாராத்
துன்றனிக மோடுநமைச் சூழுவான்—மன்றனய
னெல்லிருமெண் டிக்கினும்போ யேய்ந்தபடை யோடடைந்து
மல்லிகல்செய் வீரென்றான் வாகு. (௩0)

மன்னெண் மரையிலக்க மானவரைப் பாரிடரைப்
பன்னுவகை நான்கு படப்பகுத்தே—யுன்னெ
ணிருமா திரம்படர வேவிவெஞ்சூர் மைந்தன்
வருமா திரம்படர்ந்தான் வாகு. (௩க)

அன்ன பொழுதி லவுணப் படைகடல்போற்
றன்னியொரு நாற்றிசையுஞ் சூழ்தந்து—மன்னியே
யோலமுடன் வந்தனுக வுற்றுருத்து வெம்பூத
சாலமெலா மேற்ற சமர்க்கு. (௩உ)

வல்லவுணர் நாஞ்சின் மழுநேமி சூலம்வார்
வில்லுமிழ்வெங் கோல்கள் விடுத்தார்த்தார்—கல்லு
மரமுங் கதைகணிச்சி வான்படையும் பெய்தா
ருரமன் கணவ ருருத்து. (௩௩)

தலையிழந்தார் தோளிழந்தார் தாளிழந்தார் தங்க
ணிலையிழந்தார் தேரிழந்தார் நேருங்—கொலையிழந்தார்
நெய்த்தோரின் மூழ்கினார் நீள்புயனும் வாளரசு
மெய்த்தோரிற் பல்லோ ருடன்று. (௩௪)

இவ்வெல்லை வீர னிரணியன்மாத் தானையைக்கண்
டெவ்வமுற வில்வளைஇ யேவயுத—மவ்வுகந்தீர்
காலந் தனிலே ககனத்திற் பெய்மேக
சால மெனப்பொழிந்தான் றன். (௩௫)

எறிதருவெஞ் சூறையா லெண்ணில்கோ டிற்று
முறிதந்து வீழ்பொழில்போன் மொய்ப்ப—னொறிலே
செறிவுற்ற வங்கஞ் சிதைந்துவே றாகி
மறிவுற்ற தானை வதைந்து. (௧௬

யானைபரி காலாள்வெற் பேய்ந்துதந்தங் குந்தமுந்திச்
சேனை வளையெறிந்து செவ்வாளை—மீனினுறச்
செந்நீ ரிருநதியாச் சென்றுவரி யுட்கலந்து
தன்னீர்மை காட்டியதே தான். (௧௭)

குரைக்கும் ஞமலியுங் கொன்னரியு மாட்ட
முரைக்குங் கவந்தமோ டுற்ற—செருக்கி
நிணமுண்டு காளி நிலவு முலவுங்
கணமுண்டு கோடி களம். (௧௮)

வில்வலனிவ் வாறு விடுகணையின் மாரியான்
மல்கவுணத் தானை மறிந்தகண்டு—வெல்வகையி
னாயிரமாங் கோல்விடுத்தே யாடகன்மாக் கூளிகளோ
ராயிரமாங் கோடிகொன்றா னாங்கு. (௧௯)

கோலமுறு பூதக் குழாங்குலைந்த தன்மைகண்டு
நீலன் கனன்றுமன்சேய் ரேர்சென்று—சால
வுருமன்ன வார்ப்பவெய்யோ னோரயின்மார் புய்த்தான்
றருவினவன் றேர்தடிந்தான் றான். (௨௦)

வையமழி வெய்தவெய்யோன் மற்றொருதேர் மேற்றாவிக்
கையுறுவில் வாங்கிக் கடைநாளிற்—பெய்யுமையிற்
கொன்வடிக்கோல் பெய்தான் குலகிரியை விட்டுமற்ற
மன்வரையைத் பேர்தெறிந்தான் மன். (௨௧)

நீல னெறிவரையை நீள்கணையான் மாற்றவெய்யோன்
காலுறுதேர் தன்னைக் காத்தெறிந்தான்—சீலனிவ
னிற்றியென வன்னா னிறத்தெற்ற மன்னறிந்தா
னொற்றினன்றா னிற்பூத னேற்று (௨௨)

வீழ்ந்தவனை நீலன் வியன்றாள் கொடுமிதிப்பப்
போழ்ந்தஙக நெய்த்தோர் பொழியவின்ன—லாழ்ந்தயர்ந்து
தேர்வுணர்வி றீயனினிச் செய்வதென்கொ லென்றுறுதி
யோர்வுணர்வி னுன்னினா னொன்று. (௨௩)

மாயமொன்று செய்துமெனா மந்திரமா பூசையெலாந்
தூயமனத் தாற்றித் தொழத்தெய்வ—மாயவெல்லை
தன்போ லொருவடிவந் தான்பல் படைபரியா
வண்போர் புரிவான் வரும். (௨௪)

கண்டா னதனைக் கடிதி னெதிர்நடந்து
தண்டகாலதன் றலையிற் றாக்கினான்—விண்டாவி
னேர்மீ துறக்கண்டா னீலன் செலமறைந்து
பார்மீ துறக்கண்டான் பாங்கு. (௪௫)

கண்டலமந் தீது காவென் றுணர்ந்துசினங்
கொண்டா னுவஃதுங் குறுகியே—மண்டலஞ்சூழ்
பார்புகும்விண் செல்லுமுன்பின் பால்வரும்போ ராற்றுமெனி
லார்புகல்வா ரன்னதியல் பாய்ந்து. (௪௬)

மாய வுருத்தொடர்ந்து வன்பிழந்தான் றுன்புழந்தான்
மாய வுருப்பலவா மன்னவிது—மாயமெனு
நீலன் றெளிய நிருதனோர் வில்வளைஇக்
கோலநிதந் தூர்த்தான் கொதித்து. (௪௭)

கனகன்செய் மாயமொடு கார்நீலன் சோர்வு
மனகன் றுணைவன்கண் டார்த்துத்—தனுவின்க
ணணிமெளலி கோடலும்மே நாற்றிசையுங் கார்த்தருவ
காணினிரிந் தேகினார் நைந்து. (௪௮)

சேயைமிகப் போற்றிவல்லோன் சேதனமாத் தொல்படையை
மாயைமிசை யுய்ப்பவது மாய்ந்திமைப்பிற்—போயதுநற்
றாயைநிகர் வண்மறைசைச் சற்குருவைக் கண்டளவின்
மாயையிரி கின்றமைபோன் மற்று. (௪௯)

போந்தவெல்லைப் பொன்னோன் புகைந்துதன்வில் வாங்கியே
யேய்ந்தகணை யோரா யிரம்விடுத்தா—னந்திறன்மார்த்
தாண்டன்முன் வெற்புரத்திற் றாக்கநண்டே ளாருதலைச்
சேண்டலத்தோ ரார்த்தார் தெரிந்து. (௫௦)

வீரமொய்ம்ப னாறுகணை விட்டே யிரணியன்ற
னருங் கொடிவில் லரணைக்கக்—கூருமவன்
சீற்றமொடு வேறோர் சிலையெடுப்ப வாயிரங்கோன்
மாற்றலன்மே லுய்த்தான் மறுத்து. (௫௧)

விட்டகணை யாடகன்றன் வில்வலவன் றேர்படுத்தே
யட்டுநிறம் பஃறுளைக ளாக்கமற்றோர்—தட்டுடைநற்
றேரிலெய்த வீரனைத் திக்கணையா லட்டிடமன்
பாரிலெய்தி யற்றான் பலம். (௫௨)

வேறுபின்சூர் மைந்தன் மிளிரிரதம் யாவுமே
நூறுநூ றம்புகளா னூறியே—யீறு
தாவெனக்கீ றெய்தியது தாதையருஞ் சாதல்
சாத மெனநினைத்தான் றான். (௫௩.)

சென்ற பொழுதுகடன் செய்வா ரெவருமிலை
மன்றமரு மாய்வுற்றார் மற்றவரும்—பொன்றறிண
மின்னுறுதி கூறினுமுள் ளோரு விறைமுடியு
முன்னிறுவே னென்றெணுவான் முன். (டுச)

ஐயனினித் துஞ்சி னருங்கடன்க ளன்பினொடு
செய்யமைந்த னில்லையெனுந் தீயவசை—வையமுறு
மைந்தனைப்பெற் றோம்பி வளர்ப்பதத்த னந்தமெய்தி
னுந்துகட னாற்றுதற்கே யுற்று. (டுடு)

போரின் மடியிற் புகழுண் டிறந்திலனே
லேருடலந் தாங்கியுய்ந்தா னென்னவசை—சாரு
மெனக்கெய் திடினுமஃ தெய்துகமன் றுதை
தனக்கெய்த லாமோ தகாது. (டுசு)

உன்னியுயிர் போத லுறுதியெனத் தேர்ந்துமுகி
றன்னிடைப்போய்த் தேமந் தணமுன்னி—மன்னருவா
யாருந் தனையறியா தாழியினுட் போயினன்மின்
கூருந்தண் மீன்வடிவங் கொண்டு. (டுஎ)

இரணியன்செய் மாயமென வேய்ந்தகங்கு னீஙகப்
பரனளித்தோன் ஞானப் படையிற்—றரணியெய்தச்
சூர்மகன்போ யார்கலியிற் றன்னினமை போன்மறைந்தான்
பார்மகிழ்கொள் சோமன் பரிந்து. (டுஅ)

நீங்குமன் சேய்கடல்செ னீர்மைகண்டு வெண்சங்க
மோங்குமொய்ம்பன் வாயிடைவைத் தூதிடலும்—பாஙகமரும்
பூதர் புகழ்ந்தார் புலவர்கள் பூமழைபெய்
தோதருநன் காசிசொற்று ரூற்று. (டுகூ)

நின்றவய வீரரொன்னார் நீள்படையைப் பொன்றுவித்தார்
மன்றனகர் சென்றெற்றார் மன்றனைத்தாழ்ந்—துன்றனய
னிங்கிகலிற் றோற்றகன்று னென்றலுஞ்சூ ரேங்கிநின்று
னங்கிமுகச் செம்மலுற்ற னங்கு. (சு0)

இரணியன் யுத்தப்படல முற்றிற்று.
ஆக திருவெண்பா டுடுசு.

---

## அக்கினிமுகாசுரன் வதைப்படலம்.

---

எண்டிசையு ளானா யிபத்தையென்றைத் தேர்மாவைக்
கொண்டுவந்து வட்டாடு கொள்கையுளான்—மண்டுமெரி
மன்முகவன் மாலயனுர் வன்புள்ளை யாடுறுவான்
முன்கொணர்ந்த மொய்ம்புடையான் முன். (க)

செங்கதிரை முன்னோன் சிறையிட் டதுவினவித்
திங்கடனைப் பன்னாட் சிறைவைத்தோ—னங்கையிற்
றெய்வப் படையுற்றோன் செய்வஞ் சனைகற்றோ
னவர்க் குளவிகலோ ரிங்கு. (௨)

தந்தைதனைத் தாழ்ந்து தழன்முகத்தோன் றாதாய்நின்
சிந்தைதளர் வுற்றதன்கொல் செப்பென லு—நொந்தறைவான்
மாயைகொடு வானவர்கா வந்திநகர் வன்னிவைத்தான்
றீயைமுகில் கொண்டவித்தார் சேர்ந்து (௩.)

அன்னதுகண் டார்த்துமுன்றே யாளிமொய்ம்ப னூழித்தீ
யன்ன வனற்படைவிட் டங்கடிந்தா—னன்னதுகேட்
டாடகனை விட்டா மவனுமமர் செய்துடைந்தான்
பீடளிகச் சேனையட்டான் பேர்ந்து. (௪)

இன்னவெஞ்சூர் கூற வெரிமுகவன் சீற்றமுற்று
மன்னமிடற் றாதுவனை மற்றவரைத்—துன்னமரில்
வென்றுவரு கின்றேன் விடைதந் தருளுவா
யென்று நவின்றா னினிது. (௫)

நன்றென் றவன்விடுப்ப நன்கிறைஞ்சி நன்னகர்போய்க்
குன்றநிகர் தோளான் குலவரைபோற்—றுன்றுமொரு
சாலிகைமெய்க் கொண்டுபுட்டில் சார்விரலிட் டான்கொண்டான்
பாலிகல்கூர் தெய்வப் படை. (௬)

தானையுடைத் தாயுதவுஞ் சாபங்கைக் கொண்டெழிற்றேர்
மீதிர்வந்து சென்றுகனன் மேவுமுக—மேறுது
நகரின் புறமுற்றா னற்படையு மொற்றர்
பகருமுனம் வந்த படர்ந்து. (௭)

ஓரா யிரவெள்ள மும்பலினந் தேருமற்றே
யீரா யிரவெள்ள மேற்றமா—காரா
ரவுணவெள்ளஞ் சூழ்ந்துவர வங்கிமுகன் செல்வான்
புவன நடுங்கப் புகைந்து. (௮)

கேதனங்க ளாடக் கிளர்மணித்தேர் செல்காட்சி
பூதரங்கண் முன்னியல்பிற் போதலொக்கு—மாதங்க
மும்மதங்கள் பெய்து முழங்கிப்போந் தோற்றநிலத்
தம்முகில்சென் மாண்பிசையு மாங்கு. (௯)

வாங்குதிரை மாத்தானை வாவியுறு மாண்புநெடு
வாங்குதிரை வாரியெழன் மானுமுயர்—வாங்குதிரை
யன்ன வவுண ரடுதொழிற்றேர்ந் தார்படையேற்
றுன்னமனை யொப்பா ருருத்து. (௰)

தானைசெலத் தண்விசும்பிற் றாவியெழு பூழிகொடி
சோனை முகிலிற் றுலங்கவொளி—யானபடை
மின்னி னிலங்கவொலி மேவிடியி னாரவுமெ
மன்னி விழுந்துளியின் வாய்ந்து. (௧௧)

சோமகண்ட கன்சோமன் சூரியன்றெவ் வாதிவிற
லாமனிக வீர ரருகுசெல—மாமன்
கதிருறுவாட் சூர்மைந்தன் காண்பூத சேனைக்
கெதிருறவே யெய்தினா னேய்ந்து. (௧௨)

பூத ரவுணர் பொருவா னெதிர்ந்தனர்விண்
மோதிடியின் பேரி முழங்கின சங்—காதிய
மார்த்தவயில் வாள்விடுத்தா ரம்பெய்தார் பல்படைக
ளேர்த்தனர்பல் லோரிறந்தார் சோர்ந்து. (௧௩)

சாரதர்வேன் மன்கனிச்சி தண்ட மலையெறிந்தார்
காரவுணர் பட்டார் கணிதமிலார்—தேரவிரச்
சிற்றபரி வேழ மிறந்த களேபரத்தை
யுற்றகொடி பேய்பா றுகந்து. (௧௪)

இருபெருமாத் தானையிவ்வா றேற்றமர்செய் வேலை
வெருவயிற்கண் மாதர் வியர்ப்பில்—வருவயவ
ரெல்லாரும் வில்வளை ததம் பெய்துமுற்ற வல்லவுணர்
நில்லா துடைந்துசென்றார் நேர். (௧௫)

உடைதலும்வெஞ் சூர்மைந்த னுய்யெனவே யுய்ப்ப
மிடைவலிமே கன்முதலாம் வீரர்—படையொடும்போய்
வீரர்மேற் போர்விளைப்ப வீர புரந்தரனுந்
தீரனெதிர் வந்தான் சினந்து. (௧௬)

வந்தனன்கை விற்குழைத்து வாளியெய்தான் றேர்சிதைத்தா
னிந்துகண்ட கன்றனைவிண் ணேற்றினன்கோன்—வெந்தலைவர்
வீரன்மேல் விட்டார் வெருண்டவர்தேர் வில்வீட்டி
யாருரந்தோ ணெற்றியுய்த்தா னம்பு. (௧௭)

காரவுண மேகன் கதைகொண்டு வீரன்றேர்ச்
சாரதியை மோதவவன் சாதல்கண்—டோரமிலா
வீர புரந்தரனோர் வேலேவக் காலனன்னான்
பாரதன்மேல் வீழ்ந்தான் பதைத்து. (௧௮)

ஆர்வயவன் மாண்டதுகண் டங்கிமுகன் சீறித்தன்
கார்முகங்கை வாங்கிக் கவின்பிறைக்கோ—லோர்கணத்திற்
பூதப் படைமேற் பொழிந்தான் சலந்தரம்போற்
சேதப் படவே தெரிந்து. (௧௯)

நிலைமுதலா மங்கந் தவவற்றார் பூதர்
மலையுறழ்தே ரற்றபரி மாய்ந்த—வலைகுருதி
யாறோ டினகவந்த மாடினபேய் பாடினவன்
பாறோ டெருவையுற்ற பாங்கு. (௨௦)

அன்னதனைக் காணா வழல்கான் றிடநகையா
மன்னமனு மஞ்சும் வலிமகவான்—றன்னுடைய
கைக்கார் முகங்கோட்டிக் காண்டமழை பெய்யவெய்தான்
மைக்கா ரவுணனுநேர் வாய்ந்து. (௨௧)

நேரிருவர் வெம்பகழி நேர்நேர் துரந்துதுரந்
தாரமர்செய் காலைவிற லண்மகவான்—றேரொடுவி
லாவஞ் சிதையாது றம்புரத்தி லெய்தவுண
னேவருமே போற்றநின்றா னேய்ந்து. (௨௨)

மாறவுணர் கோமான் வலியுந் திறன்மகவான்
வீறழிவுங் கண்டுதுணை மேவெழுவர்—சீறிவல்வில்
வாங்கியொவ்வோ ராயிரங்கோன் மாமுகங்கை மார்பமெய்
தாங்கனையான் றேருமட்டா ரார்த்து. (௨௩)

மற்றொருதேர் மேலிவர்ந்து வல்லைப்போய்ச் சீற்றநனி
யுற்றெழுவர் தம்மையும்பார்த் தோர்படையிற்—றுற்றநும்மெ
யொன்றுயிரைத் தென்றிசைக்குய்த் துன்வீர வாகுவையுங்
கொன்றிடுகின் றேனென்றான் கோன். (௨௪)

என்றளவில் வீர ரிருங்கணைவெவ் வேறுய்த்துத்
துன்றுகொடித் தேர்மா தொலைத்தனர்பின்—குன்றனையான்
வன்படைமெய் நூழைசெய்தார் மற்றொருதேர் வாவியுமை
மன்படையர்ச் சித்துவிட்டான் மன். (௨௫)

அங்கி முகன்விடுத்த வாதிபடை பார்விசும்பு
மங்கும் வடவையுரு வாய்வாலுந்—துங்க
வெழுவருந்தீ நோக்குறப்பார்த் தேய்ந்ததற்கு மாறா
விழுநீர்ப் படையுய்த்தார் வேர்த்து. (௨௬)

தூண்டுபடை விண்ணிற் றொடரா வான்படைதா
னுண்டெதிரா யாரவற்றை யண்மிநுங்கிச்—சேண்டியங்க
மாவலியிற் போயேழ் வயவர் தமைவருத்தி
மேவுயிர்கொண் டேகியது மீண்டு, (௨௭)

மீண்டதனல் வெம்படையேழ் வீரங்கன் வீந்துநெடு
சேண்டயங்கு கைலையின்பாற் செல்லவது—காண்டலுமே
யார்த்துமகிழ் வுற்றா னவன்பூத ருண்ணடுங்கி
வேர்த்திரிந்து சென்றார் விரைந்து. (௨௮)

ஆரமரில் வீரர்சே ரார்ந்து விளிவதூஉஞ்
சாரதர்க டாமுலைந்து சாய்வதூஉம்—வீரமொய்ம்பன்
கண்டழன் றஞ் சன்மினனுக் கையமைத்துத் தேரொடுதீ
மண்டுமுகன் முன்படர்ந்தான் வாய்ந்து. (உகூ)

சென்றணுகத் திண்வீரன் றீமுகவன் சீறியே
வன்றிறல்கொள் பூதரொடு மற்றவரை—நன்று
மதியே னிவனோடே வந்தனனிங் குன்னை
விதியே விடுத்ததென் முன் வேட்டு. (௩௦)

பல்லோர் தமைக்கொன் றாய் பல்லோர் தமைவென்றாய்
வல்லோய்நின் மன்னுயிர்க்கு வந்ததந்த—மல்லோர்ந்து [னன்
முன்பொருத மொய்ம்பிலர்போன் முன்னலையென் றன்னைமன்
கொன்கழன்முன் வைப்பனின்கங் கொய்து. (௩க)

நல்லார் புணர்ச்சியெனும் ஞாட்பினிலே னற்றழியும்
புல்லான் மகனலனோ போரின்கண்—வில்லா
ருனையா னிவண்வென்றி யுற்றிலனே லென்றான்
முனையார் புயனவில்வான் முன் (௩உ)

இரணியன்முன் போர்செய் திரிந்து கடல்புக்கான்
முரணியநீ யுய்குதியோ முன்னோர்—மரணமுற்றார்
மேவியினன் றெம்மீண்டான் வீவ னவனுநீ
யாவி யிழக்கவந்தா யார்த்து. (௩௩)

வீடிக் கடுஞ்சமரில் வீகுதியோ பேடிபோ
லோடிக் கடலகம்புக குய்குதியோ—நாடிச்சொல்
சூர்காக் கினுநின்னைச் சூழ்ந்துபலர் காக்கினுமற்
றார்காக் கினுமடுவே னார்த்து. (௩௪)

என்றின்ன வீர னிசைத்திடலுந் தீமுகவன்
குன்றன்ன சீற்றங் கொடுசென்று—தன்றனுவை
வாங்கிநா ணேற்றைக்கொண்டான் வானிலமெ லாம்பனித்த
வேங்கினார் வானோ ரிரிந்து. (௩௫)

வீரனது போதெழிற்றன் வில்வளைஇ யோதைதரச்
சாருமய னாதியர்க டாந்துளங்கப்—பாரிறுநா
ளின்றெனவே யங்கிமுக னீரேழ்கோ லேவவவை
பொன்றவுய்த்தா னத்துணையே போந்து. (௩௬)

ஈரைங் கணையவுண னேவவிரு பான்பகழி
வீரன் விடுத்தார்ப்ப வெய்யவன்சீர்—கூரிளவன்
முண்டமுற வாயிரங்கோன் முன்னுய்த்து வால்வளையை
யண்டமிற வூதினா னாங்கு. (௩௭)

சீராரு மேவுந் திறன்மொய்ம் பிணைங்க
ஞோரா யிரம்வாளி யொன்றவுய்த்துச்—சூான்சேய்
தோசுவம் விற்சிலைதத்தான் றீயஞெரு தண்டுவிட
வீர னதைத்துணித்தான் வேர்த்து. (௩௮)

கோமகன்கால் கூற்றனலி கொண்டடைக ளூழினுய்ப்ப
வாமுறையவ் வப்படைவிட் டன்னகடிக்—தேமமுரு
வன்னிறத்த பாந்த ளவிர்விட.க்கோ னூறனையன்
மன்னிறந்தி லுய்த்தனன்றின் வாகு. (௩௯)

மன்னகலத் தூற்றிடலும் வாரிகடை மத்தெனவே
மின்னகலப் பொற்றேர் மிசைவிழுந்தான்—றன்னூாகின்
ரூற்றி னெருலைவசென்ற தாருயிர்போய் மீண்டுலவுங்
கூற்றுமச்சங் கொள்ளுங் கொளற்கு. (௪0)

விளிந்தா னெனக்கிடந்தான் மின்றேர் மிசையே
தெளிந்தா னரவினயர் நெஞ்சந்—தெளிந்தான்பின்
மன்னகரின் முன்னாள் வழிபட்ட காளிதனைத்
தன்னகத்திற் சிந்தித்தான் றாழ்ந்து. (௪௧)

கருமஞ் சனமாக் கயல்விழியா ணீருண்
குருமஞ் சனமாக் குழலா—ளருமஞ்சுந்
தீங்கரும்பு செப்பினாள் செங்கையாள் கொங்கையாம்
வீங்கரும்பு செப்பினாண் மின். (௪௨)

அமையம் புயத்தா ளணிசதங்கை தண்டை
யமையம் புயத்தாளா ளாலோ—னமையுறவே
யஞ்சுவண வத்திரத்தா ளாளியன்ன நுண்ணிடையா
ளஞ்சுவண வத்திரத்தா ளாம். (௪௩)

சூலமொன் றேந்தித் துலங்குறுமின் பூத்தமுகில்
போலவரி மேலிவர்ந்து போர்க்காளி—பாலிற்
படைகொடிகள் கூளிகொளப் பல்காளி சூழ
வடையியங்க ளார்ப்பவந்தா ளாங்கு. (௪௪)

தாமன் பறந்தலைக்கண் டுன்னி விழுந்தயருந்
தீமுகனை நோக்கித் திறலொன்றூர்—தாமெலிய
வாருயிரை யுண்பனீ யஞ்சேலெனவமைத்தாள்
கார்ருருவக் காளியிருங் கை. (௪௫)

இன்ன வகையருளி யேந்தல்பாற் சூழ்பூதர்
மன்னனிக மேலமர்செய் வானாாத்தத்—துன்னலைவைய
காற்றூர் கடலிற் கலித்துக் கணவர்வேர்த்
தேற்றூ ரினையவிண்டுன் பேய்ந்து. (௪௬)

காளிகள்வேல் சூலங் கணிச்சி கணைவிசிறார்
கூளிகள்வெற் பாழிகைதை கொண்டெறிந்தார்—மூளிகலி
லேவரையு நீறுசெய்கென் றேய்கழுமு ளேவினளப்
பாவையருள் கொள்காளி பார்த்து. (௪௭)

உய்த்தகழு முள்ளனல்கான் றன்னரும்பல் காளிகளின்
மைத்தவுருக் கொண்டுசெல வாருகண்டே—யித்திறத்த
தேவரையும் வீக்குமென்றோர்ந் தீரேழ் கணைவிடுத்தான்
மேவதனைக் கண்டதூண் மேல். (௪௮)

அன்னதுகண் டென்னிலைமை யாய்ந்திலன்கொல் வீரனவ
னின்னுயிரை யின்னே யிறுதிசெய்வ—னென்னமுந்தி
முன்னெறிந்த சூலம்போன் முன்னலைவே லுண்டதுகொண்
டின்னுயிரை வீப்பனென்றா ளுற்று. (௪௯)

என்றலுமெண் ணில்கழுமு ளேவினுநின் றீறுசெய்வன்
மன்றிறனீ தேர்ந்திலாய் மாதென்னக்—கன்றிமன
மற்றுமா சூலமுய்த்தாள் வல்லைவிண்ணோ ருண்மெலிந்தா
ரற்றறிந்தான் வீர னழன்று. (௫0)

துன்று யிரங்கணை தூய்ச் சூலந் தனைத்துணித்தா
னன்றாள் வெகுண்டவன்ற னாவிகொள்வ—னென்றுவா
ளொன்றொடெதிர் காளி யுரத்தடித்தான் வீரர்கோன்
குன்றெனவே வீழ்ந்தாள் குலைந்து. (௫௧)

காளியினெண் கையையுமோர் கைக்கொடுமற் றோர்கரத்தான்
மீளியுரத் தெற்றலுமே மேவண்ட—கோளமிற்ற
வாரியினெய்த் தோர்பரவ மன்னுணர்வுந் தான்றமுன்போற்
சூரி விழித்தா டுயர்ந்து. (௫௨)

மானவன்றன் மார்பிலெற்ற வன்பிழந்து வீழ்ந்தவச
மானதுன்னி நாணடைந்தே யந்தமில்செவ்—வேளெம்பி
யுந்தவந்தோ னேடுபொரி னுண்டோ வுறுதியெனுச்
சிந்தனையுள் செய்தெழுந்தா டோர்ந்து (௫௩)

இகழ்ந்தா ருரங்கிழிக்கு மெண்கிளர்மா காளி
புகழ்ந்தாள் விறலோனைப் போற்றித்—திகழ்ந்தார்தீ
யானனனின் றென்னையர்ச்சித் தாவிப் பலிநல்க
நானிவண்வந் தெய்தினே னன்கு. (௫௪)

உன்னுறழும் வீரமுநன் குய்த்தணரா தேற்றமரி
லின்னிலைமை யானே னினிச்செல்வே—னென்னிருக்கை
தீமுகனைச் சேர்ந்தவரைச் செங்கதிரோன் றெவ்வினையு
நாம மறவடுதி நன்கு. (௫௫)

ஒன்னலரை வென்றருக னுள்ளருள்பெற் றேகையுநீ இ
மன்னுறநீ பல்லூழி வாழ்தியிவை—பின்னுணர்தி
யென்றிசைத்து வீர னிடைவிடைகொண் டேகினு,
னொன்றமையை சூழனிகத் தோடு. (௫௬)

சண்டிகைசெல் காலைத் தழன்முகவ னன்னவெலாங்
கண்டனனன் றென்னுக் கனன்றருமுக்—கொண்டலெழுந்
தாங்கெழுந்தங் நாளமரி லாம்வயமெ லாங்காளி
யோங்கெறும்கொண் டோபெற்றே னுற்று. (௫௭)

சூலமழு வாள்கொண்டு சூர்கூளி சூழவைகு
நீலிவன்மை காண நினைந்தழைத்தேன்—வேல
னிணையில் படையைவெல்லு மென்றுளங்கொண் டேனே
துணைகொளுமோ சூரன் சுதன். (௫௮)

மன்னுகள மொன்றின் மருவிளவ லாவிவெளவி
முன்னகன்ற வொற்றன் முரண்கொடுயிர்—தன்னமற்கு
வெஞ்சினத்தி னீவனல்லால் வேந்தன்முன் போவதில்லை
வஞ்சினமிஃ தேயென்றான் மன். (௫௯)

கனன்முகனிம் மாற்றங் கரைந்திரத மேறித்
தனுவளைத்து நூறு சரந்தூய்—நனியார்த்தான்
வீரனது கண்டுதன் றிண் விற்குழைத்தம் மானவம்பாற்
காரவுணன் கோலறுத்தான் காய்ந்து. (௬௦)

வல்லசுரன் செய்நூறு வாளிகொடு தோழித்தான்
வெல்லனலம் பீரேழ் விடுத்தவன்கை—வில்லிறுத்தான்
வெய்யனிவற் கொல்வனெனும் வெய்யமொழி கூறிமல
ரையன் படைதுரந்தா னார்த்து. (௬௧)

வீரனது கண்டு விரைந்துளர்ச்சித் தூக்கிரனும்
வீரன் படையெடுத்து விட்டளவி—ஞரணன்றன்
மைந்தன் படைநடுக்க மன்னித்தாழ்ந் தாருநகை
தந்திடவே கிற்றே தளர்ந்து. (௬௨)

வேதன் படையழிய வீரன் படையேகிக்
காதகனுந் தீமுகன்மெய் காய்ந்துயிர்கொண்—டோதமரர்
துன்னித் தொழுந்தகைய தொல்புகழ்கொள் வீரனிட
மின்னிற் படர்ந்தன்றே மீண்டு. (௬௩)

வெய்ய வனன்முகவன் வீந்துவிழுந் தானதுகண்
டையனைவிண் ணோர்வாழ்த்தி யார்மலர்தூய்—கையிற்
றுகில்வீசி யாடினார் சூர்மகன்மா வீர
னிகல்புரிவா னெண்ணினு ரேற்று. (௬௪)

தெம்மூ வெண்ணுயிராங் தீரான்னல் பாற்சூழ்ந்து
வெம்மாப் படைசொரிந்தார் வீரன்வில்—லம்மா
குனித்தா யிரநூறு கோடிகளை யெய்தான்
பனித்தா ரவுணர் பதைத்து. (௬௫)

எறிந்தபடை யெய்தபடை யிற்றநிற மேண்டோள்
செறிந்தகரந் திண்கால் சிரங்க—டறிந்தவெய்யோர்
தந்தலைவர் வீந்தனர்தேர் சாய்ந்தகரி மாவீழ்ந்த
வெந்தகுவர் மாய்ந்தார் மெலிந்து. (௬௬)

கூறுபடு மங்கக் குவட்டிழிந்து செல்லருவி
வீறுபடும் யானைபரி வெவ்வவுண—ரூறுபட
வீர்த்தலைதந் தேறுநீ ரெய்தியவ ணுர்பருமீ
ணுர்த்தயிலக் கொண்டுய்த்த தாங்கு. (௬௭)

வெங்களிறு மாதேர் விரைவாளை மேவலர்க
ளங்கமுறு வெண்கோ டவிர்ந்து—பொங்கப்
பயமுற் றலைவார் படியுற் றிருநீர்க்
கயமொத் ததுவே களம். (௬௮)

வேலையுற்று வாங்குதிரை மேவியிருங் காண்டமன்னிச
சேலையுற்றுப் பன்மணிக டேசுறீஇ—மாலை
கருதமா வங்கமரீஇக் காண்டப மேய்ந்தும்
பொருகளமா வாரி பொரும். (௬௯)

உரமா ரவுணரெலா மோரிமைப்பின் வீரன்
சரமாரி யாற்சிரந்தோ டாணீள்—கரமார்பம்
போழ்ந்திறந்தார் பல்லோர் பொருகளத்திற் செந்நீரி
லாழ்ந்திறந்தார் சில்லோ ரயிழ்ந்து. (௭0)

ஞாளி யொருபா னரியொருபாற் பேயொருபாற்
கூளி யொருபாற் கொடியொருபாற்—காளி
யொருபாற் களேபரத்தை யுற்றயிலார்ப் பேய்க்கும்
வருபாற் கடலமுதுண் மாண்பு. (௭௧)

பருந்துகொடி வானிற் பறக்குநிழல் வானி
யிருந்து விலாங்கியிர வின்னு—னருந்திமகார்
சுற்ற மொடுகளித்துச் சூழ்ந்தாடிப் பாடினவே
செற்றமுறு பேய்கள் செறிந்து. (௭௨)

இந்தநிணை மிக்குருதி யித்தடிக ளெப்பொழுது
மெந்த விகற்களத்து மெய்திலமென்—றுந்துதிறல்
வீரமொய்ம்பு தன்னை வியந்து புகழ்ந்தனவே
கோரமுகக் கூளிக் குழாம். (௭௩)

அங்கனது போழ்தத் தமராடன் முற்றியே
செங்களமார் செம்ம றிருமருங்கி—லெங்கணுமாய்
நீங்கிலக்க வேந்தரொடு நீளுருக்கொள் பூதருமே
யாங்கலக்க மற்றுவந்தா ரார்த்து. (௭௪)

வெங்கணையால் வீழ்ந்துலந்த வீர புரந்தரன்று
ஞங்கெழுந்தோர் பாலடைந்தா ளருந்தன்—பாங்குநிற்க
வேணு ரிளையோ ரெழுவர் தமையுமையன்
காணான் கவன்றான் கடிது. (௭௫)

மல்விளைக்குந் திண்புயத்தோன் மன்னிளையோர் தன்னெழுவர்
வெல்விறலார் போரிலெங்கன் வீந்தனர்கொல்—சொல்விரொன
வுக்கிரன்சொல் வானவரை யொண்சூர் மகன்கொன்றான்
கைக்கொண்டான் காலனுயிர் காண். (௭௬)

பனும்யோ சனையைம் பதிற்றிரண்டின் மேலான்
மனவோங் கனிளையோர் மாய்ந்தா—ரெனவினவி
மிக்கான் விழுமநோய் மேவியங்க ணேகினான்
றொக்கார் படர்தரவே சூழ்ந்து. (௭௭)

இசயோ சனைசெய் யெழில்வீர வாகு
சதயோ சனைநீங்கித் தாவால்—பசயா
ரிளையார் சமைக்கண் டினைந்து தழீஇ
யுளையா வுலைந்தா னுயிர்த்து. (௭௮)

தம்பிமீ ரென்னுந் தழுவிக்கொள் ளீரென்னு
மெம்பிமீர் விட்டகன்றி ரென்னையெனும்—வெம்பினே
னென்னு மெரிமுகவ னீறுசெய வல்லனென்னும்
பன்னும் விறலோன் பரிந்து. (௭௯)

அந்தோ விதியேயிஃ தாகா துமக்கென்னு
மந்தோ விருததியினு மாவியெனு—மந்தோசீர்
மன்னினியா னெம்மையாள் வள்ளற் பெருமானுக்
கென்னினியான் சொல்வே னெனும். (௮௰)

வீர ரிளையர் விளியவில்லோன் றேந்திநிற்பே
ஞரெனக்கொப் பாவா ரழகிதென்னுஞ்—சூரன்சே
யெப்படையை விட்டனனோ வென்னு மதையளித்தோர்
தீப்புடையர் யார்கொலெனுஞ் சூழ்ந்து. (௮௧)

எந்தைபடை சூர்மே லிறவுய்ப்பேன் வேற்கஞ்சி
னொந்தயர்வே னென்னு துவலிளையோர்—நந்தமுன்போற்
சேரவின்று செய்துபட்ட தீமுகன்பால் வென்றியெனும்
வீரமா சுண்டதெனும் வேர்த்து. (௮௨)

வில்லினையே பார்க்குஞ்செவ் வேலினையே பார்க்குமறச்
சொல்லினையே பார்க்குந் துணைநெடுந்தோட்—கல்லினையே
பார்க்கும் வருபழியைப் பார்க்குமொண்பற் பந்திகல்லென்
றார்க்கும் படிகறிக்கு மாங்கு. (௮௩)

ஆர்துயருற் றிவ்வா றழுங்கினு னேங்கியே
யோர்செயலு மின்றி யுழன்றிலான்—சீர்மன்
விழுப்பமோர் வீரன் வியன்றுணைவர் தம்மை
யெழுப்பவோர் சூழ்ச்சிகொண்டா னெய்ந்து. (௮௪)

நின்றான் முகன்முதலோர் நல்கு படையொன்றை
யொன்றா னிறையோர் மேலுய்த்தனனே—வின்றுவி
யுண்டா னமனன்றோ வொண்சுரர்மற் றோருயிர்போற்
கொண்டான் கொலோவெனுங் கூற்று. (௮௫)

அத்தமலர்த் தேவை யருஞ்சிறைசெய் தேவிதிக்கு
மத்தனினை யோரென் றறியானோ—வித்தகன்முன்
பாலனுயிர் வவ்வப் பதத்தா லுதைத்தவுதை
காலன் மறந்தனனோ காண். (௮௬)

அல்றெயினன் மைந்தற் கரனெனமுக் காலோதிக்
கொன்றருமா தீமை குறித்தகுகன்—பொன்றுவனை
யக்காலர் பற்றகற்றி யானோர் தமையுதைத்த
திக்காலென் றெண்ணுகிலா னின்று (௮௭)

தூச்சனூற் றன்மதியாற் றால்ற் றவரான்மு
னிச்சகத்திற் செய்த னிமைநீ கி—யச்சமுறீஇ
யேற்ற மிழந்தே யிடருழப் பட்ட வெலாங்
கூற்ற னயர்த்தனனோ சொல். (௮௮)

தின்பகற்று நீறுமணி தூண்னெழுத்தம் பூண்டுள்வார்
கொன்புடையிற் சென்றுகுலை கூற்றுமைசே—யன்ப
ரரிய வுயிரலைத்தா னற்பயுள்ளுஞ் சேற்றாழ்
கரியை யடாதோ களித்து. (௮௯)

என்னு முரைக ளியம்பியவிர் தூணியிலே
மன்னுமொரு கோல்பிடுங்கி மன்னகங்கொண்—டன்னதன்கண்
வன்கண்டிடவீர வாகுநம னுமன்னர்
மன்கண் டிடவரைவான் மற்று. (௯௦)

ஏலயில்வேற் செவ்வேட் கிளையன் விடுத்தனன்வெங்
காலனென்போன் காண்க கனின்றுணைவர்—சீலவுயிர்
கொண்டா யிதுநன்றோ கூர்ந்தொல்லை விட்டிடுதி
கண்டா யெனவுரைத்தான் காண். (௯௧)

அன்னதைகயில் வாங்கி யதிர்பூட்டிப் பன்னிருகை
முன்னவனே முன்னகத்தின் முன்னிவிட—மின்னெனவே
சென்றே யியமபுரஞ் சேர்ந்து நமன்முன்போந்
தன்றே விழுந்த தடுத்து. (கஉ)

அந்தகன்றான் விம்மிதமுற் றம்மிதடுத்து நோக்கினன்
வெந்திறல்கொள் வீரமொய்ம்பன் விட்டதெனு—நொந்தஞ்சிப்
பாங்கிளேயோ ரெங்கனெனப் பார்த்தா னுணர்ச்சியா
னுங்கயிலை யிற்கண்டா னுய்ந்து. (கங)

கண்டுகொடா மேலிவர்ந்து காலர் புடைகுழும
வண்டர் பிரான்கயிலை யஞ்சார—னண்டுருமத்
தங்கெழுவர்க் கண்டா னரும்விஞ்சை யோர்மதுரந்
தங்குமிசை கேட்டிருப்பத் தான். (கச)

கண்டிறைஞ்சி மற்றோர்முன் காலனுற்று முற்றுணர்ந்தீர்
திண்டிறல்கொள் வீரனும்மைத் தேடுவான்—மண்டிகலா
ரங்கணவ ரொடெழுவீ ரங்கணெழு வீருமென்ன
வெங்களம்போய்ப் புக்கார் விரைந்து. (கரு)

அங்க னெழுவருமே ளூர்பூத ராருந்த
மங்கமுற்றூர் பெய்தா ரலர்மாரி—புங்கவர்க
ளுன்னிளேயோர் முன்னே னெளிர்சரண்டாழ்ந் தேத்தவிறன்
மன்னனவர்ப் புல்லினுன் வாய்ந்து. (கசு)

எழுவரையுந் தோளா லெழுவரையும் புல்லி
வழுவரையும் வீரன் வலியிற்—கெழுவரைநேர்
தானவரை வில்லினுற் றன்வெல் லரிதென்று
மானவரை சொன்னுன் மகிழ்ந்து. (கஎ)

வீரர் முதலோர் வியப்பி னெழுகைகண்டு
வீர புரந்தரனேண் மேவிலக்கர்—சாரதர்கள்
வேதகம்போர் வெம்மைபோய் விண்டாரை வீழ்கைகாண்
சாதகம்போ லாயினர் தாம். (கஅ)

அன்னபொழு தேம னனிகமுடன் வந்திளவன்
முன்னிறைஞ்சித் தோன்றான் முனிந்தனைநீ—மன்னெழுவர்
தம்முடல்விட் டங்கயிலைச் சாரலிற்றின் சாரதரோ
டம்ம வதிந்தா ரணைந்து. (கக)

காயமதி னீறுகண்டி கையணிந்தோர் பாற்செல்லே
னுயிளேயோ ராவி யடுவேனே—நீயுன்னி
யுய்த்தகனை கண்டவரை யொல்லை விளித்துய்த்தேன்
மெய்த்தகையோ யென்றனன்கால் வேந்து. (௪00)

அந்தகன்றன் சொல்லினவி யத்தன் விடைதரலும்
வெந்தரணி தன்னகர மேவினா—னுந்திலையோ
ரங்கணத்த ரேத்த வவிர்வீர மொய்ம்பனந்தச்
செங்களத்தி னின்றான் றிகழ்ந்து. (௧0௧)

நின்றிவைதே ரொற்றர் நெடுநகர்போய்ச் சூரனைத்தாழ்ந்
துன்றனயன் போர்புரிந்தே யொன்னலர்க்கொல்—வென்றிமொய் [ம்ப
னொன்றினார் வீர னுறுபடைவிட் டானதனாற்
பொன்றினா னென்றார் புலர்ந்து. (௧0௨)

அன்றவுணர் கோமா னவனிமிசை வீழ்ந்தயரா
வென்று முறாத விடர்க்கடலுற்—றுன்றனையா
னீத்துமுயிர் வாழ்வை நிலையெனா வெண்ணுவனோ
வேத்துபுக ழாளா வினி. (௧0௩)

என்னா ருயிரே யெனதுறவே கண்மணியே
யொன்னாரொற் றானீ யொழிந்தையென்றான்—மன்னா
மெனக்கும் வசையே யிமையோர் புகழு
முனக்கும் வசையே யுறும். (௧௪0)

ஈசனே மாயவனே வெண்கணனே வான்கரந்த
வாசவனே வொற்றடநீ மாய்கவென்றார்—பேசினரோ
மாண்டாய் மகனே மருமமுறப் புல்லுவதென்
றீண்டா ரினியா ரெனக்கு. (௪0௫)

என்றின்ன பன்னி யிரங்கலுமன் பன்னியாந்
துன்றன்னை யஞ்சித் துயரமுற்றாண்—மன்றலுறு
மந்நகர மிக்க தழுகுரலே யென்னிவின்னல்
பன்னவும் போமோ பகர்ந்து. (௧0௬)

அக்கினி முகாசுரன் வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௬௫௭.

---

# மூவாயிரர் வதைப்படலம்.

---

அன்னபொழு தின்னதுமூ வாயிரரா மைந்தர்கேட்
டென்னருஞ்சீர் மன்கோயி லுட்புகுந்து—மன்னவன்முன்
சென்றினைய நெஞ்சந் திருவடிதாழ்ந் தேந்தல்கே
ளென்றினைய சொல்வா ரெடுத்து. (௧)

ஏண்கொ ளிலக்கருமற் றெண்மருக்திண் வீரமொய்ம்பு
மாண்கொள் பிறருமே வந்தெதிர்க்க—காண்பருமோர்
தீமுகனை யுய்த்தாற் செருச்செய்ய வல்லவனே
வாமுன்பின் னேரிருக்க வாங்கு. (உ)

ஒன்னூர் குழுவி லொருவனைவிட் டாய்வருவ
துன்னாய் மடிந்தானென் றுள்ளலையெம்—மன்னா
மருவார் தெறக்கரிதேர் மாவவுணத் தானை
செருமாய்ந்த வென்றினையே றேர்ந்து (௩)

சிறந்தா டலைமைதிறல் செல்வ மனைத்து
மறந்தாய் வலியனு மன்னீ—யிறந்தாரை
யுன்னி யிரக்க முறற்பாலை யோதுன்ப
மன்னிமையோர் போல மருண்டு. (௪)

இந்திரனை மாலயனை யெமனைமற் றேனையரை
வெந்துயர்கொள் வான்பற்றி வேந்தநின்மு—னுந்துவேரம்
விண்ணம்பார் மேரு விளியவலைப் போமுன்ற
னெண்ணம்பார்த் தாற்றுவோ மீங்கு. (௫)

பன்னுவதென் கொல்பல் பலபணித்தி யாங்கள்போய்
முன்னுறுதிண் பூதர் முரண்வீரர்—பின்னுறுமா
கந்தன் பிறர்தமையோர் கன்னலில்வென் றூர்துமென
வெந்துயர நீங்கினான் வேந்து. (௬)

நின்றிதும காக்கா ணடமினமர்க் கென்னவெஞ்சூர்
துன்றவன்றூ டாழ்ந்து தொழுதகன்றார்—வன்றனுவங்
கைகொண்டார் தூண்வெரின கட்சசறிவித தார்கரிய
மெய்க்கவசம் பூண்டார் விரைந்து. (௭)

தும்பை மிலைந்தார் சுடர்ாப் படையெடுத்தார்
செம்பொற் கலனணிந்தார் தேர்புக்கார்—பம்பைதுடி
சங்க முழங்கினமா தங்கமுன் ளிட்டசது
ரங்கமளவில்லவுற்ற வாங்கு. (௮)

உருக்கார் வணங்கா வுன்வடவை செம்பி
னுருக்கார்செம் பங்கி யுறழத்—திருக்கா
ருருமாப் படையவுண ரூழிநாண் மேவும்
பொருமாப் புனலினுற்றார் போர்த்து. (௯)

மூவா யிரர்சேனை முந்துறவம் பின்னேக
மாவா ணவர்கண்டு மன்னகரொ—தாவாவென்
றஞ்சினராக் காலை யதுதேர்ந்து வெம்பூதர்
வெஞ்சினங்கொண் டேற்றார் விரைந்து. (௧௦)

வாளா லெறிகின்ருர் வன்கதைக டேண்டினூர்
தாளார் தனுக்கணைக டாஞ்சொரிந்தார்—மீளாமே
யோதப் படைபுலவு மூய்த்தா ரவுணர்வெம்
பூதப் படைதனாப் போர்த்து. (கக)

சூலங் கதைநேமி தூண்மாப் படையோடு
தால முறுமசலஞ் சாரதர்கள்—சாலவிடுத்
துந்துருமி ஞர்த்தா ருரக மெனப்பனித்து
வெந்தகுவர் வீழ்ந்தார் விளிந்து. (கஉ)

முந்தவுணர் பிந்துதலை மூவா யிரர்கண்டு
வெந்தறுகட் பூதர்மேல் விற்குழைத்தே—யந்தமில்கோன்
மாரியெனச் சொரிந்தார் மாலுற் றிரியவன்ஞர்
வீர ரெதிர்ந்தார் வெகுண்டு. (கங)

திண்டத் தவர்தேர் தனைத்தகர்ப்பார் நீடருவின்
றுண்டத் தவர்மான் றொகைதொலைப்பா—ரெண்டி
ணெழுக்கொண் டவர்மார் பெறியா ரெறிவார்
மழுக்கொண் டவர்வின் மரம். (கச)

மேவா வமர்கணமா வீரரிவ் வாறுசெய்
மூவா யிரவர் முனிவளை இ—யோவாமே
பெய்தார் கணைமழைநேர் பெற்ருர் முகநிறந்தோள்
பெய்தார் குருதி பெரிது. (கரு)

மூவா யிரர்வலிமை முன்னியிலக் கத்தவருண்
மேவா யிரர்சினந்து வீரமொயம்ப—ஞவான்முன்
சென்றிறைஞ்சி யிப்போர் செயவருள்கென் ருர்நீவிர்
நன்று நடமினென்ரு னன்கு. (கசா)

விசயன் முதலாக மேவா யிரர்போ
யசலநிகர் விற்கோட்டி யண்டார்—மிசைநெடுங்கோல்
கந்தவே டன்னைக் கருத்திற் ரெழுதேத்தி
யந்தமுகில் போற்சொரிந்தா ரார்த்து. (கஎ)

மன்னவர்வில் வன்மைகண்டு மற்றவர்க ணற்றவரி
லுன்னருங்கோ லெண்ணிலகோத் துய்த்திடலு—மன்னவொல்லை
வீரர் விடுகணையை மேவியடுந் தானவர்கோ
னோர வவைதுணிக்கு நேர்ந்து. (கஅ)

இவ்வணம்போ ராற்ற விலக்கத் தவர்தேரைத்
தெவ்வர் சிதைத்தலுமே தேர்ந்தசுரர்—வெவ்விலொடு
தேரையழித் தார்திறல்போய்ச் சேனைபோய் நின்றவரை
வீரையெனச் சூழ்ந்தார் வெகுண்டு. (ககூ)

பறித்தார் வரைமரங்கள் பற்றிமொய்ம்பர் மேலே
செறித்தார் திசைமறைத்த தீக்கோல்—குறிததேர்
கணைத்திறுத்து வீட்டியே காரவுணர் மார்பி
லணைத்துளைத்தார் வீரர்க ளார்த்து. (உ௦)

சோரி சொரிந்திடவே சோர்ந்திருந்தார் சில்லோரவெம்
போரினையே செய்தார் புரிந்துசில்லோர்—தேரினைத்தங்
கையி லெடுத்தே கடலின்கண் வீசினர்
செய்யவிண்ணோர் நொந்தார் திகைத்து. (உக)

வீசுதேர் நின்றவனி மேலுற்று வில்வளை இ
யாசுகம்பெய் தார்ப்ப வவுணரெதிர்ந்—தீசுரன்சேய்
பின்னால் வருவீரர் பேர்சிலையைச் செங்கையான்
முன்னான் முறித்தெறிந்தார் முன் (உஉ)

ஐயன்பின் னுற்றோ ரழன்றவரை யெற்றலுமே
மையவுணர் சீறியொப்பின் மற்றொழில்கள்—செய்ய
வுடைந்தார் விசய னொருவ னொழிய
மிடைந்தா ரெவரு மெலிந்து. (உங)

தமரிரிந்து போகத் தனியாம் விசயன்
சமர்புரிவான் விற்கோட்டிச் சார்கு—ரமர்மகன்மேற்
கோன்மழைபெய் தார்த்தான் கொடுஞ்சிரந்தோ டாடுணிந்த
கான்மரங்கோ டிற்றனபோற் காய்ந்து. (உச)

அற்றவுறுப் பெல்லா மணுகியுணர் வாவிவர
மற்றெழுந்தார் முன்வரத்தால் வாசையன்மேற்—பொற்றைகளைப்
பெய்தமர்செய் தாரங்கம் பேர்ந்துமுன்போற் சேர்ந்தவென்றாற்
செய்தவத்தி னுண்டோ சிறப்பு. (உரு)

கண்டான் விசயன் கருத்தில் வியப்புறீஇ
யண்டார் செயல்க ளனைத்துமனங்—கொண்டான்
திறல்குறைந்து நின்றனன்போர் செய்தாவ தென்கொல்
விறலுறலின் றெற்கரிதா மேல். (உசு)

அன்னார் தமையாங் கடலரிதன் றேனுமவ
ரென்னுவி கொள்வ தெளிதன்று—லொன்னாரை
மோதமரில் வென்றிலனோர் மொய்ம்பிழந்து பொன்றிலனோர்
யாதவன்கொல் கோடொத்தேன் யான். (உஎ)

மேவலரை வீப்பனென வென்றிகொள்வான் வந்தயான்
மாவலரென் றேயகறன் மன்வசையே—காவலன்மு
னெவ்வண்ணஞ் செல்வே னிறந்திலனு மல்லனென்றான்
வெவ்வண்ணல் வீரன் மெலிந்து. (உஅ)

வெந்துயர வேலையின் வேலையுற வேலையுடைக்
கந்தன் கழலே கவின்புணையென்—றந்தகவிற்
சிந்தை கொளவிசயன் சிந்தைதொறு நின்றருளு
மெந்தையெதிர் தோன்றினனேய்ந்து. (உ௯)

கேள்விசய வொன்னார் கிளைமுடிப்பா னீதுமித்த
தாள்புயங்க மாதி தடிந்தமுன்போன்—மீள்வுற்ற
வன்னார் வரமுணரா யாண்டுபல போர்செயினும்
பின்னாகார் சோரேல் பெரிது. (௩௦)

என்று நவின்றுவள்ள லெந்தையய னந்தைசெற்றோன்
றன்றுபடை நல்கித் துயர்விசயற்—கொன்றவரித்
தொன்னலர்வீ வானிதனை யுய்க்கவென வென்றகன்றான்
மன்னதனை யேற்றான் மகிழ்ந்து. (௩௧)

ஆர்ந்தவன்பிற் பூசைசெய்தா னன்னதையுன் மத்தனென்போ
னோர்ந்திவனம் மேலிதனை யுய்க்கினமர்—தீர்ந்திடுவர்
பன்னதன்முன் மாயப் படையை விடுவெனனு
மின்னவன்மேல் விட்டான் வெகுண்டு. (௩உ)

மாயன் படைவிடலும் வள்ளலுயர் காரிதன்றிண்
டையன் படைசெலுத்தச் சென்றிருணே—ராயபடை
மூவா வலிதொலைத்து மூவா யிரவரையு
மாவா வடர்த்தகன்ற தாங்கு. (௩௩)

மூன்னு மிமைப்பிலோர் மூவா யிரருமே
வெந்நிலத்தில் வீழ்ந்தார் விசயன்கண்—டுன்னரும்வேற்
புங்கவனைப் போற்றிநின்றான் பூதாரார்த் தாரிரிந்தார்
செங்களத்திற் றங்கவுணர் தேர்ந்து (௩௪)

வானோர்பூ மாரிபெய்தார் வார்கழற்காற் றூதர்போய்க்
கோனோர் கழல்பணிந்துன் கொற்றமைந்த—ரானோரை
யுன்னிலக்கர் தம்மு ளொருத்தனே யீறுசெய்தா
னென்னமன்னன் வீழ்ந்தா னினைந்து. (௩௫)

வேந்தன் வியர்த்தயர்ந்து விம்மியின்னல் வேலையிலே
றேந்தனைநின் றேவீழ்ந்தா னேழ்பரியோ—னுந்திறல்கொ
ளன்னான் பெயர்கொ ளமைவினொளி போய்வரையேய்ந்
துன்னார் கலிவீழ்ந்தா னுற்று. (௩௬)

மூவாயிரர்வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௬௬௩.

# தருமகோபன் வதைப்படலம்.

---

முடிவார் புதல்வரையே முன்னியயர் கோன்முன்
வடிவா ரறப்பகைஞன் வந்தே—யடிபணிந்து
மன்னாநீ யின்னலுறின் வானோர் நகைசெய்வா
ரொன்னா ருவப்பா ருளத்து. (௧)

மாற்றா ரிகலின் மலைந்துதந்தை மார்தனய
ரேற்றா ரிறந்தா லிரங்குவரோ—போற்றார்
வயவ ரெமரைவெளவே மன்னுளா னாக்க
வயனுளா னாமுனே மாங்கு. (௨)

அந்தமிலா வாக்கமுமா ராயுளுஞ்செ யாணையுமா
யிந்திர ஞாலமுமே யெய்திருக்க—வெந்தைநீ
சாற்றிமையோர் போற்புலம்ப றக்கதன்றான் சீர்க்கென்று
தேற்றினான் மாமந் திரி. (௩)

பன்னமைச்சன் றேற்ற மருவலரை யானொடிப்பிற்
கொன்னமன்போற் சென்றடுவேன் கொல்லெனச்செ—லன்னவற்
றின்றிங்கன் மேவுதிரா னேகியவர் தம்மையின்னே [றாழ்ந்
வென்று வருவனென்றான் வேட்டு. (௪)

மண்டிறைமீண் டேற்றணைமேல் வைகவறக் கோபிவிடை
கொண்டமர்க்காங் கோலங் கொடுதிசையார்—புண்டரிகந்
தன்னைவல்லை யிற்கொணர்திர் சாரிரென வோடியதை
யுன்னவன்மு னொற்றருய்த்தா ருற்று. (௫)

தந்தியிறை மேலறத்தெவ் சாரமைச்சர் சூழவெழி
லிந்திரன்கொல் லென்னவே யேறினா—னந்தியங்க
ளார்த்தகரி தேர்வாசி யார்த்தகுடை விண்மறைத்த
போர்த்த புழுதிதிசை போய். (௬)

நாற்படையுஞ் சுற்றிடக்கை நாகத்தை யூர்ந்தசப்பா
மேற்புயலார் மாநகரை விட்டகன்று—பாற்படாக்
கண்டா ரமரர் கலங்கினா ரிவ்வாற்றல்
கொண்டாரார் கொல்லென்றார் கூர்ந்து. (௭)

மன்னா வணங்கடந்து மாவனிகத் தோடேகித்
துன்னா கவமணுகிச் சூழ்பூதர்—கொன்னா
ரிலக்கரொடு வீர ரெறுழ்நோக்கி வெய்யோ
னலக்கணுற்றுச் சொல்வா னயர்ந்து. (௮)

ஏற்றசமர்க் கேகி யிரக்கமிலை யோர்வினவி
னாற்றகை செய்வாம மாற்றுதனன்—றாற்றமுறு
சேனையுற்ற வில்லுளது சென்றிரண்டி லொன்றுறவே
னேனையர்போ லேங்கே னினி. (கூ)

என்றுமனந் தேறிவெய்யோ னேகவிர வோடுபக
லொன்று பலவுருக்கொண் டுற்றமர்செய்—கின்றமைபோல்
வார்கழற்காற் றானவரும் வன்குறுந்தாட் பூதருஞ்சூ
ழார்கலியி னார்த்தேற்றா ராங்கு. (க0)

தண்டெழுவிற் றூக்கினார் சார்கணிச்சி நேமியுய்த்தார்
மண்டுதரு வெற்பெறிந்தார் வன்பூதர்—திண்டகுவர்
கோலிற் கழுமுள்ளிற் கொன்பரிதி யிற்சங்கில்
வேலிற் பொருதார் வெகுண்டு. (கக)

வெந்தகுவர் வீரர் வியன்றனிவில் வாங்கியம்பு
கந்தரம்போற் பெய்தார் கவன்றெவரு—நொந்தனர்பின்
றெய்வப் படைமரபிற் சிந்தியமர் செய்தனர்பான்
மைவணஞ்செவ் வண்ணமுற வாய்ந்து. (கஉ)

மாய்ந்தனர்வெம் பூதரெண்ணின் மையவுணர் தாஞ்சாய்ந்தார்
வீந்தகரி பாய்மா விளிந்தனதேர்—பாய்ந்தசெந்நீர்
நொந்திலக்கர் நோன்மையற்றார் நுண்ணமைச்சர் நின்றமைகண்
டத்திறலோன் சென்றா னழன்று. ([illegible])

இடியி னுரப்பி யிமைப்பிலெய்தி யன்னார்
முடிதுளங்க வில்வளைஇ மொய்மெய்—கடிதரவே
வாளி யழுத்தினான் மன்னமைச்சர் மாண்டனர்தாள்
தோளிருகை வீழ்ந்த துணிந்து. (கச)

மன்னு மவுணர் மறுக்கமுறச் சாரதர்க
ளுன்னுமவர் மேற்செல்லா வோங்கலெடுத்—தின்னலுற
வீச வெதும்பியுளம் விம்மிவரு வென்றியின்றிப்
பேசசுரர் பேர்ந்திடைந்தார் பின். (கரு)

கண்டதனைத் தீயோன் கனன்றுவெய்ய பூதர்மேற்
றிண்டனிவில் வாங்கிச் சிலீமுகங்கள்—கொண்டடல்
பிறங்கலின்மேற் பெய்வதுபோற் பெய்தா னனையார்
கறங்கிற் சுழன்றார் கவன்று. (கசு)

மந்திரியூர் தந்தவய மாதங்கம் பூதங்க
ணந்தவொரு காற்கோட்டா னன்குகுத்தி—கொந்துதரு
வாலா லெறிந்ததுநீள் வன்கரத்தா லெற்றியது
காலான் மிதித்ததுளங் காய்ந்து. (கஎ)

ஓரவிர்கைம் மாவிவ்வா றுற்றமர்செய் காலைவிறற்
சாரதர்கள் வெற்பெடுத்துத் தாம்வீச—வீரர்க
ளெண்ணிலம்பு பெய்தா ரிணைந்துமெறும் குன்றிலதா
யண்ணியும்பன் மேற்படர்ந்த தாங்கு. (௧௮)

கண்டையொலி யார்ப்பக் கடலுடைந்தாங் கார்த்தவனூர்
புண்டரிக மென்களிறு போரியற்றத்—திண்டிறலோன்
பூதங்க ளாங்குடையப் பொள்ளெனத்தன் வில்வளைஇ
மாதங்க மேல்விடுத்தான் வண்டு. (௧௯)

அத்தி யயர்வுற் றதுகண் டவுணர்கோன்
பத்தியினோர் நூறுகணை பாலமிசை—யுய்த்தெஃக
மொன்றுவிட வாசவனவ் வொள்வே றுணிபடவே
வன்றிறற்கோல் விட்டனனோர் வந்து. (௨௰)

பொருவாச வன்விரைந்து பொத்திரம தொன்றுற்
குருவா யயின்முருக்கிக் கோலி—னுருமறைத்தான்
மன்கணையுய்த் தேகுறைத்தான் மற்றவைபோய்த் தாக்கவவன்
மின்கவசம் வீழ்ந்த விளிந்து. (௨௧)

சூர னமைச்சன் றொலைந்தா னெனவென்றி
வீரன்மேற் றண்டமொன்று வீசினான்—யாருமஞ்ச
மின்னுராத்திற் பட்டுநொந்து வேந்துசெய லோர்ந்துளமும்
பின்னுறவே செல்வான் பெரிது. (௨௨)

நின்மா னவர்பௌவ நீத்தொராய் நேர்வெய்யோன்
மன்மாக் கழல்வீர வாகுவினை—மின்மாப்
புலிங்கமுக நோக்கிப் பொரவந் தனைநீ
கொலிங்கனின்றே னின்னைக் கொல. (௨௩)

மற்றுன் வலிமதர்ப்பு மன்வரமு முன்வயமு
மிற்றைவைக லேயீ றியற்றுவனீ—கற்றவம
ராற்றுகென நாணினொலி யாசைசெல விற்குழைத்தான்
பாற்றுந் தருமப் பகை. (௨௪)

தருமந் திரியேண் டருமந் திரிகோல்
கருமந் திரிபிலுயர் காளை—மருமமதிற்
செல்ல லரிதாய்ச் சிதைந்தனமா யோகியர்பாற்
புல்லர் புரிகரவு போல். (௨௫)

வீரனது கண்டு வெகுண்டெஃக மொன்றெடுத்து
நேரலன்பூ ணெஞ்செறிய நேர்ந்தனலம்—பாரவுய்த்தான்
முன்னுற் றவன்விடுகோன் மூன்மந் திரிமுனுற்றுப்
பின்னுற் றனவயத்திற் பேர்ந்து. (௨௬)

புன்கணுற்று வெய்யோன் பொருமிந்நு வின்றிருப்ப
வன்மமத மாமகிணன் மாண்புணரா—மன்விறலோன்
றேரைமருப் பாற்றாக்கித் தேர்ப்பா கனை புமட்ட
தாரதனைக் கண்டா னழன்று. (உஎ)

வேறிரத மேறியவன் மேல்வந் திடுவேழம
பாறவத னீள்கரத்தைப் பற்றிமத—வாறு
வருகவுளின் மோதிவல்லை மற்றுலகத் துய்த்தான்
முருகனருள் கொண்டவிறன் மொய்ம்பு. (உஅ)

எறிந்தா னதுபோ திபம்வின் னிடைப்போய்ப்
பிறிந்தா கவவெல்லை பேர்த—லறிந்தான்
கயமிழந்தே னென்னுக் கலங்கி மறிந்தான்
செயமவுலி தீர்மந் திரி. (உக)

வீழ்மதமா வாற்ற வெருவிப் பதைத்துழன்று
மாழ்கின் றதுபுடைபோ மன்னெழுந்தே—காழ்வின்
மலிசெங் கதையுய்த்தான் வாகுவதைப் பாற்றக்
குலிசந் தனைவிடுத்தான் கொண்டு. (௩௦)

கோளார் குலிசங் கொடியனுய்ப்ப வாங்கதனை
வாளாற் கரம்பற்றி மாவிறல்கொ—டோளான்
மருமத் துறவுதைத்தான் வாயினெய்த்தோர் காலத்
தருமப் பகைமடிந்தான் சாய்ந்து. (௩க)

மண்டவுண மாப்படையின் வாங்கிற் றுயிர்த்தெழுந்து
புண்டரிகந் தன்றலைவன் பொன்றினமை—கண்டிடுக்கண்
சோழுவ மூழ்கியதோர் தீரமுற்றுங் காடலுறும்
வீரமொய்ம்பைச் சார்ந்துரைக்கும் வேட்டு. (௩உ)

எந்தாய் வெகுளே லெனதுபெயர் புண்டரிக
மந்தா ரணிபுகழு மாற்றலுளே—னந்தாத்
திசைபுரவு கொண்டேன் சிறைப்பட்டே னிவ்வஞ்
சிசைதரும கோபனு லிங்கு. (௩௩)

புந்தியிலா மந்திரியைப் போற்றிப் பரியானே
னுந்துபணி யாற்றி யுயிர்பிழைத்தே—னெந்தைநீ
நோவனை வென்றிலையே னேர்தந்து போர்புரிந்தே
யாரவனை வெல்வா ரினிது. (௩௪)

அன்னுனை நீயடலா லண்டர் துயர்தீர்ந்தா
ரென்னுர் சிறையும்போ யானுய்ந்தேன்—முன்னுறேன்
செய்தவத்தி னின்னைத் தெரிசித்தேன் போதுவனெஞ்
சுறதிறைஞ்சிற் றுனை யடுத்து. (௩௫)

புண்டரிகத் தண்மைவிஞயப் புந்திமகிழ்ந் தேகெனலும்
பண்டமர்திக் கண்மிப் பரிந்தவைகிற்—றெண்டரும
காதகன்றன் வீவுதனைக் கண்டிளவன் மொய்ம்புவலி
பூதர் புகன்றார் புகழ்ந்து. (கூசு)

தூதுவராஃ தோர்ந்தோடிச் சூரற் றெழுதமைச்சன்
மோதமர்செய் தேவீர மொய்ம்பனுற்—சாதலுற்று
னுண்டையுமாய் தந்தவனங் கூர்ந்துவந்த தந்தியுந்தா
னெண்டிசைக்க ணேகிற் றிசைந்து. (கூஎ)

திறன்மந் திரிபட்ட செய்தி வினவி
விறன்மன் றுயர்க்கடலில் வீழ்ந்து—மறன்மனத்தி
லத்திரம்போற் காய வழுதே யெழுதருவச்
சித்திரம்போ லுற்றான் றிகைத்து. (கூஅ)

தருமகோபன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா எகூ0.

# பானுகோபன் வதைப்படலம்.

என்னைச் சிறைசெய்தோ னின்றிறப்பான் காண்பனது
தன்னையெனச் செல்பவன்போற் சார்ந்தருக்கன்—றன்னினுன்
சூர்துயர நோக்கியொற்றர் சூர்மைந்தன் றாள்பணிந்தே
யார்துயரிற் சொல்வா ரடுத்து. (க)

மாயப் படைவிடுத்தே வாகுதனைச் சேனையொடும்
வீயக் கடலிலிட்டாய் வேட்கமார்—போயுரைத்தா
ரன்னுன்செங் கைவேலை யங்கிருந்தே யுய்க்கானீர்
மன்னுழி புக்கதது வாய்ந்து. (உ)

புக்களவின் மாயப்பொருபடைவென் றந்துலைந்த
தக்கணமே யாரு மயர்வுயிர்த்தூத்—தொக்க
வெழுந்திங்கண் மீண்டா ரிலகயின்மீண் டுற்ற
தெழுந்திங்கண் மாமுகன்பா லேய்ந்து. (ங)

அன்னவர்சூழ்ந் திவ்வூ ரலைத்தனுமே மன்னயலார்
பொன்னன் முதன்மைந்தர் போற்றமைச்ச—ரின்னவரை
யூழினுய்ப்ப வெற்றிறந்தா ரொண்புயனே டெண்கனக
வூழியின்மீ ணுய்ப்புகுந்தா னுங்கு. (ச)

வேந்தனிவை யெல்லாம் வினவியின்னல் வேலையுற்று
ஆந்திண் படைவறந்த வண்டரின்று— மேற்தெழில்கொ
ளிங்கவரை விட்டகன்று றில்லையென வெற்பகைஞன்
மன்னகர்புக் கானயர்வு வாய்ந்து. (சு)

மன்னன் கழல்பணிந்து மாயைதந்த தொல்படையாற்
றன்னவரைத் தான்மயக்கித் தூயநீ—ரொன்னமுவத்
திட்டனனஃ தண்ட ரியம்பிடத்தன் செங்கதிர்வேல்
விட்டவரை மீட்டனன்செவ் வேள். (சு)

கந்தவே டன்னைக் கனவிலுமே வெல்லலரி
தெந்தைநினக் கோதுவதெ னேற்றமரி—ஞேந்தயர்ந்து
பொங்குபடை யாற்றலுமே போய்வறிதாய் நீயிரிவுற்
றிங்குவர வுய்ந்தா யினிது. (எ)

வில்லிழந்தாய் மானமற்றாய் வென்றியின்றித் தோற்றுவந்தாய்
தொல்லைவர மாண்புந் தொலைவுற்று—யொல்லையவன்
சீறுவனேல் யாவுநந்துந் திண்சிலம்போ டும்பியைக்கொ
ளாறுமுகத் தானைவெல்வா ரார். (அ)

புன்மாப் படுப்போர் புலிக்குணவாங் காதைபோ
லென்மா னவரைவதை யாமுமுன்ஞள்—வன்மாண்பு
சிந்தினஞ்செவ் வேளாற் றிறலுடையோர் யார்க்குமொற்று
மந்தகனை வெல்வ தரிது. (கூ)

மூற்றுவதா மொன்றை முயல்வதியல் பஃதில்லா
மற்றதுன்னி யேவருந்தல் வன்கயவர்—பெற்றியதா
மைந்தர் தமையிழந்தாய் மற்றனிகத் தேற்றமற்று
யெந்தைநின்று யானுளே னிங்கு. (௧௦)

மேற்றிகழு நின்குலத்தை வேரோடும் வீட்டவோர்
கூற்றுவந்த தென்றுனுளங் கொண்டிலாய்—சீற்றமுற்றாய்
வெஞ்சமர்செய் வானுன் வெருவினனென் றெண்ணிலைநீ
யுஞ்ச வணமுரைத்தே ஞேர்ந்து. (கக)

உறுதியொன்று சொல்வனும்ப ருற்றசிறை நீக்கி
னறுமுகவன் மீண்டங் ககல்வா—னிறுதியுறு
மென்ன முடிதளக்கி யேய்மந் திரச்சூழ்ச்சி
மன்னம்பி நன்றென்றான் மன். (கஉ)

என்னிவைசொற் றாய்மைந்த வின்றியா னென்மையனும்
யின்னிமையோர் வெஞ்சிறையை விட்டேனேன்—மன்னர்மன்
னென்றுலகி லென்னைத்தான் யார்மதிக்கற் பாலராஉ
மன்றி வசையுமெய்து மாம். (கஉ)

கூடனும் வெதிருங் குருடு முடமுமுற்றோ
ருனமவீ தற்றவுட லோடொழியு—மான
மழியா வலியிழந்திங் காரும் வசைச்சொ
லொழியா தெழுமையுமே யுற்று. (கச)

புங்கவர்மா லாதியர்கள் போற்றவர சாளலுற்றேன்
சங்கரனார் தந்தவரந் தானுளே—னங்க
கிறையுயிர்தான் விட்டிடினு நீளமரர் தங்கள்
சிறைவிடுவ தில்லை திணம். (க௫)

சாவ வரினுந் தடைவரினுந் தம்மிடத்தின்
மேவிடுமோ மானம் விடுவரோ—மாவறிஞர்
தேரு மிரண்டுநாட் செல்வத்தை வேட்டுவிடேன்
சூரனென்றோர் பேர்பெற்றேன் சோர்ந்து. (க௬)

இன்னுமோ ரூழி யிருப்பினுமே மாய்வதல்லாற்
பின்னுமிவ ணண்ணார் பிறந்தவர்வீ—மன்னறிண்ணை
மின்றுமிவ் வாழ்க்கை விழைந்தும்பர்க் கஞ்சியிந்த
வின்னா ருயிர்சுமக்கேன் யான். (கஎ)

அஞ்சினாய் போலுமஞ்ச வந்நகர்போய்த் துஞ்சுவாய்
துஞ்சலிலாத் தொல்வரத்தேன் றன்னலர்மேல்—விஞ்ச
வமர்புரிவான் செல்வேனு னஞ்சேனீ யென்றா
னமர்புரிவான் மாவிலா னுங்கு. (கஅ)

இவ்வண்ணந் தந்தை யியம்பவினன் றெவ்வினவி
யுய்வண்ணஞ் சொற்றதொன் றுமோர்ந்திலான்—மொய்வலிகொண்
மெய்விதியை வென்றவரார் மேவும் வினைவழியே
செய்வனசெய் வேனென்றான் சேய். (க௯)

ஐயவெகு ளேலூ ரலைத்த கணங்கடமை
வெய்யவிறல் வாகுவினை வீத்துமகிழ்—செய்யவல்லேன்
வல்லை விடுத்தியென்று வன்கரங்கள் கூப்பியன்னான்
மல்லலந்தா டாழ்ந்தான் மகன். (௨௦)

மன்னன் மகிழ்வுற்று மைந்தவமர் மேற்றுணிந்தா
யொன்னலரை வெல்லவுண்டை யோடகறி—யென்னவிடை
கொண்டரந்தை யெய்தித்தன் கோயில்போய் முன்பெற்ற
வண்டர் படையெடுத்தா னுய்ந்து. (௨௧)

மார்பி லுறையிசைத்து மன்விரலிற் புட்டிவிட்டுக்
கார்முகமங் கையேந்திக் கைப்புடையாத்—தார்கணையே
யாவம்பின் வீக்கி யணிகந்தேர் சுற்றமணி
மேவுவைய மேலிவர்ந்தான் வேந்து. (௨௨)

கொற்றமுறு தேர்கரிமா கூரவுணர் வெள்ளமெனுஞ்
சுற்றினபல் கேதனங்க டுன்னினவிண் — முற்ற
வியங்க டுவைத்தவிறை யின்கணான் புந் துன்பும்
வயங்கக் களம்புகுந்தான் மன். (௨௩)

மன்னவன்மூ வாயிரு மற்றவரு மாய்ந்தமைகண்
டின்னற் கடல்வீழ்ந் திரங்கியெழுந் — தன்னலர்மேற்
சீற்றங் கிளர்ந்துசெலத் தேர்ந்துரு ளாலிணைய
மாற்றங் கிளக்கலுற்றான் மன். (௨௪)

தொகுத்தபல பூதரைமுன் சூழ்ந்துலைய வாட்டி
வகுத்தமறை வேட்கிளவன் மைந்தற் — செகுத்திலனேல்
வெல்பணியல் குல்லிழைந்து வேசையர்கள் பின்சென்மாண்
பில்வறியா னில்விளங்க யான். (௨௫)

என்னவொரு சூள்விளம்பி யேக வவனவுணர்
மன்னனிகம் பேர்ந்துகண மாப்படைசேர் — துன்னவே
போரியங்க ளார்த்தனமென் பூழிபோய் வானினோ
டாரெண் டிசைமறைத்த வாங்கு. (௨௬)

ஆர்த்தார்திண் பூத ரடுக்கவெடு மாரிபெய்தார்
கூர்த்தார் படைசொரிந்தார் கூரவுணர் — யிர்த்தா
ரெழுமாக் கதைநாஞ்சி லேர்விற் கணைமுன்
விழுமாப் படைவிடுத்தார் வேர்த்து. (௨௭)

இருமாத் திறலினரு மெல்லும் மிருளும்
பொருமா றெனப்போர் புரிந்தா — ருருமார்ப்புப்
பூதருய்க்கும் குன்றுமராம் பொன்ற நிசாசரர்க
ளோதுகணை யாற்றடுத்தா ருற்று. (௨௮)

எற்கொளயில் வாண்மழுமு னின்னவற்றை வன்கண்ணர்
கற்களினூற் றாள்கண்டார் காய்களத்தி — னற்கணத்தோர்
பல்லோர் மடிந்தார் பகருந் தகுவரிலும்
பல்லோர் மடிந்தார் பதைத்து. (௨௯)

பாய்ந்த கலினமா பாய்மதமா தேரிவைகண்
மாய்ந்து புவியின் மறிந்தனவே — சாய்ந்த
பிணக்குவியல் விண்ணிவந்த பேயெருவை ஞாளி
கணக்கிலன சூழ்ந்த களத்து. (௩௦)

இருபா லருமிவ்வா றேய்ந்துபொரக் கூளி
தருதூசித் தார்முரியத் தான்பின் — வருகூழை
துன்றிமொப் பூதர் துதையவுண மாக்கடலை
நின்று கலக்கினார் நேர்ந்து. (௩௧)

ஓடிந்தன திண் டேர்க ளொழிந்தனகைம் மாக்கண்
மடிந்தனமா வல்லவுணர் மாயத்—தடிக்தகணங்
கண்டா னதனையெண் ணைக் காய்ந்தான் மணித்தேர்மேற்
கொண்டா னெதிர்ந்தான் கொதித்து. (௩௨)

வெங்கதிரோன் றன்பகைஞன் வில்வளைஇப் பல்கணை தூ
யங்கனுறச் சாரதர்கண் டார்த்தசலக்—தங்கமரஞ்
சூலமழு வாதி துயர்படைக ளேண்டவெய்யோன்
சாலவழற் கோலுய்த்தான் றான். (௩௩)

அங்கிப் படைதூண்ட வக்கணத்தி லக்கணத்தோர்
துங்கவரை யாதியெலாந் தூள்படலும்—பொங்கவுணன்
சாயகங்கள் சாரதர்மேற் றன்பெய்தான் வான்பெயலி
னேயகங்கொண் டேயுலைந்தார் நொந்து. (௩௪)

விட்டவனல் வெங்கணைகள் வேதாள வீரர்மேற்
பட்டழிவுற் றன்னார் படர்ந்தமையுந்—துட்டவெஞ்சூர்
மைந்தன் றிறலும் வயமொய்ம்ப னோக்கியந்தே
ருந்தியொல்லை யேகினா னுற்று. (௩௫)

கந்தவே ணற்றாள் கருதிப் பரவிப்போய்
வெந்தகுவன் றானையட்க விற்குனித்தா—னந்திறலோன்
வெப்படையுஞ் சூலம்வாள் வேனேமி யாதியுற
வப்படைஞர் வீசினா ரார்த்து. (௩௬)

வீசுபடை வீந்துகவே வீரமொய்ம்பு வில்லுமிழ்ந்தாங்
காசுகமெண் ணில்லவிட வப்படைமாய்ந்—தேசுறவே
பற்றலர்மேற் பிற்றையுங்கோல் பற்றவுய்த்தான் மற்றவருக்
கிற்றமுடி யாதியங்க மே. (௩௭)

காரழிந்த தென்னக் கயமழிந்த மின்னுமணித்
தேரழிந்த மாவழிந்த தீயவுணர்—போரழிந்த
வெல்லையிலே ணம்படைக ளிற்றவே கொல்லிவன்றன்
வில்லினைச் சீற்றமுற்றான் வேந்து. (௩௮)

விடுத்திவல்லை தேரைவல்லோய் வீரன்முன் னென்ன
நடத்தினனன் ஞகர் நடுங்க—வடற்றகுவன்
வெஞ்சினத்தின் வில்வளைஇ வெய்யபடை வீத்ததினை
வஞ்சினத்தின் வெல்வனென்றான் மற்று. (௩௯)

என்றலுந்திண் மொய்ம்ப னிமையோ ரிசைவகாண்பார்
நின்றமர்க்குத் தாழாமே நேர்தியெனத்—தன்றலுவி
லாயிரத்த வெங்கணைகோத் தாகந் துளையாக
வாயிரத்தங் காலவுய்த்தான் மன். (௪௦)

ஆகமதின் மூழ்கிவிடு மாசுகங்கள் போழ்ந்துபுற
மேகமுரு கேசற் கிளையவன்றான்—சோகமொடு
செய்யதனு வாங்கிச் சிலீமுகமோ ராயிரமவ்
வெய்யவன்றன் மேல்விடுத்தான் வேர்த்து. (௪௧)

ஆயிரங்கோ லம்புயத்தி லாழ்தாலுஞ் சூர்மைந்தன்
றாயவன்மே னூறுகணை தூயவன்வின்—மாயவே
துண்டமுறக் கண்டனன்றிண் டோளிளவல் வாளவுணன்
முண்டநுதல் வீசினன்வேன் முன். (௪௨)

பானுப் பகைஞன்றன் பாலத்திற் பட்டதுங்கோல்
வானுற்ற செக்கரென வார்குருதி—தானுற்ற
நின்றயர்ந்து தேர்ச்சியுறு நீசன்மேற் றேசினன்கா
றுன்றுபடை விட்டான் றொடர்ந்து (௪௩)

வெய்யவனு மப்படையே விட்டுவன்மை யாற்றிடலுந்
துய்யவனொண் டப்படையைத் தூண்டினான்—கையனுமோர்ந்
தப்படையே யுய்த்தா னடலோன் படைபொருதே
யெப்படையும் வீத்துவந்த தீங்கு. (௪௪)

செங்கதிரோ னன்முகத்தோன் செங்கண்மால் வன்படைகள்
வெங்கயவ னூழினுய்ப்ப வீரன்மே—லங்கவனு
மவ்வப் படைவிடுத்தா னத்தன் படைவிடினான்
றெவ்வப் படைவிடுவான் றேர்ந்து. (௪௫)

ஆதலினா னப்படைவிட் டாவதென்கொன் மாயையா
லேதிலனைக் கோறனல மென்றுநினைந்—தேதவுணன்
மாயவிஞ்சை மந்திரத்தை மன்னகத்தி னுன்னியந்தேர்
மேயவண மேமறைந்தான் வேட்டு. (௪௬)

முன்பின் கதிர்தருதேர் முந்தவெய்யோ னந்தவன்மேல்
வன்பினப்பு மாரி வழங்கினான்—றன்பின்மெ
யுற்றிரத்த முந்தியென வோடவுற்றார் சோர்வுகண்டு
வெற்றிமொய்ம்பன் சீறினான் வேர்த்து. (௪௭)

ஒன்றுமொரு மாயையினா லுய்ந்துமுனம் போயினா
னின்றுமஃ தன்னினா லெய்துமோ—நன்றுநன்று
வெல்கிற்பே னென்றுவந்த வெய்யவனை நையவின்னே
கொல்கிற்பே னென்றெணினான் கூர்ந்து. (௪௮)

ஆயுமா புந்திதுணிந் தையனிவன் சூழ்ச்சிதனை
வீயுமா காண்பலென விட்டனன்சிட்—டேயுமஃ
தாருமா தித்தனிற்சென் றட்டதம்மா யந்தானுந்
தேருமாச் சேணின்றான் சேய். (௪௯)

வானின்ற மைந்தனுடன் மாயமது போயதுஞ்சேர்
தானின்ற வீரன் றகைமையும்பா—ராகின்று
னீங்கிவனே யானவே னென்று வெறுழ்வரிவில்
வாங்கிவிண்டே ரோடுசென்றான் வாகு. (௫௦)

விண்ணிற் புகுவீரன் வெல்லரும்வெஞ் சூர்மைந்தன்
கண்ணெதிர்நேர்ந் தோர்கோடி காண்டமுய்த்தா—னண்ணலனு
காரிகொடு வில்வாங்கி நாமந் தருவிசிக
மாரி பொழிந்தான் வலிந்து. (௫௧)

ஆருயிரு வோருமழன் றம்பனலுஞ் சீற்றமுற்றுப்
போரிழைப்ப தென்னப் பொருதுநின்று—ரோரிமைப்பிற்
கூரா யிரநூறு கோடியாஞ் சாரியுற்ற
சீரார் திறலினர்பொற் றேர். (௫௨)

ஏற்றமர்செய் வீரர் எதிரெதிராய்ப் பெய்பகழி
நாற்றிசையண் டப்பித்தி நண்ணிவிண்ணின்—மேற்றரணி
மன்னன் கதிர்வரவை மாற்றியுல காருயிர்கட்
கின்னல் விளைத்த விசைந்து. (௫௩)

உற்றிருவ ருய்த்தகணை யூழிக்கா லத்துருவ
மற்றவுணர் வன்பூதர் மாகரிதே—ரிற்றவங்க
மொன்றுவசேண் செல்லவொன்றை யொன்றை யிடம்வலமாச்
சென்று திரிவவவர் தேர். (௫௪)

இகழ்வர் முனிவ ரியம்புவர்சூ ளாடல்
புகழ்வர்தம் வீரம் புகல்வர்—திகழ்வர்கோன்
மாரிபெய்ய வென்றாழ் மறைந்தான் கலைகுறைந்தான்
வாரியின்கண் மேவு மதி. (௫௫)

காலெனவெங் கூற்றென்னக் காளமெனத் தீயென்னக்
கோலெனவென் றாழென்னக் குன்றெறிந்த—வேலெனவே
யெற்றிருநீர் பார்திசைவா னெண்ணிலண்டம் புக்கனவே
மற்றிருவர் விட்டிடுமொ வண்டு. (௫௬)

ஏவினெரி கின்றனகா ரெய்ந்துகரி கின்றனமா
மாவுததி வற்றினபார் மன்புகைவான்—மேவினதிண்
வீரரிரு வோரும் விசிக முறைமுறையாய்க்
காரெனவே பெய்வார் கனன்று. (௫௭)

போரிவ் வணமாற்றும் போததனைக் கண்ணுற்றோர்
யாரிவர்க்கொப் பாவ ரெனவியந்தார்—வீரமதில்
வெய்யனூ றாயிரங்கோல் விட்டிமையோ ருட்டியங்க
வையன்றோர் தூள்கண்டா னார்த்து. (௫௮)

வீரன் வெகுண்டுவிண்ணின் மேனின்று வில்வளை இக்
கூரியவோ ராயிரங்கோல் கொண்டவனூர்—தேரையட்டான்
வெய்யன் சினந்தைந்தே வீரமொய்ம்பன் மார்பகமுய்த்
தையசலத் தோள்புடைத்தா னார்த்து. (௫௯)

கந்தவே டேன் கணையீரேழ் தூண்டிவெஞ்சூர்
மைந்தன் முடிதகர்த்தான் வண்மடமே—முந்தித்
திவசஞ்செய் வானைச் சிறைசெய்தோன் வீரன்
கவசந் துணித்தான் கனன்று. (௬0)

ஈசன் மகனன்றீ தென்னு நகைத்தவுண
நீசன் மகன்றனுவை நேர்பிறைநே—ராசுகக்கோல்
கொண்டு துணித்தான் கொடியனன்னூன் மேல்விடுத்தான்
விண்டுமகன் முன்கொடுத்த வேல். (௬௧)

ஆண்டதனை யோர்ந்துசெய்யோ னம்பா யிரகோடி
தூண்டவவை யெல்லாந் தொலைத்ததுவிண்—காண்டரவே
வந்ததத னேனோக்கி வள்ளலான் வாளிலவன்
குந்தங் குறைத்தான் கொதித்து (௬௨)

ஆடினார்மன் னந்தரத்தா ராவுணர் தாமேங்கி
வாடினர்திண் வாகுறையுள் வாள்செறித்தா—னீடியவே
லிற்றதுகண் டம்மவுலி யிற்றதுகொல் லென்னவே
மற்றவன்கைக் கொண்டனனோர் வாள். (௬௩)

வெய்யன்வாண் மின்னின் விதிர்ப்பவுரு மின்னார்த்தே
லையன்முன் செல்லலும்பல் லாயிரங்கோல்—செய்யனெய்யத்
தீயனூரங் கீண்டுவிடர் செய்யவது கால்குருதி
யாயருவி யாயொழுகிற் றாங்கு. (௬௪)

மேல்வருகோல் பாரான் வியன்மருமம் போழ்ந்ததுன்னூன்
சால்புறுதன் மானமொடு தாவோடி—யேல்வலியா
னெல்லைச் சிறையிட்டோ னேதியால் வீரமொய்ம்பு
வில்லைத் துணித்தான் வெகுண்டு. (௬௫)

வெந்தகுவன் விண்மிசைவாள் வீசித் திரியுமெல்லை
யிந்துமுடித் தாதை யெனச்சினந்து—நந்தொளிவாள்
சுற்றியெங்கண் போதியெனுச் சூர்மகனைப் போயெதிர்ந்தான்
வெற்றிமிகு தோளான் விரைந்து. (௬௬)

ஏற்ற விளவலெதி ரேகிவெய்யோ னேதியிகல்
கூற்றனனோர் தந்தமர்செய் கொள்கையென—வாற்றலுங்கந்
தொட்டரிவர் நாந்தகத்தாற் றுன்னி விலக்குவார்
வட்டணைசூழ் வார்மாறு மாறு. (௬௭)

இவ்வா றிருவரும்வா ளேற்றமர் செய்காலைத்
தெவ்வானோன் விஞ்சைத் திறத்தினே—ரொவ்வான்கை
வானகற்றித் தோண்மேல் வலிந்தெறிந்தா னும்பரன்பு
கோனகத்திற் கொண்டார் குலைவு. (சுஅ)

அப்போ திளவ லருளுருவாங் கந்தவே
ளொப்போ தருந்தா னுளத்துன்னிக்—கைப்போதார்
வாட்படையின் வெய்யோன் வலக்கை துணிக்கவவன்
ஞாட்படையு மாமுயன்றா னன்கு. (சுகூ)

வெவ்விடக்கை வீழ்த்தலும்பின் வீரனவன் மேன்மாயை
யொவ்வுபடை யுய்க்கவுளத் துன்னினா—னவ்வமயஞ்
செங்கதிரோன் றெவ்வின் சிரத்தைத் திறல்வாகு
வங்கதிர்வாள் கொண்டறுத்தா னங்கு. (எ0)

சூரியன்மா மைந்தன் றலையவவ னுவிவவ்விச்
சூரியன்மா மைந்தன் றுதித்தகன்றான்—சூரியனெஞ்
சாரிமையோர் பாடினா ராடினார் வீரன்மேன்
மாரியெனப் பெய்தார் மலர். (எக)

பூத ரவலம்போய்ப் புந்திமகிழ்ந் தேத்தினா
ராதவனுந் தன்கவறீர்ந் தாடினனப்—போதகன்மா
வானந் தணந்தவனி வந்தடைந்தான் றன்னினத்தைக்
கானந்து தாரான் களித்து. (எஉ)

பானுப் பகைஞனும் பாதகனை யட்டனஞ்சு
டானுமுற்றிற் றெம்பிரான் றன்முன்னர்ச்—சேனையொடு
மேவுதுஞ்செல் வீரென்றான்வீரன் வினவியுற்றார்
போவதுநன் றென்றார் புரிந்து. (எங)

நம்பிபின்னோர் பூதர் நவிலனிக வீரர்பாற்
பம்பி வரப்படர்ந்து பாசறைபுக்—கம்பிகைதன்
காதலனுங் கந்தக் கடவுளைக் கண்டுமலர்ப்
பாதம் பணிந்தார் பரிந்து. (எச)

தாண்முறையிற் றாழ்ந்தெழலுஞ் சண்முகனீ சூர்மகனோ
டேண்மலிபோர் செய்துவென்றா, யாமகிழ்ந்தாங்—கேண்மதி
வேண்டுவதை யீதுமென வீரனினை யன்றியொன்றும்
யாண்டுமிலை யொன்றருள்வா யெற்கு (எரு)

மன்னு மளகையர்கோன் வாழ்க்கை தனைக்குறியேன்
மின்னுமக வானரசை வெஃகேன்மா—லுன்னுமயன்
பன்பதத்தைக் கான்ற பதமென்ன வேமதியே
னின்பதத்தை யேவிழைவே னோர்ந்து. (எசு)

உற்றவிறல் வாகுவினுக் குன்னும் வரமுதவி
நற்றுணைவர் தங்கட்கு நன்கருளி—மற்றவர்கண்
மேவிருக்கை யாவைக விடையளித்தான் றந்தைக்கு
மேவிருக்கை யோதுகந்த வேள். (எஎ)

ஈதிவர்தஞ் செய்கையே லேந்தலையுங் கொல்வரெனத்
தூதர் கருதிப்போய்த் தொல்லவைபுக்—கோதருஞ்சூர்
மன்றலந்தா டாழ்ந்துன் மகன்முன்ன முற்றவொற்றுற்
பொன்றலுற்று னென்றார் புலர்ந்து. (எஅ)

தூதருரை கேட்டளவிற் சூர்துயர மாக்கடலிற்
போத வழுந்திப் புரண்டுயிர்ப்பங்—கூதுந்
துருத்தியென வீங்கநெய்த்தோர் சொட்டவிழியோருங்
கருத்தின்றிச் சோர்ந்தான் கவன்று. (எகூ)

வீடரிய மெய்வெதும்ப வெங்க ணருவிநீ
ரோடவுளஞ் சோர வுயிருசலாட
வுரங்கிளர்தோட் சூர்விளிந்தா ரொப்பவயர் வுற்றோர்ந்
திரங்கியின்ன செப்பினு னேய்ந்து. (அ0)

மைந்தனே யென்றன் மழகளிறே தீவினையேன்
சிந்தைதனிற் றித்திக்குந் தெள்ளமுதே—யெந்தையே
மின்னைநிகர் வேணியரன் மேவுமகன் வீத்தனனோ
வுன்னையிதற் கோவளர்த்தே னுற்று. (அக)

ஒன்னார் சிறைவிடினும் வுண்டுநமக் கென்றனையவ்
தன்னு துனையமருக் குய்த்திழந்தேன்—பொன்னுரு
மாமலர்க டேற்றி வழிபாடு செய்விபுசர்
தாமலர்க டேற்றுவார் சார்ந்து. (அஉ)

மைந்தர் பலர்மாய்ந்தார் மாய்ந்துமவர் நின்றுணையாற்
சிந்தை தளராதிருந்தேன் நீயனைவிட்—டெந்தைசென்று
லென்னு ருயிரோ விராதிருக்கு முன்வரத்தான்
மன்னுவென் செய்வேன் வதிந்து. (அங)

சிந்தா மணியேயென் செல்வமே கண்மணியே
நந்தா னவர்குலக்கோர் நாயகமே—யெந்தாய்மு
னுன்றனைக் கஞ்சி யுறங்காத மாயவனு
மிந்நா ணனிதுயில்வா னிங்கு. (அச)

செங்கதிரோன் றன்னைச் சிறைவைத்தா யின்றவனும்
பொங்கு மகிழ்வோடு போகானோ—விங்குவந்த
வொற்று னவனு லொழிந்தா யிழிந்தேனுன்
பற்றார் பழிக்கப் பரிந்து. (அரு)

ஆருயிரே யென்ற னரசே நினையின்று
போருனுற்றப் போக்கிப் புலம்புகின்றேன் — வீரமொடு
செற்றமிக விந்தத் திருமா நகர்புகுந்த
வொற்றனம ணேவரியே னோர்ந்து. (௮௬)

கூற்ற னகரிற் குலவினையோ வஃதன்றேன்
வேற்றொ ரிடம்புக்கனையோ மேவியொன்றுந் — தேற்றேன்
றனியாய் வருந்துந் தமியேன்முன் வாரா
யினியார் துணையா மெனக்கு. (௮௭)

என்று வருந்தி யிரங்கச் சிலரோடித்
துன்றுக வத்திற் றுணிவுற்ற — மன்னர்
படிவங் கொடுவந்து பார்த்திபன்முன் னுய்த்தே
ரடிமிசைவீழ்ந் தேகலுழ்வா ரார்த்து. (௮௮)

மன்னவர்மன் றண்டமா மைந்தனுடல் கண்டரற்றிச்
சென்னிகையிற் பற்றுந் திருநோக்குந் — துன்னுகண்ணி
லொற்றுமுத்த நல்கு முயிர்க்கும் புரளும்வாய்ச்
சொற்றளருஞ் சோருந் துயர்ந்து. (௮௯)

கையிலொன்றைப் பற்றிச்செங் கட்படுசெந் நீராட்டி
வெய்யவனைப் பற்றும் வியன்கையிதோ — வையவெனுஞ்
சார்கணைகண் மூழ்கலினாற் சாளரங்கள் போற்புழைகொண்
மார்புபுயங் கண்டழுங்கு மற்று. (௯0)

அங்கமெலாஞ் சேர்த்துருவ மாக்கியதை நோக்குமின்னு
மங்கெ னுயிரே வந்தையென்னுஞ் — செங்கை
மறிக்கு மழும்விழுமன் வாயிற் புடைக்குங்
கறிக்கு மெயிறு கனன்று. (௯௧)

மன்னவர்தம் மன்னிவ் வணமின்ன லுற்றிரங்க
வன்னையது கேட்டலமந் தாகுலமுற் — றுன்னரிய
மன்னிலத்தில் வீழ்ந்து மயிர்குலைத்து வெவ்வலையிற்
றுன்னுமயில் போன்மெலிந்தாள் சோர்ந்து. (௯௨)

அல்ல லுறுமிறைவி யந்தப் புரநீங்கி
யொல்லைமகற் காண்பனென வோடிவர — வெல்லையில்பன்
மங்கைமார் தாங்குழீஇ மற்றவடன் பாங்குறீஇ
யங்கைமார் பெற்றினா ரார்த்து. (௯௩)

இந்திரைக்கு நேர்வருமா தெல்லையிலா மாதரொடு
முந்தியே யேகி முடிந்துலைந்த — மைந்தன்மேல்
வீழ்ந்து மயங்கினாள் விம்மினா ளம்பினாற்
போழ்ந்தபிணை போன்றாள் புலர்ந்து. (௯௪

வெய்யோனென் றாழ்நீண்ட விண்ணில் விரைந்தேகிக்
கையோ டவற்கொடென்முன் காட்டினையே—யையோவெங்
கூற்றனுயிர் கொண்டனனோ கோமகனே கொஞ்சுமின்சொன்
மாற்றம் வழங்காயோ வந்து. (௯௫)

கஞ்சத் தணங்குதன்செங் கைக்கிளியான் வேண்டவதை
நெஞ்சத் துவகையுற நீயளித்தாய்—மஞ்சநோந்தேற்
இன்றொருநன் மாற்ற மியம்புகிலாய் செய்வகைதா
னொன்று மறியே னுளைந்து. (௯௬)

புகல்குகனை யிவ்வூர் புகுவித்துக் கொன்செ
யிகல்வினைத்துப் புத்திரரை யெல்லாஞ்—செகுவித்துத்
துன்போடிந் நாணீயுந் துஞ்சிடச்செய் தார்மடவா
ரென்போல வாக வினைந்து. (௯௭)

வனப்புருமெய் யோடு மனத்துணிவாய்ப் போய்வான்
றனிற்புகுந்தாய் மைந்தநின்பாற் சார்வா—னினைப்புற்றுத்
துன்று முளந்தான் றணியா துலையுமா
னன்றுநன்றி யான்கொண்ட நண்பு. (௯௮)

நையமார்க் கின்ன னவிற்றுறனன் றல்லவென்றேன்
செய்ய மொழித்திறத்தைத் தேறாமே—யைய
வுனையிழந்தேன் மன்னவனு முய்ந்திடுவான் கொல்லோ
தனதுயிரு மோவாமே தான். (௯௯)

என்றின்ன பன்னி யிறைவியிரங் காநிற்கத்
தன்றுணைவி மாருந் தழைகிளையுங்—கன்றிழந்த
வாவிற் கதறினா ரன்னவரைத் துன்னவனாக்
கோவிற்குள் கொண்டுய்த்தான் கோன். (௧௦௦)

மாற்றார் குழுவெல்லாம் வல்லையிலின் றேயட்டுச்
சேற்றார் குருதிவிட்டுத் தீமகமொன்—றாற்றாமு
னீற்றுறுசெய் தன்னை யெழுப்புவனிம் மெய்யைவையாப்
போற்றிடுதி ரென்றான் புலர்ந்து. (௧௦௧)

அங்கதுகேட் டுள்ளா ரழகிதென மைந்தனெழில்
பொங்குடலோர் சாருய்த்துப் போற்றினார்—வெங்கட்சூர்
நண்ணலரை யெம்பிக்கு நல்லுணவா நல்குவனென்
றெண்ணமது கொண்டா னியைந்து. (௧௦௨)

திம்பையந்தார் வேய்ந்தமுடிச் சூர்முதலிவ் வண்ணமுன்னிச்
செம்புனற்கட் டூவரிற் சில்லரைப்பார்த்—தம்பாந்த
பன்னுததி யுத்தாமாம் பாங்கா சுரத்தாசான்
பின்னவனைத் தம்பியெனென்றான் பேர்ந்து. (௬0௩)

பானுகோபன் வதைப்படலம் முற்றிற்று.

ஆக திரு வெண்பா, அ௩௪.

# சிங்கமுகாசுரன் வதைப்படலம்

என்னவொற்றர் கேளா விறைவனடி தாழ்ந்தேகி
யுன்னமதின் முந்தி யுதக்குவரி—துன்னியெயின்
மின்னகரம் புக்கு மிளிர்மந் திரத்துட்போய்
மன்னவனைக் கண்டார் மதித்து. (௧)

மூந்துதிறற் றூதர் முறையே வணங்கிநிற்ப
வந்ததிங்கென் னென்னவரி வத்திரத்தா—னந்த
வளித்தா ளவுணர்கோ னையகினை வல்லை
விளித்தான் வருகென்றார் வேட்டு. (௨)

மருக்துவின்முந் தொற்றருரை மன்வினவி யங்கண்
விருத்தமுண்டோ சொல்விரென வேந்தே—யுருத்தும்பி
தன்னைவெற்பை வேலினட்ட சண்முகவே ளும்பரொடு
மன்னகர்வந் தெய்தினான் மற்று. (௩)

வந்தானென் றேற்றுமைந்தர் மந்திரிமார் மாய்வுற்று
ருய்ந்தா னிரணியன்போ யோதமுற்றான்—மைந்தார்சூ
ராங்கிருந்தா னென்ன வரிமுகவன் சீறியெழீஇ
யேங்கவுண ரோடுசெல்வா னேய்ந்து. (௪)

ஏண்டருமா றாதவரை யென்றானை யைக்கொணர்தி
நீண்டெனவன் றூர்சொலலு மேய்ந்தபடை—யாண்டுற்ற
வாங்கதுகண் ணுற்றரைய ரோர்மன்னர் சார்துன்ன
வோங்கணிதே ரேறினா னுற்று. (௫)

நாற்படையி னின்றெழுதா ணண்முகில்போல் விண்போர்ப்ப
வேற்படைமுன் பல்படைகண் மின்றரவே—பாற்படுமா
பல்லியங்க ளார்ப்பப் படானிக மூழிநாட்
செல்லியலைக் காட்டுஞ் செறிந்து. (௬)

கன்ன லளவையிலா காயநெறி யாற்சிங்கன்
மன்னமர்ம கேந்திரமா மாநகர்போய்—மின்னின்
மிடைந்தார் தலைவர் வியந்திறைஞ்ச வுள்புக்
கடைந்தா னயர்சூ ரவை. (எ)

மன்சிங்க மாமுகவன் மன்ன னடிமலரிற்
றன்சிரமா மாலையுறத் தாழவன்றான்—பன்மு
னிணங்கியபின் றோற்றமுவ வெந்தாய் வதன
முணங்கியதென் சொல்லென்று ரோர்ந்து. (அ)

ஏந்த லிளவலைமுன் னேயிருத்தி யன்றுநீ
போந்தபின்ன ரிந்நகரிற் போர்புரிவான்—சேந்தனென்போன்
றூனையுடன் சார்ந்து தனிப்பா சறையின்க
ணேனையரோ டுற்று னினிது. (கூ)

மன்னவன் றன் றூனைபொர மாய்ந்தமைச்சர் மைந்தரிற்றன்
பொன்னனிரிந் தோடிப் புணரியுற்று—னின்னதாற்
சேனையொடு நீபோய்ப்போர செய்தவனேண் கொண்டிவண்மீள்
யானழைத்த வேதிதென்று னீங்கு. (கம)

சூரனிது சொல்லத் துணைவன் சுளித்துநெஞ்சிற்
சாரஞரோ டன்னவன்று டாழ்ந்துநின்றே—யோருமைந்தர்
தொல்லமைச்சர் சுற்றந் தொலைத்தமர்ந்தாய் புல்லிது
புல்லிதுநின் புந்திப் பொருள். (கக)

மூலமதைப் பாலனென முன்னினையென் சொன்மறுத்தாய்
மேலை விதியையார் வெல்லுவார்—சாலவே
சென்றிடுநீர் யாப்பதிலென் சென்றவரைக் கொன்றுதுங்கி
நின்றிடுகின் றேன்காண்டி நீ. (கஉ)

கந்த னொருவற் கடக்கப்பெற் றேனேனன்
வந்துன்னைக் காண்பனின்றேன் மற்றெவர்க்கு—மந்தமெய்துங்
கன்மமிது செய்வனசெய் காவலவென் றேவிடைகொண்
டின்மந் திரம்புக்கா னுற்று. (கங)

மேருநிகர் போனகஞ்சூழ் வெற்புறழ்மா வூன்வகைகள்
சாருநெய்த்தோர் பாறயிர்தேன் றண்டேறல்—வாரிதியுண்
டின்வாச நீர்தோய்ந் திருங்கலவைச் சாந்தணிந்து
மன்வாசத் தார்மிலைந்தான் மன். (கச)

வின்மணிப்பூண் மெய்யில் வெயிலெறிப்ப வெண்ணீறு
மின்முகங்க டோறுநிலா வீசவணிந்—தென்மணித்திண்
டண்டமொடு நேமியரன் றூயமரர் தந்தபடை
கொண்டனன்செங் கையிற் குறித்து. (கரு)

கைத்தலத்திற் பாசமுதற் காய்வன் படையேந்திப்
பத்துநூ றாயிரமாம் பண்பரிபூண்—சித்திரமா
மன்மணித்தே ரேறியுற்றான் மைந்தருற்றார் தானைசுற்ற
முன்மந் திரவாயின் முன். (௧௬)

மன்னிமையோ ரேற்றமொடு மண்ணவர்தம் வாழ்வவுண
ரின்னலிவை நீத்தோ ரெரிகான—மென்னியலார்
கார்கொள் கருத்தினர்வேள் காண்டமுண்டோ ளார்பொருதே
மார்பன்றி பூணார் வடு. (௧௭)

எண்ணிலுயிர் யாவுமடு மேந்தலன்றா ராரழல்கால்
கண்ணினார் வார்கழல்பூண் காலினர்விண்—ணுணணவல்லார்
போரி லெதிர்ந்தவர்மெய் போழ்ந்தயிலால் வீழ்ந்தயிலான்
சோரிபற்றா மாவயிற்றார் துய்த்து. (௧௮)

தண்ட மழுச்சுண்டி சாபம்வே லஞ்சிறட்டை
யெண்டருவெம் மாப்படைக ளேந்தியே—பண்டநந்த
வார்த்தார் முகிலென்ன வார்க்குமிபம் வீழ்க்குமதஞ்
சீர்த்தாரய்த் தார்முன் செலும். (௧௯)

பாய்மா குரத்தூள் பரிதியந்தேர் மாசெவிகண்
போய்மா சுறுத்தவவை போதலைவிட்—டாய்மா
நெறிதடவத் தேர்களின்மன் னீர்கொடிக டாக்கக்
குறியதனிற் செல்லுங் குடக்கு. (௨0)

மாவரங்கொள் சூரிளவன் மாயுமென முன்னுணர்ந்தோ
மேவயங்கள் சோர்ந்து விழுமமுற்ற—தாவுதுதிக்
கைம்மா புலம்புற்ற காணெடுந்தே ரேங்கினவே
வம்மா வியமிரங்க வாங்கு. (௨௧)

ஆர்ப்புறுமா வேழ மசுவந்தேர் காலாளென்
னாற்படைமா மள்ளர் நனிமிக்கோர்—கார்ப்புணர்ப்பன்
றுங்கமன்சூர் பின்றோன்ற றொல்படைமன் மாயைமகள்
சிங்கனெனப் பேர்வாய்ந்தோன் றேர்ந்து. (௨௨)

நாற்படையுங் கொண்டு நனிமாக் கடலென்ன
வார்ப்படைய நெற்றியனு யாங்ககன்றான்—வார்ப்பம்பை
கள முடிக்கைதக்கை கைத்துடிமன் பேரிமுதல்
யாளிமுகன் முன்முழங்க வேய்ந்து. (௨௩)

சிங்கங் கொடிகூளி காளியூ ணச்சியுறச்
சிங்கமுகன் சேனையொடு சென்றிடக்கண்—டங்கயன்மா
லும்பருலைந் தோடி யொளிர்பா சறையமர்வேள்
செம்பொனடி தாழ்ந்துரைப்பார் சேர்ந்து. (௨௪)

ஆயிரமாஞ் சென்னியனீ ராயிரமாஞ் செங்கையா
னாயிரமேற் கொண்டவண்ட மாளுவென்றே—னாயிரமா
யோசனைநீண் மெய்யுளான் யோசனைநீள் பொய்யுளான்
யோசனைநீண் மாய முளான். (உ௫)

துஞ்சினுமெ லாந்துஞ்சான் றம்பிபணி தாங்குலக
மஞ்சவொரு நாளெடுத்த வாண்மையுளான்—மஞ்சுமிடற்
றாலமணி யத்த னளித்தவொன் றோ ராருயிர்கொள்
சூலமங்கைக் கொண்டான் றுதைந்து (உ௬)

அண்ட மனைத்துமோ ரங்கையிற்கொண் டெண்டிமிழுந்
திண்டிறலான் வன்மைமென்மை சேர்துலைத்தட்—டெண்டாக்கீழ்
மேக்குறல்போல் வேலைநீர் மேதினியின் மோதிவிண்ணிற்
றாக்கநடை கொள்கழலான் றான். (உ௭)

தண்டமிஃ தென்று தருக்கி யெடுத்தேமே
லண்ட கடாக மதின்மோத—நண்டுகள்க
ளாதலினெய் தீதென வாடகமா வெற்பைமுன்போன்
மாதலத்தில் வைத்தோன் மகிழ்ந்து. (உ௮)

ஆசினெடு நேமியுதக் காசுரத்தில் வாசமுளான்
வீசிடின்மன் னெவ்வுலகும் வீக்குமிரு—பாசமுற்றோன்
வெங்கட் கொடியசூர் மேவிளவல் சிங்கமுக
னெங்கட் கிடர்விளைப்போ னேற்று. (உ௯)

அந்தமின்றத் றானையா மாழிமுற்றப் போர்புரிவான்
வந்தனனன் னுயிரை மாற்றியரு—ளொருநதையென
வங்கனிலற் பாரா வணித்தேர் கொணர்தியென்றான்
செங்கதிர்வே லங்கையுறு சேய். (௩0)

ஐய னருகினின்ற வாளிமொய்ம்பன் றன்முனம்போய்ச்
செய்யசுழற் போது சிரஞ்சூடி—வெய்யருட
னுன்னனிகஞ் சூழ்ந்திடச்சென் றென்னலர்செற் றேமீள்வ
னென்னை விடுத்தியென்றா னீண்டு (௩௧)

ஆண்டகைபுன் மூர லயர்ந்து மருவலன்போர்
வேண்டினைநன் றுய்த்தனநீ மேவெனலு—மேண்டிறலோன்
றானெழுந்து கைகூப்பிச் சாரதர்கள் சார்தரத்தன்
வானெழுந்த மாடமுற்றான் வந்து. (௩௨)

காண்டப மேயவரைக் கண்ணுளதோர் காட்சியான்
காண்டப மேயவரை கைக்கொண்டா—னெண்டியூர்
முன்னிட்டான் கோதைசுற்றி முன்சாரி கையாத்துப்
பின்னிட்டான் றாணி பெரிது. (௩௩)

தெய்வப் படைமுற்றுந் தேர்ந்துகொடு தம்பையிலைக்
கைதவையத் தேறி யகலுமெல்லை—மொய்வரிகொ
ளெண்ம ரிலக்க ரிரதமூர்ந் தேண்படைகொண்
டண்மினர்மா வீரனைச்சூழ்ந் தாங்கு. (௩௪)

ஆயிரமா வெள்ள மனிக மெழுந்தசல
மீயுயர்கா வெம்படைகை மேவியே—சீயமுகன்
றன்பான் மிடைந்துவந்த சாற்றியங்கார் போற்றழுங்க
வன்பார்க் களம்படர்ந்தான் வாகு. (௩௫)

ஆயபோ தாயவுண னந்தானை வந்தார
வேயவள்ளல் சேனையுமே ரேய்ந்ததுமா—தூயகங்கை
வானதிசேர் வாரிபோல் வாச்சியங்க ளார்த்தகொடி
மேனிலவி யார்த்த மிளிர்ந்து. (௩௬)

தேரிபமா திண்பொருநர் சேரிரண்டு சேனையொலி
காரொலிமுந் நீரொலியிற் காதுறுத்தப்—பேருமெல்லை
செய்யோன் படைஞர் செருமுபன்று ரஃதுணர்ந்து
வெய்யோன் படைஞருற்றார் நேர்ந்து. (௩௭)

திண்டங் கணிச்சி தகைபிண்டி பால வவை
யண்டரஞ்ச வோச்சினர்வி லம்பெயதா—ரெண்டகுவர்
வெற்புமழுத் தண்டம் விருக்கமிவை வீசினார்
பொற்புறுமா பூதர் புகைந்து. (௩௮)

வரஞ்சிந் தினர்தோள் வலிசிந் தினர்தாள்
கரஞ்சிந் தினர்பல் கலன்சே—ருரஞ்சிரங்கள்
சிந்தினர்வெங் தானவருந் திண்பூத ரிற்சிலரு
முந்தியினெய்த் தோரோடிற் றுற்று. (௩௯)

குன்றன்ன வங்கங் குவிந்தசெந்நீ ராறன்ன
சென்றிடுதே ரோடமன்ன தீர்ந்தவர்தந்—தன்னுகைகான்
மீனன்ன பாறுகொடி மேவுசிரற் புள்ளன்ன
வாரிணம்பல் கன்முத் தன. (௪௦)

இவ்வண்ணம் போர்புரியு மெல்லைவெய்யோன் றானைமள்ள
ரவ்வண்ணல் சேனையைச்சென் றார்த்தடர்ப்ப—வெவ்வமுற்று
முன்றார்மன் பூதர் முரியவன்று றுட்சிங்கன்
சென்றா னவர்க்கதையிற் செற்று. (௪௧)

அன்னான் செலும்போ தசுரரின்மா னேயொருவன்
மன்னார் சதமுகனா மத்திறனன்—றன்னாசீ
யெங்கே குதிநில் லெனவெதிர்ந்து வில்வளை இ
யங்கே மழைபொழிந்தா ரார்த்து. (௪௨)

சாயகங்கள் பட்டிடலுந் தண்டினால் வீட்டியே
தூயனடி யான்கவசந் துண்டித்தான்—றீயவனு
மிண்டிற் கதைவீச வீரனேற் றன்மார்பு
தண்டிற்று வீழ்ந்ததுகீழ் சார். (௪௩)

விண்டதுகண் டேணவுணன் வெங்கணிச்சி யோச்சினான்
விண்டமா ரஞ்சுறவே மேவதனைத்—திண்டிறலோன்
கைத்தண்டின் வீட்டியவன் கார்முகத்தைச் சீர்குலைத்தான்
மைத்தகுவர் நொந்தார் மருண்டு. (௪௪)

கொடிய தசமுகனோர் குந்தமுய்ப்பச் சிங்கன்
கடிதிலோ ராழிவிட்டான் காய்தந்—தடர்தாலுந்
தீயவனோர் தண்டஞ் செலுத்தவவ னாகமுற்ற
தேய திரத்த மிழிந்து. (௪௫)

பாய்ந்தசெந்நீ ரோடுசிங்கன் பத்துத் தலையனுரத்
தேய்ந்தகையொன் றற்புடைக்க வேவிழுந்து—மாய்ந்தனன்செய்
போரவுணர் தானைசெயப் பூத னனகனெனபோ
னேரெதிர்ந்து தாக்கினா னேர்ந்து. (௪௬)

ஏற்றுவெங்கோ றாயமர்செய் யவுணர் தஞ்சிரங்கள்
பாற்றித் தரையிற் படுதலுமே—போற்றனகன்
றன்வயவ ரோடினார் துன்முகனை மேதார்ந்தவரை
நின்மினின்மி னென்றுரைத்தா னேர். (௪௭)

நின்றிலரைம் மேதார்ந்தவுண னெய்யிடுதீப் போற்கனன்று
தன்றனிவில் வாங்கிச் சரம்பொழிந்தான்—குன்றுபடை
யாதிகொடு பூத ரமர்புரிய விற்றசில
காதினசிற் சில்லவெதிர் காய்ந்து (௪௮)

ஊறுதரு மாயையினா லொவ்வொருமா பூதர்க்கு
நூறுநூ றங்கமுற்றே நொய்தினடப்—பாறியன்பு
மேயவரோ டாற்றமரும் வெற்றியுங்கண் டாடலென்று
மாயமெனத் தேர்ந்தான் மனத்து. (௪௯)

போதக்கோ னாக்கவது போய்மாயை நீக்கநின்றான்
மேதக்கோன் மேல்வெகுண்டு வில்வளைஇக்—காதக்கூ
ராயிரங்கோல் விட்டா னவைதொலைப்பான் வென்றியொன்று
மாயிரங்கோல் விட்டா னழன்று. (௫0)

ஆயிரங்கூ ரம்பா லவன்விடுத்த கோலறுத்துத்
தீயவன்வில் லேழ்சரத்தாற் சிந்தியுடன்—மேய
கவயமொரு வண்டாற் கடிந்தளவில் காண்ட
மவயவங்க ளெங்குமுய்த்தா னார்த்து. (௫௧)

மன்கணைமெய் முற்றுமட மாய்ந்தவன்போல் வீழ்ந்தயருந்
துன்முகன்போர் செய்யுந் துணிவின்றித் — தன்மனத்து
ளுன்மாயை மந்திரமொன் றுன்னியரு வாய்த்தேரின்
மின்மாக வாறுசென்றான் வேர்த்து. (௫௨)

மாதிடமார் பூதரொல்லை மாயையிற்செ றியனையிப்
போதடர்ந்து பற்றுதும் போதுவிரென் — றோத
வதுவினவிப் போரி லகன்றவரைக் கோற
விதுபுகழன் றேனுமன்றே யீங்கு. (௫௩)

ஓடினரைத் தஞ்சமென வுற்றவரைத் தாழ்குநராய்
வாடினரைத் தக்க வலியிலரைச் — சாடினவை
வீரரையல் லாரை வெகுளலீ ரென்றனன்மன்
சாரதர்கன் றென்றுணர்ந்சார் தாம். (௫௪)

அன்னதனைக் காணா வரிமா முகன்சீறா
முன்னருமா பூதர் முனைவாலுந் — துன்னுமன்னோர்
பைத்தமரங் கோடு படைகொடுபோய்ப் பற்றலன்மே
லுய்த்தமர்செய் கின்றா ருருத்து. (௫௫)

சொரிகாலை வெய்ய சுடரயிலோ னோக்கி
யெரிகா லுறவுயிர்ப்ப வேகாக் — கரிமாதீ
வெய்தருமா பூழியதாய் விண்டிரியு மீனுமே
யெய்துபடை செய்தொழிறா னீது. (௫௬)

அன்னதுகாண் பூதரழன் றசலம் வன்றருக்கண்
மின்னுமுடிச் சீயமுகன் மேலுய்ப்பத் — துன்னுவரை
யெல்லாம்போ யெண்டிசைசார்ந் தெல்லோ னிரதந்தான்
செல்லாது தூர்த்தனவே சேண். (௫௭)

நாகம்விண் டேர்த்திடலும் ஞாயிறகன் றோடினான்
மாகமுறு புள்குடம்பை வந்தடைந்த — யோகியருங
கற்பமிஃ தென்னக் கலங்கியே யையவென்ன
வற்புதங்கொ லீதென்றா ராங்கு. (௫௮)

விண்ணுற்று வெற்பொடுசெல் வேழமரி வாள்புலியி
னண்ணுற்ற வேறுதிசை நாகங்கள் — கண்ணுற்
றலக்கணுற வீழ்ந்த வகிலம் பனித்துக்
கலக்கமுற்ற தாங்கதனைக் கண்டு. (௫௯)

எறிந்திடுமோ வோங்கறம்மி லெற்றிடவார் தீப்போய்ச்
செறிந்ததிசை யார்ந்தபுகை சேண்பார் — மறிந்தனவெஞ்
சிங்கமுகன் மேற்பட்ட திண்சிலம்பு நீர்மைகுன்றா
தங்கணிலம் வீழ்ந்த வடுத்து. (௬௦)

அன்னதுகண் டண்ட ரயர்ந்தா ரவிர்பூத
ரின்னலுற்றார் சீயமுக னேரிரதந்—தன்னினின்றான்
ஞாலமதிற் புக்கா னலிவுசெய்வான் முன்வந்த
வால மெனநடந்தா னங்கு. (௬௧)

பார்மேற் சிலரையெற்றும் பற்றலர்தாம் வாசமுறு
மூர்மேற் சிலரையெற்று மோதிரவி—தேர்மேற்
சிலரையெற்றுஞ் சீயமுகத் தீயவன்முந் நீர்மேற்
சிலரையெற்று நேர்நேர் செறிந்து. (௬௨)

பூமன்கண் வீசும் பொருசிலரைச் சிங்கமுக
னேமன்கண் வீசு மெதிர்சிலரை—மாமன்கண்
வீசுஞ் சிலரை மிளிரெண் டிசையின்கண்
வீசுஞ் சிலரை வெகுண்டு. (௬௩)

கொதித்துக் கொடியோன் குலவரைபோற் றள்ளி
மிதித்துக் கொலுஞ்சிலரை மெய்யைப்—பதத்திற்
சிதைத்துக் கொலுஞ்சிற் சிலர்தமைச்செல் லென்ன
வுதைத்துக் கொலுஞ்சிலரை யுற்று. (௬௪)

எழுவிற் கொலுஞ்சிலரை யேந்த லெரிகூர்
மழுவிற் கொலுஞ்சிலரை வாய்ந்து—வழுவில்
கொழுவிற் கொலுஞ்சிலரைக் கூர்மைவுறு சூலக்
கழுவிற் கொலுஞ்சிலரைக் காய்ந்து. (௬௫)

கார்க்கு நிறத்தான் கணங்கடமை வாரிப்பின்
சேர்க்கும்வாய் தோறுமண்டச் சேரவே—பார்க்குமா
சேர்த்திட்ட பின்னுகச் சேணி னகன்மோட்டைத்
தூர்த்தியற்று மாடற் றொழில். (௬௬)

நாக்கிற் கொலுஞ்சிலவர் தம்மைத் தடிகின்ற
மூக்கிற் கொலுமே யொருசிலரைத்—தீககணுக
நோக்கிற் கொலுஞ்சிலரை நொய்துருமி னெய்துகுரல்
வாக்கிற் கொலுஞ்சிலரை வாய்ந்து. (௬௭)

அற்றார் சிரந்தோள்க ளற்றா ருரந்தாள்க
ளிற்றார் கரந்துண்ட மேனையவும்—பொற்றா
ஞேதற் கருஞ்சிங்க ஞேடு திறல்கொண்மாப்
பூதப் பொருநர் பொருது. (௬௮)

கருவுற்ற வாருயிர்கள் கால முடிவாம்
பருவத்திற் றீயவனுண் பான்மை—பொருவச்
செருவி லனேகரைச் சீய முகங்கொ
ளொருவனே கொல்கின்றா னுற்று. (௬௯)

முந்நீ ருவரியெனு முன்னாம மன்னாமல்
வெந்நீர்மை யுற்றமர்செய் வெங்களத்தார்—செந்நீர்போய்க்
கங்குலவிப் பாய்ந்து கருங்கடலைச் செங்கடலா
யங்க ணிழைத்தவே யார்த்து. (௭0)

இத்திறமார் வெய்யோ னிருங்கணங்கட் கேமனெனா
வுய்த்துணர்ந்தே யும்பரஞ்சி யோடினார்—கைத்திறத்திற்
குன்றோர் மரவீசு கொன்பூ தரைமுடித்தே
மின்றோர் மிசைப்புக்கான் வேந்து. (௭௧)

அன்னான் செயல்கண் டழற்கண்ணன் வேங்கெதிர்போ
யுன்னுடல் காண்ப னொருகணத்தி—லென்னா
வொளிதருவான் சூல முலையா தவன்மேல்
விளிதருவான் விட்டான் வெகுண்டு. (௭௨)

வருமாப் படைநோக்கி மன்சூர்க் கிளவ
லொருமாப் படையுமுய்க்கா துற்றா—னிருமாசுர்
தோற்றா னெனவார்த்தார் சூலம் வரைமார்பி
லேற்றா னொசிவுற்ற திற்று. (௭௩)

சூலமுறு மூற்றமும்வெஞ் சூரிளவ லாற்றலும்பார்த்
தேலவிவன் பெற்றதுபே றிஃதுபோற்—சாலக்
கருதண்ட மெங்கணுமே காணரிதென் றேய்ந்தா
னொருதண்ட முய்த்தா னுருத்து. (௭௪

உய்த்ததண்டஞ் சாரதித னுத்தமாங சங்கொளலு
மைத்தகுவ னோக்கி மனம்புழுங்கிக்—கைத்தலத்தா
ரோர்கதையை யோச்சவஃ தோரிமைப்பிற் பூதமன்னன்
மார்பகத்திற் றாக்கிற்று வந்து. (௭௫)

தாக்கியவவ் வெல்லைத் தழற்கணன்மூக் கார்நறம்வாய்
தேக்கியசெந் நீரோடிச் சிந்தினிய—லாக்க
மறந்தா னுணர்வெனினும் வன்பிழந்தா னல்ல
னிறந்தா னிலனின்றா னேய்ந்து. (௭௬)

ஆயர்வுற் றங்கிமுக னங்குநிற்க வோர்வலவற்
றேரி னிறுவிவரு தீயவன்மேன்—மேருவன்ன
வோர்மலையைக் கீண்டெறிந்தா னுன்னுஞ் சுமாலியெனு
பேர்மலையுந் தொல்லோன் பெரிது. (௭௭)

அன்னான் விடுத்தவெற்பை யந்தகுவன் பந்தெனவே
மின்னார் கரம்பற்றி மீட்டுமுந்தப்—பொன்னாரு
மார்பிலது தாக்கச்சு மாலி புலம்பிநெய்த்தோ
ரார்புவியில் வீழ்ந்தா னயர்ந்து. (௭௮)

திண்டியொரு தண்டேந்தித் தானவர்கோன் மார்பிலுய்க்க
விண்டிடவஃ தோர்வயிர மேவுதண்டங்—கொண்டங்
கிடித்தெனக்கை யாலெற்ற வேந்தனைத் தோர்த
னடித்தலத்தாற் றள்ளினா னூர்த்து. (௭௯)

தாணெறியி லுந்துதண்டி தானமெழுந் தொல்லைவெய்யோன்
றேணிரைமேற் பாய்ந்து துகைத்தோய்ந்தா—னீணகத்திற்
கோடரங்க டோறுங் குதித்தடிகள் சோருமோர்
கோடரமே போல்வான் கொதித்து. (௮௦)

சென்னிகரந் தோள்பூதன் செல்வதறி யான்சிறிய
னென்ன வரிமுகத்தோ னீயெனக்கை—தன்னிற்
றுடைக்கவவன் றுன்புறீஇத் துப்பிழந்து பேர்ந்தான்
படைக்கணவர் பாங்கிரிந்தார் பார்த்து. (௮௧)

பூத ரிரிவுகண்டு போற்றிலக்கத் தெண்மருந்தேர்
மீதிவர்ந்து சென்றெறுழ்கொள் வில்வளைஇக்—காதுசரஞ்
சிங்கமுகன் மேற்பொழிந்தார் தீங்கின்றிப் பாங்குற்ற
வங்கதுகண் டுட்கினரே ணற்று. (௮௨)

சிலர்தே ருடைத்தான் சிலர்தே ருலைத்தான்
சிலர்தே ரெடுத்தெறிந்தான் சேணிற்—சிலர்தே
ரொடித்தான் சிலர்தே ருதைத்தான் சிலர்தே
ரடித்தா னவுணர்க் கரசு. (௮௩)

இத்திறமாற் றெல்லை யெறுழிலக்கத் தெண்மருமே
தத்தமுயிர் தாங்கித் தனுவோடு—மெய்த்திறல்போய்ச்
சாய்ந்தார்தேர் மேற்புக்கான் றானவர்கோன் றிண்வாகை
வேய்ந்தா னதுகண்டான் வேர்த்து. (௮௪)

மாமேரு நேர்வரிவில் வாங்கிவெங்கோல் பல்கோடி
மாமேகம் போற்பொழிந்து வாகுநிற்பச—தாமேவி
யங்கடர்த்திப் போராற் றவுணர் தலைதுணிந்து
வெங்களத்தில் வீழ்ந்தார் விதிர்ந்து. (௮௫)

கரிபரிதேர் பட்ட கடுந்தகுவர் பட்டார்
கிரியிற் பிணங்கள் கிடந்த—சொரிகுருதி
நீத்தமவண் மாயாம னின்றவெலாங் கொண்டேகி
மாத்தரங்கத் துய்த்ததே வாய்ந்து. (௮௬)

உரந்துமிக்குந் தோடுமிக்கு மொண்வீரன் றன்னோர்
சரந்துமிக்குங் கோடி தலைக—டுரந்தவற்றை
பண்டரங்க மேழுகடந் தாழிவரை தாவியப்பா
லண்டமுமே போழ்ந்துசெலு மார்த்து (௮௭)

இவ்வண்ணம் போர்செயக்கண் டெண்மடங்க னன்முகன்றன்
மைவண்ண நூறு மகாருமெழீஇச்—செவ்வண்ணத்
தேரினிற்போய் வில்வளைஇத் திண்புயத்தோன் மேற்பகழி
மாரியெனப் பெய்தார் வளைந்து. (அஅ)

வீரனது காணா விசிகமெண்ணில் கோடிவந்திற்
சேரவுய்த்து மாற்றினான் றீயமைந்தர்—கூரியகோ
லார்கோடி கோடிவிட வையனவை நீக்கியம்பாற்
றேர்கார் முகம்வீழ்த்தான் றேர்ந்து. (அகூ)

ஏந்தறனை நோக்கிமைந்த ரேண்விற் றொழில்வல்லோய்
நாந்தகமா விஞ்சைசெய்து நாடெணக்கீழ்—பாய்ந்தரனல்
கொள்வாள் கொடுவரக்கண் ணாற்றவரும் வாள்கொடுபோர்
கொள்வான் வளைந்தார் கொதித்து. (கூ0)

வீரன்றான் மார்பாதி மெய்யிலக்க நாடிவாட்
போரியற்ற மைந்தரங்கம் பொன்றிலகண்—டாரவனைப்
பற்றியடு வோமென்னாப் பற்றவல்லோன் வாளோச்சி
மற்றவரை மாய்த்தான் வளைத்து. (கூக)

விண்ணவர்கள் போற்றிடமா வீரனெடுந் தேர்புக்கா
னெண்ணவுணன் மைந்த ரிறந்தமைகண்—டெண்ணலிந்து
வாளுண்ட தென்றன் மகாரையென்ற பின்சிரமுந்
தோளுஞ் சுமந்துநின்றேன் சோர்ந்து. (கூஉ)

என்னாறு மைந்தரையு மீண்டெவருங் காண்டரவென்
முன்னாறு செய்து முடித்துநிற்பான்—பின்னாங்
கிதன்மேல் வசையுளதோ வெண்ணார் நகைத்தற்
குதன்மே லுறுவதில்லை யொன்று. (கூங)

பொன்றினரை யுன்னிப் பொருமுவதி லொன்றுமிலை
பன்றரிய லாரையட்டுப் பாலனையும்—வென்றிமைப்பிற்
றேவரா மேவரையுஞ் செற்றதலம் பார்விசும்பென்
மாவுலகு மாய்ப்பனென்றான் மன். (கூச)

என்னநவின் றேதன் னிரதமூர் பாகனைப்பார்த்
துன்னருநம் மக்க ளுயிர்குடித்தோன்—முன்னருய்க்க
வென்றலுநன் றென்றுகைப்ப வேந்தல் வாலுமையன்
முன்றனித்தே ரோடேற்றான் முன். (கூரு)

சீயமுகன் சீறிச் சிவனளித்த சேயனைநீ
யேயிலக்க ரெண்மருட்சி ரேந்தலோ—மேயவெழி
லூரிலுற்ற தூதுவனோ வோதினையர் தம்முளே
யாரைநீ சொல்லுகென்றா னீங்கு. (கூசு)

முனைவனரு ளாறு முகற்கடிய ஞனேன்
முனைதம்மூ ரட்டொற்றாய் முந்து—முனையினும
ராரையுமே யோர்கணத்தி லட்டுவெல்வா னின்றனன்பேர்
வீரமொய்ம்ப னென்றான் வியந்து. (௯௭)

வீரன்றன் மாற்றம் விடம்போற் செவியேறச்
சூரன் றுணைவன் சுளித்துரைப்பான்—கூரச்
சிறியவரை வேற திறலிலரைக் கோற
லறிதியிஃ தாண்மைப்பாற் றன்று. (௯௮)

றாற்றுவரா மைந்தரையு நொய்தினட்ட நின்னுயிரைக்
கூற்றுவற்கூ ணாகக் கொடுப்பனா—லேற்றமுறு
நின்வலியுஞ் சேய்வலிய நீளமரார் தம்வலியு
மென்வலியி னீக்குவேன் யான். (௯௯)

உம்பர் சிறைவிடுப்பா னுன்னிவந்தீர் தானையொடு
மிம்பருயிர் வாழ்க்கை யிழந்தீராற்—பம்புவிதி
தன்னின் முடிந்தவுயிர் தான்மீண் டெலுறினு
மென்னினினை திர் வார்பிழையா ரிங்கு. (௧௦௦)

ஒன்பதுதேர்ந் தேந்தனகைத் தேந்துசிலை வாங்கியீ
ரொன்பதுகோன் மார்வத்தி லுய்த்திட்டான்—வன்பினவை
பட்டொசிந்து வீழ்ந்த பதகனுஞ் சீயமுகன்
விட்டனன்றன் றண்டம் வெகுண்டு. (௧௦௧)

தண்டந் தனையேந்த றாவிலயில் வாளியாற்
றுண்டஞ்செய் தாயிரங்கோ றூண்டினான்—றிண்டலையி
லன்னவைதூ ளாய்வீழ்ந்த வாளிமுகன் சூலமொன்று
மின்னவன்மேல் வீசினான் வேர்த்து. (௧௦௨)

அண்டவருஞ் சூலத்தி னுற்ற றனைநோக்கி
யெண்டகநே ரம்பா யிரம்விடுத்தான்—வண்டுகளை
வீட்டியது மேற்செல்ல மீட்டுமோ ராயிரங்கோன்
மோட்டிறைவன் மேலுய்த்தான் முன். (௧௦௩)

ஏவியவவ் வேவை யெலாஞ்சூலஞ் சிந்தியே
மாவயவர் பன்வீர வாகுமேன்—மேவ
விலக்கர் நடுங்கினா ரெண்மர் மெலிந்தா
ரலக்கணுற்றா ரண்ட ரயர்ந்து. (௧௦௪)

தோளார வந்தகொடுஞ் சூலத்தை வீரமொய்ம்பன்
வாளாற் குறைத்திட்டான் மற்றதிற்ற—தாளா
மீளாஞ் றிலக்க ரெழுழ்க்கணவர் வானோ
ருளீவன்றே யோகையுற்றா ரோர்ந்து. (௧௦௫)

அக்காலை நந்திகணத் தையன் வடவையினு
மிக்கார் வெருளியனாய் வெய்யவனை—யிக்காலை
யாவிகொள்வே னென்றூழு னந்தகற்கோன் மன்படையை
மேவியர்ச்சித் துய்த்தனன்றெம் மேல். (க0சு)

அப்படைதீக் கான்றுலக மச்சங் கொளவாலு
மெப்படையோ வென்றூ னிதுபுலவர்—வெப்படையா
மென்றூ னிறைவனதா மிப்படையே யெற்படுக்கு
நன்றூ மெனநகைத்தா னன்கு. (க0எ)

அரிமுகனேற் றந்நாட்கொ ளத்தன் படையை
யரியவழி பாட்டினுய்த்தா னஃதுங்—கிரிமுனது
நட்டவர்பா னட்டவர்போய் நண்ணிமீண் டாங்குநீ இ
விட்டவர்பான் மேவினவே மீண்டு. (க0அ)

தன்படைதான் மீளச் சயமொய்ம்ப னேந்தகஞ்சூர்
பின்புடையான் பேரமர்செய் பேற்றினைப்பார்த்—தின்பண்
சிவன்வரமோ செய்தவமோ திண்டிறலோ விங்க
னெவன்பெரிதென் றேயிசைப்பேன் யான். (க0சு)

ஏவு படையா விறையுமெய்யி னூறிலான்
மேவலன்செவ் வேள்காரத்து வேலன்றி—வீவுறூ
றுதவிற்போ ராற்றி யணிதே ரனிகமெலாங்
காதுகிற்பே னென்றூன் கணத்து. (கக0)

இத்திறந்திண் மொய்ம்பியம்பி யேழிருகோல் கொண்டவுணன்
சித்திரத்தே ருந்துபவன் சென்னிதள்ள—வெய்த்தவனு
தாரணியில் வீழுமுனந் தானவர்கோ னேர்தண்டம்
வீரன்மேல் விட்டான் விரைந்து. (ககக)

உறுதிறன்மா வீர னுரம்புகுமா தண்டஞ்
சிறுதுகளாய்த் தூமமாய்ச் சென்ற—தெறுழிளவல்
காரா ரவுணன் கவின்றேரை வீட்டினு
னோரா யிரங்கணைக ளுய்த்து. (ககஉ)

தேரழிந்த மாத்திரையிற் சீயனுயிர் கோடுமெனப்
பாரிடர்மா வோங்கல் படைவீசிச்—சாரிலுற
வெய்யவனோர் தேர்புகா மேவா யிரம்விலைநூற்
றையிருகை யேந்தினு னார்த்து. (ககந)

பிடித்தவிற்க டோறும் பிறங்குகுணங் காட்டத்
துடித்தவுயி ரண்டந் துளங்கி—வெடித்த
கணக்கமையா வாசுகங்கள் காரிற் பொழிந்தான்
பிணக்குவையாய்ப் பூதருற்றூர் பேர்ந்து. (ககச)

சென்னிசிறந் தோள்சரங்கள் சிந்தினா ரூன்குருதி
மன்னிணங்கள் சிந்தினார் வன்பூதர்—துன்னியே
பூசிறந்த வான்றார்த்த பூமா திரமறைத்த
வேலையண்ட மெங்குமுற்ற வே. (௧௧௫)

இசையா ரெழுவரையு மீர்வவா னேந்து
மிசையார் கிரிபோழ்வ மேவெண்—டிசையானை
யங்கமுகா வார்கலியி லார்கனலை யாற்றுவன
சிங்க முகாசுரன்கோல் சென்று. (௧௧௬)

உளனைக மீர்ந்துக்கொண் டோடுவன வூன்கவர்ந்து
சேனைகள் செல்வ சிவணுமே—யினைகண்
டையோ வெனவண்ட ரார்ப்பவிடு சீயமுக
வெய்யோன் விசிகம் விரைந்து (௧௧௭)

முற்பகலி லொன்றை முயன்றொருவன் செய்வினைது
பிற்பகலி னல்குமெனல் பேச்சன்றே—வெற்பகலில்
வன்படையுஞ் சூரிளவல் வாளிகொன்று கூளியையுந்
தன்படையுந் தாக்கினவே சார்ந்து. (௧௧௮)

சீயமுகன் காண்டந் திசைவா னெறிமறைப்ப
மேயவினன் மேற்றிசைபோய் மீண்டிலா—னையபடை
கொம்புகுணில் பேரிசெலக் கொம்மெனப்புள் ளம்மசுற்ற
செம்புனனீர் சென்றதே சிந்து. (௧௧௯)

கருங்கடலிற் செங்கீர் கலந்துபாய் தோற்ற
மிருங்கம் பளம்விரித்த லேய்க்கு—மொருங்கே
பவளக் கொடிகள் படர்வனவு மானுந்
திவளக் கிளைத்துச் செறிந்து. (௧௨0)

இத்திறமாச் சிங்க னிகல்விளைக்க வீரன்கண்
டத்தமன்வில் வாங்கிநா ணேர்ப்பெழுப்ப—மைத்தகுவர்
கைதளர்ந்து பின்காட்டிக் கால்சாய் தருவென்ன
மெய்தளர்ந்து வீழ்ந்தார் மெலிந்து (௧௨௧)

அண்ட மதிர வயிர்நா ணொலியுறுத்தித்
திண்டனுவிற் காண்டஞ் சிதறியே—கண்டகன்முன்
விட்டவன்போர்க் கோலனைத்து வீத்தறுத்தா னீற்றுயிர்க
ளட்டவன்போல் வீரமொய்ம்ப னாங்கு. (௧௨௨)

எங்கெங் கவன்பகழி யெய்தி யடர்த்தனவோ
வங்கெங்கு நீழல்போ லாளிமொய்ம்பன்—வெங்கதத்தி
னுய்த்தகணை போயவற்றை யூறு படுத்தினவே
மைத்தகுவ னஃதுகண்டான் வாய்ந்து. (௧௨௩)

வில்லெடுத்த துன்பொருட்டா மேவுறுதோண் மார்புகரம்
பல்லெடுத்த சென்னி பதந்துணிக்கேன்—கொல்லம்பா
லெண்ணிலங்கை யுள்ளே யிருகையுடை நீயேற்பாய்
கண்ணின்றலோ தீர்வனது காண். (௧௨௪)

ஏமரமர்ம கேந்திரமா மோர்நகரி லீண்டு
மமாகத்தென் சேனைகளி லாட—னிமிருங்
குமரறிற் கொற்றமாக் கொண்டவெலா முற்று
முமிழுவிப்பே னுண்பனுயி ருற்று. (௧௨௫)

என்னுமுரை வெய்யோ னிசைப்ப விறல்வாகு
பன்னுகின்ற தென்ன பலபலநின்—னுன்னுபடை
வெல்வல் லனிகமெலாம் வீட்டி யுனைத்துரப்பேன்
வில்வன்மை காண்டியென்றான் வேர்த்து. (௧௨௬)

சொற்றிடலும் வெய்யோன் சுளித்தா யிரம்விலங்கைப்
பற்றி வளைத்துவெங்கோல் பத்திலக்கம்—வெற்றிமொய்ம்பன்
மேல்விடுத்தா னத்தொகையே விட்டவைநீத் தேந்தலவன்
மேல்விடுத்தா னத்தொகையே மேல். (௧௨௭)

வீரன் விடுகணையை வேந்தனோர் பத்திலக்க
மீரம்பிற் சாய்த்தா யிரகோடி—யாரடலே
வேந்தன் மிசையுய்த்தா னேந்தலுமே யத்தொகைக்கோல்
வேந்தன் மிசையுய்த்தான் வேர்த்து. (௧௨௮)

தாரார் புயன்கோற் றகுவனம்பைப் பார்படுத்த
வீரா யிரங்கணைகொண் டேந்தலையன்—போரார்
துணைநூறு வில்லிறுத்தான் றேன்றலொர்விற் பற்றக்
கணைநூறு கோடியுய்த்தான் காய்ந்து. (௧௨௯)

செந்நீர் நிறத்திழியத் திண்மாச் சிலைகுனித்து
வெந்நீ ரிலக்கங்கோல் விட்டிடத்தெவ்—வந்நீர்மை
காணு விருதுநாட் காரினவை விட்டிறுத்தான்
மாணு ரடல்வீர வாகு. (௧௩0)

சீயன் கணையைச் சிலீமுகந்தூய் மாற்றியோ
ராயிரங்கோ லுந்தியந்தே ராங்கழித்தான்—றீயனோர்
வையமேற் பாய்ந்துதனு வாங்கவவ னாயிரம்வி
லையனம்பி னலறுத்தா னார்த்து. (௧௩௧)

தெவ்வா யிரந்திண் சிலைகளும்போய் மாதுயர
வெவ்வாழி வீழ்நிலைமை வேதாள—ரவ்வானோர்
மாலயன்மார் கண்டார்த்தார் மற்றதனைக் கண்டனனோ
லாலநிகர் சீயமுக னங்கு. (௧௩௨)

மாசுரர்தம் மார்ப்புமயன் மாலா தியரார்ப்புஞ்
காசுரவோ ரார்ப்புமின்னே காண்பலெனு—வாசரலூர்
வாசமுறு வாளவுணன் மாயைதரு வன்மாயா
பாச மெடுத்தான் பதைத்து. (௧௩௩)

ஓட்டிக் கடும்போர்செ யொட்டலர்க டம்மையொர்பாற்
கட்டிக்கொண் டாவி கடிந்தேகிக்—கிட்டியே
சேங்கதிரோன் றோன்றுஞ் சிலம்புய்த்துப் போரமே
யங்கமர்கென் றுவெறிந்தா ரார்த்து. (௧௩௪)

வாரிதியோ ரேழுமொன்றாய் வந்தாங் கதுசூழ்போ
யாரிருட்கோர் வைப்பா யனல்சிந்திப்—போரதனைச்
சாரதரும் வானவருந் தாநோக்கி யேங்கினார்
வீரனுங்கண் டோர்ந்தான் வெகுண்டு. (௧௩௫)

ஆற்றலுளா னிவ்வா றறிந்தே யதுதீர்ப்பான்
மாற்றுபடை யொன்றும் வழங்காமுன்—காற்றினுற்றே
மீவரையும் வெல்புயத்தான் வீசிடுமா பாசமதங்
கேவரையும் யார்த்ததுவே யீர்த்து. (௧௩௬)

தானைமள்ளர் பூதர் தலைவரெண்மர் வீரமொய்ம்போ
டேனையரும் பாசத் திடையுற்றார்— மானைதர
மாற்றாநிற் பாருணர்வு மன்னினது நீப்பனெனத்
தேற்றாவா செய்துளது தீங்கு (௧௩௭)

தொல்லுணர்வு மாழ்கித் துயர்வாரை வானெறிக்கொண்
டொல்லுதய வெற்புய்த் துடனுறைந்த—தல்லவுணர்
மாற்றலரா மேவரையு மாய்த்தினுயிர் கொண்டனனெ
னாற்ற லழகிதென்றா னார்த்து. (௧௩௮)

ஓடினன்கொல் லோவமர்க்கென் றற்றதுமின் றோவெங்குந்
தேடினன்காண் கில்லன் சிறுவனெங்க—வீடினன்கொல்
சாடினனென் றோதல் சழக்கதுசொல் லோதம்பி
வீடினனன் றோவென்றான் வேர்த்து. (௧௩௯)

சிங்கமுக னிவ்வண்ணஞ் செப்பினனன் றார்க்குமெல்லை
யங்கவன்மு னோர்தூத னண்ணியே—துங்கமுறு
சீர்த்ததிறற் பூதரொடு சேய்பா சறையிருந்தான்
பார்த்துவந்தே னென்றான் பரிந்து. (௧௪௦)

ஒற்றனுரை கேளா வுறவெற் பொரற்கஞ்சி
மற்றவனுற் றான்கொல்லோ வல்லையிற்போ—யிற்றையன்றான்
போர்முடிப்ப னென்றேகப் புங்கவர்க ளோடனுற்றா
ரோர்குகற்றாழ்ந் தொற்றுரைப்பா னுற்று. (௧௪௧)

ஐயகேள் பூத ரனிகத் தலைவர்போய்
வெய்யசம ராற்ற வெகுண்டுவெய் யோன்—கையிலுற்ற
சூழ்ச்சிக் கயிற்றினாற் சூழ்ந்தமரை வீக்கியிட்டான்
வீழ்ச்சி யுறவுசய வெற்பு. (௧௪௨)

ஆண்டகையே என்று னுரைகேட் டரிமுகத்தோன்
யாண்டுளான் யாண்டுளா னென்னவே—தூண்டிடுதேர்
மேலுளான் சூழ்படையின் மேவுவான் வீழூழின்
பாலுறுவான் போலுமென்றான் பார்த்து. (௧௪௩)

என்னலுஞ்செய் வேணையா வேற்றிருக்கை நீங்கியெழிற்
பொன்னங் கழலார்ப்பப் போந்துபுறந்—தன்னிரதம்
வந்து கொணர்தியென்றான் வல்லையவ னுய்ப்பவதின்
மைந்த னிவர்ந்தான் மகிழ்ந்து. (௧௪௪)

வெண்சவரி வட்ட மிளிர்கவிகை சுற்றுடைவா
ளொண்பொன் னடப்பை யொளிர்படியங்—கொண்முறையில்
வேந்திமையோ ரிந்திரன்காண் மேவுதன தன்கருண
னேந்திவரச் சென்றா னினிது. (௧௪௫)

சேயமர்மேற் சேற றெரிந்து திறற்பூத
ராயிரவெள் ளத்தவரு மார்த்துநனி—காயெரிகால்
சூல மெழுக்கணிச்சி தோமரம்பன் மாமரம்வெற்
பேலவெடுத்தே சூழ்ந்தா ரேய்ந்து. (௧௪௬)

அடித்தார் பறைகள்சங் கார்த்தனர்வேள் சீர்த்தி
படித்தார் கவிகைவட்டம் பாங்கிற்—பிடித்தார்தம்
வீரமெடுத் தோதினார் வெள்ளேற்றுக் கேதனங்கள்
சாரதர்கள் கொண்டடைந்தார் சார்ந்து. (௧௪௭)

மூவர் முதல்வந்தான் முக்கணான் சேய்வந்தான்
மேவலர்தம் மேறுவந்தான் மேவிடுமன்—போவிலருட்
சென்றிடர்தீர்ப் போன்வந்தான் றேவதே வன்வந்தா
னென்றனவே சின்ன மெலாம். (௧௪௮)

பூதர் புடைசூழப் புங்கவர்கள் போற்றவையன்
காதலுறு பாசறையின் கண்ணீங்கி—யோதும்
பறந்தலைக்கண் மின்னிற் படரவெய்யோ னேர்ந்தான்
மறந்தலைக்கொ டானையொடும் வந்து. (௧௪௯)

எழுவும் பரிதியுங்கூ ரேய்சூல வேலுங்
கொழுவுங் கதையுமுயர் குன்றும்—பழுவமுமே
வேகமுறு பூதரிவை வீசிநெடுந் தானவரை
மாகரிதே ரட்டார் வளைந்து. (௧௫௦)

குந்தமழுத் தண்டங் குலிசங் கழுமுள்வேன்
முந்துமெழு நேமி முசலஞ்சங்—குந்தம்
பிறபடையுங் கொண்டிமைப்பிற் போவுண ரட்டார்
நிறமன் கணப்படையைச் சேர்ந்து. (௧௫௧)

இருதிண் படையும் இகல்விளக்கு மெல்லைக்
குருதியுகத் தோணிறங்கங் குப்புற்—றுருநிலம்வீழ்
தரது பலர்மறிந்தார் சம்புகைத தீயின்மு
ணந்துபுரம் போன்றதந்த ஞாட்பு. (௧௫௨)

கண்டனனச் செய்கை கனன்றண் டரைவாரி
யுண்டனனென் சீற்ற மொழிக்குவனென்—றண்டமுஞ்சி
ராருமெட் டாசையுந்தா னுகவே யாளிமுக
னேருருவங் கொண்டா னுருத்து (௧௫௩)

ஆயிரமாச் சென்னிமுடி யண்ட முகட்டைநக்கப்
பாயிருமாக கைகளண்டப் பாங்கலைப்ப—மெய்பத
மண்டத் தடிபூழி யாகவுருக் கொண்டார்த்துக்
கண்டத்த வந்தான் கனல். (௧௫௪)

வந்திடுமா சீற்றமொடு மன்மடங்க னேற்றங்கண்
டகன்றான் பேர்க்குநின்ற னுதவன்பின்—னெந்திரிந்தா
னிந்திரனச் சுற்றானெரிசோர்ந்தான் மேவிரலாற்
சிந்தை மருண்டார் திகைத்து. (௧௫௫)

அன்ன வமயத் தரிமுகத்தோ னார்ப்பினுட
னுன்னு மிராயிரங்கை யோச்சியே—மன்னகசேர்
வெய்துறுதிண் பூதமா வெள்ளமெலா மள்ளுபுவாய்
பெய்து விழுங்கினன் பேர்ந்து. (௧௫௬)

அண்டமோ ராயிரமு மாங்காங் கமைந்தனபோற்
சண்டகன்வாய் தோறுங் கணங்களுற—வுண்டனன்மன்
வாய்தொறுஞ்செல் லன்னவரிவ் வானெறியெங் குய்க்குமோ
வாய்தருவோ வென்பா ரயர்ந்து. (௧௫௭)

வாய்க்கொள் ளவதி மடங்கன் முகத்தவுணன்
மூக்கி னுடன்செவிவன் மூலமொல்லை—நோக்கியே
நாடினர் சில்லரிது நண்ணுமை யாங்கொலென
ஓடினர் போயினா ருய்ந்து (௧௫௮)

பந்திபடு வாய்தொறும்போய்ப் பாரிடர்வீழ்ந் தாழ்வயினூற்
றுந்தியெழு வந்தினும்ப ருற்றுமீ—ளந்திறம்போ
லாளி முகனுயிர்ப்பி னாயிரமா யோசனைமேய்
மீளியகீழ் வீழ்வர் மெலிந்து. (௧௫௯)

திளைத்தான் மடியிலுறு திண்பூத ரங்கன்
கிளைத்தார் கரப்படையிற் சீறித்—துளைத்தார்
கேடாமையிற் றொன்மைவன்மை கெட்டிளைத்தார் சில்லோ
ரடாமைவே றென்செய்வ ராங்கு. (௧௬௦)

ஆயிரமா வெள்ளமா மாடலுறு பூதரைத்தன்
வாயிடைப்பெய் தாரகட்டில் வைத்துள்ள—சீயமுகச்
சூரன் செயலைத் தொலைவினொடு நாட்சொலினு
மார வுறைதற்பாற் றன்று. (௧௬௧)

நோன்மையுறு பூதரையே நொய்தினுங்கி னானினிப்பார்
மேன்மை யுறுபொருளும் வெஃகிதுங்கும்—பான்மையாண்
விண்ணகத்தார் தம்மையுமே மேவியுண்ணு மென்றிமையோ
ரெண்ணகத்தார்ந் தேகினரச் சேய்ந்து. (௧௬௨)

ஒற்றா னவர்விரைவி லோடி யவுணர்கோன்
பொற்றா ளிறைஞ்சிப் புகழிளவ—னற்றார்வே
தேன் றனைப்பிறரைச் சூழ்பூத ரிற்பாதி
காதியென்றார் வெற்புவைத்தான் காய்ந்து. (௧௬௩)

இதுவினவிக் கந்தவே ளேற்றிடவே லோடுங்
கதுமெனவே நம்பிபெருங் காய—மதுகொண்
டெதிர்பூ தரையட்டா னின்னேவொன் னாரை
விதிர்தரவென் றீங்குறுவன் மீண்டு. (௧௬௪)

என்னலுமன் றார்த்தழீஇ யின்சொனவின் றன்னருஞ்சீர்
நன்ன ரளித்துமன்ன னாமொருவன்—றன்னைப்பார்த்
திந்தநகர் வைகு மெறுழ்மாப் படையாவு
முந்துதிபோர்க் கென்றா னுகந்து. (௧௬௫)

சொன்னமொழி கேட்டிறைஞ்சிச் சூழ்கம் மியன்படையை
மன்னமர்க்குப் போமினென வார்முரசெற்—றன்னவொலி
காதுறவே தானைவெள்ளங் காதுறவே சூர்த்துணைவன்
மோதுறவே ஞாட்புற்ற மொய்த்து. (௧௬௬)

துன்னனிகஞ் சூழ்ந்துசெலத் தும்பைமுடிச் சூரனெம்பி
மன்னமரோண் காண்பனெனு மந்திரமே—லுன்னரிலையுற்
றேறுதிளவ லோங்குருவு மொண்பூத ரூனுறலுங்
காதலுறக் கண்டான் களித்து. (௧௬௭)

இங்கிவனின் றற்புதமுற் றின்னகைசெய் யாதிற்பச்
சங்கையில்பல் சாரதர்தந் தானைமுற்றுஞ்—சிங்கமுக
னுங்கு மருஞ்செயலை நோக்கினான் முன்னாரு
டங்கு மறுமுகவன் றான். (௧௬௮)

தனியா யுலகமடு சங்கரன்றன் மைந்த
னினியானே ராட லியற்ற—முனியாங்குச்
செய்யகஞ்சஞ் செங்கதிருஞ் சேர்கதுவரல் போன்றுவளி
வையமுந்தப் போர்க்குவந்தான் வாய்ந்து. (கசுகூ)

வந்திடமெக் காலை வயப்பூதர் மாயங்க ளன்று
வெந்திறற்சூர் தானைமன்னர் வெளிவனைச் —தந்தனர்செய்
காணுமன் மேருறழ்வில் கைவாங்கி ம்புருவி
மாறு ணுலிகொண்டான் வாய்ந்து. (கஎ௦)

ஆயிரமாங் கோடிமன்பா ரண்டம் வெடித்தமற்றை
மாயிருநீர் வன்னிவளி வானண்ட—மாயவிண்ட
வம்மா வொலிகேட் டரிமுகத்தோன் றானைமன்னர்
விம்மா விழுந்தார் மெலிந்து. (கஎக)

பூரிவிற்கொ ணூரி முழக்கஞ் செவிமடுக்கப்
பாரிற் கவிழ்ந்த பரிகரிதே—ராரிதைச்செய்
சூரரன் சேயிவனு நிச்சயம்ம முன்னெம்பி
தாரகனைச் செற்றதென்றான் றான். (கஎஉ)

சீய முகனினைய செப்பியெதிர் பாலகன்றன்
மேயவன்மை யான்படுத்தி மீள்வனெனத்—தூயமணித்
தேரோடு சேர்ந்திமைப்பிற் சேயவனை நோக்கியே
சீரோடு செப்புவான் றேர்ந்து. (கஎங)

கண்ணுதலோன் மைந்த கருதலர்க மேண்மாற்ற
லண்ண லவர்கடமை யற்றால்வா—னண்ணக்
கிடந்தவரைத் தண்டித்தோங் கேடெமருக் கில்லை
நடந்ததென்கொல் போர்கவென்றா னன்கு. (கஎச)

மற்றரியன் றன்னை வலியன்று னோர்நதொறுக்கி
னுற்றமுறை தண்ட முளுற்றியண்ட—முற்று
மிறைபுரிது மற்றானி ரேய்ந்தமரர்க் கிட்ட
சிறைவிடவந் தேமென்றான் சேய். (கஎரு)

எங்களிறை யிசைதியம்ப வேந்தனகைத் தண்டநந்த
வங்கை புடைத்தழகி தாமெனவே—வெங்கதங்கொண்
டீங்கெமரை வென்றா யிமையோர் சிறையுமின்றே
நீங்கினர்நீப் பாய்நீயு நேர்ந்து. (கஎசு)

உந்துசிறை யீசற்கு மோவமுடி யாதென்றான்
மைந்தநீ யவைதுவிட வல்லையோ—நந்திதந்த
பொங்கயிலா லேற்றானைப் பொன்றுவித்தா யோடினுய்தி
யெங்கணல்லூழ் தந்ததனை யீண்டு. (கஎஎ)

கூரியவே லாற்றல் குமரநின்னேனெண் டேர்ந்துளேன்
ஞாகன்போல் ஞாட்பிற் றளர்வனல்லே—ஞாமரில்
வீருந்நின் பூதருமே வீந்தனர்போர் செய்துமென்றாய்
சிறிதுநின் னூக்கத் திறம். (௧௭௮)

தாதண் டருவார் சயந்தனொடு வானவரைத்
தீதண் சிறைநீக்கச் சென்றநீ—மாதுணைவர்
பூதர் தொகைவாளா போக்கித் தமியனின்று
யூதியமிஃ தேயா முனக்கு. (௧௭௯)

முனையின் முடிந்தார் முடிவிலார் முன்னேற்
றினைவி னிரிந்தனரெண் ணில்லார்—நினைகிலாய்
மேயியமர்க் குற்றாய் விடேனுன் கனவினுமே
தேவர் சிறையையென் றான்றேர்ந்து. (௧௮௦)

என்றமொழி யேற்குமுன்ன ரீராறு தோளுடைவே
ணன்றிவன்றன் கொள்கையென நக்குவில்லி—லொன்ற
வொருவயிர வாளியைவைத் துய்ப்பவது தீயோன்
மருமமுற்றுப் போயதுபின் வந்து. (௧௮௧)

செங்கதிர்வேற் சேய்விடுத்த செங்கோ றிறலுடைய
சிங்க முகத்தவுணன் செல்லலுற—வங்கமுற்றுப்
புண்டரநெய்த் தோரருவி போலொழுக நின்றனன்வா
னண்டாது கண்டார்த்தா ராங்கு. (௧௮௨)

வெற்றிவே லண்ணல் விசிகமவன் மார்புகள
முற்றுநெறி யாதலுங்கண் ணுற்றதனைப்—புற்றி
லெழுசிதலை யென்ன விவரகட்டி னின்று
கெழுகணங்கள் போந்த கிளர்ந்து. (௧௮௩)

மன்னவன்ற னுந்திவழி வந்துகணம் போகுதல்கண்
டந்நெறிகை யான்மாற்றி யையன்மே—லுன்னருமோர்
தண்டமுய்த்தா னஃதுவரச் சண்முகனு லம்புவிட்டான்
கண்டகன்றன் பாலத்தின் கண். (௧௮௪)

சென்றிடுகோ னெற்றியுறத் தீயோன் பொறிகலங்கி
நின்றனன்செந் நெய்த்தோர் நெறிமறைப்ப—வொன்று
நிறந்தனினின் றாரு நெடும்பூதஞ் செவ்வேள்
புறந்தனிலே போந்த பொலிந்து. (௧௮௫)

சிங்கமுக னுங்கு திறற்பூதம் யாவுமே
யங்கயில்வே ளாணையின்வந் தார்த்தலுமுன்—றுங்க
விளையார் கணவ ரிவரைக் குறித்தோர்
சுளையாச் சரம்விடுத்தான் றான். (௧௮௬)

உந்து நெடுங்கோ னுதறி பலகடந்தே
ழுந்து முதயகிரி முன்னூற்று—வெந்திறலோர்
தொந்தவலை சிந்தத் துயின்றெழுந்தார் போலெழுந்தார்
கந்த னருளாற் களித்து. (௧௮௭)

பாசமது நீங்கிப் பரமற் றினியான்று
ணைசமுறப் போற்றியன்னார் நிற்றலுமே—தேசுறுவே
லுய்த்தகணை புட்பகத்தை யொத்ததன்மேன் மற்றவரை
வைத்தவனுய்த் துற்றதொள்ளா வம். (௧௮௮)

அந்த வமையத் தடல்வீர மொய்ம்பனெண்மர்
முந்திலக்கர் பூத முரணனிகங்—கந்தனந்தாள்
வந்தனைசெய் யாநிற்ப மற்றவன்பார்த் தார்கயிற்று
னுந்தயர்ந்தீர் போலுமென்று னுய்த்து. (௧௮௯)

முந்தறிவு சோர்ந்தாலென் முன்னு ருயிர்தீர்ந்தே
யந்தநிர யத்தாழ்ந் தயர்ந்தாலல—னெந்தையரு
ளெய்திற் குறையிலென வேந்த லருள்புரிய
மொய்தொழும்பர் போற்றினார் முன். (௧௯௦)

வின்று ணொலிகேட்டு வீழ்ந்தயர்ந்த மாப்படைசேய்
தன்று டலையுன்னித் தானெழுந்து—துன்று
வொருவனெனமை யெல்லா மொழிக்குங்கொ லென்று
மருவினசெவ் வேலை வளைந்து. (௧௯௧)

சுற்றலுநாற் றலையரன் றேன்றல் சிலைகுனித்துச்
செறறவெங்கோன் மாரி சிதறினன்—மற்றவைதாம்
வன்னிநம னுலமிருள் வாளரவும போன்றனபற்
பன்னிறமும் வாய்ந்த பரிந்து. (௧௯௨)

சூல நிகர்வ சுடர்வேல் புரைவபிண்டி
பால முறழ்வ பரிதியொப்ப—சாலமுறு
குந்தங் கழுமுள் குலிசம்வாள் போல்வனசீர்க்
கந்தவே ளுந்துங் கணை. (௧௯௩)

காற்றிற் கடிதுசெல்வ காலற் கடப்பனவே
பாற்றுமொன் று தொட்டாற் பலகோடி—பேற்றினபூ
வுற்றவனை மாலரனை யொப்பனசெய் முத்தொழிலிற்
கொற்றமுறு வேள்விடுக்குங் கோல். (௧௯௪)

கார்பிளக்கும் வான்பிளக்குங் காப்பிளக்கு மாதவனார்
தேர்பிளக்குந் தீப்பிளக்குந் தேவர்த—மூர்பிளக்கு
பார்பிளக்குங் கல்பிளக்கும் பாய்நீர் குடிக்குஞ்சூர்
வேர்பிளக்கும் வேலவனே வேர்த்து. (௧௯௫)

உப்புவன வோத முறையு முதுவடவை
செப்புவன நோாது செங்கதிரை—யொப்புவன
முப்புவன முற்றுமுற்று மூதண்ட மேவியெங்கு
மப்புவனமாக்கினவே ளம்பு. (௧௯௬)

சிரந்துணிந்தார் சில்லோர் செவிதுணிந்தார் சில்லோ
ருரந்துணிந்தார் சில்லோ ருறுநீள்—கரந்தடந்திண்
டோடுணிந்தார் சில்லோர் தொடைதுணிந்தார் சில்லோர்வன்
றாடுணிந்தார் சில்லோர் தளைந்து. (௧௯௭)

உறுவெவ் வினைக்கி டுறப்பமைந்தா ரெல்லாந்
தெறுவெவ் விடத்திற் செறிந்தாங்—கெறுமொழா
ஞருக்களற்றுன் னநக மூலைந்துபோய் மள்ளர்
செருக்களத்தி னின்றார் திகைத்து. (௧௯௮)

காார்மா கரஞ்செவிவால் காறுமிந்து வெவ்வேறாய்ப்
போர்மா களத்திற் பொலிதோற்றம்—வார்மா
முசலமூா மாறுரல்கண் மொய்யெயினர் வைகு
மசலமரு கார்வதொக்கு மாங்கு. (௧௯௯)

சீர்போ யவன்விடுகோல் சிந்தக் கலினம்போய்
வார்போ யணிபோய் வயங்குமணித்—தார்போய்த்
திடவை யுறுகதிமா செந்நீர்க்கடலில்
வடவைபோ னின்ற மருண்டு. (௨௦௦)

சீரிற் றிகழ்கொடிஞ்சி செய்யதட்டுக் குற்றுக்கால்
கூரிற்று நீள்பல் கொடியிற்றுப்—பாரிற்றுச்
செந்நீர்க் களத்திரதஞ் சிந்துறுதல் வந்துபொரு
முந்நீர்க் கலனிகர்க்கு மொய்த்து. (௨௦௧)

வண்டா ரயிற்குகனெய வாளிபோய் மீளியா
மண்டார் படையட்ட தற்புதமோ—விண்டான
மண்டத்த மாய்த்ததுவே வைப்பா யிரகோடி
யண்டத் தசுரரையு மாஙகு. (௨௦௨)

புங்கவர்கள் வானகத்திற் போற்றிப் பிழைத்துநின்றார்
கங்கமுற்ற காகங் கவந்தமூர்ற—வங்கமிற்று
மேயகளத் தோங்குருவில் வேள்கணைகள் பட்டுணர்வு
போயரிதேர் நின்றனன்முன் போல். (௨௦௩)

நின்றவெய்யன் றன்னயர்வு நீங்கியனரி கந்தனைச்சேய்
கொன்றனனென் றோர்ந்துள் கொதியாவி—லொன்றுபோ
லோராா யிரங்கோட்டி யுன்னுநா றாயிரப்பத்
தாராரம் யுய்க்கநக்கா னே. (௨௦௪)

தீயனுய்த்த வெப்பாராச சேயா யிரங்கணை தூய்
மெய்யவிசி கம்விலக்கி மீட்டுமோ—ராயிரமம்
புந்தவதை யத்தொகையே வுய்த்தகற்றிப் பத்திலக்கம்
வெந்தனிக்கோல் விட்டனன்வேண் மேல். (௨0௫)

நோன்மையுளா னுய்ச்சும்பை நூறுபத் தாயிரமாங்
கோன்முறையே தூய்விலக்கக் கோணவுணன்—றன்முனிந்தே
யாயிரமாங் காண்ட மரன் மகன்மேற ருந்துவந்தின்
னாயவுரத் துய்த்தான் றுதைந்து. (௨0௬)

பாகனெஞ்சிற் பட்டுப் படுமாப் பருவரல்கண்
டேகனரு ளேந்தனா றெய்கணை தூய்ச்—சேனைநெடுந்
தேரினையே வீட்டுதலுந் தீயோ னனியார்த்துப்
பாரிழிந்தம் பெய்தான் பல. (௨0௭)

வீசகணை யாவையுஞ்செவ் வேள்பகழி யால்விலக்கி
யாசுகமோ ராயிரம்விட் டன்னவன்வி—னாசமுறத்
தாலமதிற் சேர்த்தலுந்தூ டானகச் சீறிவெய்யோ
னாலநிகர் சூலமுய்த்தா னாங்கு. (௨0௮)

சூரிளவல் சூலத்தைத் துண்டித்தீ ரேழ்கணையா
லோரழற்கோ லாயிரஞ்சே யுய்த்திடக்கண்—டூரவன்கைத்
தண்டமொன்றிற் றாக்குவண்டு தாலந் தனிற்சிந்தி
யண்டநந்த வார்த்தகன்றா னாங்கு. (௨0௯)

விட்ட கணைபொடிப்ப வெய்யவன்றண் டோடுசெலச்
சிட்டனம்பே ழெய்துகதை சேர்கரத்தை—யட்டிடலு
பேர்த்துமொரு கைவரவே பின்னுமந்தத் தண்டுபற்றித்
தீர்த்தன்மேல் வீசினான் றேர்ந்து. (௨௧0)

ஒன்னான் விடுகதைமே லொள்ளழலம் பாயிரந்தூய்ச்
சின்னா பினஞ்செயவுந் தீயவன்கண்—டந்நாளிற்
கூற்றனல்கு பாசங் கொடுவீச வாயிரந்தீக்
கோற்றனினா ணந்தவிட்டான் கோன். (௨௧௧)

நாணற் றதுகாணா நானூற்றீ ராயிரமாம்
பாணித் தொதையினையற் பற்றவரு—மேனூற்ற
சிங்கன் செயனோக்கிச் சேயா யிரங்கணையா
லங்கவன்றிண் கையறுத்தா னார்த்து. (௨௧௨)

அற்ற நெடுங்கரங்க ளம்புவியில் வீழுமுன
முற்று முளைத்த முரிந்தகையை—மற்றவத்தங்
கொண்டா னரிமுகத்தன் கூர்ந்துசெல வோர்ந்ததனைக்
கண்டான் குமரன் கனன்று. (௨௧௩)

ஓரா யிரங்கணையுய்த் தோரா யிரமுடிகொய்
தீரா யிரஞ்சரங்க ளேவிவெய்யோ—னோராரு
மீரா யிரமொய்ம் பிறத்தனன்வே லன்னமுன்போல்,
வாரா முளைத்தனவே வாய்ந்து. (உகச)

அந்நாட் சிரங்கை யறுத்துமகத் திட்டதன்மை
தன்னால் விளைந்ததெனச் சண்முகவே—ளுன்னு
விருக்கவிவன் மாய்வதெங்க னென்றிமையோர் சோர
வுருக்கிளர்சிங் கேறுரைப்பா னொன்று. (உகரு)

உளைக்குங்கோல் பல்யுகநீ யுய்க்கினுந்தோள் சென்னி
முளைக்கின்ற தன்றியந்த முற்றா—விளைக்கின்றாய்
செய்தவமு மப்பயனுந் தேர்ந்திலாய் சேயாருநீ
மொய்தருவான் வந்தாய் முனை. (உகசு)

சேண்டலமார் தேவரையே செய்வே னிருஞ்சிறைபோ
யாண்டு வருகின்றது மாற்றலுளேன்—காணடகுமெ
யீண்டே யழிவதுமில் லிங்கு னுயிர்விட்டேன்
மீண்டே குதியென்றான் வேந்து. (உகஎ)

என்னலுஞ்செவ் வேள்வினவி யேந்த றனைநோக்கி
நின்னுயிர்க்கு மேயவெல்லை நீங்கிற்று—மன்னமனும்
பின்னைநின்றா னென்னி பிதற்றுதிபே தாய்கணத்தி
லுன்னை முடித்துமென்றா னுற்று. (உகஅ)

தீர்த்தனுரை கேளாச் சினவிவெற்பீ ராயிரத்தைப்
பேர்த்தவுணன் வீசப் பிறங்கவற்றைக்—கூர்த்த
சூரமார்கோ னூறுய்த் துகுத்தனையான் மார்பிற்
சரமா யிரமுய்த்தான் றான். (உகக)

மாயிருங்கூர் வாளியவன் மார்ப மகழ்ந்துமன்னக்
காயெரிகால் கண்ணன்'கரதலத்தாற்— றயிருங்குன்
றன்னு வெடுப்பவைய னோரா யிரங்கணையா
லண்ணன் முடிவீழ்த்தா னங்கு. (உஉ0)

அறுத்தசிரம் வீழுமுன்னோ ராயிரமாஞ் சென்னி
மறித்தும்வந் தெய்த வலியோன்—பறித்தநெடுங்
குன்றம் பலவீசிக் கூர்தடந்தோள் கொட்டியும்பர்
நின்றயா வார்த்தா னெடிது. (உஉக)

ஒண்டிறல்வே லையனோர்ந் தோரா யிரத்திரட்டி
கொண்டகணை தூண்டிக் குவடொழித்துக்—கண்டகன்றன்
றோள்வரையைத் தள்ளினன் றொன்மைபோல் வந்தெழுந்த
வாள்வினையுண் மேற்றுதவ மாம். (உஉஉ)

பாராவஃ தோராடற் பாற்றெண் றிளவலுன்னி
யோரா யிரத்தெட்டி னுள்ளுருக்கொண் — டாரமன்
வண்டுமுறைசெய்தவுணன் வன்றோள் சிரமுற்றுங்
கண்டதுண்டஞ் செய்தான் கனன்று. (உஉ௩.)

வதரவடி வாளின் மகரங்கோ லீர்மன்
சிகர நிரையகரஞ் சீமா — னகர
மிசையிற்போ நேமியிற்போ மேதினியிற் போமெண்
டிசையிற்போ மாரச் செறிந்து. (உஉ௪)

வேலவன்வெங் கோறுணித்து வீச வவுணிசிரங்க
ளேல விதழுதுக்கி யேகவிண்ணிற் — சாலவெரு
வுற்றமரர் பார்விழுந்தா ரொன்விஞ்சை யாவைப்பாம்
பொற்றைகளி லுற்றவவை போய். (உஉ௫)

செங்கதிர்வே லண்ணல் சிலீமுகமீர் தந்துவீழ்
சிங்கமுகன் றேசிழந்த சென்னிகளை — வெங்களமன்
வேதாளர் கொண்டடுக்கி மேனிலைகொண் மாடமென
மீதார வைகுவார் வேட்டு. (உஉ௬)

அன்னோன் சிரம்வா யலரவவற் றங்குறபே
யுன்னு வுறையுளினா லுய்த்தமரப் — பன்னுவாய்
மெல்ல முகிழ்த்தலுமே மேவுசெவி துண்டநெறி
செல்லலுற்றுச் செல்லலுற்ற தேர்ந்து (உஉ௭)

மன்னுங் குகனிவ் வணமறுப்பக் காரவுண
னுன்னுஞ் சிரந்தோ ளொடுமுளைப்பப் — பின்னுந்
திரண்டபல கோலோச்சிச் சென்னியொன்று மங்கை
யிரண்டுநிற்க யாவுமட்டா னேய்ந்து. (உஉ௮)

வன்போர்க் களத்தில் வயவாளி யிற்றுமிந்த
முன்போன் முளைப்ப முருகவே — ளன்போன்வெஞ்
சீற்றமுளான் போலச் சிறிதுரப்ப மாற்றலன்றன்
றோற்றுசிரந் தோளொளித்த சோர்ந்து. (உஉ௯)

ஐயனுங்கா ரத்தி னரிமுகத்தன் சென்னிமொய்ம்பு
மெய்யிலொடுங் கிற்றுமுன்போன் மேவாமை — வெய்யவன்கண்
டென்னெடுநாட் கற்றவிஞ்சை யாண்மன் றயர்த்தான்போ
லன்னவனுள் வட்கிநின்றா னங்கு. (உ௩௦)

அங்கதுகண் டத்தனந்த மத்திரங்க ளட்டசிரஞ்
செங்கரந்தோன் றிற்றிலையென் செப்புகைய — விங்கு
விளைக்குமமரினி வீழ்ந்துபட்ட பின்றோ
முளைக்க விருந்ததென்றான் மொய்த்து. (உ௩௧)

இருதலைவே லத்தவிற்ற வென்றலைதோ ளன்றே
கருதலையென் ஞற்றலும்பர் காண்ப—ரொருக
மிருகைகொண்டெல் லாமடுவே னென்றகழ்ந்தோர் வெற்பைப்
பொருகையன் விட்டான் புகைந்து. (உருஉ)

விட்டிடுமா வெற்பை விசாகன்கண் டோர்கணையா
லட்டிடலு மோர்ந்துகதை யங்கைவைத்தே—கட்டுவிற்கோல்
வேலன்றி யொன்றையட வேறுபயின் றில்லைபடை
பாலவென்றஃ துய்த்தான் பதைத்து. (உருரு)

வெய்யவன்றன் சொற்றசொல்லும் விட்ட கதைமாண்புஞ்
செய்யசுடர் மேனியத்தன் சிந்தைசெய்து—கையமர்ந்த
வெல்லை யுறுகுலிச வேலைவந்தசன் றன்னுயிருண்
டொல்லைவரு கென்னவிட்டா னுற்று (உருச)

செங்கதிர்வேற் சேந்தனெந்தை தீயோன் றிறநோக்கி
வெங்குலிச வேல்விடுப்ப மேவுகதை—யங்குலைத்துத
திண்ணிறத்தைற் பாய்ந்துவெரின் சென்றிடலுஞ் சீயமுகன்
மண்ணிறத்தி வீழ்ந்தான் மடிந்து. (உருரு)

அங்கையுற் றுளரியை யட்டொண் குலிசம்போய்க்
கங்கையுற் றடிவந்து கந்தவேள்—செங்கையுற்ற
தார்த்தா ரயன்முதலோ ராடினர் பாடினர்
தூர்த்தார்பூ மாரி துதித்து. (உருசு)

என்று யகனிமையோர்க் கின்னருள்செய் தேண்பூதர்
மின்று ரயில்வீரர் மேவவயல்—பொன்றுரும்
பாசறையுட் சீயம் பரித்தமணிப் பீடத்திற்
றேசமர்வேள் வீற்றிருந்தான் சென்று. (உருஎ)

செங்கதிர்வே லண்ண றிகழ்பா சறையிருப்ப
வங்கவனே டாடியமா ராகவத்திற்—சிங்கமுகன்
பட்டசெய லொற்றர்போய்ப் பார்த்தைய முற்றுலையுந்
துட்டனிடஞ் சொல்வார் தொழுது. (உருஅ)

குன்றங் குமைத்த குமரன் குலிசத்தா
லுன்றம்பி யாவி யொழிந்ததுண்மை—யென்றுழைஞர்
சொற்றளவிற் சூரன் றுடித்துவிழி தீச்சொரிய
வுற்றயர்ந்து வீழ்ந்தா னுலைந்து. (உருகூ)

கெழுசிகர மேல்வழுவிக் கீழ்த்தலத்திற் கண்கால்
விழுநீர்க் கடலுள் விழுந்தான்—செழுமுகிலின்
மாழ்கிக் கரம்புடைத்து மன்றுயர வாரிதியின்
மூழ்கிப் புலம்புவான் முன். (உசo)

என்னையோ பின்னையோ வின்கரிக்கு முன்னையோ
வுன்னையோ வொற்ற றொழிந்தையென்றார்— மன்றேடன்று
வானவரை வென்று வயமளித்தா யின்றொருசே
யூனமுறக் சொன்றனனே வுற்று. (உ௪௪)

உண்டமர்தா னென்று லுளங்களிக்கு முன்னுயிரைக்
கொண்டகன்றான் கூற்றென்னு கூற்றறிந்து—வண்டுளவ
மாலு மயனு மகவானும் பண்டுபோ
லேலுநகர்க் கேகாரோ வின்று. (உ௪௫)

பொன்னைப் புவியைப் புகல்வரைநற் பூவையரைப்
பின்னைப் பிறவும் பெறலாகு—முன்னைத்
தனிப்படுத்தி நொந்துலையேன் றம்பியிந்தத் தோற்றத்
தினிப்பெறுவ துண்டோ வியம்பு. (உ௪௬)

அண்டர்க் கரியே யரிமுகனே வானடைந்தாய்
வண்டார்தார்த் தாரகனை மக்களொடு—கண்டனையோ
யுற்றதுணை யாவி யுறவும் பிறவுமா
மிற்றவுனை விட்டுழல்வே னிங்கு. (உ௪௭)

அற்றைப் பகலிபமா வானனன்றான் மாய்ந்தபின்ன
ரொற்றைப் புயம்போ யுளந்தளர்வே—புற்றிருந்தே
னிற்றைப் பகனீ யிறந்தா யரிமுகனே
மற்றைப் புயமுமற்றேன் மான்று. (உ௪௮)

என்ன விறைவ னிடியே றெனவரற்று
மன்னவொலி கேட்டமரா ரார்த்தனரா—மன்னசுர
னத்தமணிப் பீடிகையுற் றத்தனொடு போருளுற்றச்
சித்தமதிற் றேர்ந்தான் றெளிந்து. (உ௪௯)

சிங்கமுகாசுரன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ திரு வெண்பா, ௧௦௪௦.

# சூரபன்மன் வதைப்பலடம்.

கொற்றமுறு வைவேல் குலவா யிரகோடி
யொற்றர் தமைநோக்கி யோர்சூரன்—மற்றெனவி
ரண்டமெங்கும் வைகு மனிகத் தொகையாவுங்
கொண்டடைதி றென்றான் குறித்து. (௧)

சொற்றலுந்தாழ்ந் தொற்றரெலாந் தொல்லண்டந் தோறும்போய்க்
கொற்றவன்றன் மாற்றமுறை கூறவே—மற்றவர்தா
நாற்படையாம் வாரியொடு நண்ணண்ட வாயினெறி
பாற்படவே சென்றார் பரிந்து. (உ)

மன்னண்டந் தோறுமுனம் வைத்தநெறி தானைவந்து
தன்னுவமால் வாயுண்டு தொல்லுயிரைப்—பின்னுந்தி
தந்ததொக்கு மன்றேல் சகலமுமன் சம்புகழல்
வந்துதிப்ப மானு மலிந்து. (க)

இத்தன்மை யண்டத்தா றேகும் படைவாலு
முத்தன்மை கண்டென் றௌிமறைந்த—மைத்தழலு
முண்ணடுக்க முற்ற னுலவையுந்தன் மெய்விதிர்த்தா
னண்ணெருக்க முற்றயர்வா னுங்கு. (உ)

ஆர்த்த வொலியா லகிலமடுக் குற்றவெய்யோர்
கார்த்தமெய்யி னுலிருண்ட காயமது— தூர்த்தநண்ணேன்
வன்மையின்முந்நீர்வறந்த மன்றுணைத்தாள் பேர்த்துவைக்குந்
தன்மையின்முன் னண்டமிற்ற தாழ்ந்து. (ங)

கூடும் படைநோக்கிக் கூர்மெய் குலைவுற்று
ரோடு மிடமின்றி யும்பரெலாம்—வீடுவன்போன்
மன்னனயர்ந் தானயனு மாலு முடிவதென்றே
வென்ன நினைந்தா ரினைந்து. (சு)

பூதலங்கள் வானம் பொருப்பெண் டிசையளக்கர்
பாதலங்க ளெங்கும் பரந்தவன்றி— யோதயன்மான்
மன்னனரு மாமுனிவர் வாழிடத்தும் வைகிநின்ற
துன்னருமாத் தானை துதைந்து. (எ)

தொல்லையண்டத் துற்றுவந்த தூசி சதகோடி
யெல்லையாம் போசனைக ளென்றறிஞர்—சொல்லினர்
வேறுவருந் தானை மிகுதி யெவர்விதிப்பார்
கூறுமெண்மே லில்லை குணித்து. (அ)

ஐம்பூத மும்வெவ்வே றங்கமுற்ற நேருமேன்
மொய்ம்பூர் படைச்சீர் மொழிகுவர்யார்—கொம்பூத
முந்தனிக முன்மூதூர் மூடி நிறைந்தனவே
யிந்தவண்ட முற்றுமிமைப் பில். (கூ)

தூதர்போய்ச் சூரன் றுணைத்தா டொழூதனிக
மூதண்டத் துற்றமுற்று முற்றினதா—ரோதுநக
ரென்னுரையுட் சென்றளவி லேரவுணர் கோனெழுந்து
தன்னுறையுள் சென்றான் றனித்து. (க0)

மன்னனீர் தோய்ந்தை வகையுணவு மாந்திநெற்றி
தன்னிலவிர் நீறிட்டுத் தார்மிலைந்து—பொன்னவிர்நற்
றூனை யுடனே தயங்குமணிப் பூணுதி
யேனையவும் பூண்டா னினிது. (கக)

தேரா நிலத்தனரு டிண்படைமற் றேர்படையுஞ்
சீரா யிரகோடி தேரவையு—மோராளி
யானமும்பொற் றேரு மெறுழவுணர் கொண்டேகத்
தானவர்தங் கோன்பணித்தான் றான். (௧௨)

சூர்மருங்கில் வந்திமொச் சூதர் தமைநோக்கி
யோர்தா வோங்குமோ ரொப்பிலெழிற்—றேர்கொணர்தி
ரென்றறைய வன்னா னிணைத்தாள் பணிந்தேத்தி
நன்றெனவே சென்றார் நயந்து. (௧௩)

எழுபதி னாயிரமா மேனுடைய சீய
மெழுபதி னாயிரமா வீட்ட—மெழுபதி
னாயிரமாங் கூளியின மார்த்தீர்ப்பப் பூட்டிநன்கு
மேயவொரு தேர்பணினார் வேட்டு (௧௪)

பாரினுமே யான்றதவிர் பாற்கடலி னார்ப்புளது
கூருமண்ட மாயிரமாங் கோடிதன்—பேரிடத்தி
லாற்றிநிற்கும் வன்மையதா மாடலரி மன்கொடித்தேர்
காற்றினுஞ்செ னீர்மைத்து காய்ந்து. (௧௫)

மிடல்வெற் பலமரவொன் வெய்யோன் குளிர
வடவை விளிதரச்செய் வன்மைத்—தடநெடுந்தே
ருந்து படைபரிப்ப தூழியுநந் தாதிருப்ப
திந்திரனா லம்புரைவ தே. (௧௬)

அன்ன நெடுந்தே ரவுணர்கோன் முன்செலுத்த
மன்னனதின் மேலிவர வாகைகொள்வா—யென்னவே
தானவர்பூ மாரிபெய்தார் சார்வலவ ரேறியுய்ப்ப
வானவிய மார்த்த வதிர்ந்து. (௧௭)

திண்பொற் படியகஞ்சீர் சேர்கோ டிகமடப்பை
தண்சத் திரங்கவரி தாங்கொண்டார்—நண்சிலதர்
மாபுரத்தெண் ணில்சிகரி வாயிலும்பல் ஞெள்ளாலும்போய்க்
கோபுரத்தின் முன்னடைந்தான் கோ (௧௮)

முன்னருஞ்சூர் மூதூர் முதற்கடைவா யின்மருவ
வன்னதனைக் கண்டனிக மாலமே—யென்னக்
கலித்துப் படர்ந்த கணக்கிலிய மார்த்த
சலித்ததவர்த் தாங்கத் தலம். (௧௯)

சேனை செலவே செறிந்தெழுநுண் பூழிபோய்
வானை யிருநிலனை மாதிரத்தை—யேனைய
மன்பரவை தன்னை வளைந்துநனி சோனைகொள்
பின்பனிபோற் போர்த்த பெரிது (௨௦)

பரிகரிவி லாழிமதம் பாய்ந்தாழி யாகத்
திரியவுணர் பங்கியந்நீர்த் தீயா—கிரிவண்
டோகையார் படையினெழு தூளியந்த்த் தீயின்
புகையா நிலவுமே போர்த்து. (உக)

படையினெழு தூளிருளைப் பார்த்திபன்றன் பார்த்து
மிடைகதிர்க டம்மை விளிக்க—வடைந்தனபோ
லங்குடையா வென்றி யணிகத் திடைவநதே
யங்குடையா நின்ற வவிர்ந்து. (உஉ)

இவ்வணங்கொ டானைக ளீண்டிப் படர்தரவே
தெவ்வணங்கு மேந்தல்பொற் றேரின்மேல்—வெவ்வணங்குஞ்
செங்களத்திற் சென்றனன்றூர் சென்று வளைந்தவிடத்
தங்களத்தன் சேய்பா சறை. (உங)

அன்னதனைக் கண்டயன்மா லண்ட ரலக்கணுற்றூர்
மன்னுகண வீரர் மயங்கினூர்—முன்னிருவர்
மற்றூரு மீசன் மகனு மறமுகவன்
பொற்றூள் பணிந்தார் புகழ்ந்து. (உச)

அந்தமிலா வண்டமோ ராயிரத தெட்டினின்றும்
வந்தபெருந் தானையொடு மன்சூர— னுந்திரத
மேலினன்வெம் போர்புரிவான் மேவினனம் பாசறையைக்
கோலிநிரை மொய்த்ததென்றூர் கூர்ந்து. (உரு)

என்ன முறுவல்செய் தேர்கூர் மணித்தவிசார்
பன்னரும்வேள் பாகுவினைப் பார்க்கவவன்—முன்னமுணர்ந்
தன்றே முளவுகோ லங்கைபெறறு வாம்புரவி
மன்றேர் முனமுய்த்தான் வந்து. (உசு)

உந்திடுமக் காலத்தி லொல்லை யெழுந்துருகன்
குந்தமழுச் சூலங் குலிசம்வே—லந்தனுக்கோ
றண்டமெழுக் கூர்நாந் தகம்பலகை நேமிகொண்டான்
றிண்டகுவன் செய்தவமே சேர்த்து. (உஎ)

என்றுநடு வீச னிருந்தாங் கெழிற்குமரன்
வென்றிரத மேறினன் வீரமொய்ம்—பொன்றிலக்கத்
தெண்மர்பாற் போற்றிவந்தா ரீரா யிரவெள்ளத்
திண்கணவர் சூழ்ந்துசென்றூர் தேர்ந்து. (உஅ)

போதன் முதலோர் புடைநின்று பூச்சொரிய
நாதன்றேர் மேலாகி நண்ணலர்கண்—மீதுசெலப்
பாங்கார் பரும்பூதர் பார்த்தவுணன் மாப்படையை
யேங்கா வினையசொற்றூ ரேய்ந்து. (உகூ)

தீபபுரி சூரபன்மன் செய்தவத்தி னாற்பெற்ற
வாயிரத்தெட் டண்டத் தவுணருமே—மேயினரா
மோரண்ட மொன்றி லிருந்தா ரிவரன்று
லாரண்டம் பாரினின்று ராங்கு. (௯௦)

வீரத்திற் பெரியார்கால் வன்பிற் பெரியார்
ஈரத்திற் பெரியார் இனத்தோ – ரோத்தற்
பெரியார் கரத்திற் பெரியார் நமனிற்
பெரியா ரவுணர் பெரிது. (௯௧)

மன்னிமையோர் வன்மைவளம் வவ்வியமர் செய்தலைத்தோ
ருன்னுயிர்கள் யாவு முணுநசையார் —தன்னையன்கான்
மண்டு தொழில் புரிந்து மாற்றவல்லார் ஞாலமுண்டு
மண்டமலைப் பார்பசிநோய்க் காங்கு (௯௨)

வெங்கனல்கால் கண்ணார் விரிசடனோர் பேழ்வாயார்
சங்கிருந் திங்களுந்தோய் சென்னியார்—பங்கமிலா
வென்றிமிக மேற்கொண்டோர் வெய்ய பவத்தினுக்கோர்
தன்றியவைப் பானோர் தைதந்து. (௯௩)

அங்கிமுக ளுளிமுக னத்திமுகன் சிங்கமுகன்
பொங்கவர்சேர் பல்லோர் பொலிவுற்றார்—வெஙகண்
மதுகைட பன்மகிடன் மன்சலந்த ரன்போற்
கதுவிமொய்த்தா ரெண்ணிலார் காய்ந்து. (௯௪)

அரனயன் மால் கால்படைக ளக்கைபுற்றோர் பல்லோ
ருரனகொ ளவுண ருறுமெண்—டரனனந்த
கோடியென்பர் வானிலனுங் கூர்ந்தனிக மாய்ச்சூழி
னு டியென்கொல் செய்துவது நாம். (௯௫)

ஓரண்டத் தாரமரா னுள்ளுலைத்சோ மாவினெல்லாப்
போரண்டத் தார்போர் புறிற் சிதைப்பின்—ருரு
மொருவரெமை யெல்லா முரப்பித் துரப்ப
ரிருவருறி னுய்யவல்லார் யார். (௯௬)

எல்லையிலா வேண்கொண்ட வெந்தலைவ ரேவருமே
யல்லனமா வீர ரவுணரைதசாம்—வெல்லுவரோ
கல்லான் மரத்தாற் கடியினவர் நம்முயிரைக்
கொல்லா மதா ழிகுவரே கொல். (௯௭)

வேற்படைகொள் வீரனன்றி வேறெதிர்ப்பா ராருமிலை
நாற்படையுஞ் சூழ்ந்தமையா னுமெலலாம்—பாற்படவே
யோடுதலு மாகா முறுபகைவர்த் தாக்கியே
வீடுதனன் றென்றுசொற்றார் வேர்த்து. (௯௮)

சாரதர்தந் தானைத் தலைவர் சயவீரர்
வீரமொய்ம்பன் ஞானு மிடைந்தசூழ்—பேரணிக
வீட்டங் தனைநோக்கா விற்றனை நம் வன்மையென
வாட்டந் தனையடைந்தார் வாய்ந்து. (௩௯)

வண்டார் உலாரி மருவமர ரெங்குஞ்சூ
ழெண்டா னவரனிகம் யாவுமே—கண்டார்
கவன்று ரவர்தம்முட் காரியின்ன சொல்வான்
றவன்றுங் குளமா றனக்கு. (௪0)

ஆண்டகையெங் கோமான்மே லாயிரத்தெட் டண்டத்து
மீண்டனிக மெல்லா மிருந்தவிவர்—வேண்டருமோர்
சூள்கொண்டோ ரூழி தொடர்ந்துசெய்ய முற்றுமென்றன்
மாள்கின்ற தெங்கவுணர் மன். (௪௧)

காரவுண ராம்பானுட் கங்குல் விடிவநுஉடு
சீரமரர் வெய்யசிறை தீர்வதூஉம்—கூர
விழிவாய தன்பினுமகி றெப்தவதூஉ முண்டோ
மொழிவாய் முதல்வவென்றான் முன். (௪௨)

மகவா னினைய வகுத்தலுமே ஞாலந்
தகவா னளந்த தலைவ—னுகவா யி
ணடிமையோர் தம்மிறைய னெஞ்ச முறுகவலை
நாடியின்ன சொல்வா னயந்து (௪௩)

காலமாய்க் கண்ட கருமமாய்க் காணரிய
கோலமாய்க் கொண்ட குணங்களாய்—ஞாலமா
யுன்னவையு மின்றி யநாதியாய் மூலமாய்
முன்னவன்றா னறு முகன். (௪௪)

குன்றுருவ வேல்விடுத்தோன் குன்றடைந்து நாங்காண
வொன்றுருவங் கொண்ட தயர்சதியோ—துன்றயனு
யாக்கு மெனதுருவா யங்களிக்கு மீசன்போ
னீக்கு மெவையு நெடிது. (௪௫)

பாயிருநீர் சூழ்சூர பன்மன் படை யையெல்லா
மேயெனுமுன் வீட்டு மிளைஞனென—ரீமையண்ண
லாயிரமா கோடியண்டத் தாருயிர்கட் கெல்லாந்தா
னாயகனென் றோதுமறை நன்கு. (௪௬)

சூரன் முதலோரைத் துன்னித் தொலேக்கவுன்னின்
மூர லதனின் முனிவினுண்மைச்—சீரினெழி
ஞேக்கினடு வானோர் கொடிப்பினென்று லன்னவனேண்
வாக்கினவில் வார்யார் வகுத்து. (௪௭)

சீரணிக்குத் தோடிக்குச் சென்றிலக்கத் தொன்பான்றிண்
வீரர் படைபோற்ற வெம்படைகை—யாரவே
சூரையட வந்ததன்மை தூக்கினெறாட் டாங்குகனென்
பேரையுடை நீ செவ்வேற் பிரார்க்கு. (௪௮)

தாரகனைக் கொல்வேலாற் றுணைவரை வீட்டிமற்றச்
சூரன் படலுந் தொலைக்குமென்னக்—கூரவற்
றேற்றியும்ப ரோடுஞ் செருப்பார்த்து மென்றறுகன்
பாற்றிருமால் போந்தான் பரிந்து. (௪௯)

அன்னதுகண் டாறுமுகத் தையன் முறுவல்செய்
தன்னமருக் கேகலும்பா ரும்பரொன்றாய்க்—தன்னவுண
ரோதமொலித் தார்போ ருளைந்தமுன்ன ரேகியதின்
பூதர் முரிந்தார் புலர்ந்து. (௫௦)

முரிந்ததும்வன் பூத முதல்வா பொருதே
யிரிந்தலைந்தார் மற்றிலக்கச் செம்மர்—புரிந்தமரம்
பின்னடைந்தார் பின்னரோர் பெற்றியெலா மோர்ந்துவல்லை
முன்னடைந்தான் வில்லொடுதிண் மொய்ம்பு. (௫௧)

எய்தியெறுஞ் வில்வாங்கி யேந்தல் கணைமாரி
பெய்தவுணர் தங்கள் பெருந்தடந்தோள்—கைதலைகண்
மார்புகழ லாதி வரைகளாய் வீழவே
நீர்புகின்று போர்புரிந்தா னேற்று. (௫௨)

உன்று யிரகோடி யோதநடு நாகமொன்று
துன்று வலைத்தென்னத் துன்னவர்நேர்—மன்றுச்
சமர்செய் தலைப்புறத் தன்மைசண் டேந்த
லமர்செவ்வேள் பால்வந்தா னங்கு. (௫௩)

ஆற்ற லவுண ரணிக மிரிந்தனவே
சாற்று கணத்தலைவர் சாய்ந்தனரா—லேற்று
மருவயவர் தாமுரிந்தார் மைந்தனே யிங்கண்
வருமெனச்சூழ்ந் தார்பலரும் வந்து. (௫௪)

தண்டங் குலிசஞ் சரஞ்சூலம் வேல்பிறவுங்
கொண்டவுணர் பெய்திறனுங் கொள்பூசர்—விண்டமையும்
வீரர் மெலிவுற்று மீண்டமையுங் கண்டுசெவ்வேண்
மூரல் புரிந்தான் முனி. (௫௫)

மூக்கணுடைத் தாதைபோன் மூரல் சிறிதுசெய்து
மிக்கவலி நீட்சிபுறு வில்லினைச்செங்—கைக்கொண்டு
கோட்டிநா ணோதைகொளக் கூறும் பலவுயிரி
னீட்டமெலா மாட்டமுற்ற வே (௫௬)

நிக்கனருள்குகன்வின் ஞனின் முதிரொலிபோய்த்
தொக்கசெவி தோறுமுறச் சூழவுண—ருக்கனராற்
புன்றேர் பகிர்வ பரிபுரள்வ பாய்மதமா
சென்றே விழுவ திகைத்து. (௩எ)

சேந்தன் சிலையிற் செறிமையுறை சிந்துவபோற்
கார்தளவில் கோல்கள் கடவிஞ—ஞர்தருவர்
மன்வான் புடைவளையு மாவவனி நீளுததி
மின்வான் மிடைவ மிளிர்ந்து. (௩அ)

கொடியடுவ வெண்ணில் குடையடுவ பற்பல்
படையடுவ மாவடுவ பன்மா—வடுவநெடுந்
தேரடுவ காரவுணத் தீயர் முடியடுவ
தாரகமாஞ் செவ்வேள் சரம். (௩௯)

விரையார் தருவின் விழுவர் தகுவர்
திரையா மெனவிழுவ திண்மா—வரையா
மெனவிழுவ தேர்மஞ் சினமெனமா வீழ்வ
வினமதிபோல் வீழ்வகுடை வேய்ந்து. (௪0)

செல்லுறுதாள் கொல்படைகள் சிந்துகர நந்துதிறல்
சொல்லுறுவாய் வீறுபெறு தோளிணைக்கண்—நல்லெனவே
யார்த்திடும்வன் கண்ட மவுணர் துவசமொடு
தீர்த்தனெய்யுங் கோல்கொய்யுஞ் சென்று. (௪க)

பொன்னுலகம் போயுலவும் பூமன் பதமேகு
மின்னுரமா ஞெல்லுலக மேவுமே—மண்ணிலத்திற்
கீண்டு விரைந்துசெலுங் கீழுதல மூடுபோங்
காண்டகைய கந்தன் கணை. (௪உ)

மூன்னருமூ தண்ட முகட்டுருவு மாதிரம்போம்
பன்னகமு மெண்கிரியும் பட்டுருவுந்—துன்னவுணர்
சென்னிமுடி யோடுமுயர் திண்டோள் வரைதன்னும்
மன்னியசெவ் வேள்விடுமா வண்டு. (௪௩)

வானகமண் டிக்களக்கர் வஞ்சனமன் பாசறைசூழ்
வானவிடம் யாவமைய வட்டிடலு—மானனினன்
வேந்த னுளமகிழா வீந்தா ரவுணரின்ன
னீந்திலே ஞமென்றறைந்தார் நேர்ந்து. (௪௪)

வெந்தகுவர் தானை விசிந்து கிடந்தமைகண்
டந்தார்க ளுள்ளுவந்தா ரங்கதிர்வேற்—கந்தனைத்திண்
பூதரவர் தலைவர் போர்வீர ராருமே
யாதரமுற் றேத்திஞ ரார்த்து. (௪௫)

ஐயனம்பு தைப்ப வகன்வான் முகட்டவுணர்
வெய்ய படைதொலைந்து வெள்ளிடையே—செய்யவிது
கண்டிறைவன் பூங்கழல்கள் காண நெறியுமினி
யுண்டென் றுவப்பா ருளம். (௬௬)

காற்றென்ன வண்ட கடாகநெறி வாயிலுற்றே
யேற்றகரி சேர்பரியி னேகியே—சாற்றுமண்டம்
யாண்டுமுற்றார் வெள்ளிடையா னென்னதுயில் லென்னவொருங்
கண்டினர்முன னுற்றவர்போ லேய்ந்து. (௬௭)

சீர்த்தமன்போர்க் குற்ற செயலுணர்ந்து முன்னடைந்தார்
கார்த்த பிணமாங் கருவரையு—மீர்த்தெழு
னெய்தரத்த யாறு மிடைப்படுதல் பார்த்தனரு
ணைதரத்துன் புற்றார் நலிந்து. (௬௮)

விஞ்சநைந்தார் நம்படையை வீத்தா ரொடுபொருது
வெஞ்சமரில் வென்றிகொடு மீடுமென—நெஞ்சமது
தேறவிடுகூற் பூதர் திறல்வீரர் பாலகினூறத்
தோற்றினன்முக் கண்ணன் சுதன். (௬௯)

சேயுருக்கண் டாற்ற சிறிபனரி யானையிலா
னையிவன்கொ ணம்முடைய வெண்ணலனே—மேயவவ
னெய்திற் படைடனைத்து நூறினு னுன்னருஞ்சீ
ரெய்தல் வியப்பா மிது. (௭௦)

அன்னதுதா னிற்க வவன்மேற்சூர் வந்தபொரு
முன்னாமர் செய்தே முடிக்குதுநா—மென்னகவின்
றாவுணர் சேனைமுற்ற வண்பூத ருட்கினர்
வீரர் சலித்தார் மெலிந்து. (௭௧)

ஐயன் மருத்தினைப்பார்த் தாரணிகச் சூழலெங்கும்
வையம் விடுத்தியென வன்மவவன்—வெய்யவர்கள்
மன்னு மிடத்துதைத்தான் மண்டிசைவான் மீதுலவு
மின்னலின்வேள் பொற்றேர் விரைந்து. (௭௨)

சேயவுணர் சேனைவிழத் தேனுழுகிற் சேரந்த
மாயிரமாங் கோடிகளா வம்புவிட்டான்—மேயவர்த
மங்கந் துணிவுற்ற வாழிபிற்செந் நீர்வளைந்த
வெங்கட் பணிநெளிந்த வேர்த்து. (௭௩)

மூவினைசெய் மூர்த்தி முனிக்கலையொடு கைதூண்டு
மேவினையுந் தேரினையு மேபுகழ்வார்—வீவினைச்செய்
கோல்விசைபொற் றேர்விசையுட் கொண்டவர்கேள் கைவிசையோ
கால்விசையோ வென்றார் களித்து. (௭௪)

தாயனொடு வாளி துணித்தவங்க மீதொழுத
தீயருயிர் வான்புகுத நேர்ந்துசெல—லேயுமவை
யற்றே லமர ரடுபகைதீர்ப் பான்வைர
முற்றே குதல்சிவனு மோர்ந்து. (எரு)

காலொருபாற் றோடொருபாற் கையொருபாற் காதொருபால்
வாலொருபான் மாக்களிறு மன்றோற்ற—நூலுணரார்
சொல்லுபிர சங்கத்திற் சொற்பொருள்சோர்ந் தொற்றுமையின்
றொல்லுமுறை காட்டுமே யுற்று. (எசு)

வாரற்ற வார்ப்பற்ற மன்னுங் கலினமற்ற
தாரற்ற பல்லணமுஞ் சானற்ற—சீருற்ற
சுற்றத் தவர்நிலம்பொன் றேசுமுத லொவ்வொன்றின்
பற்றற் றவர்போல் பரி. (எஎ)

பொன்னுரும் வையம் புரவிபோய்ப் பாகுபோய்
மின்னுருஞ் சில்லிபோய் மேவுவளி—தன்னூலே
வாரிவெள்ளத் தாழு மரக்கலம்போற் செங்களத்திற்
சோரிவெள்ளத் தாழுஞ் சுழன்று (எஅ)

மன்னுமிடந் தோறு மழையெனவே வெங்கணைகண்
மின்னவிருள் செங்கதிர்வேல் வேள்சொரிந்தாள்—கொன்னுதிய
சூலங்கொ னேமிகொ றன்வச் சிரங்கொல்கூர்
வேலது கொல் லென்ன விரைந்து. (எகூ)

சூழியன்மா தானை துணிந்தவுட லேழ்கடல்பே
ராழியொடு வானு மடைத்தனவேள்—பாழியம்பா
லீரா விறந்தவெண்ணின் றெண்கவந்த மாடினவை
யோரா யிரகோடி யுண்டு. (அ0)

ஆரவுண ராக்கைநெய்த்தோ ராறாகி யாழியா
யோரும் பெரும்புறமா வோதமாய்க்—கூருமா
ஆழியெழு நீத்தம்போ லோங்கிப் பரந்ததே
யேழிரெ டேழுலகு மேய்ந்து. (அக)

காரா ரவுணக் கனேபரங்கா னீத்தமாத்
தேரார்கலமாகச்செங்குருதி—நீராக
வெங்கடனேர் தீபமா வேனுந் தகமீனச்
செங்கடனே ராகுஞ் செறிந்து. (அஉ)

அண்டமிது முற்றவுண ராவிகொள வேனையண்டங்
கொண்டபடை பின்னுங் குழுவிவரல்—கண்டருள்கூ
ராய் னினியனென்னி லம்பிலண்ட கோளகையின்
வாயின் மறித்தான் வலிது. (அங)

விட்ட கணையால் விளிந்த களேபரம்வான்
றொட்டவளி முற்றுமுற்றுச் சூழ்வனகண்—டிட்டயங்கு
கந்தவே டங்கைபோற் கண்களினா னோக்குதலும்
வெந்தவே யெல்லாம் விரைந்து. (௮௪)

வெந்ததுகள் பட்டனவான் மேவு களேபரந்தா
னந்தரத்த நீர்வறந்த வுன்னுலக—முந்துபோ
லாயினமா லம்புயத்தோ னண்ட ரறுமுகனை
மேயினரார்த் தேத்தினார் வேட்டு. (௮௫)

அன்னபோ தொல்லை யடுகளத்திற் சூரடைந்து
மண்ணரித் திறத்தேர்ந்து மாகமுறச—துன்னனிகந்
தன்னை பலவுந் தானையும்பர் சம்மோடு சாய்ப்பனா
னென்ன நவின்றா னினைந்து. (௮௬)

மாற்றமிந்த வாறுரைக்கு மன்னவர்மன் றன்னுளத்திற்
சீற்றமது மூளச் செருக்குறித்தான்—காற்றூந்து
பூந்தனித்தே ரேறிப் புலவரெலாம் போற்றிடவே
சேந்தனுநேர் புக்கான் றெரிந்து. (௮௭)

புக்கபோ தையனொளிர் பொற்பார்ந்த தோற்றமும்பான்
மிக்க கரநிரையு மின்படையுந்—தொக்கமா
றுணவிலும் வீரமுமே நோக்கிமுன்சொ றக்கனைப்போற்
கோணிலைய கூறுவ கொடிது. (௮௮)

வானென்று நோக்கனருண் மன்வரத்தி னாணிறவேன்
யானென்று மிப்பெற்றி யாயிருப்பேன்—றானென்று
கூர்ந்தென்னோ டேற்றார் குலைந்திறந்தார் பல்லோரன்
றோர்ந்திலை நீ போலு முளத்து. (௮௯)

உளமெலிந்தென் வேலை யுளற்றியுலை யும்பர்
கிளவி சரதமெனக் கேட்டே—யிளமை
மிகுந்திடுமோர் பிள்ளைமையான் மேவினையிங் கள்ளல்
புகுந்திடுமோர் போதகமே போல். (௯௦)

உடைப்பெருமாத் தானைசெற்றா யுன்னைச்சே யென்று
விடுப்பதில்லை வெந்நுறினு மேவிப்—படுப்பனும்பர்
சாரசர்க டம்மையுமே தாக்கிக் கெடுப்பனென்றான்
சூரனெனும் வெய்யோன் சுளித்து. (௯௧)

தீய செயலினையே செய்சயவ நீவறிதே
வாய துறக்கயப்ப வம்புரைத்தா—யாயவே
மேலுரைக்கற் பாலதன்னை மேவுனக்கி யாம்விடுவெங்
கோலுரைக்கு மென்றான் குகன். (௯௨)

தாரகமாம் வேளினைய சாற்றலும்வெஞ் சூர்வெகுண்டு
மேரு நிகர்வதோர் வில்வளைக்கப்—பாரிடர்மன்
வானோர் விடத்தை வளைத்தாங்குத் தானவர்கோ
னானோன் றனைவளைத்தா ரார்த்து. (௯௩)

சிலைவீ சினர்தோ மரம்வீ சினர்மூ
விலைவீ சினர்படைக ளெல்லா—முலைய
வலைவீ சினரெதிர்ந்தார் மாயவெறிந் தாம்பல்
வலைவீசி யாப்பவர்போல் வாய்ந்து. (௯௪)

கண்டவுணர் கோன்விரைந்து காண்ட மழைசிதறித்
தண்டலில்வெம் பூதர் தமைத்தடிந்தான்—மண்டவர்தாம்
வீடினார் தோள்சரம்போய் வீழ்ந்தனமன் வேற்றுருக்கொண்
டோடினா ராயினா ரோய்ந்து. (௯௫)

பூதர்சாஞ் சாய்தலும் போற்றிலக்கத் தெண்மநம்வே
தேவனுஞ் சூழ்ந்துடனே துன்னியிநங்—கோதைதொங்கு
பாரமுறு விற்கோட்டிப் பன்னரிய கோன்மாரி
காரவுணன் மேற்சொரிந்தார் காய்ந்து. (௯௬)

நாவுகணை யாவும்வெஞ் சூர் மேற் படவிளிவு
மேவினவூ ரொன்றும் விளைத்திலமன்—மாயபவர்
சிரோவப் பாராச் சிலைதுணிபாக் கோல்பொழியாத்
தேரோடு சாரியுற்றான் றேர்ந்து. (௯௭)

உன்னூறு கோடிவெவ்வே வோர்தொடையி னாவுய்த்து
மன்னூறு செய்வனியான் வட்டணைபோய்—முன்னூற
மாறுவிடு கோறுணித்து மற்றவய வீரர்தா
மேறுதேர் வில்லிறுத்தா னெய்ந்து. (௯௮)

அன்னவர்போ ராற்றுமுனோ ராயிரமோ ராயிரங்கோன்
சென்னியுரந் தோள்கரத்திற் சிந்திடலு—மன்னிலக்கர்
நேருமெண்மர் வில்வலிபோய் நீங்கினர்திண் வீரனொன்றோன்
றேரின்மேற் பாய்ந்தான் சினந்து. (௯௯)

பாய்ந்துதிறல் வாகு பரன்முனருள் வாளுரீஇ
வேந்தன்கொள் விற்றுணிக்க வெவ்வவுணன்—காய்ந்துரத்தி
லோர்சரத்தி னாற்புடைத்தா னெய்யெனவீழ்ந் தான்வன்றா
தார்த லுணர்ந்தெறிந்தா னங்கு. (௧௦௦)

எறிந்தபோ தேர்விசும்பி லேகு மளவ
லறிந்துசென்று வேள்பா லடைந்தான்—றறிந்தசிலை
பார்விட் டகன்றுவிண்போய்ப் பண்சே யடநினைக
நேர்வி லெடுத்தா னெடிது. (௧௦௧)

வினைகழலார் மன்னன் வரிவில் வளைத்துப்
புனலனல்கா லொடொலித்தல் போல—வெனைவருமே
புள்ளந் துளங்க வுறநா ணொலியெடுத்தான்
வள்ள லறிந்தனனே மற்று. (௧௦௨)

கார்வணன்பா ருண்பொழுதுங் கஞ்சன் றுயில்பொழுதுந்
தீர்வுறு தண்டமுற்றுஞ் சென்றருவி—யார்வி
ணிலவி யுயர்கயிலை நேர்வதோர் சீர்கொள்
குலவி லெடுத்தான் குகன். (௧௦௩)

குன்று நிகரக் குலவுபெரும் வில்வாங்கித்
தன்று மெழுவகையாந் தோற்றமுறா—நின்ற
கணத்துயிர்ன் கூட்டமொடு காருருமார்த் தன்னக்
குணத்தொனிதான் கொண்டான் குகன். (௧௦௪)

மருவுகுணத் தோகை வழங்கலுமே கொற்றம்
வருதிண் வரிவில் வளைஇ—யொருபத்
தாறு யிரத்திரட்டி நோன்கணைபெய் தானமற்கு
மூறு யிரம்புரிசூ ருற்று. (௧௦௫)

வான்மறைத்த வாசை மறைத்த மதிசோயொண்
மீன்மறைத்த வெய்யோன் வெயின்மறைத்த—கான்மறைத்த
வாரு மலைமறைத்த வம்பார் மறைத்தவுயர்
கூரு மலைமறைத்த கோல். (௧௦௬)

காற்றிற் செலுவ கனலிற் படர்வகொடுங்
கூற்றிற் கொலுவவிடக் கொள்கையுற்ற—பாற்றுச்
சிறையுள் ளனபல் சிரம்படைத்த வெண்டிக்
கறைபுகழ்கொள சூரபன்ம னம்பு. (௧௦௭)

மேரு வினைத்துளைப்ப வெவ்வேறு வண்ணத்த
கூருறுகோன் மாரிபெய்தான் கோனமா—ராருமே
கைகுலைத்தே யைய காயினும் போயுறைதற்
கெய்திடுமெங் குள்ளமென்றா ரிங்கு. (௧௦௮)

உரைத்தவர்க்கு மான்மா றுரைவழங்கு முன்வேல்
காத்திலங்கு வேளிஃது கண்ணுற்—றெரித்துவெய்ய
தீவிடுக்கு மூனைத்தபோற் றீடசில தன்வரிகளி
லேவிடுத்தக் கோறடிந்தா னெய்ந்து. (௧௦௯)

அங்கவுணர் கோனெங்களைய னெதிருறவே
மங்குலென மானமிலா வண்டெய்தான்—புங்கவனுங்
கோன்மழைபெய் தான்கொடியோன் கூரேக் கனைப்புரத்திப்
போன்மொய்த் தறுத்த புகைந்து. (௧௧௦)

அறுத்தபின்னும் வெய்யோ னறுமுகவன் மேலே
மறுத்தும் பகழிபெய்தான் வாளி—கறுத்துறுமன்
கந்தனூ றம்பிற் கடிந்தவற்றை நீறாக்கி
யுந்துவண்டேழ் நூறுவிட்டா னுற்று. (ககக)

மாயைமகன் மற்றதனை வாளிகளி னாலறுத்தே
யாயிரஞ்சோல் செய்மு னனுகவிட்டான்—மேயவதை
யத்தொகைய வத்திரத்தட் டம்பா யிரத்திரட்டி
யுய்த்தனன்வே டெவ்வெருவ வுற்று. (ககஉ)

சீரார் குகன்விடுகோல் செல்ல வவற்றைச்சூ
ரீரா யிரம்பகழி யேவிவிட்டான்—சூராருஞ்
சேயம் பனைத்துஞ் செலச்செலவே தான்பூட்டித்தான்
றீயடைவ வாயிடல்போ னேர்ந்து. (ககங)

ஐயன் விடுகணையை யவ்வவுணர் கோனீக்கும்
வெய்யன் விடுகணையை வேளறுக்கு—மெய்புனைந்
வாளிகுறைந் தாங்கெழுசீ மல்கியது பார்பகிர்ந்த
சீளசலம் வற்றியதூஉ நீர். (ககச)

நார்கெழுவேற் சேந்தனுமத் தானவர்தம் வேந்தனுபவெம்
போர்புரிதல் காணப் பொருவீர—வீர்வளைசான்
வெய்யவிவ நுள்ளொவர்பான் மேவி நடத்துமெறு
வையமுளத் தார்ந்துநின்று ளாங்கு. (ககரு)

யாளிக்கு முன்னேனை யானைக்குப் பின்னேனை
வாளிக் குலமா மழைமறைத்த—வேளின்
வடியத் திரநூறி மற்றவனூர் பொற்றேர்க்
கொடியறுத்து நின்றார்த்தான் கோன். (ககசா)

சூரன்செவ் வாயிற் சுரிமுகம்வைத் தூதினன்றன்
சீரதிசைத் தென்னச் சினங்கொண்டு—கூடவே
யேற்ற கணைமழைபா லீராறு தோளுடையான்
றேற்ற மறைத்திட்டான் சூழ்ந்து. (ககஎ)

மறைத்த விசிகத்தை வாளி மழையாற்
குறைத்தசுர னூர்தேர்க் கொடியை—மறைத்தலைவ
னேழ்கணைபி னாலறுத்தே யேந்தல் குமரேச
னாழ்கடலின் வாயிட்டா னைந்து. (ககஅ)

தானவர்கோன் கேதனமொண் சாகரத்தி லற்றுவிழப்
பானுகம்ப னென்னும் படைத்தலைவன்—றானுவந்து
புங்கவர்கள் போற்றப் புகழ்ந்து குனித் தாயிரவாய்
சங்கம்வைத் தூதினன் சார்ந்து. (கககூ)

சீற்றமிகு சூரன் சிலீமுகம நேகமுய்த்தான்
வேற்றலைவன் வாளிபல விட்டவைநீத—தாற்றவமர்
செய்தா னிவர்தம்மிற் செல்லம்பு செல்லம்பிற்
பெய்தார் பொருதார் பெரிது. (௧௮௯)

விரைவினிரு வோரும் விசிகமழை தூய்ப்போர்
புரிபொழுதி லாசை புரையுற்—றெரிதந்த
தாரிரும்பார் சோர்ந்திரங்க வன்னவர்தேர் மீதலத்துச்
சாரிகையாப் போய்த்திரிந்த சார்ந்து. (௧௯௦)

பாதலமே சூழ்குவன பன்றிசையே யோடுவன
பூதலமே மேவுவன பூமனகர்—மீதுறுவ
கூறுபல வண்டங் குலவுவன நேமிசெல்வ
தேறுமவ ரேறுமணித் தேர். (௧௯௧)

மன்னிருவர் தேர்செல்வ மன்னிருவர் தாமநண்டா
ருன்னிருவர் மற்றோ ருயங்கினர்—துன்னிருநீர்
வண்டா ரணியலைந்த வான்மா முகடுதிர்ந்த
வெண்டா ரகையுகுந்த வீழ்ந்து. (௧௯௨)

தேரிரண்டு மேகித் திசையூழ தண்டமெங்குஞ்
சாரி வருதலொடுஞ் சண்முகன்மே—லாரு
மிணையிலனீ ரூநா ளொழிலி யெனவே
கணைமழைக ளீர்த்தான் கடிந்து. (௧௯௩)

மழுவனந்த கோடி மலிசப் பணமாநூ
றழுவனந்த கோடி குலிசங்—கழுமு
ளெழுவனந்த கோடிவே லெண்ணனந்த கோடி
கொழுவனந்த கோடியுய்த்தான் கோன். (௧௯௪)

அன்னபடை மாரிதனை யத்தன்காற் றிற்றிகழ்கோன்
மன்னவிடுத்தவற்றை மாற்றி முறை—பின்னருமோ
ரேழுடனே ழேவேவி பேறிரத மாதொலைக்கச்
சூழுறுமோர் தேரிலுற்றான் சூர். (௧௯௫)

மன்வில் வளைத்தளவில் வன்பகழி தூண்டவரன்
றன்மகன்கண் டோர்திண் டனுவாங்கித் —தன்கணைக
ளேயவற்றை மாற்றிடலுஞ் சூரனந்த கோடிவெங்கோல்
சேயவன்மே லுய்த்தான் றெரிந்து. (௧௯௬)

கந்த னவற்றையெலாங் காண்டமழை யான்மாற்றி
யந்தகுவன் றோண்டிசையோ ராயிரங்கோ—லுந்தவவை
சூர்புயத்து மேற்படலுந் தூளாய்ச் சிதறிற்றோர்
போர்வரைமேல் வீழாலி போல். (௧௯௭)

அர்ச்சையுறு தானவர்கோ னன்னதனை நோக்கியே
வெச்சைமொய்ம்பிற் செல்ல விராயிரங்கோல்—இச்சையினும்
வேகமாய்த் தூண்டவவை மேவிவெந்து நுண்டுகளா
தாகமா வாஞ்சையுற்ற வார்ந்து. (க[illegible])

ஆங்கதுபோ தையனுய்த்த வம்பினைத்து மாற்றியே
பாங்கமரும் வீரர்மா பாரிடர்மேல்—வேங்கணைக
டேற்றலுற்றான் றன்மைமகண்டு தன்னு யிரஞ்சாந்து
யாற்றலுற்றான் விற்றுணித்தா னங்கு. (க[illegible])

மற்றுமோர் வில்லேந்தி மஞ்சுலைய வார்த்தருவம்
பெற்றுவிண்ணிற் றோன்றவது பேண்குகன்கண்—ணுற்றும்பர்
சென்றார்ந்து தாக்கவிறை சேர்போ திளவலொடு
நின்றாடல் செய்குவன்சூர் நேர். (க[illegible])

விண்ணி ற்று சூரன் விரைந்து கரந்துசென்று
மண்ணிற் செலநிலம்வேள் வந்துவெம்போர்க்—கண்ணுலையிற்
றோற்றமது மாற்றியே தூநீர்க் கடனடுவண்
கூற்றமன்ன ஞனன் குறித்து. (க[illegible])

மன்னவேள் சென்றபொர மாயையின்வெஞ் சூர்மறைந்து
தன்னுந் றிசைமுடிவிற் றோன் றவங்கு—முன்னிடப்போய்
மாதலத்திற் பொருஞற்ற மன்னன் கரவற்றே
பாதலத்தி னின்றான் பரிந்து. (க[illegible])

ஐயனங்குஞ் சென்றுசம ராற்றவுரு மாற்றியே
வெய்யன் மகமேரு மேனிற்பர்—செய்யனவண்
டுன்னவவன் பாலுலகிற் றோன்றவங்கண் போய்க்குகன்சூர்
தன்னொடமர் செய்துநின்றான் றான். (க[illegible])

ஆற்றிடமப் போழ்தே யசுரனண்ட கோளத்தின்
மேற்றிகழ்வா யிற்படர மேவவன்போ—யேற்றெதிர்போர்
செய்தனையா னெறிவுளித் தேரையம்பி னலட்டா
னுய்திறனல் குத்தமவே னூற்று. (க[illegible])

கந்தன் கணையாற் கவின்மணித்தே ரிற்றிடலும்
மிந்திரஞா லத்தேரை யெண்ணவது—வந்ததின்
மன்னிவர்ந்து போயண்ட வாயி லடைத்தமைகண்
டென்னிறைமை நன்றென்று னிங்கு. (க[illegible])

இறையி லவுணர்கோ னேந்துதனு வாங்கி
யறையநந்த கோடியம்பெய் தண்ட—நெறிவாயில்
பொத்து கணைக்கதவம் போழ்ந்தப்பா லாம்படையை
யத்தகுவன் கூவினு னார்த்து. (க[illegible])

ஆர்த்திடுமேக் காலத்தி லண்டத்தப் பானின்ற
மூர்த்தியோற் றானைவெள்ளந் துண்ணெனப்போய்—போர்த்தொ
ழெய்வான் குகன்பாற் றெழித்துமுற்ற வும்பருள [ழிலைச்
சைவார்ந் தயர்ந்தார் நலிந்து. (கசஎ)

ஆலமோ வூழி யனலோ விடிமேக
சாலமோ வென்றயரத் தானைவெள்ளங்—கோலவேள்
மன்முதல்கான் றென்னப் படைவீசி யார்த்திடவெங்
கோன்சிறிது நோக்கினன்றன் கோ. (கசஅ)

வெற்பமோ வேற்குகன் றீ மேவ விழித்தளவின்
மூற்பமோ தானை முடிவுறலு—மெற்படுமோ
வண்டத்தப் பாற்படைபேர்ந் தண்மியத்தன் பாற்படைகள்
மீண்டத்தப் பார்த்துய்த்த வேர்த்து. (கசகூ)

பரப்பினார் தானைதனைப் பாரா மறைக்கோர்
கரப்பினன் றீயுமிழ்சன் மானு—முரப்பினு
மூழிற் சிறிதனல்பஞ் சோங்கறனிற் புக்கென்னப்
பூழியாய்ப் போர்த்தன விண பூ. (கரு௦)

அந்தமிலாச் சேனைமுற்று மையமுறுங் காரத்தால்
வெந்தழியப் பின்னுமே மேலையண்டத்—தந்துமத
வாபரிதேர் வல்லவுணர் மன்படைக ளார்த்துவர
மேமன்னன் கண்டானெடிது (கருக)

சந்தனங்கை யாழ்கழுமுளெழுத தண்டமழுச்
சந்த முறுபடையைத் தானேக்கி—நந்தம்பாற்
றுன்னு படைநிற்கத் துன்னார் படையனைத்துங
கொன்றடைதி ரிங்கென்றான் கூர்ந்து. (கருஉ)

பங்கமில்வேள் விட்ட படையனந்த கோடியா
யங்கிருந் தீயு மாவும்போ—லெங்குமாய்
நின்ற படையனைத்து நீறாக்கி யோரிமைப்பின்
மன்ற விறல்படைத்த மற்று. (கருங)

தூயகுகம் சூழ்படையைத் துன்னித் தொலைவுசெய்தே
மேயபடை யைந்து மிவணுழிய—மேயவோ
வயிரத்தே ழண்டத் தகலமும்போ யாங்கனிக
மயமுழு தட்டுலவு மற்று. (கருச)

இந்த படைமுற்று மண்டங்க டோறுநின்ற
வெந்தகுவர்த் தேய்த்து விரைந்துதிரி—தந்திடலுந்
தெவ்வவுணர் கோமான் செயிர்த்திதனை நோக்கிவல்லை
யிவ்வலுயி ருண்பனென்று னேற்று. (கருரு)

சாற்றிமன் முன்றூணவருள் சக்கரத்தை யேத்திமுறை
வேற்றிகழ்கை வேண்மேல் விரைந்துவிடப்—போற்றுசுக
னூரும் வெருவரு மன்னதைவா வென்றுபற்றச்
சூருட் டளர்ந்துநின்றான் சோர்ந்து (கஅசு)

ஒல்லருமா மாயைவல்ல வோர்தனித்தேர் மேனின்றான்
பல்லுருவங் கொண்டு பகழிபெய்ய—வெல்லயிலோன்
றெம்மாய நன்றிதெனுச் சேதனக்கோ லுய்த்தலுமஃ
தம்மாய முற்றுமட்ட தாங்கு. (கஅஎ)

மாயவுரு மாய மதுகைபோய் மாழாந்து
தீய வொருவனே தேரினின்றான்—மேயதோர்ந்
தண்டருஞ்செவ் வேற்கை யறுமுகனைப் போற்றிமண
வண்டரும்பூ மாரிபெய்தார் வாய்ந்து (கஅஅ)

சூர்த்தவெஞ்சூர் தேரோடுந் துண்ணென்ன வேகாந்து
போர்த்தவண்டப் பித்திகைவாய் போயெய்தி—யார்த்தறைகூய்ப்
புக்காங்கப் பாலண்டம் போகத் தொடர்ந்தறிவின்
மிக்கானுஞ் சென்றான் விரைந்து. (கஅகூ)

தன்னகத்திற் செல்லுந் தனித்தே ரொடுங்கடந்த
கொன்னமர்செய் திண்ணவுணர் கோனின்ற—வன்னவிடஞ்
சேறலுமே யெந்தையாஞ் சேயுடன்வெம் போருஞற்றி
வேறண்டம் போயினான் வேந்து. (ககூ0)

இன்னவணை மேந்த விரும்புவன வண்டமுற்று
மின்னெனச்சென் றூர்போர் விளைத்துநின்று—பின்னுமறை
வாரியற்கை யிற்செலவே ளவ்வண்டந் தோறும்போய்ப்
போரியற்றிப் போனான் புரிந்து. (ககூக)

அந்தவம யத்தண்ட ரங்குரவர் தம்மைவிட்ட
மைந்தர்போற் றேம்பலுற்று மாலையண்மி—வெந்தகுவன்
மாயைவல்லோ னீண்டொரீஇ மற்றண்ட மேயதன்மை
சேயஃது சூழ்ந்திலன்கொ றோர்ந்து (ககூஉ)

வாடினனென் றென்னலனை மைந்தன் றொடர்ந்துசென்றான்
கூடினனோ நேர்ந்து குறுகலனைத்—தேடினனோ
தேரிலமற் றண்டத்துஞ் சேயவனோ டேகினனை
னேரிடுமோ வென்றயர்ந்து நின்று. (ககூங)

என்றபோ தங்க ணெழிற்பூவை வண்ணத்தான்
றுன்று மயனும்பர் சூழலைப்பார்த்—தொன்றுமரி
சூரனுடை யாற்றலையே சூழ்ந்துமதித் தையன்வில்
வீரமறந் தையுறுவீர் வீழ்ந்து. (ககூச)

ஆதியா யோர்க்தா ருணர்வுமே யொண்ணாத
சோதியாய் வேரு திமலமதாய்ச்—சோதியாய்ப்
பேதியா தேகமாய்ப் பேசுமெம்ம ஞேர்க்கெல்லா
மாதியா மாறுமுக ஞுக்கு. (௧௬௫)

ஈறில் பரனே யெழிற்குழவி தன்னியல்பா
லாறுமுகங் கொண்டுதித்த தல்லாமல்—வேறுதான்
சொல்லற் கியையுமோ தோன்றறன்மை தேறியுநீ
ரல்லற் படுகின்றீ ராழ்ந்து (௧௬௬)

ஆய முறுதலீ ராயிர கோடியண்டத்
தாய்யெனச்சென் ருலு முடன்ரெடர்ந்து—வெய்யனெடு
போரியற்றிச் சேய்துராந்துபோந்திவ ஞேரிமைப்பி
னீருமே காண்குவீர் நேர். (௧௬௭)

என்று திருமா லியம்ப வயன்முதலோர்
நன்றெனவே தேறினர் நண்ணவன்செ—லொன்றியவோ
ராயிர கோடியா மண்டத் தினுமோடித்
தானம ராடினன் சூழ்ந்து. (௧௬௮)

அவ்வந்திறன்மாப் போராற்றி மேவசுரர் கோன்மீட்டு
மந்தவண்டத் தேர்மலிம கேந்திரத்தில்—வந்திறுத்தான்
அவனை யிடாதுசெல்வோர் தம்மைப்போற் சூரோடு
சேயுந் தொடர்ந்துவந்தான் சேர்ந்து. (௧௬௯)

அந்ததன்மை நோக்கியயன் மன்னனைத் தொடர்ந்தனனென்
றந்தவுணர் தானை யுருத்துவளை—தந்திடலு
மைந்தை முறுவல்செய் தேண்படையை நீருக்கித்
தந்தைசெயல் காட்டினன் ருன். (௧௭௦)

ஆறுமுகனைகையி னங்கியினுற் ருனவர்க
ணீறுபட்ட சாம்பர் நிவாமதை—வீறுமர்பர்
கண்டனர்பூ மாரிபெய்தார் காய்சூர் தனிநின்று
கொண்டவனுஞ் சிந்தனல்போ லுற்று. (௧௭௧)

முன்புறுசே யங்கண் முறுவல்செய் திட்டதுவுந்
தன்படைமாய் தந்ததுவுந் தான்றனியா—னின்முறையும்
மீதொடு பூதர் வியந்தார்ப் பதுங்கண்டு
சூகத்திற் சொல்லலுற்ருன் சூழ்ந்து. (௧௭௨)

மின்ன ரெழின்மைந்தர் பேரமைச்ச ரேனையோர்
முன்னர் முடிந்தார் முடிவுரு—வன்னிலைய
மன்னனிகஞ் செவ்வேள் படுத்தான் றனியானே
னென்னசெய்வ தென்றுயிர்த்தா னிங்கு. (௧௭௩)

மாயைதனை மன்னினைக்க மற்றவனேர் வந்துநின்றே
யாயதிறன் மைந்தனார் வாயென்னைக்—கூயினதென்
னென்னமகா ராதி யிறந்தோ ரெழத்தக்க
துன்னுதிற னில்லென்றான் சூழ்ந்து. (கஎச)

உன்னுமொக்க ளுஞ்ச வொருவனே யாயும்பர்
துன்னுசிறை விட்டிலனீ தோன்றலுட—னின்னு
மிகல்செய்ய வெண்ணினையே யெல்லாத் திருவு
மகல்வதற்கோ ரையமிலை யால். (கஎரு)

பன்னிருதோட் பண்ணவனைப் பாலனென் றே யுன்னலை
யன்னவனங் கைவேலி ஞற் றெறி—யுன்னரிய
வின்னினுயி ரேகநின்ற வென்னுரையைக் கேட்பாயலை
சென்னிவிதி ரோந்துளரார் தேர்ந்து (கஎசு)

நின்றிடவஃ தேன்மைந்த நின்னுண் மகிழ்வுறுவான்
பொன்றினர்தாம் வேண்டிற் புறக்கடல்சா—றுன்றுமன்றன்
மண்டமுத மந்தரமா மால்வரையைக் கடுநீ
கொண்டடைதி கூடுமென்றாள் கூர்ந்து. (கஎஎ)

இவ்வண்ண மாயையுரைத் தேகலுஞ் சூர்கேளா
வவ்வைதன சூழ்ச்சி நன்றென் றூர் மகிழ்வுற்—றெவ்வமிலா
வின்னமுத மந்தரங்கொண் டேக வெவரையுய்த்து
மென்ன நினைந்தா னினிது. (கஎஅ)

தேரினின்று நீங்கியே சீயத்தின் மேலிவர்ந்து
சீரிந் திரஞாலத் தேரினைக்கூ—யோருளத்தின்
பொற்புலையச் சென்று புறக்கடலின் சாரமுத
வெற்பைக் கொணர்தியென்றான் வேந்து. (கஎகூ)

இந்திர ஞாலம்போ யேழ்கடற்கப் பாலமுத
மந்தரம்பேர்த் தேற்று மகேந்திரத்து—டந்திடலு
மண்ணவிரக் கால்வரவே யாங்கொழிந்த தானைமுற்றும்
துண்ணென் றெழுந்த துடித்து. (கஅ௦)

தூள்பட்ட யானை துரகதந்தே ரீர்க்குமா
வாள்பட்ட நெற்றியுடை வல்லவுணர்—நீள்பட்ட
சேனை யுயிர்த்தெழுந்து சேண்பார் நிறைந்தண்ட
மேனிலையின் காறுமுற்ற மீண்டு. (கஅக)

திண்டமெழுத் தோமரம்வாள் சக்கரம்வேல் கோனெடுங்கோ
தண்ட முதற்படைகோ டானவரோ—ரண்டர்
துடிக்கும் படிவெழுஞ் சூழ்பரிமூ தண்டம்
வெடிக்கும் படியார்த்த வோர்த்து. (கஅஉ)

மன்னும் புலிவதனன் வன்னிமுக னெற்பகைஞ
னுன்னுமறங் காயமைச்ச ரோரிருவர்—துன்னுஞ்
செழுந்தார்மூ வாயிராஞ் செல்வருட னேனோ
ரெழுந்தா ரிமைப்பி னினிது. (கஅங)

நோக்கின்ற தொல்வடிவிற் றுன்னினர்சூழ் தானைகண்டு
போர்க்கின் றிவணம்மேற் போந்தவனூர்—சீர்க்கவெனச்
சூடினது மோரணமுடிச் சூரன் புடைதன்னிற்
கூடினர்போர் செய்வான் குறித்து. (கஅச)

உய்ந்திவர்தா மாருமெல்லை யுன்னிநகர் ஞால
மந்தரமோ டுற்றதுவு மற்றவர்க—ணைந்தவெழு
மாண்புமிறை நோக்கி மகிழ்ந்தனையைப் போற்றிமே
வேண்புயங்கள் பூரித்தா னேய்ந்து. (கஅரு)

ஆற்றலிரப் புள்ளா னரியா சனமேறி
யேற்றபெரு நல்வளங்க ளேய்ந்தகொதாசான்—போற்றுந்
தடநெடுந்தோள்சென்னி தயங்கி நிவந்த
வடமினைய் தியதறிவா ரார். (கஅசு)

நிமையுளார் பற்றுமுனந் தேர்ந்தோ டுதுமென்றே
னமைதமா தேரூர்தி மன்னெருநா—ளொமொருபால்
சார்ந்தவரோர் சாராகித் தாங்குபடை சிந்தியும்பர்
பேர்ந்திரிகின் றார்நோக்கார் பின். (கஅஎ)

புன்னுருவங் கொண்டும்பர் போயினார் வேகாள
வெள்ளமுறு வீரரிவண் வீந்தமென்று—ருள்ளு
மிலக்கமெண்ம ரேந்த லிவைநோக்கி யச்ச
மிலக்கண் கலக்கமுற்று ராங்கு. (கஅஅ)

வென்றியுறு வேளிவ் விளைவனைத்து நோக்கிநின்று
துன்றலன்றன் சூழ்ச்சியுமாய் சொன்னெறியுங்—குன்றெறுழ்வும்
பொன்றினர்தா முய்ந்து பொலிவுற் றெழுகுழுவு
மன்றுநன் றென்றுநக்கா னங்கு (கஅகூ)

அன்ன வமயத் தரிமுகனென் றின்பகைஞன்
முன்னெவருஞ் சூரபன்மன் முன்சென்று—மன்னவிவண்
மேவுதியா மெல்லாம்போய் வேளோ டவன்படைசெற்
றேவிகொடு மீடுமென்று ராங்கு. (ககூ0)

மற்றவர்சொன் மன்வினவி மாற்றலரைச் சாய்த்தமரிற்
கொற்றமுட னெய்திரெனக் கூறிவிட்டா—னூற்றவர்க
ளூற்படையார்ப் போடுருமி னுமை நெடும்படைதூய்
வேற்படையாற் சூழ்ந்தார் விரைந்து. (ககூக)

வீக்க முறுபடையும் வீரர் தொகையுமொறின்
மாக்கதியிற் சூழ்வுற்ற வன்புமே—நோக்கியம்ப
ருய்வா னுருத்தே யுயிர்த்தொகையெ லாமிறுதி
செய்வான் படையெடுத்தான் சேய். (ககூஉ)

அங்கையிற் கொண்டே யகத்துவழி பாடேற்றிச்
சிங்கமுக னாதியாந் தீயவுணர்—பொங்கக்
கொடுந்திறலார் தானைக் குழுவையிங்கு வல்லை
யடுதியா லென்றுவிட்டா னங்கு. (ககூங

அன்னபடை பாந்தளிடி யால முருத்திரர்த
மன்னுருவந் தீத்தெய் வதப்படையாய்த்—துன்னியே
மேலவுணர் மாப்படையை வீட்டி யிமைப்பினொன்று
மேலவரைப் புக கொன்றதுவே மேயறறு. (ககூச)

சூரின் பரிசனமாச் சூழ்ந்தபடை யாவுமட்டேம
பேரிந் திரஞாலப் பேருடையு—தேரின்க
ணுகுற்ற வெற்பையுநீ றாக்கிக் குமரவேள்
பாவகுற்ற தீண் படை. (ககூரு)

சூரனிக மாயத் துயர்ந்து தளர்ந்திரங்கி
யாரனு நாளாழ்ந்துதனி யானினான்—சாரதரும்
வீரருமயூ மேலமரும் வித்தகனும் விண்ணவரு
மாரு முவகையுற்றா ரார்ந்தது. (ககூசு)

அந்திலையி னின்றிடுஞ்சூ ராற்ற வெகுளியுற்றுத்
தனையனிந் திரஞாலந் தன்னைப்பார்த்—துன்னிளஞ்சேய்
பாற்சூழுவி யுற்ற பரிசனரைக் கொண்டண்ட
மேற்குழுவ வைத்தியென்றான் வேர்த்து. (ககூஎ)

சூர னுரைவினவித் துண்ணெனன் றெழுந்தோடி
வீரமொய்ம் பாதியா மேவினோர்—தீரவே
தாளரிருந் தானைகொடு தாங்கிமய றந்தண்ட
கோளகைவைத் தார்ந்துதேர் கூர்ந்து. (ககூஅ)

சேந்தன் றமியனாய்ச் சேனைபோய் நின்றனன்வெவ்
வேந்தனது காணு வியந்தனன்சீ—ரேந்திரதஞ்
சூர்வலிகொள் சூழ்ச்சியுந்தற் சூழ்ந்தவரைக் கொண்டுபடர்
தேர்வலியுந் தேர்ந்தனனே சேய் (ககூகூ)

கண்டழன்று விற்குனித்தோர் காண்டம்வைத் தார்படையைக்
கொண்டண்ட கோளகையிற் கூர்ந்துபுகுந்—திண்டனித்தேர்
தன்னைக் கொணர்தியெனச் சண்முகவே ளுய்க்கவது
மின்னிற் புகுந்ததண்ட மேல். (உ00)

தின்னிவண்டத் தேரேண் டொலைத்தே யசைக்கொணர்ந்து
மன்னயில்வேல் வேண்முன் வருதலுமே—புன்னிலக்க
ணெண்ம ரிளவ லிரும்பூதர் குப்புற்று
ரண்மணியார் தேரினுமே யாங்கு. (௨௦௧)

குதித்தா ரெவருங் குகன்றாள் பணிந்து
துதித்தா ரருட்கடலிற் றோய்ந்தே—கதித்தாரு
மல்லலந்திண் டேரைச்சூர் மாள்கைதிண்ண நீயங்கண
செல்லலைநில் லிங்கென்றான் சேய் (௨௦௨)

ஆண்டதனைக் கேட்டளவி லஞ்சிமுன்கொள் வன்மைபோய்ப்
பாண்டிலந்தே ரையன் பணியினின்ற—தாண்டகைதன்
விண்டபடை மீண்டதுந்தேர் மீண்டு வாராமையுஞ்சூர்
கண்டனன்வெந் தீயிற் சனன்று (௨௦௩)

அன்னதனைக் கண்டசுர னுக்கொருவில் வாங்கியே
பன்னிருகை வேண்மேற் பகழிபெய்தான—மின்னினன்போற்
றேசினறைவன் சேயவற்றைத் திண்சிலையைக் கோட்டிவெங்கோல்
வீசி விலக்கினான் வேர்த்து (௨௦௪)

தீயன் சினங்கொளீஇத் தேருகைக்கும் வன்மையோன்
காயமெலாந் தைக்கக் கணைபொழிந்தான்—மேயவளிப்
பாகன் வருந்திப் பரிதூண்டா நின்றனனஃ
தேகன் றெரிந்தா னினிது (௨௦௫)

கண்டவெழிற் கந்தன் கணையா யிரந்தூய்ச்சூர்
கொண்டவரி வில்லைக் குறைத்துப்ப—றுண்டமதா
யூக்கலுமோர் சூலமுட னுடலரி யூர்தியைச்சேய்
மாக்கதிர்த்தேர் முன்னருய்த்தான் மன். (௨௦௬)

தூண்டரிமான் வள்ளுகிர்க டன்காத்தா லெந்தைபிரான்
பாண்டிலந்தேர் மாவைப் பதைப்பவெற்றி—யாண்டயலார்
பூதாஞ்ச வார்ப்பப் புரவலன்கைச் சூலத்தை
நாதன்மேல் வீசினா னன்கு. (௨௦௭)

அன்னதுமின் னிற்செலும்போ தாயிரமாங் கோடியம்பு
வின்னிரையிற் பூட்டி விடமுருகன்—றன்னவற்றைப்
பல்லுருவம் பெற்றுப் படர்சூலம் வீட்டியே
செல்லுருமிற் சென்றதன்றே சேண். (௨௦௮)

செல்ல விசாகன் றிருத்தாதை தந்தபடை
வல்லபத்தை யுன்னியத்த வச்சிரத்தை—வெல்லக்
கருதியொன்னான் விட்ட கழுமுடனைப் பற்றி
வருதியெனச் செல்லவுய்த்தான் மற்று. (௨௦௯)

விட்ட குலிசம் விரைந்தேகித் தீக்கான்றே
வொட்டலன்றன் சூலமது வொல்லைவந்து—கிட்டேதலும்
மன்னதனைப் பற்றி யவிர்முத் தலைகவ்வி
மன்னுட்க மீண்டதன்றே வாய்ந்து. (உ௧0)

முத்தலைவேல் கொண்டு முரண்குலிச வேல்குமரன்
கைத்தலத்துய்த் தேதானுங் கையமர்ந்த—சத்துணையி
லன்னதுகண் டண்டரெலா மங்கை குவித்தீண்டிவ்
வொன்னலர்க்காய்ந் தாடியென்று ருற்று. (உ௧௧)

என்னவெந்தை கோளா விராயிரவெங் கோல்பூட்டி
மன்னலனூர் தந்துசெலும் வான்மடங்கன்—மின்னவிருஞ்
சென்னி தனிலழுத்தச் சேணிற் சினந்தாற்றி
வன்னிலத்தில் வீழ்ந்ததுவே மாய்ந்து. (உ௧உ)

ஊர்தி யிறந்ததுவு மொண்சூலம் வேள்கரத்திற்
சேர்தந் ததுவுஞ்சூர் தேர்ந்துசெயிர்த்—தோர்படையைத்
தோரதனைச் சீயமதைச் சிந்தவனே டுற்றவரை
யோருருக்கொண் டுண்பனென்று னுற்று. (உ௧௩)

என்றுமனத் துன்னி யிணையிலரு மாயையா
னின்ற வவுணர்கோ னேமியம்பு—னொன்றுருவ
முற்றவடி வெய்தி யுவரியினூர்த் தொண்சிறகர்
பெற்றவரை போலுற்றான் பேர்ந்து. (உ௧௪)

பறையடித்த தென்னப் பகராவுணன் புள்ளாய்ச்
சிறையடித்துச் சேணிலெழுத் திண்மாத்—தறைவரைப்பு
முற்று மணிச்சிறகான் மூடிச் சுழலுழும்ப
ருற்றவினன் வான்மறைய வுற்று. (உ௧௫)

அடிக்கு மிறகா லவிர்பூதர் தம்மை
பிடிக்கும் விழுங்கும் பெருமான்—கொடிக்குலமன்
றேரதனைச் சூழ்ந்துலவுந் தேர்வலவன் றன்னையெற்றும்
வீரரையும் பற்றுமந்த வீ. (உ௧௬)

இவ்வணம்வெஞ் சூர னியற்று செயல்காணுக்
கைவ்வண் மலர்புடைத்திக் கற்புனன்றென்—றவ்வண்ணன்
மேருநிகர் வில்வாங்கி மேவநந்த கோடியம்பு
சூருறுபுண் மேற்பொழிந்தான் சூழ்ந்து. (உ௧௭)

நெறிதருகோன் மாரி நிமலன் விடச்சூர்
சிறையி லவற்றையயல் சிந்தி—யறைதருகூர்ந்
துண்டத்திற் கொய்யுந் துணைத்தாளி னின்முறிக்கும்
விண்டத்த வேசுழலும் வேர்த்து. (உ௧௮)

ஞாலமுல கெங்கு நனிபடருந் திண்பூத
சால மெறிந்துகவ்வித் தான்செல்லுஞ்—சீலனைத
க்கண்டுபுள்ளைத் தேரொடுபோய்க் காய்தல் பிழையென்றுட்
கொண்டுமெக வாற்குறித்தான் கூர்ந்து. (உககூ)

இந்திரனைக் காலை யிறையோன் குறிப்பொடருண்
முந்துதன்மேல் வைத்த முறைதெரிந்து—சந்தரமார்
தோகையுறு மாமயிலாய்த் தோன்றியொள்வேற் சாமிதனை
யோகையுடன் போற்றிநின்றா னுற்று. (உஉ0)

நின்றிடுமோ மஞ்ஞை நிலங்கிழிய மேருமுதற்
குன்றங் குலையக் குலவேழந்—துன்றிவிழ
மாதிரைநீர் வற்றவரா மாழ்கியஞ்ச வன்சிறகான்
மோதி மொழியலுற்றான் முன். (உஉக)

வைவே லிறைவகேள் வானவர்கள் போற்றவென்பாற்
செய்பே ரருளிற் சிறந்துளே—னுய்வானோர்
மெய்வா னெறிகண்டேன் மின்கழருங் கப்பெற்றேன்
பொய்வாழ்வுந் தீர்வேன் பொலிந்து. (உஉஉ)

ஊன்றவல்லல் செய்தெமரைக் காய்சிறையில் வீட்டியசூர்
துன்றுபுள்ளி ருக்கையது துன்னுமிடஞ்—சென்றுசென்று
மாலிகனன் காற்றிவெல்வான் வல்லை யடியேன்றன்
மேலிவர்தி யூரவென்றான் வேந்து. (உஉங)

என்னலுமெங் கோமா னிரதத்தி னீங்கியே
மன்னுமஞ்ஞை யாய வலாரிதன்மேன்—மின்னவைகித்
தீதூ ரவுணன் செலவுதனை நோக்கியும்பர்
மீதூர லுற்றான் விரைந்து. (உஉச)

மையமருங் கண்டன் மகனுருமி னூர்த்தகவுஞ்
செய்ய மயினடத்தித் தீமையயர்ந்த—வெய்யவளி
சென்றாங்குச் சூழ்ந்திடப்புள் சேணின்று தாக்கமஞ்ஞை
நின்றாங் கெதிர்த்ததுபோர் நேர். (உஉரு)

நேர்பசலைத் துண்டமது நீட்டியுடல் கீண்டுதிரம்
வார்தரவா யிற்கவ்வி வாங்கியே—கூர்சிறையாற்
கொள்ளுருவ மேற்புடைத்துக் கொன்காலி னூற்றாக்கிப்
புள்ளுருவர் செய்தனர்வெம் போர். (உஉசு)

இத்திறம்போர் செய்காலை யேர்மஞ்ஞை யேந்தறலைத்
பைத்தலையார் தூவி பறித்துமுகங்—கொத்தி
யுருமணிக்க லாபமீர்த் தூறுசெய்தா னேமிக்
குருமணிப்புள் ளானோன் கொடிது. (உஉஎ)

அச்செயல்வேள் காணா வழலென்ன வேகக்குக்
கைச்சிலையைக் கோட்டிக் கணையவுண—னுச்சிமுதற்
கால்வரையிற் பெய்தான் கயவன் பதைத்ததறி
மேல்வரையிற் போய்த்திரிவான் வேர்த்து. (௨௨௯)

திரிகின்ற போது நிகிடத்தி யேகி
யரணமர்கோல் பெய்ய வவுண—னுரமெலிந்து
பற்கறித்துச் சீறிப் பகவன் கரத்திலங்கு
விற்கறிப்ப துன்னினான் வேர்த்து. (௨௨௯)

வருதலும்வேல் வாள்வீசி மன்னலன்புள் ளாக்கை
யிருதுணியாய் வீழ வெறிந்தான்—வெருவவும்பர்
சூராமனண்டமுடி தோய்ந்தவிர வோங்கியே
பாராகி நின்றான் பரந்து. (௨௩௦)

எழுகடலுந் தூர்த்தென் றிரதந் தடுத்து
வழுவில்கால் சென்னெறியு மாற்றிக்—கெழுவநின்றான்
சேந்தனது காணாச் சிலைகுனித்தே ழம்புதொடுத்
தாந்தகவி லென்றுரைப்பா னங்கு. (௨௩௧)

வானளவு மோங்கி வசுந்தரையா வென்முனின்றான்
கோனவனை நீவிர் குறைதருமேழ்—மீனமுறு
மத்தியினீ ராய்ப்போ யடுவீ ரெனவிடுத்தான்
பத்திவலை மேவும் பரன் (௨௩௨)

ஓருகுக னாய்த்தகணை யூழினனி யார்ந்தெழுமேழ்
மோது திரைக்கடலா யோன் முற்றிவெஞ்சூர—காதகன்றன்
மண்ணுருவை மாற்றித்தம் மன்னுருவ மேற்றொளிர்வே
லண்ணலிட மீண்டுற்ற வாங்கு. (௨௩௩)

வெய்யனது காணா வெகுண்டுகெட லூனாக
வெய்யர்வா னன்ன வருதிறம்போன்—மையமரு
மானாக னீத்த வடிவாகி யாத்தன்மு
னீனாகங் காறுநின்றா னீண்டு. (௨௩௪)

ஒன்னலன்றன் மாய வுருவி னிலைநோக்கித்
துன்னுகணை நூறு தொடுத்தேசூர்—முன்னடையா
மன்னூழித் தீயியல்பாய் வாய்ந்தட்டே வம்மென்னக்
கொன்னூழின் விட்டான் குகன். (௨௩௫)

அவ்வாறே யோராறு மம்பு மருணீரா
லொவ்வா வனற்பே ருருவாய்ப்போய்த்—தெவ்வாக
நின்றவன்ற னீத்தவுரு நீங்கிடவெவ் வாயுமே
சென்றுண் டனவே செறிந்து. (௨௩௬)

நீத்த வியற்கைதனை நீத்ததன்மை காணுரு
மாத்தருவர் கோமான் மனங்கவன்று—நீத்தழலா
மேனியது கொண்டு வியனண்ட கோளமட்டுந்
தானிமிர்ந்து நின்றான் றனித்து. (௨௩௭)

நண்ணுமதைக் கண்டே நகைசெய்து கூற்றுமென்ன
வெண்ணுங்கோ லோரா யிரவூழி—பண்ணுமாச்
சூறையி னேகிவெய்ய சூர்மாய மாய்த்துவம்மென்
றுறைமுக னுய்த்தா னழன்று. (௨௩௮)

உய்க்குங் கணைபோ யுலகெங்குஞ் சூழ்மருத்தின்
றொக்க திறனெய்திச் சூரனவா—மிகவுருவை
வாயகன்றெவ் வாயுமாய் வாய்மடுத்து வாய்தந்து
நாயகன்றன் பாங்கடைந்த நன்கு. (௨௩௯)

ஒன்றொ னுறுசினங்கொண் டோதையுரு வுற்றார்ப்ப
மின்னோர் விறல்கெழுவேல் வேணோக்கிக்—கொன்னோர்கோ
லாயிரநூ றம்புகொண் டவ்வுருவை யாடரவாய்ப்
போயழித்து வம்மென்றான் போர்த்து. (௨௪௦)

அக்கணத்தி லக்கணைக ளந்தரத்தி லந்தரமா
பைக்கணத்த பஃறலைய பன்னகமா—மிக்குருவாய்
மாற்கொருவைப் பாமன்னன் மாலுருவைத் தாமிசைந்து
வேற்குகன்பான் மீண்ட விரைந்து. (௨௪௧)

இன்னவண மீரிருநா ளீறுற்று மீறுரு
துன்னரும்போ ராற்றி யொருசூரன்—பின்னருமே
மாயமுறு பெற்றி மனத்துன்னிப் பல்லுருவ
மாயவிரத் தோன்றினா னங்கு. (௨௪௨)

பூவரா மென்ன முயங்கியொரு சார்வருமாந்
தேவரா மென்னவொரு தேம்வருமா—மேவருமண்
காற்றெனவோர் சார்வருமாங் காரெனவோர் சார்வருமாங்
கூற்றெனவோர் சார்வருமாங் கோ. (௨௪௩)

ஒருசார் விடம்போ லொருசார் பணிபோ
லொருசார் வரைபோ லொருசா—ரிருள்போ
லொருசார் படைபோ லொருசார் கரிபோ
லொருசா ரரிபோ லுறும். (௨௪௪)

ஆனைமுகன் சிங்கமுக னங்கிமுகன் யாளிமுக
னெனையர்போ லோர்சா ரிசைந்துவருந்—தானைமன்னுந்
தந்திரிபோ லோர்சார் தயங்கிவரும் வல்லவனு
மந்திரிபோ லோர்சார் வரும். (௨௪௫)

இத்தன்மை மைத்தகுவ னெங்கு நிறைவாகி
யத்தன்பாற் சூழ வவைநோக்கி—மொய்த்தசுரர்
புந்தி தளர்ந்து பலர்ந்திரிந்தா ராழிநில
நந்திடும்போ தாமுயிர் போ லைந்து. (௨௪௬)

அந்நிலைமை நோக்கி ய யாரா யிரகோடி
மின்னுகணை வாங்கியங்கை விற்பூட்டி—மன்னுமம்பென்
றேவிர்கா ணீவிர்போய்த் தெவ்வுருவம் யாவுமட்டே
மேவிர்கா ளென்றுவிட்டான் வேள். (௨௪௭)

விட்டிடுகோல் போய்வெகுண்டு மேவலனோங் கோருருவு
மெட்டுளதிக் கம்புவிவா னீண்டியே—யட்டனகு
ரேகனு யங்கணின்று னேவினமீண் டையன்பி
னாகமுறு தூணிபுக்க வாகு. (௨௪௮)

வெம்புயலிற் றோன்றிவிளி மின்னெனப்பற் பல்லுருவ
மிம்பரிலெம் முன்ன மெடுத்துநின்று—யம்பினு
லம்ம வவற்றையெலா மட்டனமீ றில்லாத
நம்முருவங் காண்டியென்று னன்கு. (௨௪௯)

தானியம்பு வண்ணமுந்நீர் சாருலகு திக்கண்ட
வானிமையோ ராருயிர்கண் மற்றுயத்தன்—மேனியின்க
ணோருருவாய் மேயதன்றி யோருருவே றில்லையெனப்
பேருருவாய் நின்றான் பெரிது. (௨௫௦)

செவ்வியமா வுள்ளடிமுற் சென்னிவரை வெற்புமுத
லொவ்வுபரா மான்மாவீ றுற்றிலங்க—வெவ்வுயிரு
மாட்டிநிற்கு மத்த னவிர்திருமா மேனியின்கண்
சாட்டிநிற்கக் கண்டார் களித்து. (௨௫௧)

செஞ்சுடரெண் ணில்கோடி சேர்ந்துதித்த தென்னவொளி
விஞ்சுருவை நோக்கா வெருவியும்ப—ரஞ்சலியா
வண்கையுற நின்றனர்வே ளஞ்சன்மி னென்றருளி
யொண்கை யமைத்தா னுகந்து. (௨௫௨)

அண்டரெலா மைய னருண்முறைகேட் டுள்ளுவகை
விண்டுளிகாண் மஞ்ஞைபோன் மேவிநின்றார்—மண்டலில
மேவுருவங் கண்டவுணன் விம்மிதத்த னாய்நிற்பத்
தேவுணர்வு தந்தான் சிறிது. (௨௫௩)

சேயனிகஞ் செற்றண்டஞ் சென்றமர்செய் தேற்றவர்க்காய்த்
தேயமணித் தேர்தடுத்தே யான்கொண்ட—மாயமுற்றும்
வீட்டியெலாந் தானுக மேவிடுமோர் மாவடிவங்
காட்டியென்கண் முன்னின்றான் காண். (௨௫௪)

கோலமஞ்ஞை தன்னிற் குலவிவரு செவ்வேளைப்
பால னெனவிருந்தேன் பண்பறியேன்—மாலயனார்
வாரணன்மூற் றேவர்க்கு மற்றவர்க்கு மோர்மூல
காரணமா மூர்த்தியிவன் காண். (௨௫௫)

முற்றபெரு மாவடிவந் தன்னிமுன்னர் வந்தவொற்றன்
சொற்றவுண்மை வாய்மையே சூழ்ச்சியின்யான்—பெற்றவண்ட
மான்று நிவந்தவெலா மத்தனடி ரோமத்திற்
றோன்றிநிற்கு மன்றே துலைந்து. (௨௫௬)

அண்டர் முனிவர்மற் றுளோ ரகிலமுமாக்
கொண்டபடி வம்யார் குறித்தறிவா—ரெண்டருக
ணுக்கைமுற்றும் பெற்றவர்க்கு மாரநந்த கோடிகற்ப
நோக்கிடவு மேகடக்கு நொய்து. (௨௫௭)

சீர்தருவேள் கொண்ட திருவுருவப் பேரெழிற்
றார்தமக்குண் டிவ்வுலகி லற்புதமே—கூர்தரப்பல்
காணேக் கினுமென்றன் கண்டெவிட்டிற் றில்லையின்னும்
யானேற் றலிற்பெற்றே னீது. (௨௫௮)

ஆரா யிரகோடி யங்கசர்தங் கோலமெல்லாஞ்
சேரா வுருப்பெறினுஞ் செவ்வேடன்—சீராருங்
காலெழிலுக் காற்றாக்காற் காமரவன் பேர்வடிவுக்
கேலவுரைப் பாரா ரிணை. (௨௫௯)

இங்கெ னிளவ லிளையமைந்தன் சொற்றதுண்மை
யங்குமரன் மேனியெழி லங்கமுற்று—நங்கணுள
மூழிபல காண்கினுநன் குள்ளினுமுற் றுமெதன்ப
னூழினமர்க் குற்றா னுகந்து. (௨௬௰)

சீற்றமுற்றுந் தீர்ந்த செருவி லுறு மூக்கமற்ற
தாற்றவுரோ மஞ்சிலிர்த்த வார்விழிநீ—ரூற்றிற்
பெருகிற் றிவன்பாற் பிறந்தனபே ரன்பே
யுருகிற்றென் னுள்ள முகந்து. (௨௬௧)

போய வகந்தை புகுந்தனநற் போதமேண்
ணீயதோர் தோள்கண் டிடித்தவுள—நேயமுட
னெண்டேவர் போற்று மெழிற்போர் வடிவமுற்றுங்
கண்டேன் றவத்தாற் களித்து. (௨௬௨)

சூழ்த றுவினைத்தா டொழுத வினைக்காங்க
டாழ்த றலைதுதிர்த்த றாலுமனா—மாழ்ந்தந்து
கானன் லெவற்கானாய் நல்வாழ்வு மேவுதற்கு
மாணாத் தடுத்ததே வந்து. (௨௬௩)

ஒன்னலனுஞ் செம்ம லுருக்கண் டழல்வதன்றி
யுன்னனல்கொள் வெண்ணெயென வுள்ளுருகி—யின்னுயிர்போ
யென்வயத்த னாதலின்றி யென்குணத்துட் சண்முகத்தோன்
றன்வயத்த னாதலுற்றேன் றான். (௨௬௪)

தாராரு மார்பன் றமியனொடிந் நாள்காறும்
போராடி நின்றதெல்லாம் புந்திகொள்ளி—னோராடல்
சீர்தயங்கச் செய்ததல்லாற் சென்றனையான் செற்றடுமேல்
யார்தடுக்க வல்லா ரெதிர்ந்து. (௨௬௫)

ஏதமிலா வானவரை யான்சிறையி லிட்டதெலாந்
தீதெனவே சொற்றனரச் செய்கையினான்—வேதந்தா
னென்றுமறி தற்கரியா னிங்கணுகப் பெற்றேனா
னன்றஃதே யாயிற்று நன்கு. (௨௬௬)

ஒன்றிரண்டு மூன்று முருக்கொண்ட மூர்த்திமுன்
னின்றமர்செய் தேனிந்நா ளெஞ்சயரேன்—மன்றலைமை
நன்றடைந்தேன் வீரனுமே நானனே னிற்குஞ்சீ
ரென்றுமுட னிற்பதுண்டோ விங்கு. (௨௬௭)

வானோர் சிறைநீக்கி வள்ளலையான் றாழ்ந்திந்த
வூனோ ருயிர்போற்றி யுன்னளிய—ரானோர்போ
லெய்துவனே லோரா யிரகோடி யண்டமுற்று
மொய்தருசீர் பொன்றாதோ முன். (௨௬௮)

என்னவிவ்வா றோர்ந்துநிற்ப வேந்த லனைத்துமாந்
தன்னவிர்மாத் தோற்றந் தணந்துகுகன்—மின்னெழில்கூர்
நன்மயிலாய் நண்ணியவ னற்போத மாற்றியே
தொன்மைபோ லாக்கினான் சூழ்ந்து. (௨௬௯)

சூர னுணர்வகன்று தோகையுருக் கண்டளவிற்
கூர வெகுளிமேற் கொண்டேக்கம்—போரினுற
வென்றிண்மை நன்றெண் ணிருகை புடைத்துநக்கு
மன்றன் முடியசைத்தான் மற்று. (௨௭௦)

சேயுருக்கொள் கள்வன் றிகழ்போர் செயற்காற்றான்
மாயையினா லென்னை மயல்புரிந்தா—னாயதனைத்
தள்ளவல்லே னென்றாற் சமமெனக்கார் மெய்யழியே
னுள்ளமழி கின்றதுண்டோ வீங்கு. (௨௭௧)

குமரவே ளோடெதிர்த்துக் கொற்றமுறு கின்றே
னமரவஃ திந்த வலிவெஞ்—சமர்மூட்டி
யேற்ற விளைமையவனை யின்னே முடித்துமுன்னே
சீற்ற மகல்வனென்றான் றேர்ந்து. (௨௭௨)

அன்ன துறுதியா வாரவுணன் கொண்டுபின்னு
மன்னுமொரு மாயங்கொண் மந்திரத்தைப்—பன்னியென்று
மானுறவே ஞாலமொடு வானமுற்று மாயிருளி
னேனுருவ மேற்றார்த்தா னேய்ந்து (௨௭௩)

வீரைதனின் முன்னம் விடமெழுந்த வாறுபோற்
பாரினோ டண்டமுற்றும் பாயிருளி—னோருருவங்
கொண்டிடையே பாய்ந்துநிரை கொள்சிரங்கை மெய்ச்சுரரை
யுண்டிடுவான் சென்று னுயர்ந்து. (௨௭௪)

காரியல்கொள் சூரன் ககனத் தெழலுமும்ப
ரோரியல்கொ ளோதியினு ளுய்த்துணர்ந்தே—யாருநம்மைச்
சாடியவந் தெய்துமெனுத் தாஞ்சிதறி நில்லாமே
யோடினருள் சோர்ந்திரங்க லுற்று. (௨௭௫)

சிற்பரனே யோலமன்பர் சித்தமுணர் வோயோல
மெய்ப்படிவத் தேவர்கடே வேயோலந்—தற்பரைநல்
கொண்மகனே யோல மொளிர்சுடரே யோலமெழிற்
சண்முகனே யோலமென்றார் தாழ்ந்து. (௨௭௬)

கிங்குலங்கார் நேரந்த காரமறை வின்னேகி
தங்கியசெல் வானோ டோன்மையிலே—மெங்கினியா
மேவியுய்வ மையவல்லே வெய்யோ னுயிர்கொண்டே
யாவி யருளுகென்று ரார்த்து. (௨௭௭)

தேற்றலையீ தெந்தாய் சிறிதுநீ தாழ்ப்பாயே
லாற்றலுட னேவந் தனைத்துமுண்ணு—மாற்றலன்றன்
னுயிரை வாங்குதியால் வல்லையெனுப் போற்றினன்
மின்னுமயி லாய்க்கொண்ட வேந்து. (௨௭௮)

அன்னார் மொழியுமவ னாற்றலுமே தேர்ந்துகுகன்
மின்னார் சரத்தமரொள் வேலினைப்பார்த்—தொன்னாய்ப்
போர்மே வவனுகம் போழ்ந்தே குதியென்னாச்
சூர்மேற் செலத்தொட்டான் சூழ்ந்து. (௨௭௯)

சேயொருவன் றொட்ட திருநெடுமா ஞாங்கரொன்றே
யாயிரமாங் கோடி யருக்கரிற்றே—சேயநனி
தோன்றியனல் கான்றுசெலச் சூர்கொ ளிருளுருவந்
தான்றியங்கிச் சென்றதம்மா தாழ்ந்து. (௨௮௦)

அன்னவன்றன் மாய மழிந்ததும்வே லேவயின்முன்
மன்னியது நோக்கிநந்தா மாவரங்கொ—ளென்னையிங்க
னென்செய்யுஞ் செய்விடுவே லென்றுநக்குச் சீற்றமுற்றான்
றன்செய்யும் வாளுடைய வேந்து. (௨௮௧)

எற்றுநீ ராழிதனை யெண்டிசையை மாவுலகை
மற்ற மலரில் வதிபவன்மு—னுற்றபல
ராருயிரை வீட்டி யடுவேன்மே லீதென்று
வாரிநடு வாயினான் மன். (உஅஉ)

வன்னிபுகை மாழை மரகதஞ்செம் மாமணிபோன்
மன்னு தளிர்தழைபூ மற்றிரண்டுந்—துன்னியெங்கும்
போதமா காரிற் பொலிகவடு போக்கியே
சூதமா நின்றனன்வெஞ் சூர். (உஅங)

விண்மா முகடளவு மேல்போய்க் கிளர்சாகை
யொண்மா திரம்வரையு மோச்சியே—திண்மாக்கொள்
பார்முழுதுந் தாங்குகச்ச பத்துணைத்தூ ரோட்டிவெய்ய
சூர்பருமால் வெற்பின்னின்றான் சூழ்ந்து. (உஅச)

ஓராயிரநூ றோசனையென் றோதனவை யான்ற
பராரைமா வாயுலவை பல்கி—விராவிவன்மா
லேழுலகீர் ஞால மிருவிசும்பி னெல்லைவரை
நீழல் பரப்பிநின்றா னேர்ந்து. (உஅரு)

ஓடிவரும் வேங்கை யுரிகொள் சரபமக
ளூடிவரு மம்மா னவிர்கரவேன்—மாடிவர
மாவுருவ வெண்கரியும் வன்மடங்க ராளுமஞ்ச
மாவுருவ மாய்நின்றான் மன். (உஅசு)

நன்குறுதிக் காடை நரையா னுளான்மைந்தன்
புன்கிரவுஞ் சந்துளைத்த பூவைவேன்—முன்குயிலா
மிக்குருவ மஞ்ஞைவன்னி மேவுகொடிச் சேவலஞ்சக்
கொக்குருவங் கொண்டுநின்றான் கோ. (உஅஎ)

ஓங்குமித்தி மன்னி யொளிர்சோதி சம்புநல்கு
பூங்கடப்பந் தாருளான் பூவைவேல்—ஞாங்கருள
வேவடிவ மாவரசு மேவுபல தேவரஞ்ச
மாவடிவ மாநின்றான் மன். (உஅஅ)

ஓதருமா சூதமா யோங்குலவை யாற்றிசைவான்
போதவெறி தந்தசைந்தான் பூதலங்க—மீதுலவத்
தாங்கரவ வேந்தழுங்கச் சாபமலை சூறையினு
லாங்கசைவு கொண்டாங் கரசு. (உஅகூ)

ஞால மிடிந்தவிரு நான்மாக் கரிமடிந்த
வேலைமுற்று மொன்றுற்ற வெற்புலைந்த—மேலுளமீன்
வீழ்ந்தவென்று மாழ்கினன்மா மேருவுற்றா ரும்பாஞ்சி
வீழ்ந்தமிசை யாருலகம் வீந்து. (உகூ0)

சிந்துரமே நின்றவெய்யோன்செய்கையுங் கொள்கைவலி
மைந்து நிறமுற்று மாடியே—யெக்கைதொட்ட
ஞாங்கருருத் தொல்லை நடந்தவண்டத் தியினைத்து
மோங்குருவொன் றுற்றமைபோ லுற்று. (உகக)

குன்றுருவிப் பாய்ந்தயில் கூருயிரெல் லாமழிய்
வொன்றுருவிற் றொன்று மொருவன்போற்—சென்றதுசீர்
மேலமன்ற வேற்படைக்கு வேறுபடை தம்முனான்
சூலமன்றி யில்லை துணை. (உகஉ)

மூவுலகு மேழ்கடலு மூதண்ட கூடமுற்று
மாவுலவு மார்பனயன் வான்பதமு—மேவரன்வாழ்
பொற்றையல்லா மற்றப் பொருப்புந் தழற்சிகையின்
கற்றை யுமிழ்ந்ததயில் காய்ந்து. (உகங)

ஆலம் பிடித்தமல னங்க ணனலுறத்திச்
சூலம் பிடித்ததொழில் சொல்வித்தாங்—கேல
மடம்பிடியா நின்றசூர் மாவைத் தடிந்த
துடம்பிடியாந் தெய்வ மருந்து. (உகச)

ஆழ்ந்தகட லுப்ப ணமரா மிரவடிவம்
போழ்ந்துகதிர் வேலாற் பொருக்கென்ன—வீழ்ந்து
தவவன்மை யாலே தனித்தெழுந்தா னென்றாற்
றவவன்மை யன்றோ தலை. (உகரு)

உருவிற் றலைமை யுறுகதிர்வே றன்மே
லுருவித் தலைசாய்ந்து மொண்டொல்—லுருவெய்தி
யுய்வதுன்னிப் பாரா னுறையுடைவான் வாங்கியமர்
செய்வதுன்னி வந்தான் சினந்து. (உகசு)

செங்கதிர்வேல் சென்றெதிர்ந்த தீயவெஞ்சூர் மார்பங்கீண்
டங்கமிரு கூறாக்கி யாழியிலுய்த்—தெங்குமறை
கங்கையெய்தி யாடிக் கருணைமையா ரேத்தவெந்தை
யங்கையெய்தி வீற்றிருந்த தாங்கு. (உகஎ)

தாவடிவேன் மீளச் சயம்புவாக் தால்விளியா
மேவலனுஞ் சூரெழுந்து மெய்யிரண்டிற்—சேவலொன்றத்
தோகையொன்று மாகித் துதிகருசெவ் வேண் முன்னம்
வாகையம ராற்றவந்தான் வாய்ந்து. (உகஅ)

மணியசல மொன்று மரகதவெற் பொன்று
மிணைகொ ளடிசிறக செய்த்து—திணிதருகச்
சேவ லொடுமெயிலாய்த் தேவனு மூய்க்கவந்தான்
மேவலன்செவ் வேண்முனமர் வேட்டு. (உககூ)

மருளூட்டும் புள்போல வந்திடினுஞ் செந்தை
யருளூட்டஞ் சேர்த்த வளவிற்—றெருளூட்டு
நெஞ்சத்த னாகிய னீங்கினின்றான் வஞ்சத்தன்
புஞ்சத்தன் மாயமெலாம் போய். (௩௦௦)

தீயபுரிந் தாரேனுஞ் செவ்வே டிருமுனுற்றாற்
றூயரா யின்புதவி தோய்வரென்கை—யாயவுமே
வேண்டுமோ விந்நாண் மிகுபோர் விளைத்தவெஞ்சூ
ரீண்டுவரம் பெற்றுய்ந்தா னீங்கு. (௩௦௧)

அக்கணமெங் கோமா னருளா லுணர்வுற்ற
குக்குடத்தை நோக்கிக் கொடியாநீ—மிக்குயர்நற்
றேர்மேவி யார்த்தியெனச் சேவறக்க தேபணியென்
றேர்மேவி விண்ணெழுந்த தேய்ந்து. (௩௦௨)

சீர்மேவு செஞ்சூட்டுச் சேவல் செழுங்கொடியா
யோர்மே வுளத்திற்செல் லொண்டளிப்பொற்—றேர்மீப்போ
யண்ட மிடிதரவே யார்த்துருமே றுட்கவன்னி
கண்டஞ்ச மேவியதங் கண். (௩௦௩)

சீர்திகழ்வேற் செவ்வே டிருக்குருவிற் கொண்டதொல்லை
யூர்திவிட்டு நீங்கி யுணர்வுற்ற—சூர்திகழ்மாத்
தோகைமே லேறிச் சுமக்குதியெந் தம்மையென
வோகையோ டோர்தலுற்றா னுற்று. (௩௦௪)

மேரு வரையிடிய மேவுநிலந் தான்வெடிப்பச்
சோர வனல்பதைத்துச் சூறையுட்க—வாருமண்ட
கூடநந்த வார்த்துக் கொழுந்தோகை வீசியிடி
மாடரவே யிற்றே மயில். (௩௦௫)

பார்தாங்கு பாம்புமறப் பாந்தளுமு ளச்சுறவார்த்
தேர்தாங்கு மீசனைமுன் னேய்ந்தரியாங்—கார்தாங்கு
பான்மையெனச் செவ்வேற் பரன்றனைச்சூ ராமஞ்ஞை
மேன்மையுறக் கொண்டது தன் மேல். (௩௦௬)

சூல்கொண்ட கார்மின்னிச் சூழநடுச் செல்லினன்போல்
வேல்கொண்ட பெம்மான் விளங்குமயின்—மேல்கொண்டு
மாகமுற்றுஞ் சுற்றி மகேந்திரமூ தூர்வரைப்பி
னாகவத்தி னெல்லைபுக்கா னங்கு. (௩௦௭)

புக்குளவேற் கோமான் பொறியார் மயூரமாய்க்
குக்குடமாய் நின்றவரைக் கூர்தரப்பார்த்—திக்கணது
மிக்க வியற்கையாய் மேவுதி ரென்னவவர்
தக்கவுரு வாய்ப்பணிந்தார் சார்ந்து. (௩௦௮)

வள்ளறனைத் தாழ்ந்து வழுத்தி யிமையோர்த
முள்ள முருக வுருவிழிநீர்—தள்ள
வினிய மொழிதவற வின்மதுவுண் வண்டிற்
றனிமகிழ்வு கொண்டுநின்றார் தாம். (கOக)

அணங்கயில்வேள் சூர்முதலை யட்டுவந்த தோர்ந்து
நிணங்குலவு போர்க்களத்தி னின்ற—கணங்கள்
கெழுதார்த் தகைவீரர் கேழிளவல் யாருந்
தொழுதார்த்தார் சூழ்ந்தார் துதைந்து. (கசO)

சூரபன்மன் வதைப்படலம் முற்றிற்று
ஆ திருவெண்பா கருகூO.

---

# தேவர்கள் போற்றுபடலம்.

---

நேர்தன்னமு மில்லா நின்மலன் றன்வேலாற்
சூர்தன் னுடல்பிளந்து தோகைமே—லார்தகைமை
மன்னரிமால் வேதனும்பர் வானமிர்தெய் திற்றென்ன
வன்னதுகண் டார்த்தா ரணைந்து. (க)

ஆர்த்தா ரெழுந்துதுள்ளி யாடினார் பாடினார்
போர்த்தார் புளகம்பொற் பூமாரி—தூர்த்தாரான்
முன்னற் கருமருளை முன்னித் தொழுதனர்வேன்
மன்னற் றுதிப்பார் மகிழ்ந்து. (உ)

நீலாழி தன்னு ணிறமுகில்கொ ணீர்வறப்ப
வேலா கவம்புரிந்தே யேகுதனி—வேலாலே
சூர்தடிந்தாய் தாமெமக்குத் தொல்லைப் பழவினையின்
வேர்தடிந்தா யென்வேண்டும் வேறு. (ந)

அஞ்சுமுக நாரி யருமகனே காரவுண
ரஞ்சுமுக னார்வாரத்தா லார்த்தலைக்க—வஞ்சுமுகந்
தேறுமுக மின்றித் தியங்குமெமை யாளவன்றோ
வாறுமுகங் கொண்டுதித்தா யாங்கு. (ச)

தீயவர்செய் தீமையெலாந் தீர்ந்தோம் பழியகன்றோ
மேயமறை யாறு வெறுக்கைபெற்றோங்—காயவுணர்
தம்மால் வருந்தெமக்குத் தண்ணருணீ செய்தமையா
லம்மா பிழைத்தோ மடுத்து. (ரு)

செய்பவனு மைம்புலனுஞ் செய்வித்து நிற்பவனு
மெய்து பொருளு மெவையுநீ—யுய்வகையி
னையவடி யேமுணர்ந்தோ மன்னதனுல் வெம்பவம்போய்ச்
செய்யகதி சேர்துந் திகழ்ந்து. (சு)

ஈண்டே யெமருக் கிடர்செ யவுணரெலா
மாண்டே விளியும் வகைபுரிந்தே—யாண்டனையால்
வேண்டே மினியாது மேலாய நின்கழற்கே
பூண்டேந் தொழும்பு புரிந்து. (எ)

என்று விளம்பி யெவருநனி யேத்துதலு
மின்று மயில்வேல் விமலன்கேட்—டென்றுமோர்
மன்று ரணையன்மால் வானோர்க்கு மே ர்க்குந்
தன்று மருள்புரிந்தான் றான். (அ)

தேவர்கள் போற்ற லம் முற்றிற்று.
ஆக திருவி ய ா ச ரு ா அ.

---

# இரணியன்புலம்புறு படலம்.

அஃதுபோ தவுணு ரவுணர் சிலவர்
கதுமெனப்போய்க் காவலன்சேர்க் கந்த—னுதிதருவே
றன்று விறந்ததன்மை சாற்றப் பதுமைமற்ற
மின்று ரொடுகேட்டாள் வேர்த்து (க)

மன்னவர்மன் மாய்ந்தனனென் மாற்றமது கேட்டளவிற்
பன்னியுயிர் நீங்கினுள் பன்னுமற்ற—பின்னனைய
மன்றுணைவி மார்கள் வயிறலைத்து நொந்தழுங்கிப்
பொன்றினர்போல் வீழ்ந்தார் புலர்ந்து. (உ)

அன்னூர் பெருந்தீ யழற்குண்ட மொன்றாக்கிக்
கொன்னூர் பதுமைதனைக் கொண்டுய்த்தும்—பின்றூருந்
துன்றுகுயி லீட்டந் துளிர்மாவிற் புக்கனபோற்
சென்று விழுந்தார் செறிந்து. (ங)

வெந்தழலி லன்னூர் விளிந்தா ரதுநிற்கத்
தந்தை முடிந்ததுவுந் தான்சேவல்—சந்தமயின்
மன்னியலில் வேண்மருங்கு வந்ததுவுங் கண்டிரங்கி
மின்னிரணி யன்கரைவான் விண். (ச)

நன்றென் பதையுணராய் நானவின்ற மாற்றங்க
ளொன்று முறுதியென வுன்னலையே—பொன்றுதற்கோ
புக்கால வேலவன்முன் போர்புரிந்தாய் வேந்தநினை
யெக்காலங் காண்பே னினி. (ரு)

ஒன்னார் வலிகண் டனைச்செருவிற் போற்றாமே
யின்னா ருயிர்தாங்கி யானொளித்தே—னென்னாநீ
யன்னதனை நோக்கியோ வன்பிலன்முன் வந்திலைகொ
லென்னதனைச் சொல்வா யினிது. (௬)

நில்லா வுடலை நிலையா மெனக்கருதிப்
பல்லார் பழிக்கும் படியுணக்கும்—வல்லாளா
சொல்லா தகன்றனனீ துஞ்சியபின் வந்தடைந்தே
னல்லார் களிற்சிறந்தே னன். (௭)

ஆழியங்கைப் புத்தே ளயன்முதலாம் வானவர்கள்
வாழி யெனவழுத்த வைகியநீ—பூழியணி
பாழியா ரெண்டோட் பரன்சிறுவன் றேரின்கட்
கோழியாக் கூவுதியோ கூர்ந்து. (௮)

பெற்றவண்டத் தாருயிர்கள் பேரிடமின் றேயிறைஞ்சப்
பொற்றகழன் மேவு புரவலநீ—யிற்றை
யயிலார் வடிவே லமர்காரத்தோன் றன்னை
மயிலாச் சுமக்குதியோ வாய்ந்து. (௯)

பொங்கு வெகுளி பொரும்போ ரிகலுள்ளந்
தங்குவன்மை மானஞ் சயமகந்தை—யிங்கிவைதா
மங்குற்ற நின்னை யடைந்திலை வேறுதா
னெங்குற்ற தையா வியம்பு. (௧0)

என்று கனக னிரங்கி நெடிதுயிர்த்துத்
துன்றுகட லின்முன்போற் றுன்னிவல்லே—சென்றுபுகர்
மாடெய்திப் பெற்றோர்க்கு மற்றோர்க்குஞ் செய்கடனை
ரோடெய்திச் செய்தா னுகந்து. (௧௧)

மாண்டார் தமக்கவுணா மன்மரபிற் கேற்றபடி
பூண்டார்க் கனகன் புரிந்தெவையும்—வேண்டானுய்க்
கூற்றொருசார் வீழக் குமைத்தவனை யுண்ணினைந்து
நோற்றொருசா ருற்றா னுனித்து (௧உ)

இரணியன்புலப்புறு படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௧௬௪0

---

## மீட்சிப்படலம்

---

மற்றதுபோ தேண்வீர வாகு தனைநோக்கிக்
கொற்ற நெடுவேற் குமரன்றூர்—முற்றவைத்து
வாட்டு சிறையினின்று வானோர் தமையெல்லா
மீட்டி வருதியென்றான் வேட்டு. (௧)

குன்றமெறி வேலனது கூறுதலு நன்றெனா
வென்றிமொய்ம்பு தாழ்ந்து விடைபெறீஇ—யொன்றுகனா
நின்று தருவர் நெடுநகர்போய் வானவர்க
டென்றுசிறை வைப்புற்றான் சூழ்ந்து. (உ)

செல்லுந் திறலோன் றிறனோக்கித் தேவர்தா
மெல்லவரு மற்புதநீ ரெய்தித்தான்—வல்லி
பரியவங்கை கூப்பிப் பருவரனீப் பானீ
பெரிதுவந்தா யென்றுணர்ந்தார் பேர்ந்து. (ங)

வம்மின்கள் வம்மின்கள் வானத்தீ ரெல்லீரு
ரும்மையடர் சூரை யொருநொடிப்பு—ளெம்மைய
னிம்மெனவேல் கொண்டெறிந்தா னென்னலுமே தேவரெலா
மம்மமகிழ்ந் தேகினா ராங்கு. (ச)

வயந்தனக்கோர் வைப்பாகும் வள்ளன்முன் செல்லச்
சயந்தனோ டும்பர் தணந்தங்—குயர்ந்த
வணங்கார் களத்தணுகி யத்தனடி போற்றி
வணங்கா மகிழ்ந்தார் மருங்கு. (ரு)

அத்தனண்டர் பாற்பே ரருள்கொண்டு நோக்கிவெஞ்சூர்
வைத்த சிறையில் வருந்தினீ—ரித்துயர்போ
யென்றுமின்பின் வாழ்குதீ ரென்னலுமண் ணோர்பணிந்து
துன்றிடர்தீர்ந் துய்ந்துமென்றார் சூழ்ந்து. (சு)

வாசவனின் புற்று வணங்குஞ் சயந்தனைத்தா
னேச முறத்தழீஇ நீள்பலநா—ணீசன்செய்
வல்லியிலெய்த் தாய்கொலென மாற்றநவின் றும்பரையும்
புல்லினனம் மாமுறையே போய். (எ)

கொற்றவேற் சேமான் கொடுந்தகுவன் கொன்களத்தி
லற்றைநா ளாவி யகல்பூதர்—முற்றபடை
முற்றும் வருவான் முருகவேண் முன்னவவை
யுற்றனவே யெல்லா மொருங்கு. (அ)

அருணன் கமழ்முகமோ ராறுடைய வம்மான்
வருணன் முகநோக்கி வன்சூர்—முரணகரை
யொல்லை யழித்தியென்றா னோதத்து ளாங்கரை
யல்லை யழுத்தினனீர் மன். (கூ)

அன்னபொழு தாறுமுக னம்புயன்மால் வேந்தேத்த
முன்னருமா வீரர் முரண்பூதர்—மன்னநனி
யார்த்துடனே செல்ல வமர்மா நிலந்தணந்து
பேர்த்துவெஞ்சு ரூர்கடந்தார் பின். (கo)

இலங்கைதனைத் தாழ்ந்து தேவியண்டர் போற்ற
நலங்கிளருஞ் செந்திநகர் நண்ணித்—துலங்குமஞ்ஞை
நின்றிழிந்து பொன்னார் நிகேதனத்தி லிட்டவரி
மின்றவிசில் வீற்றிருந்தான் வேள். (கக)

சூராதி யாப சுலவுதமர் மாண்டமையாற்
சோராம லூசௌசத் தீர்தருவான்—பேராழி
மூழ்குவன்போ லூட்புகுந்தான் மொய்செங் கரங்குவித்தே
யேழ்குரகத் தேர்மே லினன். (கஉ)

தொக்கமனைக் கஞ்சந் தொகையிதழ்க்கை கூப்பவே
மிக்கவினன் வீரைபுக மேவியெழு—செக்கர்.
வரதா பதர்வளர்க்கும் வன்னியொக்குஞ் செவ்வேள்
பிரதாப மானும் பெரிது. (கங)

அன்னபொழு தாறிருதோ ளண்ணலைமான் முற்றேவர்
சென்னியுறத் தாழ்ந்து சிறிபேமிங—குன்னிணைத்தாள்
பூசை புரிதுமென்றார் புண்ணியனன் றென்றிசைய
வாசையொடெல் லாமழைத்தா ராங்கு. (கச)

மந்திரமா மூர்த்தியுமை மாதுணரச் சொல்குமார
தந்திரமா நூற்படியே சண்முகற்குப்—புந்திமகிழ்ந்
தாரா தனம்புரிந்தங் கண்டமெலாம் போற்றவவர்ப்
பாரா வருள்புரிந்தான் பாங்கு. (கரு)

மின்கதிர்வேல் வேணுமக்கு வேண்டுவன கேளிரென
வென்குறையுண் டேண்ணு ரிணைத்தடிந்தாய்—நின்கழற்க
ணென்றுமன்பு மல்கவர மெந்தாய் தருதியென்றார்
நன்றென் றருள்புரிந்தா னன்கு. (கசு)

வெண்டா ரயன்முதலோர் வள்ளலைப்பூ சித்துவரங்
கொண்டார் தமியேனுங் கொள்வனென—விண்டாவு
செங்காஞ்சே ணேச்சிச் சிரந்தாழ்ந் தெழுபவன்போ
லங்கதிரோன் றோன்றினா னாங்கு. (கஎ)

அப்பொழுதங் காலயமொன் றாக்குவித்துச் சிற்பரனை
வைப்புறுமா தாணுவினின் மன்னவிரித்—தொப்பில்
கழிபொருள்க ளண்டர் கனிந்துதவ வன்பின்
வழிபடனன் காற்றினன்வேள் வாய்ந்து. (கஅ)

மீட்சிப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா கசஉஅ.

யுத்தகாண்டம் முற்றிற்று



திருச்சிற்றம்பலம்.

கந்தபுராண வெண்பா

ஐந்தாவது

தேவகாண்டம்

# திருப்பரங்குன்று சேர்படலம்.

மனபுலவை வேடர் வழியிலெல்லை யீர்த்தலைக்கா
தின்புலவு மேரகத்தி லெய்தவுய்ப்பா—யன்பர்
நெருக்குமரக் கோட்டத்த னின்மலமாஞ் செய்ய
வருக்குமரக் கோட்டத்த வுற்று. (க)

இன்னதன்மை யீச னிணைத்தாள் வழிபடல்செய்
தநநிலைய நீங்கியண்ட ரார்முனிவர்—தன்னனிக
முன்னு தலைவ ரொருங்குபுடை சாரவே
பின்னுமயின் மேல்கொண்டான் வேள். (உ)

மேவுமஞ்ஞை மேலமர்செவ் வேண்மா லயன்மகவான்
றவிலெறுழ் வீரர் தமைநோக்கி—நீவிரெலா
மும்மினவிர்ந் தோங்குமணி யூர்தி மிசையினராய்
வம்மினம்பா லென்றான் மகிழ்ந்து. (ங)

மாலு மயனு மகவானு மற்றவரு
மேலும் பரிமே லிவர்ந்தற்றார்—சாலுமணிக்
கோயின் மருங்கெங்குங் கொன்பூத வெள்ளமீ
ராயிரம்வந் தீண்டினவே யார்த்து. (ச)

சேனை படாச் செறிபூழி தூசியிற்போய்
வானை வளைத்த வளைமுதலா—மேனையிய
மார்த்தவென் றா ழோட வவிர்கவிகை யோடுகொடி
போர்த்த புதுமை பொலிந்து. (ரு)

வண்ணக் கொடிகொடிசீர் மல்கால வட்டமிலை
மன்னற் கவிகை மணிமலர்கண்—மின்னயின்மீன்
மாத்தரங்கந் தோன்மை வாயனிக மாவாரி
பூத்தனவே சாலப் பொலிந்து. (சு)

கொற்றமன்வே ளூர்மஞ்ஞை கூக்தோறும்வெம் பாந்தளுலை
வுற்றசைய மூக்கி னுலகுகுத்தி – யுய்த்தறியு
மூன்குயிலைக் கீறி யுருமுறவே பற்றுமால்
கொன்குக் குடமாங் கொடி. (௭)

இவ்வண்ணந் தானை யெழுச்சிகொடு சென்றிட்டே
தெவ்வண்ண லைக்காய் திருக்கைவேற்—செவ்வண்ணக்
குன்றகந்தோ ரூடுங் குழகனவி ரிங்கரி
னின்றகன்றே போனு னெடிது. (௮)

பூத ரொலிவினவிப் புட்குலமு மாக்குலமும்
போதவெருண் டுள்ளம் புழுங்கியே—காதரந்தா
னூற்றிரிந்த பாந்த ளொடுங்கி முழைபுகுந்த
தற்றகுரங் கோடினவே சூழ்ந்து. (௯)

காந்தள் விளக்கேந்தக் காமர் மயிலாடப்
பாந்தளது பாராப் பரிசுதவா—மாந்தர்போற்
சென்று மறையுஞ் செழுஞ்சார லார்புலிமா
னென்றொலிகேட் டஞ்சினவே யுற்று. (௧௦)

ஆரணமா வார்ப்பு மமரர்தாம் போற்றொலியும்
வாரணவு பேரியங்கண் மாமுழக்குஞ்—சீரணவு
போர்ப்பினனி கத்தொலியும் பொற்றேருகை வாரணமா
வார்ப்பி னனிமறைந்த வாங்கு. (௧௧)

மிடைகுறிஞ்சி மாண்பினைய வீறநட வைகொள்
படைநடுவ ணேகிப் பலங்கொண்—டடைசூர்
வூரங்குன்ற வுய்த்திடுவேன் மன்கூடன் மேல்பாற்
பரங்குன்ற முற்றான் பர்ந்து. (௧௨)

ஆவயின்முன் னங்க ணறுசவத்தோ ரோடயன்மு
னேவருஞ்செவ் வேளை யிறைஞ்சியிங்கண்—மேவுதியில்
வோங்கல் சிறந்ததென்றே யோதிடநஞ் சிந்தையுமஃ
தாங்கொலென வேறினன்வே ளாங்கு. (௧௩)

ஓங்குவரை தம்மு ளுயர்தருமா மேருவினை
வாங்குதிரை யார்பயங்கொள் வாரிவளோர்—தாங்குச்
சிரங்குன்றம் போன்ற சிறப்பூத வெள்ளம்
பரங்குன்றஞ் சூழ்ந்த பரந்து. (௧௪)

காலை யதிற்கடவுட் கம்மியன்வெற் பில்வரம்பில்
கோலமொன்ன றெய்வக் குலக்கோயில்—சாலைதட
கல்கவலை பார்த்தருளி கண்வயயர் தம்மைமதிதீஇ
மல்குதனி சார்ந்தான் வான். (௧௫)

மன்மயின்மே னின்றிழிந்து வானவர்பான் மேவிடப்போய்
மின்மடங்கன் மெல்லணைமேல் வீற்றிருந்து—பொன்மரும
ளுதியரை யகங்காங் கமர்த்தினன் சேவடிசா
ரோதியரை யான்வே ளுகந்து. (கக)

குலக்கிரிநேர் பூதமன்னர் கொன்வீர மொய்ம்ப
னிலக்கரெண்மர் யாரு மிறைவன்—மலர்க்கழறூழ்ந்
தாங்கிருந்தா ரன்பா ரறமுனிவ ரர்ச்சனைசெய்
தோங்கிருந்தான் போற்றினு ருற்று. (கஎ)

வழிபடுபே ராசரன்றன் மைந்தர்க் கருடான்
பொழிதருகண் ணோட்டம் புரிந்து—கழிய
மறைதந்து மன்சின் மயப்பொருள்கள் யாவு
மறைதந்து வைகினு னங்கு. (கஅ)

——:0:——

திருப்பரங்குன்று சேர்படலம் முற்றிற்று.

## தெய்வயானையம்மை திருமணப்படலம்.

கூந்தலுடைக் குஞ்சரத்தைக் கொன்வேற் குகற்குநல்க
வேந்த லிதயத்தி லெண்ணியே—பூந்தவிசார்
மின்கருத்த ளுதியருண் மேவவுரை செய்யவுவந்
துன்கருத்து நன்றென்ரு ரோர்ந்து. (க)

பன்னிருகை வேள்பாற் படப்பிடியும் பொய்கைவாய்
முன்னரே நோற்றமையான் மொய்பயனும்—பின்னரெய்திற்
றன்னுற் கியல்வதுவை யாலீதற் கீங்குமுய
லென்னுக் கரைந்தா ரினிது. (உ)

அனையபோ தொற்றனைப்பார்த் தண்ணல்பொன் வெற்பின்
மனைவி யொடுதனயை வல்லை—யினிது
விளித்தனையே கென்னப்போய் மின்சசியைக் கண்டு
களித்தளையான் றாழ்ந்தான் கழல். (ங)

மாண்டான்சூர் மைந்தனொடு வானோர் சிறையகன்றார்
மீண்டான் பரங்குன்ற மேயினன்வே—ளாண்டாங்
கடுத்தனனின் கேள்வ னழைத்துவரா நம்மை
விடுத்தனனே கென்றான் விரைந்து. (௪)

அம்மொழிகேட் டம்மி னணங்ககன்று விம்மிதமுற்
றெம்மையுமே யில்லதோ ரின்பெய்திக்—கொம்மென்
றெழுந்தனள்வெண் ணுன்மருப்பி யானைமேற் கொண்டு
செழுந்தனயை யோடுசென்றாள் சேண். (௫)

பொருப்பரங்குன் றூர்சனையும் பொற்குவடும் பெற்ற
திருப்பரங்குன் றேகித் திருவு—மருப்பரங்குன்
றக்கமுலை யானையும்வந் தண்ணலிடம் வைகமின்னைத்
தொக்கமின்னார் தாழ்ந்தார் தொழுது. (௬)

கொண்டான் மகனைக் கருணையி னாற்றழீஇக்
கொண்டான் மகிழ்ந்தான்பால் கொங்கையுக—விண்டான்
கவலை வெறுமையுளார் காஞ்சனம்பெற் றூற்போ
லுவகையுற்றான் வேந்து முகந்து. (௭)

அஞ்ஞான்று வானவரோ டாக்கைமுற்று நோக்கமுற்றோன்
மைஞ்ஞான்ற கூந்தன் மகள்வதுவை—கைஞ்ஞாங்கர்ப்
புங்கவற்குச் செப்பிடுவான் புந்திகொடு கந்தமல
ரங்கழற்கிட் டேத்தினு னாங்கு. (௮)

காரவுண ராய களைகட்டா யிந்நின்ற
சீரமரர் தங்கள் சிறைமீட்டாய்—தேரெனக்கு
முன்னின்ற சீர்புரிந்தாய் முற்று மூணர்ந்தெளியேன்
செய்நன்றி யுண்டோ செயற்கு. (௯)

முந்தியான் பெற்றவெழின் மொய்குழலா ளிவ்வரைக்கண்
வந்தமர்வா டன்னை மணமுடித்தே—யெந்தையே
கந்துறழ்நின் றோளிற் கலத்தி யடியேங்க
ளுய்ந்துபயன் கொள்ளவென்று ரோர்ந்து. (௧௦)

என்னலுமே யிந்திரனை யெந்தை நனிநோக்கி
யந்நங்கை நோற்றனண்முன் னுதலினீ—முன்னுமண
நாளை முடித்துமென நாங்களுய்ந்தோ மென்றுவந்தை
தாளை முடிபுனைந்தான் றாழ்ந்து. (௧௧)

ஒல்லைவாய் தற்புடைவந் தொற்றர் தமைநோக்க
வல்லையவர் யாரும் வணக்கியே—சொல்லருஞ்சீர்
மன்னு யகனே மருவடியேஞ் செய்வதென்கொ
லென்னு நவின்றா ரினிது. (௧௨)

மூவர்க்குண் முன்னோன் முயங்குகிரி சேரரிமுற்
றேவர்க்குந் தாபதர்க்குந் தீமையிலா—வேவர்க்குங்
காளையென நின்றவெழிற் கந்தவே ளெந்தைமண
நாளையெனச் சொல்வீர் நயந்து. (௧௩)

மல்குபுகழ்ச் செவ்வேண் மணங்கூறி யேவருமே
செல்குலவு மிவ்வரையிற் சேர்தருவா—னல்கிடுமென்
றக்கணமெய் வேந்தறைய வவ்வொற்றர் நன்குதொழு
தக்கணமே போயினு ராங்கு. (௧௪)

போனபோ தோற்றர் புலன்மிக்க கம்மியர்க்குய்
மானவேற் செவ்வேள் வதுவைதனக்—கானசெயன்
முற்ற வமைத்தி முறையே யிவணென்றான்
கொற்ற முறுவமரர் கோன். (௧௭)

புனைவன துட் கொண்டு பொருப்பொருசார் பார்மேற்
கனக மணிகுயிற்றிக் காமர்—நனியுறவோர்
மண்டபங்கண் டேர்வானரி வான்றாக்கித் தார்நாற்றி
யொண்டவிசுவேட்கமைத்தா னென்று. (௧௮)

வேதநவி னுதனயல் விண்டுமுத லண்டருக்கே
ராதனங்கள் கண்டுமென்ற லாங்களன்மா—டோதருவா
னண்ணிலா மன்னிகரி நன்கமைத்து மண்டபத்தோ
டெண்ணிலா மன்றமைத்தா னேய்ந்து. (௧௯)

சோலைமலர் வாவி சுனைகள் பலவகுத்தே
யேலுங் கடிக்குரிய யாவுநல்கச்—சால
வவைதெரிந்தே ரண்ணலுவந் தார்வதுவைக் கான
வெவையும் வரித்தா னினிது. (௧அ)

தேவர்கள் கோமான்றன் செய்கையிது நிற்கமுன்ன
ரேவலர்க ளோடி யிசைத்திடலுங்—காவற்
பெருமான் முசுகுந்தன் பெட்டுமணங் காண
வருமா றுரைப்பாம் வகுத்து. (௧௯)

போற்று கயிலைப் பொழிலிடைமே னுட்பானுங்
கோற்றொடியு மாகமகிழ் கொண்டிருப்ப—வேற்றவில்வத்
தாரு முசுவுளொன்று சாரிருவர் மேற்றூர்த்த
தாருமன்பர் போலிலைகொய் தாங்கு. (௨0)

தூர்த்த தொருகாலைத் தோகைபொரு ளாகியே
சேர்த்திடலு மன்னுள் செயற்கைதனைப்—பார்த்துநமை
யீண்டுவழி பட்டுளதை யென்னை வெகுள்வதென்றான்
யாண்டுமெறைக் கெட்டா விறை. (௨௧)

என்னலுமே நங்கை யிகன்மாச் சினந்தணந்து
நன்ன ரருள்புரிய நாயகனு—முன்னவனு
மொன்று முசுக்கலையி னுள்ளத் திருளகற்றி
நன்றுணர்வு தந்தா னயந்து. (௨௨)

மெய்யுணர்வு சேரமர மேனின் றிழிந்துமுசு
வையனுடன் றுயையன்பி னுங்கிறைஞ்சி—னையக்
குழையுமுள மில்லாக் கொடியே னிழைத்த
பிழைபொறுத்தி ரென்றதுவே பின். (௨௩)

பிழையிதென வச்சமொடு பேசலெமை யீண்டே
விழுமியதோர் கூவிளையின் மென்பைங்—குழைதூய்
வழிபடுதல் செய்தாய் மனுக்குலத்திற் றோன்றி
முழுதலகா ளென்றான் முதல். (உ௫)

அன்னமொழி தேர்ந்தகன்வ னாருமனு செய்திவிம்மி
மன்னிறையைத் தாழ்ந்தும்மை வைகலும்பார்த்—துன்னமுவந்
திங்கனம்வாழ் கின்றதிகந் தெந்தாய்மண் போய்த்தளைப்பட்
டெங்ஙனநா னுய்வே னினி. (உ௬)

அன்னதுகேட் டைங்கின் னகநன் றவனிவைகிப்
பின்னிவணீ மீள்வாய் பிறநினைய—லென்னமுசு
வையமுற்று மாழாதிவ் வத்திரத்தோ டாரவருள்
செய்யெனவே வேண்டியது தேர்ந்து. (உ௬)

ஐயனரு ளவ்வரம்பெற் றங்கயிலை நின்றகன்று
செய்யமுசு வோர்கணத்திற் சிந்தலவு—வையத்
தருமாமெய் குன்று வரிச்சந் திரனோர்
மருமானிற் றோன்றியதே வந்து. (உ௭)

மாமுகமொன் றேமுசுவா மற்றுளவோர் கூர்வடிவாய்
நாமமுசு குந்தனென நண்ணிமணிக்—கோமுடிதான்
றொன்முறையே சூடித் தலங்கிருமா ஞாலமெலா
மன்முறையே யாண்டான் மகிழ்ந்து. (உ௮)

சீர்க்கருவூர்த் தேமேவிச் செங்கோல் செலுத்தரசாய்ச்
சூர்க்குலைவுற் றோர்சார் துதைந்திருந்தான்—வேற்குமா
னன்னாற் றொலைத்ததுகேட் டாரணர்போய்ச் சிறிமைமை
நன்னாட்சி வாய்ந்தமர்ந்தான் மற்று. (உ௯)

வாய்ந்தவெல்லை மன்னவன்முன் வாசவன்றன் றாதுவர்போ
யேய்ந்தகழல் வாழ்த்தியரி யேவலர்யாம்—வேந்தநீ
சுற்றமொடு வாழிவெய்ய சூர்த்தொலைத்து வேலன்சீ
ருற்றபரங் குன்றமர்ந்தா னுற்று. (௩௦)

கொற்றவேற் காளைக்குக் கோன்மகவா ளீன்பிடியை
யிற்றைறபோய் நாளையினி தீகின்றான்—மற்றிதனைக்
கூறிவொ னெம்மையுய்த்தான் கோவே பரங்குன்றஞ்
சேறியா லென்றறைந்தார் சேர்ந்து. (௩௧)

ஆண்டகைமெய் பூரித் தவர்த்தழீஇச் சோபனமா
மீண்டிதனுக் கீயுமா றேதுமில்லை—மாண்டநிதி
நீண்டகுடை நல்குகோ நேரரசு நல்குகோ
வேண்டுகின்ற தென்னென்றான் வேந்து. (௩௨)

கோதின் முசுகுந்தன் கொள்ளுவகை யுள்ளுணர்ந்தே
யோதுமொற்றர்க் கிவ்வெல்லா மொல்வதன்று—மீதலமாண்
மன்றலைவன் முன்சேறன் மற்றெவையும் பெற்றதொக்கு
மென்றறைந்து போயினா ரேய்ந்து. (௩௩)

ஏயவொற்றா பூபால ரெண்டிசையோ ரேவருக்குஞ்
சேயிலைவேற் செய்வதுவை செப்பியே—மீயுலவு
மாதித்த னாதியர்க்கு மாசி லறவோர்க்கு
மோதித் தகச்சென்றா ருற்று. (௩௪)

மன்னன் முசுகுந்தன் மாநகர வாணரொடு
தன்னனிகம் வேள்வதுவை தான்காண—முன்னடப்பாள்
வள்ளுவனைத் கூயிபமேல் வார்முரசஞ் சாற்றென்றா
னுள்ளவொரூறும் போய்ப்போய் வெடிது. (௩௫)

அன்னா னதுவினவி யாம்பன் மிசையிவர்ந்தே
பன்னா முரசறைந்து பார்வைமெய்யன்—முன்னாண்
மிகவாரூ ரத்தன் விழவு மொழியுந்
தகவார் தரமொழிந்தான் றான். (௩௬)

வாங்குதிரை வாங்குதிரை வார்முரச மார்கலியார்ப்
போங்குமின்றேர் தூங்குகல மும்பறிண்மீன்—றாங்கு
படைமகரங் காலாள் படுவலைஞ ராகக்
கடனிகர்த்துச் சென்றவனி கம். (௩௭)

மன்னெயினர் மீதூர் வயவராத் தூவருவி
யுன்னுமத மாமுகின்மி னோடையாத்—துன்னிக்
குருமணியார் கோடு குலவக் கொடுமே
விருமலைபோற் சென்ற விபம். (௩௮)

மேலமர்வார் மேனோக்க மேவி முகந்திருப்பிச்
சாலநகை தந்தாடித் தார்மிடற்றி—லாலத்
தரத்தி னடந்து சதிகாட்டி யாடும்
பரத்தையர்போற் சென்ற பரி. (௩௯)

பொற்சிகரம் வானளவப் பூங்கொடிகள் பாங்குலவ
நற்சினையார் தாரு நடுக்காலாச்—சிற்சி
லலம்புமுகின் மின்றுகிலா வாரச் சிறைகொள்
சிலம்பெனவே சென்றமணித் தேர். (௪௰)

எதிர்தந்த மாக்களையச் சேய்விழியா னோக்க
விதிர்தந்து வாய்வெரீஇ வீழா—வதிர்தந்து
வீயவே செய்திறத்த வென்றிகொண்மா வான்வயவர்
சீயம்போற் சென்றார் செறிந்து. (௪௧)

பல்லியங்க ளார்ப்பப் பலமாப் படைமின்ன
வொல்லுந் துகிற்கொடிவா னூற்றசைய—சொல்லருஞ்சீர்க்
கோன்முடிமேல் வேந்தர் குலமலர்ப்பூ மாரிபெய்யச்
சூன்முகில்போற் சென்றபடை சூழ்ந்து. (௪௨)

தாள்கொண்ட நீள்கழலார் சாயகம்பெய் தூணியார்
தோள்கொண்ட வில்லார் தொடைமுடியார்—வான்கொண்ட
கண்ணார் மருங்கு கவின்மதன்போ லேகினார்
திண்ணார்வல் வீரர் சிலர். (௪௩)

கண்ணா லெவர்க்குமே காமம் விளைவித்துப்
பண்ணார் மொழியாற் பரவசஞ்செய்—விண்ணாருந்
தாரிற் பொலிகுழலார் தாரகைவான் சேறல்போற்
பாரிற் படர்ந்தார் பலர். (௪௪)

தேரிற் சிலர்சென்றார் திண்வயவர் சிந்துரத்திற்
சீரிற் சிலர்சென்றார் சேணுலவு—காரிற்
கவிகை புடைநிழற்றக் காமர் மடவார்
சிவிகையிலே சென்றார் சிலர். (௪௫)

பிளிறுதெய்வ யானை பெருமணங்காண் பெட்பிற்
குளிறுவய வீரர்மேல் கொண்டேர்—களிறுந்
துடியுமிடைக் கொவ்வாத தோகையர்க ளேறும்
பிடியுங் களிகொண்ட பேர்ந்து. (௪௬)

மாதனம்பற் கொவ்வாண் மருமமுற வோர்காளை
மாதனம்பெற் றாரின் மகிழ்வுற்றான்—போத
வெறுமையுற்றார் மெல்லிடையாள் வென்னுறவோர் தோன்றல்
வறுமையுற்றார் போற்றுயர்ந்தான் வாய்ந்து. (௪௭)

பன்னற் கரும்பைப் பருமவல்குன் மாதொருத்தி
பொன்னற் கிழியார் பொருளுறல்போன்—மின்னிக்
கனங்கொண்டு விம்முதனங் காணவொரு காளை
சினங்கொண்டு சென்றா டிகைத்து. (௪௮)

தாமமணி மார்புடைய சம்பரனுக் கோர்பகையாங்
காமனுமன் றூற்குகந்த காதலியு—மாமெனவே
மங்கையர்தம் மோடினிய மாற்றம் பகர்ந்தவர்கை
செங்கையுறச் சென்றார் சிலர். (௪௯)

கையிலார் கைபெற்றுங் காலிலார் கால்பெற்று
மெய்யிலார் மெய்பெற்று மேவூமை—செய்யவுரை
பெற்றும் விழியிலர்கண் பெற்றுஞ்சென் றார்குகன்றா
ளுற்றவன்பர்க் கென்னகுறை யுண்டு. (௫௦)

ஒருத்தலது புல்லப்போ மோர்பிடியின் மேவுந்
திருத்தகையா னேகிச் செலக்கண்—டொருத்தன்
மருங்கி லரியுடையீர் வாரணத்துக் கஞ்சி
யிருங்கவலேன் கொண்டிரென்றா னீங்கு. (ருக)

யானை நுதலி லிவர்சிந்தூரமந்தி
யேனைமக்கள் பூண்படைக ளேய்பகலும்—வானையண்ணு
மங்கவிகை கேதனங்க ளாரிரவுங் காட்டவே
பொங்கனிகம் போன புரிந்து. (ருஉ)

ஒக்கரை பேரி குடமுழாக் கொம்புசின்னந்
தக்கை தடாரிகுழல் சல்லரிமுன்—றொக்க
பலவியங்க டாங்கிப் பலரியம்பிச் சென்றார்
சுலவுகட லார்ப்பெனவே சூழ்ந்து. (ருங)

இன்னசன மீண்டியே யெங்குமா யேகுமெல்லைத்
தன்னினத்தார் தந்திரத்தார் சார்வேந்தர்—பின்னுமுளார்
முன்பினுறத் தேர்மேன் முசுகுந்தன் போதலுற்றா
னன்பின் மணங்காண்பா னுங்கு. (ருச)

கானும் வரையுங் கடந்து நதிதணந்து
தேனுலவு தார்மார்பன் சேனையொடு—வானுலக
ரன்பரங்குன் றுள்பணியு மார்ப்புமிக வேற்படைவேண்
மன்பரங்குன் றெய்தினன் வந்து. (ருரு)

முசுமுகத்த வேந்தன் முனமவந் தழிமா
வசுமதியாண் மன்னரெலாம் வந்து—மிசையண்
பரங்குன்ற மன்னிப் பரித்தலா னும்ம
பரங்குன்ற மாகியதிப் பார். (ருசா)

கருமைநிற மெய்திக் கடனீர் பொழிந்தே
யுருமுகவே யார்க்கு மொலிகொண்—டொருமையுற்று
மெண்கோடு வெற்பி லிவர்மஞ் சிபமென்று
வெண்கோடு காட்டுமே வேறு. (ருஎ)

பொருப்புருவம் வீழருவி பொங்குமத வாரி
குருப்பன் மணியார் குவடு—மருப்பகல்வான்
றோயுந் துனைவேய் துதிக்கையாத் தூங்கவரை
யேயு மிபமா மினிது. (ருஅ)

கோடுறுபூங் கோடு குனித்துக் குழைபிடிக்குக்
கோடுறுமா வேழங் கொடுத்துமுகி—லூடு
தருத்தியறல் கொள்ளுமா தூயநீர் கொண்டே
யருத்தி யருத்தியுறு மாங்கு. (ருகூ)

சிலம்பிலுயர் வெய்தொடுத்த தேத்தலையைக் கையால்
வலம்படுமோ பற்றுவதோர் மாண்பு—பொலம்படுசீன்
சோலிற் பொலிமதியைக் கோளுறுதின் வானரவு
மேவிப் பிடிப்பதொக்கு மேல். (௬0)

வெற்பாரும் வெம்முலையை விற்றுடனே மீட்கவல்ல
பொற்பாரு மாதருள்போற் போந்தசில—கற்பாரு
கண்பாக மேவுமின்னார் நன்மனம்போ னின்றசில
வண்பாக ருய்க்குமத மா. (௬௧)

அந்தரமே வண்டாரங்கா ளாழியின்மத் தாகிறுத்து
மந்தரமே போன்றொளிரு மாநவிர—நந்தரவ
வந்திரைகள் சால வவிர்வரையைச் சூழ்வதொக்கு
பந்தியின்வந் துற்ற பரி. (௬௨)

மானவேற் சாமி மணங்கா ணியவந்த
மானவர்பூ பாலர் வயங்குமணி—மானமொடு
நேரநந்த கோடி நிலத்தேர் நிரைத்தாங்குத்
தேரநந்த கோடிநின்ற சேர்ந்து. (௬௩)

ஆடமைத்தோ ணல்லாரு மாடவரு மேனையரு
மாடகூ டத்தா வணம்புகுந்தார்—கோடுமிசை
போயிலங்க வீழதலம் புக்கவிராற் பூங்காவுட்
கோயிலமை தந்த திறைக்கு. (௬௪)

படாசிலையார் மைந்தருமோர் மாதருமாங் காங்காடி
மாசிலையாம் வேட்டுருப்பம் வாங்கவே—பாசிலையி
லேந்துறையின் முத்த மெனமன் மலர்த்தடத்தின்
பூந்துறையிற் புக்கார் புரிந்து. (௬௫)

செந்தா மரைத்தடத்திற் சேயிழையோர் மாதெழில்கூர்
கந்தா மணிப்புயத்துக் காளைமுன—நந்தாநீர்
மூழ்கியெழ வண்ணுண் முகமுண் டகமென்று
மாழ்கியயல் பார்ப்பான் வறிது (௬௬)

பங்கயமன் வாவியிலோர் பாவையுறப் பாய்வரா
லங்கயன்மீ னுமையுறப் பார்ந்தலைப்பப்—பொங்கு
கடுத்தடங்கண் மான்மெலிவு கண்டவளை யோர்வே
ளெடுத்தணைப்பான் றேண்மே லினிது. (௬௭)

நீரின் முழுகொருமி னீவியிழந் தங்கழலாற்
றேரின் பகைமறைத்துச் செங்கைமலர்—காரிற்
றகையைம்பால் சேர்த்துநண்பன் சக்குறப்பொற் பஞ்ச
முகையிரண்டு காட்டினான் முன். (௬௮)

செங்கமலம் பைங்குவளை சேதாம்பல் சைவலமே
ரங்கனையா ராட வலைதோற்ற—மங்கையர்த
மாமுகங்கண் வாயைம்பான் மாமைநேர் கண்டிளைந்து
தாமலைதன் மானுந் தடத்து. (சுக)

ஆயிழையில் வாவித்தனக் காயிரங்கண் பாரெனத்தன்
னேயனெய்தல் காட்டமின்று நேர்வதனம்—வாயனர்தங்
கானுற் றெனக்கமலங் கைரவமே காட்டவன்று
ஞானுற் றயர்வா னவிந்து. (எ௦)

கோதை யொருத்திமலர் கொய்யவதேய் தாமைதெர்ந்
தாதரவிற் றன்வரன்கொய் தங்குதவக்—காதலிகண்
டிடினுள் சோர்வுற் றலையவவ னின்றெடுப்பக்
கூடினு ளன்புநனி கொண்டு. (எக)

கொங்கமருங் கூந்தற் கொடியேநின் கொங்கைக்கில்
வங்கமல மொட்டுநிக ராமென்றே—யிங்கிதமாச்
சேயொருத்தன் கூறச் சினந்து முகங்கோட்டிப்
போயொருத்தி நின்றாள் புலர்ந்து. (எஉ)

ஏந்த லொருவ னிணைக்கரத்தி னீர்முகந்து
காந்தைமிசை வீசவந்தக் காரிகைதன்—சேந்த
குமுதவாய் தன்னிலறல் கொண்டவன்மேற் பெய்தா
ளமுத முகுப்பதுபோ லாங்கு. (எங)

பூவை யொருத்திபுனை பூந்தானை தானனைந்து
மேவுமெய்யி லொன்றி விளங்கவங்க—நீவி
தணந்தனையோ மாதென்னத் தான்றழீஇத் தேர்ந்து
மணந்தவன்வெள் குற்றான் வறிது. (எச)

வீக்கயநீ ராடி வியன்கரையின் மேவிமரைப்
பூக்கரத்தி லேந்திவரும் பூவையரை—நோக்குங்கால்
மாக்கடலி னின்று மலர்கரத்தி லேந்திவருந்
தாக்கணங்கே யென்னத் தகும். (எரு)

புதுமணிநீ ராடிப் பொருமலர்கை யேந்தி
மதனு மிரதியுமே மான—வதிக
வருமஞ்சார் மைந்தரோ டொண்டொடியார் போயோர்
அருமஞ்சார் தந்தார் அடைந்து. (எசு)

குயிலின் மொழிதந்து கொம்பினங்கை நீட்டி
வெயிலனுகாப் பொங்கர் விழைவுற்—றயிலென்
மழைக்கண் மகளிரையு மைந்தரையும் வாவென்
றழைக்கின்ற தொக்குமே யாங்கு. (எஎ)

நாயகற்கு மெட்டாத கற்கேழ் மலர்பறிப்பான்
றூயவன்றன் றிண்புயத்திற் றாவிவர்ந்து—மீயமர்வாண்
மேவீர் மாலைபுனை வீரரெழிற் றோளிலமர்
மாவீர மாங்கர்வாண் மற்று. (௭௮)

கோங்குமுகை கொய்தணங்குன் கொங்கையொக்கு மஃதென்று
வீங்குபுயத் தோர்காளை வெம்முலையின்—பாங்குவைக்க
வன்றாள் பயோதரமுன் றாழ்ந்து சடாதகையா
மின்று ளெனநின்றாள் வேட்டு. (௭௯)

முல்லைமுகை கொய்தொருவன் மொய்குழலீ துன்னெழில்கூர்
பல்லை நிகர்க்குமீ பாரெனலு—மொல்லையது
நோராதென் றோசாம னொரு மெனல்குறித்தே
சோரா விருந்தா டிடித்து. (௮௰)

வாழ்த்துறுமோர் மின்றன் வரனையிந்தப் பூங்கொம்பைத்
தாழ்த்தென்னத் தன்னமவன் றாழ்த்தமையாற்—காழ்த்தனித்தாள்
பற்றிமரத் தேறவந்தப் பாதவந்தூ ராதிமல
ருற்றிடலு முற்றா ளுவப்பு. (௮௧)

இன்னவணங் காவிலன்று சேய்ந்தாடிப் பாடிபுக
வன்னவண மாட வவாவியரி—வன்னவண
வாழியாம் வான்பொழில்போ யார்தந்தான் றேர்தனின்மா
வேழியாத் திட்டோ னினிது. (௮௨)

மாவரைசேர் திண்புயத்து மைந்தரையு மாதரையு
மேவரிய வின்பம் விளைவிப்பான்—றூவவருண்
முன்னவே செய்வலென்று வான்கலைமெய் போர்த்தொருதூ
தென்னவே தோன்றினன் விண் ணிந்து. (௮௩)

வேற்கண் மடந்தையரும் வேளனைய காளையரு
மார்க்க நறவ மருந்தலுற்றார்—பாற்கடலிற்
றுன்னரிய வின்னமிர்தந் துய்க்குமிடை யெய்க்குமின்னூர்
மன்னமரா ரென்ன மகிழ்ந்து. (௮௪)

செங்கனக வெள்ளத்திற் றேறனுக ரோர்மகளே
வங்கணிலா விம்ப மதிற்றோற்றத்—திங்களுமே
யென்றே டருந்துகின்றா னஃதென்கொ லென்றவடன்
மன்றோடு சொல்வாண் மகிழ்ந்து. (௮௫)

கண்ணுகரோர் நங்கையெழிற் கச்சுநெகிழ் தந்துவெளி
வண்ணமுலை தோன்றவான் மாதுகைப்பொற்—கிண்ணமதை
வாங்குபுமா மங்கைநிறம் வைத்திதனை யொத்ததுநின்
வீங்குதன மென்பான் வியந்து. (௮௬)

மாதொருத்தி யுண்கண் மயக்கினின்முன் னூடுவான்
கோதில் பெயர்நவின்று கூப்பிடலுங்—காதலுட
னன்னான் வரவே யணைந்திணைப்பொற் றோடழீஇ
மன்னா விருந்தாண் மகிழ்வு. (அஎ)

இன்னபரி செய்த வெழில்கொள் பரிசனங்கள்
முன்னுமுசு குந்தன் முதலரையர்—தன்னிகரில்
கொன்னெடுவேற் றானை குமரவேள் வீற்றிருக்கும்
பொன்னெடுவெற் பேறினார் போய். (அஅ)

வெற்பிற் புனைவோன் விதித்த திருநகரின்
பொற்பின் வளங்கண்டு பூபால—ரற்பின்
மகவான் கழல்பணிய மன்னருளி னோக்கித்
தகவான் மொழிந்தான் றணித்து. (அகூ)

ஆங்கந்தண் ணிமையோர்க ளெண்டிசையோர் பாதலத்தோ
ரந்தவர்க ளாரு மசலமெய்தி—யிந்திரனைக்
கண்டார் தொழுதார் களித்தாசி மாமொழிவாய்
விண்டா ரமர்ந்தார் விழைந்து. (கூ0)

வரைவிண்ணீ ராசைசவ மாவுரக நாம
முறைமடவார் சுந்தரிபாங் குற்று—ரமகளிர்
மஞ்சரிமா காதலிதாள் வந்தனைசெய் தந்தெய்வக்
குஞ்சரிமாட் டெய்தினர்நார் கூர்ந்து. (கூக)

தெய்வப் பிடிக்கேணீ செவ்வேண் மனைவியா
யெய்தியுல கிற்கிறைவி யாமெனத் தாழ்ந்—தைதினல
மன்னாட் கியல்பினுற்று மாற்றுமெழில் செய்யமின்னா
ருன்னாத் துணிந்தா ருகந்து. (கூஉ)

காசறையார் கூந்தலிமேல சாறைவி நெய்பூசி
யாசி னறுஞ்சாந் தணிந்துபனி—வாசநீர்
கொண்டாட்டிப் பூந்துகிலாற் கூர்குழலை யொற்றினர்சொற்
கண்டாட்டி மார்கள் களித்து. (கூங)

மஞ்சினமா தேவி மலர்க்குழலின் றன்மைபெறச்
செஞ்சுடரி னின்றுதவுஞ் செய்தெழுந்தே—யஞ்சனமா
சாரா ரளகஞ்செல் காட்சிபோற் காரகிலின்
சீரார் புகையுய்த்தார் தேர்ந்து. (கூச)

மன்பொனுத்தி மஞ்ஞை மகரம் வலம்புரியா
மின்பணியின் கூழையின்கண் மின்னவணிந்—தன்பினறுங்
கோங்குவெட்சிப் பூச்செரீஇக் கோதைதொடை சூட்டியெழி
றோங்கு [illegible]ன்முடித்தார் சார்ந்து. (கூரு)

கூறுப்போர் மதிதோய் கடுவொருங்கு சேர்ந்து
மூறுப்போ னவெமர்தன் மானு—முறுப்போர்
கணித்திலக மாதின் கவினுதலிற் சாந்து
மணித்திலக மிட்டொளிரு மாண்பு. (௯௬)

மங்குன் மறைந்து மதிகவர்வான் வாளரவு
துங்க மணிப்படந்தான் றூக்கியே—யங்குமுற
வெட்டியணி நோக்க லிமையநல்லார் மின்னுதலிற்
சுட்டியணி தோற்றந் துதைந்து. (௯௭)

செந்துவர்க்கா யொண்குலையுந் தேமலர்ப்பூம் பாளையும்பைங்
கந்தியொன்று பூத்துக் கவின்மதிமேல்—வந்தமர்த
னோர வெழின்முகத்தா ணோர்களத்தி லார்பவள
வார வடம்புனைந்தா ராங்கு. (௯௮)

இடையிலையோ வுண்டோ வெனவையங் கொள்ள
வுடைபுனைந்தீர் வெற்பூ றுறுமே—தடையின்
மணியொட்டி யாண மருங்கணிந்தா ரல்குற்
பணியொட்டிச் சூழ்ந்தமைபோற் பாங்கு. (௯௯)

இந்தனமா வானனத்தாட் கேரணிகள் பூட்டிவிரைச்
சந்தனமாக் கொங்கை தனிற்றிமிர்ந்து—சுந்தரமுத
தார மிலேந்ததன்மே லாடைபுனைந் தார்மலர்த்தார்
போர மிலேந்தார் புரிந்து. (௧௦௦)

ஆடகமு மாமணியு மாந்தவத்தார் கிண்கிணியும்
பாடகமும் செய்ய பரிபுரமுஞ்—சூடகக்கைச்
சீதத் தணிந்தார் திருமுகத்தார் தெய்வவும்பல்
பாதத் தணிந்தார் பரிந்து. (௧௦௧)

சார்ந்தயனை நோக்கிமால் சாலமுற்றிற் றும்பரொலாஞ்
சேர்ந்தனர்வேற் சேய்க்குமணஞ் செய்காலை—தேர்ந்திடெனத்
தெவ்வெல்லை வேட்குச் சிறந்ததிம்மு கூர்த்தமே
யிவ்வெல்லை யென்று னினிது. (௧௦௨)

இப்பகலே யேற்றதென்று விப்போதே யான்பெற்ற
வொப்பி லணங்கை யுகந்தளிப்பான்—செப்பருஞ்சீர்ச்
சேந்தன் றனைக்கொணரச் செல்வதே நன்றென்ன
வேந்தன் புகன்றான் விழைந்து. (௧௦௩)

மாலயனு நன்றென்று மன்னோ டெழுந்தெவருஞ்
சாலமுனஞ் செல்லத் தனியடைந்து—வேலவன்பொற்
செய்யபதந் தாழ்ந்து திருவை மணம்புரிய
வையவா வேண்டுமென்றா ராங்கு. (௧௦௪)

இவ்வா சகம்வினவி யீரா று தோளுடையா
னவ்வீரே யாகென் றருள்புரிந்து—வெவ்வாட
லேற்றணையி னின்றெழுந்தே யேர்மயின்மே லேறியும்பர்
போற்றவொள்வல் போர்தான் புரிந்து. (கoரு)

குடைகவரி யாலவட்டங் கொற்றவொற்றைக் கூர்வாட்
படையெடுத்தா ரிந்தினன்கால் பாய்நீ—ருடைமண
மழியன்வே தாவூர்தி யஞ்சப் பதாகையாங்
கோழிமிக வார்த்ததுவே கூர்ந்து. (கoசு)

வேதர் நனியார்த்தார் விண்ணோர் மிகவார்த்தார்
பூத ருறவார்த்தார் பொங்கரிபோ—லோதமுறத்
திண்டி முரசு திமிலைமுதற் பல்லியங்கைக்
கொண்டியம்பி னார்கணவர் கூர்ந்து (கoஎ)

மேனகையே யாதி விளம்பிநான் மங்கையரு
மானவிசை பாடிநட மாடினார்—மாநயங்கொள்
வீணை கரம்பற்றி விஞ்சையரான் னாக்கிசையப்
பாணையுறப் பாடினார் பார்த்து. (கoஅ)

திண்வீரர் பூதரொடு தேவருமற் றேவருமே
யெண்வீ தியினெருக்க மேய்ந்துவர—மண்வீற
மன்ன னுஞற்று மணத்திநெடுஞ் சாலையின்மு
னுன்னரும்வே லூற்றா னுகந்து. (கoகூ)

மேயகுகன் மேற்கும்ப மேற்றருப்பை தோய்த்தநீர்
தூயறவோ ராசி சொலித்தெளித்தா—ராயவட்ட
மங்கலங்க ளேந்தியும்பர் மங்கையர்கள் போற்றினா
ரெங்க ளிறைவற் கெதிர் (ககo)

பஞ்சிநறு நெய்பளிதம் பன்னாவி மன்சுடர்மின்
விஞ்சமணித தட்டேந்தி மேவநல்லார்—மஞ்சுமறை
ஞாயிறொளி விட்டுறல்போ னன்றுமயி னின்றிழிந்து
கோயிலின்முன் போயினனெங் கோன் (ககக)

ஆயபோ தாயமோ டைராணி போய்த்தொழுது
நேயநறும் பால்கொண்டு செங்கதிர்வேற்—சேயடியிற்
றென்முறையி னாட்டிமலர் தூய்ச்செய் வணசெய்து
தன்மந் திரஞ்சென்றா டான் (ககஉ)

அன்னாள் பணிவுக் கனக னருள்புரிந்து
பொன்னார் மணச்சாலை புக்கயன்மான்—முன்னோர்
பாங்குறவே போந்துமண்ட பத்துமணிப் பீடத்தே
யோங்குறவே வீற்றிருந்தா னுற்று. (ககங)

சீதான்முற் றேவர்கள் சேயே வலின்வைகக்
கோதி லிறைமைமுசு குந்தனே—யாதியன்னர்
வந்துவந்து தாழ்ந்து வழுத்த வவர்க்கெல்லாங்
கந்தனருள் செய்தான் களித்து. (௧௧௪)

ஆனபோ தங்கணத்தோ டம்மையப்ப னந்தீரத்தின்
மானமேற் றேன்ற மகிழ்கொண்டு—ஞானவேள்
விம்மிதமுற் றேயெழுந்தான் விண்டுமுதற் றேவரொல்லை
யிம்மென் றெழுந்தா ரினிது. (௧௧௫)

நித்தனுயர் மானத்தி னின்றிழிந்து தானையுடன்
சுத்தமணிச் சாலைபுக்கான் றோகையொடு—மத்த
னெதிர்கொண் டிருவ ரிணைத்தா ளிறைஞ்சி
முதிரன்பி னின்றான் முனம் (௧௧௬)

கந்தன் றனையனையார் கையினெடுத் துச்சிமோந்
தந்தமுறப் புல்லினா ரார்வமொடு—நந்தரிமன்
வேதன் மகவான் விபுதரெலா மீன்றவர்பொற்
பாதம் பணிந்தார் பரிந்து. (௧௧௭)

அன்னர் துதித்தா ரடியேமுய் தந்தனமென்
றுன்னருமா தேவை யுமையுடனே—பொன்னிற்
புனைபுதுமன் றன்மனையிற் பொற்பிற் கொடுசீர்
வனைகழல்வேள் சார்ந்தான் மகிழ்ந்து. (௧௧௮)

சார்ந்தபோ தானைமுறை தன்னுல்விண் ணின்றுவந்தே
யார்ந்த மணித்தவிசொன் றண்ணவதிற்—கூர்ந்தகற்பிற்
றன்னமர்வா ளோடமர்ந்து சம்பு மகற்றழீஇ
நன்னரருள் செய்தார் நயந்து. (௧௧௯)

மூன்னயன்றாழ்ந் தோர்குகனை முன்னவுணர் மாயவுய்த்தா
யன்ன பரிசே யவர்த்தடிந்து—நென்னலும்பர்
மல்கு சிறைவிடுத்தான் மன்மகிழ்ந்து தன்மகளை
நல்கவவர்க் கெண்ணினா னன்கு. (௧௨௦)

பொற்றொடியு நீயும் புரிந்திங்கண வந்தமையாற்
சிற்றடியேஞ் செய்கை சிறந்ததென—வுற்றனக
ணேவனமா தோடு மிதுகாண்பான் யாம்வந்தோ
மாவனசெய் கென்றா னதற்கு. (௧௨௧)

அத்தனிவை கூற வகமகிழ்ந்து மாலயனுஞ்
சித்தமக வாற்பாராச் செய்மணப்ப—வுத்தமநின்
கோதைதனை யன்பிற் கொணர்தியெனப் போயருள்கூர்
மாதைவரு கென்றழைத்தான் மன்.  (௧௨௨)

மகவான் விளிப்ப மகிழ்வொடுபைப் பையத்
தகவா னடிபெயர்த்துச் சார்தந்—துகவான்மின்
பொன்குன் டிகையாண்முற் பூவைமா ரேத்தெடுப்ப
முன்குஞ்சரி வந்தாண் முன். (௧௨௩)

அன்னநடை யாளையரி யாற்றுமணச் சாலையுய்ப்ப
மன்னமரர் மாமுனிவர் வாழியென்றே—பொன்னடியாம்
போதுகந்து போற்றவுமை புங்கவற்கு பூவானை
மாதுகண்டு வெள்கினாண் மற்று. (௧௨௪)

நுண்ணிடையா டாழவர னைக்கியருள் செய்திடலு
மண்ணல் புறநீவி யத்தனையும்—பெண்ணரசி
மைத்தா ரணங்கையும்பொன் னாதனத்தின் மீதிருத்தி
வைத்தாள் வரைபயந்த மாது. (௧௨௫)

மன்னிருவர் விம்பமே மான வரன்வதுவ
மன்னுமணிப் பீடிகைமேல் வீற்றிருப்பத்—துன்னிமையோ
ரேகருகதாழ்ந் தேத்தநின் றன்றே ரருள்புரிந்தார்
மேவருமின் பெய்தினான் வேந்து. (௧௨௬)

வேந்துரையாற் றேவி விரைமஞ் சனமாடி
யேந்திவந்தே யாகருகுவைப்ப வோர்மகவான்—சேந்தன்மு
னுற்ற ரணகுதுபுன லுய்ப்பமுறை யேயனக
னற்றாள் விளக்கினன் னன்கு. (௧௨௭)

பல்கு விதிமுறையின் மன்பூ சனைமுற்றி
வெல்குமா ரனார்கரத்தின் மேவணைவகை—நல்கி
யடியணிவ னேர்ந்தனனென் றார்வமொடு கன்னற்
கடியறனீ ருய்த்தான் களித்து. (௧௨௮)

அங்கலரோ னாற்றியுளத் தங்கைதர வாண்டகைகொண்
மங்கலநா ணார்த்து மணிக்களத்தி—னங்கைமுடிக்
கார மணிந்தா னருங்கனிதேன் பால்குகனைக்
கூறநகர் வித்தனன்விண் கோ. (௧௨௯)

ஆர்த்தனபற் பல்லியங்க ளாரக் கணநாதர்
தீர்த்தன் றனைத்துதித்தார் செங்கமலன்—கார்த்தநிற
வண்டுளவோன். வேந்திமையோர் மன்னிருவர் தங்கோலங்
கண்டு சிறந்தவென் றார் கண். (௧௩0)

ஆயபோ தம்புயத்தோ னார்கனறந் தொண்கலப்பை
மேயமண வேள்விமுற்று வித்தனன்பி—னேய
வலைவிலா வொண்ணுதலோ டோங்கனல்சூழ் வுற்றுச்
சிலையிலன்ன டாடந்தான் றேர்ந்து. (௧௩௧)

மாலினிமா காளிமா வாணிபா விச்சூழச்
சாலினியு மங்கலையுந் தான்கண்டான்—வாலிதினன்
மன்ற லியற்றியபின் மாதொடுவே ளம்மையப்ப
ரன்றலர்பூந் தாள்பணிந்தா னாங்கு. (கருஉ)

பணிமக் களையிருவர் பாங்க ரிருத்தி
யெணியெந் தலைமைதந்தோ மென்ன—மணிவண்ண
னாதி யமரா ருந்தவத்தோ ராரணங்கின்
கோதில் குலந்தாழ்ந்தார் கூர்ந்து. (கருங)

சிந்தனையுங் கன்னியையுங் கண்டு கவினவையார்
வந்தனைமுன் செயதிட லு மன்னருள்செய்—தந்தமிலா
னரி யொடுமறைந்தா னண்ணெவரும் விம்மிதரா
யாரின் றுதிநவின்று ரார்த்து. (கருச)

இருவ ரிருந்த விருந்தவிசி னும்பர்
மருவு குமரன் வனிதை—திருவுருவங்
கண்டார் களித்தார் கமலத்தா ளேத்தினார்
விண்டார் விழும வினை. (கருரு)

சீயவணை நின்றிழிந்து தேவர் தொழுதுவா
வாயதிரு மங்கலமா வார்ப்பொடுபோய்க்—கோயி
லிடைதந் தனையவளோ டேய்தந் தெவர்க்கும்
விடைதந் தருள்புரிந்தான் வேள். (கருசு)

இன்னபரி செய்த வெமையீன் றெடுத்தருள்செ
யன்னையுட னத்த னணியறையு—டின்னிமணி
மின்னுறுபொன் மஞ்சவணை மேன்முயங்கி வைகினான்
மன்னுயிர்க ளுய்ய மகிழ்ந்து. (கருஎ)

மங்கலநாண் பூட்டி வரப்பாகன் கூடமூர்தி
யங்குசங்கைக் கொண்டளவி லார்வமுற்றுத்—துங்கமுற
தெய்வதநல் லெழுஞ் சிறநகைசெய் துட்கொடுநாண்
பெய்வதனங் கோட்டிற்று பின். (கருஅ)

மைந்தனுநன் மாது மணந்தாங் கிருந்தவெல்லை
நந்தமரர் தந்தமனை நண்ணினா—ரிந்திரன்முன்
வந்தமுசு குந்தன்முன் மன்னவர்க்கொள் ளாடைகலன்
றந்துவிடை தந்தான் றக. (கருகூ)

முசுகுந்த னாதி முறையரையர் தத்தம்
வசிநகரம் போதலுமே மாமைச்—சசியினொடு
வன்புற் றிருந்தானை வந்தனைசெய் மன்சிலநா
ளின்புற் றிருந்தா னினிது. (கசO)

தெய்வயானையம்மைதிருமணப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா. கருஅ.

# விண்குடி யேற்றுபடலம்.

---

ஆனசில வைகல்சென் றத்த னணங்கினொடும்
வானுறையு ணீங்கிமக வான்களிப்பத்—தானமா
மீதிவர்ந்து முன்கடைவாய் மேவவய வோர்பூத
ராதியர்தாழ்ந் தார்த்தா ரடுத்து. (க)

அனிகவொலி கேட்டயன்மா லண்டரொல்லை யிற்போந்
தினியகுகன் போந்தனனென் றேத்தி—நனிதொழுதார்
மற்றேந் தலைநோக்கி மன்பரியூர்ந் தேகெனவே
ணற்றேர் கொடுசென்றா னன்கு. (உ)

ஆசுகனூர் தேர்மே லணங்கினொடு குன்றெறிந்தா
ரீசனுடன் சத்தியென வெய்தினான்—மாசுரர்கள்
பூமழைபெய் தார்வீரர் பூதரற வோர்பணிசெய்
தாம நகிற் சூழ்ந்தா ரடுத்து (ங)

ஆண்டா வணங்க வமரர்தஞ் சேகரத்தின்
மூண்டசததாள சூட்டி முருகவேள்—விண்டயன்மு
னெல்லும்பர்க் கண்ணுறீஇ யும்பரியூர்ந் தெம்மொடுநீர்
செல்லுமின்விண் ணென்றான் றிகழ்ந்து. (ச)

கஞ்ச னனைத்திற் கரியமால் புள்ளரசின்
மஞ்சமர்மெய் வானவர்கோன் வாரணத்தில்—விஞ்சமரர்
மற்றநின்றோர் தத்த மருவூர் தியிலிவர்ந்து
சுற்றியுடன் சென்றார் துதித்து. (ரு)

புங்கவர்கள் போற்றவுயர் பூதர் புடைசூழப்
பொங்கியங்க ளார்ப்பப் பொருவயில்வே—லங்குமரன்
சந்திரனூர் குன்றூர் தனிலிருந்து மாதுலனை
யிந்திரனூர் மேவினா னேய்ந்து. (சா)

பொன்னகர்முன் சூர்மகனாற் பொன்றினமை யோடிறைவன்
மன்னகங்கொள் வேட்கையுமே சண்முகன்கண்—டென்னருஞ்சீ
ரெய்திமையோர் தச்சனைப்பார்த் தென்னகரத் தொன்னகர்போற்
செய்தியெனத் தாழ்ந்துசென்றான் றேர்ந்து (எ)

நூறேர் புனைவ னொடிப்பின் மதில்சிகரி
வீறேர் மறுகு வியன்கோவி—லாறேயுஞ்
செய்வரையார் பொய்கையிடஞ் சீர்மண் டபம்பாழி
தெய்வனை யாதிகண்டான் றேர்ந்து. (அ)

இந்திரற்குக் கோயில்செய்க் கேய்கோட்ட மாலயற்கு
மந்திரங்கண் மற்றவர்க்கு வாழிருக்கை—சுந்தரமா
வுன்னூர் நகரி னதிக வனப்புனதா
யுன்னு வுதவினனா லோர்ந்து. (௯)

அன்ன வனப்பனைத்து மார்க்குஞ் சொலவரிதா
மன்னனது காணா மனங்களிப்புற்—றுன்னும்
புனைவன் றனைத்தழீஇப் புல்லினனன் றுன்வேள்
வினைகழற்றா டாழ்ந்தான் மகிழ்ந்து. (௧௦)

வேந்த னிருக்கைசசி மேவவய னாதியும்பர்
தாந்தமதொள் ளூர்தி தணந்துவரக்—காந்தளநகை
மன்மன்ற னநகையொடு மாமணித்தேர் நின்றேரீஇ
மின்மன்ற மேயினன்செவ் வேள். (௧௧)

மன்றத் தரியணையில் வைகிக் குமரவேள்
குன்றத் திறகரிந்த கோமாற்கு—மின்றத்து
பொன்மவுலி யின்னே புனைதி யென்றான் மாலயன்முற்
பன்மலர்த்தார்ப் பண்ணவரைப் பார்த்து. (௧௨)

என்றிளவல் கூற விமையோ ரிமைப்பிலதா
சொன்றுபொருள் யாவுமொருங குயத்தாகல—மன்றனீர்
மன்மகவாற் காட்டி வணங்தேற் றனையேற்றி
நன்மவுலி சூட்டினார் நன்கு. (௧௩)

தனிவான் முடிபுனைந்த தார்வேந்தன் றாளிற்
கனிவாற் பணிந்தார் ககன—மனிவாழ்வா
ராசிசொன்னார் மாமுனிவ ராரம்பை மார்நடித்தார்
பேசினிசை செய்தார் பிறர். (௧௪)

இந்திரனக் காலை யெழிற்குமரன் முன்னேகி
வந்தனைசெய் தேத்திவள மன்றறக்க—முந்துளமா
மன்னரசுஞ் சீரு மகிழ வளித்தியெந்தா
யுன்னிதன்மே லுண்டோவே றென்று. (௧௫)

என்றலுமே யின்னருள்செய் திந்நகர்போற் றென்றரசை
நன்றிங் கிருத்தியென நன்குவைத்து—நின்றுள்ள
துன்றுணையன் பார்சுரரைச் சூழிருக்கைக் கேவியையன்
றன் றுணையோ டேற்றான் றளி. (௧௬)

அறைகணவர் வீர ரணிவாயில் போற்ற
வுறையு ளிருக்கைகண்ணி யும்பர்க்—கிறைமகளோ
டுன்னரும்பல் வேறா டலோகையொடு செய்திருந்தா
னென்னரும்பன் சேந்த னினிது. (௧௭)

அயன்முதலோர் தத்த மகமமர்ந்தார் வேந்தன்
றயிரில் சசியொடின்ப நுய்த்தங்—கியல்புரிந்தா
ஞாறயர்ந்து தன்புற்ற வும்பரின்ப மேர்கெரிற்
சாறயர்ந்து வைகினார் தாம். (கஎ)

விண்குடியேற்றுபடலம் முற்றிற்று
ஆ. திருவெண்பா [illegible]

---

# கந்த வெற்புறுபடலம்.

---

இப்படிசென் றேனைக வேய்களியி னின்றுருக
னொப்பருஞ்சீர்க் கந்தவெற்பி லுற்றுறைவான் —மைப்புரைய
மோதியுடன் செல்லவலமேர்ந்தார்ந்து செழுமலரோ
னாதியர்கள் போந்தா ரருகு. (க)

கந்தவே ளவ்வேலை கார்வண்ணன்முன் னேவருமே
சந்தயிடஞ் செல்லவிடை தந்துவிண்ணோ—டிந்திரனை
யாள நிறுத்தி யணங்கொடுதன் றேரின்மேல்
யாளரிபோற் புக்கான் மகிழ்ந்து. (உ)

மன்மணித்தேர் புக்கவையனை வாகைமொய்ம்பன் பாகாய்ப்பா
பன்மணிமுட் கோல்பணியாற் பற்றியுய்ப்ப—வன்மணிதசோன்ன
மன்வரையில்வீரர் சிறற்பூதர் சுற்றவெள்ளிப்
பொன்னையலையிற் போந்தான் புரிந்து. (ங)

போனதோர் போதையன் பொற்றேரிழிந்துசம்பு
வானவனையாயோ டடிபணிந்து—சோனைமுகில்
பிந்தளியி னேடுவிடை பெற்றெழில்கூர் கந்தவெற்பி
லந்தளியிற் புக்கா னணைந்து. (ச)

புக்கோர் புனிதவேள் பூதகணம் போற்றவெய்யர்
தொக்கோர் பணியினிற்பச் சூழ்ந்தேத்த—மிக்கோர்க
ளோதனத்தி னுன்னடையா ளோடணைந்தே ரோங்குமணி
யாதனத்தில் வீற்றிருந்தா னங்கு (ரு)

தொன்மறையி னுலுந் துதித்தற் கரியசெவ்வேள்
பொன்மலர்த்தாள் வாழ்கவிரு புள்வாழ்க—பன்மனுரம்
போழ்கதிர்வேல் வாழ்கவன்னோன் பொய்யிலடி யார்வாழ்க
வாழ்கவுல கெல்லா மகிழ்ந்து. (சு)

கந்த வெற்புறுபடலம் முற்றிற்று
ஆ. திருவெண்பா கஅஉ.

# இந்திரபுரிப் படலம்.

---

சூர்தனைவெ றய்ய சுடரயில்வேல் வேளருளாற்
சீர்தருவிண் ணாடரசு செய்வேந்த—னோர்பகற்றெம்
மன்னினர் செய்தீமை மற்றேவ லுற்றவெலா
முன்னினு னோர்ந்தோர்ந் துளத்து (க)

மறுத்தான் சசியோடு வைகுமின்ப வாழ்க்கை
வெறுத்தான் வெறுக்கையிறை மேன்மை—செறுத்தான்வேந்
தாற்றுதவத் தான்வீ டடைவனென்று னோர்ந்துணர்ந்து
மாற்றுதவத் தானினைந்தான் மன். (௨)

உன்னியவேந் தும்பர்வேந் தோருழைவந் துற்றுவைகித
துன்னியசீர் சூழ்குலிசத் தோன்றலே—யின்னனகே
ளென்றிழிபொய் வாய்மைநன்மை மெய்யிதனென் றூர் வான்பதந்த
னின்றிடவோர் சூழ்ச்சிசொல்வா னோர்ந்து. (௩)

அன்பி லவுணர்க் கரசனு லாயபெருந்
துன்பமதை யுன்னித் துயரடைந்தே—முன்புலவனெந்
தன்றுநோற் றெய்தின் பரசும் வெறுத்தனைநீ
யின்றுநோற் றெய்துவதி யாது. (௪)

அகத்திற் றுயருழந்தா ரல்லமரா வாசக
மிகத்திற் பெருவாழ்க்கை யெய்வார்—சுகதினகண்
மன்னவனே வாழிகேண் மன்னுயிர்க்கெ லாயபற்றை
மின்னளவன் றென்று நினை. (௫)

மூவரினன் மாதவரின் முன்பா தலாசரற்
றேவரின்மற் றேவர்தாந் தேன்மொழிதோண்—மேவு
கரும்போ கமுகோவென் காரிகையார் கொங்கை
யிரும்போகம் விட்டிருந்தோ ரிங்கு. (௬)

போயதுயர்க் கஞ்சிப் புகுந்த திருத்துறந்தே
மேயதவ மாற்றின் மிகத்துன்பே—காயமொந்து
மோகமன்றி யோகுசெய்வோர் முன்னிப் பெறுவதூஉம்
போகமன்றி யுண்டோ புதிது (௭)

டன்னு புலனொடுங்கும் வாய்ந்த கரணமில்லை
துன்னுசெயல் சொன்மெய் தொலையுமாண்—டுன்னரும்பே
ரின்பமுண் டென்பரதை யாரறிந்தார் கண்டதுமெ
யென்ப ருலகுளோ ரீண்டு. (௮)

பொய்யார்ந்த கானலதைப் பூம்புனலென் றேவிழைந்து
கையர் ரயிர்தைக் கமருகுத்தா—கையா
சிலருளதென் னின்பந் திளைப்பவுன்னி யிம்மை
நலனிழந்தி நின்னெண்ண நன்று. (௯)

மின்னனையார் நல்லின்ப மேயின்ப மன்னனொடு
மன்னுறவாழ் வாழ்க்கையே வாழ்க்கையா—மன்னவரை
மேவுசெல்வ மேசெல்வ மேவித் தனம்பெறு
மாவறுமை யேவறுமை மற்று. (௧௦)

நறியகுழன் மாதர் நலமார் புணர்ப்பைச்
சிறியவின்ப மென்பர் சிறப்பை—யறிவரோ
வன்னதுவே பேரின்ப மாமிறைவ கேட்டியேன்
மன்னவது சொல்வனென்றான் மன். (௧௧)

தூரவனிவை கூறக் குரிசி லனையா
வுரவுளந்தீ முன்னிழுதை யொத்தே—விரகமுற்று
மாதர் சிறப்புமின்பு மற்றெற் கிதுகாறு
மோதிலையென் கொல்லென்றா னோர்ந்து. (௧௨)

வேந்தனுரை கேளா வியாழனெனப் பேர்வாய்ந்தோ
னந்தன் மயங்கினா னென்னவெழிற்—காந்தையர்சீர்
மனமதனூல் கூறுமது வாஞ்சையில்லார்க் கோதுகிலார்
நன்மனகே ளென்றுசொல்வா னன்கு. (௧௩)

ஈறில் லனவென் றியம்பின ரோர்பத்தே
நூறுடனே ரெட்டென்னு நாலுமே கூறினர்
வேறு மிசைத்தார் விளங்கு சமயந்தா
னாறெனவே யோதினா ராய்ந்து. (௧௪)

நுதலவற்று ளிம்மையிலே நொய்தினின்ப முத்தி
யுதவுவது காம ருலோகா—யதமதமா
மந்நெறிநின் றேவீ டடைந்துமைந்த ரின்புறுவார்
மன்னதையீ வோர்மடவார் வாய்ந்து. (௧௫)

அந்தமட வாரியலு மன்னவரைச் சேர்திறனுஞ்
சிந்தையுற மேவுந் திறலுடைய—மைந்தர்தஞ்
செய்கையுமற் றுள்ளனவுஞ் சிததசவே ளாகமத்தின்
மெய்மையதாய்ச் சொல்லும் விதந்து. (௧௬)

சாதி யியற்கை தனித்தத் துவமாந்த
ரோதுகுணந் தேச முறுமவத்தை—போது
கருத்திவை யாதியசீர்க் காமருவேள் வேத
மருத்தியுறக் கூறு மமன்று. (௧௭)

பன்மா னினிவடலை வாய்பே ரிசையினிசூர்
நனமாமை யத்தினியெ ஞரியர்க்கா—மூன்மா
வசைவறுதொன் மாமரபே யாடவர்கள் பார்க்குஞ்
சசனிட பன்னசுவன் றாம். (௧௮)

பூன்ன நவின்றிடுமோ மும்மை மரபுக்குட்
சன்னியரோ டாடவர்தங் கள்குறிக்கு—முன்னரிய
மாற்பமோ வாழநெடு மைபின் னனவென்ன
வேற்ப தியற்கையே யீங்கு. (௧௯)

அண்ட ரருந்சவச்சோ ரநாகர் கந்தருவர்
திண்டிறல்கொள் பூதா திணியரக்கர்—மண்டியக்கர்
சத்துவமி லாவலகை தந்திறனோ யாவதுதான்
றசத்துவமே யாகுந் தக (௨௰)

சத்துவமா யாற்றினின்ற தையலரை வந்துபிதநெதன்
னுத்தமமா முக்குணங்க ளற்றனர்மற்—றத்தகைய
வுண்மை யுடைத்திடவே யுண்குணன்று ஞருமால்
வண்மையுடை வேந்தே மதி. (௨௧)

உருவும் வண்ணமு முயர்ந்த செயற்கையு
மரிவையர்த நாளு மனைத்துந்—தெரியவே
யுண்மா வுளநாடி யோர்வார் மரபுமுத
லெண்மாக் குணத்திறு மே. (௨௨)

நின்னருமாத் தேசந் தொறுமீண் டியமடவா
ருன்னருமா சீர் யுளஞ்செயற்கை—யென்னவரும
பேசிடவெவ் வேறாகும் பெற்றியதாய் நிற்பதுவே
தேசவியற்கை யெனத் தேர்.

வாலை தருணியொடு மன்பிரவு டைவிருத்தை
யேலும் வியன்பருவத் தேயுரைத்த—காலமொடு
பேசுளதின் வேட்கை பிரித்தறியப் பெற்றதுவே
யாசி லவத்தையே யாம். (௨௪)

முக்குணத்தர் முப்பாலர் மொய்நால்வ ரெண்மராந்
தக்க மடவார்க டாம்பற்று—மிக்குறலே
யேதமிலா வாடவர்க ளெய்துதற்கே யேற்றபல
போதுதெரி நிற்பதுவே போது. (௨௫)

மக்களுறு காமம் வடிவினிலே வைகலுந்தான்
பக்கந் தொறுமிழிந்து பண்பினொடு—மிக்கவுயர்
பான்மையாற் புக்கவிடம் பார்த்திழைப்ப தாமதே
மேன்மையுள வேந்தே விதி. (௨௬)

பற்றனை யஃதிலரைப் பண்புற் றனரில்லா
மற்றனரை வாஞ்சையுறு மார்தர்க—டெற்றெனவே
தேற்றுமா றுற்றநற் செய்கையுளங் கொள்கருத்த
தேற்றமிகு மேந்தலே யெண். (௨௭)

இங்கிவைநன் மைத்ரியல்புமெழில் கூர்ந்துறுமா
மங்கையர்தம் மாண்பும் வகுத்ததே—யங்கவையார்
பொங்கிதமாச் சேரும் புணர்ச்சிதனக் கேற்பதோ
ரங்கிதமேல் கூறநின்ற வாய்ந்து. (௨௮)

புல்லல் சுவைத்தல் புணர்மா நகக்குறிகள்
பல்லுறுதன் மத்தனம்பன் ருடனந்தா—னெல்லு
மொலிகரண மோடு முவப்பா றியவே
புலவியைந்த வெண்ப புரிந்து. (௨௯)

விரைதல் சமந்துக்கென் வேகமுச்ச நீசம்
புரையில் சமமென் பொருண்மை—விரவப்
பாவைவகை யீரைம் பகுதிபிற வாற்சேர்
தருபுணர்ப்பா மொன்றுவரி சார்ந்து. (௩௦)

உறுத்த னெருக்கலு ரோசலுறு தன்முன்
விறற்றருசூழ் வல்லிமா மேற்கோண்—மறுத்திர்
செறித்த திலவரிபா றீம்புனலார் காட்சிப்
புறத்தொருறுப் பொற்றல் புணர்ப்பு. (௩௧)

வைத்தறுடிப் பொற்றுமா பொப்பு விலங்குசுற்றே
யுத்தரம துக்கன்மு ஞேதவற்றூற்—பத்துடனே
யொன்றுமற்றப் பற்பல் லுறுப்புணர்ந்து முத்திறத்த
துன்றமிர்துண் டல்சொல் சுவைப்பு. (௩௨)

சுரிதகமென் ஞட்டிங்க மேண் டலமே
யுருமின் மயின்முயலி னெண்கால்—விரைநெய்தற்
காரிதழ்வேங் கைநகவி ரேகைமெய்யே ழங்கமுற்றுங்
கூருகிர்தீட் டல்லக் குறி. (௩௩)

துவர்தருமா மாலை சுனகமா சேனக்
கவாடிகான் கண்டப் பிரத—மிவையல்ல
மற்றவும்போ வின்னமுதுண் வைப்பி லெயிறழுத்த
லற்றமிலாப் பற்குறிய தாம். (௩௪)

உரமுதலோ ரைந்திலேம்பா லோர்தொழிலா லேற்ப
வரும்புணர்ச்சி வேலைபுடைப் பஃதா—முரிய
கரிகாமுன் னுய கனங்குழைபார் வேட்கை
தரவிற்ற லேமத் தனம். (௩௫)

மயிலனஞ்செம் போத்தனிசே வல்புறவு காடை
குயிலெனுமோ ரெட்டின் குரலைப்—பயின்றமைந்தர்
கூறுமின்னார் பாங்கெய்திக் கூடும்போ தின்னசெயு
மாறுதிகழ் சீற்கார மாம். (௩௬)

பாரியல்கி ராமியம் பௌத்திகங்கூர் மல்லளிதஞ்
சாரிதமண கேமம்பீ தஞ்சுல—பாரிசங்கூர்ப்
பன்னஞ் சமூர்த்தம் பரிவத் தகஞ்சமவே
தன்னமத்த பத்மா சனம். (௩௭)

நொன்விக் கிரமமுதற் கோயூ தகமீரு
வுன்வகைநாற் பானெட் டெனதிறத்தான்—மன்பிறவாற்
சீர்மகளி ருண்மகிழச் சிட்டர் புணர்பான்மை
யார்சித் திரக்கரண மாம். (௩௮)

திணைநிலைநல் லார்தந் திறமுஞ்சேர் மாண்பு
முணர்வொளி னுங்குழுவு ளுற்ற—கணிகைப்
பாத்தைகா மக்கொடியார் பாலொழிந்தோர்ச் சேர்தல்
காத்தலி னால் வல்லோர் கடன். (௩௯)

மூன்றுறவே ணூலின் முறையனைத்து மேதொகையிற்
பன்னிவகை சொற்றகலம் பார்த்தறைந்து—பொன்ன
னிருப்பமக வானவற்றை யெண்ணிமட வார்ச்சேர்
விருப்பமக முற்றான் மிக. (௪0)

கொற்ற வலாரி குரவற் றொழுதெந்தாய்
சொற்றதன்மை யெல்லாந் துணிவெனக்கொண்—டுற்றன
மற்றொன்று மெவ்ஃகேன் வரம்பிலா வின்புதனைப்
பெற்றனன்போன் றேனென்றான் பேர்ந்து. (௪௧)

பொன்னனூல் போதித்துப் போதமகிழ்ந் தேகுதலு
மன்ன னரசை மகற்களித்து—மின்னனைய
சுந்தரியைக் கூடியே சொல்லருமா போகமுற்று
நந்தரிபோல் வைகினு னன்கு. (௪௨)

திரண்டவரால் சேல்களிறு சேதாம்பல் கஞ்ச
மரண்டங்கு பாசிவளை யார—விரண்டு
கரகமுறப் பற்றிக் கடிதடத்தின் மேவி
விரக விடாத்தணித்தான் வேந்து (௪௩)

மகவான் சசிபான் மதனூற் றுணிவி
னுகவாப் பசியி னுழந்து—மிகவாடி
யெய்த்திருந்தா னுணுண்டாங் கெய்தருமாப் போகவின்பந்
துய்த்திருந்தான் பன்னு டொடர்ந்து. (௪௪)

அன்னபொழு தோர்காள்வேந் தாணை தனைப்போற்றிப்
பொன்னகர்செங் கோலோச்சிப் போற்றிவர—றன்னயலிற்
றன்று வமர்முனிவர் சூழமரர் தம்மொடுமுன்
மன்னுசாற் பார்த்துரைப்பான் மற்று. (சஇ)

எந்தைகேள் வேத னிமையோர் முதலெவரும்
வெந்தறுகட் சூரான் மிகவுழள—நொந்தயர்ந்து
சீரணவு மேன்மைபோய்ச் செல்லலுற்றுத் தாழ்வந்த
காரணமென் னென்றான் கனிந்து. (சரு)

தின்றிமையோர் சூழ்முனிவர் தன்னெவருஞ் சூர்தன்று
லொன்றியமா தீமையெலா மோர்பரனை—யன்றி
யகத்தினந்தை கொண்டுதக்க னாற்றுமகம் புக்க
வகத்தின் விளைந்ததென்றா னங்கு. (சஎ)

என்றலுஞ்சேய் கேளா விதுகா ரணமேலப்
புன்றொழிலார் தக்கன் புராரிதனை—யன்றியே
செய்தருமா வேள்வித் திறனனைத்து மொன்றுவிடா
துய்தருவான் சொல்கென்றா னுற்று. (சஅ)

சீயந்தனுரை மாற்றந் தனையுணரா வாற்றல்
வயந்தனையுற் றேவாழி மைந்த—நயந்திதுகே
ளென்று வகந்தையுள மேய்ந்ததக்க னார்தகதை
மன்னுசான் சொல்வான் மகிழ்ந்து. (சகூ)

இந்திரபுரிப்படல முற்றிற்று.

——:0:——

ஐந்தாவது தேவகாண்ட முற்றிற்று.

ஆ திருவெண்பா உருசு.

———

உ

திருச்சிற்றம்பலம்.

ஆறாவது

தக்ஷகாண்டம்.

# உபதேசப்படலம்.

மண்ணுதி யிற்பிறந்து மாழ்கவைப்பை யோபுரிதோ
மெண்ணு ஞெனைக்கதியி லேற்றுவையோ—விண்ணு
ளொருமுருகுமரக் கோட்டத்த வோங்கெயில்சூ ழும்பர்
தொழுகுமரக் கோட்டத்த சொல். (க)

அண்டரிடர் தீர வானுதற்க ணின்றுவந்து
தண்டமுற வத்தியரி சூர்மாக்கொன்—றெண்டகைய
வானோர் சிறைமீட்டு வான்பிடிகான் மான்வேட்டுத்
தானோர் கிரியமர்ந்தான் சார்பு. (உ)

உன்னுலகுண் மேலா யொளிர்சத் தியவுலகின்
மன்னுமொளி வீசு மணிக்கோயி—றன்னில்
வியன்றவத்தோர் விண்ணோர் விழைபுதல்வர் போற்ற
வயன்றவிசில் வீற்றிருந்தா னங்கு. (ங)

இருந்திடுபோ தைய னெவையுமளிப் பானீன்
றிருந்து பதின்மாருஞ் செல்வர்—பொருந்தவரு
டக்கனென்போன் முன்செய் தவநெறியா லீதொன்று
மிக்கயனைக் கேட்பான் விழைந்து. (ச)

தேவர் முதல்வராய்ச் சிற்குணத்த ராயெண்ணு
மூவர் தமினுயர்ந்த மூர்த்தியரா—யோவினுயிர்
தோறுமுயி ரென்னவுறை தூயர் தமைநன்று
தேறவெந்தாய் சொற்றியென்றான் றேர்ந்து. (ரு)

நன்றிதுசொல் வேன்கேட்டி நாரணனு நானுமா
வன்றமர்செய் காலை யழலெனவே—யொன்ற
வெழுந்தும் பரிற்செல் லிறைசிவனே யாருந்
தொழுந்தெய்வ மென்றே துணி (சு)

இருசெயல்செய் நீவிர்தா மேதிலர்போ னிற்ப
வொருசெயல்செ யீச னுமக்கேண்—மருவு
மிறையாய் வருசெயறு னென்ன மயக்கோ
றறையா யெனநவின்று னங்கு. (எ)

தக்க ளுரிஃதுரைப்பத் தந்தைகன்று நன்றென்று
நக்கிறுதி நாளினமை நாகரொடு—தொக்கவே
துன்னுயிர்க டம்மைத் தொலைப்பா னவனென்னின்
முன்னளித்தா னாரகு முன். (௮)

அந்நா ளொருவனா யாய வுயிர்த்தொகையைத்
தொன்னாண் முறையொடுக்கித் தொன்மைபோற்—பின்னாக்குக்
தென்றிசைக்கட் கூற்றுதைத்தோன் செய்கைமுற்று மித்தன்மைத்
தென்றிசைக்கற் பாற்றோ வெடுத்து. (௯)

திருமா றனையென்னைத் திண்டிறலி னல்கி
யிருமா நிலங்காப்பு மீப்பும்—வருமாயா
யும்மா டிருத்துமென் றெம் முன்னுயிர்கின் றாற்றுகின்றா
னெம்மான் முடிவ திலை (௧௦)

வள்ளாரெண் ணெய்யு மெரிமா மணியொளியுங்
கள்ளார் மலர்மாக் கடியும்போல்—விள்ளா
துலக மனைத்துமே யுட்புறம்பாய் மேவு
மிலகு பரஞ்சோதி யேய்ந்து (௧௧)

வேதமுத லாய வியன்கலையெ லாந்தொன்று
ளோதினா னெங்கட் குணர்த்தினா—னீதுநீ
யோதுவற்றிற் காண்யாரு மொன்றெனவே கொண்டனைகொல்
பேதையோ வென்றான் பெரிது. (௧௨)

ஈசனருள் வேத மெவரும் பிரமமென்றே
பேசுவதென் னென்னப் பிரமனன்னா—னேசமுறச்
சொன்ன மறையின் றுணிபுமுக மன்னெவர்க்கு
மன்னவனுக் காதலுண்மை யாம். (௧௩)

ஆதலா லீசனல்லா லார்க்கு முகமனும்
யாதுமொரு வாரிறைஞ்சி னேய்ந்ததுபோய்ச்—சீத
மதிபுனைந்த வேணியனை மன்னுமே யெல்லா
நதியுங் கடல்செலல்போ னன்கு. (௧௪)

கேளினிய மைந்த கிளர்வேதச் சாகைநவில்
குளுரைமின் பாகன் றொழில்செய்வித்—தாளுபவ
னாறிதழித் தார்மிலைந்த நாயகனே யாதிநடு
வீறு மிலாதா னெனும். (௧௫)

அருவு முருவுமா மத்தனொரு வன்சீர்
தருமுலகு மீன்றுநல்கு தாதை—பொருவிலான்
பெண்ணுடனே யாணலியாம் பெற்றியனுள் வோரெணிய
வெண்ணியவாங் கீவோ னெனும். (௧௬)

விதிமுதலாக் கூறும் வியனுயிர்கட் கெல்லாம்
பதியென் பசுபதியன் ஞர்க்கு—மதிகளு
மன்பரெலாந் தேறவாங் கன்னவர்தாந் துஞ்சவெந்த
வென்பு புனைவா னெனும். (௧௭)

ஊன்புகுமெல் லோரையுந்தன் றொண்குணத்தி னொடொடுக்கி
வான்புகலாய் நின்றமற் றோர்மன் குணத்திற்—றான்புகலி
லீச னியலை யினையதென வேயெடுத்துப்
பேச லரிதெனுமே பேர்ந்து. (௧௮)

அன்றியுங்கே ளம்புயத்தோ னாதியரை நீக்கியா
னென்றுள்ள வோர்முதல்வ னீயுமுத்தி—நன்றெனவே
தேர்ந்தமீ துரைக்குமென்னிற் றேவரா வார்யாவ
ரோர்ந்தறிதி மைந்த வுளத்து. (௧௯)

இன்னமுமுண் டன்னூர்க் கியம்பி யறையவொணா
துன்னி யுரைக்கி னகம்பலவாம்—பன்னிடினு
முற்றூதன் பானீ முனமுணர்ந்து மோக்ஷமே
யுற்றாய்கொ லையா வுளத்து. (௨௰)

மாயன் றனையென்னை மற்றவரைப் போற்றுமறை
தூய வரனைத் துதித்ததுபோ—லேயமறை
யெம்மை யிமயவரை யேனையரைப் பாதிசொலு
மம்ம வுணர்திநீ யாய்ந்து. (௨௧)

நம்மைப் பரமென்பார் நண்ணிரயம் வீழ்வரொப்பென்
றெம்மைப் புகல்வோ ரிடரிலுய்ப்போ—மெம்மையாற்
கன்பரெனத் தாழ்வார்க் கருள்புரிவோ மல்லாரை
வன்பரெனக் கொள்வம்யா மற்று. (௨௨)

பதியான்பா சத்திற் படுபசுநா மென்றே
விதிமறைகள் கூறுமெய்மை வேண்டி—னிதுவெனவே
யேல நவில்லே னிவர்செய்தாற் பூசித்த
வாலயங்கள் காண்டியாங் காங்கு. (௨௩)

அவனருளான் முத்தியெய்து மஃதன்றி யெய்தா
தவனருளால் யாவுமே யாகுஞ்—சிவனே
னவனலாற் றெய்வமிலை யாதலான் மைந்த
வவனை யடைதியென்றா னங்கு. (௨௪)

உபதேசப்படலம் முற்றிற்று.

# தக்கன்றவஞ்செய்படலம்.

தந்தையுரை கேட்டுணர்மா தக்கனுயர் முத்திபெறச்
சிந்தைசெயான் மான்முதலாந் தேவரினு—முந்துதவஞ்
செய்துபலன் கொள்வமெனாத் தேர்ந்தயற்றாழ்ந் தோர்பரனை
யெய்துவனா னென்றா னினிது. (௧)

பல்கு தவம்புரியப் பாங்கோ ரிடம்பணித்து
நல்குவிடை யென்னவய னன்மனத்தின்—மல்கியெழு
வாவியக மேகெனவம் மானதத்தி னோர்புடைபோய்
மேவு தவம்பயின்றான் வேட்டு. (௨)

காலைநே ரோட்டிக் கனற்றீ யினைமூட்டிப்
பால மருவுபயன் பாற்றிமெய்யி—லேலுமன்பின்
மஞ்சனநீ ராட்டி வரற்கொழுக்கத் தார்சூட்டி
நெஞ்சமதிற் பூசித்தா னேர்ந்து. (௩)

சுத்தமன்ற னுள்ளந் தொடர்வா யொருமையுற
வித்திறத்திற் பூசை யிறைக்கியற்றிச்—சித்தனற்சீர்
நாமம் விதியி னவின்றுபத்து நூறாண்டு
தாமன்பிற் செய்தான் றவம் (௪)

அன்ன முயர்த்தவன்சே யன்னதவஞ் செய்காலை
முன்னமுமை யோடிறைவன் மூரிவிடை—தன்னில்
வரவும் விரைந்தெழீஇ மாமகிழ்வுற் றையற்
பரவுவல்யா னென்றெதிர்ந்தான் பாங்கு (௫)

சென்றரன்றா டாழ்ந்து சிறப்பித்தோ ராயிரமா
மொன்று துதிக ளுகந்துரையா—நின்றிடலு
நின்றன் செயன்மகிழ்ந்தா நீவேண் டுவதின்ன
தென்றறைதி யென்றா னிறை. (௬)

தாலம்வான் மாலயனார் தம்மிலெனை தானைசெல
வேலகினைத் தாழ்வோ ரெனைத்தாழச்—சாலெவரு
மேயசெய்கை செய்யமக்க ளென்றுமல்கத் தாய்மகளா
நீயவளை வேட்கவரு ணோர்ந்து. (௭)

ஈசன் வினவுவர மீந்தே கலுமவன்சீர்
நேசமுறப் போற்றி நிகரிறக்கன்—பேசத்
கருமகிழ்ச்சி யெய்தி யயனையென்னை வன்னான்
கருமமுற்று மோர்ந்தான் கருத்து. (௮)

மழுவாளி வாய்மைசொற்று மைந்த னதனைத்
தழுவாதிவ் வண்ணமுற்றான் சால—வழுவாத
வல்லா லகமுமுற்று ஞர்தான் விதியைவெல்ல
வல்லா ருலகில் வலிந்து. (௯)

செய்வதினி யாதென்னச் சிந்தை தளர்ந்தலரோ
னுய்வகையின் மைந்தனைத்தா னுற்றுவல்லே—மெய்வகையி
னுசிகவின் றங்கணுக வவ்வெய்ய னிவ்வயினோர்
மாசினகர் செய்தியென்றான் வாய்ந்து. (௧௦)

என்னமைந்தன் கூற விசைப்பி லமைப்பனெனு
மன்னம் புயத்தோன் மலர்க்கரத்தாற்—றன்னகர்போ
லொன்றுதக்க மாபுரியென் றோத வமைத்தனன்வான்
றன்றுநக ருட்கத் துதைந்து. (௧௧)

அந்த நகரத் தரியதவத் தக்கன்சென்
றுந்துவள நோக்கி யுவகையுற்றுத்—தந்தைபா
லன்புசெய்து கோயில்புக் காதனத்தில் வீற்றிருந்தா
னின்ப முறவே யினிது. (௧௨)

அரியணைமன் மேவுதக்க னத்தன்பாற் பெற்ற
வரமுணர்ந்து போய்க்குருமன் வானோர்க்—குரைதரனு
மன்னோர் துணுக்கமெய்தி யாரனுரின் மூழ்கியே
துன்னு வடைந்தார் தொடர்ந்து. (௧௩)

வானவர்கள் போந்ததன்மை மன்புகரோன் றேர்ந்துபோ
யான தயித்தியர்கோ வையணுகிப்—போனதுவே
யுன்னவல மஞ்சறக்க னும்பர்க்கு மேலானு
னன்னவனைச் சார்தியென்று னங்கு. (௧௪)

சேருதியென் மாற்றஞ் செவிப்புலத்திற் சேர்தலுமே
யாரமிர்துண் டான்போ லகமுவந்—தேருவிசேனோர்
சார்வைகு மன்னுன் றபனனிந்து கோனேனோ
ரேர்திமிசை வான்சென் றுற்று. (௧௫)

புங்கவர்கண் மாதிரத்தோர் போற்றவய னுதியர்க
டங்கடொழில் செய்தேத்தத் தக்கனென்போன்—றிங்கள்
பொருந்துகுடை செங்கோல் புவனமுற்றுஞ் செல்ல
விருந்தாச செய்தா னினிது. (௧௬)

தக்கன்றவஞ்செய் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா. ௪0.

# தக்கன் மகப்பெறு படலம்.

---

ஆங்கவன் றன் றேவி யருந்ததிக்கற் பின்மிக்கா
ளோங்குமறை வல்லியென்பே ருத்தமியாம்—பூங்கொடியோ
டெந்துதிறற் றக்கன்சேர்ந் தோரா யிரமாய
மைந்தர் தமையீன்றான் வாய்ந்து. (க)

அம்மகார்க்கு முப்புரிநூ லாய்விதியி னலாற்றி
யம்மறைக ளீந்துமன வாவியுற்றே—யம்மனீ
ரெல்லிருநோற் றெவ்வுயிரு மீவரம்பெற் றீசன்பாற்
செல்லிரிவ ணென்றான் றிகழ்ந்து. (உ)

அன்னார் பணிந்துபோ யார்மான தப்பொய்கை
தன்னு வரனையுன்னித் தொன்முறையே—பன்னு
டவஞ்செய்வார் முன்னா தன்னணிசீர் நோற்ப
தெவனென்று கேட்டா னினிது (ந)

முனிவகே ணல்கிடுவான் முக்கணன்பொற் றாளை
யுனியெந்தை யாணையா லோங்கு—மினியதவ
மாற்றுதும்யா மென்ன வதிசயித்துக் கைபுடையாச்
சாற்றுவான் பின்னுந் தவன் (ச)

ஈசன் றனைவழிபட் டேத்தித் தவமாற்றிப்
பாச மகற்றீர் படைப்பினுக்கே—யாசையுற்றீ
ரேற்றமுறு வீட்டி னியலுரைப்பங் கேட்டிரா
ரேற்றமிறப் பாக்குந் துயர். (ரு)

ஆக்கு தொழில்செ யயன்றலையி லோர்தலையை
நீக்கு தகைமை நினைக்கிலிரோ—வாக்குவதாற்
பெற்றிடுபே றென்கொல் பெருமையன்றி மாதவத்தி
ருற்றிடுபே றில்லைமற் றென்று. (சு)

எத்துணைய வின்பு மெணிவேட் டொர்க்கெல்லா
மத்துணைய துன்புவந் தாங்கடையு—மெய்த்தவர்கா
ளல்லற் கடல்சார்தி ரன்றி யரனைமறந்
தொல்லுணர்வுந் தீர்வீ ருலைந்து. (எ)

நற்றவஞ்செய் துன்னுகதி நண்ணிரு ரெண்ணிலார்
கற்றமழு வாளிதன்சீர்த் தொண்டரலான்—மற்றில்லை
யாதலினல் லாறெய்தி யண்ணருமா வீடெய்திர்
தாதைபணி தீர்திரென்றான் றான். (அ)

தந்தைசொலிற் றக்கதெனத் தாழ்தலுமே நாதன்றன்
மைந்தர் தமைத்தழீஇ மாநிலையு—மந்திரமுஞ்
செய்கையுமற் றவனவுஞ் செப்பிமுத்தி சேறிரெனு
வுய்கையுறு வான்சென்றா னுற்று. (கூ)

அன்னர் தவஞ்செய் தருங்கதிப்பே றெய்தினா
ரின்னமைந்தர் பெற்றிதெரிந் தில்லனெனு—முன்னமதி
லோரா வனைத்துமறிந் தன்னுதக்கன் பின்னுமகா
ரோரா யிரர்த்தந்தா னுற்று. (க0)

பெற்ற மகார்த்தழீஇப் பீடார் மறைபயிற்றி
நெற்றிவிழி யானை நினைந்தநீர்—நற்றவஞ்செய்
திங்கணைநீ ரென்னவே யேர்மா நதமெய்தி
யாங்கணைந்து நோற்றா ரவர்.  (கக)

அங்கனவர் நோற்ப வஃதுணர்ந்தி யாழ்முனிவந்
திங்கனீர் நோற்பதென்னை யெண்ணியென—வெங்கடந்தை
தக்கனிவ ணேவினன் சாருயிரெ லாம்படைப்பான்
மிக்கதவ மாற்றவென்றார் வேட்டு. (கஉ)

அன்னதுகேட் டேழிசையோ னார்தவஞ்செய் வீர்வான்றா
னுன்னிநற்பே றெய்தா துஞற்றுதொழில்—முன்னியது
தெள்ளறன்மன் வாவிபுக்குத் தேகசுத்தி செய்யொருத்த
னள்ளறன்மெய் பூசியதே யாம். (கங)

போக்கும் வரவும் பொருமலொடு நன்குமிலா
மாக்கதியை முன்னுகிலீர் மாய்வுசன்ம—நீக்கரிதா
லுங்கட் கருடக்க னேங்குவளம் பெற்றுமா
னங்கழலில் வைத்திலா னன்பு. (கச)

ஆங்கவன்றன் மையனுற்றோ னதலா லன்னவனீ
ணீங்களுமன் னோரயா நேயகுரு—தீங்கனைத்துஞ்
சேதிப்பான் றீக்கைவகை செய்துகதி சேருநெறி
போதிப்பா னல்லனோ போந்து. (கரு)

மூன்று யிரவருமே முன்பரிப்பொய் கைக்கணையன்
றன்னார் பணியின் றருதொழிலை—முன்னுநேர்
வந்தவர்க ளேற்றார் மயலறவே தேற்றியுய
ரந்தமிலா வீடருளி னும். (கசா)

என்னலும்யாழ் வல்லோ னிணைத்தாள் பணிந்துய்வா
னன்னெறியிஃ தென்ன நவிறியென—மன்னரன்றா
னன்பின் வழிபடுவா ரார்பாத நான்கனையார்
நன்பயனுஞ் சார்பதமு நான்கு. (கஎ)

அன்னதனு ளோதியா ரார்வ துயர்கதியே
யுன்னு மிருவினையி னுப்புற்றோர்—மன்னியதி
லின்னலசன் றென்று மியம்பற் கரியதோர்
நன்னலத்தோ டின்புறுவர் நன்கு. (கஅ)

ஆதலினீ ரந்நெறியோ கார்ந்துகதி யெய்திடனுச்
சோதிநா லோதித் துறக்கமுற்று—ஞேதிசையோ
னன்ன சிறுவரோ ராயிரருஞ் சிந்தையொன்றி
யுன்னு தவத்துநின்றா ருற்று. (க௯)

மன்னுதவ மாற்றி மயலொழித்தெம் மானருளா
லுன்னுகதி யாயிரரு மொல்லையுற்றார்—துன்னுசிறா
ரெங்கையுற்றா ரின்னும்வந் தெய்திலரென் றென்றுதக்கன்
சங்கையுற்றா னுள்ளந் தனில். (உ0)

போதத் துணர்வாற் புதல்வர் புணர்ப்புணர்ந்து
மாதக்க னாரதன்றன் மாயமெனத்—தீதொங்க
சீற்றமுற்றே யன்னான் றிரிந்துழல வென்றுமென்றோ
ராற்றலுறு சாபமிட்டா னங்கு. (உக)

இனிமைந் தரைநல்கே னென்றிருபான் மூன்று
தனிமடவார் தம்மைநல்கித் தன்மன்—கனியும்
பிருகுமுத லொன்பதின்மர் பெட்புறவே யீந்தான்
றிருகுமனத் தக்கன் றெரிந்து. (உஉ)

துன்சுபுத்தி புத்தி சுரசை திருதிதுட்டை
தென்கிரியை கீர்த்தி சிரத்தைலச்சை—பன்மேதா
மன்கத்தி சாந்தை வபுவைதன்மன் வேட்டுமூ
வொன்பதுமகார்த்தந்தா னுற்று. (உங)

பிருகுகி யாதிதனைப் பெட்புறவே புல்லித்
தருகவின்லி தாதாத்தா தாவென்—றிருமகரைக்
காதலுட னீன்று கமலையையு முன்றந்து
மாதவற்கீந் தேநோற்றான் வாய்ந்து. (உச)

தாலம் புகழ்மரீசி சம்பூதி யைவேட்டு
நாலணங்கு நல்கினா னண்ணுமிவர்—பாலுதித்தோர்
பல்லர் புலத்தியன்சீர் பன்னாரி சன்னதிவேட்
டொல்லவளித் தான்பலரை யோர்ந்து. (உரு)

அங்கிரா வென்பா னவிர்மிருதி மாதைமணந்
தங்கிநீ ரன்பரத னாமகர்ப்பெற்—றங்கியலார்
நாற்புயலைம் பாலரையு நன்களித்தா னன்னவர்தம்
பாற்பிறந்தார் பல்லோர் பரிந்து. (உசு)

பின்புலகன் வேட்டுப் பிருதியைத்தத் தாத்திரியா
மன்மகனை நல்கவன்றான் மாண்மரபி—லுன்கும்ப
ஞற்றான் வசிட்டனென்போ னூற்கை தனைமணந்து
பெற்றானோர் மின்னேழ்சேய் பெட்டு. (உஎ)

அத்திரியா மேலோ னனசூயை யேவேட்டுச்
சத்திவிழி யன்றிங்கள் சார்ந்தசனி—மைத்தசங்க
தானனிவர்த் தந்தான் றனித்தீச் சுவாலைமணந்
தானமும்மை யோர்ப்பயந்தா னங்கு. (உஅ)

கிரது கமையைமணக் கேண்மையின் மூன்று
தாமகர்ப்பெற் றான்பித பாசீர்—வருசுவதை
மாதைமணந் தேர்மேனை மன்றரணி மங்கையரைக்
காதலொடு தந்தான் களித்து. (உகூ)

சீர்தருமா மேனைதனைத் தின்னிமவான் றன்மணந்தான்
சார்தரணி யைமேருத் தான்வேட்டே—யோர்தருமா
மந்தரமா வெற்பைநல்க மற்றதுநோற் றீசன்ற
னந்திழுறப் பெற்றதென் றுமாங்கு. (௩0)

விண்ணுயர்மா மேருப்பின் வேலையின்னை நல்கிமுந்நீர்த்
தண்ணிறைக்கு நல்கச் சரவணியாம்—பெண்ணையன்றான்
பெற்றுப் பிராசினனென் பேர்வாற்கே யீயவவன்
மற்றையிரு சேய்பெற்றான் வாய்ந்து. (௩க)

ஆ திருவெண்பா எக,

தக்கன் மகப்பெறுபடலம் முற்றிற்று.

---

# சந்திரசாபப்படலம்.

---

ரன பலகிளைக ளேய்ந்துமல்கத் தக்கன்பின்
னருநாண் மீனத்துண் மூவொன்பான்—கன்னியரை
துமதிக் கீந்தெவர்க்கு மின்பமுற வோர்பெற்றித்
தாந்தரம்வா மென்னவுய்த்தா னங்கு. (க)

வருதிங்கண் மானத் திவர்ந்துவிண்போந் தோர்முறைய்ற்
றோகையர்பா லொவ்வொருநா டோய்ந்தின்பப்—போகமுறப்
பின்னவரு ளாரலொடு பின்னவரு மோர்கூர
வன்னவர்மே லார்வமுற்றா னங்கு. (உ)

மதிவர்பாற் சேரான் மறுத்தான் மதியென்பா
னுந்தன்மை யோர்ந்தினைத் தொண்டொடியார்—பெற்றவன்பாற்
போந்தியம்ப வன்னான் புகைந்தவன்றன் பூங்கலைக
டேய்ந்திடவென் றேசபித்தான் றேர்ந்து. (௩)

சாற்றுதக்கன் சாபித்தாற் றன்கதிரோ னொண்கலைக
ளாற்றவைகற் கொவ்வொர்கலை யாக்குறையப்—போதறுகலை
மூவைக் கழிசலுமே முன்னித் தியங்கியும்பர்
கோவை யடைந்தான் குலைந்து. (௪)

தக்கனிடு சாபத்தாற் றன்கலைகள் யாவும்போ
யிக்கலையொன் றேநின்ற தீதொழியின்—மிக்க
வெனதியல்புங் குன்றுமினி யென்செய்வே னென்ன
மனமயரே லென்றறைவான் மால். (௫)

அந்தியவனன் கைலைதனி லந்திமுகன் பணியமார்
தொந்திதனை நோக்கிநக்காய் தூயனந்நான்—முந்தெதவரு
நின்னைக்கா ணோரெங் நிந்தைசெய நீசே
ரென்னத் திகழ்தியென் றானேய்ந்து. (௬)

என்றவந்த சாபத்தால் யாரு மிகவெள்ளி
யன்றுமுத லேனைக்கா ரகலநீ—சென்றிலவி
னுற்ற வொடுங்கிறு யஃதுணர்ந்தார் கைலைபோய்ப்
போற்றினர்மு னேனென்றாள் புரிந்து. (௭)

எண்டகுநின் மேன்மை யெவரிகழ்ந்து மாசுநனி
கொண்டனனிந் தஃதாற் குறைவுற்றான்—விண்டலக்குஞ்
சாற்றவன்றான் வேண்டுமெந்தை சாபமதாண் டோர்வைகல்
போற்றவரு ளென்றார் புகழ்ந்து. (௮)

ஐங்கரத்த னன்னதுகேட் டவ்வா றருளவெய்யோன்
றிங்களின்முற் பாலிற் செலுநாலாம்—பொங்குவைகன்
மண்ணுலக நோக்க மரபினுற்றாய் மேலோர்சீ
ரன்னவற்குப் பூசைசெய வாண்டு. (௯)

இந்தப் பழிநிற்க வின்றலவ தக்கனு
னந்தக் குறையுமுற்றாய் நற்றிருவுஞ்—சிந்தினைபோய்ப்
போதகத்த னோடறைதி புத்திரனை வேண்டியே
யீதகற்று மென்றா னிறை. (௧௦)

இந்திரன்சொற் கேளா விவைநன் றெனவயனார்
சந்திரன்போய் வேதன்றா டாழ்ந்துதக்க—னுந்துசினத்
தீய மொழியுணர்த்திச் சேயைத் தெருட்டியென்பான்
மேயவிடர் தீரென்றான் வேட்டு. (௧௧)

அன்னதனை நிங்கட் கயனவில்வான் தக்கனென்பான்
றன்னுளவா றேயன்றிச் சார்கிலா—னென்னுரைதா
னென்னளவு மென்று மெவர்க்குமுத லாகின்று
முன்னவன்பாற் செல்லே னுகந்து. (கஉ)

தொன்றுணன் கூறவான் றாபதன்மை தேர்ந்தனையான்
பன்று ளூழ்ந்துதவப் பான்மையா—லிந்நாளி
லித்திருவில் வைகி யிறுமாந் திறையுமெண்ணான்
மைத்திருளார் கண்டனையே வாய்ந்து. (கங)

நக்கனெதிர் கூறி நலிகுறைவு வேண்டலாந்
தக்கன்முன் சாற்றத தகுமகொலோ—மிக்க
திருவிடையாழ் தந்து செருக்கொல்லா ரோரா
ரொருவரையு முன்னு ளாதது. (க௪)

சீற்ற மிகுமனத்தான் றேசருளில் லானனத்தான்
றேற்ற வுணர்விலான் றீங்குளா—ஞற்றுநீ
ராண்டுவா வேணி யணிந்தபிரா னன்னவன்றான்
வேண்டுவோ மீந்தான் விரைந்து. (கரு)

அன்னவனை வேண்டினவ னுற்றவெகுளை யெடன்னுவா
னின்னுடைய சாபமுமே நீக்கலா—னுன்னருஞ்சீ
ராதி யானையடைந் தார்மா சகற்றிலா
யோதி யிலாமதியே யோர்ந்து. (கசு)

நித்தன்முன் சென்றிசைக்க நீக்குமே நின்கவலை
நத்தன் முதலோர் நயந்தேதது—மத்தன்
றெருளுருவாந் தன்னடியார் தீங்ககற்றற் கன்றோ
வருளுருவாய்க் கைலையுற்றா னுண்டு. (கஎ)

இடுக்க ணொருவர்பா லெய்திடினந்தை பொற்றா
ளடுக்கினது தீர்ந்தின்பத் தாழ்வார்—கடுக்குநமன்
வாதைகெட வந்தனைசெய் மைந்தன்முன் வந்தருள்செய்
காதை மறந்தனையோ காண். (கஅ)

[illegible]மூறு காலத்து நாமூறு காலத்துந்
[illegible]மென நாமான்றான் சாரவவ—னஞ்சவென
[illegible]ருள்செய் மாண்பு மறந்திகொலோ பல்லமய
நந்தருள்செய் தாண்டா னமை. (க௯)

ஆதலினொன் கைலையண்மி யத்தன் சரணடைந்து
வேதமொழி யென்னமதி யேய்த்தயற்றாழ்ந்—தோதருஞ்சீர்
பின்பிறங்க லுற்றநந்தி மேவிவிட வீசன்றா
ளன்பினவணங்கினு னங்கு.

[illegible]றையாற் போற்றவிக்து வந்ததென்கொல் செற்றிடொ[illegible]
[illegible]வலிப் பெம்மான் வினவவெந்தாய்—வன்மைபெற்ற
தக்கன்றன் சாபத்தாற் றண்கலையெல் லாந்தொலைந்த
விகலையொன் றேயிருந்த தேய்ந்து. (உ[illegible])

ஒல்குகலை யொன்றிருக்க வோவுகலை யாவுமே
மல்க வளித்திடெனை மாதேவ—னல்குமதி
யங்கலையை யங்கையிற்கொண் டஞ்சடைமே லாரவைத்தான்
பொங்கலையி லுந்துகலம போல். (உஉ)

திங்கண் மருவுகலை தேசார் முடியிலங்க
வங்கணன் மன் னிருவைப்பார்த் தையுறனி—யிங்கணம
ஞோர்கலையின் வந்தாற் றௌிதருமா தோன்றுமா
லார்கலைக ளெல்லா மமர்ந்து. (உ௩)

பன்னுகலை யைம்மூப் பகலி னிரம்பியே
பின்னுமுறை தேய்ந்துவந்து போராதோர்—மன்னுகலை
யின்னதன்மை யேஙிகழு மெந்நாளு மேயென்றான்
முன்ன மருப்பணிந்தோன் முன். (உ௪)

ஐயனருள் செய்ய வடிததா மரைவணங்கி
மெய்யன்பி னிந்து விடைகொடுசென்—றெய்யெனத்தன்
மன்னுலகுற் றார்தொன் மரபின் வினைபுரிந்தான்
றன்னு கலைவளர்ந்த சூழ்ந்து (உ௫)

மாயன் முதலோர் மதியின் திறநாடி
மேயதக்க னுவின்றன் மின்கலைகள்—போயொளித்தான்
மங்கி வளர வகுத்த வரன்செயலா
ரிங்கறிவா ரென்றா ரிசைந்து. (உ௬)

செக்கர் விசும்பிற் றிகழ்தந் தெழுதிங்களை
மிக்கசெய லோர்ந்து வெகுண்டுவெய்ய—தக்க
னடுக்கமுறு மென்சாப நக்கனே கொல்லாந்
தடுக்கவல்லா னென்னதக்கான் றன். (உ௭)

எந்தைதன் றந்தை யெவருமரு கற்குமுன்னோன்
றந்தவுரை நீக்கிலார் தாம்விலக்க—வந்துமிலார்
தந்தையா யில்லாத் தனியொருவ னேதடுப்பான்
விந்தையா மேய விதம். (உ[illegible])

நின்றானன்றி யாம்பரமா நான்முகன்மால் வானோர்க
[illegible] வெலாமழித்து மைந்தொழிலு—நின்றானாம்
வி[illegible]ற்செய் தெங்களுமே மேவுகின்றே மென்னமனத்
[illegible]றான் கொல்லோ வான். ([illegible])

வருவதொன் றுண்டேதக்கன் மண்ணிறவனை நேர்வான்
பொருவி றவத்தினென்னற் போதித்—திருவக்
கிகழ்ந்ததவி ரென்றோ செப்பியவனை ஞானை
யிகழ்ந்தித் திறமிழைத்தா னிங்கு. (௯௦)

எய்துபரம் பொருள்யா மென்பவனைத் தேர்ந்துயிக்கா
ஞெய்தினெல்லாச் செல்வமுமற்றுநோன் சரண்டாழ்—செய்கையிலா
னென்றுகொளாலா வென்சொல் லிகழ்ந்தான் சிவனென்னத்
தான்றுசினங் கொண்டான் றணிந்து. (௯௧)

தகவன்பில் புன்னெறிய தக்கனுரை தேர்ந்து
புகலும் புலகன் புரிந்த—திகர்பிறவி
நீக்கமிலாத் தேவையெள்ளி னினைவையிகழ் வாரெவரு
மாக்கமுமே யெஞ்சுமென்று ரிங்கு. (௯௨)

என்றவனை நோக்கியையோ னைந்தவக தாலெண்க
ணின்றவிந்த மாத்திருவ நீங்குமோ—துன்றிமையோ
ரொன்றென் பணியினின்று ரும்பெறன் குவதுண்டோ
நன்று நன்று னோர்வென்று னக்கு. (௯௩)

முறுவலிக்குந் தக்கன் முகநோக்கித் தூயோ
னுறுசெல்வ நீங்கா துறினு—முறைநாயிற்
புகலுமினக் கின்னருளசெய் புண்ணியனைப் போற்று
திகழ்தறகு மோவென்று னிங்கு. (௯௪)

புலகனுரை கேளாப் பொறையிறக்கன் மூன்னேற்
றலகிறிருப் பெறமே னவைதான—புலனுரைத
மூன்மாற்று வானல்லன் மொய்ம்பினென்று செய்கலன்கோ
னென்மாட்டென் செய்வதென்று னிங்கு. (௯௫)

ஒண்புலக னன்ன துறுகியே யானுலு
மெண்துணைனை யெள்ளினே னிங்குய்யா—ருண்மையா
மன்மறைகள் சொற்றதே மறுதவனை யெள்ளலினி
நன்மனங்கொண் டேத்துதிநீ நன்கு. (௯௬)

தின்னடைந்தார் வெந்துயரந் தன்னை யகற்றியவ
னென்னபொருள் வேண்டினுமக் கீவதியல்—பன்னற்
கினையுமதி தேர்ந்தடைய வீசனின் சாபந்
தனையொழித்தான் மனனெறியாற் றான். (௯௭)

உற்றகலை மல்லியபின் றூன்னிமுன்னீ சிற்றமுற்றே
சொற்ற வணமுஞ் சுருங்கவைத்தான்—மற்றினியேன்
செற்றமதி நின்மருகன் சிற்பாலு மம்முறையாம்
வெற்றிதனைப் பெற்றிடுவான் பின். (௯௮)

உருவி லமக்கென்ன வொன்றாகம்பான் மேவு
மருவுருவம் யாவுமென வன்ன—தொருபொருளென்
றன்னியமை யோமமையெய்தி யுன்னருள்யா னென்பதன்மை
யென்னுருவாம் யாவுமென்றா லிங்கு. (எ)

நியந்தாங் குணத்துபுகழ் காடிநம்மு னங்காய்
வியந்தா யுனையெனவே மேவன்—மயந்தான
ஞவிதொறு நின்றுதெரு ளாக்கியவை தீர்துமேன்
மேவுசட மாய்விடுமே வீந்து. (அ)

உன்னிடத்தும் யாமுறுத லோவுழிநின் னுவியுமே
மன்னுமுணர் வின்றி மயங்குமா—லன்னதுகாண்
கென்றயனே யாதியம னெவ்வுயிரு மாற்றுவனா
தன்றிறலி னீங்கினன் சம்பு. (௯)

தேவர் முதல்வன் றிருச்செயலில் லாமையா
லாவிகளெல் லாஞ்சடம தாகியே—யேவுலகு
மாட்டுவிப்பா னுட்டாக்கா லப்பாவை வீழ்வதுபோ
னுட்டுயிர்கண் மாய்ந்த நலிந்து. (௧௦)

இந்தப் படியுயிர்கள் யாவுமே யொல்லையி
னந்திச் சடமதாய் நண்ணுமெல்லை—சுந்தரித்தாய்
சிந்தைதெரு மந்தஞ்சிச் சிற்பரன்றா டாழ்ந்திறைஞ்சி
யந்தையகல் வான்புகல்வா னாங்கு. (௧௧)

அறிகிலனெந் தாய்நீ யனைத்துயிர்மாண் பாற்றி
யுறவதையெற் காக வொருவி—யிறுதிசெய்தா
யோரிறைறதிற் காவிக் குகம்பலவென் றேம்பொறுத்தே
யாருயிர்நல் கென்றா னணங்கு. (௧௨)

பன்முறைதான் போற்றப் பரைக்கருளி யாருயிர்க
டொன்மை வினைப்பயனைத் துய்க்கவெண்ணு—நின்மலன்றா
முன்னு முருத்திரர்க்கு முன்னுணர்வு செய்யவவர்
மன்னிறையை யுன்னினர் வாய்ந்து. (௧௩)

போதனரி காணுப் புனிதன் செயலிதென
வோதியிற்றோர் தாவியெழுந் தோங்கவிறை—பாத
மருச்சனைசெய் வானுன்னி யாரிருளின் மன்ன
னருச்சனைவட் டத்தடைந்தா ராங்கு. (௧௪)

ஏங்குமிருள் கங்குலொத்த திக்காலை யிற்பூசை
யோங்காற்குச் செய்தமெனுப் புத்திகொடு—புங்கவர்கள்
இந்தபரன்கொ ளேங்கோலத் தேகுரும் மாண்பியது
மண்டியடி யாக்கினு ராங்கு. (௧௫)

எண்ணிரண்டு மாண்பூ ணியன்றபொருள் யாவுமுய்த்துத்
தண்ணனயன் பூசையன்பிற் சங்குலின்கட்—பண்ணூமயன்
றெண்ணிரண்டோ டைந்தெழுத்தையேய்ந்தோ தியெண்ணினர்மற்
றண்ணுவிதி யிற்புரிந்தா ராய்ந்து. (கசு)

திண்வில் லுவமுளரி சாதி வலம்புரிப்பூ
வெண்மனுவிற் சாதகிநான் கியாமத்தும்—வண்பயறு
பாலெண்ணை லோதன மூன் பல்வகையூ ணுயகன்முன்
சாலநிவே தித்தனரே தாழ்ந்து. (கஎ)

பின்ன ரியற்றிடுமா பெற்றியெலா முன்விதியி
லுன்னி யுளுற்ற வருகதிரர்முன்—றுன்னியா
னன்னவர்க்கு வேண்டியவா றுகருள்வான் றொன்மைபோன்
மன்னுயிர்செய் வானினைநதான் வாய்ந்து. (கஅ)

எழுந்தனர்மால் வேத னிமையவர்கோன் வானோ
ரெழுந்தனர்நன் மாமுனிவர் யாரு—மெழுந்தபல
வாவியிரு ணீங்கிற்று வல்லுறங்கி னுர்தஞ்ச
லோவியெழு மாபோ லுணர்ந்து. (ககூ)

அன்னதொர்மாண் பெல்லா மமலன்ற னுணையாற்
றொன்னிலைமை யாய தொடர்புணர்ந்தே—யிங்கிலை
யாவுமரன் செய்கைவே றில்லையென்றார் மாமலர்மேன்
மேவயன்முற் றேவர் வியந்து. (உ0)

மற்றதுதேர்ந் தீசன் வரவங் கெதிர்சென்று
பொற்றிருப்பூந்தாளிறைஞ்சிப் போற்றலுமா—னுற்றகா
லீண்டெமையர்ச் சிக்க வெழுப்பினோ மெவ்வுயிரும்
வேண்டியவை கேண்மினென்றான் வேட்டு. (உக)

நிற்றலுமே யல்லிலெம்போ னின்று னெவரேனும்
பற்றுடனர்ச் சித்தோர்க்குப் பன்மாக—நற்றிங்க
ளுன்னு கதிரிரண்டு மொன்றுபகன் முன்கங்குன்
மன்னுசிறப் பீகென்றார் வாய்ந்து. (உஉ)

நீவிர்செய் பூசை நெடிது மகிழ்ந்தமையா
லாவிசனெல் லாமுய்ந்த வார்வினைபோய்—மேவுமைப்போ
லிம்பரிலர்ச் சித்தோ ரெவர்க்குமுத்தி யீதுமெனு
நம்பனருள் செய்தகன்று னன்கு. (உங)

ஒன்றுமெங்கோ னேக வுருத்திரர்தந் தேமடைந்தார்
[illegible]ன்றயன்முற் றேவர் கயிலைசென்று—மன்றனைத்தாழ்த்
தோர்[illegible]ற்றி வானவ ருறுபவமுற் றேமதற்கோர்
[illegible]ன்று கல்கென்றார் தேர்ந்து. (உச)

# காளிந்திப்படலம்.

---

உலகளந்த நீல வுருமால் கிடப்ப
விலகுமவன் செங்கைவளை யேய்க்கு—நிலவி
யலம்புரியா மார்யமுனை யாற்றம் புயமேல்
வலம்புரியா மாதமையார் மாண்பு. (௧)

உறும்பூ தாததற் றெளிகருநீர் மைசான்
றெறும்பூ றொழுக்கமே யேய்க்கு—மிரும்பூதாய்ச்
சேர்த்துவரு முத்தந் திரைமாக் கரைமோதி
யார்த்துவருங் காளிந்தி யாறு. (௨)

நீலன்ன வாய்ந்த நிறமுடைய தேனுந்தீம்
பாலன்ன வின்சுவையே பாலித்து—மேலன்றி
யுள்ளன் புடைய வுயர்சாதகியரெனலா
மெள்ளலிலாச சீர்யமுனை யாறு. (௩)

நானிலமன் வேந்தர்க ணல்குபொருள் கைக்கொண்டு
நீணிலவ கஞ்சகன்முன் நீரினைபோல்—வானற்
றிறைகொண்டு செல்வதுபோற் சீர்கொள் யமுனை
யறைகொண்டு செல்லுமே யாறு. (௪)

நீல நிறமொன்றி நீருகை வான்வரைபெய்
தால மெனவாய்த் தரியூரக—மேலை
வருகையாற் காளிந்தி மாறுமை யமுனை
பொருகையார் தூய புனல். (௫)

கருமையினன் சேகிர கவின்மணிவான் சங்க
மருமலரார் தாரு மருங்குற்—றொருமையி
னும்பர்கொண்டா டொழுகலாற காளிந்தி
யம்புனல்விண் கோவையொக்கு மாம். (௬)

இன்ன தன்மை யார்யமுனை யாற்றின்கண் மாகமதி
மின்னுமக நீராட வேண்டியே—யகநிலத்தா
ரங்குறவம் தோர்ந்துக்க ணர்வேக வல்லிதனை
மங்கையரோ டெய்த்தனன்மன் வாய்ந்து. (௭)

பின்னலிர்மொற் கோயினின்று வேகனற வோராசி
பன்ன விமையோர் பரசநதி—முன்னுறப்போ
யாடிவரும் போதுதக்க ணாகமலத் தோர்பணில
மாடிவரக் கண்டான் மகிழ்ந்து. (௮)

மெய்த்தவத்தாற் றக்கனுறு செங்கமலச் சக்கமது
கைதனையுய்த் தேயெடுக்குங் காற்பெண்மை—யெய்தருவி
யின்குழவி யாதலுமே விம்மிதமுற் றீசனருண்
மன்கவுரி யென்றுணர்ந்தான் மற்று. (௯)

வானவரை நீங்கிப்போய் மன்னதியின் பானீமுனைங்கண்
மானனையா ரோடெய்த்த மாமதிகே—ரானனத்தன்
பன்னிகரத் தீந்தான் பரையாங் குழவிதனைத்
தன்னிகரற் றோங்குதக்கன் சார்ந்து. (௧௦)

வந்து குழவி யினைத்தழீஇக கொண்டுமகிழ்ந்
தாந்தன் குயத்திழிபா லார்த்திநங்கை—காந்தளநுகைச
சூர்மகளிர் போற்றிசைப்பத் தொல்லிருக்கை சென்றனன்போய்க்
கூர்மனியல் செய்திருந்தான் மீகான் (௧௧)

காளிந்திப்படலம் முற்றிற்று

ஆ திருவெண்பா ௪௩௪

---

## உமைதவம்புரி படலம்.

---

வேதவல்லி கொண்டுதன்னேர் வீட்டிற் குறுமிகு
காத லொடுவளர்க்கக் கௌரிதான்—சீதமதி
வண்குழவி போற்றவழ்ந்து மன்முத்திற் பற்றோன்ற
வெண்குலவைக் தாண்டேற்ற ளெய்ந்து. (௧)

ஆறுன வாண்டெய்த வம்மை யாற்குறியா
மாறும ஞேற்பலென மன்னுளுன்னிப்—பேறுகப்
பெற்றவரை நோக்கிவாற் பேணித் தவம்புரிவா
னுற்றமனை செய்தியென்று ளோர்ந்து. (௨)

நின்றென் றவர்மகிழ்ந்து நன்னகர்க்கோர் சார்மாடந்
துன்றவமைத் தங்கட் டிடியிடையை—யொன்றிருவர்
போற்றியுச்சி மோந்துயிர்த்துப் பொன்னனையார் சேவநின்றேன்
பாற்றுகவென் றேகுவித்தா ராண்டு, (௩)

அன்னையவர் பால்விடைபெற் றங்கேக வேதவல்லி
மன்னைனி நோக்கியான் மாட்டுணர்பண்—பென்னையென
நீதனைய ணீர்மையென யாவுமெடுத்துரைத்தா
ளேதனையு மோரையுற்று ளோர்ந்து. (௪)

இருளவு சேவலின லோர்மகளிர் சூழ்த
மருநறவே மாடத் தமைத்தோ—னொருகவுரி
போக்குசிவ னுமமுன்னிப் போத வியமமுற்றன்
பாத்தவஞ்செய் கின்ற ளமர்ந்து. (௫)

அர்தவஞ்செய் காலையுமைக் காண்டா றிரண்டுசென்ற
வெந்தையது கண்டாள வேந்திழையைச்—சிந்தைசெயா
மன்மலையி னின்று மறையொழுக்கம் பூண்டமுண்ட
னன்மறையோன் போல்வந்தா னன்கு. (௬)

செக்கர் நிறச்சடையான் சீர்த்தக்க மாபுரத்திற்
புக்கமலை நோற்கும் புரையுற்று—மைக்குழலார்
முன்னிவருங் காப்புடைய மூந்தலையார் தாழவம்மைக
கென்னிலைசொல் லென்று நின்று னேய்ந்து. (௭)

நிற்கக் கடைகாப்போர் நேரிழைபாற் சில்லோர்போய்ப்
பொற்கமலந் தாழ்ந்திண்டோர் பூசுரனு—நற்றவத்தோ
னுன்பா லுறவிடுத்தா னுற்றதிஃ தென்னவணங்
கன்பா லழைமினென்று னாங்கு. (௮)

அன்னார்தாழ்ந் தேபோ யடிகளெம்மோய் நின்னைவாச
சொன்னு ரெனமறையோனை சூழ்ந்துசெல—முன்னுகி
பாசையுடை யார்பானன் காசையுடை யாரெனத்தாழ்ந்
தீசையவற் பூசித்தா ளேய்ந்து (௯)

நேயமோ டர்ச்சித்து நின்றவளைப் பொற்றொடியான்
மேயினதா மொன்றை விழைந்தருள்வை—யாயினது
சொற்றுமென வெற்றிசைந்த சொல்லுதியே னிற்கதுவா
முற்றுரைத்தி யென்று னுகந்து. (௧௦)

உன்னை மணந்திடவெய்த வுற்றே னதுபுரிதி
பின்னையொன்றும் பேசலெனப் பெம்மான்கா—தன்னைபொத்தி
சிற்றமுற்றிவ வாறுரைத்த தென்சிவனை வேட்டிடுவா
னேற்றனனு னென்று னுணித்து. (௧௧)

இன்னதன்மை யானென் .றெவருமென்று மெண்ணரியா
னின்னை வதுவையா னேர்பரிது—கன்னி
வருந்தலென வாரானேன் மன்றவமே யாற்றித்
திருந்துபிரை நீப்பலென்று டோர்ந்து.

பேரு இகீ யெனப் புகன்ற சிலகடிய
மாவ[illegible]லைக வரன்வண்முன்—காதலுட
[illegible]ருங் காணு தொருதன் கவினுரு
[illegible] காட்டினு னங்கு.

ஆதியுருக் காட்ட வமலை யடிதொழுது
யேதிலரென் றெண்ணியிகழ்ந் தேனென்னச்—சோதியடி
யோதுளங்க ளிற்றிறைஞ்ச வுன்னியற்கை நன்றுநன்று
நீதுளங்க லென்றா னினைந்து. (௧௮)

நாதன் றனையிறைஞ்சி நங்கை மருங்கினின்றி
மாதர் தமைநோக்காண் மற்றுமெண்ணா—ளாதிகழல்
போற்றிநிற்ப வந்தணன்மால் பூட்டினனோ வென்னவைய
மேற்றினவ ரென்கொலிஃ தென்று. (௧௯)

சிலதியர்க்குட் சில்லொரல்லை சென்றுதக்கன் றேமூற்
றிலகுன் மகணிலைமை யீதென்—றுலவனைத்துஞ்
சாற்றவவ னுள்ளுணர்ந்து சம்புவென தேர்ந்துமனை
மாற்றியவற் கீவனென்றா னங்கு. (௧௧)

உமைதவம்புரிபடலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௧௭௦.

---

# திருமணப்படலம்.

---

தொன்மையிற்கல் யாணத தொழினடத்த வாய்வுழிநா
ணன்மைதரு மோரையுமந் நாளினண்ண—வென்மகளை
யண்ணலுக்கின் றீவனென வாரோ றறைவிடுத்தான்
விண்ணவர்கள் செல்ல விரைந்து. (௧)

தன்னகர்பொற் பாரச சமைப்பித்தொண் கோயிற்றனைப்
பொன்னகர்நாண் கோளப் புனைவித்து—மன்னகரி
னீங்கயவண் மாதவஞ்செய் நேர்மைபான் மேவடிக
ளோங்கியதாள் போற்றினா னுற்று. (௨)

அண்ணனீ மற்றிங் கணைந்துமண வேட்கையாற்
பெண்ணரசி நோற்றனளென் பேர்நகரி—னண்ணுதி
யென்னவிசை நன்றென் றெழுந்துசென்றோர் நங்கையொடு
மன்னன் மனையுற்றான் வாய்ந்து. (௩)

அங்கணையு முன்ன ரணங்கனையா ரெண்வகைய
மங்கலங்க ளேந்திநின்றார் மற்றவைகண்—டெங்களத்தன
போற்றிருந்தாய்தன் றொடும்போய்ப் பொன்மணிசெய் பீடிகைமே
லீற்றிருந்தா னார்வ மிக. (௪)

அப்போது வேதவல்லி யாரணங்கைக் கண்டுபுல்லி
யொப்போவி றன்மனைதந் தொண்டொடியின்—மைப்போன்ற
வோதியவிர் பின்னலைநீத் தொண்ணறுநெய் பூசிநபக்
கோதிலற லாட்டினாள் கூர்ந்து. (௫)

சூட்டினாள் பூந்தொடையல் சூழ்ந்தரையிற் பொற்கலைகள்
பூட்டினாள் பலகலன்கள் பூவையைமன்—றூட்டினான்
முன்னருய்ப்ப வன்னைபின்போய் மொய்வான்பான் மேவுமெல்லைப்
பன்னியங்க ளார்த்த பல. (௬)

நாதருரை கேட்டுணர்ந்து தண்மணப்போய் மான்முதலோர்
நாதனடி தாழ்ந்தார் நனியாழிற்—கீதங்கள்
கின்னரர்கள் பாடினார் கேழ்கிளர்பூ மாவடிதூய்
மன்னரமின் னார்புகன்றார் வாழ்த்து. (௭)

தக்கனுண் டொல்லைமறை சாற்றிவல்லி நீர்வாக்கப்
புக்கவரன் றாள்விளக்கிப பூசித்து—மைக்களத்தோன்
பொற்கரமா தங்கைநல்கப் போற்றுதியிம் மானையெனு
நற்கடனீ ரோடளித்தா னன்கு. (௮)

ஆர்த்த மதின்முதல்வன் மொய்குழலாள் சீரணிகண்
டார்த்தனர்கள் யாரு மயன்வேள்வி—சீர்த்திடுமா
றாற்றுஞ் சடங்குமுற்ற வணடரெலாம் போற்றவன்பர்
சாற்று முருவொளித்தான் சம்பு. (௯)

மறைந்தா னிருத்தலுமே மாமணிணைற் காணா
துறந்தா ளுவகை துயர்ந்தே—யறந்தான்
வளர்க்குமன்னை மாமுதலோர் மன்சூழன் மேவித்
துளக்கமுற்று விம்மினாள் சோர்ந்து. (௧௦)

புரந்தரன்மா லாதி புலவரமர் வேள்வி
யிருந்தனன்மா மாயையிற்றுண் ணென்னக்—கரந்தனனே
யெய்தியெற்கொ ளேந்தலையா னேய்கைதவ னென்கைநவை
செய்தவமே யோரிற் சிறிது. (௧௧)

என்றுபல பன்னி யிரங்குமைசெய் கைநோக்கிப்
பொன்றனைநேர் வேதவல்லி புல்லிமனங்—கன்றலுன்ற
லுயகனை நேயநெறி நற்றவமஃ தாற்றுகென
நேயமட வார்நவில்வார் நேர்ந்து. (௧௨)

அன்னையீது கேளீ னகிலமுற்று நின்றுருவா
கின்னையென்று நீங்காத நின்கணவன்—றன்னை
மறைக்குமறை யுண்டோது மன்றாட்டா ரோர்வார்
கறைக்கடுவேற் கண்ணாய் கழறு. (௧௩)

மன்னர்க்குச் [illegible] மனைவன் [illegible]
[illegible] முற்றேமார் தஞ்ச—மெனவின்று
போக்குற்றேம் நீமை புரைதீர்த்தோம் போதமுளர்
தேக்குற்றே மூய்ந்தோம்யாந் தேர்ந்து. (கச)

என்றியம்பி வாழ்த்த விறைவியவர்க் கண்டருள்செய
தொன்று மவரை யொருவியே—மன்றவமே
செய்வான் றிருமாடஞ் சென்று ளரிமுதலோ
ருய்வா னதுகண்டா ருற்று. (கரு)

எங்கு மறைந்தனனே வேந்தலென விம்மிதமுற்
றங்குளார் மாழ்கி யழுங்கினர்—பொங்குதக்கன்
சீற்ற மொடுமுறுவல் செய்தியாஞ் செய்வதுவை
யாற்ற வழகிதென்று ணர்த்து. (கசு)

புனையுங் கடிவினையைப் புன்மையே யாக்கி
யெனையும் பழியி லிருத்தித்—தனையொளித்தா
னத்தனனை யாருமிலா ஞர்பொதுவீ டாநடிக்கும்
பித்தனியல் போமோ பிழைத்து. (கஎ)

தீய தவனியற்கை தேர்ந்தனனு னென்றுளைந்தார்த்
தேயவரி யாதியரை யேகவிட்டுத்—தூயன்செய்
மாயமதை யுன்னியுன்னி வைகினன் மாமனு
மேயதக்க னென்போன் வெகுண்டு. (கஅ)

சீரார் கவுரிமுன்னை சேண்மா ளிகையிற்போந்
தோரய மோடமர்ந்தங் கேநோற்க—நாராய
வீசனறு நீறுமணி யேய்ந்தசின்னம் பூண்டுபின்னர்
நேசவுருக் காட்டிவந்தா னோர். (ககூ)

அந்தரிகண் ணுற்றெறிந்லைதக் கன்பரிவ றென்னவுன்னிப்
புந்தி மகிழ்ந்திறைஞ்சிப் போற்றுமெல்லை—நந்திமிசைப்
பெண்டா னிடமிலதோர் பீடுருவி னித்தனுற்றான்
கண்டாள் கவுரி களித்து. (உ0)

பன்முறைவீழ்ந் தேத்திப் பவைபுன்மை நீக்கவந்தாய்
நின்மயனே யென்னவெதிர் சென்றுரைப்ப—மின்மருங்கு
லன்னையைக்கூ யங்கையெடா வார்விடைமேல் வைத்தமருந்
தன்னவரைக் கேகினன் சம்பு. (உக)

சாரிருந்த மாதர்போய்த் தக்கனவை முன்னுகி
சீரிருந்த வேணியா னீத்தோன்போ—லேரிருந்த
[illegible]மொழி முன்புகுந்தக் கைதவமோ ராமகளைக்
[illegible]செல்வா னீதுரையென் கோ.

அன்னார் மொழிகேட் டழலினைய்பெய் தென்னவென்
றென்று விருக்கவும்ப குற்றிலைறைஞ்சிப்—பன்று
மருங்குறவே தக்கன் வரனொழுக்கம் யாவு
மொருங்குறவே சொன்னு ளூளைந்து. (உ௩)

இங்கிதுசெய் திற்பாரா ரென்னுனை யுங்கடந்தான்
சங்கரனே லீதுசெய்யத் தக்கதோ—வெங்கு
மிரந்தான் சிவனென்று மேதகிற்க லிங்கன்
கரந்தானென் சொல்விழுக்கே காண். (உ௪)

பண்டொருபெண் வேட்டவரிப் பான்மைசெய்தோ ரேவரையுங்
கண்டிலனு னென்னக் கரைந்துபல—வண்டரைத்த
மூர்சென் றிடவேவி யுன்வெகுண்டெம் மீசனையே
யோர்கிலனென் னீர்மைகொண்டா னாங்கு. (உ௫)

திருமணப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௧௬௫.

---

# தக்கன்கயிலைசெல் படலம்.

---

செம்மா தவத்தாற் றிருக்கொடக்கன் மாத்தருக்குற்
றெம்மானை யெண்ணு னிழப்பனுயிர்—நம்மாலிக்
கீறுவரும் போலுமவ னேவல் புரிகின்றோங்
கூறுவதெ னென்பரண்டர் கூர்ந்து. (க)

இனித்தக் கனையெண் ணிலமாயிற் சீற்ற
மனித்தக்க வான்பதமு மாற்று—மெனத்தெளிந்து
தீயன் கயிலைசெலத் தேற்றி னரற்காணி
லாயநஞ்சீர் நிற்குமென்று ராங்கு. (உ)

வேதன் முதலோர் விளம்புதக்கன் பான்மேவி
மாதையா னோடு மறத்திகொலோ—யாதினியாங்
குற்றமென்னுனிற் சுற்ற மில்லை கூர்த்துனிலை யேல்வசைதான்
மற்றுனையே சூழுமென்றார் வந்து. (௩)

அன்று ருலோராதி யங்கவரை மேவநல்கிப்
பொன்றூர் கயிலைவரை போய்ச்சிகரி—முன்றுகச்
சாருதலயிற் றக்கற் றமித்தா ரவன்காவ
லமைமொழுப் பூத ரடுத்து. (௪)

வெல்லணங்க டம்மை வெருண்டுதக்கன் யான்முன்னர்
கல்குகின்ற காதனங்கை காயகனே—டொல்கி
யடக்கின்ற தன்கூமயிவ ளுய்ந்தறிவ னீவிர்
தடக்கின்றதென் கொலென்றான் சார்ந்து. (௫)

அன்னமொழி கேளா வழன்றே யவற்பாராப்
பொன்னவிரும் வாயினனி போற்றுவோர்—முன்னநீ
தெவ்வா மெனவிகழ்ந்தாய் சின்மயனைப் புன்மையனே
யெவ்வா றனைகின்று யீண்டு. (௬)

திரிபுரத்தார் தீய செயினுமவ ரீசன்
பரிபுரத்தா ளன்புடையார் பன்னும்—புரிவிலாய்
தக்கசெல்வந் தந்த சயம்பு செயன்மறந்தாய்
தக்கநீ மாயையுற்றாய் தான். (௭)

ஈச னிணைத்தா ளிறைஞ்சாத நின்னோடு
பேசுதலு மாபாவம் பேதாய்நீ—நேசமொடு
பார்ப்பதிகேண் முன்போய்ப் பணிவையெனி னிற்றியன்றேற்
பார்ப்பதிமுன் போதியென்றார் பார்த்து. (அ)

எல்லார்பொன் வாயி லிகந்து சினந்துவட்டு
வல்லா னுறுகா வலர்கேண்மின்—சொல்லாரு
மீசன் றனையிறைஞ்சேன் யானனையா னென்மருகன்
பேசயன்மா லேவல்செய்வோர் பேர்ந்து. (௯)

நின்று ரெவருமென்ற னேரன்ப ராருலகம்
பின்றாது போற்றிறைநான் பேர்தக்க—னென்றுகி
மன்றுடு கின்றவுங்கள் வன்பித் தனைமேவி
யின்று விறைஞ்சுகின்றேன் யான. (௧0

தில்லிங் கெனத்தடைசெய் நீர்மையும தோமருக
னெல்லுஞ் சிறுமி யுரைக்குமா—றல்லதென்கொ
லிங்கெற்குத் தொண்டர்நீ ரேலும் படியாற்ற
லுங்கட் குறுதியன்றே யூங்கு. (௧௧

தேற்றுதிவ் வாறுசெய்நந் தேவையெவருமே
போற்று திறைஞ்சிப் புகழ்ந்துசீர்—சாற்று
திகழ்புரிபான் மைசமைப்பே னென்னு வினைதான்
மிகவுய்ப்பப் போயினன் மீண்டு. (௧௨

தன்பதியை யெய்திச் சரோருகன்முற் றேவரைப்பார்,
தென்மகனோ டீச னிவர்வாயில்—வன்புடையார்
தம்மா லெமைத்தடுத்தார் தாழ்வோடு நானுமுற்றே
னம்மாமற் றேதினென்னு மாய்ந்து. (௧௩

நின்றுநன் றென்னையெண்ணு நக்கனையு மாதையுநீ
ரின்றுமுன்னு வென்றுந்தாழ்ந் தேத்துகிலீ—ரன்றி
மதித்திரல்லீ ரன்ன மறுத்திரே னும்மைக்
கொதித்துரிமை கொள்வனென்றான் கூர்ந்து. (கஎ)

கறுத்தினசொற் றனைக கடவுளர்க ளேக்கி
வெறுத்தெமைச்சொற் றய்போலு மேலு—மறுத்தனமோ
நின்னேவ லுன்பணியி னிற்றுஞ் செறுத்திடலென்
றன்னோர் நகர்சென்ற றற்று. (கரு)

தககன் கயிலைசெல் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா உகO.

# பிரமயாகப் படலம்.

இவ்வணம்பன் னுட்பணிசெய் தேவருமே யஞ்சிநிற்பச்
செவ்வணவீ மேலோன் சிவனருளா—லவ்வயினோர்
வேள்விசெய்து தக்கனெண்ணம் வீத்தவிமுன் மாய்வுறினு
மாளவிமலர்க் கீவனென்று னண்டு. (க)

இனையபுகன் றேவ லினிது புரியுந்
தனையரைக்கூய் மான்முதலாய்ச சாற்று—மனைவருமே
யிங்கவிபபால் கொள்ளவழைத் திம்மெனநீர் தம்மினெனு
வஙகயிலைக் குற்ற னயன். (உ)

கயிலைசென்று கோயிலண்மிக் கண்ணுதற டாழச்
செயலதென்கொல் செப்பென்னத் தீதி—லயனடியேன்
வான்மகமொன் றற்றுவனீ வந்தருள்செய் கென்னநந்தி
தான்வருவன் போதியென்றான் சம்பு. (ங)

தானுவின்ற டாழ்ந்தேகுந் தாதைதக்கன் சாரணியான்
மானுறவோர் வேள்வி மகிழ்ந்துசெய்வன்—சேனுளார்
நற்றவரோ டார்கவென நன்றுமுன்போய்ச் செய்தியென்றான்
மற்றவன்போய்ச் செய்தான் மகம் (ச)

அன்னதுதேர்ந் தக்கனத்தி லாழியன்வேந் தண்டரெலா
முன்னுதக்கன் முன்னுறலு முற்றவரோ—டென்னிறைக்கு
முக்தையவி கீப்பான் முயன்று மனோவதியோய்த்
தந்தைபுரி வேள்வியுற்றான் றன். (ரு)

நக்கனும்ப ரோவொத் தானை[illegible] [illegible]
யிக்கன்பி னோர்தவிசின் மேலிருத்திச்—சக்கிரிதான்
[illegible]தொழுதோர் மாண்டவிசின் கண்ணிருத்தி மற்றவர்க்கும்
[illegible] தந்திருந்தான் றேர்ந்து. (௬)

அந்தமிலா னந்தியைப்பார்த் தம்புயத்தோன் வேள்வியிற்போய்
நந்தமலிர்ப் பாகமுற்று நன்னுகென—வந்தனைசெய்
தன்னூறு கோடி யுதுகணங்கள் சூழ்தரப்போய்
மன்னூழி னங்கணுற்றான் வாய்ந்து. (௭)

வந்தடையு நந்திதனை வந்தனைசெய் தந்திவந்தோ
னந்தவிசு நல்கியுற்றோர்க் காசனநேர்—தந்தமக
மாற்ற வெகுண்டுதக்க னக்கிரிவாழ் நக்கனுக்கா
சாற்றிவன்கொ லென்றுநக்கான் றான். (௮)

நாரணன்முற் றேவருமா மங்கைமுதன் மங்கையருஞ்
சீரணவு மாதவருஞ் சேர்ந்தமர—வாரணன்செய்
வேள்வியின்பாற் காரியுண்டோன் மேவுகணத் தோடவன்ற
னுள்வறித றக்கதென்றா னங்கு. (௯)

நந்தியொடு சார்ந்தவரை நண்ணவிடுக் கூவினரைச
சிந்தைதனிற் றேர்ந்தயனைச் சீறிமக—முந்துசெயல்
பேதையிடத் தார்க்குரைத்தாய் பேர்நந்தி யைப்பணிந்தாய்
தாதையென்றே நின்னைவிட்டேன் சார்ந்து. (௧௦)

வெஞ்சுடலை யாடிபித்தன் வெள்ளென் பணிபவனு
நஞ்சுண்ட வற்கவிமு னல்கினு—யஞ்சனே
யின்றுமுத லில்லைமுன்மாற் கிதிபின்மற் றோர்க்குமறை
மன்றனைமே லென்னன் மறு. (௧௧)

இன்னதுணக் கேதணிபா மென்ற துணர்ந்துநந்தி
கன்னமறைத் தஞ்சக் கரநாம—முன்னியே
யின்றிவன்சொற் கேட்கவுய்த்தா யெம்பிரா னென்னையெனத்
துன்று துன்பின் மூழ்கினான் சோர்ந்து. (௧௨)

நம்ப னருணீரா னந்திசின மெய்தநொந்தா
ரும்ப ரசைந்தவுயிர் யாவு—மம்பையத்தன்
சீரிறையு மெண்ணிலனைச் சேர்ந்துட்கி னேமென்றார்
நாரணன்முற் றேவர் நலிந்து. (௧௩)

[illegible]தமய [illegible] யெழுந்தக் கனைநோக்கி
[illegible] வாய்துணிப்பே—[illegible]
[illegible]னைவிட் டேனுய்ந்தா யையனினி யென்னுனையே
[illegible]ப்பனென்று [illegible] (௧௪)

இவ்வுபயன்சே யஞ்சு விசைத்து மகத்தி
லவியாற்பில் லென்று யதற்கேய்—பவனன்றே
லென்னருளர் மால்கொண்டா யீசனன்றி வேள்விசெய்வோர்
சென்னியற வென்றூன் சினந்து. (கரு)

இன்னதோர் சாபமியம்பியும்பின் றக்கிற்கு
மன்னுசெல்வ மாய்க வானையிகழ்—புன்னின்வா
யார்தலைபோய் வேறுதலை யாகவினைச் சார்ந்தவருஞ்
சூர்தன்னுன் மூழ்க துயர். (கசு)

என்றிவைய தோதி யிருகணங்கள் சூழ்தரப்போய்க்
குன்றிடைவாழ் வார்கதிதனைக் கூறிநந்தி—சென்றமர்ந்தா
னன்னதோர் மன்றத் தமரமா ரிஃதென்கொ
லென்னமனஞ் சோர்ந்தா ரினைந்து. (கஎ)

நந்தி யடிக ணவின்றவுரை தேர்ந்தேங்கி
மைந்த னுரையு மறுகவஞ்சி—புதிவந்தோன்
வன்றுயரின் மூழ்கி மகஞ்செய் திலன்றகக
னென்று முரைத்திலா னோர்ந்து. (கஅ)

சினங்கவற்சி யின்னல் சிறிதச்சந் தககன்
மனங்கொண் டமரரொடு மன்னூர்—தனிலடைந்தா
னத்தன் மகங்குலைய வஞ்சியயர்ந் தோர்ந்திமையோர்
தத்தகர் போயினூர் தாம். (ககூ)

பிரமயாகப் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா உ௨கூ.

# சாலைசெய் படலம்.

——:o:——

அந்நாள்முற் பன்னுளா வவ்வேள்வி யோம்புகிலர்
மன்னு முனிவரும்பர் மாமறையோர்—மூன்னுமா
தக்கனோர் வைகறம்பாற் சார்சுரரை நோக்கிமகந்
தொக்கா ளாற்றலையென் சூழ்ந்து. (க)

வெய்யனுரை கேட்டிமையோர் வேதன்செய் வேள்வியின்க
ணையவி கொள்ள வளியலென்றி—செய்யாந்தி
கூற்றுமவெஞ் சாபமிந்தக் கொள்கையுணர்ந் தேயாங்க
ளன்று திருத்துமென்று ராங்கு.

அன்றாகந்தி யென்பா னறைகின்ற சாபத்தங்
கின்றனவு மஞ்சிமக மேய்ந்தியற்றா—தொன்றிநின்றீர்
முன்னாகச் செய்வனென்று முற்றிவிடு மேனீவீர்
பின்னாகச் செய்மினென்றான் பேர்ந்து. (௩)

முன்னோர் மகநீ முடித்தனெறி யையவென
வன்னோரைப் போமினென வாங்கறைந்து—பின்னோர்
சிறுவிதிமு னூழின் றிறத்தொருநாள் வேள்வி
யுறுதியிற்செய் வானினைந்தா னுற்று. (௪)

தொட்டா மனுமயனைத் தொன்மகரா முன்னுதவிக்
கட்டா மரையனைப்போற் கற்றவற்கூய்—முட்டாமன்
மேலை விதிப்படியோர் வேள்விசெய்வ னொருமுறச்
சாலை விதித்தியென்றான் சார்ந்து. (௫)

நன்றெனவே தாழ்ந்துதங்கை நண்பாற் கனகலமென்
றொன்றாகவின் றுன்றுவைப்பி லொண்புனைவ—னூன்றிறத்தி
லாயிரமா யோசனையே யாம்பரப்பு நீளமுமாத்
தூயவொரு சாலைகண்டான் சூழ்ந்து. (௬)

நாற்றிசையுங் கோபுரங்க ணன்குதவிச் சூழ்மதிலி
லேற்றிமோ னாயி லியற்றியா—னாற்றியுள்ளே
யார வணங்கினா ரிடஞ்செய் தாவிபொழில்
சீரமரச் செய்தான் றெரிந்து. (௭)

அப்பண் பமைத்தமா ராதியர்வந் தேவிழைந்த
துய்ப்பதற்காந் தீம்பதங்க டன்னிடவோர்—வைப்பியற்றி
யந்தணர்முன் யாருமுற்றா னாரவெண்ணில் சாலையெழி
லிந்திரனார் போற்சமைத்தா னேய்ந்து. (௮)

மேவினர்கொள் வான்மணங்கூர் மென்பா ளிதநரந்தம்
வீவிலையார் மான்மதமொள் வெள்ளடைபா—காவனமன்
சாலையமைத் தாடையொண்பூண் சார்நிதியின் குப்பைவைப்புண்
மாலையுற வீந்தான் வகுத்து. (௯)

ஏர்கொ ணகர்நடுவி லேய்நூறி யோசனையார்
சீர்கொண் மகச்சாலை செய்துவன்னி—சேர்தரனால்
கூறியலின் மூவகைய குண்டமொடு வேதிகைகள்
வேறுளவெ லாஞ்சமைத்தான் வேட்டு. (௧௦)

மேலொடுகீழ் சார்நிதியின் மேன்மணிக ளாற்குயிற்றிச்
சோலைகயம் புள்ளமரா சூழுருச்செய்—தேலயன்மா
லாசையுளா ரந்தாத்தா ரையரொக்க றக்கனுறத்
தேசையிருக் கைதந்தான் றேர்ந்து. (௧௧)

தக்கன் றனைத்தாழ்ந்தன் சாலை முடிந்தனனீ
புக்கிளிகாண் கென்னப் புனைவனறின்—தக்கணமே
நீங்கின் முனிவார்க்கூய்த் தீவேள்வி யாற்றமுறை
யாங்கன் வலித்துரைப்பா னாய்ந்து (கஉ)

வண்மை யுறுதருவின் மன்சமிதை சாகையிடை
நண்பரிதி கண்மதலை நாண்பறப்பை—யெணபலவா
மேவரணி நன்முதிரை மேவுவன வுய்த்திரொரு
வேவினன்சீர்த் தகக னினிது (கங)

ஆனவை நிதியை யருமணியை யைந்தருவாங்
காவை யழைத்துமசக காணியவே—மாவைப்போர்
மாமறையோர் தாம்வருவார் வானுணவோ டேனையவு
மீமென் றுரைத்தா னிறை. (கச)

விடைகொடுபோ யான்முதலா மேவினவை வெவ்வே
றடையப் பொருள்க ளளித்த—மிடைகிளைஞ
ராமுனிவ ரோர்முப்ப தாயிரரைச் சொன்றிமற்று
மீமினென்று ளுருமுண்ண வேய்ந்து. (கரு)

மற்றவர்க்கு மேவிருசீர் மன்மா தலத்தோரை
யுற்றனர்தா மேவருமே யுணடியன்றிச்—சொற்றவெலா
மீமெனவே யேவியய னீன்றமக ளுருமுறத்
தூமகஞ்செய் வான்விடுப்பான் றூது (கசு)

நக்கன் றனையலதோர் நாகரைய ராதியரைத்
திக்கொடுவான் பார்யாண்டுஞ் சென்றுகூ—யுய்க்குதிரொன்
றுய்த்து முனம்வரித்தா ரோர்மகஞ்செய் வான்யாவு
முய்த்திரென்று னூழி னுகந்து. (கஎ)

வரித்தாரிற் பல்லோர் மகச்சாலை தன்னுட்
டிருத்தியமா வேதியின்வாய்ச் சேர்த்து—நிரைத்தனர்பற்
பல்பண்ட மாஙகணித்தோர் பன்மதலை நாட்டிநிரை
மல்கிடையாத் தர்ச்சித்தார் வாய்ந்து (கஅ)

விடைகொடுபோந் தூதர் விரைவொடுவெவ் வேறு
நடைதந் தவனியுளார் நாக—மிடையமரர்
செங்கதிர்முற் கோளு மசைமுகன்மா லாதியர்க்கு
மங்கங் கடைந்தறைந்தா ராய்ந்து. (ககூ)

மாலம் புயன்மகவான் வானவர்கண் மாதவர்கண்
மேலமர்கோ ளுள்சித்தர் விஞ்சையரொண்—பாலகர்மு
னேவருந்த மாதரொடு மேய்ந்துவரக் கண்டிறைமு
னேவருங்கே ளோடுசென்று னேர்ந்து. (உ0)

[illegible]திர்கொண் டெப்பும் பிருகுவையுங் காணு
முநிரன்பிற் புல்லிமுறை முன்கோ—பதிமுதலோர்
நம்மைமெய்லா நோக்கிமகச் சாலையின்கண் மேவினமை
யிம்மெனவே கொண்டுபுக்கா னேய்ந்து. (உக)

மாலயனை முன்னர் மணியா சனத்திருத்திக்
கோலமண்ணின் ஞேர்முதலாக கூறெவர்க்கு—மேலவே
நற்றவிசு நல்கி நடுவிருந்தான் றக்கன்சீ
ருற்றமறை யார்ப்ப வுகந்து. (உஉ)

திருவும் புவிமகளுஞ் செங்கமல மேயோன்
மருவு மகளிருமொள் வாங்மீ—னுருவினருஞ்
சுந்தரியுஞ் சூரினருஞ் சூழெழவரும் வேதவல்லி
மந்திரம்போய் வீற்றிருந்தார் வாய்ந்து. (உ௩)

மாமலரோன் மைந்தன் மககாடி யாருமுறைத்
தாமருந்தித் தககன்சபைசாரத்—தோமிலொற்றர்
போந்தவன்று டாழ்ந்துநிற்பப் போய்வினிதசோ நம்மிலுரு
சாந்தகைய சாரென்று ரூங்கு. (உ௪)

கும்பன் பராசரன்சீர் கொள்ளத் திரிவசிட்ட
னம்பிருகு நற்றதீசி யார்சனகன்—பம்பினைய
சேலுமகக் தன்னையிகழ்ந் நீண்டு வருகிலார்
போதுமென்றார் தூதர் புரிந்து. (உ௫)

மற்றதுதான் கூற மலரோன் மகன்கேளா
விற்றிதுசெய் தார்யா ரிவர்தாமோ—நெற்றியிற்க
ணுற்றவர்க்கு நேய முடையரொ யாருமுட்கச்
செற்றமொடு நக்கான் றெரிந்து. (உ௬)

சாலைசெய்படலம் முற்றிற்று.

ஆ௨ திருவெண்பா உ௫௫

---

## ததீசிப்படலம்.

---

அன்னவம யத்தரியோ டாண்டமர்செய் தாங்குவென்ற
பன்னருந்த தீசியென்பான் பார்ப்பதியா—மின்னிறைக்கா
[illegible]ரிடர்க டம்முடனே யவ்வேள்விச் சாலையுறக்
[illegible]டாழ் வான்கண்டான் கூர்ந்து.

ஆரு ஞாற்குரிய னல்லன் மகவ்வாண்பா
னேனென்னெற் கஞ்சி யெனனினைக் து—ளோகையெய்தி
யீண்வெரு கென்ன விருக்தவிக நல்கவுற்றுன்
மாண்டுறவோர் மேவ மருங்கு. (உ)

தக்கன் றனைநோக்கித் தாபதர்கோ னெம்மைநீ
யெக்கரும நாடி யிவண்விளித்த—தக்கருமம்
யாவுமறை யென்னக்க னென்மகளை வேட்டொளித்தே
மேவுவரை யேகினனுன் மேல். (ங.)

போயபின்றன் மாயை புரிந்தான் மகட்கவரை
யாயவவ ஞற்றே ன துதேர்ந்து—மேயகணங்
தம்மைவிடுத் தென்னைத் தடிகெகுதிரா லென்னவன்ஞர்
வெம்மைகொடு நிற்றியென்ரு வோர்த்து. (ச)

திங்கணகர் சார்ந்தகலத் தாழ்குழலும் வந்திலாண
மங்கையென்ன செய்வளவண் மாயையாற்—றுஙகமுறு
மேன்மையகன் றேகினனவ் வேலைமக மாறறவயன்
யான்மறுத்தேன் பாகமரற் கேய்ந்து. (ரு)

அங்கணந்தி சாப மறைநதகன்ருன் வேளவியெநதை
தங்கமுற வாற்றிலனச ருளொடகந—தங்கிடுமோ
ரென்விரதங் தேர்ந்தே யிதுகாறு மஞ்சிநின்ருர்
மன்மகஞ்செய் யெண்ணமிலா மற்று. (சு)

ஆன செயலுணர்ந்தே யையமெடுப் பாற்கவிதா
ஞனகற்ற வேள்விநடத்துகின்றே—னேனைப்
பயன்வெஃ கிலனெனப் பரிசனரும வந்தா
நயனுமக்குஞ் சாற்றிவிட்டே னனகு (எ)

என்றதக்கன் மாற்ற மிருசெவியிற் கேட்டளவி
னன்றன் றகமெனவே நாடிநக்கான—மன்றவெகுண்
டிசனனபன் போலு மெரிதிகழநதா யெனனவனு
ஞசினற்றதீசிசொல்யா ஞயாநது. (அ)

அயன்முதலே யாக வளவிறநத வெஃலா
வுயிரினையு நன்குதவி யோமபு—மியலினனு
யோத்துன் பொருளா யுயிர்க்குயிரே யாம்பரனை
நீத்துமக மாற்றநின்ருய் நீ. (கூ)

புங்கவர்களார்க்குநல்கும் போறறி னவிகொள்வா
னங்கிறு [illegible] வேள்விக் கதிபன்ருன்—பஙகயன்மான்
முன்னெவர்க்கு மெண்ணரிறிரு முன்னளித்தோன் கைலயுளான
[illegible] யுப்பரிலார் சாற்று. (க0)

தேவர்தக் தேவன் சிறப்புடைய வீசனெங்கோன்
மூவர் முதல்வன் முடிவிலா—னாவியினு
ளாவியா யார்கின்று ளாதியென்றே யாரணங்க
ளேவர் தமைபிசைத்த தீங்கு. (கக)

விதிமுதலா யுள்ளோர் வியனுயிராந் தானு
பதியவன்றன் வேலை பரித்தார்—மதியயர்ந்தா
யந்தணருக் கீசனை வர்க்குமற்றோர் தெய்வமென
முந்தைமறை கூறு முறை. (கஉ)

ஆதலினே வர்க்குமே லாமிறையை யெள்ளிநிற்றல்
பேதமையே யீதோர் பெருமிதமன்—றேதமுற
வாற்றவுமார் நோற்பா ரனையை மறைவொழுக்க
நீத்திமக மாற்றநின்றாய் நீ. (கங)

விலக்கினையோத் தின்வாய்மை வேள்விசெய்யி னூறுங்
கலக்குமே லையானை காண்டி—யலக்கணுற்றே
யன்னவற்கஞ் சாவலத்த ராருண்டேன் மாய்வரெம்மு
னுன்னுமறை யேகனென்ற தோர்ந்து. (கச)

ஆதியந்த மில்லா வமலற் கவியைநல்கி
வேதமுறை வேள்விசெய மேவிலாய்—தீதனெண்ண
மென்னவரன் பாகத்தை யோர்மாத வறகீந்து
மன்னுமகஞ் செய்வனென்றான் வாய்ந்து. (கரு)

அதுகொடியோன் கூற வருமுனிகேட் டெவ்வ
மிதுநவின்றாய் மேலா வெவரு—தசிசெய்
செயலினரைத் தாழ்த்திச் சிறியரைமே லாக்க
னுயும்வகையன் றென்றா னுமக்கு (கசு)

உன்ற னுருத்திரனை யொப்பார் பதினொருவ
ரொன்றாகைய ருள்ளார்திக் கீசானர்—தன்றினு
ரன்னவர்க்கு முன்ன மவிர்ப்பாக நல்கிமக
மன்ன முடிப்பனென்றான் வாய்ந்து (கஎ)

மூன்று முருத்திர மூர்த்தியெலா மீறுசெய்து
தன்னி லொடுக்கிப்பின் றானல்கித்—தன்னவைகு
மன்றான் பரமவன்றா னார்ந்துருப்பேர் சார்ந்தவர்நேர்
மன்று ரளப்பிலரா மற்று.

ஆதிருப் பேர்பெற்றோ ரன்று னியலடையா
ரோதுருவு மற்றே யுலகிறையென்—றாசாத்திற்
போற்ற விருப்பரிந்தப் போசனுநன் கேத்தியல்பாற்
சாற்றுதலை மைசார்வர் தாம். (க௯)

[illegible] றனைவிதயத் தென்னியென்னில் காலனைத்
துசிறுருப் பெற்றவன்ப ரன்னரின்னர்—வாசவன்முன்
மன்னிமையோர் போல வாத்தகா ரெர்ந்தைமுன்னன்
பின்னிலையர் போலுமென்று னிங்கு. (உ0)

என்றலுமே தக்கனன்றீ தென்னையன்மா னிற்கவீ
ரொன்றதொழில் செய்யு முருத்திரன்முன்—னின்றதென்சொல்
பன்னுதிநீ யென்னவரன் பாத முனித்ததீசி
யென்னுமுனி சொல்வா னெடுத்து. (உக)

ஆதியந்த மில்லா வணற்குருவம் பேர்செய்கை
யாதுமிலை யிவ்வாற் றினையியம்பும்—வேதமெலா
மன்னபர னுணையினு ராவிவினை நீக்குவா
னுன்னியருள் செய்வன்மே லோர்ந்து. (உஉ)

உருவுசெயல் பேருளி னுற்றனைத்து முன்போ
றெரியநல்கி வேதன்முற் செப்புஞ்—சுரரையீர்
தேற்றபணி யிட்டளித்தி றீதலெமக் காமென்னச்
சாற்றினமை கேட்டிநீ சார்ந்து. (உ௩)

அந்தமுன்னில் லாவி யனைத்து மளிக்குமன்பார்
தக்கைதனக் கன்றியவேர் தன்மைதான்—மைந்தரார்
தேவரின்முற் றமையாற் சீர்த்தன் வயிற்கொண்டான்
வீவினையே செய்யியற்கை வேட்டு. (உச)

அன்றமா ரீசனைத்தாழ்ந் தாரிப் பணிபுரிந்தா
யென்றிப் பரந்திரு மெர்தையென—வொன்றுமுமக்
காயுளளவுமே யாற்றுமின்மெய் நீறணிந்தைந்
தாயவெழுத் துன்னி ரகத்து. (உ௫)

இங்கனிவை செய்வீரே லிந்தத் தொழிறரிக்கு
மங்கவலி யெய்துவீ ரன்றியுமே—நங்களைக
னும்மருங்கு நின்றருளு நோன்றொல் லுளகாட்டி
யம்மகன்மை கொள்விரென்று ணங்கு. (உ௬)

அன்னவர்க்கொண் டெவ்வகைய வாஞ்செய்கை நன்களித்துப்
பின்னுளதோர் செய்கைசெய்தெம் பெம்மான்முன்—பன்னுமறை
யன்னவனை யைந்தொழிற்கு மாமுதல்வ னென்னுமிது
வுன்னுதிநீ கேட்டியினு முற்று. ([illegible])

உருத்திரனென் போரற்கு மொப்பிலவன் மைந்தர்
[illegible]ற் போற்றுங் கணங்க—டிருத்தகுசீ
[illegible]ன்றன் பேறுபெற்றோ ராகு மழற்கடவு
[illegible]க்கு மாமா லினிது.

பரம விடர்க்கடலுட் பட்டவரை மேலெடுப்போ
னேமன் பரம னுருத்திரனே—[illegible]
னன்னான் மகர்க்குமன்ப ரானவர்க்கு மேனையர்க்கும்
பின்னாக மேயதவன் பேர். (உகூ)

முன்னவுணர் தம்மை முனிந்திவோ னும்பர்செல
மன்னிதியம் பெற்றழலோன் வாயதைவைத்—தொன்னலர்மேற்
சென்றுசமர் செய்துவரத் தீங்கா தோடியழா
நின்றனைய பேர்பெற்றா னோர்ந்து. (௩0)

ஓது மறையி லுருத்திரனென் பேர்காட்டி
யேதிலரைச் சொற்ற திறைமேற்சார்ந்—தாதியாற்
சுட்டி யறைந்ததுவுஞ் சொல்பிறர்மாட் டேறுவிலீ
துட்டெளிந்தோர் தேர்வா ருணர்ந்து. (௩க)

உற்றமறை தன்னு ளுருத்திரனென் பேராற்றீ
மற்றவரைச் சொற்ற வகையுரைப்பல்—பெற்றமூ
ரீசற் கியம்பு மிடநாடி யாங்கவன்சீர்
பேசிறைமை காண்டி பெரிது. (௩௨)

முந்தையொர்நா டேவர் முனிவ ரிவரவர்தா
மந்தமிலா தோர்பரமென் றுங்கறைந்து—சந்தமிற்போய்
வாதுசெய்து தேர்வறிதான் மாமலரோன் பாலணுகி
யோதுபரம் யாரென்றா ருற்று. (௩௩)

அன்ன மொழிகேட் டயன்றான் கருத்திலவை
மன்னமறை காட்டி வகுத்தமெனு—முன்னவனை
யுன்னியங்கை யோசசி யுருத்திரனென் றேசாற்றித
துன்னிநின்றான் றேர்தருவான் சூழ்ந்து. (௩௪)

அங்கணயன் சூளா லவிராதி யம்பகவன்
சங்கரனென் றேகாட்டித் தானுருகிப்—பொங்கக்
கனிவினொடு மீமிசைசேர் காமருகை மீட்டு
முனிவர்க் கினையசெப்பு முன். (௩௫)

அண்டரோ டெம்மை யளித்தான் மறைதந்தான்
மண்டெவர்க்கும் வேலை வகுத்தனன்சீர்—கொண்ட
வருணீரி னைந்தொழிலு மாற்றுவன நாதி
பரனிமல னென்றுமிலான் பற்று. (௩௬)

முற்றுமாய் நின்றான் முடிவிலான் பொன்மலர்த்தாள்
பற்றினர் நாடும் பழமையோன்—குற்றமிலா
[illegible] சிவன்பரமென் றாரணமெ மாமறையு
[illegible]னுபதி யீசனென்றா னோர்ந்து. (௩௭)

அருள்செய்து பின்பானை யங்கைதொழு தங்கான்
மருள்கல்பூ மன்னிருந்தான் மந்தப்—பொருளியநேர்த்
தொன்றறவோ ரெக்கையா யுற்றுய் குருவாறு
பென்றவன்று டாழ்ந்தா ரினிது. (௧௮)

தின்னடிதாழ்ந் தாரையின்று தொட்டமலன் மாவடிவ
முன்னுதிர்நற் பூசை யுஞற்றுதீர்—மன்னு
மிரும்பவந்தான் றீர்தீர்சீ ரென்னவிடை தந்தான்
னரும்பவந்தா னில்லா னமர்ந்து. (௧௯)

ஆதலினெம் மீசனே யாயும் பரம்பொருளா
மேதிலா ரெல்லா மிலகுயிரா—மோதுமிதை
யாதரத்தி ஞனுரைத்தே னன்றுண்மை யேகாண்டி
வேதநூல் கூறும் விதந்து. (௨௦)

அன்றயனிற் காரு மானுர் புகழனைத்து
நன்றுணர்த்த நீயதனை நாடியே—நின்றுதவஞ்
செய்திதுபெற் றுய்நினக்குத் தீதுறுநா னின்றுவந்
தெய்தமறந் தாய்போலு மிங்கு. (௨௧)

திக்கைமுதல் யாவருமே தாமுடிவு சார்தகவால்
வந்து னவையிருந்தார் மாயையாற்—பந்தமுற்று
ருய்ந்திடுவா னெண்ணினையே லோரரற்கு நல்கியவி
யிந்தமகஞ் செய்தியென்று னிங்கு. (௨௨)

ததீசிப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா. ௨௯௭.

---

# ததீசியுத்தரப் படலம்.

---

இவ்வணர்ந்த தீசி யியம்பநகை செய்துதக்கன்
வெவ்வென்புஞ் சென்னிகளு மேலணிந்தே—யவ்வமரர்
வெந்தவெறுஞ் சாம்பர் விழைந்துமெய்யிற் பூசுமோ
பந்தமகன் மேலாய பரம். (௧)

கழிநீ யுடலேந்திக் கானிலிழி கேச
மொழிகிரிப்பல் கூர்மத்தி ஞேடு—மிழிதரப்பூண்
டந்த முறவே யனைத்துயிரும் வீக்குமோ
[illegible] லில்லமல ஞக்கு. (௨)

புலித்தோ லுரியுடுத்துப் போதகத்தோல் போர்த்துக்
கலியழன்மான் கூலமுங் கைக்கொண்—டெலியென்கு
மையமு மேற்குமோ வாடலுமே யாற்றுமோ
வைய பகவ னமர்ந்து. (௩)

வெஞ்சா ரதர்படையா மேவித் திரியுமோ
நஞ்சா ரரவணிந்து நாறுதலை—யஞ்சார்க
மேற்றுருவிற் றிக்குடையேய்ந் தீசனக்க ணுகுமோ
வேற்றுருவுங் கொள்ளுமோ வேட்டு. (௪)

விடையிவரு மோவால மேவுமோ தேவன்
சடைதனி லாடுமோ தோகை—முடிசுமந்தோர்
மங்கைக் கிடந்தருமோ மைந்தர் தமைப்பெறுமோ
வெங்குணமுங் கொள்ளுமோ வேட்டு. (௫)

ஆதலினும் மீசனே ராய்குணமில் லானவனுக்
கீதலின்றெம் மாமகத்தி னின்னவியென்—றோதலுமே
பண்ணவனைக் கொல்லோ பழிக்குவனின் றெனெனநக்
கண்ணன் முனிவெகுண்டா னங்கு. (௬)

எந்தைநிலை தேறு திமையோர் சபைநடுவ
ணிந்தையிற்சில் வார்த்தை நிகழ்த்தினு—யந்தரிதன்
மாகேள் வாக்கவைசார் வண்ணமுண ராய்கயவ
தீகே ளென்னவில்வா னேர். (௭)

கூர்தன் னருளுருவங் கொண்டிடுமெங் கோன்றலைமைத்
தார்கொள் புலவரைமுன் றந்தனைத்து—மார்வி
னளித்தருள்செய் வானுதவி யாருயிரெல் லாம்பூத்
தளித்தவன்க ணின்றளிப்பான் றன். (௮)

பொன்னிறங்க ணின்றவைதாம் போற்றியவைக் கூணருத்தி
முன்னை வினைதொலைச்சி முன்னரும்வீ—டன்னவைக்கு
நன்னரே நல்கி நவிலுபிரோ டெவ்வுலகும்
பின்னரே வீட்டும் பெரிது. (௯)

அன்ன பொழுதி லவையழித்த பின்னளிப்போ
னென்னநின்ற வரையொடுக்கு மேய்ந்திதற்பின்—முன்னுளதோ
ரேகமதாய் நின்றுறைய மெம்மூர்த்தி யிப்பெற்றி
யாகவென்றுஞ் செய்யு மமர்ந்து. (௰)

இயலுடி பிவ்வண்ண மெந்தையபேர் தோறு
மயலு றியசென் பணியும்—வியலுரு
மன்னூர் சிறஞ்சர்மா வாகத்திற் சென்னிதனின்
மின்னரப் பூண்மேறைய மேல். (௧௧)

அல்லவர் தம்மை யயின்மூந் நிலையிலான்
மெல்லவெடுத் தேந்தும் விழியினாற்—றொல்லைநா
ணீறுக் கியம்புனையு நித்தனவர் செய்தவத்தின்
பேறுய தோர்ந்து பெரிது. (௧௨)

ஆதலாற் றன்னை யமர்ந்து வியப்பதற்கண்
றேறுமவை பூண லுயிர்த்தொகைக—ளாதனிவ
னென்றுதன்பா னண்ணிமுத்தி யெய்தியுய்வா னன்புசெய
லொன்றுதிற மென்றறிநீ யோர்ந்து. (௧௩)

விண்ணவர்கட் கின்னல் விளைபொற் கணனொருகான்
மண்ணகத்தை வௌவி வயிற்றுவைத்துத்—துன்னெனவே
பாதலத்திற் புக்கான் பனிப்பவுயிர் கண்டரியாய்
மீதலத்தின் மேவநின்றான் விண்டு. (௧௪)

ஓரிமைக்கு முன்மா லுறுபா தலமுற்றுக்
கூடெயிற்று லன்னவனைக் கொன்றுமுன்போற்—பாரதனைத்
கொண்டுபதித் தந்தைகொடு கோட்டாற் புவியிடந்து
மண்டு கடலுடைத்தான் மற்று. (௧௫)

கண்டுமைகேண் மான்மருப்பைக் கையாற் பறிப்பவுணர்
விண்டுமற்றக் கோடும் விளிக்குமெனுப்—பண்டுபோ
லின்றிறைஞ்சப் போனு னிமலனதைச் சின்னமா
வொன்றியலிற் பூண்டா னுரத்து. (௧௬)

அந்தரர்தம் மோடவுண ராழி கடையுமெல்லை
மந்தரமா மத்தமிழ மாலதைவெந்—தந்துநிறீஇ
யாமையாய்த் தாங்கமதி யாரமிர்தை நம்மதென
வாமைய லாய்மலைந்தா ராங்கு. (௧௭

மன்போ ரினைநீக்கான் மாயனிந்த வெற்பைநிறீஇ
வன்போ டுலையா வகைகாத்து—மென்போக்கி
லத்தையெய்தி யாசைவரை யாரலைபோ மாறுழக்க
வெந்தையது தேர்ந்தா னினிது. (௧௮

அங்காளெங் கோன்போ யரியாமை யைக்கடிய
முன்னு வுருக்கொடுமான் முன்னேத்த—பன்னுதன்
வல்லவுணர்ப் போக்கி மருந்தமரர்க் கீகென்று
செல்லவவர்ச் சாய்த்தனன்மால் செய்து. (௧௯)

மாய்த்தமிர்க் கீந்தமுது மால்புவிகாத் தானென்பர்
மீத்[illegible] மை யினிர்ரோட்டைப்—பூத்தடங்கை
[illegible] மலன் வாக மருப்பிதொரு
[illegible]க் காத்தினன் பண்டே.

மூன்பொருநா டாருக்கான் மெய்முனிவர் மாகுமாற்
கன்பிலராய் வேள்விசெய்தம் கார்தாமே—பின்பமுத்தி
யெய்துவா ரேற்றிருந்தா ரீதுணர்ந்தே யீசன்மா
லைநினுற வுன்னினா னங்கு. (௨௧)

அன்ன துணர்ந்துமா லங்கயிலை யுற்றநந்தி
முன்னருய்ப்பத் தாழ்ந்தான்றான் முன்னிகிற்ப—தன்னினைப்
தானுணர்த்தி மாயன் றடக்கைபற்றி யாண்டெழுந்தே [வைத்
தானவெற்பு நீங்கினான் சமபு. (௨௨)

கண்ணன் றனைநோக்கிக் கண்ணுதலோன் ஞானியல்கொள்
பெண்ணன் குருக்கோடி பெட்பினென—வண்ணமதர்
மாலவுரு மாலினியா மாலுறக்கன் மாதயரக்
கோலவுருக் கொண்டனனெங் கோன். (௨௩)

அத்தனுரு நோக்கிமா லாயரியு மாலானா
னத்தனல்கு தோனித்து நக்கனாய்ச்—சித்தனொளிர்
சூலம் பலிக்கலன்கை துன்னவிண்டு பாற்செல
ஞாலமுனைக் கான்புக்கா னன்கு. (௨௪)

புக்கனன்மா யோற்பாராப் போந்துநமை யெண்ணுது
தொக்க முனிவர்வாழ் சூழலுற்று—மிக்கமால்
பூட்டி யவர்விரதம் போக்கியே நீங்கத
மாட்டிடுற வென்றுசென்றான் வாய்த்து. (௨௫)

விடுத்தலுமே மால்சென்று வேள்விதவந் தாமே
கொடுத்திடுமோ முத்தியெனுங் கொள்கை—பிடித்த
முனிவரவைக் கண்ணெய்தி முன்வேள் பலரெய்
தனியம்பி னேக்கி நின்றான்றான். (௨௬)

கண்டார் முனிவர் கதுமெனவே காமநசை
கொண்டார் விரதம்போய்க் கூர்மகச்சீர்—விண்டார்
மிகமதனீர் பாய மெலிந்தா ருணர்ச்சி
யகலவுரு காநின்றா ராங்கு. (௨௭)

ஆலமரு மத்த னருளா லரிகொண்ட
கோலவுரு நோக்கிக் குலமுனிவர்—சீல
மனைத்துநீத் தொண்சுடர்மூ ணும்விட்டி லென்ன
வினைத்துவந்து சூழ்ந்தார் செடித்து. (௨௮)

பார்கொலோ வான்கொலோ பங்கயன்மா லங்கசன்வா
ழூர்கொலோ நம்முறையு ளும்பர்க்கா—கார்மெய்ச்
செடிகொ ளவுணர்ச் செகுத்திலுமை யாரென்
றடியர்க் கருளுமென்று ராங்கு. (௨௯)

என்றுபல பன்னி யிடருற் றெரியிடைவீழ்
மென்றளிர்போ னின்றார் விரகத்தீத்—துன்றயின்றார்
காடிமுனி வோரிருக்கை நண்ணி யிசைமறைகள்
பாடிமையயங் கொள்வான் பரன். (௩0)

பாட்டிசையங் கார்முனிவர் பன்னியர்கேட் டாரவரை
வேட்டனகண் சேறும் விரைவினொடு—வீட்டமொடு
சென்றிறைவற் கண்டனர்வே டக்கணைமெய் தைத்தாசை
யொன்றுததி மூழ்கினு ருற்று. (௩௧)

மெய்யிலணி காணேனும் விழைந்தினிசை கேட்டலுமே
வெய்யவிர கத்தழலில் வீழ்ந்தனமா—லையர்தா
மையமது கேட்கவந்த தன்றறிவை மாரைமையல்
செய்யவந்த தென்பார் சிலர். (௩௨)

நின்றநன் றிம் மாதவற்கு நற்றாக நல்கியுண
வின்றுநல்கு வோமென் றிரங்குநல்லார்—மன்ற
வுருவிலொளிர் பொற்றுகிலோ டொண்கலனபோய் நாணித்
தெருவினடு நின்றார் சிலர். (௩௩)

பாசமது நீத்தன்பர் பாலருள்செய் யையர்தங்
கோசமது நோக்கியே கும்பிடுவார்—நேசமுற
வங்கைவளை யுண்கலத்தி லாதரத்தி னன்னமுடன்
செங்கைவளை யீவார் சிலர். (௩௪)

சூலமுறு கையுஞ் சுடர்விழிகொள் பாலமொடு
கோல முறுசடையுங் கொண்டவிவர்—நீலகண்டர்
மாசொழித்தா ரீசர்நம் வால்வளைபூ ணுடைகற்புத்
தேசொழித்தா ரென்பார் சிலர். (௩௫)

ஐயமது கொண்டிடைதா னங்கழலிற் றட்பப்பைப்
பையவே சென்று பலிக்குவந்த—வையருருத்
தாமொழியா துன்னலின்மூன் சார்தோற் றுருவெளியிற்
றேமொழியார் பெய்தார் சிலர். (௩௬)

இன்னர் பலர்சூழா வீண்டுபூந் தானைவளை
துன்னுகல ஞண்டிறப்பச் சோர்ந்துகற்பு—முன்னுமுளந்
தாமறுகி மாலாய்த் தனைத்தொடர வெம்பெருமான்
மாமறுகிற் போனான் மகிழ்ந்து. (௩௭)

சில்லிடையாழ் வாசிக்குஞ் சில்பான் மறைபாடி
சில்லிடையோர் கொள்கிவறால் செப்புமால்—சில்லிடைத்தன்
மெய்காட்டுஞ் சில்லிடைப்போய் மேவையம் கேட்குஞ்செங்
கைகாட்டுஞ் சூலத்தான் காண். (௩௮)

திருவினைய மாதர் சிலர்கழன்மே விட்ட
மருவலரும் பூணும் வளையுந்—தெருவிர்ந்த
தய்யையார் மால்வான்மெ யுன்னித் தளரினன்றன்
செய்கையார் செப்புவார் தேர்ந்து. (௩௯)

பைந்தொடியார் கற்பாம் பாவை மதிக்குமென்னின்
மந்தரமே போன்றான் மடவார்மைக்—கந்தரன்மேன்
மேயவிழை வாற்கருப்ப மேவிமகார் நாற்பானென்
றுயிரரைப் பெற்று ரமர்ந்து. (௪௦)

மைந்தர்க ளத்தன் மலர்த்தா ளிறைஞ்சியன்பாா
புந்தியினின் றேத்தப் புனிதனீ—ரந்தவமிங்
காற்றுதிரென் றேக வரனை நினைந் தம்முனிவர்
கோற்றங் கிருந்தார் றுனித்து. (௪௧)

நித்தனுரு நீத்தானை நண்ண வரமுனிவர்
தத்த மடவார் தமைநோக்கி—யெய்த்திவரு
மானகலை நாண்டுறந்தா ரந்தோ வெனவிரங்கி
மானகனி கொணடினைந்தார் மற்று. (௪௨)

[illegible]ன்று மெழில்கொ ளொருத்தியெம்பான் மேவியே
மன்னுந் தவஞ்சிதைத்து மால்செய்தான் —பின்னொருவன்
பன்னியர்முன் வந்துகற்பைப் பாற்றினனென் மாயமெனு
முன்னினர்சேர் வுற்று ரொருங்கு. (௪௩)

எண்ணுதலேய் மாமுனிவ ரெய்ச்தமனந் தேறியுயர்
கண்ணுதலே யாகுமின்னோர் கற்புடைத்தோன்—பண்ணுதலே
மன்மா தவந்தொலைப்பான் மானயனி யாகிவந்தோ
னன்மா தவன்போலு நன்கு. (௪௪)

நம்மா தவஞ்சிந்தி நந்திலுகன் றலின்னும்
வெம்மா தவஞ்செய்து மேலுறுவோ—மம்மா
செழிகயற்கண் ணார்கற்புச் சிந்தும் வசைச்சொற்
கொழிவுமுண்டோ வாருமெங்குமுற்று. (௪௫)

தாரொருமா வேடந் தரித்தரியை விட்டிவகை
யானசெயல் செய்தோ னரனெனவே—மானமுற்றுத்
தேமொழியார்க் கூயார்பின் செல்கின்றீர் கற்பிகந்தீர்
சாயினன்றேற் போமினென்றார் சார்பு. (௪௬)

இத்திறங்கேண் மாத ரிவர்க்கண்டோர் முத்தரே
பித்தர் முனிவரெனப் பேர்த்தருவுள்—வைத்தவையார்
[illegible]இருக்கை புக்கார்மா றன்றுறுவங் கொண்டெ
[illegible]கண்டர் காளைவந்தா ராங்கு. (௪௭)

இடவுளாங் குற்றனவிற் காய்ந்திறையோன் றன்னை
மடமுனிவர் நோக்கியங்கண் மன்னக்—கொடியதோர்
மாமகத்தை யாற்றி மடித்து மிவனையெனத்
தீமகத்தைச் செய்தார் செறிந்து. (௪௮)

அந்த மகத்தி னனலி னிடைமிடல்கொள்
வெந்தரக்கோன் றண்டம் வெடிபடத்தாய்—வந்ததனை
யீசன்மே லுய்ப்ப வெதிர்போ யுரித்ததன்றோ
லாசி னானுடுத்தான் சூழ்ந்து. (௪௯)

இங்கிதுசெல் பின்னீ றியற்று கனிச்சியொன்று
செங்கனலின் பாற்றோன் றித்தீயருய்ப்பச்—சங்கரன்றன்
சார்படையா மேவவதைச் சம்புகையி லேந்திமம
தார்படையா யாதியென்று ளாங்கு. (௫௦)

பின்னொருமா னங்கட் பிறந்த தனைமுனிவர்
பன்னொருவன் பால்விடுப்பப் பாய்ந்தெங்க—மன்ன
தடக்கைலே யாளியதை யஞ்செவிநேர் கூவென்
றிடக்கையி லேந்திநின்று னேய்ந்து. (௫௧)

ஏந்தியபின் வேள்வி யெரியிலெண்ணில் பாம்பெழுந்தே
யார்ந்தவர்தா மேவ வவைசினந்து—போர்தனவா
லன்னவைகண் மேவ வரன்கரத்தி னூலெடுத்து
முன்னரவ மோடணிர்தான் முன். (௫௨)

பின்னர் மகத்தியிற் பேரிடியின் மாமுழக்க
மென்னவெண்ணில் பூத மெழுதலுநீர்—மன்னானேன்
மாற்றுதிரென் றுய்ப்பவரன் மற்றவர்ப்பார்த் தெம்படையாய்ப்
பாற்றகவிற் சார்திரென்றான் பண்டு. (௫௩)

வந்த கணம்படையா மன்னவன்றூர் சிறிமகத்
தந்தழலில் வெண்டலைதா னென்றெழலு—நந்தியிசை
மன்னதனை யேவ மலர்க்காத்தி னூலெடுத்துச்
சென்னிதன்மேல் வைத்தான் சிரித்து. (௫௪)

அந்த முனிவ ரமலனைப்பல் காலேக்கி
மந்தணங்க ளேவி மடித்திரென—வெந்துடியாய்
வெம்முருவி னூர்த்துவா மீயுலகம வீயுமென
வம்மகரத் தேந்திநின்று னாங்கு. (௫௫)

இத்திறம்யா ரேபுரிவா ரென்று முனிவரெலா
மொய்த்தழலி னின்றூர் முயலகனை—மெய்த்தழலை
[illegible] போக்கானை நண்ணி முடித்திரென
[illegible] வந்து. (௫௬)

மன்னனலத் தேவுமுட்க வந்திமொத் திகைகந்தா
முன்னவன்கை யேந்தி முயலகனைத்—தன்னடியா
லாற்றவிழத் தள்ளியத்தா னன்னவன்மே லூன்றியும்பர்
போற்றநின்றா னீசன் புரிந்து. (௩௭)

நீற்றலும்வெந் தீயோர் நெருப்பெழப்பார்த் தின்னுமா
றூற்றனனந் தோவுஞற்றி யுய்த்தவெலா—மிற்றனவோ
வென்றிரங்கிச் சாப மியம்பினு ராங்கவற்று
ளொன்றும் பயனிலவே யுற்று. (௩௮)

சாபமுமே மேவாத் தகையுணர்ந்து மாதவர்கொள்
கோபமும்போய் வன்மைசெயல் குன்றிடநாண்—சாப
மிழிபாக வுண்ணடுக்க மெய்ந்துதொலை வில்லாப்
பழிபாவம் பூண்டார் பரிந்து. (௩௯)

ஏற்றமிலா வத்தவத்தோ ரேழைமையை யென்னென்று
சாற்றுதுமீ றில்பரனைத் தாமுடிப்பா—னாற்றமகஞ்
செய்துபல வுய்த்தறைந்தார் தீச்சாப மற்றாற்றீர்த்
தெய்துவற்றோ வன்புமற்றா ரேற்று. (௪௦)

நித்தன் முயலகன்மே னின்றுநடஞ் செய்திறத்தை
நத்தனயன் கண்டிறைஞ்சி நன்கேத்தச்—சித்தனைந்து
காம்பணிவாழ் வேர்துங் ககனத் தவருமே
தாம்பணிவர் போல்வீழ்ந்தார் சாய்ந்து. (௪௧)

அருளினட மாடு மரன்புவனம் யாவும்
வெருவிவிழ னோக்கி விழையுந்—திருநடனந்
தீர்ந்துநிற்பச் செம்மலொடு தேவ ரெழுந்தன்பு
கூர்ந்து தொழுதார் குறித்து. (௪௨)

மாதங்கன் றன்னை மதியா முனிவர்க்குப்
போதநல்க லோடும் பொலிந்தெழுந்த—வேதமிழை
யெம்பிழைகள் யாவு மிறைவ பொறுத்தியெனச்
செம்பதமுன் வீழ்ந்தார் செறிந்து. (௪௩)

முனிவர் திறநோக்கி முன்னெறியா றுற்றே
யினியதவஞ் செய்திரென வீசன்—றனிவரையிற்
சென்றயன்மா லாதியர்தந் தேமுறச்செய் தேருமைபா
லொன்றவவண் வீற்றிருந்தா னுற்று. (௪௪)

தங்கக் கரியுருவிற் றொல்லுலகெ லாந்தொலைக்கும்
வெங்கட் கயாசுரன்மா மேருவிற்போய்ப்—பங்கயனைப்
போற்றி யரிய பொருவி றவம்பயில
லாற்றலைமன் றோன்றினன்மு னன்கு. (௪௫)

வேண்டுவதென் சொல்லென்ன வேத னவனடிகேண்
மாண்டிடா வாயுள் வயம்வலிமை—யீண்டருடி
யென்ன நகைத்தளித்தோ மீசன்பாற் சேறியே
வின்னசிந்த மென்றகன்று னேய்ந்து. (சுசு)

சொற்றவயன் சொன்ஞேக்கிச் சோதிமேற் போகல
மற்றவர்பாற் றன்ன மனத்துன்னி—யுற்றவுண
னண்டர் பதந்தோறு மண்ணியமர் செய்தவரூர்
மண்டனலுக் கிட்டான் வளைந்து. (சுஎ)

பொன்னகருஞ் சென்று பொருதுமக வாற்றுரந்தே
யொன்னலன் மன் மாவையலைத் தூ ராழித்துப்—பின்னர்த்
திசைக்கா வலர்ச்செருத்து தீர்த்தவுணர்ச் சாய்த்தா
னிசைக்கா ரரக்கரையு மேற்று. (சுஅ)

மஞ்சுறழ்க யாசுரன்பார் வைகிமக்க டம்மையட்டு
கஞ்சிற் றிரிதலுமே நற்றவர்க—ளஞ்சி
யணிகாசிக் கோடி யவனுளா ரோடு
மணிகன் னிகைபுகுந்தார் வாய்த்து. (சுகூ)

அங்கனரற் றூழ்ந்துதந்தி யாயவுணன் வந்துலகட்
டிங்கனை மைக் கொல்வா னெணிவருவான்—றுங்கமா
ரையநின தாளரண மாவடைந்தே மேவடியே
முய்யவரு ளென்று றுகந்து. (எ0)

அன்ன துணர்ந் தாரசுர னத்தளியில் வந்திறுத்து
மன்னுருமி ஞர்ப்ப வணங்குமன்ப—ருன்னமுலைந்
தொல்லு மாற்றழீஇ யுண்மயங்க வலைதோர்ந்துங்
கொல்லும் வகைசெறுத்தான் கூர்ந்து. (எக)

மற்றவன்செல் காலை மழுவலா னும்பருய்ப்ப
வத்திறங்கண் டுக்கிரமிக் கார்வடிவுற்—றுத்தமமா
வங்கம்விண் டோயசிமிர்ந் தாயிரமாங் கோடியினர்
மங்கொளியிற் றேன்றினன்சீர் வாய்ந்து. (எஉ)

உக்கிரமாப் பேர்வடிவ முற்றுாப்ப வத்தொனிதான்
மிக்க பலயுகங்கண் மேவிற்று—தொக்கயன்முற்
றேவர் வெருண்டார் சிவனிவனென் றோர்ந்துமத்தன்
மாவமர்செய் வான்கூண் மறந்து. (எங)

தானவன்று னேர்தலுமே சம்புகடைத் தீயெழப்பார்த்
தான மலர்ப்பதங்கொண் டக்கொடியோ—னீனமுற்று
வீழ வுதைத்து வெரின்பிளந்தங் கையுகிரால்
வேழ முரித்தான் வெகுண்டு. (எச)

[illegible] கைய[illegible] [illegible] காந்திரு
[illegible]ந்தரோ வீர்த்தநுமே பெவ்வுயிருக்—நீர்த்தனமெய்
யொண்மா வொளிநோக்கிக் கொன்றுற்றப் பார்த்திட்ட
[illegible]மாக் கதிரிழந்த காண். (சூ)

போதகத்தின் புன்சருமம் பொற்புயமேற் போர்த்துகனி
யாதரத்திற் றன்கடர்சீத் தாருயிர்கட்—கோதுவிழிக்
கெல்லாங் கதிரகல்வி யேய்ந்தவச்சங் நீர்த்தளித்தா
னல்லாருங் கண்டத் தான். (எசு)

அந்த வமயத் தமரர் துதிதாக்கேட்
டெந்தைமணி கன்னிகைபி லேகமூர்ந்து—தந்திநெய்த்தோர்
காலவிரு னென்பாதி கண்டுகொன்று னீசனெனு
மாலகன்றோர் தேர்ந்தார் மகிழ்ந்து. (எஎ)

காசிநகர் வாழ்பவருங் காமாதி விண்டவரு
நேச முறப்பணிந்து நித்தற்குப்—பூசை
புரிவித்துப் போயினர் போதகத்தோல் போர்த்த
புரிதிற் றெரிதியென்று றங்கு. (எஅ)

பூரண[illegible]மொரு வைகன் முராரியயன் மேருவின்கண்
மன்னுயிரிற் றேவர் வரம்பிலாவர்—தன்னவர்த்தாழ்ந்
தோவி துலகத் துயிர்க்குயிரா யுற்றுநின்றோ
ரேவரெங்கட் கோதிரென்று ரிங்கு. (எகூ)

என்னனுமே வேதா விறைமாயை யான்யானப்
பன்னும் பிரமமாம் பண்பினிற்றேர்ந்—தன்னிரெனத்
தேனெய் திருத்துழாய்த் தேவமற்றாய்ச் சீர்த்துனையின்
யானே பிரமமென்று னேய்ந்து. (அ0)

இருவருமே யின்னகலின் றெண்ணினுட் சிறிப்
பொருவி றருக்கம் புரிய—மருவெவருஞ்
சென்றார் மறைகுடிலே சீருக்கொண் டாதிசிவ
னென்றாய்ந் துரைத்த வெதிர்ந்து. (அக)

வேதங் குடிலே விளம்புமொழி கொண்டிலர்போர்
போத கவிலப் புராரிகண்டே—யோதவர்தற்
போத மொழியவுன்னிப் பொங்கொளியாய் நிற்பவ
னீறெனவே யோர்ந்திலர்மா லேய்ந்து. (அஉ)

இயலறுதேர்ந் தீசனதி லேருருவங் [illegible]
மயலகன்று மாலெழுந்து வாழ்த்த—வயன்சிறிது
[illegible] [illegible] [illegible]
[illegible] [illegible] (அக)

ஐந்தலைகொள் வேணிகழ் வத்தன் செவியேற்று
முந்துசினம் கொள்கிலா னுன்பகவ—னந்தைதனை
மாற்ற வமரர் மதர்ப்பொழிய வைரவனைக்
கூற்றுதைத்தோ னுன்புரிந்தான் கூர்ந்து. (௮௪)

நீல முறமெய்யு நீள்சடையு முக்கண்ணு
சூல முதற்படையார் தோளுமா—வேலவே
மன்னுக் கிரவடிவம் வாய்ந்துதிக்கு மாவகேன்
றன்னைக்கண் ணுற்றுரைப்பான் சம்பு. (௮௫)

திகழ்தஞ் சிறுவனயன் சென்னிநமை யெள்ளிற்
றகழ்தந் தனையேந்தி யாவி—யுகந்தளித்துத்
தம்மைப் புகழ்வோர் தடியுடனெய்த் தோர்பெற்று
வெம்மகந்தை மாற்றியடை மேல். (௮௬)

மூன்புடைத்தா மண்ட முகடார் பதமெய்தி
மின்பதைக்கு ழாத்தோடு வானவரைத்—துன்பறவே
காத்தியென்று மென்று கருணைநல்கிச் சோதிபுக்கான்
நீத்திகழுஞ் செங்கைச் சிவன். (௮௭)

சோதி மறையத் துளவோன் றெரிந்துநிற்ற
வீதியல்பன் றென்றானை யேத்திநகர்—போதலொடுங்
காரியய னுச்சியிலார் கம்முகிராற் கொண்டேந்தச்
சோரியுற வீழ்ந்தான் றுடித்து. (௮௮)

சோரிநீர் வெள்ளமாய்த் துண்ணென் றுலகுற்று
மேருவரை சூழ விழியனலாற்—றீரவே
செய்தந் தலரவற்குச் சேரவுயிர் நல்கவவ
னுய்தந் தெழுந்தா னுணர்ந்து. (௮௯)

மலரோ னெழுந்து வகேற் பணியா
நிலவணியும் வேணி நிமலற்—கலகிலவாங்
குற்றம்யான் செய்தமையாற் கூறிப் பழிபெற்றேன்
செற்றமினிக் கொள்ளாய் செறிந்து. (௯0)

இமைப்பி னுலகமடு மெந்தா யருளி
னமைப்பி னுணர் வுற்றனன்நீ தாங்கங்—கமைப்பிலவெஞ்
சூலமென் றுங்கையிற் றுலங்கிடவே கோடிநீ
மாலகல்வான் காண்டொறும்யான் வாய்ந்து. (௯௧)

என்னவின்ன பன்னி யிறைஞ்ச வயற்பாரா
வன்னவன்ன மாகவென வாருள்செய்—துன்னுமவன்
காலவே கன்கனன்மு கன்சோம கன்முதலாச்
சாலத் தனக்கடந்தான் சார்ந்து. (௯௨)

என்னில் கலைக்கிளை டெர்மைதப்பமை யார்தமித்தோர்
மன்னும் வனர்தோறு நாகருறை—விண்ணினிலை
தோறும்போய் மெய்யுகுநெய்த் தோகுமைய மாக்கொடவர்
கூறுபிரும் பின்னளித்தான் கூர்ந்து. (௯௩)

காரியண்ட ரூர்கள் கடந்தரிவா ரூர்சென்ருன்
மூரி நெடுங்கணங்கண் முன்செலவே—சீரியமுன்
வாயிற் றலைவன் மறிக்கக் கணநாதர்
மேயவனைக் கொன்ருர் வெகுண்டு. (௯௪)

நிந்தனகர் நண்ணவைய னற்ரு ணளினந்தாழ்ந்
தெர்மைதயிவன் வந்தமைதா னென்னையென—நந்தியாஞ்
சென்றேம் பலிக்குன்கஞ் செந்நீ ரளியென்ன
நன்றேற்ப நல்கினன்மா னன்கு. (௯௫)

இருவினைய்த் தோரைய னெண்கைச் சிரமாண்
டொருநூறு நூறவதி யுய்ப்ப—வொருமயக்சம்
வந்தெதாண்கம் பார்தி வரைநிறைந்த தில்லைமா
னந்தனஞ் சோர்ந்தா னலிந்து. (௯௬)

மஞ்சுறழ்மால் சோரவிரு மாத ரிரங்கியையன்
செஞ்சரணை மேவத் தெரிவையரை—யஞ்சலென
நேர்ந்தருளி யச்சுதன்மா னீத்தெழுமா ருற்றியத்த
னேர்த்துறையு ணீங்கினு னுற்று. (௯௭)

தொடரியை நிற்றியென்று சொல்லவவன் சூலத்
திடனுற் றவனையருள் கென்ன—வடுகன்கை
மூத்தலைவேன் மேவவனை மொய்ம்பின் விடுத்தாவி
யத்தலைதந் தேயளித்தா னங்கு. (௯௮)

மாலைக நீங்கியையன் மன்கணங்கள் சூழ்தரவே
மேவுள் புவனமேன் மேவியென்றும்—பாலனஞ்செய்
திவனார னுணையினு லேயிமையோ ரங்குமுயிர்
மறிநீ ருக்கு மகிழ்ந்து. (௯௯)

பொறிமன் னுயிரும் புவனங்கள் யாவு
மிறுதிபடு நாளீமத் தெல்லை—மறைஞமலி
தன்னையுயர்த் தன்றான் றகமகிழ்வி னுலவு
மின்னருளி னென்ப விது. (௧00)

நூங்தொருஞான் றிந்திரன்ருன் மொய்யமரர் தம்மொடும்போய்ச்
சந்தமுறு கைலையாற் ருழவர்தா—னந்தையொடு
மன்னேனன் மணிக்கோயி லார்தனுமோர் பூதமாக்
முன்னேனன் கடையின்ருன் முன். (௧0௧)

நின்றவனை நோக்கியைய நீயாரை யென்றகண்டேன்
மன்ற வரனை வணங்குவான்—சென்றனனென்
வேலைசெப்பு கென்னவத்தன் வெங்கோக் குறச்சினந்தான்
மேலைவரு பண்புணரா வேந்து. (௧௦௨)

அந்தைதிறல் கொண்டனனென் றன்னவன்மேல் வச்சிரவே
லுந்துதலு நம்பன்மே லுற்றொடிந்து—நந்தியது
சித்தன் கணவுருவ நீங்கி யுருத்திரமா
னத்துருவ முற்றா னயந்து. (௧௦௩)

செய்ய விதழ்துடிப்பச் செவ்வாய் முறுவலிப்பத்
துய்ய புருவநெற்றி தொட்டுலவ—வையரிகொ
ளொண்டிருக்கண் சேப்ப வுருத்திரமா வெய்யவுருக்
கொண்டுருத்து நின்றனனெங் கோ. (௧௦௪)

நிற்கின்ற வெம்பெருமா னின்சினத்தைப் பார்த்துநெஞ்சக்
கற்குன் றலையக் கழல்வீழ்ந்தே—யெற்கு
னுழையுறுமா மாயை யுருத்தெரியு மோவென்
பிழைபொறுத்தி யென்றான் பெரிது. (௧௦௫)

போற்றிப் பணியும் புரந்தரனை யஞ்சலென்று
சீற்றத்தீ மேல்கடலிற் செல்லவுய்த்தே—யாற்ற
விடையவற்குத் தந்தேவி வெள்ளிவரை மேன்மின்
னிடையோ டுறைந்தா னிறை. (௧௦௬)

சிவன்மந் திரமேவச் சீற்றமொரு சேயா
வுவரியின்கட் டோன்றமன்ன னோர்ந்து—தவமகிழ்ந்து
தன்றிரைக்கை யாற்றழீஇத் தானவே சன்மகனே
யென்றுமே வாழியென்றா னேய்ந்து. (௧௦௭)

செம்மல் சிறிதழலுஞ் சேண்பார் திசையாவு
மம்ம செவிடுபட்ட வஞ்சத்தன்—விம்மலுற்றோர்ந்
தாழியுற வஃதன்பி லாசனமிட் டாங்கிருத்தி
வாழியென்சேய் காண்டியென்றான் மற்று. (௧௦௮)

கைநீட்ட வாங்கியையன் காமர் மடிசேர்ப்ப
வெய்துபுல்ல னந்தொடர்ந்தீர்த் தேதுங்க—வெய்துநெய்த்தோர்
துன்னவயுன் கண்ணீர் துலங்கருவி யாயோட
வின்ன னனிகொண்டா னேய்ந்து.

பதுமன் மயிர்த்தொகையைப் பாலன்கை நின்று
கதுமெனவே வாங்கிக் காத்தா—லுததிதன்கை
[illegible] விறைஞ்சினர்ந்து நீயிதுகே ளீங்கிவன்மன்
[illegible]ன் முனிவுதித்தா னங்கு.

கருதிடா னெந்தக் கடவுளையும் வேண்டா
னொருவாமு மீறிலா னுன்னு—மொருவன்றன்
சீற்றத் ததித்தமையாற் றேவருமற் றேவருமே
யாற்ற மெலிவா ரவற்கு. (ககக)

ஏவருநேர் நில்லா ரிமையோ ரிபேசாப
மேவுமவற் சாருமோ வெய்யவற்கே—யேவமுறறு
நானுமஞ்ச வன்மா னமனுமஞ்ச வாருயர்கத
வானுமஞ்ச மண்ணுமஞ்ச மற்று. (ககஉ)

பாசனங்கள் போற்றவெங்கோல் பாரசெலுத்தி யாங்குளா
ராசிசெய மேவி யரசுசெய்வ—னீசனன்றி
யார்வெல்வ ரென்னவிவற் கேபெயர்நல் கென்னவயன்
பேர்சலந்த ரன்னென்றான் பெட்டு. (ககந)

பேரிட் டயனேகப் பெருததி பற்பகன்மா
சீரிற் பரிந்தளிப்ப செய்வளர்ந்து—பாரிற்சேர்ந்
தாரவுணர் சூழ்தரவென் றிசைகள்விண் ணோர்திருவஞ்
சேரவெம்மை செய்தான் றிரிந்து. (ககச)

பொன்னசலந் தன்னிலும்பர் போயுறைய வானுடு
தன்னையொப்பான் றனவர்க்குத் தந்திமையோர்—மன்னகா
கச்ச வொருநகா நல்கெனவன் னுனசுரர்
தச்சன் சமைத்தான் றக. (ககரு)

அந்த னகரி னிடையெறழ்கூர் காரவுணர்
வேந்தர் தொழவரசின் மேயினு—னுந்தகைய
காலநே மித்தருவன் கன்னி விருந்தைதனை
யேலமணந் தின்பமுற்றா னேய்ந்து. (ககசு)

பாரினெடு நாள்வதிந்தான் பண்ணவர்க ளெவருமே
மேருவுற்றா ரன்னவரை மேவியாம்—போரிழைப்போ
மென்றாவின் றேகவிங்க னெய்தினனென் செய்வமெனுத்
துன்றரிகாண் டோலினொந்தார் சோர்ந்து. (ககஎ)

மான்றெவரு மாலையுன்ன மற்றவன்புள் ளேறிவந்தஞ்
ஞான்றவாத் தீயோ னமர்க்கெழலு—மென்றிருபா
னுயிரமாண் டாற்றியும்போ ராகவத்தில் வெற்றியின்றிப்
போயினான் மாயோன் புகழ்ந்து. (ககஅ)

மாயன் கொடியனொடு மண்டமர்செய் காலையண்டர்
மேய வலாரிவெள்ளி வெற்படைந்தார்—சேயொன்றார்
மன்னியசீர்த் தென்கயிலை மால்வரையுற் றாரென்ன
வன்னியா னூர்போந்தா றுற்று. (ககக)

ஆண்டா ரனிகமோ டங்கயிலை யங்காலை
வேண்டாவேண் டாங்த்தன் மேற்பொருதான்—மாண்டாயே
யென்றுமனை கூறநன்றென் றெண்ணான் சலந்தரனுந்
தன்றுபெயர்ப் பண்பினன்றான் சூழ்ந்து. (கஉ0)

சோனா முகில்போற் றலங்குபடை மாரிபொழி
சேனாபூ கஞ்சூழச் சீர்மைந்தன்—போனான்மா
வெற்பொருசா ரஃதுணர்ந்து வேந்த னமரரொடு
விற்பொனவிர் கோயிலுற்றான் வேர்த்து. (கஉக)

நந்தியடி தாழ்ந்துரைப்ப நம்பனரு ணாடியே
யுந்திடவேந் தேகியா னெண்சாண்டாழ்ந்—தெந்தை
சலந்தரனென் னாமத் தகுவனெமை வாட்ட
நலந்தருமூர் விட்டிரிந்தே னான். (கஉஉ)

வெந்துயரின் மேருவின்கண் மேவி யொளிதிருந்தே
னந்தவனந் தேர்ந்தங் கவன்வந்தா—னந்தரியைப்
புந்திகொளப் போந்து பொருது புகழ்ந்துசென்றான்
வந்திங்குக் கேட்டான் வலிந்து. (கஉங)

ஈங்கும்வந் துற்றனனி யாது கருதியோ
வாங்கதுதேர் கில்லே னளியனின்ன—நீங்குளா
னுடலகற் றென்னவரி யல்லவொழி கென்றகற்றி
யாடலொன்று ளோர்ந்தா னரன். (கஉச)

நான்றகுண்டி கைய னரைதருயாக் கையன்கோ
லூன்றுகைய னோலையத்த னெண்டவர்போற்—றோன்றியா
னம்மலையின் பாங்க ரணுகு மவுணர்தஞ்
செம்மலைநேர் கொண்டணினான் றேர்ந்து. (கஉரு)

எங்குளா யாரைநீ யேய்ந்தெவரை நேடியே
யிங்குறுகின் றாயுரையா யென்றியம்ப—வங்கணன்முன்
சாற்று சலந்தரனென் றானவன்போர் சம்புவுட
னாற்றவந்தே னீண்டென்றா னாங்கு. (கஉசு)

அந்த வுரைவினவி யண்ணலென்ன நன்றுநன்றென்
றெந்தை புகழ்ந்தாங் கிகழ்ந்துசொலி—நந்திதன்பா
லங்கொருவ னானவனோ டாற்றினமர் மாய்தியுய்யிற்
செல்கமீண் டென்றான் றெரிந்து. (கஉஎ)

ஐயனுரை கேட்டவுண னானவிற் சீறியே
மெய்யில் வியர்வெழவே வெய்துயிர்த்துத்—துய்ய
சிறிய னெனநினைந்தீர் செய்திறத்தை யெல்லா
மறிகுதிர்சீ ரென்றனனிங் கார்ந்து. (கஉஅ)

என்றினைய கூறவன்றன் யாழுனைநாழ் ஞாணலுங்தே
மென்றடியாற் கீறிமண்மே லெய்திகரி—கன்றிதனைச்
சென்னிமே லேற்றித் திறத்தாற் கொளவலையோ
வென்ன கவின்று னிறை. (௧௨௯)

புங்கவரை வென்றேன் பொருகங்கை நீரடைத்தே
னங்கி யவித்தே னரியைவென்றே—னிங்கிதனா
னெற்கரிதோ வென்றெடுத்தா னேணிறஞ்சோள் வைத்துயிர்த்தே
யற்கிரிய சென்னிவைத்தா னங்கு. (௧௩0)

பரிதியாங் தேவப் பதகனுடல் போழ்ந்தே
யொருவன்கை யுற்ற துலவுங்—குருதிப்
பெருக்கதல மேகவுய்த்துப் பெம்மான்கட் டியாற
திருக்கவுணர் சேனையட்டான் றேர்ந்து. (௧௩௧)

தொன்னலுருக் காட்டிநிற்பச் சோதி புரந்தரன்முற்
றின்னமரர் போற்றப் பரிந்தவர்க்கு—முன்னரசு
நல்கிவிடைதந்து நற்கயிலை மேவியங்கோர்
மல்குழையோ டுற்றிருந்தான் மற்று. (௧௩௨)

வீ[illegible]ன்றன் றேவிதனை வேட்டு விரதியர்போற்
சேந்தவிழி மால்காவிற் றீங்காவிற்—போநதிருந்தா
னங்கண் விருந்தை யவள்கேள் செயனுணராள்
பொங்கவினை யுற்றாள் புலர்ந்து. (௧௩௩)

பரிதனுற்றான் சோர்ந்தாள் பகைத்தாள்சொல் லாடா
ளிரிதனுற்றான் செய்குவதோர் இல்லா—னொருவிந்தை
மேவினனில் சூழ்காவில் விண்டுபதக் காவலர்தா
மாவரியாய்ச் சாரநொந்தாண் மாது. (௧௩௪)

மடந்தையிரிந் தோட மடங்கலுரு வானோர்
தொடர்ந்துவரச் சோர்ந்து துருமத்—திடந்தவனைச்
சாரவஞ்ச னீயென்றான் றக்கவந்தோ ரோடவிவ
னூரினன் றென்றுரைப்பா னன்கு. (௧௩௫)

[illegible]தகே னென்றலைவ னீசன்மேற் போர்க்கடைந்தான்
[illegible]திலா னின்னுழுமே மாய்ந்தனனோ—வுய்ந்துளனோ
சோதியெனா மால்படைஞர் சூழ்குராங்கி னீருருவாய்
வீறவுனன் மெய்யுளுற்றார் வேட்டு. (௧௩௬)

அன்னவனீர் யாக்கையைக்கொண் டாரணங்கின் முன்னிடக்கண்
டின்னடுக் குற்றுவீழ்க் தோர்வகன்று—வென்னி
வருந்தலைமின் னீயென்று மாயனெடுப்ப
விருந்தை தொழுதுரைப்பாள் வேட்டு. (௧௩௭)

நின்னோர் தவறில்லை நீயெனுயிர் காத்தியே
லென்னைய னீர்மெ யிசைத்தவுயி—ரின்னே
தருதிநீ யென்னச் சமைத்துடல்வை குற்றான்
கருதியல்கூர் மாயன் களித்து. (௧௩அ)

மன்குரங்கி னுற்றோர் மறைந்தா சலந்தரன்ற
னன்குடன்மா லுற்றெழலு நாரிகண் ணுற்—றென்கணவ
னுய்ந்தனனென் றுள்ளத்தி லுன்னித் துயரகன்று
வந்தனையற் புல்லினளோர் வாய்ந்து. (௧௩௯)

புல்லியவம் மின்னைப் புணர்ந்துமால் பற்பகல்வே
ணல்லியனா லாறே நலனுகர்ந்தான்—வல்லியத்த
னுனையின்மன் மாய மயாத்துறங்க வஞ்சனை
வீணையின்சொன் மாதகன்றாள் வேர்த்து. (௧௪௦)

அருந்ததிநேர் கற்பழிந்த வாற்றான்மாற் கோதும்
வருந்தி மடங்கலாய் வந்தோா—பொருந்திடுகின்
மேவலராய் மேவநீ வேந்தனுய் மேதினியிற்
றுவுகுரங் கோடுதிரி சார்ந்து. (௧௪௧)

பொற்பார் கணவனைப்போற் போந்தணைந்தாய் தெவ்வருன்ற
கற்பார் மனையைக் கவர்ந்தேக—வற்பார்
பழிசுமத்தி யாலெனத்தீப் பாய்ந்திறந்தாண் முன்மா
லழியுடனீ ருடிகொந்தா ளுங்கு. (௧௪௨)

அத்துணையில் வாளோ ரயன்கயிலை யேகியே
நித்தனைநன் கேத்திமா னீாமைசொலச்—சத்திநேர்ந்
தோர்வித்தைத் தந்தரிமூ னுற்றிடுதி ரென்னமைந்த
னூர்வத்தின் வாங்கினு னுங்கு. (௧௪௩)

வேதனைதைக் கொண்டு விருந்தைபீ மத்துயித்தி
யாத வமுதுபெய்ய வோங்கரிமுன்—மாதுளவா
மன்னியதுமாதாக மாலகலம் மாற்கமார்
ன்னிதனைச் செய்தார் கடி. (௧௪௪

டியார் துளவமாங் கன்னிதனைக் கொண்டொண்
டொடியாரிற் பல்போகந் துய்த்து—முடியாகம்
வேய்ந்தவுண்டற் கொல்படையை வேட்டான்றான் கண்மலர்தூய்
வாய்ந்தபடை பெற்றனனே மால். (௧௪௫)

மாலவ் விரம்பூவை வண்காத்தாற் கொய்தாற்கிட்
டலாழி யின்சிறமை யின்னீங்கி—மேலாம்பா
லின்சு[illegible]மா வாழி யிடைவளர்வோ னேமியா
[illegible]ரும் பெற்று னினிது. (௧௪௬)

இந்நான் குகத்தெல்லை யீரா யிரமென்றோர்நான்
பன்று னவைமுப் பதுமதியலே—தன்று
றிரண்டாண்டே றூறெய்தி னெண்கணன்சா மந்நாண்
மூரண்டார்மாற் கோர்நாளா முன். (கசஎ)

ஆயதன்மை யாலரிக்கு மாயுமே மாயுமெண்ணின்
மேயவுயிர் தேயுமண்டம் வீயுமெங்கும்—தீயுலவும்
தோன்றகில மீமாய்த் தூநலங்கொள் சூழலின்கட்
டான்றனிக்கூத் தாடுமே சம்பு (கசஅ)

தேயும் பிரளயத்திற் செப்பறத்தின் றெய்வமஞ்சி
வீயுதுமேல் யாம்புரிதன் மேவியென்னென்—றாயுற்றீ
றில்லான் றனையடையி னீறெய்தே னென்றெழில்கூர்
வல்லானே ரயதே மற்று. (கசகூ)

ஏற்றுருக்கொண் டீசனைச்சார்ந் தேத்தியான் பொன்றுதன்மை
மாற்றிவலி நல்கிநிற்கு வாகனமாம்—பேற்றையருள்
கென்னவிறப் பின்மையரி யேற்றவெலறு முன்புணர்ச்சி
யின்னிதந்தான் குண்டைக் கிறை. (கரு௦)

சதுர்வகைத்த மாயுகத்திற் றன்மத்தின் றன்மை
யிதுவெனநான் மூன்றிரண்டொன் றேய்ந்த—பதமுறையே
யூன்றிமண்ணிற் சேறி யுனதிடத்தி லென்றுமுனோ
மேன்றெமைமேற் கோடி யினிது. (கருக)

எண்ணுமன்பர் செய்பாவ மேய்புண் ணியமெண்ணோர்
பண்ணு மறமெல்லாம் பாலமருங்—திண்ணமது
தொண்டர்செய் பாவமற்றோர் துன்னறமு மேதிரியா
யொண்டுமூனே நீங்கிலம்யா முற்று. (கருஉ)

உன்னிடையா மூன்ளோரீ யூர்தியா மன்னலல்ல
தின்னு மொருவடிவுற் றெம்மைப்போற்—றன்னதுணர்
கென்ன வருளியா னேயறத்தே வைப்பரியா
மன்னவருள் செய்தான் மகிழ்ந்து. (கருங)

அந்தநா ளாதி யரனையுட்கொள் ளன்பர்மு
னந்தியா மூர்திமே னன்மைசெய்வான்—வந்தருளுஞ்
சாற்றுவிடைக் கேனளித்தல் சம்புணர்ந்தன் றேபுரத்தி
லேற்றுருவாய் மால்சுமந்தா னேய்ந்து. (கருச)

திருத ருட்னவுணர் சேரமரர் சேர்ந்து
திருகுமெஞ்சி னோர்பகல்போர் செய்ய—விருதிறத்தும்
வீய வசிதாமர் விட்டவர்பன் னூட்பொரலோர்க்
தேயுமன்றூட் டாழ்ந்துரைப்பா ரீது. (கருரு)

ஒல்கும் வயதை யுடையரோம் பற்பகல்செய்
மல்கிரும்போ ராற்றவான் வாரிகடைக்—தல்கலிலா
வின்னமிர்தை வாக்கி யெமக்கடிகே ளல்குவா
யென்னவயன் சொல்வா னெடுத்து. (கருசு)

மாயத் திறகவில்வோர் மற்றவனே வேலைமதித்
தாய வமுதளிக்கு மன்னாருண்டால்—வீயமெனும்
போதனவ ரோமெம் புணரிபுகுந் தாங்கேத்த
காத னெழுந்தா னயந்து. (கருஎ)

நிவி ரிவண்வந்த நீர்மையென்கொ லென்னமால்
பூவி லயனவுணர் புங்கவர்கண்—மேவாசர்
வேண்டு குறையை விளம்ப வதற்கியைந்தே
னீண்டளிக்கு மாலருளா லிங்கு. (கருஅ)

அருள்செய் தெழுமா லவிர்மந் தரத்தை
யுருண்மத் தெனகிறீஇ யுள்ள—பொருண்மதியை
மன்மதலை யாப்புரியா வாசுகியை நாணாக
வன்மையுற யாத்தான் மகிழ்ந்து. (கருகூ)

ஒருபா லமர ரொருபா லவுண
ரிருபாலு மீர்ப்பநல்கி யேனார்—தருபார
மத்தடியோ டேர்முடிதன் மன்மெய்ப் புறங்காத்து
னத்தன் பரித்தா னயந்து. (கசு0)

ஆழிவாய் விட்ட திர்ப்ப வம்மேரு வுஞ்சலிப்பப்
பாழிமத வேழம் பதைத்துயிர்ப்ப—வூழிற்
கடைந்து கடலைக் கலக்கக் கயிறா
யடைந்த பணியயர்ந்த தாங்கு. (கசுக)

சாலக் கனன்றவந் தன்வாய் தொறுமாலங்
காலக் கடலுங் கடுவுமிழ்ந்த—தேலக்
கடைக்கோடி கார்கமன்றீக் காலின் விடநா
றடைக்கோடி யிற்பரந்த தாங்கு. (கசுஉ)

ஓடுநஞ்சஞ் சூழ வுலைந்தவுணர் வானவர்த
மோடு முனிவரரு மோடலுற்றார்—நீடுலக
மாக்குமவ ரோடலுற்றா ரஃதுணர்ந்துங் காப்பமெனா
வீக்குவிட முன்னடுத்தான் விண்டு. (கசுங)

முடுகிவரு மாலமுராரிமேற் றாக்கி
யடுகரியின் வண்ணமே யாக்க—கடுகியெதிர்
மாண்முதலோர் கில்லார் மருண்டிரிந்தே யேவர்க்கு
[illegible] கைலையுற்றா ரேர்த்து. (கசுச)

நந்திகழல் போற்றி நவிலுரைப்ப மற்றவரை
யந்தினிநீ இ மாலயுன்றிக் கான்பவரை—யுந்திமுன்பி
னிங்கிருத்தி ரென்றியம்பி யேத்திருவர் தம்மையரன்
பாங்கினிற்கொண் டெய்த்தான் பரிந்து (௧௬௫)

சாற்றிருவர் தாம்பரமன் றன்னைத் தரிசித்துப்
போற்றிநிற்ப மானின் புரமேனி—வேற்றுருவ
மேய்ந்ததென்கொ லென்ன விறைவனன்றான் மானமுளம்
வாய்ந்தனைத்துஞ் சொன்னான் வகுத்து. (௧௬௬)

உன்னல் லருள்பெறா தோதஞ்சேர் தந்தின்ன
வின்னலுற்றே நின்னெழிற்ற ளெய்தினேந்—தன்னவிட
மாயதனை மாற்றி யளியேயங்க டங்களையே
நீயருள்செய் கென்றனன்மா னேர்ந்து. (௧௬௭)

மற்றவர்த மார்ப்பு வரன்வினவி யாங்கழைப்ப
வுற்றவர்தாம் போற்றி யுறுவிடத்தா—லற்றமுற்றோ
மன்னதனைச் சிந்தி யடியர்க் கருள்புரிதி
யென்ன நவின்றா ரிணைந்து (௧௬௮)

ஈதறிந்து மேலோ னிறைவியைப்பார்த் துன்னெண்ண
மாதலறதி யென்னநின்னை வந்தடைந்தா—ராதலினு
லன்னார் தமக்குவல்லை யன்பினருள் செய்தியென்றான்
மின்னா ரிடையாள் விழைந்து. (௧௬௯)

அந்தரியின் சொற்கேட் டரன்மகிழ்ந்து தொண்டுசெயுஞ்
சுந்தரனை நோக்கிச் சுடுவிடதை—நந்தமுன்னர்க்
கொண்டடைதி யென்னவதைக் கோலன் கொணர்ந்துய்ப்ப
நண்டிவலை யாக்கினா னெய்து. (௧௭௦)

அத்தனெழி லத்தமல ரத்தத்தி லத்திவலை
வைத்திதனை யுண்கோ வறுஞ்சேய்மை—யுய்த்திடுகோ
வென்னவர நின்னையன்றி யார்தொலைப்பார் யாங்களுய்வா
னன்ன துண்டே யாள்கென்றா ராங்கு. (௧௭௧)

கொன்றையிலை வேணிக் குழகனீ ரஞ்சலீ
ரென்றுவிட முட்கொள்ள வேத்திமையோ—ரின்றெழுபிர்
காத்தற்குச் சான்றாக் களத்திலதை வைத்தருளென்
றேத்தற் றுதித்தா ரவண். (௧௭௨)

போற்றலுமெங் கோன்விடத்தைப் பொறுப்பிற் களநிறுவி
யாற்றவருள் செய்தவரை யங்களுற்றுப்—பாற்றினியார்
மாயினீர் வாரி மதிக்கினமிர் தண்டாகும்
போயினீ ரென்றான் புரிந்து (௧௭௩)

போனவர்முன் போலப் புணரிகடை போதமிர்த
மேனைவியன்பொருள்க ளேய்ந்துவந்த—வானவர்தாம்
பெற்றா ரவையாலம் பெம்மா னயின்றதே
ன்ற்றா ருயிரளித்த தன்று. (கஎச)

கடவுளெங்கோன் பின்னழிக்குங் காலையெலா மோவு
மிடமதே யீமமதி லீச—னடநவிலு
மெல்லை தகைத்தஃதவ் வீமமின்னுந் தானுமுறு
மொல்லை யதுதவரோ வுன். (கஎரு)

ஐயனையோர் ஞான்றுமையை யங்கயிலைப் பொங்கரிற்செங்
கைபிரண்டா லாடலுன்னிக் கண்புதைப்பச்—செய்யகதிர்த்
திங்க டினஞ்செய்வோன் றீயேனைச் சேயொளியுங்
கங்கு னிறம்படைத்த காண. (கஎசு)

தன்னே ரொருவரிலாத் தற்பரன்றன் கண்ணிரண்டு
மின்னேய்கை யாற்பொதத மேவுகண—மன்னேரப்
பன்னுயிர்கட் கெல்லாம் பலவூழி யாகநொந்த
வன்னதன்மை யோராந்தா னரன. (கஎஎ)

சங்கரன்றன் பாலந் தனினடுவோர் நாட்டநல்கி
யங்கதனு னுக்கியிரு ளாங்கொழித்துத்—திங்கண்மு
னேவர்க்குஞ் சோதிதந்தா னெவ்வுயிரு மேசிறந்த
மேவற் குழல்பனித்தாள் வேர்த்து. (கஎஅ)

அங்கரன்கண் மூடுந்தன் னதநந் திறக்குமெல்லை
யங்குலியி லாந்துமச்சத் தால்வியர்ப்ப—மங்கைகண்
டங்கை விரல்க ளவண்விதிர்ப்பப் போந்துசெழுங்
கங்கைபததாய் வாரியுற்ற காண். (கஎகூ)

கூறா யிரநூறு கோடி யணிமுகங்கொண்
டாறா வரவதுகண் டஞ்சியயன்—மாறான
முற்றா ரெவரு முறப்போற்றி யொண்கயிலை
முற்றா வரற்பணிந்தார் முன். (கஅ0)

அடிமலர்தாழ்ந் தெந்தா யறிகிலமோர் நீத்தங்
கடலென யாண்டுங் கறங்கி—முடிவுன்
பிரளயநீர் போன்றவிதைப் பெம்மான் பரித்தக்
கரனமெனக் காத்தியென்றார் காய்ந்து. (கஅக)

நின்றோர் வியப்ப நினைந்ததைக்கூய்ச் சம்புசடை
யொன்றே ருரோமத்தி னும்பருய்ப்ப—மின்றோகை
யத்தரு[illegible]ன் கம்முதலா லன்னதிலெம் மூர்வைக
[illegible] கவ்கென்றா ராங்கு. (கஅஉ)

இறைவேணி யுள்புக் கிருந்தநீர் தன்னிற்
சிறிதெடுத்து மூவர்தஞ் செங்கை—செறியவல்க
மேவுமன்பிற் ருழ்ந்து விடை யேற்றுத் தந்தநகர்
தாமதனைக் கொண்டேய்த்தார் சார்ந்து. (கஅ௩)

அந்நதியோர் மூன்றி லயனூர் புகுந்தகங்கை
மன்னும் பகீரதன்றன் மாதவத்தாற்— பின்னருமே
மீளவிறை மாமுடியின் மேற்ருங்கி யிவ்வுலகி
ஞளுமிறை செல்லவிட்டா னன்கு. (கஅ௪)

நானிலமே லுய்த்தகங்கை நற்சகர ரென்பிற்பாய்ந்
தானகதி சேரவவ ராழிபுக்க—தேனையவை
யங்கிருந்த கங்கையங்கை யம்மடக்க வேணியிசை
மங்கைகொண்டா னென்பர் வான். (கஅ௫)

தொல்லையோர் கஞ்சத்தன் ரேன்றி யிருந்திடுநாட்
பல்லுயிர்கள் யாவும் படைப்பதன்னி—வல்லே
சனகன்முன் னுல்வர் தனயரைமுன் னல்க
வனகர்தவ ராகியுற்ரு ராங்கு. (கஅ௬)

அன்னதற்பின் போத னளிப்பதமல் காதாக
வின்னலிலாழ்ந் தேயா தினிச்செய்வ—தென்னமுன்
மூன்னுநிரு ரோடு முராரியிட மெய்தியவன்
றன்னடிதாழ்ந் தோதிநின்ருன் ருன். (கஅ௭)

மாலிதுமுற் ருதுநம்மான் மன்னிறையோ னன்றியென்னு
வேலவரோ டொண்கயிலைக் கேகியரன்—பாலிறைஞ்சி
கூறுங் குறைகேட்டுக் கோமா னவர்ப்பாரா
வீறுசெய்தா னெய்தனவே யேய்ந்து. (கஅ௮)

ஏகனே யாகிவைகு மெங்கையிடப் பாலான
வாகுதனை நோக்கவங்கு மைதோன்றப்—பாகத்
திருத்தி யவட்கலப்புற் றேய்ந்தரியெண் கண்ணன்
றிருத்தனயர்த் தந்தான் றெரிந்து (கஅ௯)

திந்துழியெங் கோவைத் தனயால ரோன்மால்
வந்தனைசெய் தேத்தவரி வத்திரம்பார்த்—தெந்தமருட்
டிரணங்கி ளேடினிது சேர்ந்தா மயன்செய்கை
யாரமுற்றும் போதியென்ரு ளங்கு. (க௯0)

என்னலுமே யோகையெய்தி யாமினியுய்ந் தோமென்னு
மன்னையத்தன் றன்னைவல மார்ந்தேத்தி—பின்னருமே
தாழ்ந்து பெயர்ந்தார் சலசத்தோன் பின்புயிர்கள்
வீழ்ந்து விதித்தான் விரைந்து. (க௯க)

வேதன் றொழின்முற்ற மேவருளை யின்னுக்கி
காதலனே கருணையினு னென்னுவதா—மீதுணரா
யேனையர் போல விறையோன் றனைமதித்தாய்
ஞானமிலா யோததரியாய் நன்கு. ([illegible])

ததீசி யுத்தரப்படலமுற்றிற்று.

ஆக திருவெண்பா. சஅகரு.

---

# கயமுகனுற்பத்திப் படலம்.

---

இந்திரன்முன் னோர்நா ளிமையோர் படையொடும்போய்
வெந்தருவர் வேர்தைவென்று வெற்றிகொடு—கந்தருவர்
போற்றநக ருற்றான் பொருதுவெட்கி வெய்யனினி
யாற்றுவதென் னென்றினைந்தா னங்கு. (க)

போரமரா ரோடு பொருதுவெற்றி யெற்களிப்பார்
யாருளா ரெங்குலத்தி லென்றுரையா—வார
வெருவிடமே யன்னான் வியக்குந் தனது
குருவிடமே போய்ப்பணிந்தான் கூர்ந்து. (உ)

மன்னனிதநேன் மாலை மகவானை டேற்றமரில்
வென்னளித்தேன் வீருமே வீந்தனர்மா—வின்னலுற்றேன்
வைதிறனுங் கொண்டேன் மருவவுணர் சாமெலவர்
தெய்தியதோ கூறு யிவண். (ங)

தேர்வில் சிறுவர்தாஞ் சீரிற் பிழைப்பரோ
லார்வி லுறுதிதெளித தன்னவரை—யோர்விலுயர்
செய்வா னெறியாக்க தேசிகனார் தங்கடனு
மூய்வா னுரைத்தியென்று னோர்ந்து. (ச)

அன்னவுரை கேளா வரசனே யுன்னுளததி
லின்ன லுறேனீ யெனத்தேற்றிப்—பின்னுறுவ
துன்னி யறிதலுமா னுந்திவந்தோ னோர்விலுற்றான்
மூன்றும் வசிட்ட முனி. (ரு)

வன்போ டவன்மரபில் வந்துதித்தோன் மாகதன்று
னென்போன் மறையுணர்ந்தோ னேய்கதியைத்—தன்போல
விழைவடைவ னென்று விருமா தவந்தனை
[illegible] லாற்றலுற்று னன்டு.

ஆயவன்பா லின்றே ரசுரமின்னைத் தேற்றிநீ
யேயினையே லன்னனெய்தி யேயவனை—மேயினவ
னோர்வேழ மாமுகத்த னுங்கள் குலந்தோன்றித்
தார்வேந்தாய்ச் செய்வான் றவம். (௭)

நற்றவஞ்செய் தன்மைகண்டு நம்பனெ றும் செல்வநல்க
மற்றவன்மன் வானவர்சீர் மாற்றிமும்மை—யுற்றவுல
காளுமா சென்றறைந்தா னுசா ன னுகேட்டுத்
தாளிறைஞ்சித் தக்கதென்றான் றான். (அ)

திண்புகரு மற்றே செயச்சென்மோ வென்னமன்னன்
விண்புரையு ளெய்தி விபுதையென்றே—ரொண்டொடியாங்
கன்னி குலத்துவந்தாள் காரிகையை யெய்தியன்னு
யென்னிடரைத் தீர்த்தியென்றா னீண்டு) (௯)

மன்னனுரை கேட்டணங்கு மன்னினடித் தொண்டுசெயுங்
கொன்ன ளிருதர் குலத்துவந்தே—னுன்னுனக்கிங்
கென்னு விசைவிசைத்தி யென்னவும்பர் தம்மைவெல்வா
னுன்னு லுறவேண்டு மொன்று. (௧௦)

ஒன்றதற்குக் கேட்டியே தொண்பொன் வரைத்தென்சார்
மன்றவரு நோன்புபயின் மாகதன்பாற்—சென்றங்
கவஞ்சிதைக்கு மன்னு னமயம்பார்த் தாற்றுந்
தவஞ்சிதைத்துச் சேர்தி தக. (௧௧)

சேருதியே லாண்டோர் சிறுவனின்பாற் றோன்றிப்பா
ராருலகின் மேற்பதங்க ளார்ந்துவௌவி—வீரனுய்த்
தெவ்வானோர் தம்மையட்டெஞ் செல்ல றுடைக்குமன்னு
யவ்வா றமைதியென்றா னங்கு. (௧௨)

வேந்தனுரை கேட்ட விபுதையந்த மாமுனிபாற்
போந்துமகற் பெற்றேய் புலன்மீள்வ—னேந்தனீ
யின்னலுறே லென்றேகி யேமவரைச் சார்பெய்தி
யன்னவன்பா லுற்றா ளணங்கு. (௧௩)

மாகதன்றன் பாலுற்றாண் மாதவத்தின் மாட்சிகண்டே
யாகொடிதிந் நோன்பிவனன் றார்புரிவார்—மோகவிழைத்
தெவ்வா றிவற்புல்வ தெய்யுமதன் கோன்மாரி
தூவ்வா வொழிக்குந் துறவு. (௧௪)

ஏர்செய்தவத்தனவன் யானல்ல மேனகைமுன்
யார்வரினு நோக்கா னிறைவனிஃ—தோர்வின்றிச்
சேர்திநீ யென்றான் றிறனன்று மீண்டுமன்னி
னோர்மன்னன் மீளவுய்ப்பா னூங்கு. (௧௫)

ஏற்றவன்பி னெய்திபவ னெற்கே வானுக
னோற்றமயம் பார்ப்பனென னோன்பான்றான்—போற்றிபுன்னி
வன்றிறனோன் பாற்றும் வாமுனிவ னோர்நின்று
மின்றவம்பன் னுட்புரிந்தாள் வேட்டு. (௧௬)

மாது தவத்தால் வரின்முறைவ ழாவூழி
னேதுவா லங்க ணிருங்களிறு—காதலுறு
மோர்பிடியி னோடுற் றுடன்புணரக் கண்டுதவ
னூர்வமுற நோக்கினா னங்கு. (௧௭)

மறந்தான் மனுவை மனமார் பொருளைத்
துறந்தான் விரகவெந்தீச் சுட்டே—யிறந்தான்போ
லஞ்சியயர்ந் தம்முனிவ னந்தோவென் செய்வனென
நெஞ்சில் வினவலுற்றா னோர்ந்து. (௧௮)

விடந்தலைக்கொண் டாங்குமா வெங்காமச் செந்தீ
யடங்குவதி லென்றுபுணர்ப் பாசைத்—தடம்படிவான்
போவதற்கெண் போதுமுனி பூவையென்ன முற்றிற்றென்
றாவன் மகிழ்வுற்றா னாங்கு. (௧௯)

ஈங்கிதுபோ தாகு மிடமீதற் காம்வேறு
நீங்கிலசெய் நோன்பிணங்கச் செய்ததென—வாங்குறுதன்
மின்னெழுந்து வல்விரைவில் வித்தகன்பான் மேவியன்னான்
பொன்னடியிற் றாழ்ந்தாள் புரிந்து (௨௦)

நுண்ணிடைமெய் யங்கமுற்று நோக்கிமுனி மாழாந்து
பெண்ணணங்குங் காந்தருவப் பெட்பினெய்தி—னண்ணுமயி
ரொன்றுனியார் நீகனியோ வென்னவதா மென்னநம்பாற்
றுன்றிவந்த தென்கொலென்றான் சூழ்ந்து. (௨௧)

திருந்திழையு மாமுனிநீ செய்ய வரனுக
விருந்தவஞ்செய் தேன்முற்றிற் றின்றே—பொருந்தினனீண்
டுன்னையான் புல்கவந்தே னோகையோ டென்னவன்னா
னுன்னமதி லுற்றா னுவப்பு. (௨௨)

என்றவமு மென்னோ டிணங்கநீ செய்தவமு
மொன்றியன்றோ வுன்னை யுறக்கூட்டிற்—றென்று
கடியார் களிற்றிற் கலப்புறுவ நீயும்
பிடியாதி யென்றான் பெரிது. (௨௩)

மெல்லியலு மோர்பிடியாய் வித்தகனு மோர்களிறாய்ப்
புல்லியபோ தாங்குப் புணர்ச்சியின்கண்—மல்லின்
வயமுகத்தன் னண்டர் வயங்கவுண னோடுங்
கயமுகத்தன் வந்தான் கடிது. (௨௪)

விற்றின் பலகையொன்னான் வினைன்மா ஞாலமெலாஞ்
சுற்றினன்மா வோங்க் றுகள்படவே—யெற்றினன்கா
ரேயுருமே றஞ்ச விரட்டினன் மூவுலகுந்
தீயன் றிரிந்தான் சினந்து. (உ௫)

அப்பிடியு ரோம மளப்பில் லனவற்றிற்
செப்பெயிற்றுப் பேழ்வாய்ச் செறிபங்கி—யொப்பிறிறல்
வீரர் தெழித்தெழீஇ மின்பண்டைகண் மன்கையுற
வாரெண் ணிலருதித்தா ராங்கு. (உ௬)

இன்னரொடு கூடி யிபமுகத்த ஞர்த்திடவுந
தன்னை யளித்தோர் தளர்ந்திரிந்து—மன்னெழிலகூர்
மூன்னுருவங் கொள்ள முனியுணர்வு தோன்றிடவூ
மூன்னி யிரங்கினைந்தா னுற்று. (உ௭)

காமவலை நீங்குமுனி காந்தி தனைசினந்து
நீமன் குலம்யாதென் னோர்நதென்ன—வாமுறையே
கூறிநிற்ப மாகதனன் கூருயிர்கட் காக்குவித்தேன்
சாறுய்ரென் றேஙகிநொந்தான் றான். (உ௮)

சிறிதிரங்கித் தேறித் திருமடந்தை நங்கோன்
செறிமெலிவற் றுன்னெண்ணஞ் சேர்வா—னெறியிற்
கடிந்தியான் செய்தவமுங் காண்மூன் றுலகு
முடிந்தநீ போதியென்றான் முன். (உ௯)

பொன்னடிதாழ்ந் தன்னாள் பொருக்கெனப்போ யீதெல்லா
மன்னவன்பாற் கூற மகிழ்ச்சியுற்றான்—முன்னுமுனி
மூன்போற் றவம்புரிந்தாள் முன்ன மன றன் னேடினைஞர்
பின்போ யினர்தொடர்ந்து போந்து. (௩0)

தீயவிடஞ் சீறித் திசையெங்குஞ் செல்வதுபோற
காயவுணர் மேவிக் கடிகுவார்—மேய
மலைபொடிப்பர் மண்பறிப்பர் மன்னுயிர்கள் யாவு
மூலையுறழ்பேழ் வாயிடுவ ருற்று. (௩௧)

தக்க வவுணரொடு தந்திமுக னெங்குமுலாய்த்
தொக்கவுயிர் நுங்கிமன்னெய்த் தோர்மாந்தி—மக்குழுவன்
பெரய்த்தார் பொருளெனவே போனவுயி ரீட்டனரி
யெய்த்தார் முனிவரும்ப ரேய்ந்து. (௩௨)

இனையவா றுக விபமுகத்தோன் மேவ
வினைய வுலக மெலையு—மனைய தன்மை
மன்னவுணர் மன்னுணர்ந்து மன்னுபுகர் தன்னைவிட
வன்னவன்போய்ப் பன்னுமுற்று னிங்கு.

இளையதா மூங்குலத்தோர்க் கோர்வான் குருவானேன்
றென்றுமறை தேர்ந்துளேன் செப்புமென்பேர்—வெள்ளியா
மூங்குலத்து வேந்தனென்னை யுய்க்கவந்தேன் மேன்மைநெறி
தங்குநலஞ் சாற்றவென்றான் றான். (கச)

சல்லியன்பொற் றாளிறைஞ்சித் தந்திமுக னெங்குலத்தி
லொல்லைவரு முய்வா றுரைக்கவந்தாய்—நல்லுறுதி
சீர்க்கவிதிற் பேறிலெனத் தேர்ந்தவுணர் தேசிகனும்
பார்க்கவன்று டாழ்ந்தார் பரிந்து. (கரு)

போதகனைப் பாராப் புகர்நீ தவமாற்று
யோதானை யோரா யுறுமாய—மாதிறல்சேர்
வன்பினைய தோராய் மருவுடனில் லாமையெண்ணு
யென்புரிந்தாய் புந்தியிலா யிங்கு. (கசு)

மூப்பகைநீத் தைந்துமொன்ற முன்னேற்றேறன் பெற்றுவிண்ணாட்
டப்பகைநீத் தொண்சீ ரடைந்திலையா—லொப்பதிலா
விம்மையின்ப மெய்திலா யேயுமம்மை யின்பகன்று
யெம்மையின்ப மேவுகின்று யீங்கு. (கஎ)

ஆற்றறமா விஞ்சை யருமகவு சீர்த்திவய
மாற்றனிதி போதமின்ப மாதியவு—மாற்றநமன்
கூவுமந்த ஞானறு குறித்திட்டாற் கூடுமோ
மேவுவெய்ய வேலோய் விளம்பு. (கஅ)

மந்திரமன் மாயம் வரமேலோர் நல்குபடை
தந்திரமொன் றில்லையண்டர் தானையா—லிந்திரன்றன்
போர்செயநின் மேற்செலினப் போதுநீ யாதுசெய்தி
சீர்விறலேண் மேன்மையிலாய் தேர்ந்து. (ககூ)

ஆதலினுன் மேலா மரனையுன்னி யாற்றவே
மாதவஞ்செய் கேட்ட வரமுதவு—நாதன்பின்
றேவரெலா நின்னேவல் செய்வா ருலகனைத்து
மேவரசே யாதியென்றான் வேட்டு. (உ0)

சொன்னவைகேட் டேந்த றொழுதகைய தும்பிமுகன்
முன்னிலையா றேனு மொழிந்தனரி—துன்னியா
னின்னசெய வேற்றே னினித்தவமே செய்கின்றே
னன்னசெய்மாண் பாற்றுகென்று னங்கு. (உக)

இழிவினைசெய் யைம்பொறிக ளங்க வடங்குகின்ற
மெய்வினைய மந்திரமு மேல்விதியும்—கைவினையு
முய்விக்கு மாறி யுணர்த்துவித்து மேருவின்கட்
[illegible] தேகென்றான் றேர்ந்து. (உஉ)

தந்திமுகனா வெங்குருதா டாழ்ந்து விடைகொண்டு
வெந்தகுவ ரோடவுணர் மெய்ப்பதிபுக்—கந்திலுற்றா
னக்கால நேர்வந்த வாண்டகைக்கெல் லாஞ்சொலியூர்
மிக்கான்போய் வீற்றிருந்தான் வேட்டு. (௪௩)

அங்குருசொன் மாற்ற மகங்கொண்டு தந்திமுகன்
மங்குறவழ் மேருவினோர் மாட்டேறித்—துங்கமிகு
கொன்றவத்திற் கான கொணர்வித்து நீராடி
மன்றவத்தைச் செய்வான் மகிழ்ந்து (௪௪)

பொறிமன் புலனவித்துப் புன்மைதீர்த் தாசான்
குறிவழிநின் றைந்தெழுத்துட் கொண்டே—யறிவிற்
றிவளறிவா யாருயிராய்ச் சின்மயமா நின்ற
சிவனுருவைச் சிந்தைசெய்தான் றேர்ந்து. (௪௫)

ஆயிரமா மாண்டடைபுல் லாயிரமா மாண்டவிர்நீ
ராயிரமா மாண்டநில மார்ந்துபின்மூ—வாயிரமாண்
டானதன்மேற் காலெழுப்பி யார்மூலத் தீமூட்டி
வானமிர்தங் தானயின்றான் வாய்ந்து. (௪௬)

அண்டாது கண்டுகவன் றன்னவனிச் செய்கைமுற்றி
னண்ட புவன மலைக்குமெனாக்—கொண்டிறைக்குச்
சாற்றுவது தேர்ந்துமன்னன் றான்மிகவுஞ் சோர்வுறா
வாற்ற மறுக்கமுற்றா னாங்கு. (௪௭)

நாற்புறமுந் தீச்சுலவ நள்ளிலன லோங்கவதன்
மேற்புகைபோற் றாணிறீஇ வித்தகற்பல்—காற்பாசி
யூராயுத வாண்டவதி யாருயிரு நோயுறவே
தாரிபத்தோ னோற்றிருந்தான் றான். (௪௮)

அங்கிபத்தன் றீமே லடிநிறீஇ நோற்றலைப்பார்த்
தங்கிக் கடவு ளருள்புரிய—வங்கிளரும்
வன்னியிலார் காரிரும்பின் மாண்டதுடல் வைரமணி
பொன்னிற் பொலிந்ததெழில் பூத்து. (௪௯)

வீசினர்நல் லொண்பூ வியந்தனருள் ளார்வத்தா
னாசி நவின்றா ரவுணரும்பர்—தேசிழந்தா
ரின்னவர் நோற்குமெல்லை யீசனது நாடியன்னான்
முன்னிடப மேல்வந்தான் முன். (௫௦)

வந்திறைமுன் றோன்றவிப மாமுகத்தா னோன்பொரீஇச்
சிந்தையன்பிற் றாழ்ந்தெந்தை சீர்பரச—வந்தவத்தோ
யென்னவரம் வேண்டுமென யார்போர் செயினுமவர்
வென்னிடவெற் கேயருள்வாய் வேட்டு. (௫௧)

எந்த ஐவகைப்படையா லெண்கணன்முற் றேவரா
லந்தமுறா வன்பு மவிர்படையு—நந்துலக
மாளுமோர் கான்மாளி னார்கதியு நல்கெனவெண்
டோவனவை தந்தகன்றான் சூழ்ந்து. (௫௨)

பெற்ற படையும் பிறவுங் கொடுதன்பாற்
சுற்றமெல்லாஞ் சுற்றத் துதிக்கையா—னுற்றவண்மிக்
கற்புதங்கொண் டாகத் தரும்பு புளகத்தனாய்
வற்பின் மதர்ப்புற்றான் வாய்ந்து. (௫௩)

அன்னதுதேர்ந்தாரசு மாசானுந் தந்திமுகன்
றன்னைவந் தெய்திச் சயமுண்டா—கென்னவே
யாசிநவின் றெய்தினா ரந்தரரை வென்றுவன்பிற்
காசினியி லுற்றான் கடிது. (௫௪)

பூவந் தவுணர் புனைவன் றனைநோக்கி
நாவனண்ணித் தீவி னகர்புரிதி—மேவவெனப்
பூவிலய னானுறவே பொற்பினகர் கண்டதிலோர்
கோவில் குயிற்றினான் கூர்ந்து. (௫௫)

சிங்கமணிப் பீடமொன் றுஞ் சிந்தையிற்செய் தன்மைகண்டு
வெங்குருவுண் மாமகிழ்ச்சி மேவியே—யங்கநகர்
மாமதங்கொண் மாமுகற்கா மாண்பின் மதங்கபுர
நாயமதற் கெய்தவென்றா னன்கு. (௫௬)

ஈரைந்து காத மெழினீட்சி மாநகர
மாரைந்து காத மகற்சியதி—லார்வி
லரக்க ரவுண ராசினொடு மேவி
யிருக்கநல்கி னானே யிறை. (௫௭)

அங்கண் மணிக்கோயி லார்மங் கலத்தொடுபோய்ச்
சிங்கணைமேல் வீற்றிருந்தான் சிந்துரத்தோன்—பொங்கவுணர்
வேந்தின் மகளாம் விளங்கும் விசித்திர
காந்திதனை வேட்டான் களித்து. (௫௮)

வான்மடவார் தன்குலத்து மாதர்முன் மங்கையரைத்
தான்மணந்து பின்னர்த் தனிநகர்வெங்—கோன்மருவத்
தாரமரர் தானவர்க டாழ வுலகனைத்து
மாசரசு செய்தா னவன். (௫௯)

ஆனை யிருநிதியு மைங்காவு மாமணியுங்
கோனு மமருமே குற்றேவ—லானுற்றத்
தந்திமுகற் கார்புகருந் தானவர்தங் கோமானு
மந்திரியாய் வைகினார் வாய்ந்து. (௬௦)

அன்னபோ தத்திமுக னண்டர் தமைநோக்கி
மன்னியிவன் வைகலுமே வந்தழிதுஞ்—சென்னிகுட்டிக்
ஆதன் செவியிலுறக் கால்கொண்டு தாழ்ந்தெழீஇச்
செய்கவணி நீவிரென்றான் றேர்ந்து. (சுக)

அன்னதோர்ந் தண்ட ராசு மறுப்பதஞ்சி
முன்னர்நின்றம்பன் முகத்தவுணன்—சொன்ன
தொழின்முறையே யாற்றித் துயரவலை மோதப்
பழியழுவத் தாழ்ந்தார் பரிந்து. (சுஉ)

வெங்கைமுக னேவலால் விண்ணோர் விழுமமுற்ற
தங்கயன்மாற் கோத வகந்தேற்றிப்—புங்கவரோ
டன்னார் கயிலை யணிகோயி லுட்புகுந்தார்
பொன்னாரு நந்தியுய்ப்பப் போய். (சுங)

அண்டிறைதா டாழ்ந்தேத்தக் கத்தனண்ட ரோர்டலமங்
கெண்டுளவோ யிங்குவந்த தென்னையென—விண்டரற்பார்த்
தோவி லுயிர்தொலைக்கு மும்பன் முகத்தவுண
னாவிதொலைத் தானென்றா னங்கு (சுச)

என்றலுமெங் கோனொருசே யீந்தவுணற் சாய்த்தனையான்
வென்றிகொண் டேக விடுத்துமென—நன்றெனவே
யாடினார் பாடினா ரன்னர் விடைபெற்று
நாடி நகரடைந்தார் நன்கு. (சுரு)

போயினபோ தீசனிடப் பூவைதனை நோக்கியா
மாக முறுமிவ் வனந்தெரித்து—மேகெனவே
தாயினார் தையலுமை தன்னோடுந் தானெழுந்து
போயினான் றேம்பாய் பொழில். (சுசா)

தேனமருஞ் சோலை செழுங்கயிலைப் பாலமர்தல்
வானமருங் கூந்தல் வனிதையொடு—கானமருஞ்
செச்சைமலை சேந்தன் றிருத்தாதை வைகமணிப்
பச்சைமலை மேயதொக்கும் பாங்கு. (சுஎ)

பச்சைவண மாய்த்தழைத்துப் பன்னிறமாம் பூப்பூத்து
வெச்செனல்காய் தந்துள்ளுண் மேற்கனிந்தே—யிச்சையிற்ற
னன்றசேர்த் தானடைந்தார்க் கம்பலமீந் தார்விமலை
போன்றதே வான்றோய் பொழில். (சுஅ)

தண்ணளிக்கோர் வைப்பாய்த் தருநியமம் பூண்டடியி
நண்ணியவர்க் கொப்பிலின்ப நல்கலால்—விண்ணுயிர்கள்
மாறு மழுவு மலர்க்கரங்கொள் வித்தகனை
மாறு நிகரில்லை மற்று. ([illegible])

காவினியல் கண்டுதன்ஞேர் காக்தையோ டின்னருள்செய்
தாவியுளோர் வென்ன வதனுளா—ரோவியமன்
றத்தன் செலவாய கவிரோவக் கோலமெலாஞ்
சித்தமுறக் கண்டாள் சிவை. (எ)

பாங்குறுதே வானையாற் பன்னதன ளாரியா
யோருகுதனி யக்காந்தா ஞென்றிரண்டாய்த—தூயகலெனத்
தோன்றவவை யான்காணத் தொல்புணர்சசி யின்முயற
ஞேன்றலதென் கொல்லென்ருள் சூழ்ந்து (எக)

மூனபுரீ காண்கையான் மூலமா யுளளசோா
மன்பொறியுற் றிருருவ மன்னரியே—யன்பிஞ
றுன்றநதி போற்புணரு மாகையாற் ஞேகைபெ
நின்றகவை யெண்கிகூாய் நீ. (எஉ)

காட்சியா யீதுசெயுங காரணநதான பெறறநன றன
மாட்சியா ரோர்வரென மன்புகழ—வாட்சியா
மன்போ தகமாய்சசோ மாணபாா தொடரிலவி டு
முன்போன்றதுகுடிலே முன். (எங)

அக்கணத்தி லாங்கொருசே யையங்கரநால் வாய்முக்கண்
மைக்களிற்றின் வததிரத்தின் வந்துதிததான்—ஞெகவெவரு
நேசமுறத் தாள்பணியு ரமைபிஞ ஞேர்வரியா
னீசனென நின்றருளவா ளையநது. (எச)

வந்திருவர் தநதாண மலரிணைமேம ாழுதலுந
தநதைதாய முன்றபூவ க தணணை முளயசய—தநதமிலாய்
நின்னைநினைந் தாறுவாா நேர்கரும மா குநீ
யுன்னலர்செய் கைக்கூ றுஞற்று (ருஎ)

ஆயனைய ஞுதியா மண்டர்க்கு மார்க்குநீ
நாயகமே செய்தியா னல்லருளின்—றீயகயத்
தானனைச சாடியே யாழியான் றன்சிறமை
தானகற்றி மீள்கென்ருன் சம்பு. (எசு)

ஞானமைந்தன் பான்மருவ நற்பூத மாவனிகந்
தானருள்செய் தத்திமுகன் றன்னைப்பார்த்—தானவெழி
னங்கடையி ஞுயகஞ்செய் நன்கெனவைத் தன்னையொடு
சங்கரன்போய்ச் சார்ந்தான் றளி. (எஎ)

...த்திமுகன் பாரிடராங் தானைமுன் முற்றுறவே
...மெல்கோன் வந்தனைதா னன்கியற்ற—வந்து
...யோ ஞுதியராம் பண்ணவர்தா னேத்தித்
...ம்வின் வைகிஞன் சூழ்ந்து.

கண்ணனன்பிற் கண்ணுதலைக் காணக் கயிலையின்க
ணண்ண வானருளா னதியுய்ப்ப—வண்ணன்றா
னாங்கருத்தியோடுதொழ வாழியான் றன்னைத்தன்
பாங்கிருத்தி யென்றான் பரிந்து. (௭௯)

மாதையா னோக்கி மகிழ்வுற்றோ ராடலாஞ்
சூதையெம்மோ டேபொருதி தோற்றனையே—லீதினின்பூண்
வென்றனையே லெஞ்சகிமுன் வெம்பணிகள் கோடியா
லென்றனையோ டோதினா னேய்ந்து. (௮௦)

அன்னதற்கு மாதிசைய வததனத்தற் பார்த்தரிநீ
யின்னதற்குச் சான்றா யினிதிருத்தி—யென்னநன்றென்
றெண்புடையில் வைக வெவருமுற மன்னருளா
லொண்பலகை காசுதந்தா ரோர்ந்து. (௮௧)

கண்ணுதலோன் மாலிக கருவிமுறை வைக்கென்ன
நண்ணவைக்க நாரியையு னங்கிருதி—யண்ணக்
கவற்றினையு னுய்ப்பவெந்தை காரிகையு முய்த்தா
டவற்றியல்பின் றாடினா ராம். (௮௨)

பஞ்சென் றுரைசெய்வர் பாலையென வோதுவரீ
ரஞ்சென்ப ரஞ்சென்ப ரன்றியுமே—துஞ்சலொடு
தோமினட மென்பர் துருத்தியீ தென்பர்தீ
ராமின் வெடியென்ப ராங்கு. (௮௩)

அடியிது பொட்டையி தென்ப ரஃதெனவே யூழின்
முடிவில் குழூஉக்குறிக ணுந்தக்—கடிதினங்கு
செப்பினரொண் மாக்கவறு சிந்தினார் நண்கருவி
துப்பினெதி ருக்கினார் சூழ்ந்து. (௮௪)

எந்தையா மீசன்கொ ளின்னருடா னென்னையோ
சிந்தையாந் தேர்ந்திலமெண் செய்கையால்—விந்தையா
மேற்றா னெதிராடு மெல்லியற்த மாலயற்குத்
தோற்றானே தோற்றான் றுதைந்து. (௮௫)

ஒன்றும் பரம னுமைதன்னை நோக்கிநின்னே
னன்றாய தென்று நகைத்துநம்மை—வென்றா
யலைதோற்றாய் முன்விளம்பு மாற்றானீ பூண்பூ
ணுலைவிலெமக் கீதியென்றா னோர்ந்து. (௮௬)

என்றா ளனைத்துங்கேட் டெண்மா யனைநோக்கிச்
சான்றாய நீயிதனைச் சாற்றுகென—வான்றகு
தார்போர் வெலுந்தகையோ னத்தனென நன்றுநன்றென்
றேர்போ ருமைசினந்தா ளேய்ந்து. (௮௭)

அங்கணனங் கேளீ தறையினுநீ யாராயா
தெங்கணிது சொற்ற விழுக்கினால்—வெங்கண்ண
பாம்பாதி யென்னப் பகர்ந்தான் பரையொல்லை
யாம்பா லுருவடைந்த தாங்கு (௮௮)

வெவ்வுருவ மெய்திடமால் வித்தகன்றா டாழ்ந்தெவ்வா
றிவ்வுருவ நீங்கு மிசைத்தியென—வெவ்வமிலா
னென்பால் வருமன்பி னீதுபெற்றாய் நீக்குவே
னுன்பால் வருதுன் பொருங்கு. (௮௯)

தென்பா லுலகிற் றிகழாலங் கானுளதங்
கன்பா வடப்பொந்தார்ந் தாற்றுதவ—மன்பால
னவ்வயிற்செல் வாவெனதிர்போ யன்னவனைக் காண்டியுனக்
கிவ்வுருவ மாறு மினிது. (௯௦)

என்னு மளவி லிறையவனைத் தாழ்ந்தேத்தி
யன்னவனத் தெய்துவே னத்தவென—மன்னும்
வரமார் கயிலை வரைநீங்கி யால
மரமார் வனமடைந்தான் மால். (௯௧)

வித்திற் சிறிதென்பர் வெள்கவேர் வீழ்சாகை
மூத்தலமு மேவ முறையாக—வித்தகன்றெவ்
வூர்போய் வெலவயனா மோர்பாக னுய்த்தநெடுந்
தோபோன்றிருந்ததால் சீர்த்து (௯௨)

வீழ்கிளையொண் காலாய் வியன்றூர்கீழ்த் தட்டாய்விண்
போழ்கிளைமேற் றட்டாய்வாழ் புட்கொடியாய்த்—தாழ்கனிக
டெய்ய பவளத தொடையா யடைதுகிலாய்
வையமது போலாம் வடம். (௯௩)

ஓருங்காற் கல்லாலு மும்பர் பதியமரைங்
தாருமொவ்வா வாலினுக்கென் சற்குரும—னாரும்
பரச விருக்கும் பதியாந் துறைசை
யரச விருககநிக ராம். (௯௪)

அலகில் புகழுடைய வன்னையுரையா
விலகு பணியா யிருநீ—ருலகமெலாந்
தொந்திதனில் வைக்குந் துளவன்வடதாருப்
பொந்தி லமர்ந்தான் புரிந்து. (௯௫)

பூந்து கயமுகனான் முன்னமது நொந்திமையோ
ரிந்திரன் முன் னேவருமே யோம்பன்—வந்தேர்ந்
துள்ளமகிழ் வெய்தி யுயர்கயிலை மேவியையங்கை
வள்ளல் பதம்பணிந்தார் வாய்ந்து. (௯௬)

அங்க ணிறைஞ்ச மமரரைப்பார்த் தைங்கரத்தோ
னுங்கள் குறையெ னுரைமெனப்—புங்கவர்சோன்
சொல்லான் கயாசுரனோர் சோதியா மெய்திறு
ஞொல்வான் றுயர்செய்தா னூற்று. (௯௭)

பின்னங் கனைத்தன்னைப் போர்வந் தனைசெய்யச்
சொன்ன தன்றிக் குட்டேனே துன்னுகாங்—கன்னமூறத்
தாழ்ந்தெழவுஞ் சொற்றான் றணிவில் பழிநாணத்
தாழ்ந்தவற்கா னானே மயர்ந்து. (௯௮)

அன்னவன்ற னுவி யடநீ வருவையெனு
முன்னவன்றான் சொற்றமையான் முன்னெவரு—நின்னடைந்தோ
மேதமகற் றென்று விலட்டுகெமுன் வைத்தேத்த
காதனைவற் சாய்த்துமென்றா னன்கு. (௯௯)

இறைவ னுடனிமையோ ரெம்மிடுக்கண் டீாந்து
மறுமையின்பும் வந்தவினி மன்னப்—பெறுவதென்கொ
லென்றின்ப மெயதுறுமபோ தீசனரு ளோரம்பன்
றுன்றவற்கொல் வான்முனிஞன் சூழ்ந்து. (௧௦௦)

டொருக்கென் றெழுந்தையன் பொன்வாய்த லெய்தி
யருக்கனில் வில்வீசசல னோர்தோ—டிருக்கழல்வைத்
தேறியிருந் தேகுழித்தி னேண்பூதர் வந்துசுற்றிக்
கூறி[illegible]ன்னவன்சீர் கூர்ந்து (௧௦௧)

சாமரைகள் வீசினர் தண்கவிகை யேந்தினர்
தேமருவார் பூமாரி சிந்தினர்—நாமம்
வருகோடி னர்பூதர் மன்னியஞ்சாற் றிட்டா
ரொருகோடி சாரதர்க ளுற்று. (௧௦௨)

மன்னைங் கரத்தோன் வருகாலை யும்பரெய்தி
யின்னலர்கள் பெய்துசெல வெவ்வனிகத—துன்னுறவே
தூபுரமுன் னோர்ப்ப ரொடிப்பிலேண் டெம்மதங்க
மாபுரமுன் போயினன் வாய்ந்து. (௧௦௩)

ஆயதொற்றா தேர்ந்தோடி யாம்பன் முகற்கியம்பத்
தீயனலிற் சீறியே திண்படைகொண்—டேயதன்றே
ரோதினன் பல்லியங்க ளெல்லா மியம்பினவே
மாறினுற் றுனைசுற்ற வந்து. (௧௦௪)

ஆயிரமா வெள்ள மணிகமுற்றப் போயவுண
னுயகன்சேய் தன்படைமு னன்னினன்—மேயவெஞ்சில
பூதருந்தின் டானவரும் போர்புரிந்தார் வன்படையா
[illegible]ர் சோக்க விழுந்து.

ஏற்று சிலரிறந்தா ரெண்டா னவர்பூதர்க்
காற்று தழிந்திரிந்தா ராயிடைமன்—சாற்றுவி
விட்டா ரளப்பிலார் மெய்குறைந்தா ரெண்ணிலார்
பட்டார் துயரம் பலர். (௧0௬)

ஒழிந்த கரிபரிதே ரோங்கவுணர் தானை
குழிந்தகட் பூதர்வென்றி கொண்டா—ரழிந்ததன்மை
நோக்கமுற்று வில்வளைஇ நோன்கணைவ ராங்குலைய
மாக்கணையா மாரிபெய்தான் மன். (௧0௭)

புங்கவர்தின் பூதர்மெய் போழ்தரக்கண் டைங்கரத்தோன்
வெங்க ணவுணனேர் மேவலுமே—யிங்கிவனா
ரென்று வினவ விபமுகத்தோன் சங்கரன்சேய்
வன்றிறலோ னென்றான் வகுத்து. (௧0௮)

அன்னவுரை கேட்டவுண னண்வலவன் றன்னைப்பார்த்
துன்னிரத மைங்கரன்மு னுய்ப்பையென—முன்னுகைப்பத்
துன்றுவளைத தீக்கண் சுழறநோக குற்றெயிற்று
லொன்றுமிதழ் தின்றுசொல்வா னொன்று (௧0௯)

நுந்தை யெனதுதவ நோககிவரந் தநதமைதேர்
தந்திலையா ராவிகொடு தான்போதி—புந்தியிலாய்
போர்செயினிற் கேணில்லை புங்கவரான் மாலுடரா
லார்படையான் மாய்விலையெற் காங்கு. (௧௧0)

பின்னும் பலவுள்ள பெற்றவரம் வெல்பவரா
ருன்னைவென் றண்ட ருயிருமுண்பே—னென்னைவெல்ல
வல்லையேல் வல்லை வருதியெனத் தும்பிமுக
னொல்லையே யோதுவா னோர்ந்து. (௧௧௧)

ஏண்படையும் வாளுரு மேய்வரமு நிற்களித்த
மாண்படையு மெந்தைநின்னை மாய்த்தங்கண்—சேண்புரப்போ
னந்தரர்க்குப் பொன்னா டளித்தனையா ருள்ளமுற்ற
வெந்துயர்தீர்த் தேகென்றான் வேட்டு. (௧௧௨)

உன்னுயிர்தான் காத்தியெனி லோருறுதி சாற்றுவன்கேள்
பொன்னகரில் வேந்து புரக்கநல்கி—யிந்நிலத்தை
யாண்டே யிருதியஃ தாற்றிலையே னின்னாவி
மாண்டே விடநினைவேன் மற்று. (௧௧௩)

என்னலுமே வெய்யவன்வேர்த் தேமத் தனுவாங்கி
மின்னொளிநா ணேற்றிவெங்கோல் வீசலையன்—மன்னெழுவ
[illegible]றவிற்ற தோர்வில் லெடுத்தனையான் வாங்குமுன்னர்
[illegible]யுஞ் செற்றான் வரன். (௧௧௪)

தண்டமொன் றேந்தியரன் றன்றனைய னொடெதிர்ப்ப
விண்டதயர் வான்புடைத்து வெய்யனுரம்—புண்டயங்கத்
தூக்கமரம் போனின்றான் றந்திமுகன் றனைதெற
தூக்கினான் பாசமொன் றோர்ந்து. (௧௧௫)

விட்டவெம் பாசமங்கண் வெய்யதோர் சேனைமுற்றுங்
கட்டியது செய்பின் கணிச்சியுய்ப்ப—வட்டதா
லன்னதனை நோக்கியும்ப ராடினார் தானைபட்ட
மன்னவனை னோர்ந்துநொந்தான் மற்று. (௧௧௬)

மூர்ந்துதன்கை யுள்ள முரண்படைகள் யாவுமே
சிந்தினா னன்னவெலாஞ் சேர்ந்தவும்ப—லெந்தை
தனைவலஞ்செய் தேத்தித் தனியேவல் செய்த
வினைவெகுளித் தீக்கணின்றான் வேந்து. (௧௧௭)

நின்றவனை நோக்கி நெடும்படைக டாமேவிற்
சென்றவனைக் கொல்லா சிவன்வரத்தா—லென்றிறையை
யுன்னித்தன் கோட்டிலொன் றோர்கரத்தி னான்முரித்தான்
மின்னிற் றிகழ்சடையோன் வேட்டு. (௧௧௮)

கையிலொசி கோட்டைக் கயாசுரன்மே லுய்ப்பவது
வெய்யனுரங் கீண்டுபோய் மேவுடலம்—வையமிசை
வீழ்த்தியொல்லை யோடிநன்னீர் வேலைபடிந் தேரம்பன்
வாழ்த்துகா முற்றதுவே வந்து. (௧௧௯)

வெய்யனுரங் கீண்டலுமே வேலையுடைந் தாங்கார்த்தார்
செய்யநெய்த்தோர் கான்பரந்து செங்காடா—வையமுன்னும்
போரா கியதனையான் பேர்ந்துருநீத் தஞ்சவுல
கோராகு வானா னுருத்து. (௧௨௦)

தாக்கவரச் சாரதன்றோ டன்னினின்று மூடிகத்தை
நீக்கருந்துப் பின்றாக்கி நீநம்மை—மீக்கொளென
மேக்கார் பிடர்தாவி வீற்றிருந்தே யூர்தலுற்றான்
மாக்கார் மதங்கொண்ட மன். (௧௨௧)

மற்றதுகாண் டேவர் மகவான் முதலெவரு
மிற்றனன்வெஞ் சூர னிடரேகிற்—றற்றதிக
லென்றுமகிழ்ந் தாடியெழி லேமமலர் தூயன்பு
துன்றநனி போற்றலுற்றார் சூழ்ந்து. (௧௨௨)

பூப்பவனு மெல்லாப் புவனங் களுமுறையே
காப்பவனும் பின்னர்க் கடிந்தவற்றை—வீப்பவனு
நீயலா தில்லையென நின்றிறைஞ்சிப் போற்றவும்ப
ராயவனையான் செய்தா னருள். (௧௨௩)

உய்ந்தனகா மென்றயன்முன் னும்பரெலாம் போற்றுதலும்
வெந்தகுவன் காய வீளிந்தவரை—யெந்தையன்பி
ஞேக்கி யெழுதிரென வொய்தெழுந்தா ரஃதுணர்ந்தான்
வீக்குகழல் வெவ்வவுணர் வேந்து. (கஉ௪)

மந்திரியோ டின்னியுயிர் வாழ்ந்தனளு னென்றுள்ளா
யந்தரமார் வீயெனப்போ யப்பதிதீர்ந்—துந்தொளிசால்
பொன்வரையின் சாரலின்கட் பூந்தருமன் பூழையினுண்
மன்புலம்பி யுற்முன் மருண்டு. (கஉ௫)

தானவர்கோன் செல்லத் தனிப்புகரு மோர்புள்ளாய்
வானமருந் தன்னுலகம் வாய்ந்திருந்தான்—மாநகர்போய்ப்
பூத ரவுணரொடு போர்முற்றி மேவுதலு
நாதனவ ணின்றகன்ற னன்கு. (கஉ௬)

மீண்டுசெங் காட்டிலொர்சார் மேவிப் பரவெளியிற்
ருண்டவஞ்செய் தாதையுருத் தாபித்துப்—பூண்டவன்பிற்
பூசைசெய்தா னத்தானம் பொற்கணைய தீச்சரமென்
ருசையுளார் சொல்வா ரமர்ந்து. (கஉ௭)

பூதகணம் போற்றவரற் பூசை புரிந்தபின்னர்
மேதகுசீ ராகு மிசையேறி—நாதனெங்கோ
மாலவன மாதுமைதன் வாக்கினர வாகிவைகு
மாலவனம் புக்கா னமர்ந்து. (கஉ௮)

கயமுகனுற்பத்திப் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா. சுகஎ.

---

# அனந்தன் சாபநீங்கு படலம்.

---

புக்கபொழு தங்காலம் பொருந்தார்ந் தாற்கருதி
மிக்கதவஞ் செய்மால்கை வேழமுற—வக்கணநேர்
சென்றிறைஞ்சிக் காணவம்மை செப்பிடுமா சாபமற
முன்றனுருப் பெற்முன் முயன்று. (க)

மாரன்முனுருக் கண்டு மகிழ்ந்தானை யேத்தியங்கை
மேன்மையுளான் முன்னிறைஞ்சி மீண்டெளியன்—பான்மருவு
பூசனைகொள் வான்வேண்டும் புந்திமகிழ்ந் தின்னருள்செய்
[illegible] பாலவென்ற னீங்கு. (உ)

இங்ஙன்மால் சொற்கேட் டதுசெய்வேன் றங்கமாக்
கொங்கலர்முன் னாகக் கொடுபோந்து—பொங்கவனைச்
சாற்றியலி லர்ச்சித்துச் சாலவிசெற் றானுர்த்திப்
போற்றியிது சொல்வான் புரிந்து. (௩)

வின்றும மார்திங்கண் மின்மதியா ரும்பக்க
மிக்கானு னுன்னையர்ச்சித் திட்டமைபோன்—மன்றுவுன்
பொன்னடியார் பூசை புரியினவர் புன்கணொழித்
தின்னருள்செய் கென்றா னினிது (௪)

கேசவன்சொற் கேட்டலுமீ கேட்டபடி யாக்கிநின் றன்
பூசைமகிழ் வுற்றமெனப் புங்கவர்க—ணேசமொடு
போற்றிடவெவ் வாகிவர்ந்து பொற்கயிலை மேவியையன்
சாற்றாற்றாழ்ந் துற்றான் றளி. (௫)

அற்றைநாண் மாயனய னாதியர்க ளைங்கரன்றான்
முற்றுமன்பிற் றாழ்ந்து முறையினருள்—பெற்றுநின்றே
யெந்தையெமை வாட்டு மிபமுகனை வீட்டவுய்ந்தோ
மூந்துலகம்மா றுண்டோ வுனக்கு. (௬)

நென்னல் வரையசுர னோர்செய் பணிநின்மு
னின்ன தினந்தொட் டியற்றுதும்யா—மென்னவது
செய்திரென வும்பர் சிரங்குட்டிக் கொண்டுகுழை
யெய்துகையிற் றாழ்ந்தா ரினிது. (௭)

அன்புடனே யாவருமீ தாற்றி வணங்கிநிற்ப
மன்பரையின் மைந்தன் மகிழ்வெய்த—வுன்புலவ
ரின்றுமுத லெம்மைப்போ லிப்பணிசெ யேவர்க்கு
நன்றருள்செய் கென்றார் நயந்து. (௮)

அம்பிகைமா மைந்த னருள்செய்தவ் வாறயன்மா
லும்பர்க் கெலாவிடைதந் துய்ப்பவண்டர்—தும்பிமுகன்
கூர்ந்த வருளாற் குலவியதந் தம்பதம்போய்ச்
சார்ந்தங்கு வைகினார் தாம். (௯)

வேத முதலெழுத்தாம் வித்தகனுற் பத்தியிது
மாதிடத்தாற் கோர்ஞ்ஞைந்தான் வந்ததன்மை—யோதுவங்கேள்
சிற்குணனே யாகுஞ் சிவன்குணமோர் மூன்றுமிலா
நிர்க்குணன்சீர் சொல்பவரார் நேர்ந்து. (௧0)

பரவுயிர்க்குப் பாசம் பறிப்பவன்மால் வேதற்
கிருதொழிலீந் தாங்கவற்றிற் கேய்ந்து—மருவுகுண
மூர்க்கி யபேர்தொழிலுக் காத்தா மதமமைத்தா
னுள்ளினது தேர்வர் தனித்து. (௧௧)

மாமறையா லாதிதக்கு மாமுனிவர்க் கன்னவைநாந்
தாமறிந் தைத்தனைச் சாற்றுவனோ—வாமமல
மெய்வடிவ மேவுமோ வித்தகனை மூலமெனத்
தெய்வமறை செப்புமோ தேர்ந்து. (௧௨)

விமலனென் றீறு விளக்குந் தகைவாற்
றமகுணத்த னென்றியந்தத் தன்மை—யமைசெயலா
லேய்ந்த வியற்குணந்தான் யாருரைப்பார் வேதமுமு
ணய்ந்து மறியா வது. (௧௩)

ஈந்த லளித்த லியற்று பவர்க்குள்ள
சாத்திக ராசதந்தந் தஞ்செய்கை—மாத்திரை
யல்ல தவர்கட் கவைபார்த் திடினியல்பாச்
சொல்லவு மாகுமோ சூழ்ந்து. (௧௪)

மாற்குருவ நீலமுந்நீர் வாய்த்துயில்கொள் பான்மையர்நை
யேற்கும் பிறவுமெய்து மேலிரண்டி—னார்க்குமன்பி
னேத்திவழி பட்டினரு ளேய்போத மும்பெறலாற்
சாத்திகமே பெற்றுளான் றான். (௧௫)

மேனிபொற் கென்றலான் மேவமல மானபொரு
ளுனென் மருட்கையா னந்திதனைத்—தானன்
குணர்தெளிவிற் பூசனையி லுண்டா யதுவே
குணமெனலாம் போதற்குங் கூர்ந்து. (௧௬)

ஆசையின்ன லெய்திநோ ரக்குணவி தத்துறுவ
ரீசற் கதுநனுகா தீறுசெயப்—பேசினோர்
தாமதமல் லாது தனிமுதலின் றன்மையெலா
நாமறியற் பாலதோ நன்கு. (௧௭)

என்றினைய தூயோ னிசைத்தலுமே வன்மையொடு
மன்றிருவ மெய்தி மயங்கலால்—வன்றக்கன்
புந்திகொளா தைய புகழாற்கீ யேனவிநீ
சிந்தைசெயேல் போதியென்றான் றேர்ந்து. (௧௮)

திக்களிது கூறத் ததீசி முனிசினவ
மிக்கு நடுங்கியது மேவுலக—மக்கணந்தன்
சீற்றந் தனைநோக்கிச் செப்பகில மற்றவனு
லாற்றலையு மென்றுணர்ந்தா னங்கு. (௧௯)

சீற்றந் தணந்து சிவனை விலக்கியின்
[illegible] வன்பிறக்க—வேற்றமின்றோ
[illegible] செல்லா மொழிவுறவின் னேயென்றுச்
[illegible] மாமுனிவன் சூழ்ந்து.

அந்தணரை நோக்கிமுனி யாரணம்போற் றீசறு
டெக்லைதயன்பர் கண்டிலைகீறென்னிநீர்—சிந்துலகி
லானவைய ராய்ப்பிறந்தே யாக்கிறந்தெய் தாதுகதி
நிநெறியில் வீழ்கிரொன்றான் றேர்ந்து. (உக)

இனையநெடுஞ் சாப மிசைத்துமுனி பாங்கர்
முனிவருறத் தன்னிலுற்றான் முன்னி—யனையவன்றன்
பின்னாகத் தக்கன் பெருந்தகவு சீர்திருவேண்
முன்னாகப் போயிற்றே மொய்த்து (உஉ)

அனந்தன் சாபநீங்குபடலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா. ௬௩௬.

---

# தானப் படலம்.

போன பொழுதிலவன் பொற்றுவச மிற்றகொடி
சேனமகத் தூணிற் செறிந்தமலைக்—கானமங்கை
மங்கலநன் றண்கழன்ற மற்றுமெண்ணி றுன்னியித்த
மங்க ணிகழ்ந்த வடுத்து. (க)

இன்ன நிகழ்ந்துமுள்ளத் தெண்ணான் சிறிதுமையன்
றன்னையரி யைப்பூ சனைசெய்தான்—பின்னையும்பர்
மாமுனிவர்க் கானநல்கி மாதர் மருகர்க்கு
மாமங் கலமளித்தா னாங்கு. (உ)

தக்கனிந்த வாறுநல்கித் தாமோ தரன்முதலா
மிக்கெவருங் காத்திடத்தீ வேள்விசெய்போ—தக்களத்தின்
முன்னமே வொண்சுரபி மொய்வெள்ளி வெற்பன்ன
வன்னமே நன்களித்த வாங்கு. (௩)

தீயபாற் சொன்றி செழுமுதிரை யுண்டிபிற
வாயவனம் வீற்றுவீற் றாகவெற்பின்—மேயவெக்தை
தோசைமுதற் பண்ணியங்க ளென்கனிக ளேவருமே
யாசை யுறவகுத்த வாங்கு. (௪)

விருந்தினர்தாங் கொள்ள விழுது தயிர்பா
றிருந்துநதி யாமென்னச் செய்த—பெருந்தகவின்
மான்மதஞ்சார் தொண்பனிநீர் வன்னடைக்காய் பூவிலைய
வான்மகிழ்வி னல்கினவே யாங்கு. (௫)

ஆவதெல்லா நல்கிமணி யாரு மிருந்திகார்த்
தாவிலவ னேவலாற் சாலையின்கண்—மேவி
மணிகள் கனகம் வணங்கொ ளுடைகள்
பணிக டொகுத்தவொவ்வோர் பாங்கு. (௬)

மற்றுள் ளனவுதவி மாடடைந்த வேலையத்தீ
தற்றதக்க னேவலின்க ணுற்றொழுகு—நற்றவர்கள்
யாரு நிலத்தோர்க் கிவையிங் களித்துமெனக்
கூறுமன்பிற் சொன்னார் குறித்து. (௭)

இன்னபோ திச்செயலோ ரோங் தணர்முனிவ
ரன்னநெடுஞ் சாலை தனையணைந்து—முன்னுஞ்
சிறுவிதியைப் போற்றிச் செறிந்தாடிப் பாடி
யறுவைதனை வீசினா ரார்த்து. (௮)

கண்டந் தணரைக் கடிதுவம்மி னீரென்னுக்
கொண்டு குறுகிக் குழுவிருத்தி—யுண்டிகளை
யம்பொன் மணித்தட்டத் தார்க்குமிட் டூட்டுவித்தார்
பம்புறவு கொண்டாரிற் பார்த்து. (௯)

அன்னபொழு தாரு மயின்றுஞ் சுவைமிகையா
லின்னமுண்டி வேண்டு மெனவுரைப்பார்—பன்னுசில
ராயவுண வாற்றவுண வாரகட்டில் வெய்யபசித்
தீயடலை யென்பார் சிலர். (௧௦)

வானை னனந்தன் வலிதருகுண் டோதரனின்
மாணுறப்பல் கைவாய் வயிறுபெற்றிவ்—வூணருந்தக்
கூர்வடவை போற்பசித்தீக் கொண்டாற் சிறிதுநசை
தீர்தருமே யென்பார் சிலர். (௧௧)

இந்தவுண வுண்ணமைந்த ரில்லாளை யாங்கொண்டு
வந்திலமென் செய்வமென்பர் வாய்ந்தசிலர்—தொந்திதெற
மாக்கறியூ ணுண்டிவ் வயிறெழலெவ் வண்ணமெனத்
தேக்கெறியச் சொல்வார் சிலர். (௧௨)

மக்களொடு வானவரு மற்றவரும் வாழ்ந்திடலாற்
றக்கன் புரிந்த தவத்தினுண்டோ—மிக்கதென்ப
ரெல்லையினல் லூணுதவு மித்தேனு வைப்பற்றிச்
செல்லுதுமூர்க் கென்பர் சிலர். (௧௩)

அன்னபல பேசிநங்கு மந்தணர்கள் கேட்டவெலா
மன்ன வளித்தருத்தி மாமுனிவர்—பின்னவரை
யாங்கிருத்திச் சாந்த மடைக்காய் மலர்யாவு
[illegible]கருத்தி யோடுதந்தா ரோர்ந்து. (௧௪)

உண்டான பின்சாத் துரத்தனித்து பாதுண்டுமென்
றெண்டான சாலேயெய்த வேர்முனிவர்—கண்டோர்வி
வீந்தார்பொ னீந்தார்பூ னீந்தார்து கீந்தாரா
வீந்தார்மா தந்தணர்கட் கேய்ந்து. (கரு)

மல்குசெம்பொற் பாதுகைகண் மன்குடைகள் குண்டிகைக
ணல்கி முனிவர் நயப்புறவே—மல்குபொரு
ளங்கண் மறையோ ரவாவடங்கத் தந்தவெலாந்
தங்கடலைக் கொண்டுசெல்வார் தாம். (கசு)

மாலயன்மற் றேவர் வயங்கூர்தி யார்த்தவொர்பா
லாறு மாம்பையர்க ளாடினரோர்—பாலமர்ந்து
நண்புறவே வானோர் நயமொழிகள் பேசியநகுப்
பண்புறவே வைகினரோர் பால். (கஎ)

வேதவல்லி யீன்ற விளங்கிழையார் விண்ணவர்த
மீதர் சசியொடொர்பால் வைகினு—ரோதுமற்றக்
கோங்காங் குவிமுலையார் கொண்கருடன் கூர்ந்தவன்பி
னுங்காங் குலவியுற்ற ராண்டு. (கஅ)

தானப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா கூருஎ.



# வேள்விப் படலம்.

---

மருத்துளவன் போதனயன் மன்ன மகத்தின்
கருத்தனுந் தீயன் கருதி—வரித்தநல
மன்றவரை நோக்கி மாபி னிருத்துமுத்தி
யென்றனுநன் றென்று ரிசைந்து. (க)

மேய விருத்திரேனர் மேவாணி தன்னினுற்ற
தீமை யொளிர்வே திகைப்புறப்பை—மீயுய்த்துப்
பன்மந் திரத்தாற் பரிதிகள்சூழ்ந் தேனைவிதி
மன்மாபிற் செய்தார் மகிழ்ந்து. (உ)

ஆங்க ணழனா லறைமுறையிற் செய்தலுமே
பாங்க ளிருத்தினரைப் பாரமம—னீங்கனுங்கட்
கையசெய தன்னேநினேர் தாற்றமி னென் றுரைத்தான்
செய்யவர் மேவமர்வோன் சேய்.

என்ன வதுகேட் டிருத்திஞர் முன்னமா
மன்ன மகத்திற் கவிமுழுதும்—வன்னிபல
துன்று சமிதை துதைதருப்பை யதிதந்தார்
பன்னிருவர் கொண்டு பரிந்து. (௮)

அந்தமகஞ் செய்வித்தா ராங்கொருவ ராலவிக
ளெந்தையலார் கொள்ள வெவர்க்குமுன்ன—மந்திரத்தைச்
சொன்னு ரொருவரன்ஞர் சூழ்தந் தமையழைத்தார்
துன்னு வொருவர்பேர் சொற்று. (௯)

மற்றவர்க்கெல் லாமொருவர் வன்னியிட்டா ரின்னவிய
வற்ற முணர்ந்திருந்தா ராங்கொருவர்—துற்றதற்கு
முற்றுநல்ல வின்னருளை முன்னிப் புரிந்தனரன்
புற்றொருவ ரம்முதல்போ லுற்று. (௰)

இருத்தினர்க்கு மேனையர்க்கு மீதியற்ற யாக
கருததனந்தத் தேவர்க கருதிப்—பரித்தனுதி
ரென்றவிசெய் தோறு மினிய மொழிபகர்ந்தே
நன்றருத்தி யுற்ற னயந்து. (௰௧)

திருந்துசுவை யானுந் திகழ்தூய்மை யானு
மருந்தனைய தேனு மகத்திற்—பொருந்தவிசேர்
மேலவனை யன்றி மிசைதலான் வானவர்கட்
காலமதே யாகிய தாங்கு. (௰௨)

வேள்விப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௬௬௫.



## உமைவருபடலம்.



பாரதிவிவ் வேள்விதக்கன் பாற விழைந்தியற்ற
நாரதன்கண் டெவ்வுயிர்க்கு நாதனைநீத்—தாரமரர்
தம்முடனிஃ தாற்ற றகைத்தெனப்போ யங்கயிலைச்
செம்மலைத்தாழ்ந் தேத்தினன் றேர்ந்து. (௧)

கைதொழுதே யேத்தவனைக் கண்ணுதலோன் கண்ணுற்றிங்
கெய்தியதென் செய்தி யெவன்கொலென—மைதிகழுங்
கந்தரனே கங்கையின்பாற் கஞ்சன்சே யாற்றுகின்ற
[illegible] மொன்றென்ற னன்கு. (௨)

என்னலுமே யீச னிடமா யிறைவிகேட்
டன்னவன்செய் வேள்விகா ணார்வுற்றாழ்ந்—தன்னியெழீஇத்
தந்தைமகங் கண்டு தமியேன் வருகின்றே
னெந்தைவிடை யீதியென்றா ளிங்கு. (௩)

என்றலுங்கோன் றக்கனிலை யெண்ணலான் யால்கின்றா
னின்றவன்செய் வேள்வியின்க ணேகலென—நன்றுமையாங்
கன்னா னறிவிலா னாகு மவன்பிழையை
யுன்னாய் பொறுத்தியென்றா ளோர்ந்து. (௪)

ஆதியடி தாழ்ந்துமக மண்ணியிவண் மீள்வலொல்லை
நாதவிடை நல்கெனலு நங்கையே—யோதுமது
காதலுறக் காணுங் கருத்துண்டேல் கண்டனைநீ
போதியென்றான் வென்றான் புரம். (௫)

அன்னை விடைபெற் றான்மலர்த்தா டாழ்ந்தெழீஇ
மின்னணிவி மானத்தின் மேலேற—மன்னருகிற்
றுய்ய கவிகை சுமாலியொடு மாலினியாந்
தையலார் தாங்கியுற்றார் சார்ந்து. (௬)

ஆர்மங் கலைசுமனை யாதியோ ரொண்கவரி
யேர்விமலை பாங்க ரிரட்டினார்—சார்மருவி
யாலவட்டம் பீலி யசைத்தேகினர்சில்லோர்
கோலவட்டி லன்னார் குயம். (௭)

மன்கோ டிகமடப்பை வாள்கண் ணடிதொடைய
றுன்கோடற் கையேந்தித் தோகையன்னார்—நன்கேக
மாது சுசேசை மலைமகடன் றாண்மலரார்
மாதுகைகொண் டேகினள்பின் பாங்கு. (௮)

கமலினிய னிந்திதையாங் கன்னியர்பூந் தார்கொண்
டமலைபுடை செல்கின்றா ரன்பின்—விமலைதன்சீர்
பாடினா ரேகினார் பண்பிற் சிலர்சிலர்நன்
காடினா ரேகினா ராங்கு (௯)

பாங்கியர்தம் மோடு பரிவார் சிலதியர்கள்
வீங்கொளிவி மானத்தின் மேலேறித்—தாங்குலவு
நானநறு சாந்துசுண்ண நற்சுடர்ப்பூண் டானைமுத
லானசிலர் கொண்டணைந்தா ராங்கு. (௧௦)

தோகைகுயில் பூவைசுகஞ் சொற்பயில மின்னிடையா
ரோகையுட னேந்தி யுமையவள்பின்—போகையுற்றா
ரேரண் கொடிகவிகை யேந்தியஞ் சாத்தியென்னில்
சாமரர்கள் சூழ்வுற்றார் சார். (௧௧)

பன்னிரண்டு கோடியாம் பாரிடங்கள் பாற்படவே
யன்னவடா டாழ்ந்தருள்பெற் றனின்மேன்—மன்னமைச்சாஞ்
சோமநந்தி யேகினன்முன் றாயனைவ நீயதக்கன்
மாமகளுசெய் சாலையுற்றான் வந்து. (௧௨)

மானமே னின்றிழிந்து மாவேள்விச் சாலையுட்போ
யானதக்கன் முன்னுறும்போ தன்னைதனைத்—தானுருத்தே
யாந்தந்தை தாயிலனன் பார்தேவி நீயிங்குப்
போந்ததென்கொ லோமகளிர் போல். (௧௩)

மல்லல்சே ரிம்மகக்கு வாவென் றழைக்கிலைநீ
செல்லுமீண் டென்றன் சிலம்பெனமின்—சொல்லு
மருகரொடென் றங்கையர்க்கு மாண்சீர்தந் தெங்க
ணிருவரையு மெண்ணலா யீங்கு (௧௪)

அன்றியுமிங் காற்றுமகத் தாரெனையுங் கோபித்தாய்
நன்றலவென் னெண்ண நவிற்றென்ன—மன்றக்கன்
பேயுடனே யாடல்செய் பித்தன்றன் றேவியாய்
நீயுமவ னீர்மையுற்றாய் நேர்ந்து. (௧௫)

அன்னவனோ டந்தையுறு மாற்ற னினையிகழ்ந்தேன்
பின்னுளர்சீ ரென்மருகர் பெட்புறலான்—மன்னவர்பாற்
காதலால் யாவுங் களித்தளித்தே வேள்வியின்க
ணோதவியுந் தந்தே னுகந்து. (௧௬)

மான்முதலோ ரேத்துகின்றார் வந்தானு நீயுமெனைத்
தான்சிறிது மெண்ணிலிர்நுஞ் சாரிலைநார்—நான்புரிவி
னாற்றுகின்ற வேள்வி யவிநல்கேன் வேதமொழி
மாற்றுகின்றேன் வன்மையினுன் மற்று. (௧௭)

அனையதன்றி யிங்க ணடுத்தநிற்கு நான்றான்
றினையளவு மோர்சிறப்புஞ் செய்யே—னெனவுமை
சீற்றமுறச் செற்றத்தீ செப்புலகோ டெவ்வுயிரு
மாற்றுவா னோங்கியது வாய்ந்து. (௧௮)

பாருட் கினநீர்ப் பரப்புட் கினவங்கி
காருட்*கினமாக் களிறுடனே—நாரணனுஞ்
சாற்றயனு முட்கினரேற் றாவிலுமை மாதுபொங்கு
சீற்றமெவர் செப்பவல்லார் தேர்ந்து. (௧௯)

தேவலையதோர் பாங்கி விமலைதனைத் தாழ்ந்தெழீஇ
ஞாலமெலா மீன்றாய்க்கு நண்ணுசின—மேலுமோ
வந்த மிழைப்பா னமைந்துளா யென்னிலிங்க
னுய்ந்திடும்பாங் குண்டோ வுயிர். (௨௦)

அறத்தை யவமா யறைந்தனர் என்னைச்
செறுத்தியென்ன தேவரையுஞ் சீர்க்கும்—பொறுத்தியெனப்
போற்றிநிற்கச் சேடிகளி பொங்குசினத் தீயுளுற
மாற்றியவற் பார்த்துரைக்கு மாது. (உக)

என்னோநீ யெள்ளினமை யெண்ணே னெனதிறைவன்
றன்னை யிகழ்ந்தாய் தரிக்கிலேன்—மன்னமலன்
நிற்குணனே யீது செயும்போது தாமதமா
முற்குணமின் றாமோ முடிவு. (உஉ)

தீயதன்றச் செய்கை திருவருளா மாயினுயி
ராய பிறப்பிறப்பி லாம்வருத்த—மாயவினை
யன்னசெய லீசனுக்கே யன்றிப் பிறர்க்காமோ
வென்னிறைவன் பாலா மெலாம். (உங)

மாமறைநூ லாகமங்கண் மற்றுளவுஞ் சொற்றவனைத்
தாமதனென் றோதத் தகுங்கொல்லோ—வாமெவர்க்கு
நாதனுந் தாணுவிற்கு நல்லவிநல் காதிகழ்தி
வேதமஞ்சிப் போற்ற வியந்து. (உச)

சிவனெனும்பேர் செப்புவோர் சேர்வருயர் சீர்வீ
டவனை யிகழ்ந்தா யயர்ந்தே—யெவனுய்தி
சாலிழுதை நீரைநீ தண்டமெள்ளி னூர்க்குமென்
றேலுமறை சாற்று மெடுத்து. (உரு)

இதுகே ளயன்மைந்த விங்கோர் மகநீர்
விதுமுடியான் றன்னை விலக்கிக்—கதுமெனவே
வாய்ந்துசெய்தாய் நிற்கசனால் வந்தடைக தண்டமென
வாய்ந்துசொன்னா ணாரா யணி. (உசு)

இன்னனவாந் தீச்சொல் வியப்பிமகஞ் செய்நிலம்விட்
டன்னை பரிசனங்க ளார்ததுவரப்—பொன்னெழில்கூர்
மான மிவர்ந்துதக்கன் மாற்றமுன்னி யேற்றான்வாழ்
வான கயிலைசென் றாளாய்ந்து. (உஎ)

ஒருவியொளி ரூர்தி யுமையவடன் கேள்வன்
றிருவடிதாழ்ந் தையநினைத் தீயன்—பெரிதும்
யிகழ்வுற்றா னன்னா ளியற்று நெடிய
மகமழித்தி யென்றாள் வலிந்து. (உஅ)

ஆயவருட் கோமா னதுகொண் டிலனாக
நேயவிழை வார்வெறுப்பு நிற்கில்லை—யாயினுமே
யன்பினேற் காகவன் றானற்று மகஞ்சிதைத்தி
மன்பாவென் றேத்தினான் மாது. (உகூ)

உமைவருபடலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா [illegible].

---

# வீரபத்திரப்படலம்.



அந்தவெல்லை வீர னணங்கன் பிணைவியந்து
சிந்தைதனிற் கொண்ட செயன்முற்றப்—புந்தியின்க
ணுன்னினா னுன்னியபோ தொல்லைநுதற் கண்ணினின்று
மன்னினா னோர்வீரன் வந்து. (௧)

ஏமவரைக் கோடுதொறு மேய்பிறைக டங்கவவை
மாமதியாங் காறுமரா வவ்வரினைந்—தாமுகட்டின்
சாராரி னேருமன்னான் றன்னா யிரமுடியோ
டீரா யிரங்குழையு மே. (௨)

ஊழிக் கனலுடனவ் வூதையும்பற் பல்வடிவ
மூழிற் கொடுபோ ருஞற்றவபோல்—வாழியவ
னாயிரமுக் கண்டோறு மாயிரமொண் ணாசிதொறுந்
தீயநில மார்த்தெழுந்த சீர்த்து. (௩)

கோவார் பிறைகவ்விக் கொண்டே யுடுமென்று
மேவா விருப்பதுபோல் வீரன்றன்—றூவாத
வாயிரம்வாய் தோறு மமைந்து வளையெயிறுந்
தூயபல்லுந் தோன்றுந் துதைந்து. (௪)

தீண்ட மிசையழலோ தோன்று சினத்தழலோ
கண்டனிலே கான்ற கனலதுவோ—வெண்டிசையு
மாயுயிர்கள் யாவு மடுகின்ற தென்பரந்தத்
தீயுகாந் தத்திற் செறிந்து. (௫)

உலகுண் டுமிழ்நீ ருரகங்க டம்மை
யிலகங் கதங்கடக மென்ன—நிலவவிட்ட
திண்டிறல்கொ ளன்னான் றிருப்புயமீ ராயிரமு
மெண்டிசையு மார்ந்த விவர்ந்து. (௬)

வரமா ரயன்மான் மகவான் முதலோர்
சிரமா லிகையென்பு சேர்பூ—ணுரமாவின்
கோடாமை யோடாதி கூர்ந்து பிறங்கினவே
பீடாமை மார்பிற் பெரிது. (௭)

குந்தமழுச் சூலங் குலிசம்வா ணேமிமுத
லந்தமில்பல் வெம்படைக ளங்கையிலார்—தந்தொளிரச்
செய்ய பணியுந் திகழ்பாப் பணியுமையன்
மெய்யி லிலகினவில் விட்டு. (௮)

தஞ்சமெனத் தன்சரணைச் சார்ந்தவன்பர் தங்குழுவை
யஞ்சலஞ்ச லென்சொலென வார்கழலுஞ்—செஞ்சிலம்பு
மொத்திரங்க வையன்மு னுற்றுநின்றான் றிண்வீர
பத்திரனும் வல்லோன் பரிந்து. (௯)

அன்னையங்க ணுஞ்சினத்தா லார்பத் திரகாளி
தன்னைநல்க வாயிரமோர் சார்முகத்தோ—டுன்னரிய
வீரா யிரங்கையுமா யேண்வீர பத்திரன்றன்
சாரா யினதுணையாய்த் தான். (௧0)

இருவர் மகிழ வினிதுவலஞ் சூழ்தந்
தொருவருஞ்சீர்ப் பத்திரையோ டுற்றுப்—பொருவின்மா
லத்திரனை யன்னையைத்தாழ்ந் தன்னார் தமைநோக்கிப்
பத்திரன்முன் சொல்வான் பரிந்து. (௧௧)

மாலயனைப் பற்றிமுன் வந்திடோ வெஞ்சினத்த
கால னுயிர்முடிக்கோ கண்டவண்ட—நீலநீர்
வையமுற்று முண்ணுகோ மன்னினரு ளாலுனென்
செய்யெனினுஞ் செய்வலென்றான் றேர்ந்து. (௧௨)

என்றவந்த வீரனைப்பார்த் தீசன்வெந் தக்கனெமை
யன்றிமக மாற்றுகின்றா னயிடைநீ—சென்றங்
கமதவியைக் கேட்டிவெய்யோ னீந்தனனே யென்னி
லமவிவ் விடைநடத்தி யார்ந்து. (௧௩)

தருதலின்றே லன்னான் றலையைத் தடிந்து
பரியவன்பா லுள்ளார்ப் படுத்துப்—புரியுமந்த
வெச்சங் கலக்குதியங் கெய்துவோம் போதியென்றா
னிச்சங் களத்துவைத்தோ னன்கு. (௧௪)

அந்த வமயத் தவிர்பத் திரையொடுமை
யெந்தையடி போற்றிவிடை யேற்றானை—நிந்தை
புரிபவன்றன் மாவேள்வி பொன்ற நினைந்தான்
எரிபவமில் வீரன் பரிந்து. (௧௫)

உன்னியவ ணீங்கி யுறவுருத்தே யன்னவன்றன்
மன்னுயிர்ப்பில் வேர்வின் மயிர்க்காலிற்—பன்னுரையிற்
கஞ்ணி லவிர்சடையிற் காமருந்தி யார்சுழியி
லெண்ணில் கணங்கடந்தா னேய்ந்து. (௧௬)

தோளிற் காத்திற் றுடையின் முழங்காலிற்
றாளிற்பல் பூதர் தமையளித்தான்—வாளிலவன்
பற்பலரைத் தந்துநிற்பப் பத்திரையுங் காளிகளாம்
பற்பலரைத் தந்தாள் பரிந்து. (௧௭)

வீரபத்தி ரப்பேர் விளங்குருத்தி ரன்னளித்த
சாரதர்க்குட் சில்லோர் தனிநீல—வேருருவர்
கோரபத்தி ரம்மணிப்பூண் கொண்டெழுகில் போற்பொலிந்தே
யாருருமிற் சாற்றுகின்ற ராங்கு. (கஅ)

அக்குலவி ஞாலெயி றார்பிறையிற் றோன்றவுருச்
செக்கர்வான் போன்றார் சிலர்பூத—ருக்கிரனை
சார்ந்தவரொள் வானிறத்தர் சாரதருண் மாப்பெரியர்
சேர்ந்தகட னோர்ந்தார் சிலர். (கக)

அம்பொன் வணர்திருமா லன்ன வுருவினராய்ச்
செம்பொனகம் போன்றார் சிலர்பூதர்—பம்புபசப்
பூர்வடிவர் காய முறழ்வில்லார் வீழ்தூங்கு
சீர்வடத்திற் றெக்கார் சிலர். (உ०)

ஆங்கவர்க்கு ளான்மடங்க லாளி களிறுபுலி
வாங்குதிரை யெண்குகலை வத்திரத்தா—ரோங்குசிலர்
பன்னிரண்டு நீட்டம் படையனித மேண்வீர
முன்னரிதேற் சொல்வதெங்க னோர்ந்து. (உக)

கையிலெண்ணில் வான்படையர் காய்பூணர் நீக்கண்ண...
வெய்ய மொழியர் வெருவுருவர்—வையமுண்ணும்
வாயர் பலகறைகோர் வாளெயிற்றர் செஞ்சடிலர்
தீயுமிழுஞ் சூலத் தினர். (உஉ)

துண்டமிசை வீழனலர் தொல்லண்டம் வீக்குகையர்
சண்டவளி பின்செலமுன் றாஞ்செல்வர்—பண்டிதனில்
வெங்கனல்போல் வாட்டுபசி மேயினவர் நீயெனினு
நுங்குந் திறலார் நுனித்து. (உங)

ஆலமதிற் றீய ரடிபெயர்க்குந் தோறுமே
ஞாலமங்கை யஞ்சு நடையினார்—சாலவே
யூழிக்கா லுட்கு முயிர்ப்பர் கடல்வயிற்றர்
பாழித்திண் பூதர் பலர். (உச)

பத்திரன்றன் றிண்புயஞ்சேர் பத்திரையின் காளிகடா
மித்துணையென் றெண்ணற் கியையுமோ—வத்தகையா
ரந்தமில்பல் லாயுதங்க ளங்கையுறத் தும்பைமிலைந்
தந்தெழில்கூர் தோற்றமுற்றா ருற்று. (உரு)

சீராடியலார் காளிவிந்தை சாகினிபன் மோகினிதெவ்
வாடியலார் யோகினியேண் வைரவிமன்—மோடியென
வெம்படையும் பூணும் விறலுகளி கொண்டுசெல்வர்
பம்பரிவை மார்கள் பலர். (உசா)

கணங்கொளன்ன திண்பூதர் காரிகைமார் யாரு
மணங்கினுட னுண்டகைபொன் னூர்தான்—வணங்கிப்
பரசியவர் பாற்சூழ்ந்து பாடிநனி யாடி
விரவியவண் போதலுற்றார் வேட்டு. (௨௭)

பானுகம்பன் முற்கணங்கள் பன்வீரன் முன்ஞ்கி
வானியங்கள் சாற்றி வழிக்கொண்டார்—கோனவன்பால்
விண்டன் குடைபிடித்து வெண்கவரி வீசியுற்றார்
தண்டன் முதற்கணவர் தாம். (௨௮)

பாவையர்கள் சில்லோரார் பத்திரைதன் பாங்காகித்
தாவில் கலிகைக டாங்கியே—மேவவெழில்
வெண்கவரி வீசிப்பல் வேறுசி தூள்புகன்று
தண்மலர்க டேய்ப்போந்தார் தாம். (௨௯)

பார்முழுது மீண்டிப் படையார்க்கும் பேரோதை
யார்கலியின் வாயடக்கி யாரவெங்கும்—கூர்தருவெம்
பூழியெழுந் தம்மா புவிவான் பதவிமறைத்
தூழியிருள் போற்பரந்த துற்று. (௩௦)

இப்பெரிய சேனையுற வெங்கோ னெழுந்துசினத்
துப்புடன்போய்த் தீயதக்கன் றன்மகஞ்செய்—வைப்பணுகித்
தன்புடையர் தானைத் தலைவர்கட் கொன்றுரைப்பான்
வன்புருமே றட்க வலிந்து. (௩௧)

பற்றலரு ரட்ட பரனையெள்ளி நீக்கிவெய்யோன்
மற்றவர்க்கொண் டாற்று மகச்சாலை—யுற்றவுயர்
வெய்துநெடு வாயி லிவர்சுற் றெருடுசேமஞ்
செய்துநனி காத்திரென் றான்றே. (௩௨)

என்றலுமே சேனையோ ரிஞ்சியயன் முற்றுமுற்றி
நின்றனர்வான் வாய்தெறு நீர்மையுறச்—சென்றனர்வெந்
தக்கனவன் றானையாய்த் தாமெதிர்ந்தார் தம்மையட்டு
மிக்கவருன் றுய்த்தார்த்தார் வேர்த்து. (௩௩)

வீரபத்திரப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௭௨௭.

---

# யாகசங்காரப் படலம்.

---

மாகமன்சீர் மாதுடனே மாவீரன் வன்றக்கன்
யாகமுறு சீர்லை யிடத்தொல்லை—யேகலுமே
தீர்த்தனொடு தேவிதனைச் செப்பயன்முற் றேவரெலாம்
பார்த்தனரச் சுற்றார் பதைத்து. (௧)

மடங்கல் வரவுகண்ட மானினம்போல் யாக்கை
நடுங்கினரேண் சிந்தி நகைபோ—யொடுங்கி
யுயிரில் லவர்போ லுணங்கியிவை சில்ல
வயர்வுற்றுச் சொல்லலுற்றா ராங்கு. (௨)

ஈசனுங்கன் மாதும்வந் தெய்தினா ரென்பரன்னார்
மாசினத்தின் காட்சிநல்க வந்ததென்ப—ராசின்றிப்
பேசினிவர் சீற்றம் பெரிதென்பர் நம்முயிர்க்கு
நாசம்வந் திட்டதென்பர் நன்கு. (௩)

தக்கன் றனக்கிறுதி சார்ந்த தின்றென்பர்
மிக்கதோ ரூழிஇனையார் வென்றதென்பர்—முக்கணனை
வெய்யசினங் கொண்டிகழ்ந்தோர் வீவரன்றே யென்பதற்கோ
ரையமே யில்லையென்ப ராங்கு. (௪)

ஈடுறுமா பூதரெங்கு மேவளைந்தா ரென்பாரிங்
கோடவரி தென்பா ரொளிக்கவிட—நாடவரி
தென்பா ரினிச்செயலென் னென்பார்சூ ழங்கியுற்ற
வன்பார் கயம்போன்றார் வாய்ந்து. (௫)

அஞ்சினரிவ் வாறுரைத்தே யண்ட ரரந்தைமிகச்
செஞ்சரண்சார் பூதர் சிலர்சூழக்—கஞ்சமலர்த்
தாள்விமலை யோடுசென்று தாவுசின வீரனன்னான்
வேள்விபுரி தன்மைகண்டான் வேர்த்து. (௬)

இடித்தா லெனநக் கெரிவிழியிற் காலப்
பிடித்தான்கொம் போதை பிளந்த—தடித்தாணம்
விண்டதுமா ஞாலம் வெடித்ததுமா மேருநனி
மண்டு முயிர்துடித்த மற்று. (௭)

எழுகின்ற வோதைகேட் டேரிமையோர் யாரும்
விழுகின்றார் சால வெருவி—யழுகின்றா
ரோடுகின்றார் வேள்வி யொழிந்ததோ வென்றுசொலி
வாடுகின்றார் மீளுகின்றார் வாய்ந்து. (௮)

காலமதில் வீரன்போய்க் கஞ்சன்மா னுட்கமகத்
தாலமுறத் தக்கன் றகநோக்கிச்—சாலவஞ்சி
யெக்கருமஞ் செய்வ தெனவுழந்து தேறிமன்போ
லக்கிரனைப் பார்த்துரைப்பா னென்று. (௯)

இங்ஙனம்வந் துற்றதென்கொல் யாவரிநீ யென்னையான்
சங்கரன்சேய் தக்கநின்றன் சார்மகத்தி—லங்கவற்கு
நல்கு மவிப்பாக நல்குதற்கா வப்பரன்சீர்
மல்கருளிற் போந்தனென்றான் மன். (௧௦)

சாற்றவான் றக்கனவி சங்கரனுக் கில்லையெனப்
போற்று மறையெழுந்து பொள்ளெனவோ—ரேற்றுடையான்
மாறி லிறைவன் மகத்தி லவற்குநல்குங்
கூறிதுநீ யீதியென்ற கூர்ந்து. (௧௧)

நிலைமையிலான் கேட்ப நெடிதின்ன கூற்று
மலமறைகள் சாற்றவெய்யோ னல்காத்—தலைமைகண்
டத்தனவன் றொல்சீ ரறைந்தேத்தி யங்ககன்று
சத்தமிடம் போயவன்றே சார்ந்து. (௧௨)

போதலுமே தக்கனைத்தின் போர்வீரன் பார்த்துமறை
யோதுபொருள் கேட்டியன்றே யுண்ணினைந்தே—யீதியவி
யத்தனுக்கே யென்ன வணங்கோடு காணும்
பித்தனுக் கீயனென்றான் பேர்ந்து. (௧௩)

ஆங்கதனைக் கேளா வயனுதி யர்ப்பாரா
நீங்களுமே மற்றவன்பா னின்றீர்சீ—ரோங்கமலத்
தின்னவிநல் காதெள் ளிசைவு நமக்குமென்று
துன்னருமா வீர னுருத்து. (௧௪)

என்றலுமே யன்னவரு ளேய்வினது கேளார்போ
லொன்று முரையாரா யூமரென—நின்றிடலு
மின்றயங்க வீரன் விழித்து வெகுண்டிவரோ
னன்றென்று ளுழுறவே நக்கு. (௧௫)

கடித்தா னெயிறுசெந்தீக் கான்றனனங் கையிற்
பிடித்தான் வலாத்தண்டம் பேர்ந்து—தடித்தார்
சடித்தா ருஞ்சாயக் கண்டதக்க னுட்க
வடித்தா னரிவீழ்ந்தா னங்கு. (௧௬)

விண்டோனம் வீழ்தலுமே வீரன் மலரோனைக்
கண்டோனி குட்டக் கவிழ்ந்துவிழ—வண்டமென்னு
மாக்குறுமின் றன்னைமற்ற மாதர் தமைவாளான்
மூக்குமுலை கொய்தான் முனிந்து. (௧௭)

பீடூனார் வீரனிப் பெற்றியினன் றனைமுனஞ்
சாடினான் கண்டங்கட் சாரெவரு— மோடினா
ரோர்ந்துலந்தார் வீழ்ந்தா ரொளித்தற் கிடமிலெனாத்
தேர்ந்து சிதறினார் சேர்ந்து. (௧௮)

ஆய பொழுதிலிரி யம்புலியைக் கண்டிறையோர்
சேயடியாற் சின்னமுறத் தேய்த்துவிட்டுக்—காயருண
னச்சங்கொண் டோட வவன்றன் னெயிறுடைத்து
மெச்சுபகன் கண்பறித்தான் வேர்த்து. (௧௯)

சீற்றமிகு வீரன் றெருமந் திரிந்தயருங்
கூற்றன் றலைதுமித்துக் கொன்றனரி—சாற்றுகுயி
லங்கமுறீஇ வானேக வன்னான் றனைத்தடிந்து
வெங்கனல்கை நாவரிந்தான் வேர்த்து. (௨௦)

செந்தழலோன் றேவி திசழ்நாசி யைக்கிள்ளி
யெந்தைபிரான் சாடலுமே யேணிருதி—னொந்தடியில்
வீழ வவனைவிட்டு வெவ்வருணன் காறனைதன்
மாழ வவர்த்தடிந்தான் மற்று. (௨௧)

எட்டென்னு மாசையா னேங்கியஞ்சி யேகலுமே
கிட்டினான் வைதான் கெடுத்தலின்றி—விட்டனனே
ரொண்சோ ணிதபுரக்கோ னோட வவன்றலைசீ
ரண்சோதி வீட்டினா னங்கு. (௨௨)

மணிகனவிர் சாலையார் மாமகத்தின் றெய்வம்
பிணையினஞ்சி யேகப் பெருவிற்—கணைதொடுத்தே
யன்னான் றலைதுமித்தா னையனவை சேர்ந்தயனீன்
மன்னாங் கெழுந்தான் மருண்டு. (௨௩)

வலைப்பட்ட மான்போன் மயங்கிவெய்ய தக்க
னலைப்பட்ட நெஞ்சினனா யாற்று—தலைப்பட்ட
விம்மா மகமென்மு னீறுபெறு மோவென்னா
விம்மர விவைநவின்றான் வேர்த்து. (௨௪)

வேதனுரை வாய்மையால் வேள்வி புரிந்தியா
னேதமிலா னல்குவள மெய்தினன்பி—னாதிதனைச்
சிந்தைசெய்தே னில்லேன் சிவையைநல்கு நீர்மையினா
னிந்தைசெய்தே னந்தைகொடு நின்று. (௨௫)

மறைமுறையி சற்கு வழங்கு மவியின்
முறையைவிலக்கினேன் முன்னே—யறைதநீசி
வாய்மை தனையிகழ்ந்தேன் வந்தமக டன்னைவெறுத்
தாய்வானை நிந்தைசெய்தே னங்கு. (௨௬)

அன்றியுமே வீர னெனிமீதி யாரென்று
கன்றெனவே யீந்திலே னின்னமிலேன்—மன்ற
வுறுதிதனை நாடிலே னூற்ற லெவர்க்கு
மிறுதிதனைத் தேடினேன் யான். (உஎ)

வேதப் பொருளுணர்ந்தும் வித்தகனை நிந்தித்துப்
போதிறத்தற் கேதுற்றேன் புந்தியுமழ்—மீதுசெலு
மென்னத் தகுமா றின்னுந்துரைத்து நெஞ்சொடினி
யென்னசெய்வ தென்றெணினா னீண்டு. (உஅ)

பூதர் பரப்பும் பொருவீர னெண்சினமு
மாது தகவு மனக்கண்டிப்—போதிங்க
ணோடரிதென் றுன்னியும்ப ருற்றமைபோற் செய்கிலனென்
றூடலன்முன் னின்று னவன். (உகூ)

கண்டதனை வீரன் கனன்றுதக்க னீயானை
யண்டரொடு மெள்ளினை யன்னதாற்—றண்டமிதென்
றெற்றிகழ்வாள் கொண்டவன்ற னென்சிரமீர்ந் தங்குநல்கத்
திற்றியெனத் தின்றதுசெந் தீ. (ங௦)

அங்கியுண்ண வேதவல்லி யாதியரோர் மாமகளிர்
தங்குழல்கள் சோர்தரவே தாம்புலம்பி—யங்கணுற
மன்னவன் குழையிறுத்து மற்றோர் தலைதடிந்தா
னன்பத் திரகாளி யுற்று. (ஙக)

காளியுமா மீளியுமே காயத் தவர்முனிவர்
கேளி ரிவரைக் கிடைத்தெழில்கூர்—தாளிற்
படையிற் றடிந்தே பகர்தக்கன் வேள்வி
யடையத் தொலைத்தா ரடர்ந்து. (ஙஉ)

இற்றெலா நேர்வேலை யோர்வீரன் றன்னிசைவாற்
சுற்றனிகர் நோக்கிச் சுலவுமதிற்—பொற்றைதகர்த்
துன்புகுந்தே யார்த்தா ருலைந்தெவரு மாங்கிரியக்
கொள்பரவை போல்வளைந்தார் கூர்ந்து (ஙங)

தியக்குற்றா ரஞ்சித் திடுக்கிட்டார் நெஞ்ச
மயக்குற்றார் விஞ்ச மறுகி—யுயக்குற்றார்
கற்றவரும் வானவரு நாடெண் டிசையினரு
மற்றவரு வந்த வரைப்பு. (ஙச)

இருகுரவர் தம்மை யெழில்கூர் மனையைத்
தருமகரைச் சுற்றத்தார் தம்மைக்—கருதி
விளிக்கின்றார் சால வெருவிப் பிணத்து
ளொளிக்கின்றா ரந்தணரங் குற்று. (ஙரு)

பேரர்க்களமாஞ் சாதரத்தார் புர்கவரை மாதவரை
யார்க்கைக் கலக்கிவல்லோ ரங்கிரியப்—பார்க்கின்றார்
சிக்கை நியங்கச் சிரத்தைக் கறிக்கின்றார்
தந்தங் கறகமெனத் தாம். (௩௬)

மூறிக்கின்றார் திண்டோண் முழுவென் புடலங்
கறிக்கின்றார் நாவோடு கண்ணைப்—பறிக்கின்றார்
தேய்க்கின்றார் செந்நீர் செறிந்தோடத் தீதவரையே
மாய்க்கின்றார் பூதர் வளைந்து. (௩௭)

கரக்கின்ற மாதவரைக் கண்டுபிடித் தங்க
மரக்கொம் பெனவொசித்து வாயிட்—டிரக்கின்ற
வெங்கழுகும் பேயும் விரும்பவுண்டார் தங்குழா
மங்கழுவே யீகின்றா ரார்த்து. (௩௮)

நெய்யுண்டார் பாலுண்டார் நேரி லவியுண்டார்
துய்யுண்டார் தேக்கெடுப்பச் சூழ்பூத—ரையர்
தவித்தா ரிரிதரவே தாவியெழு முத்தீ
யவித்தார் மகமழித்தா ரங்கு. (௩௯)

தவக்குண்டத் தொள்வேதி தன்னைச்சாய்த் தங்கன்
றுவக்குண்ட வர்வின் றொகையை—யவிழ்க்கின்றார்
கங்கை யலையிற் கறங்கிச் செலவிடுவார்
செங்கையுள வீரர் சிலர். (௪0)

தக்கன் மருமக்க டம்மைப் பிடிக்கின்றார்
மிக்க கருமம் விளைக்கின்றார்—தொக்கவவர்
தங்கணுயர் மார்பின் றடத்திற் புடைக்கின்றா
ரங்கணுமிழ் வித்தா ரவி. (௪௧)

குட்டென்பர் போவென்பர் கொல்லென்பர் தேயென்பர்
வெட்டென்பர் குத்தென்பர் வீழ்த்தென்பர்—கட்டென்பர்
வெம்பூத ரிவ்வோதை மேவியதே யெவ்விடனு
மைம்பூத மச்சமுற வாங்கு. (௪௨)

கையற்றார் காதற்றார் காலற்றார் கண்ணற்றார்
மெய்யற்றார் நாவற்றார் மேவுருவி—னையற்றார்
காயத்தா ரோடு களத்தா ரெவருமே
காயத்தா ராயினாரங் கண். (௪௩)

இத்திறத்தி னுரையுமே யேந்த லனிகமொடு
பத்திரைதன் சேனையுமே பாற்றவிற—னத்த
னெழுந்தான் மகத்தி னிறப்பதனைக் கண்டான்
செழுந்தா வெரியிற் சினந்து. (௪௪)

பாமனையெள் பான்மையர்க்கிப் பண்புறுமென் றென்னான்
றெருமந்து வீரன்மேற் சென்று—பொரநினைந்தே
யுன்னினன்வீ வேந்தை யுடைந்தமையாற் றன்சீற்ற
வன்னியைப்புள் ளாக்கினான் மால். (௪௫)

முன்னின்ற புண்மேன் முராரிபொருக் கென்றேறி
மின்னைம் படைதாங்கி வேள்வியிட—மன்னி
யெடுத்தனன்சங் கைவாய்வைத் தேறுநீ ருட்கப்
படுத்தனன்பே ரோதை பட. (௪௬)

தீச்சிகைநன் கீந்த சிலைவளைத்து மால்கணைக
ளோச்சினன்றிண் வீர னுறுபடைமேன்—மீச்செலுஞ்சீர்க்
காளிகளுங் கூளிகளுங் காய்ந்தரியைச் சூழ்ந்தரிதூய்
நீளிகனேர்ந் தாற்றினார் நேர். (௪௭)

நீண்டா ரரியமர்தன் றூனைமுற்றுங் கொண்டாற்றல்
கண்டா னகைத்தான் கவின்வீர—னண்டாநேர்
போரதனைச் செய்யசித்தன் பூமி சிறிதெனவோர்
தோதனை யுய்த்திட்டான் றேர்ந்து (௪௮)

மறையா யிரம்புரவி மன்கே தனங்கள்
கறையார் படைமீக் கலந்த—பொறையார்தே
ரங்கனொல்லை மேவிற் றயனறிவு பெற்றெழீஇத்
துங்கமக மாய்வுகண்டான் சூழ்ந்து. (௪௯)

விண்ணிழிதேர் மேலே விரைவினயன் பாகனெயதி
முண்ணெடுங்கோல் கொண்டுகைத்து மொய்ம்புடையோ—யண்
வீறிரதந் தன்னையுய்த்தான் வீரநீ தேவியோ [ணனிற்கோர்
டேறுதியென் றேத்தினா னீங்கு. (௫௰)

செங்கமலன் மேற்கொள் சினஞ்சிறிது நீங்கியத்த
னங்கணன்னை யோடதன்மே லாகவயன் —பொங்கனிக
வீட்டந் தனைநீக்கி யோரிமுன் னுய்ப்பவல
னுட்டமுறப் பார்த்துரைத்தா னன்கு. (௫௧)

தெழித்தபுனல் சென்னியிற்கொ டேசார் சிவனைப்
பழித்ததக்கன் றன்னையடல் பண்பே—யழித்துமக
மன்னவன்பா லுற்றவரை யங்கடுவ தென்னைசொன்னீ
யென்ன வியம்பினன்மா லேய்ந்து. (௫௨)

பாமன் றனையிகழ்ந்தோன் பண்ணு மகத்தில்
விரவியவி யுண்டவர்க்கு வேத—முரைதருமுன்
றண்டமது செய்தனகின் றன்னையுங்கொல் வோம்வலையேல்
விண்டதுநீ காத்தியென்றான் வேந்து. (௫௩)

வீரனது கூற வெகுண்டுமால் விற்குனித்தே
மாரியெனப் பூசருலே வான்பொழியச்—சூரியோ
டத்தனது கண்டுகைத் தாடகமா வெற்பினையே
யொத்த தனுவளைத்தா னோர்ந்து. (௫௪)

செற்றமிக வையன் சிலைவாங்கி னன்சிறிதே
பற்றினா னுதைகொளப் பாமரீர்—வற்றினகல்
நீண்டபுவி கம்பமுற்ற கேழ்கிளர்பல் காண்டநதுய்
நீண்டவன்மெய் போர்த்தா னெடிது. (௫௫)

வீராதி வீரன் விடுகணைக ளேபடவே
யோரா யிரங்கோன்மா லுய்க்கமன்மே—னோரவவ்
வம்பொத் தனது யரிநுதன்மீ தெம்பெருமான்
வெம்பொத் திரம்விட்டான் வேர்த்து. (௫௬)

ஏவுகணை மாயனுத லெய்தவவன் சோர்தலுமன்
மாவிரதத் தூன்றினன்வின் மாலயர்த—லோவளவு
மன்று னெதிர்தா லு மண்ண லுமே நேர்ந்தனன்போர்
முன்னுப் புரிந்தார் முறை (௫௭)

போரிவ் வணம்புரியப் புண்ணியன்மா றிண்ணுரத்தில்
வாரியன லன்னபடை மாழவுய்த்தான்—சோரவுள
மூய்திறனின் றோர்ந்தெழுந்த வொள்ளரியை நோக்கியத்தன்
செய்தியம றென்றுரைத்தான் றேர்ந்து (௫௮)

மெய்வதத்தை யார்க்கும் விரைவி னிழைக்குமா
தெய்வப் படைகள் செலுத்தமா—லவ்வினைத்து
மவ்வப் படையா லகற்றினு னேற்றுவருந்
தெவ்வர்ப் படுத்தான்றன் சேய். (௫௯)

ஆரியதன்பின் வீரன்மே லம்புபல வெய்யச்
சரமவற்றை மாற்றிமால் சார்ங்க—மிருதுண்ட
மாக்கியத்த னீரம்பா லன்னவனூர் புள்சிறைகளைப்
போக்கியொல்லை யுய்த்தான் புவி. (௬௦)

பாயவனூர் தன்மையினுன் மால்பல் கணைநல்க
நாயகன்முன் மைம்முகில்போ னண்ணுதலு—மேயவரைப்
பாழியந்தோள் வீரன்கட் பாயனலா னீறுக்க
வாழியைச்செல் கென்றுவிட்டா னங்கு. (௬௧)

விடுத்த திகிரிதனை வீரனெழிற் கையாற்
பிடித்து விழுங்கினன்மால் பேர்த்து—மெடுத்திடுதிண்
டண்ட மெறியத் தடுத்தான்றன் பொற்றண்டா
லண்டர் தொழுந்திறலோ னங்கு. (௬௨)

சங்காரஞ் செய்தண்டந் தான்விழலும் வாள்விடுப்ப
வுங்காரஞ் செய்தா னுமைமைந்த—னங்காரம்
மேனியன்மெய் வேர்த்துநின்றான் வீர வெகுளலெனை
வானி லெழுந்ததரன் வாக்கு. (௬௩)

விண்மொழியைக் கேளா விமலன் சினமகல்போ
தண்மணித்தேர்ப் பாக னதுநோக்கிப்—பண்மகத்திற்
பேதையனா னுண்ட பிழைபொறுப்பா யென்றவன்றாட்
போதையன்பிற் றாழ்ந்தான் புலர்ந்து. (௬௪)

ஆரணனை நோக்கியத்த னஃதாக வென்றருள
நாரணனு மன்று னலங்குலவு—போருளின்
றன்மையைக்கண் டண்டிதுவாந் தக்க வமயமென்று
நன்மையுற வேத்தினா னன்கு. (௬௫)

பாரவரி வில்வீட்டிப் பல்படையு மேசிந்திச்
சீரமரு மாழியுமே செல்லநுங்கிப்—போரிலெலனை
வென்றுபுகழ் வேய்ந்தனையேன் மேதக்க வீரமுற்ற
நின்றகைமை யாருரைப்பர் நேர்ந்து. (௬௬)

தக்கன் புரிபூ சனைவிழைந்து வேள்வியின்கட்
புக்கனனுள் புந்தியிலேன் புண்ணியனே—மிக்கநின்று
லீதுபெற்றே னந்தோ விறையோன் றனையிகழ்ந்து
தீதுபெற்றோர்ச் சேருவரோ தேர்ந்து. (௬௭)

ஆதி யிறையையொவ்வா ரன்னவரைச் சேர்ந்தவர்க்கு
வேத மிசைக்கும் வியன்றண்ட—மீதெலாம்
பேதியாதாற்றிநாய் பேதையேங் கட்கினைய
நீதியா மெந்தாய் நினக்கு. (௬௮)

விழியின் முறுவறலின் வெய்துயிர்ப்பி லார்ப்பின்
மொழியி னுலக முடிப்பா—யிழிதகையோன்
வேள்விக் கிறுதி விளைத்தனைநீ யாவுமே
மாள்விக்கினார்தடுப்பார் வந்து. (௬௯)

இறுதிசெய்தல் சிற்றமின்ப மேயாண்மை யென்று
வறைசத்தி நான்கானுக் கையை—பறைகாளி
மன்கவுரி மும்மைபெற்றோர் மற்றதுகொள் சத்தியா
னென்கு மறைக ளினிது. (௭௦)

ஈசன் பெருஞ்சத்தி யென்னிலுறு பின்னமன்று
பேசன் பவற்குப் பெரிதுடையேன்—தேசிழந்த
நேமியர்ச்சித் தெய்துகின்றே னீபொறுத்தி குற்றமென்று
வாமினைத்தான் வீழ்ந்தா னரி. (௭௧)

நீரனை ரிக்கன்பு செய்தணிய காலைதனிற்
பாரிடங்கள் சூழநந்தி பன்னவர—ஞரியொடு
வீங்குவிடை, மேற்றோன்ற வீரனச்சத் தோடிறைஞ்சப்
பாங்குளருந் தாழ்ந்தார் பரிந்து. (௭௨)

கண்டனள்வேள் வீக்கட் கவுரி கழல்கையுரந்
துண்டந் தலைதோ ணிந்துவிழ—வண்டரும்வெந்
தக்கனுயிர் போய்க்கிடந்த தன்மையினை நீங்கியருண்
மிக்குவரச் சொல்வாள் விதந்து. (௭௩)

தின்று தனைநோக்கிச் சம்புவே வேள்விக்கு
மன்னன வற்குமங்கு மற்றெவர்க்கு—மென்னுண்
முடிவுற்ற தென்பர் முதல்வநின்சீர் பேணார்
மடிவுற்றார் வீரனுன் மாய்ந்து. (௭௪)

மூந்து மிவரை முடித்தி யெனமுடித்தாய்
மைந்தன் றனைக்கொண்டு மற்றனைய—ருய்ந்துகுறை
போயினுயிர் பெற்றெழுவான் புண்ணியனே யிவ்வரமு
நீயினிது நல்கென்று ணர்ந்து. (௭௫)

என்று தொழுதே யிறைவி யியம்பலுமே
நன்றுனரு ளென்ன நகைத்திறைவன்—றன்புடையா
ராண்டகையை நோக்கிமகத் தாங்கிறந்தார் தம்முயிரை
மீண்டுருவிற் சேர்த்தியென்று னீங்கு. (௭௬)

வீர னதுதேர்ந்து மேனு ளெனவிளிந்தீர்
யாரு மெழுதி ரெனநவிலச்—சீரமரர்
சோருமையர் மாமுனிவர் துஞ்சி யெழுந்தவர்போ
லாருயிர்தாம் பெற்றெழுந்தா ராங்கு. (௭௭)

தண்ட மியற்றிய தூஉந் தாவுயிர்மெய் பெற்றதூஉங்
கண்ட கனவுபோற் கண்டுணர்ந்தார்—மண்டெவருஞ்
சிந்தை மருண்டு சிவனை யிகழ்ந்ததினுல்
வந்தபழி யுன்னினைந்தார் மற்று. (௭௮)

மன்வீரன் றன்னோர் மருங்காகத் தேவியுடன்
மின்வீசு செஞ்சடையெம் வித்தகனைப்—பொன்வீசு
மந்தாரத்தார் கண்டஞ்ச வலைந்துணர்ந்தே யஞ்சலென்றான்
கந்தரத்தார் காளத்தான் காண் (௭௯)

என்றிசைக்க வீச னிமையோர் மகிழ்ந்தணித்தாய்ச்
சென்றிறைஞ்சித் தீயதக்கன் செய்மகத்தி—னின்றிருந்த
வந்தையுளே முன்வந் தருள்புரிந்தாய் மைந்தர்க்குத்
தந்தையன்றி வேறுண்டோ சார்பு. (௮0)

வேதத் திறங்கடந்த வேள்விப் பலியருந்தும்
பேதைச் சிறியேம் பெரும்பகலும்—பாதகத்தி
லேதப் படாமே யிமைப்பி லதுதொலைத்த
வாதிக்கென் செய்வ தடுத்து. (௮௧

இங்ஙன் னடிபிழைத்தோ மெல்லோமும் வீரன்ற
னங்கரத்தா லூறுபட்ட வாறெல்லாம்—புங்கவனே
பங்கங்க ளன்றே பவித்திரமாய் மற்றெங்க
ளங்கங்கட் காமே யணி. (௮௨)

கங்கை முடித்ததூஉங் காய்கனலை யேந்தியதூஉ
மங்கணு ரால மருந்தியதூஉஞ்—சங்கரனே
நங்கையுமை காண நடித்ததூஉ முற்பகலு
மெங்கண்மேல் வைத்தவரு ளே. (௮௩)

ஐய பலவுண் டறிவிலே நின்றனக்குச்
செய்ய வருபிழைகள் சிந்தைகொளே—லையலத்த
வென்ன வதுதணிந்தா மென்னலும்பொற் றாளிறைஞ்சி
யுன்னமகிழ்ந் தாடினு ருற்று. (௮௪)

அன்னபொழு தத்த னயன்முதலாந் தேவர்மே
லின்னருட்கண் வைத்தே யியைந்தருந்து—மன்னரசு
முன்றிறத்திற் செய்திரென முன்னோன்சீர் போற்றினர்
மின்றனயற் காணுன் விதி (௮௫)

தக்கன் சனத்தோடு தானெழாத் தன்மைகண்டு
நக்கனற்ற னன்கிறைஞ்சி நான்முகத்தோன்—மிக்கதண்ட
மையசெய்தி கையனெழ வாரருள்செய் கென்னவா
னுய்யவருள் செய்தா னுவந்து. (௮௬)

இறையருள்கண் டேந்த விறைஞ்சிவெய்ய தக்கன்
குறையுடலோர் பூதங் கொணர்தி—யிறைபினென
வீர்த்துவந்து மன்முனுய்ப்ப வேய்மைத் தலைகண்டு
சேர்த்தியெழு கென்றான் சிரித்து. (௮௭)

எழுந்ததக்கன் முன்னின்ற வேந்தலைக்கண் டஞ்சி
விழுந்திறைஞ்சி நாணியின்னல் வேலை—யழுந்தினனல்
விஞ்சபாற் காணு வெருக்கொள்ளத் தக்கவினி
யஞ்சலைநீ யென்றா னரன். (௮௮)

மேடமுகத் தக்கன் விமலனிணைத் தாளிறைஞ்சிக்
கோடலிலா வுள்ளத்துக் கோமானே—நீடுவினை
மாலயன்போ லுன்னினின்றன் மாயையா லெள்ளினேன்
சாலவறி வில்லனென்றான் றான். (௮௯)

காலை யதிலம்மை நாளிதன்னோ டெச்சரற்கை
வேள்வனந் தேவியென வெந்தீவி—யேலவா
மீந்தா ளரியயன்மா லேனையரு மேத்திநிற்ப
வாந்தா னுரைப்பா னவர்க்கு. (௩௦)

வம்மினயன் மாலாதி வானவர்கீ ரெள்ளின
தெம்மைமுன் னூழ் நாளுந் திரங்கலீ—ரம்மவென்று
னன்னவனைப் போற்றவும்ப ரையனங்க னேகினு
னுன்னும் பரிசனங்க ளோடு. (௩௧)

ஓரற் கருங்கைகலை யுற்றுமையோ டத்தனெறும்
வீரற்கு விண்மேல் வியன்பதவி—யார
வளித்திருத்தி யாங்கென்ன வன்னவர்தாள் போற்றிக்
களித்துவிடை பெற்றான் கணத்து. (௩௨)

தந்தையருள் பொற்றேரிற் சார்ந்திருவர் தாமுமிவர்க்
குந்திடவே பானுகம்ப னெண்பதம்போ—யந்தளியிற்
றாவியலார் சாரதர்கள் சூழ்தரவே மாவீரன்
றேவியுடன் வீற்றிருந்தான் சேர்ந்து. (௩௩)

யாக சங்காரப்படல முற்றிற்று.

ஆ திருவெண்பா ௭௩௯.

---

# அடி முடிதேடு படலம்.

---

முன்னிறைவன் வந்திடுங்கால் முன்னமரர் தம்முனயன்
றன்னமர்சேய் தக்கன் றனைநோக்கி—யென்னுணர்ந்தா
யென்னியற்றி யென்கருதி யாரிடத்திற் பெற்றனைதா
னென்னையுற்ற யாது னெணம். (௧)

மாய்விலதோர் வானவர்க்கு மாதவர்க்கு மற்றவர்க்கு
மேய்தருமோர் கூற்றுறு யேண்டொலைத்தா—யாய்பெரியர்
சொன்னதூஉ மோர்ந்திலாய் சோதிதனை யெள்ளினை
யின்னிலைய தாயினை யிங்கு. (௨)

அயர்த்தனையெங் கோன்மேன்மை யஃதுன் னளவன்
றுயிர்த்தொகைகட் கெல்லா முளதே—மயக்குற்றாய்
முற்றுணர்வு பெற்றளிக்கு மொய்ம்பெங் கணிலுமுண்டங்
குற்றருளி னீக்கினன்றே வோர்ந்து. (௩)

ஆதலினா லண்ணனற்றா ளர்ச்சனையே செய்திபவத்
தீதகற்றி யின்னருளே செய்குவனென் — றோதமைந்த
ஐய்திறமா மூங்கணுமுன் னுற்ற மயலத்தனருள்
செய்த துரைத்தியென்றான் றேர்ந்து. (௪)

முன்னலரோன் மைந்தன் முகநோக்கி முன்னயின்றோ
மின்னமுமக் காதை யியம்புவோ — மென்னவவன்
மேலதோர் மெய்ப்பொருளு மென்றிறைவன் வந்தருள்செய்
கோலமுன்னிச் சொல்வனன்பு கூர்ந்து. (௫)

சதுர்யுகமீ ராயிரங்கள் சாரினெனக் கோர்நா
ளதுவந்தி சேரவிரு ளாகான் — மதிமருண்டு
கண்டுயில்வ னவ்வெல்லை காயங்கோ ளாளொடுங்கு
மண்டர் கிளையொடுங்கு மாங்கு. (௬)

மண்ணா ருயிர்கள் வறந்திறுதி யாகுமே
விண்ணோர் பதங்கள் வியன்முனிவ — ரெண்ணாரு
மெண்ணுசன லோகமிசை யெய்துவரந் நாட்கடல்பா
ருண்ணுபுபோங் கீழ்சா ருலகு. (௭)

முந்நீ ரெழுந்தோங்கி மூவுலகும் போர்த்தெங்குந்
தன்னீர்மை யாகுஞ் சமையத்தான் — மன்னீ
ளிலையிலிறை தாளுன்னி யேய்குழவி யேபோன்
மலிகண் டுயிலுமே மால். (௮)

கண்டுயிலு கின்றபடி கண்டு சனலோகத்
தண்டறவோர் போற்றவிழித் தங்கதல — மண்டயங்கக்
கோல வுருக்கொடுமால் கூறெயிற்றிற் பாரெடுத்து
மூலமென வைத்தகன்றான் முன். (௯)

அற்போது நாலுகமோ ராயிரமு மேகவே
யெற்போது தோன்றியது யானுணர்ந்தே — னிற்போத
முந்தைநிலை யுற்றகொம்பின் மொய்பா ரெடுத்தோமென்
றந்தைகொடு துஞ்சினன்மா லாங்கு. (௧௦)

ஆனபொழு தண்ட ரவுணர் நரர்விலங்கே
ரேனையுயிர் யாவையுமே யானளித்தே — வானவரை
யோவினிலை யுய்த்தேனென் னுன்னி யெனையலதோர்
தேவில் லெனவெழுந்தேன் றேர்ந்து. (௧௧)

துஞ்சுறுங்காற் றுஞ்சியெழுந் தோறுமெழுந் தொல்லுயிர்க்குத்
தஞ்சமெனை யன்றியொரு தாதையிலை — விஞ்சுபொருள்
யானென் றெனைவியந்தே யெப்பொருளு மீந்தமையான்
கோனென் றெனைமதித்தேன் கூர்ந்து. (௧௨)

அன்னபொழு தாழியின்மா லந்தையொடு துஞ்சக்கண்
டுன்னியெழில் கூர்மா வுறையுமணி—முன்னமிசை
யெற்றித் துயிலுணர்தி யென்னவெழு மாயனையார்
சொற்றியெனத் தாதையென்றான் சூழ்ந்து. (௧௩)

தந்தையென வந்தவர்க டாங்க ளுதவுகின்ற
மைந்தர் தமக்குரைசெய் வாசகமஃ—தந்திலென
முந்தையெமக் கீது மொழிந்த தியல்பன்றா
லெந்தையென்றெண் யாம்பிரம மே. (௧௪)

உந்தியிருந் துவரு முண்மை யுணராமன்
மைந்தனென நினைந்தாய் மற்றெம்மை—யிந்தனத்திற்
றோன்றுமெரித் தேவுக்குச் சொல்லதுவே தாதையிது
வான்ற சழக்குரைய தன்று. (௧௫)

நின்னுடைய தந்தையென நீயே நினைவியந்தா
யன்னதனை விட்டிடுதி யாந்தவத்தி—னன்னலத்தான்
முன்னமொரு தூணின் முளைத்தா யவற்றினா
லுன்னிலதும் மாண்பொருளா மோ. (௧௬)

தூயமக னாம்பிருகு சொற்றிடுமோ சாபத்தா
லாயபிறப் பீரைந் தடிக்கடியே—நீயெடுத்தாய்
மீண்டுருவம் யாவும் விதித்தனங்கை சேர்ந்துளது
கண்டிடுதி யென்றேன் களித்து. (௧௭)

நச்சுவணை னன்றென்ன நக்கரனுன் சென்னிதனி
லுச்சித் தலைகிள்ள வோர்வின்றி—யச்சமாய்ச்
சாய்ந்தனையஃ தாக்குந் தகையிலாய் நன்றுநீ
யேய்ந்தெதந் தமைத்தருவ தீண்டு. (௧௮)

நேயமாய் முன்னமே நின்றனையே யீன்றுதவு
தாயும்யா மன்றியுநற் றந்தையும்யா—மேயவுனக்
காய விறையா மடிகள்யா மைந்தநம்
மாயமதான் மாழ்குறுதி மற்று. (௧௯)

பொன்னையன்றி யாங்கொலோ பூணைச் சராசரமு
மென்னையன்றி யாங்கொலோ வெல்லாநா—னுன்னுசிவ
னான்பகவ னான்பூத நான்யாரு நான்சோதி
நான்பரமெ னான்பொருளு நான். (௨௦)

என்று பலவுரைப்ப யானெதிர்போய்ப் போர்புரிந்தும்
வென்றியுற்றோர் மேலோர் விரைந்தெழன—வன்றிறன்மா
லேற்றெழுந்தோர் வில்வாங்கி யேவிடக்கண் டொண்குசையா
னாற்றியுய்த்தே னப்படையை யாங்கு. (௨௧)

மாயன் படைவிடுப்ப மற்றதுகண் டென்மருங்கின்
மேயபடை விட்டதனை வீட்டிவாத்—தூயசிவ
னல்கு படைவிடமா னனுமான் பாற்பெற்ற
மல்குபடை யுய்த்தேன் வலிது. (௨௨)

ஒருதிறத்தி னீச னுதவு படைகள்
பொருவிறம்மி லாடல் புரிந்தே—யெரிகனல்கள்
சிந்தியுல கெல்லாந் திரிதலினால் யூழியின்க
ணந்தநல்கு தீநிகர்த்த தாங்கு. (௨௩)

மாய்ந்தார் சிலவர் மருண்டார் சிலர்கனலாற்
றீய்ந்தார் கலிவறந்த செல்கரிந்த—வேய்ந்தாரு
மாரமர்செய் காலையெந்தை யாரருளா லென்முகமா
நாரதன்வந் தொன்றுரைப்பா னங்கு. (௨௪)

நீர்முதனா மென்ன நினைந்தறைந்து செய்கின்றீர்
போர்முதரூன் தேறீர் பொருபடைமு—னார்கொடுத்தா
ரன்ன துணரீ ரதன்பே ரயர்த்தீரோ
வுன்னமதிற் றேற்றுமி னோர்ந்து (௨௫)

வாதியா வின்று மலைதிமிர வென்னினீ
ராதியா மெய்யறிவின் பானபொருள்—சோதியா
நள்ளுறவே தோன்று நனிகாண்டி ரென்றுணர்த்தி
வின்ளுறவே போனான் விரைந்து. (௨௬)

போயினன்சொற் கொண்டிலோம் புந்தி செருக்குற்றோ
மாயிரமாண் டெல்லை யமர்புரிந்தோ—மாயவெலாஞ்
சிழ்தமுகந் தாழியின்கட் டயி னடம்புரியு
மத்தனது நோக்கினா னாங்கு. (௨௭)

அறிவறை போயினா ரந்தைமேற் கொண்டார்
சிறுவரிற்போர் செய்கின்றார் தீமை—யுறுவதுன்னார்
போய்கந் நிலையுணர்த்திற் போர்தணிந்து நிற்பரெனா
வாய்தந்தா னுள்ளத் தரன். (௨௮)

அண்டளவை தன்னிலுற்ற தந்தரம்பா னாட்கங்குல்
கொண்டசுடர் சூழனென்னல் கூர்ந்தறியாக்—கண்டஞ்ச
வெற்படவே நாப்ப ணெரிவரைபோற் றோன்றினான்
றற்பரமாஞ் சோதி தனித்து. (௨௯)

தோற்று பரஞ்சோதி தொல்போ ருழந்தியா
மேற்ற படையை யினிதுவவ்வி—யாற்றலொடு
மாற்றருந் தன்மைத்தா வாறு தகன்றுபோய்ச்
சீற்றமிக னீங்கினின்றேந் தேய்ந்து. (௩0)

நீற்றிலும்யாங் கேட்ப நெடுவிசும்பி லோர்வார்த்தை
யுற்றெழுந்த தம்மா வுறுசிறுவீர்—மற்றுமதேன்
கூறுமரன் காண்பான் கொழுஞ்சோதி யீதடியு
மீறுமுறை தேருமென்றே யேய்ந்து. (௩௧)

அதுவினவிச் சிற்றம்விட் டந்தைதனி யில்லை
முதுசொற்று ராரெனவே யுன்னி—முதிர்சோதி
தான்முனிசொல் வண்ணந் தரிசிக்க வந்ததெம்மில்
வான்பொருள்கொ லென்றே மதித்து. (௩௨)

நீடிருவா னூடுசென்று நீள்பா ரிடந்துபுக்கு
மோடிநாஞ் சோதி யுறுமுடிபு—நாடிலவற்
றொன்று நலம்பெறக்கா ணுற்றோ ருயர்தலைவ
ரென்று நவின்றுநின்றே மேயந்து. (௩௩)

முடிகாண்ப னென்றே மொழிந்தேன் றமியே
னடிகாண்ப னென்றே யரியப்—படியிசைந்தான்
காண்டற் கருஞ்சிறுவர் கையினுல் வான்கதிரைத
தீண்டத் துணிந்தமைபோ றேர்ந்து. (௩௪)

முராரிவெள்ளைக் கோல முயங்குருவங் கொண்டே
யொராயிரமா யோசனையே யோங்கு—பருமமுற்றுப்
பாரிடந்து கீழே படர்ந்து துருவிச்சென்
றாதலம் போயினு னங்கு. (௩௫)

பாதலமா னுடிப் படர்தலுமே யானுமோ
ரோதிமமோர் கூர்வடிவா யும்பர்போய்—மீதமருஞ்
சீல முறுபுவனந் தேடிச் செலச்சோதி
சாலமேல் போயதம்மா தாய். (௩௬)

ஏனமாய்ப் பார்கீண் டெழுஞ்சோதி மூலமுறப்
போனமால் கீழ்போகப் போகவதன்—வானடியைத்
துன்னியே காண்கிலான் சோர்ந்தகந்தை தீர்ந்துமுந்தை
யுன்னுமுணர் வுற்று னொருங்கு. (௩௭)

தொல்லை யுணர்ச்சிதான் றோன்றத் தெளிந்துகண்ண
னல்லுறழ் கார்மேனி யங்கரிமெய்—மெல்லத்
தரிக்கலாற் றன்மீளுந் தன்மையிலான் செல்லான்
பாற்சிந்தை செய்தான் பரிந்து. (௩௮)

மீன்று முணர்வரிய வெம்பெருமா னின்பதமே
யன்றியா னில்லையவை யர்ச்சிக்கப்—பொன்றியதென்
வன்பு பொறுத்திகுறை மன்னடியே னோர்ந்திலனென்
றன்பினனி போற்றினு னங்கு. (௩௯)

ஆனபொழு தத்த னருளான்மா லேனினனு
யேனவடி வோடெழுந்தங் கேத்திநிற்ப—யானுமுன
மோதியமா ருளாலண் டோரா யிரந்தருவிச்
சோதிதனைக் கண்டிலேன் சூழ்ந்து. (௪௰)

மீன நினையேன் வினையேன்சூன் பொன்றுமென
மூனுஞ் சுடர்முடியை முந்தியெந்தை—நாளளவு
செல்லினும்போய்க் காண்பனென்றே சேண்செல்லச் சிந்தை
யொல்லுயிர்சோர்ந் தேண்டொலைந்த தூங்க. [வெம்பி (௪௧)

அன்னந் திரிந்த ததுபொழுதொண் சோதியுணின்
றன்னரிய சித்தரென வுற்றமலர்—தன்னிவிண்போ
யஞ்சந் தனக்கறிவின் றுயினிப்போ மேலிறக்கு
மஞ்சிவனென் றெண்ணு தது. (௪௨)

மாலென் பவனு மருவுநிலங் கீண்டனன்போய்
மூல முணரான் முராணீங்கி—யேலச்
சிவனே சரணென்று தேர்ந்தவனி போந்தே
யவிர்வரையை நண்ணிநின்றா னங்கு. (௪௩)

மூந்தாற் றிதையருள்செய் மூர்த்தியருள் செய்யினுய்யு
மிந்தப் பறவையென யானுமுன்னிப்—புந்திக்குண்
மால்போ யவர்ப்பரச மற்றவரங் கேசவன்பு
மேல்போ யரற்றுதித்தேன் மீண்டு. (௪௪)

வந்துதிரு யாலநண்ணி வான்பொருள்யா மென்றிகலி
முந்துசம ராற்றி முனிமொழியுஞ்—சிந்தியா
தந்தையொடு தேடலுற்றோ மந்தமுறும் வேலையவ
னந்தருளாற் போற்றினோ நன்கு. (௪௫)

மண்ணிடந்தும் விண்பறந்தும் வான்சோதி யாதியந்த
நண்ணுகிலந் தேவருளா னன்குய்ந்தோங்—கண்ணுதலைப்
போற்றிவழி பாடு புரிதுமென யான்சொலவக்
கூற்றிற் கிசைந்தனன்மால் கூர்ந்து (௪௬)

இருவருமே யெந்தை யியலுருவந் தாபித்
தருமலர்நன் மஞ்சனமு னுற்ற—பொருளமைத்துப்
பூசை புரிந்தன்பிற் போற்றி வணங்குதலு
மீசனவன் வந்தா னெதிர். (௪௭)

மைக்களமு மான்மழுவு மன்வரத மோடபய
மெய்க்கரமு நாற்புயமு மின்சடையு—முக்கண்ணு
மின்னின் மருங்குமைபான் மேவவரன் யாங்காண
முன்னின் றருள்புரிந்தான் முன். (௪௮)

அங்க ணிருவருமே யத்தனடி தாழ்ந்திறைஞ்சிப்
பொங்கருள்பெற் றீது புகன்றனமா—றங்கமறை
யுன்னியலிம் மாண்பென் றுணராதே யாங்காணற்
கென்ன வெளிவருமோ வின்று (௪௯)

புந்தி மயங்கிப் பொருங்காலை யெம்முன்னிற்
செந்தழலின் மேனிகொடு சென்றருளி—முந்தறிவு
தந்து வினையுணர்த்தித் சாக்கமரு நீக்கினையா
யெந்திரம்யா மாட்டுவனீ யிங்கு. (௫0)

உன்னை யுணரு முணர்வதந்தால் யாமுணர்வோ
மென்னிலெமக் கென்ன வெறுமுளது—முன்னமுறச்
செய்த பிழைபொறுத்தி சிற்பரனே யாங்களினி
யுய்திறநீ நல்கென்று ருற்று. (௫௧)

என்று துதித்தலுமே மீசனீர் செய்தபிழை
யொன்று நினைகிலீ ரும்பூசை—நன்றுவந்தா
மூன்றுவரங் கேளிரென வன்பதந்தா ரன்பளித்தா
ளென்னநல்கிச் சோதியுற்று னேய்ந்து. (௫௨)

கலந்தபோ தெங்கோன் கனற்பிழம்பாஞ் சோதி
விலங்கலாய் நிற்ப வியந்தே—யிலங்கச்
சிவலிங்க ரூபத்தைச் சேர்ந்துவலஞ் செய்தே
யவிரெம் பதஞ்சென்றே மாங்கு. (௫௩)

மாலொடுநா னேடசலம் வன்னிவரை யென்னநின்ற
தேலவ் வொளிகிளர்ந்த வேய்வதே—சீலச்
சிவநிசியா யிற்றரனைச் சிந்தனைசெய் துய்ந்தார்
தவவன்ப ரங்கா டனில். (௫௪)

ஆதலா லத்த னருள்பெறின்முன் ஞேதியுறும்
வேதமுத லோதின் விளங்காவாம்—பேதையரா
யுன்னூர்க் குருதே யுறுதரும மன்புனித
ரன்னூர்க் கவனருளு மாம். (௫௫)

நீயு நெடியவினை நீங்கலினு னித்தளிலை
யாயுமுணர் வின்றுற்ற தம்பரனே—தாயினுட
னுன்னுதந்தை யாசா னெனுளிர்கடவு ளாக்கமுமா
மன்னவனைச் சார்தியென்று னுங்கு (௫௬)

அடிமுடிதேடு படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௮௭௬.

—•~•—

# தக்கன் சிவபூசைசெய் படலம்.

---

போதனிலை கூறப் புரிகுவனஃ தென்றறைந்து
தாதைதனைத் தாழ்ந்துதக்கன் றண்காசிக்—கோதினகர்
சென்றுமணி கன்றிகையோர் தேத்திறைவற் காலயந்தா
னொன்று விதித்தா னுகந்து. (௧)

உருவருவா யுன்னருளா யொப்பி லொளியார்
திருவுருவொன் றாக்கிச் சிவனுக்—கொருவில்சீர்
மேயதிரு வாகமத்தின் மேயமுறை யீசனற்றா
ளாயிரமாண் டர்ச்சித்தா னாங்கு. (௨)

பூசை புரியவயன் புத்திரன்ற னார்வங்கண்
டீசனெறி ராக விறைஞ்சியைய—நேசமின்றி
நின்னை யிகழ்ந்துபவ நேமியுற்றே னென்னதுநீத்
துன்னிடையன் பாக்கென்றா னுற்று. (௩)

ஏயவணந் தந்தமலன் மேலா மியற்கைநல்கிப்
போயினன்சீர்த் தக்கன் புனிதனே—யாயினன்மன்
புண்ணியனைப் பூசிக்கப் போந்துழிமால் புங்கவர்க
ளெண்ணுமகம் விட்டகன்றா ராங்கு. (௪)

சென்றா ரனைவோருஞ் சீர்த்திமிகு வீரன்றன்
பொன்றா வயந்தனையே போற்றியோர்—குன்றாத
வாசமுறு தொல்லைத்த மாதலமுற் றீசனையே
பூசைபண்ண லுற்றார் புரிந்து. (௫)

ஆரா தனைசெய் தனைவோரு மெங்குமாய்ப்
போது நின்றபிரான் பேரருள்பெற்—றோராத
சின்னமது தீர்ந்து சிறந்துதத்த மாராய
மன்னுபதம் போயுறைந்தார் வாய்ந்து. (௬)

தக்கன் மகத்தினாண் டானுண்ட வந்தணர்கண்
மிக்க கணத்தின் விளிந்தெழுந்தார்—புக்கனரா
லென்றினைய வேந்தியம்ப வேந்தனன்றென் றுண்மகிழ்தந்
தொன்றுகவல் போய்வினுற்றா ரோர்ந்து. (௭)

தக்கன் சிவபூசைசெய் படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௮௮௩.

---

# கந்தவிரதப்படலம்.

---

முன்னமொரு ஞான்று முசுகுந்தன் சீர்வசிட்டன்
தன்னுறையு ளெய்தியடி தாழ்ந்தேத்திக்—கொன்னவில்வேல்
வேள்விரத மெல்லாம் விளம்புநல்லோ யென்னமைந்த
கேள்பகர்வ னென்றான் கிளர்ந்து. (௧)

பகர்ஞாயி றாதியாப் பன்வார மேழுட்
புகர்நாள் விரதம் புகழுங்—குகனார்
விரத மதுபுரிந்தோர் மேவெண்ண முற்றுஞ்
சரதமிது கேட்டி தக. (௨)

பகிரதனாள் பாருலகைப் பன்கோர னென்னுந்
துகணிருதன் வவ்வத் துயர்ந்து—மகவு
மனைவியொடு தானும் வனஞ்சென்று வெள்ளி
முனைநவின்றான் முற்று முறை. (௩)

வெங்குருமன் சொற்கேளா வேண்மகிழும் வெள்ளிநாட
டுங்க விரதந் தொடங்குதியென்—பொங்குமும்மை
யாண்டிருந்துன் புங்கட் கிழைத்தவெய்யோன் பொன்றவனீ
யாண்டிடுவை யென்றா னரசு. (௪)

நன்றெனமன் ஞாயிறுமுன் னாளொன் றென்வெள்ளி
யன்றுவரை யூணைத் துறந்துமுன்பின்—சென்றிடுமா
சீரிரண்டு நாளுந் திவாவினிலுண் டின்றுயினீத்
தாரிருநோன் பாற்றினன்மூ வாண்டு. (௫)

நோற்றிடும்போ தைய னுதியுடைச்செவ் வேல்வந்து
மாற்றலன்ற னாவிகொடு வல்லையுறப்—போற்றியே
மன்னும் பகீரதனு மன்றன் னகரெய்தித்
தன்னரசு பெற்றான் றக. (௬)

நாரதனைத் தத்த னறுமலர்த்தாள் போற்றியைய
ரோரெழுவர் தம்மி லுயர்பதமுஞ்—சீருமுற
வீண்டருநோன் பொன்றறைதி யென்னவேள் கார்த்திகைநா
ளாண்டுமுந்நான் காற்றென்றா னங்கு. (௭)

நன்றிதுநான் செய்வனென நாரதன்றின் பார்வந்து
பன்பரணி நாள பாரணத்தி—லன்பினொரு
போழ்துணவு கொண்டே புகழ்கார்த் திகைநாளில்
வீழ்விரத மாற்றலுற்றான் வேட்டு. (௮)

தூசினொடு நீர்தோய்ந்து தூயவெள்ளைத் தானைசுற்றி
பாசி னியமமுற்றி யார்வலனைத்—தேசிகன்ற
டாழ்ந்துசெவ்வேள் பூசைசெய்து சாற்றுமவன் மாக்கதையு
மாழ்ந்தவன்பிற் கேட்டா னமர்ந்து. (கூ)

கடிப்புனனீர் முக்காலோர் கையினள்ளி யுண்டே
படுத்தகுசை மேலே படுத்து—மடக்கொடியார்
தங்கனா மயலொழித்துச் சண்முகன்றன் முன்னிபிர
வங்கணுறங் காதுற்றா னங்கு. (கய)

அந்தப் பகல்செலப்பி னண்ணுமறு நாட்காலைச்
சந்திக் கடன்முடித்துச் சண்முகனை—வந்தித்துப்
பன்மா தவரோடும் பாரணஞ்செய் துண்மகிழ்ந்தான்
மன்மா விசைவல்லோன் வாய்ந்து. (கக)

பாரணந்தான் செய்தோன் பகற்போ தறங்குமே
லாரணர்க ளுற்றுவரை யார்த்தெழுந்தே—காரணமின்
றட்டபூழி யெய்துமென வங்க ணிமைத்திலான்
சிட்டர் புகழ்முனிவன் றேர்ந்து. (கஉ)

யாழ்முனியிவ் வாறாற்றி யேழ்முனிவர்க் கேற்றமுற்றான்
வீழ்விரதம் போற்றிமுன்னோர் வேதியனு—மேழ்புவியு
ளங்கன் மனுவானு னந்தணன்பின் னோற்றொருடிரி
சங்குவா யங்குற்றான் றான். (கங)

பின்னுமிங்கோர் கோன்வேடன் பெட்பினிந்த நோன்புஞற்றி
மன்னுமந்தி மான்சந்தி மானெனப்பேர்—துன்னியுல
காண்டனர்நன் கென்ப வ்விர்விரத நோற்றவர்பின்
காண்டருவீ டெய்தறிண்ணங் காண். (கச)

இப்படியே யாரனு னெத்தனையோ பேர்நோற்று
முப்புவனத் தூற்றமுறை முன்னடைந்தார்—செப்புவன்கேள்
பண்ணுதூலத் திங்கண்முன் பக்கத்தின் மூறபகன்முன்
மன்னமுநா ணோற்றார் மகிழ்ந்து. (கரு)

மூந்து தினமாதி மூவிருநா ளுங்காலை
யந்தமினீ ராடியிரு வாடைசுற்றிச்—சந்தியிற்செய்
தன்கடன்க ளாற்றியல்லிற் றம்பவிம்ப கும்பத்தின்
மன்குகனைப் பூசித்தார் வாய்ந்து. (கசு)

நிறைகட்டி கூட்டி நெயிற்சமைக்கப் பட்ட
வுறையிலட்டு கம்வேட் கருத்திப்—பிறவிதியுஞ்
செய்துபிரான் சீர்வினவித் தெண்ணீர் சிறிதருந்தி
யையதி னுபவசித்தா ராங்கு. (கஎ)

மனுமுனிவ ருமபரங்கு மற்றைவைகல் செவ்வேட்குப்
பன்சிறப்பிற் பூசைசெய்து பாரணந்தான்—முன்விதியிற்
செய்தனரிந் நோன்பிற் றிறலவுணர் கொண்டதங்க
ளுய்பதங்கள் பெற்றா ருவந்து. (௧௮)

என்றினைய வாசா னியம்பவிவை செய்வனென
வன்றுமுதற் பற்பலநா ளவ்விரத—நன்றுளுற்றக்
குன்றெறிந்தோன் கூர்மயின்மேல் கொண்டிலக்க ரோலையர்க
ணின்றவவண் வந்தான் றுதைந்து. (௧௯)

வந்துகுகன் றோன்றமன்னன் மாணடிதாழ்ந் தேத்திநிற்ப
வெங்கவரம் வேண்டுமென வேய்ந்தமுசு—குந்தனற்பார்
முற்றுமென்செங் கோனடப்பான் மொய்ம்பினன்முன் வீரரைக்கே
ணற்றுணையா நல்கென்றா னன்கு. (௨௰)

மன்னிவ் வகைவினவ வள்ள லருள்புரிந்தே
யுன்னிவிறல் வீரரைப்பார்த் தும்பினன்ப—னன்ன
ரிணையிலுல காளுவனீ ரேய்ந்தவன்பாற் போயேண்
டுணைவரா யார்திரென்றான் சூழ்ந்து. (௨௧)

முன்னவன்சொற் கேளா முடிவிலாச் சூர்குலத்தைக்
கொன்னுறச்செய் வன்மையுளோங் கூறிரவி—தன்னுவழி
மன்னுஞ் சிறுவன்பால் வைகித் தொழில்புரியே
மென்ன மறுத்துரைத்தா ரேய்ந்து. (௨௨)

ஏந்தலது தேர்ந்துநீ ரென்சொன் மறுத்தமையான்
மாந்தராய் மாதலத்தின் மன்படையாய்ச்—சேர்ந்துபின்னர்
நன்மா தவம்புரிந்து நம்பால் வருதிரென்றான்
றென்மா தவற்கருளுந் தே. (௨௩)

ஐயன் மொழிதேர்ந் தடன்மொய்ம்ப ருதியோர்
மையன் மனித்தராய் வன்மைபோய்—மெய்யி
லொறுத்தா லெனவருந்தி யுத்தமன்றா டாழ்ந்து
பொறுத்தாள் பிழையென்றார் போந்து. (௨௪)

தேனளினத் தாளிறைஞ்சிச் செவ்வேள் விடைபெற்று
மானவர்நன் மன்றமராய் மன்னினா—ரானபொழு
தேந்தன் முசுகுந்தற் கின்னருள்செய் தேமறைந்தான்
சேந்தன் கணங்களொடு சேண். (௨௫)

மறைந்துகுக னேகமகிழ் மன்கருவூ ரென்னுஞ்
சிறந்தநக ராட்சியெய்திச் சேணு—ரறந்தருமா
மாடநெடு வீதி வகுப்பித்தங் கார்வீரர்
நீட விருத்தினா னோர்ந்து. (௨௬)

ஆயவர்கட் கெல்லா மருமாத் திருவமுள்ள
தேயங் கரிதேர்வா சித்திரங்க—மேயபல
ஈற்சனங்க டாந்துதண்ட நாயகரா மாண்புதந்தான்
றற்சனர்க்கோர் சிங்கமன்றான் சூழ்ந்து. (உஎ)

அன்னதோர் காலத் தரம்பையர் பாராளு
மன்னர்பாற் றேன்றி வளர்மொய்ம்பின்—முன்னவன்முன்
முன்னவர்கட் கெல்லா முசுகுந்த னந்தவெழிற்
கன்னியர்ச்செய் வித்தான் கடி. (உஅ)

அந்தமிலேண் சால்வீர வம்புயத்தோன் முன்புட்ப
கந்திதனை வேட்டுக் களிப்பொடுசேர்ந்—திந்துமுக
மன்சித் திரவல்லி மாதைநல்கிப் பின்னனகன்
மின்சனகற் பெற்றான் விழைந்து. (உகூ)

சீரண் முசுமுகற்குச் சித்திர வல்லிதனை
யோரண் கடிவிதியி னீந்தனன்றிண்—வீரருமே
மன்மரபிற் கேற்ப மணந்துமக்க ளீன்றுமனுத்
தன்குலத்தி லொன்றியுற்றார் தாம். (௩௦)

சித்திர வல்லியங்கோர் சீர்கொள் கிளிவளர்த்தாண்
மைத்தருமன் றேவிவெஃக மன்றூதர்—கைத்தலத்திற்
பற்றிவந்து நல்கவதைப் பாவைகா ணதயாக்
கொற்றனது தேடலுற்றான் கூர்ந்து. (௩௧)

வன்னிநமன் பன்னிகையில் வாய்ந்தமர்த லோர்ந்திறைவ
னுன்னுவிறன் மொய்ம்புமுத லுற்றவர்க்கூய்த்—துன்னுமங்கன்
றூண்டவன்றூர் சேனைபுண்ட சுற்றநெடுங் கூற்றூர்போ
யாண்டு விளைந்துகொண்டா ரார்த்து. (௩௨)

தன்னகரை முற்றத் தருமன்வந் தேற்றிடலு
மன்னவனே டாரமர்செய் தாண்மைதொலைத்—துன்னரிய
மின்கிளியை வாங்கினார் மீண்டன்பிற் றந்துதங்கண்
மன்மகிழ வென்றிசெய்தார் வாய்ந்து. (௩௩)

மின்சித் திரவல்லி மெய்ச்சூல் கொடுமேவண்டு
மன்பலங்காய் வேண்டி மலைநாட்டிற்—குன்பலரை
யேவவந்த காட்டா ரிகன்மொய்ம்ப ரைதியர்போய்
மேவுசுரம் வென்றுவந்தார் மீண்டு. (௩௪)

நின்மகடான் வேண்டுவன நல்கியிறை கொண்டெங்கு
மன்செழுங்கோ லாணை மனச்செய்தார்—மின்கொடிபி
னங்கிவன்மன் றன்னை யளித்தா டவத்திறைற்
பொங்கவிறை யாண்டான் புவி. (௩௫)

அந்நாள் வலாசுர னாறற் படையொடும்போய்
பொன்னாட்டி னைச்சுற்றிப் போர்செய்தா—னன்னாற்
பொருதுவெல்லா நீர்மையிற்பார் போற்றுமுசு வேந்தை
வருகியென்றோர் தூதுவிட்டான் மன். (௧௬)

ஏவொற் றிருநிலம்பூக் கேந்தல் பணிகவில
மேவிநன் றென்றுவினாய் வீரரொடு—மாவரசன்
வான்போய்மன் றாள்வணங்கி மன்படைக்கு நாயகனாய்த்
தான்போர் புரிந்தான் றக. (௧௭)

சுற்றவுணர் தானை சுருங்க வலாசுரனைச்
செற்றமுடன் போர்செய்து சேணகாரள்—கொற்றவன்றான்
கொன்று வலாரியென்பேர் கொண்டுமுசு குந்தனொடு
மன்றனகர் புக்கான் மகிழ்ந்து. (௧௮)

காய்ந்தவண்ட ராண்மை கடந்தே யெனைவான
வேந்தனே யாக்கியிசை வீரமுட—னீந்தெனக்கு
நற்றுணைவ னாயினாய் நாடரிய வந்தரங்கச்
சுற்றமன்றோ நீயென்றான் சூழ்ந்து. (௧௯)

என்றிறையை நோக்கி யினிய மொழிபகர்ந்து
குன்றனைய கோயிலினுட் கொண்டுபோய்—மன்றயங்கு
வாசநீ ராடி மணிக்கலைசூழ்ந் தீசனையே
பூசை புரிந்தான் புரிந்து. (௨0)

அண்ணலொரு பாலுமையு மார்குகனு மேவவெள்ளி
நண்ணகத்தி லார்தல்போ னன்கிருக்கக்—கண்ணுற்றுப்
பாடினா னேத்திப் பாவசமா யுள்ளுருகி
யாடினா னன்பி னரசு. (௨௧)

சிறந்தவுருக் கண்டுகண்டு சிந்தைமகிழ் கொண்டு
மறந்தனன்கொ லோபிறப்பின் மான்றென்—றறைந்தனன்புன்
மாவின் முகங்கொண்டு மாழ்கியமன் மன்றேவ
தேவனைத்தாழ்ந் தோதுமிவை தேர்ந்து. (௨௨)

மாமறையோ ருற்று வழிவடுதே வேபோற்றி
தோமிலா போற்றி துணைவியே—யாமுற்
றிழைபொறுத்த பாகத் திறைபோற்றி யென்றன்
பிழைபொறுத்தி யென்றான் பெரிது. (௨௩)

இன்னமுசு குந்த னியம்பவா னின்னருள்செய்
தன்னவனை நோக்கி யரிவழிபட்—டுன்னெடுநாள்
வாசவன்பால் வைத்தனன்பார் வைப்பினிற்கொண் டேகிநமைப்
பூசைசெய்தி யென்றான் புரிந்து. (௨௪)

என்றினைய வீசான னிந்திரன்கே ளாவண்ணு
நன்றினருள் செய்ய நனிமகிழ்ந்தே—நின்றன்
றிருவருளீ தாயினுய்ந்தேன் சிற்றடியே னென்று
வருவிம் மிதமுற்றான் மன். (சரு)

இந்திரன்மன் பூசைமுற்றி யெய்ந்தகட ஞற்றியோர்
மந்திரம்புக் காவினைக்கூய் மன்னவற்கு—முந்து
விருந்துசெய்வித் தாடைகலன் வேண்டுவதந் தின்னும்
பொருந்துவகே ளென்றான் புரிந்து. (சசு)

பையரவம் பூண்ட பரனைப் பரிந்தளித்தி
யையபுவி போய்ப்பூசை யாற்றவெனத்—துய்யன்முன்
மாலவன்சேய் வேண்டி வரனைக் குறித்தூழி
காலந் தவம்புரிந்தான் காண். (சஎ)

தவமுழந்த காலைச் சயம்புமையுந் தோன்றப்
புவனமுண்ட மாலெழுந்து போற்றிச்—சிவனடியில்
வீழ்ந்திறைஞ்சி நிற்பநீ வேண்டுவன சொல்லென்றா
ஞழ்ந்தகட னஞ்சுண்டோ னங்கு. (சஅ)

அந்தமிலா வாயுளளிப் பாக்கமா வோடுதந்தாய்
மைந்த னிலாமே வருந்தினே—னெந்தையரு
ளென்ன நகைத்தெழிற்சே யெயுனக்குத் தந்தோமென்
றின்னருளே செய்தா னிறை. (சகூ)

மாயனுமை தன்னை வழிபா டியற்றிலன்சீ
ரேயுந் தனக்கிளையா ளென்றெணியோ—நாயகனுக
கெம்மைப்போற் சத்தியவ ளென்றுணர்ந்தோ தேர்கிலே
மம்மைபாற் செய்திலா னன்பு. (ருo)

அன்னையது காலை யரிதன்னை நோக்கிநீ
யென்னை யவமதித்தா யெம்மிறைக்கன்—பன்னன்று
முன்னருள்சே யத்தன் முனிவான் முடியவெனுப்
பன்னருஞ்சொற் சொன்னாள் பரிந்து. (ருக)

ஆன பிரமம்யா னல்லதில்லை யென்றறிவின்
மானவர்க்கு மால்பூட்டும் வஞ்சகன்முன்—ஞான
நிருமலனே நீயநுஙி நிற்றனன்றோ சேறும்
வருகெனவே கூறினணன் மாது. (ருஉ)

இன்னதுரைத் தீசை யிறைவனைக்கொண் டேகுமெல்லை
யன்னதன்மை கண்டுளமா லச்சுறீஇ—யின்னலுற்றே
யம்மையினிசை துற்றதென்றோர்ந் தம்மையப்பன் சேய்வடிவு
செம்மையமைத் தர்ச்சித்தான் றேர்ந்து. (ருங)

பன்னதன்பின் மாலாண்டு பல்லா யிரகோடி
மன்னுதவ மாற்றவன் மாதொடுற—முன்னமகிழ்ந்
தம்மைகழ லோடிமுன்றாழ்ந் தத்தனடி தாழ்ந்தேத்த
வெம்மையருள் செய்தா னினிது. (௫௪)

ஈர்வளைநீ மாற்கருள்செ யென்ன வவற்பாரா
வேர்வரன்சொற் றன்சொல் லிரண்டுமுன்னிக்—கூர்வரங்க
ணங்கியால் வீந்துமுன்பின் னங்கியா நின்மகனென்
றங்கியாய் சொன்னா ளமர்ந்து. (௫௫)

இறைவியுரை கேட்டிறைவ னிஃதாக வென்றே
மறைதலுமால் விம்மிதமே மன்னி—யுறைபதி
வைகமையார் மெய்க்காமன் வந்தவன்றனெஞ்சுதித்தா
னுய்கவுல கெல்லா முவந்து. (௫௬)

வந்திடுவேள் கார்மைபூவின் மன்மலர்க்கோல் வண்கைகொடு
மைந்தரொடு மாதர் மனங்காமச்—சிந்தையுறப்
போர்புரிவா னோர்பகன்மெய்ப் புண்ணியன்மேற் பூங்கணைதூய்ச்
சீர்குலைந்து நீறானான் செத்து. (௫௭)

உருவழிந்தோ னெப்பி லுமைகே ளருளா
லருவோ டுருவ மமைந்து—மருவுதொல்லை
நாள்வளத்தி னோடுமே நண்ணினான் மாதுமைசொல்
சூள்வறிதே போமோ துனைந்து. (௫௮)

மாலவன்முன் னன்பின் வழிபட் டுமைகுமரன்
மேலரனிம் மூவரையு மின்மார்பி—வேலவைத்தே
பன்னாப் பஃறலைய பாந்தண்மேற் பாற்கடலின்
மன்னாத் துயின்றான் மகிழ்ந்து. (௫௯)

நீடரவே கண்வளர்மா னெட்டுயிர்ப்பி னாசைவா
லூடவ்வப பாய நுயிர்ப்பல்சவா—முடலை
ணீடியமுந் நீரசைவா னின்மலமா மூர்த்தியர்தா
மாடியே வைகினா ராங்கு. (௬௦)

அன்னதோர் காலை யசுரப் படைக்கெல்லா
மன்னனும் வாற்கலிதான் வானவரோ—டன்னையமர்
செய்துவென்றா னரிமுன் சென்றிறைஞ்சிச் சொல்லிமெலி
வுய்தாநீ காத்தியென்றே னுற்று. (௬௧)

துஞ்சுமறி வுள்ளான் றுயிலைவிடாத் தானெழீஇ
யஞ்சலீ ருங்கட் கலக்கண்செய்—வஞ்சனுயிர்
கொன்றிடுதும் வல்லையெனக் கூறருளி னாரணமா
லொன்றெனக்குச் சொன்னா னுகந்து. (௬௨)

பார்த்தியா லென்மார்பிற் பார்ப்பதிசெய் தீர்த்தனென
மூர்த்தியாய் வைகு முழுமுதலை—யார்த்தியொடு
பூசனைசெய் தன்றீமை போக்குதி யென் றங்கைதர
மாசிரமேற் றங்கினேன் வாய்ந்து. (௬௩)

அங்கதற்பின் மாயவன்பா லாழியின்க ணின்றெழுந்து
நங்குழுக்கள் சூழவயர் நாவலந்தீ—வங்கணுற்றே
குன்றந் தனுவாக்கொள் கோணடஞ்செய் வான்றில்லை
மன்றந் தொழுதான் மகிழ்ந்து. (௬௪)

நின்று பரவசமாய் நேர்திருமுன் வீழ்ந்திறைஞ்சி
யொன்றுசிவ பூரணத்தி லொன்றினான்—மன்றிங்க
ளத்த னடிக்கீ ழடங்கியே யானையினுற்
றத்துவமே யோர்ந்தெழுந்தான் றான். (௬௫)

பொன்னடிதாழ்ந் தேத்திப் புறத்தேகிப் பூவுலகா
ளொன்னலனும் வாற்கலியோ டுற்றமர்செய்—தன்னவன்ற
னுவியுண்டு வாகைபுனைந் தங்கெமக்கு நல்கிவிடை
மேவுதலி போய்வளர்ந்தான் விண்டு. (௬௬)

தேவரொடு மீண்டு திகழித் துறக்கத்தி
லாவலுடன் வந்தேயா னன்றுமுதற்—காமருநற்
பூவைநிறங் கொண்டபுத்தேள் பூவைநிறங் கொண்டபுத்தேண்
மூவரையு மர்ச்சித்தேன் முன். (௬௭)

மன்னற்கு மன்னீ வழிபடுதல் காரணமாத்
தன்னைப் பிலாதாரைத் தந்திடுவே—தென்னிச்சை
யன்றுனக்கு மாலிசைவுண் டாமாகிற் பின்றருவ
னென்று நவின்றே னினிது. (௬௮)

பின்ன முசுகுந்தன் பாற்கடல்போய் நாரணன்பொன்
மின்னடிதாழ்ந் தண்மைநின்று வேண்டுதலு—மின்னுயிராம்
வாசவன்பால் வைத்திடுநம் வள்ள றனைக்கொடுபோய்ப்
பூசனைசெய் யென்றான் புரிந்து. (௬௯)

நன்றென் றிசைவுகொண்டு நாரணன்பாற் பெற்றுவிடை
சென்றிந் திரற்குரைப்பச் சிந்தைதளர்ந்—தன்றுதனை
யீன்றபுனிற் றாவை யகல்கன் றெனப்புலம்பி
வான்றவகத் துன்னினனென் றாங்கு. (௭௦)

தேவர்கோன் றெய்வதச்சன் செய்கையாற் சம்புமைசே
யேவுவடி வாறுமுறை வெவ்வேறு—வேவருமே
யெய்த வியப்பமைத்தே யேந்தல் கரத்துநல்கச்
கைதவமென் றோர்ந்தனனே காண். (௭௧)

ஆதியிலே தெய்வதச்ச னுக்கமைத்த வாறருவும்
பூதலமன் வாங்கிப் புதல்வனுமை—காத
னிவரபார்ந்தா ரென்றிருந்து மின்சொலுரு நீரா
லிவரவான் றென்று னிறை. (௭௨)

உன்னுமுசு குந்த னுரைகேட்டு மாணிறத்திற்
றுன்னும் புதல்வனொடுந் தோகையொடு—மன்னு
தவரா வரையெடுத்தோன் றன்னைக் கொடுவந்
திவராமோ வென்று னிறை. (௭௩)

இந்திரனிவ் வாறுரைப்ப வேறுயர்ந்தோ னேர்விறல்சேர்
முந்துமுசு குந்தன் முகநோக்கி—வந்தனையா
னேசமுட னெம்மை நிலத்திற் கொடுபோந்து
பூசைபுரி யென்றான் புரிந்து. (௭௪)

மானமருங் கையான் வலாரியுண ராதுரைப்பப்
தேனலர்த்தா டாழ்ந்தேத்திச் சிந்தித்து—வானரசே
யாங்கசரிபூ சித்தவரா ராமிவரை நல்கெனவே
வாங்கினன் மன்னவர்தம் மன். (௭௫)

வாங்கியபின் வானவர்கோன் மன்னன் முகநோக்கி
யீங்கிவரை யன்னரொடு மேண்பாரிற்—றாங்கொடுபோ
யார்கமலை யாதி யறைகின்ற மாதலத்திற்
சீர்வழிபா டாற்றென்றான் றேர்ந்து. (௭௬)

நன்றெனவே கொண்டுவிடை நானிலத்தி லாரூரிற்
பொன்றவிலரப் பூங்கோயில் புக்கரிதா—னன்றன்
பதிர்தரவர்ச் சித்தவரை யாங்கேற் றனைமேல்
விதிமுறையாற் றாபித்தான் வேந்து. (௭௭)

கார்நாகை நள்ளாறு காறாயல் கோளரியூர்
சீர்வாய்மி யூர்மறைக்கான் றேத்தாறு—கூர்வடிவ
மார்ந்த வரனை யமர்வித்தா னூர்வமுளங்
கூர்ந்தமுசு குந்தனுங் கோ. (௭௮)

இவ்வா றெழுவரையு மேய்பகலிற் றாபித்தே
யவ்வா றியல்வழிபா டாற்றுவித்துச்—செவ்வாரூர்த்
தேவாதி தேவற்குச் சீர்விழாச் செய்குவான்
மேவா வுளங்கொண்டான் வேந்து. (௭௯)

அந்நாளி லண்டர்கோ னர்ச்சனைசெ யண்ணறனை
மன்னார் தாரங்கொடுத்த மாபவத்தாற்—பொன்னாட்டி
னுக்கம்போய் நீசவுரு வார்ந்துகரி யூர்ந்துபதி
மாக்கமலை வந்தடைந்தான் வாய்ந்து. (௮௦)

ஆநரின் மேயபின்ன ரண்ணல் விழாப்போற்றப்
பாரூர் வருகெனவே பன்முரச—மாரவெறிந்
துன்னற் கரியகரி யும்பருற்றுச் சீராரு
மென்னற் புடைசூழ்ந்தா னேர்ந்து. (௯௧)

பூங்கமலை மேய புனிதனூர்க் கன்னதற்பி
ஞோங்கு விழாநடத்தி யுற்றபதி—யாங்கடவுட்
காங்கதுபோற் செய்வித் தரசர்பிரான் வீரருடன்
பாங்குறவே யாண்டிருந்தான் பார். (௯௨)

ஆண்டுபல வங்க னரன்விழாச் சேவித்துக்
காண்டகுநோன் பாற்றிக் கடைஞுரு—மீண்டு
தபவலியின் முன்வடிவந் தான்பெற்று வான்போய்
விபவமுடன் வீற்றிருந்தான் வேந்து. (௯௩)

அங்கருவூர் தன்னி லளவிஞட் கோலோச்சித்
துங்கமுசு குந்தன் றுவரநோற்—றங்கணில
நன்கயிலை யேந்துதிற னண்ணங்கி வன்மனுக்கீந்
துன்கயிலை யுற்றா னுவந்து. (௯௪)

எங்களெழின் மொய்ம்ப னிலக்கருட னெண்மருமே
தங்கள் சிறூர்க்குத்தந் தஞ்சிறப்பீந்—தங்கிவன்மன்
பாலிருந்தி நோன்பியற்றிப் பன்கந்த வெற்பெபகி
வேலவற்றாழ்ந் தன்பினுற்றார் வேட்டு. (௯௫)

ஆகையாற் செவ்வே ளவிர்விரத மாரேனு
மோகையாற் போற்றியிடி னுன்னியவை—தோகையார்
கந்தவரைப் பெம்மான் கனியருளாற் பெற்றிடுவர்
வந்தவரைத் தாழ்வரண்டர் வாய்ந்து. (௯௬)

கந்தவிரதப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௬௯௬

--- •⌒•——

# வள்ளியம்மை திருமணப்படலம்.

வள்ளியமை மன்னும் வரையின்கண் மான்மகளாம்
வள்ளியமை யென்பேர் வருமணங்கை — யொள்ளியவேற்
சேந்தன் மணந்த திறனனைத்துந் தேர்ந்துசொல
லாந்தன்மை யார்க்கு மரிது. (௧)

பாடியனு வல்லோர் பரசுதொண்டை நாட்டினின்மேம்
பாடியன்முன் னோங்கும் பழம்பதிமேற் - பாடியெனு
மண்போய சீர்நகர்ப்பான் மண்ணளந்த மாயவன்போல்
விண்போய்நிற் கின்றதோர் வெற்பு. (௨)

தீயரவ மேலாய்த் திகிரிவனை யேந்தியே
மேயமத மாவடக்கி வேரிநறுந் — தூயமலர்
வேய்ந்துலக முன்னளந்த விண்டுவையே யவ்வசல
மேய்ந்து பிறங்கிற் றினிது. (௩)

நான்முகமுங் காண நறுமலர்மே லார்ந்துகலை
மான்மருவிச் சாந்தமுற்று மன்னுபொரு — டான்படைத்துந்
தாதாருஞ் சாரற் றடநிவா மாமறைதேர்
வேதாவை நேரும் விழைந்து. (௪)

ஆயிரமாங் கண்க ளமைதந்து மையிவர்ந்து
மீயுயர்ந்த விண்பதவி மேவியே — தூய
மகவான் றனைநிகர்க்கும் வள்ளி வரைப
மிகவா னிவர்ந்தவந்த வெற்பு. (௫)

கண்வேழ முத்துங் கரவேழ வெண்மணியும்
விண்மேக நித்திலமு மேவியே — நண்வேகத்
துள்ளி வரையாமற் றூங்கருவி பாய்தலால்
வெள்ளி வரையாமவ் வெற்பு. (௬)

இன்னவரை மேய்ந்தவெற்பி லேரெயின ரீண்டியே
மன்னியதாங் கோர்குறிச்சி மாதுமைசேய் — பின்னரே
தன்பான் மருவத் தவம்புரிந்து பொன்னகர்போன்
மன்பா ரிருந்ததம்மா மற்று. (௭)

ஆயதொரு சீறூரி லார்புளினர்க் கெல்லாமோர்
நாயகனு நாமவே னம்பியென்போ — னேயமொடு
செய்தவத்தின் மைந்தர் சிலர்ப்பெற்றுப் பெண்மகட்குத்
தெய்வம் பராவியுற்றான் றேர்ந்து. (௮)

அவ்வரையின் பாங்குதனி லைம்புலனு மொன்றுசெலச்
செவ்விதினுய்ந் துய்க்குஞ் சிவமுனிவ—னெவ்வெவர்க்கு
மெய்தரியான் றன்னையுன்னி யெய்விரதம் பூண்டுதவஞ்
செய்திருந்த லுற்றான் றெளிந்து (௯)

சேயிலைவே லண்ண றிருவருளால் வந்துலவோர்'
மேயபிணை நவ்விதனை மேவியங்குத்—தூயமுனி
பார்த்தலுநற் செவ்வி படைத்தபிற னிற்கண்ட
தூர்த்தனின்மா லுற்றான் சுழன்று. (௧௰)

மாட்சியுடை நல்லார்பால் வானோர் புணர்ச்சியெனக்
காட்சியினி லின்புதுய்த்துக் காமந்தீர்ந்—தாட்சியினாற்
மெய்யுணர்வு பெற்றுமுன்போன் மேவியிருந் தேநோற்றான்
செய்ய சிவமுனிவன் றேர்ந்து. (௧௧)

நற்றவத்தோன் காட்சியினா னவ்விபாற் கர்ப்பமுறத்
தெற்றெனவே தேற்றிமால் செல்விபுக்காண்—மற்றதனிற்
கொற்றவையே லவகைக் குமரவேண் முன்னமே
சொற்றகுழி சென்னீராள் சூழ்ந்து. (௧௨)

அனையபோ தங்ககன்றே யம்மான் புனம்போய்ச்
சுனையின்க ணீருண்டோர் சூழ—றனிலமர்ந்து
வெற்பி னிடந்தோறு மேவியண்மிப் போயதே
யற்பினல்லார் கண்போ லணைந்து. (௧௩)

பிறங்குபிள்ளை யீற்றுப் பிணுமுருக வேட
னறங்கொ ணெறிதன்னை யாற்றிக்—கறங்கித்
திகழ்வயிறு நொந்தின்று சிலையினர் வள்ளி
யகழ்குழிக்க ணிட்ட தணைந்து. (௧௪)

கோற்றொடிக்கைச் சேர்த்த குழவி தனைநோக்கி
யீற்றுப் பிணையெம் மினத்ததன்று—வேற்றுருவ
மேற்றமைந்த தீண்டெனு வெங்கிமனத் தச்சமுறீஇ
யாற்ற மருண்டகன்ற தாங்கு. (௧௫)

மாதா வெனவீன்ற மான்பிணைதா னேடியபின்
றூதார் குழலி தனித்தனளாய்ச்—சேதாம்ப
லன்னவா யங்காந் தழுதிட்டா ளின்னிசைக
ளின்னவா மென்ன வினிது. (௧௬)

அந்த வமையத்தி லாறிருதோ ளண்ணலரு
ளுந்த வெயினர்க் கொருதலைவன்—பைந்தொடியாண்
மற்றவர்க ளக்கணுற மாதின் குரல்கேட்டிஃ
தூற்றறிவா மென்றுபுக்கா னாங்கு. (௧௭)

வந்தான் முதலெடுத்த வள்ளிக் குழிவைகு
நந்தா விளக்கை நனிநோக்கி—யிந்தா
விளங்குழவி யென்றெடுத்தே யீர்விளக்கை யிந்து
வளங்கொளின்ப வாரியுற்றான் மன். (௧௮)

கொற்றக் கொடிச்சி குழவியைத் தான்வாங்கிப்
பெற்றுக்கொள் வான்போலப் பேணிமகிழ்—வுற்றுத்
தனத்தூ றமிர்தூட்டச் சார்மகண்மின் றேறும்
வனத்தூர்க் குடில்புக்கான் மன். (௧௯)

அண்ட ரமிர்த மனையமகட் பெற்றிடலான்
மண்மகிழ் வுற்றிருந்தான் வான்விடையைக்—கெண்டியொரு
தன்கிளையோ டுண்டு தனித்தொண் டகமார்ப்பக்
கொன்குரவை தூங்குவித்தான் கோன். (௨௦)

காலை யதற்பின் கடவுட் பலிசெலுத்தி
வாலரிசி மஞ்சண் மலர்தூவிக்—கோல
மறியா டறுத்தொளிர்வேன் மன்விழாக் கண்டு
வெறியாட னேர்வித்தான் வேந்து. (௨௧)

இன்னசெய்து வேந்துமனை யோர்மகட்குக் காப்பிட்டுத்
துன்னும்பாற் றேகையுறு தொட்டில்விட்டான்—பன்னெகிழ்ந்தோர்
வள்ளி யகழ்குழியில் வந்தமையா லன்னவள்பேர்
வள்ளி யெனநவின்றார் வாய்ந்து. (௨௨)

முல்லைப் புறவ முருகுந்தன் றிருமடந்தை
கொல்லைக் குறவன் குலமகளாய்ச்—சில்லை
மருவுகுடில் சேர்ந்து வளர்ந்தாள் பெருமை
யிருவர்மக ளென்றழைப்ப வேய்ந்து. (௨௩)

பொற்றொட்டி விட்டுப் புவியின் மிசைதவழக்
கற்றுத் தளர்நடையுங் காட்டிநிழ—லுற்றகணி
முற்றத் துலாவி முரத்தின் மணிமொழிந்துச்
சிற்றிலிழைத் தாடினண்மின் றேர்ந்து. (௨௪)

முந்தை யுணர்வின்றி மொய்மகளி ரோடுவண்டல்
சிந்தையுறச் செய்துவளர் செல்விக்கட்—பைந்தொடிக்குப்
பன்னிரண் டாண்டுசென்ற பாலை தனைத்தினையார்
முன்னிலத்தில் வைத்தார் முறை. (௨௫)

கட்டு வரிவிற் கருங்குறவர் கைத்தொழிலா
லிட்ட விதணத் திருந்திறைவி—தட்டை
குணிறழலை தாங்கிக் குருகோட் டினளே
யணில்வாற் குரல்கவரா தாங்கு. (௨௬)

எய்யா ரிரலை யெழின்மான் மரைபிறவுங்
கொய்யாத வேனற் குரல்கவரா—தையார்
துடியிடையாள் செம்மணிக்கற் றூங்குகவ ணிட்டுக்
கடிதோச்சி வீசினாள் காய்ந்து.                    (உஎ)

பூவைகா ளோர்கூர் புறவங்கா ளாலோல
மாவலூறு தோகைகா ளாலோலங்—கூவனேர்
சென்றூர் குயில்காள் சேவல்கா ளாலோல
[illegible]ன்று டிருவனையா ளேய்ந்து                    (உஅ)

இவ்வண்ண மீர்வனே தா னேனற் புனங்காப்ப
வவ்வமயத் தன்றாட் கருள்புரியச்—செவ்வயில்வேள்
கந்தவரை நீங்கிக் கடியார் தணிகையின்கண்
வந்துதனிவைகினான் மற்று.                    (உகூ)

இன்னிசையாழ் வல்லோ னிருநீ ருலகடைந்து
மன்னிசையார் வள்ளி வரைவந்து—பொன்னிசையாக்
கற்பிற் குறமகளைக் கண்டு தொழுதகத்தி
லற்புதத்தி னின்னசொல்வா னாங்கு.                    (௩0)

அன்னையா யிங்கிருப்ப வார்பே ரழகனைத்து
முன்னியான் கூறிடினு முற்றுமோ—வென்னிறைதேன்
பெய்தார்த் துணைவியாய்ப் பெட்டிருப்ப மாதவமுன்
செய்தா ரிவரென்றான் றேர்ந்து.                    (௩க)

ஏனற் புனக்காவ லேந்திழையைப் பார்த்துரைத்தே
தானற்பிற் போற்றிப்போய்த் தண்டணிகை—மாநிவரத்
தகை ணமர்ந்திருக்கு மத்தனடிக்கமலந்
துங்கமுனி தாழ்ந்தறைவான் சூழ்ந்து.                    (௩உ)

மாதவத்தோன் றன்றனையை மானினுற்றாள் வள்ளிவெற்பி
னோடெயினர் கன்னியா யோங்குதினை—போரப்
புரந்திதண்மேன் மேயினளற் பொற்புளாள் போந்தந்
தரந்தெரிதி யென்றான் றக.                    (௩௩)

தாயதா மத்திருமுன் சங்கரிபீன் மாதுநின்றோ
டோயநெடு நாளுற்றான் சொல்வரைப்பிற்—போயவட்கு
நன்றருடி யென்னநன்று நன்றிதுசீர்க் காட்சியோய்
சென்றிநீ யென்றறைந்தான் சேய்.                    (௩௪)

எய்யுந் தனுவெயின ரேந்திழைதா னுய்யத்த
மெய்யுருவ நீத்தெழிஇ மேவருள்செய்—தையன்மான்
மானிடமெய் தாங்கி வரிசிலைக்கை யேந்தியெழிற்
கானவத்தின் கோலமுற்றான் காண்.                    (௩௫)

கிள்ளையின்சொன் மான்பாற் கிளர்மோகந் தன்னுளத்தைத்
தள்ளவே வண்டணிகை தாமொரீஇ—வள்ளிவெற்புற்
றொண்டா ரணிகூந்த லொண்டொடியைத் தின்புனத்திற்
கண்டான் கருணைவள்ளல் காண். (௩௬)

பூமஞ்சார் மின்போற் பொருப்பிற் றினைகாக்குங்
கோமஞ்சார் மாதைக் குகனோக்கிக்—காமஞ்சா
லுள்ளத்தா னாகி யுயர்வா னிதணருகின்
மெள்ளத்தான் சென்றான் விழைந்து. (௩௭)

கூர்வசிநேர் கண்ணயனக் கோதைகேண் ஞாலமதி
லீர்வளையர்க் கெல்லா மிறைவியா—யார்கிளையே
யெனறனைக் காக்கவைத்தே யேகினார் வேடரவர்க
காணவுணர் வில்லென்றா னங்கு.

வாரற் குழலாய் மதிதவர்வெற் குன்றமெழிற்
பேருரைத்தி யஃதுரைக்கப் பெட்பிலையே—யூருரைத்தி
யூரு முரைக்க வுகப்பிலையே னின்சீறூர்க்
காருநெறி சொற்றியென்றா னங்கு. (௩௯)

மொழியொன் றுரையாய் முறுவலுமே செய்யாய்
விழிநோக்காய் காமத்தாழ் வேனாய்—வழிகாட்டாய்
நெஞ்சுருகா யாதலினா னின்பாற் பழிசூழு
மஞ்சணங்கே யோர்தியென்றான் மன். (௪0)

செய்ய குமரிமுன்னர்ச் சீரார் குமரனின்று
மையலினீர் மைகாட்டி மாற்றமுரை—செய்யுமெல்லை
யெய்யுளியம் வேழ மிரிதரவே கோடேத
வொய்யெனவே தாதைவந்தா னாங்கு. (௪௧)

ஆங்கதுபோ தாரடிமு னாரணங்க ளாகவே
யோங்குநடு வீச னுயர்நூலாப்—பாங்கரோடு
மேற்பல் கிளைகலையா வேங்கையுரு வாகியே
வேற்படைமா வீரனின்றான் வேட்டு. (௪௨)

கானவர்கோ னங்குவந்து கன்னிதனைக் கண்டுகேட
மானினையும் பால்கிழங்கு மாதீங்காய்—தேனினொடு
திற்றிபிற நல்கித் தினைப்புனத்தார் வேங்கையினை
யுற்றினிது கண்டா னுவந்து. (௪௩

ஆங்கவன்பா னின்றோ ரவிர்கணியை நோக்கிவியந்
தீங்கிதுமுன் னுற்றதன்றோ லெய்ந்தவிதை—நீங்கண்
முறித்திடுவீ ரென்பார் முதலோடும் வெட்டிப்
பறித்திடுவீ ரென்பார் பரிந்து. (௪௪)

இங்கிவைசொல் வெய்யோனை யேந்தல் விலக்கியெழி
னங்கைமுகம் பாராவேர் நண்வேங்கை—செங்குராலா
ரேனற் புனத்தின்கண் ணெய்தியதென் கொல்லறைதி
வானற் சாதமென்றான் மற்று. (௪௫)

தந்தைமொழி கேளாத் தளர்ந்து வெருவியிது
வந்தவா றோர்கிலனுன் மாயமையா—முந்தைநா
ளில்லா ததுநவமா யெய்தி முளைத்ததென
நல்லா ளவன்றா னயந்து. (௪௬)

என்றறிவை கூறவஞ்சே லீங்கமர்தி வேங்கைமா
மின்றுணையா யிங்கடைத்த தென்னமன்னன்—சென்றிடலுந்
தாருருவ மானதன்மை தானகன்று மானுடநற்
சீருருவங் கொண்டுநின்றான் சேய். (௪௭)

தொல்லுருவங் கொண்டமர்வே டென்னுமையன் மன்னினன்போ
லல்லுருமைக் கூந்த லருகுநின்று—நல்லருளாற்
கோங்கரும்பை யேய்க்குங் குயத்தாய் நினையடைந்தேன்
பூங்கழலன் றில்லை புகல். (௪௮)

மைதிகழ்வேற் கண்ணின் வலைப்பட்டேற் காருடான்
செய்திடுத லன்றிச் சிறைக்கணித்தா—யுய்வுளதோ
நீயா டியசுனையாய் நேர்சாந்தாய் வேய்மலராய்த்
தோயா துலந்தேன் றுயர்ந்து. (௪௯)

புல்லிது புல் லீது புனங்காத்தன் மெல்லியனீ
யொல்லை வருதியா லும்பரமர்—வல்லியர்தா
நின்றான் வணங்க நினைவழுத்த நன்றுதுயப்பான்
குன்றா வளந்தருவேன் கூர்ந்து. (௫0)

என்றுபல கூறிநிற்ப வீர்வளைவேள் சிந்தைதனி
லொன்று கருத்தை யுறநோக்கி—நன்றெறன்
றிழிகுலமாம் வேட ரியன்மகளா னீரெற்
றழுவவுன்னிச் சார்த றகாது. (௫௧)

சிலையெயினர் பேதையான் றேவர்நீர் வேட்டூர்
புலிபசிக்கிற் புற்றினுமோ போயென்—றிலையிடையென்
செந்தா மரைக்கண்ணாள் செப்புமெல்லை யார்ப்பவியம்
வந்தான் மறவர்தம் மன். (௫௨)

வந்தமைகண் டன்னாண் மனநடுங்கித் தேவர்நீ
ருய்ந்திடுமோ றிங்குநில்லா தோடுமெனச்—சிந்தைமகிழ்ந்
தாடலுறு சைவநெறி யார்தவமா வேடமுற்றண்
வேடரெதிர் சென்றனன்செவ் வேள். (௫௩)

னென்றுமுதிர் மாதவத்தோன் செம்மலெனிராணுகி
நின்றுபரி வோடுதிரு நீறுநல்கி—வன்றிறலு
மைதபுமா வாகையு மற்றுன் னனவுமே
யெய்துகெ வென்று னினிது. (௫௪)

பூதிபரி வோடேல்கு புண்ணியன்சீர் நண்ணிருதாட்
போது பணிந்து புளினரிறை—மேதகுமுவ்
வெற்பில் விருத்தரென மேவிவந்தீர் வேண்டியதை
யற்பி னறைதிரென்று னங்கு. (௫௫)

ஆண்டகைகே ணீண்மூப் பகலெஞ்ச மானீங்க
வீண்டண் குமரியெய்தி யேவாட—வேண்டிவந்தே
னென்னநன்று நீர்நவின்ற வேய்தீர்த்த மாடிநீத
மன்னடுணை யாதிரென்று னங்கு. (௫௬)

இனையதோர் போதுதந்தை யேந்திழைபா லேகித்
தினைகிழங்கு மாவாதிதிற்றி—நனிநல்கி
யன்னடுணையா வருந்தவத்தோன் றன்னைவைத்து
மின்னார் குறிச்சிசென்றான் மீண்டு. (௫௭)

போனதுகண் டோர்முதியோன் பூவை தனைநோக்கி
நானினியென் செய்வனென நண்பசிக்கு—மானனையா
டேனுங் கனியுந் தினைமாவு நல்கிடப்பெற்
றூநறுநீர் வேண்டுமென்று னங்கு. (௫௮)

செப்புறுமம் மாற்றந் திருவனையா டான்கேளா
விப்புறவெற் புக்குமப்பா லேழ்வரைபோ—யப்புறத்திற்
றுன்சுனையொன் றுண்டங்குத் தொன்னிநறு நீர்மிசைந்து
பின்வருதி ரென்றாள் பெரிது. (௫௯)

பூவையே யன்னாய் புலர்ந்துமிக நீர்வேட்டேன்
மாவிருத்தன் வெற்பின் வழிதேரேன்—மேவித்
தனிநிகர்தா னேமென்று தாழ்த்திடா தேகிச
சுனைகாட் டுதியென்றான் சூழ்ந்து. (௬௦)

முருக னுரைவினவி மொய்குழன்மா னென்தாய்
வருகென் றழைத்துமுன்போய் மலைமை—தருசீர்
வரைகடந்து சென்று மலர்ச்சுனைநீர் காட்டப்
பருகினான் சாலப் பரிந்து. (௬௧)

ஊகந் தனைவருத்து மப்பசிநோய் தீர்த்தாய்நீர்த்
தாகந் தனையவித்தாய் தாழ்குழலாய்—மோகந்
தனையுமவித்தா யாயிற் சரியாய் முடிந்த
தெனதுகுறை யென்று னிறை. (௬௨)

முதியோ னிரந்திரங்கி முன்குறைகள் கூறி
மதிமயங்கிக் கும்பிடலு மையார்—நுதியயிற்க
ணாறு மலர்க்கூந்த னங்கை நகைத்துயிர்த்துக்
கூறுகின்றாள் கோபமேற் கொண்டு. (௬௩)

மேலாய மேதக்கோர் வேடத் தினைப்புனந்திங்
கேலா தனபுரிந்தீர் யார்விழிக்கும்—பாலா
யருந்தினா ராவிகொளு மாலால நீர்மைத்
திருந்தவரா மைய ரியல்பு. (௬௪)

வழுவிறினை காப்பேனை மாசி றவத்தீர்
தழுவமுனித் தாழ்வான சாற்றித்—தொழுதுநிற்ற
னன்றன்று வேடரிது நாடி யறிவாரேற்
றுன்றிடுமே தீது தொக. (௬௫)

நித்துப் புரைமுடியீர் நல்லுணர்வு சற்றுமில்லீ
ரொத்துக்கு மூத்திரிழி வெய்துமெனை—மெத்தவெஃகிப்
பித்துக்கொண் டார்போற் பிதற்றுவீ ரிவ்வேடர்
கொத்துக்குச் செய்தீர் குறைவு (௬௬)

சேவலாய் வைகுந் தினைப்புனத்திற் புள்ளினுடன்
மாவெலாங் கூடி வளர்குரலைத்—தாமிசையு
நாவலோய் நீரு நடந்தருளு நான்முந்திப்
போவனா லென்றுசென்றாள் பொன். (௬௭)

திருவனையாண் முன்போந் திறனோக்கிச் செவ்வேள்
பொருவிலிபத் தண்ணலைப் போது—வருவையெனச்
சிந்தித் தலுமுடனே சென்றாரி முன்னாக
வ' துற்ற தம்மாவம் மா. (௬௮)

அந்தவம யத்துவள்ளி யச்சமுறீ இயந்தவர்போல்
வந்த முதியோர் மருங்கணைந்தே—யெந்தைநீர்
சொன்னவணஞ் செய்வேனித் தூங்கல்காத் தாக்கென்றாப்
பன்னவரைப் புல்லினளோர் பால். (௬௯)

அந்தமிலாச் சீர்த்தி யறுமுகவன் முன்னொருசார்
வந்து முதுமா மதக்களிற்றுத்—தந்தமொற்றப்
பின்னொருசார் வந்து பிடியிருகோ டேன்றநின்றான்,
மன்னடுவே தூணமென வாய்ந்து. (௭௰)

கந்தனுஞ் செவ்வேள் கடவுட் களிறுதனை
வந்தனைசெய் தேத்தி வழிவிட்டுத்—தந்திடையென்
கன்னியையோர் காவிற் கலந்து கருணைசெய்து
முன்னுருவங் காட்டினனே முன். (௭௧)

பன்னிருதிண் டோளும் பகர்வதன மோராறுங்
கொன்னவில்லை வேன்முதலாங் கூர்படையு—முன்னரிய
பொன்னூர் மயிலுமாப் பொற்பார் புனக்குறவர்
மின்னாள்கண் காணநின்றான் வேள். (எ௨)

ஐயன் திருவுருக்கண் டாராத காதலொடு
மெய்யன்பிற் போற்றியின்னாள் வேலவரே—செய்யெ
னிினைதருமாக் குற்றமெலா மின்னே தணிந்தே
யெனையாண்டு கொள்ளுமென்றா ளிங்கு. (எ௩)

உம்மைதனின் மான்மகணீ யொப்பி னமையனைய
வம்மமுன்னர் நோற்றா யதனாலே—யிம்மை
யெழில்கொணினை யெய்தினா மென்றணங்கு தன்னைத்
தழுவி யருள்புரிந்தான் றான். (எ௪)

எங்க ளிறைவ னிறைவி தனைநோக்கி
யுங்கள் புனத்துறைய வுற்றிடுதி—யங்கண்மா
மங்கைநல்லா யாமும் வருவோ மெனநவில
நங்கைவிடை கொண்டுசென்றா ளங்கு. (எ௫)

தேங்குபுகழ் வள்ளி தினைப்புனத்து ளேகியே
யாங்க ளிருக்க வயற்புனத்தார்—பாங்கிவந்து
சிறடிக டாழ்ந்துமனஞ் செப்பொழுக்கஞ் செய்கைமுற்றும்
வேறுறுதல் கண்டாள் வியந்து. (எ௬)

இந்தப் புனமழிய வெங்குற்றாய் செப்புதியென்
றந்தத் தெரிவை யறையவெள்கிப்—பைந்தொடிதா
னப்புறமே வொண்சுனைநீ ராடவே போந்தனளென்
வெப்புறுமா றீரினென்றாள் வேர்த்து. (எ௭)

தானைநனை யாமல்வேற் றாளை சிவப்பமெய்
மேனித் திலத்தின் வியர்வரும்ப—மானே
தினையருவிச் சாரற் சிலம்பினீ தோய்ந்த
சுனையெங் குளதென்றாள் சூழ்ந்து. (எ௮)

செப்பு மிருளை தனைச் சிற்றமுற நோக்கியே
யொப்பிறுணை யாயுன்னை யுட்கொண்டேன்—றப்புமொழி
சொற்றாய் கொடியையெனச் சொல்லாடு மெல்லையில்வே
ளுற்றானோர் வேடனென வோர்ந்து. (எ௯)

கொந்த ணிகர்காமுங் கந்தி நிகர்களமு
மேய்ந்தநிவெழில்குடிகொ ளீர்வனையீ—ராந்தகவி
னுந்துகனை யோடுநெய்த்தோ ரோடவோ ரும்பலிவண்
வந்ததுவோ சொல்லிரென்றான் மன். (அ௦)

வேழமுத லானவினாய் வேணிற்ப நேருமக்காய்
வாழுநருக் கோதவன்றி மற்றுமெறு—மேழையே
முன்றா னெதிர்ந்து முகநோக்கிக் கூறுவதே
னென்றா ளிகுளை யினிது. (அக)

ஐயர்தாம் வேட்டைவந் தாட றினைப்புனத்துத்
தையறான் காத்தல் சரதமோ—வெய்யபுன்னாய்
வேட்டுவர்தங் கோலமொத்த மேவிருவர் மையறனைக்
காட்டிடுமென் றேமதித்தாள் கண். (அஉ)

மனத்திலிவை யுன்னியே மன்றுணைவி மற்றைப்
புனத்தடைந்து லவகினளப் போது—சினத்த
கரியெய் தனமென்ற காளைபோய் மாதே
பரிவொடுகே ளென்றுசொல்வன் பாங்கு. (அங)

நேசமுறு கேளிரு நீங்க ளெனக்குமக்கே
யாசையுள நல்குவனு மார்பணிக—ளாசின்றி
முற்றும் புரிவேன் முனியா தருளுமென்றா
ளுற்ற தலைவ னுகந்து. (அச)

அண்ணலுரை தேர்ந்திகுளை யையர் திருவுளத்தி
னெண்ணமிதோ வெங்கிளைக்கோ ரெள்ளிழுக்கு—நண்ணவோ
வந்ததெயின் பேதை மடமாதை வெஃகுவரோ
வந்தகையோ ரென்றா ளயர்ந்து. (அரு)

நாரணமா னல்கமிர்தை நல்லெயினர் செய்தவத்தை
யோரணவும் பெண்ணரசை யெற்கருள்செ—யாரணங்கைப்
பேதையென் றோதுவதே பேதைமை யென்றனன்மா
மேதையே மெய்வடிவாம் வேள். (அசு)

என்றிறைவன் கூறுதலு மேந்திழையிங் கண்காவற்
குன்றர் வருவார் கொடியரன்றே—வொன்றுமெண்ணார்
காண்பரே லெம்முயிரைக் காதுவர்நின் றாவதென்
மாண்புடையீர் போமென்றாள் வாழ்ந்து. (அஎ)

சேலனைய கண்ணாய் திருவொடெனைக் கூட்டாயே
லேல வொருகிழமை லீர்வளைதன்—கோலமது
தீட்டிமட லேறிநுந்தஞ் சீறூர்த் தெருவதனி
லோட்டுவனா ளையென்றா னுற்று. (அஅ)

ஆதிசொற்கேட் டாந்துணைவி யஞ்சியே யையருக்கு
நீதி யலமடலூர் நீரநீர்—மாதவியின்
மன்றுருமந் தன்னின் மறைந்திருமென் மின்றருவே
னென்றுறைந்து சென்றா ளினிது. (அகூ)

அம்மாத வித்தருமத் தம்மா னுறப்பாங்கி
செம்மான் மகளுள்ளந் தேற்றியொளிர்—மெய்ம்மாச்
சிறைமயில்க ளாடுபுனஞ் சென்றுதொடு போனா
ளுறைமலர்ப்பூம் பொங்கரின்க ணன்கு. (௯௰)

நற்றலைவி நீவேய் நறும்பூக் கொடுவருவே
னிற்றியவணென்றிருத்தி நேர்சென்றாள்—சிற்றிடையா
ளங்கணிற்பக் கண்டுமகிழ்ந் தாறுமுகன் றோற்றினன்முற்
றுங்கவுரு வோடெதிர்ந்தான் சூழ்ந்து. (௯௧)

வடுத்தடங்கண் வள்ளியெங்கோன் மன்றாள் வணங்க
வெடுத்தவளைப் புல்லியின்ப மெய்திச்—சுடர்த்தொடியே
யுந்தைபிறர் நாடுவர்வந் தூர்க்கே குதிநாளை
வந்திடுவோ மென்றுசென்றான் வாய்ந்து. (௯௨)

போந்தபினக் காவகன்று பூவைவரப் பூவையறற்
கூந்தறனிற் சூட்டிக் கொடுசெல்ல—வாந்தகைமை
சாற்றிகுளை யோடுநங்கை சாரற் றினைப்புனம்போய்ப்
போற்றி யிருந்தாள் புலர்ந்து. (௯௩)

புனமருவோர் வள்ளி புலர்ந்தே யிருப்ப
வனநடையே யன்னா ளளிக்குந்—தினையி
னிருங்குரல்க ளீன்றுமுற்றி யேவிளைந்த வேட
ரொருங்கு வந்துகூடினா ருற்று. (௯௪)

குன்றுறைவா ராருங் கொடிச்சி தனைநோக்கித்
துன்று தினைவிளைந்த தூங்காமே—யின்றளவும்
போற்றி வருந்தினாய் போயினியுன் புல்லிலெனாச்
சாற்றி விடுத்தார் தக. (௯௫)

குறவர் மொழிந்தசெவி கொண்டணங்கு வைவே
லுறுபுண் ணுழைந்ததுபோ லுள்ள—மறுகியே
மற்றவ் வயினீங்கி வாழ்புன் குடில்சென்றா
ணற்றுணையுந் தானு நலிந்து. (௯௬)

மானினத்தை மாமயிலை மற்றவற்றை நோக்கியாம்
போனசெயல் வேட்குப் புகலிரெனாத்—தானிரங்கிப்
பூவைபோய்ப் புன்குடிலில் புக்குள்ளம் வேறாகி
யேவரொடும் பேசிலளன் பேயந்து. (௯௭)

அந்தவம யஞ்செவிலி யன்னைமகட் பாராவேர்
நந்தவுறு வேறாய் நவையுனக்கு—வந்தவகை
யென்னெனவற் பார வியம்பிச் சினமெய்தி
யன்னவளை யிற்செறித்தா ராங்கு. (௯௮)

மின்னனையாள் வேலவனை மேவிப் பிரிந்தமையா
லின்னதன்மை யெய்தினளென் றென்றுமே—யன்னவனை
யீண்டித் திருமிகர்வா ரோர்மலைவாழ் மூர்கொலாக்
கீண்டிற் றெனகவின்றூர் தேர்ந்து. (௯௯)

தீர்வைதம ராதி சவரர் பிறரீண்டிச்
சிந்தைதளர்ந் தம்மின் செயலோக்கிக்—கந்தற்
கறிமுதியா ளோடு மவிர்முருகற் கூவி
வெறியயர் வித்தார் விழைந்து. (௧௦௦)

வெறியயர்போ தார்வேலன் மேல்வந்து தோன்றிப்
பிறிதொன்றன் றூற்றனியாப் பேதை—யுறைபுனத்திற்
றீண்டினநம் மூண்மகிழ்சீர் செய்யினிடர் தீருமென்றே
யாண்டகைவேள் சொற்றா னமர்ந்து. (௧௦௧)

குறிப்புடனுள் வேலண்ணல் கூறுகன்ன மூல
நெறிப்படவந் தெய்தமின்மா னீங்கி—முறைப்படவே
யார்தரவேர் வேளை யகத்துன்னி யாங்கேசீர்
நேர்துமெனத் தாய்துதித்தா ணோர்ந்து. (௧௦௨)

மனையிலம்மை வைக வனசரர்கள் செவ்வித்
தினையரிந்து கொண்டுகுடி சென்றார்—புனையிழையை
காணான்புலம்பிவேள் கார்மஞ்ஞை வெற்பாதி
பேணு வினவும் பெரிது. (௧௦௩)

வாடினான் சோர்ந்தான் வருந்தினன்மை யற்கெல்லை
கூடினான் குற்றடியின் கூர்சவடு—நாடினா
னோர்முருக னள்யாமத் தேறிச் சிறுகுடிம
னூர்குரம்பை போய்நின்றா னாங்கு. (௧௦௪)

பாங்கிருகற் கண்டு பணிந்துநீ கங்குற்போ
தீங்குறலொல் லாதணங்கு மேங்கினா—ணீங்களிங்கள்
கூட விடமரிது கோதைதனைக் கொண்டகறீர்
நாடடிக வென்றா ளயர்ந்து. (௧௦௫)

என்றிவைமின் கூறி யிறையை நிறுவிப்போய்த்
தன்றுணையைச் சார்ந்து தலைவரிவ—ளுன்றனையே
வவ்விடுவான் சென்றார் வருதியெனச சிரிசிதென்
றெவ்விமொருப் பாடற்றா ளோர்ந்து. (௧௦௬)

தாய்துயிலுந் தங்க டமர்துயிலுந் துஞ்சாத
நாய்துயிலு மூர்துயிலு நன்கறிந்து—பேய்துயில்கொள்
யாமத் திருளை யெழிலணங்கைக் கொண்டுசென்று
சேமத் தனுத்தினுய்த்தா டேர்ந்து. (௧௦௭)

கந்தபிரான் றன்னையெழிற் கன்னியெதிர் தந்திறைஞ்ச
நந்தெயினர் சேரியின்க ணுய்யேற்கா—விந்தமலர்
நற்பதங்கள் குன்ற நடப்பதே யென்றிரங்கி
யற்பிற் றெழுதுநின்றா ளாங்கு. (௧௦அ)

மின்னிற்ப நற்பாங்கி வேடன் முகநோக்கிக்
கொன்னெயினர் காணிற் கொடுமையெய்து—மின்னேநு
மெய்யடையா வூர்க்கிவட்கொண் டேகியளித் தாளுமெனுக்
கையடையா நேர்ந்தாள் களித்து. (௧௦௯)

தந்திடையை வேள்கரத்துத் தந்திகுலை தானிற்ப
நந்தருள்செய் தேந்திழைநீ நன்றெம்பாற்—சிந்தையன்பில்
வைத்த கருணை மறக்கலம்யா மென்றான்
மைத்த மிடற்றான் மகன். (௧௧௦)

மையார் தடங்கண்ணாள் வள்ளி தனைவணங்கி
மெய்யாரப் புல்லியன்னாய் வெய்துசெல்லென்—றையாரு
மையனொடு கூட்டி யவர்விடுப்ப மீண்டுபுக்காள்
வெய்ய குரம்பை விரைந்து. (௧௧௧)

செங்கதிர்வே லண்ண றிருவுடனே நள்ளிருளி
லெங்ககன்று போயோ ரவிர்காவிற்—றங்குமெல்லை
வைகறையாம் போதுசெல மன்றேவி துஞ்சலொரீஇ
மெய்துணுக்க முற்றெழுந்தாள் வேர்த்து. (௧௧௨)

காத லுறுமகளைக் காண்கிலளாய் நாடியெங்குங்
கேதமிலாப் பாங்கிதனைக் கேட்பவல்லாம்—போதிற்
சுரிகுழலு நானுந் துயின்றமைதா னுண்டு
தெரிகிலன்மற் றன்னையென்றா டேர்ந்து. (௧௧௩)

தம்மகளைக் காணாமை தாய்வந்து கூறவினுய்ச்
செம்மறெரு மந்து செயிர்த்துநனி—நம்மனையின்
காவலிகந் தீர்வளையைக் கைக்கொடுசென் றானொருவ
னேவனோ வென்றா னினைந்து. (௧௧௪)

இன்ன புகன்றுதந்தை யெல்வாண் மருங்கசைத்துக்
கொன்னவில்வில் கோலேந்திக் கோற்றொடியா—மின்னைக்
கவர்கள்வ னுற்றவிடங் காண்பனெனுச் செல்ல
வவணெயினர் சேர்ந்தா ரது. (௧௧௫)

வேடரெலா மீண்டி விரைந்துபோய் வேந்தனொடு
கூடி யிரவு குறித்துநெறி—தேடினர்சூழ்
பூக்கிளர்கா நாடிப் புலம்புக் கடிச்சுவடு
நோக்கினடை தந்தார் நனித்து. (௧௧௬)

இங்ஙனமன் வேடுவரோ டெய்ந்துசெலப் பாங்கரிலோர்
பொங்கர் தனிற்காவிற் போந்தநங்கை—யங்ஙனந்தேர்ந்
தஞ்சி யறுமுகவ னந்தாண் மலர்வீழ்ந்து
நெஞ்சினைந்து சொல்வா ணெடிது. (கக௭)

கோலொடுவில் வாண்மழுவாள் குந்தமுத லேற்றெறிபின
ரேல னமைத்துருவி யேகியிந்தச்—சோலையின்பா
லெய்திவந்தா ரச்சமுற்ற தென்சிந்தை யென்கொலினிச்
செய்வ தறைதியென்றா டேர்ந்து. (கக௮)

வருந்தலைநீ வாழிநல்லாய் மால்வரைவெஞ் சூர
னூரந்துளைத்த வேலுளதும் மோர்போர்—விரைந்துநமரி
யாற்றவரின் வீட்டுதுமா மன்னதனை நோக்கியிரு
கோற்றொடிநம் பின்னென்றான் கோ. (கக௯)

குறத்திருமி னின்னவினுய்க் கூரயில்வேற் காளை
புறத்தில் வரக்குறுகிப் புக்கத்—திறத்தையுற்று
நோக்கிவெகுண் டேகாவை நோன்மை யுறுபுளிஞ
மாக்கள் வளைந்துகொண்டார் வந்து. (க௨௦)

குறவர்தங் கோமான் கொடுமெயினர் யாரு
மறிகடல்போ லார்த்தெறழ்வில வாங்கி—யெறிசுடரைக்
கார்மறைத்துப் பெய்தாங்குக் காண்ட முறைமுறைதூ
யோர்குகனைச் சூழ்ந்துகொண்டா ருற்று. (க௨க)

ஒட்டலராய்ச் சூழ்ந்தங் குடன்றுசமர் செய்துவெய்யோர்
விட்டவெங்கோன் மென்மலரின் வித்தகன்மேற்—பட்டிடலு
முட்டியங்கி மாதுநும்மே லுய்த்தவரை வேலினின்னே
யட்டிடவே வேண்டுமென்றா னாங்கு (க௨௨)

என்றிவையோர் மாதுரைப்ப வெந்தையரு ளாற்பாங்கர்
நின்றகொடிச் சேவ னிமிர்ந்தார்ப்பக்—குன்றவர்த
மாண்டகையு மைந்தருமற் றாருமே பொன்றினராய்
மாண்டவனி மேல்விழுந்தார் மற்று. (க௨௩)

தந்தைதமர் வீழ்ந்திறந்த தன்மைகண்டு வள்ளியம்மை
சிந்தை பதைத்திரங்கச் செங்கதிர்வேற்—கந்தன்
றுணைவியன்பு காண்பான் றுருமமகன் றேகப்
பிணைமகளு மேசென்றாள் பின். (க௨௪)

செல்லவே நாரதப்பேர்ச் சீர்முனிவ னேர்வந்து
வல்லிகுகற் றாழ்ந்துசெயல் வாய்ந்தவெலாஞ்—சொல்லெணவே
டந்திடையைக் காண்டறொட்டுத் தானெயினர் தம்மையட்டு
வந்தனவுஞ் சொற்றான் மகிழ்ந்து. (க௨௫)

பெற்ற தந்தை தன்னைப் பிறவா முறவினரைச்
செற்றகற்றிச் சீர்த்தவருள் செய்யாமற்—பொற்றொடியைக்
கொண்டு வராற்றருமோ கோமானெனமுனிவ
னெண்டகையஃ தாமென்று னேய்ந்து. (கஉ௬)

கம்மே லெழுபொழிலிற் கந்தவேண் மீண்டருளி
யம்மே வணங்கினைப்பார்த் தார்ப்பிறொடு—நம்மேற்
பழிப்படுவெம் போராற்றிப் பட்டகிளை யெல்லா
மெழுப்புதிநீயென் றனினிது. (கஉ௭)

சீருயிருர்கள் சிந்தித் தெறவிழுந்த நங்கேளீர்
யாரு மெழுதி ரெனவருளப்—பாரின்கட்
டுஞ்சுகின்றோர் தொல்லுணர்வு தோன்றவெழல் போற்றமரோ
டஞ்சவரர் கோனெழுந்தா றங்கு. (கஉ௮)

எழுமமயத் தெம்பெருமா னின்கருணை வெள்ளம்
பொழிமுகமோர் மூவிரண்டும் பொற்றோட்—கெழுவரையீ
ராறுமயின் முற்படையு மாகியுருக் காட்டவன்றார்
வீறுமலர்த் தாள்பணிந்தார் விழ்ந்து. (கஉ௯)

ஆரெயினர் சேரி யளித்திடுநீ யேயெங்கள்
தாரிகையை வெளவிக் கரவிலிருஞ்—சீரழித்தே
தீயபழி நாட்டினையீன் செல்வர் கொளவிடதனைத்
தாயருத்தி னார்தடுப்பர் சார்ந்து. (கங0)

ஆங்கதுதா னிற்க வணங்கைவிழை வான்வெளவி
நாங்களுண ராவண்ண நங்காவ—னீங்கியெந்தா
யொல்லை யிவட்கொணர்ந்தா யூர்க்கேகி வேட்டனன்முன்
செல்லுதிநின் னூர்க்கென்றார் தேர்ந்து. (கங௧)

படமன் முதலோர்சொன் மன்றன் மொழிக்கிசைந்தே
கோமனருள் செய்தனையுங் கொண்டிசையாழ்த்—தூமுனிவன்
றன்னொடுபூங் காநீங்கித் தாண்மலர்க ளேவவளை
மன்னெடுஞ்சீ றூர்புக்கான் வாய்ந்து. (கங௨)

தந்தை யொடுதமருஞ் சண்முகன்பாங் கேகிமகிழ்
சிந்தையுற நோக்கிச் சிலையினரைக்—கந்தனே
நந்த மினைக்கவர்ந்தா னம்மொழியாற் றன்மணப்ப
வந்தனனீங் கென்றார் மகிழ்ந்து. (கஙங)

செப்பவர்சொற் கேட்டுச் சிறுகுடியின் மேவுற்றோ
ரொப்பில் சினநா னுவகையுற்று—சிற்பமன்னூர்த்
தன்னகத்திற் சண்முகனைத் தாழ்குழலோ டுத்தமன்மேன்
மன்னு விருத்தினன் மற்று. (கஙச)

அன்னபோ தாறிருதோ ரெண்ணலய லாரணங்கை
மன்னருளி னேக்க மருவெயின—மின்னனையார்
செய்கோல நீங்கிமுன்னைத் தெய்வதமாக் கோலமுற்றுத்
தெய்கோல் விழியருட்க வெய்ந்து. (௧௩௫)

தந்தையொடு தாயுந் தமருஞ் செவிலியுமோர்
நந்து மிகுளையுட னங்கையருஞ்—சந்த
விருந்தமகள் கோலங்கண் டிம்மினுற்ற தெம்பாற்
பெருந்தவமே யென்றார் பெரிது. (௧௩௬)

அந்நகல்ல வேலைதனி லன்பா ரிறவுளர்கோன்
கந்தபிரான் பாணியின்மின் கைபைகல்கி—நந்தவமா
மாதை யயப்பினின்று நன்றீந் தனன்கொள்கென்
றோதுபுனற் றாரையுய்த்தா னுற்று. (௧௩௭)

நற்றவத்தின் மாண்டசீர் நாரதனக் காலைதனிற்
சொற்றமுறு வேலோன் குறிப்பிணங்கி—மற்றை
யறைகலனுந் தந்துமண மார்சடங்கு நாடி
யறைவிதியிற் செய்தான் மகிழ்ந்து. (௧௩௮)

அந்த வமயத் தரனண்டர் சூழ விண்ணிற்
றந்திடையோ டேற்றுமணந் தான்கண்டு—கந்தருள்செய்
தங்கனிற்ப மான்முதலோ ராய்மலர் தூ யேத்தினார்
புங்கவனை யன்பு புரிந்து. (௧௩௯)

அறுமுகமா வன்ன லதுநோக்கிச் சீறா
ரிஸைபுமுனை ராவண்ண மீன்றோர்—கறைமலர்த்தாள்
கைதொழுதே யேனையர்க்குங் காண்முறையிற் கூர்ந்தவருள்
செய்தனன்மா வோகை சிறந்து. (௧௪0)

அங்கந்த வேலை யயனு நியரோடு
மங்கையொரு பாகன் மறைந்தேகத்—துங்கமுனி
செய்த சடங்குமுற்றத் தேன்மொழியோ டத்தனைத்தா
னுய்திறத்திற் போற்றினு னுற்று. (௧௪௧)

மற்றந்த வேலைதனின் மாதுலனோர் வள்ளிதனைக்
கொற்றவேல் வேண்மணஞ்செய் கோலங்கண்—டுற்றகண்க
டம்மா லுறுவபெற்றேன் றனென்றான் கோனுவகை
யம்மா பெரிதறைவா ரார். (௧௪௨)

குன்றங் குலவுங் குறவர் குலமகளிர்
மன்றன் மருமகனு மன்மகளு—மென்று
மிலகுமின்னே போல்வாழ்க வென்றுசி கூறி
மலராறுகு தூர்த்தார் மகிழ்ந்து. (௧௪௩.)

செந்தினைமா தேனைச் செழுங்கனிக ளக்காய்கள்
கந்தம் பிறவும் கலத்திலிட்டுப்—பைந்தொடியும்
வீறுடையசீயு மிசைதிறன் வெவ்வெயினர்
கூறவருள் செய்தான் குகன். (௧௭௬)

வில்லெயினர் காதலியும் வித்தகனார் காதலனுஞ்
சில்லுணவு துய்த்தார் திளைத்திடியல்—குல்லையந்தார்
மாயனைய னாதியும்பர் மாணவர்பான் மற்றிருபா
லாயவைபா லெங்குமுள்ள தார்ந்து. (௧௭௭)

அனையபோ தாறிருதோ ளண்ணலெழுந் தாங்கே
நனையயில்வான் வில்வேந்தை நோக்கி—வனிதையுடன்
சென்றியாஞ் சீரார் செருத்தணிகை வெற்புறைது
மென்றலுநன் றென்றிசைந்தா னேய்ந்து. (௧௭௮)

தாய்செவிலி பாங்கியெழிற் றையறனை நோக்கிவிற
லேய்வரன்பின் செல்லுதியோ வென்றுதழீஇ—யாய்தருசீர்
நந்திடபல் லாசி நவிலவே ளோடேகச்
சிந்தைதனிற் கொண்டா டிரு. (௧௭௯)

தேவியுட னங்ககன்று சேய்குறவர் காவலற்கூய்க்
கோவியனற் சீர்த்தி கொளச்செலுத்தி—மேவுமெனை
வாங்கிருத்தி வள்ளி யசலமிகந் தந்தணிகை
யோங்கறனைச் சார்ந்தா னுகந்து. (௧௮௦)

செச்சையணி சேந்தன் செருத்தணிமா வெற்பினும்பர்
தச்சன்முன் ஞற்று தனிநகர்புக்—கிச்சகத்தி
லாருயிர்கள் யாவுமுய்ய வநகுறவர் நங்கையொடு
சீரமர வீற்றிருந்தான் றேர்ந்து. (௧௮௧)

அந்த வமயத் தவிர்வள்ளி நாயகிவேற்
கந்தவேள் காமர் கழல்பணியா—விந்தவெற்பின்
மன்னியற்கை யாவும் வகுத்தியெனப் பேரருளி
னின்னனைநன் கோது மிறை. (௧௮௨)

செ[illegible]நேர் வெஞ்சூர்ச் செருத்தொழிலி னோடெயினர்
வன்ம[illegible]னும் யாந்தணிந்திவ் வாயுறலான்—மின்செய்
செருத்தணியென் றோர்நாமஞ் செப்பிடவெய் திற்றே
[illegible]குசேர் மேவிச் சிலம்பு. (௧௮௩

மன்றனைவி பூசை மகிழ்ந்தவனோ ரசனொர்மா
மன்றமருங் காஞ்சி நகானுக—நின்றிடலா
லந்தமுற வேசொல்ல லாந்தகைத்தன் பேர்குடிகொ
ளிந்தவரைத் தூய்மை யினிது. (க௫௪)

நகரத்துட் காஞ்சி நகர்சிறக்கு மாபோற்
சிகரத்து ளிந்தணிகை சேர்த்த—நகமுகந்தே
கோடியம்பிக் கூர்வேய்ங் குழலூதி யாழிசைத்துப்
பாடினன்ன ராடுதமிப் பால். (க௫௫)

மந்தரமா மேரு வரைகயிலை யாதியைப்போ
லிந்தவெற்பி லோகை யெமக்குண்டே—யந்தார்கோன்
வைகலுமே சாத்துதற்கிம் மன்சுனையிற் காவிமூன்
றெய்துறவே வைத்தா னெமக்கு. (க௫௬)

காலையிலோர் பூவெங் கதிருச் சியிலோர்பூ
மாலையிலோர் பூவிவ் வரையின்மே—னீலமூன்
றென்று மலரு மிறும்பூ துடைத்தெனினிக்
குன்றின்சீ ராருரைப்பார் கூர்ந்து. (க௫௭)

இந்த வரைதொழுவோ ரேய்ந்த பவமேகுஞ்
சிந்தையினன் போடிச் சிலம்பிற்போய்—முந்தநின்ற
விச்சுனையின் மூழ்கிவந்தே யெம்மை வழிபட்டோர்
மெச்சுபதம் வாழ்வார் விழைந்து. (க௫௮)

அஞ்சவைக லிந்த வசலமடைந் தெம்மடிக
டஞ்சமென வுன்னியே தாழ்தவத்தோர்—நெஞ்சமதி
னுபெல போக நனிநிரப்பி யெஞ்சலிலோர்
வீடுபே றுற்றிருப்பர் வேட்டு. (க௫௯)

தேவ ரெனினுந் திகழ்முனிவ ரேனுமற்
றேவ ரெனினுமிவ்வெற் பேய்ந்துதொழார்—தாவரங்க
டம்மிற் கடையரே தம்பவங்க டீர்தருமோ
வம்மவலஞ் செய்யினும்பா ரார்ந்து. (க௬௦)

பாதகஞ்செய் தாரேனும் புல்பவஞ்செய் வாரேனு
மாதரங்கொண் டேதணிகை யார்வரே—லோதவர்தாழ்
தேவிற் பொலியயன்மா றேவரினு மேதக்கோர்
யாவற் றினுமிக்கோ ரீங்கு. (க௬க)

உற்பலமா வெற்புறைவோ சோர்தருமஞ் செய்யிலது
பற்பலவா யோங்கும் பவஞ்செய்தாற்—சிற்பமதா
யொன்றதாய்த் தேய்ந்திடுமிக் குன்னிதன்றி யற்புதங்க
ளென்றனந்த கோடியுண்டு சூழ்ந்து. (௧௬௨)

என்றிவைவேள் கூற வெஃகினர்தம் மின்வினவி
நன்றென் றுவகையுற்று நானிலத்தார்—குன்றிற்
சிறந்தவிந்த வெற்பின் றிறனின் னருளா
லறிந்துய்ந்தே மென்றா னமர்ந்து. (௧௬௩)

இந்த வரையொருசா ரீசாறு தோளிறைமான்
றந்த வணங்கரசுந் தானுமா—வினந்துருவி
லோங்குருவொன் றாகமத்தா றுய்த்தருச்சித் தேவேண்டி
யாங்கருளும் பெற்றா னமர்ந்து. (௧௬௪)

அருத்தியொடு சென்றா னானைவழி பட்டாங்
கொருத்தியுடன் வைகியெங்கோ னோர்நா—டிருத்தணிகைச்
சந்தவெற்பி னின்றே தயங்குவெள்ளி மால்வரைப்பாற்
கந்தவெற்பிற் சென்றான் களித்து. (௧௬௫)

கந்தவெற்பிற் சென்றிளவல் காய்கதிர்வி மானமொரீஇ
வெந்தலைய பூதர் வியந்தேத்த—வந்தளிபோ
யானைமகள் வாழு மெழின்மந் திரம்புக்கான்
மானைமக ளோடு மகிழ்ந்து. (௧௬௬)

சைவத் தனிமுதற்சேய் தன்வரவு நோக்கியே
தெய்வப் பிடிவந்து சேவிக்க—வைதி
னனியார மார்புறவே னன்றெடுத்துப் புல்லித்
தனியார் துயர்தீர்த்தான் றான். (௧௬௭)

அன்னபொழு தங்குவள்ளி யண்டர்கோ னணங்கு
பொன்னடிக டாழப் புரிந்தெடுத்து—மின்னனையாய்
நற்ற தமியளாய்த் துன்னிடுவேற் கோர்துணையி
னுற்றவா நன்றென்றா ளோர்ந்து. (௧௬௮)

செங்கதிர்வே லண்ணல் றிருவனைய மாதரொடு
வெங்கதிரிப் பீடிகைமேல் வீற்றிருந்தா—னங்கமர்ந்த
வாயிய மாதவனைக் கண்ணுற் றிவள்வரவை
யெல்லாமுரைத்தியென்றா னிங்கு. (௧௬௯)

வண்டருமால் பானீ ரிருவருமே தோன்றினீர்
யாண்டொருமுக் காண்களவு மெய்ம்மொழிற்றான்—வேண்டிநின்றே
யெண்ணமா தவம்புரிந்தீ ருண்மையெய்திச் சேருதும்யாம்
விண்பா லுறுதியொன்று மேல். (௧௭௦)

சொன்ன முறையினையே தூக்கி யிருவருமு
முன்ன மருவியசீ மொய்ம்புடைய—பொன்னகரான்
மன்னன் மகளாய் வளர்ந்தா யதுபோதி
லுன்னை மணந்தா முவந்து. (௧௭௧)

வக்கிளர்கண் மாது னிளையளிவள் சொல்லினளவு
தூக்கியின் நீழூழ்கித் தொல்வடிவ—நீக்கியே
யுள்ளிற் றிகழுருவத் தோடெழீஇ வள்ளிவெற்பிற்
றெள்ளிநின்றோற் றுங்கிருந்தா டோர்ந்து. (௧௭௨)

சென்னிலவவ் வெற்பிற் சிவமுனிவ னேற்புழியோர்
பொன்னிறொளிர் மானென்று போந்தலவ—வன்னதனைக்
காதலொடு நோக்கவன்னோன் கர்ப்பமது மேவவிந்த
மாதக் கருவினுற்றாள் வாய்ந்து. (௧௭௩)

மானிவ் வணங்கை வயிற்றினிடை தாங்கியே
யானதோர் வள்ளி யகழ்பயம்பிற்—றனளித்துப்
போகவங்குக் கானவர்கோன் பூவையுடன் கண்டெடுத்தே
யெகிவள்ளி யென்றனன்பே ரேய்ந்து. (௧௭௪)

மங்னெயினர் மாதாய் வளருமெல்லை யாமவள்பாற்
றுன்னியும்வேட் கையுரைத்துந் தன்புற்றும்—பன்னியுஞ்சீர்
மாயைபுரிந் தோர்வனத்திம் மாதைநென்னல் வேடர்கல்க
வேயமணஞ் செய்தே மினிது. (௧௭௫)

அங்க ணகன்றிவளோ டார்தெய்வக் குன்றகம்போய்த்
தங்கியோர் செல்பகன்மைத் தாழ்குழலா—யிங்குவந்தே
மென்றிவைவேல்வீர னியம்பவிப மாதவிஞய்
நன்றெனவே யொன்றுசொல்வா னன்கு. (௧௭௬)

தொல்லையின் மாயவன்பாற் றோன்றினளு நாளுமிகத்
தெல்லையில் காலமிருந்தேனை—யெல்லையி
லம்மா விவண்கூட்டு ணேண்டக்கக்கி யாம்புரியுங்
கைம்மா றிலையென்றான் காண்.

மீன்றனையை யானை மகள்சொல் வினவிமுன்னாள்
யான்றங்கை யாகுமெனக் கீதலதிஞ்—ஞான்று
மிடைந்தே கிளையளாய் மேவியுய்ந்தே னின்னை
யடைந்தே னளித்தியென்றா ளாங்கு. (௧௭௮)

மன்றற் குறமகளிம் மாற்ற நவின்றுதெளவை
தன்றிருத்தா டாழத் தழுவிக்கொண்—டன்றுணைபு
மற்கரிய கண்டன்சே யாரருளு நான்பெற்றே
னெற்கரிய தேதென்றா ளிங்கு. (௧௭௯)

இந்திரன்றன் மாது மெயினர்தம் மாதுமிவ்வா
றந்தரமின் றன்பி னளவளாய்ச்—சிந்தையுயிர்
செய்கைசிறப் பொன்றாய்த் திகழ்மணமும் பூவும்போ
லுய்கவுல கொத்திருந்தா ரூற்று. (௧௮௰)

பாலுடனே தேன்கலந்த பான்மையென யானைமான்
சால வுதவு தனையமா—வேலவே
போதவழி பாடியற்றிப் போற்றவொளிர் வேற்றடக்கை
காதனங்கண் வீற்றிருந்தா னன்கு. (௧௮௧)

மாலவுண ராமுருப்ப மாயக் ககனமுறு
தால நனிதழைப்பச் சைவமல்கச்—சால
விழையவிரு மஞ்ஞை யிளிர்வே ளருண்மா
மழைபொழியு மென்று மகிழ்ந்து. (௧௮௨)

சேவலும்வா மான்றேருஞ் செய்யமணித் தோகையுஞ்சீர்
மேவு தகருமொளிர் வேலுமற்ற—யாவுமண்ண
னுபணி நன்கியற்றி நற்கோவின் முற்கோலி
மாடேணி வீற்றிருந்த வாய்ந்து. (௧௮௩)

ஆறிருதோள் வாழ்கவரு ளாறுமுகம் வாழ்கவெற்பைக்
கூறிடுவேல் வாழ்க கொடிவாழ்க—வேறிடுமா
வீரமயில் வாழ்கவிரு மெல்லியர்கள் வாழ்கவன்பார்
சீரடியர் வாழ்க சிறந்து (௧௮௪)

தியங்குறுசொன் மோனை தளையெதுகை நாடி
மயங்குறுபோ தென்றன் மனத்துள்—வயங்கறிவாய்த்
தோன்றுமை தோற்றுவித்த தோன்றறன்சீர்த் தொல்காதை
சான்றோர்க்கே சொற்றே னயந்து. (௧௮௫)

கொற்றவருள் கூர்சீர்க் குமரவேண் மாக்கதையைச்
சொற்றவருஞ் சூழ்குநருந் தோமறவே—கற்றவருங்
கற்க முயல்பவருங் காதலொடு கேட்பவரு
நற்கதியி லெய்துவரோ நன்கு. (௧௮௬)

ஒன்று மிரண்டா யொளிர்மூன்றும் நாலுந்தாய்ப்
பொன்று முயிர்க்குயிராய்ப் பூரணமாய்—நின்று
னெவன்று னெவர்க்கு மிறைவனு மேத்தி
யவன்று ளடைதுமன்றே யாங்கு. (௧௮௭)

---

கற்றுணர்ந்தோன் போல்யான்செய் கந்தபுராணவெண்பா
முற்றுணர்ந்தோன் றன்னருளான் முற்றிற்று—மற்றதன்பா
வித்தொகைதா னையா யிரத்தறு நூற்றறு
பத்தைந்து நேரிசைவெண் பா.

கூர்வளக்கச் சிக்குமரக் கோட்டக் குமரனருள்
சார்கச்சி யப்பசிவா சாரியர்செய்—சீர்கொள்
விருத்தந்தன் கந்த புராணக்கிவ் வெண்பாக்
கருத்தன்றி வேறன்று காண்.

வள்ளியம்மை திருமணப்படல முற்றிற்று.

ஆக திருவெண்பா ௧௧௫௬

## தக்ஷகாண்ட முற்றிற்று.

---

ஆக காண்டம் ஆறுக்குத் திருவெண்பா ௫௬௬௫.

---

## கந்தபுராண வெண்பா.

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

வேலுமயிலுந்துணை.

